த. பா. நி. (க.வெ.) வரிசை எண்—458

# கணக்கியலின் கோட்பாடுகள்

ஆசிரியர்

அ. குமாரராசு, B.Com. (Hons.),

வணிகவியல் பேராசிரியர்,

அறிஞர் அண்ணா அரசினர் ஆண்கள் கலைக் கல்லூரி,

நாமக்கல்.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

# அணிந்துரை

திரு. இரா. நெடுஞ்செழியன்
(தமிழகக் கல்வி—உள்ளாட்சித்துறை அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதின் மூன்றுண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்றுவந்தனர். 1968ஆம் ஆண்டின் தொடக்கத்தில் புகுமுக வகுப்பிலும் (P.U.C.) 1969ஆம் ஆண்டிலிருந்து பட்டப் படிப்பு வகுப்புகளிலும் அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம் தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்றுவருகிறது. இவ்வகையில், கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்க்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக்கழகம் ஆண்டுதோறும் எடுத்து வரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டும்

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், தத்துவம், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டுவருகிறது.

இவற்றுள் ஒன்றான 'கணக்கியலின் கோட்பாடுகள்' என்ற இந் நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 458ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 493 நூல்கள் வெளி வந்துள்ளன. இந் நூல் மைய அரசு கல்வி, சமூக நல அமைச் சகத்தின் மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை. ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும். அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரியதாகுக.

இரா. நெடுஞ்செழியன்

## பொருளடக்கம்

பக்கம்

# மேற்கோள் நூல்கள் பட்டியல்


1. Double Entry Book-keeping —*J. R. Batliboi*
2. Book-keeping and Accounts—Part I
3. ,, ,, —Part II
   —*Jai Narain Vaish*
4. Practical Book-keeping and Accountancy —Vol. I
5. ,, ,, ,, —Vol. II
   —*Nana Bhoy S. Davar*
6. Introduction to Accountancy —*Grewal*
7. Advanced Accounting —*J. R. Batliboi*
8. The Higher Science of Accountancy
   —*Dr. A. N Agarwala*
9. Book-keeping and Accountancy —*N. Sarkar*
10. Advanced Accounts —*M. C. Shukla* and *T. S. Grewal*
11. Advanced Accounting —*Rup Ram Gupta* and *Vidya Saran Gupta*
12. Accountancy — *William Pickles*
13. Banking Law and Practice —*M. L. Tannan*

# 1. இரட்டைப் பதிவுமுறையின் அடிப்படை

## (Fundamentals of Double Entry System)

வியத்தகு வண்ணம் நாள்தொறும் வளர்ந்தோங்கும் வணிக, தொழில் நிறுவனங்களில் நிகழும் எண்ணற்கரிய நடவடிக்கைகளை முறைப்படி பதிந்து வந்தால்தான், தொழில் முன்னேற்றத்தை— வணிக வளர்ச்சியை—உணர முடியும். இலாபம் ஈட்டும் நோக்கம் ஈடேறுகிறதா, தொழில் நிறுவனம் சீரான வளர்ச்சியைப் பெறுகிறதா என்ற விளக்கங்களை அறிய வேண்டுமாயின், தொழில் நடவடிக்கைகள் வகைப்படுத்தப்பட்டு முறைப்படி பதியப்பட்டிருக்க வேண்டும். வேண்டிய விவரங்களை உடனுக்குடன் உணரும் வகையில்—தொல்லை ஏதுமின்றித் தெள்ளிதில் தெளியும் வகையில் அவை எழுதப்பட்டிருக்க வேண்டும். இவ்வாறு முறைப்படி தொழில் நடவடிக்கைகளைப் பல்வகை ஏடுகளில் பதிவதுதான் கணக்குப் பதிவியல் (Book-Keeping) எனப்படும் என்பதை நாம் அறிவோம்.

### கணக்குப் பதிவியலின் நோக்கங்கள்
### (Objects of Book-Keeping)

1. நிகழும் பல்வகைப்பட்ட நடவடிக்கைகளின் நிலையான குறிப்பைப் பெறுதல்.

2. குறிப்பிட்ட கால முடிவில் தொழிலில் ஏற்பட்ட ஆதாயம் அல்லது இழப்பு எவ்வளவு என்பதை அறிதல். அதாவது தொழில் நடத்தும் நோக்கம் எந்தவளவில் நிறைவேறுகிறது என்பதை உணர்தல்.

3. பிறர்க்குத் தரவேண்டிய தொகையையும், பிறரிடமிருந்து பெறவேண்டிய தொகையையும் அறிதல்.

4. குறிப்பிட்ட நாளில் தொழிலில் உள்ள சொத்துகளின் மதிப்பு, பொறுப்புகளின் அளவு இவற்றை அறிதல்.

5. பொறுப்பினைத் தீர்க்கப் போதுமான சொத்துகள் உள்ளனவா என்பதையும் சொத்துகளின் தன்மையையும் உணர்தல்.

தொழில் நடவடிக்கைகள் அனைத்தையும் முறைப்படி வகைப் படுத்திப் பல்வகை ஏடுகளில் பதிந்து வந்தால்தான் கணக்குப் பதிவியலின் இந் நோக்கங்கள் நிறைவேறும்.

மேலும் கணக்குப் பதிவியல்பற்றி விளக்குமுன் சில சொற்கட் கான சிறப்புப் பொருளினை உணர்தல் நலம் பயக்கும்.

கணக்கு (Account): ஒருவர் அல்லது ஒரு வியாபார அமைப்பு அல்லது ஒரு சொத்து அல்லது ஒரு செலவு அல்லது வரவுபற்றிய நடவடிக்கைகளைத் தொகுத்து, அக் குறிப்பிட்ட தலைப்பின்கீழ்ப் பதிதல் கணக்காகும். இது பற்று, வரவு என இரு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருக்கும்.

பற்று வைத்தல் (Debiting an account): கணக்கின் பற்றுப் பக்கத்தில் பதிவதை இது குறிக்கும்.

வரவு வைத்தல் (Crediting an account): கணக்கின் வரவுப் பக்கத்தில் பதிவதை இது குறிக்கும்.

சரக்கு (Goods): எப் பொருளில் வணிகஞ் செய்கிறோமோ, அதுவே சரக்கெனப்படும். ஒரு பொருளை விற்கும் நோக்குடன் வாங்கியிருப்பின், அது சரக்காகிறது. தொழிலில் பயன்படுத்தும் நோக்குடன் வாங்கியிருப்பின், அதைச் சரக்கு எனும் பொதுப் பெயரில் அழைத்தல் வழுவாகும்.

சொத்துகள் (Assets): கட்டடம், கார், சரக்கு, பொறி வகை போன்ற ஒருவரின் உடைமைகளையும், பிறரிடமிருந்து பெற வேண்டிய தொகையையும் இச் சொல் உணர்த்தும்.

பொறுப்புகள் (Liabilities): பிறர்க்குத் தரவேண்டிய தொகை இதில் அடங்கும்.

முதல் அல்லது மூலதனம் (Capital): பொறுப்புத் தொகை யினும் அதிகமுள்ள சொத்துகளின் மதிப்பு முதலாகும். முதலை ஓர் அகப்பொறுப்பு (Internal Liability) எனலாம். பிறர்க்குத் தர வேண்டியதைப் புறப் பொறுப்பு (External Liability) எனலாம்.

வகையுள்ளவர் (Solvent): பொறுப்புகளைத் தீர்க்கப் போதுமான சொத்துகள் இருக்குமாயின் வகையுள்ளவர் எனலாம்.

வகைக்கற்றவர் அல்லது திவாலானவர் (Insolvent): சொத்துகளின் மதிப்பைவிடப் பொறுப்பு அதிகமிருக்குமாயின், இவ்வாறு கூறலாம்.

கடனாளி (Debtor): கடன் பேரில் சரக்கு வாங்குவதால், பிறர்க்குப் பணந்தர வேண்டியவர்.

கடனீந்தோர் (Creditor): கடன்பேரில் சரக்கு விற்கும் காரணத்தால், பிறரிடமிருந்து பணம் பெறவேண்டியவர்.

ரொக்க நடவடிக்கை (Cash Transaction): ரொக்கம் பெறுதலும் தருதலும் ரொக்க நடவடிக்கைகளாகும்.

கடன் நடவடிக்கை (Credit Transaction) : ரொக்கம் பிறரிடமிருந்து பெறுவதுமில்லை; பிறர்க்குத் தருவதுமில்லை. சரக்கையோ, சொத்தையோ கடனுக்கு விற்கும்போழுது உடைமையும் உரிமையும் மாற்றப்படுகிறது. ஆனால், அதற்குரிய, விலை உடன் தரப்படுவதில்லை. பின்னரே தரப்படும். ரொக்கத்திற் கென்று கொடுக்காமல், ஆனால் யாருக்கு விற்கப்படுகிறது அல்லது யாரிடமிருந்து வாங்கப்படுகிறது என்ற விவரம் கொடுக்கப்பட்டிருப்பின், அதைக் கடன் நடவடிக்கையாகக்கொள்ளலாம்.

## இரட்டைப் பதிவுமுறையில் கணக்குப் பதிதல்
## (Double Entry System of Book-Keeping)

எவ்வகைத் தொழிலிலும் நிகழும் நடவடிக்கைகள் எண்ணற்கரியன. ஒவ்வொரு நடவடிக்கையிலும் இரு தன்மைகள் உள்ளன. பணம் அல்லது பணமதிப்புடைய பொருள் அல்லது பணி — இது ஒருவரிடமிருந்து மற்றவர்க்கு மாறுவதாகத்தான் எந் நடவடிக்கையும் இருக்கும். இதிலிருந்து இருவர் அல்லது இரு கணக்குகள் தொடர்புடையதாகத்தான் எந்த நடவடிக்கையும் இருக்கும் என்பது புலனாகும்.

ஒரு கணக்கு, பயன் ஒன்றைத் தருகிறதென்றால் மற்றக் கணக்கு அப் பயனைப் பெறுகிறதென்றுதானே பொருள்? எனவேதான், கணக்கு ஒவ்வொன்றும் இருபகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஒரு பகுதியில் (இடப் பகுதியில்) அக் கணக்குப் பெறும் பயன்களும், மறுபகுதியில் (வலப் பகுதியில்) அது அளிக்கும் பயன்களும் பதியப் பெறுகின்றன. குறிப்பிட்ட காலத்தில் அக்

கணக்குப் பெற்றபயன் அதிகமா அல்லது அளித்த பயன் அதிகமா என்பதை அக் கணக்கின் இருபகுதிகளையும் கூட்டி இருப்புக் கட்டுவது மூலம் உணரலாம். பயன் பெறும் பகுதியைப் (இடப் பகுதியைப்) பற்றுப் பகுதி (Debit side) என்றும், பயன்தரும் பகுதியை (வலப் பகுதியை) வரவுப்பகுதி (Credit side) என்றும் அழைக்கிறோம். ஒரு கணக்கின் பற்றுப் பகுதியில் பதிவதை அக் கணக்கில் பற்றுவைப்பதாகவும், வரவுப்பகுதியில் பதிவதை அக் கணக்கில் வரவு வைப்பதாகவும் கூறலாம்.

ஒவ்வொரு நடவடிக்கையிலும் இரு தன்மைகள் உள்ளன என்று உரைத்தோம். அதாவது ஒன்று பயன் பெறுகின்ற தன்மை (receiving aspect); பிறிதொன்று பயன் தருகின்ற தன்மை (giving aspect). எடுத்துக்காட்டாக, ரூ. 5,000/- ரொக்கம் கொடுத்துப் பொறி (machinery) ஒன்றை வாங்கின், பொறிக் கணக்குப் பயனைப் பெறுகின்றது; ரொக்கக் கணக்கு அதே மதிப்பில் பயனைத்தருகிறது. இவ்வாறு, ஒரு நடவடிக்கையில் காணப் படும் இவ்விரு தன்மைகளையும் பற்று வரவு வைத்துப் பதிவதை இரட்டைப் பதிவு (Double Entry Book-Keeping) என்கிறோம். எக் கணக்கில் பற்று அல்லது வரவு வைப்பது என்பது கணக்கின் வகைக்கேற்ப மாறும். அதனைப் பின்னர்க் காண்போம். எவ் வகைத் தொழில் நிறுவனத்துக்கும் பொதுவான சில உண்மைகள் உள்ளன. அவையாவன :—

1. பிறர் அல்லது பிற நிறுவனங்களுடன் எவ் வணிக அமைப் பும் தொடர்பு கொள்ளும்.

2. சரக்கு, ரொக்கம், பொறிவகை, மனைத்துணைப் பொருள் போன்ற சில சொத்துகள் எவ்வகை அமைப்பிலும் இருக்கும்.

3. வாடகை, ஊதியம், கூலி, விளம்பரம் போன்ற செல வினங்களை ஏற்றலும், இலாப ஈவு, வட்டி, கழிவு முதலிய வர வினங்களைப் பெறுதலும் எவ்வகை அமைப்பிற்கும் உரியன.

மேற்கூறப்பட்ட முறைகளின் அடிப்படையில் கணக்குகளை மூன்று வகைப் படுத்தலாம்.

ஆள்சார் கணக்குகள் (Personal accounts) : தனிநபர் தனியாள் வணிகம், கூட்டு நிறுவனம் போன்ற பலருடன் அல்லது பல்வகை வணிக அமைப்புகளுடன் தொடர்பு ஏற்படும் என்று கண்டோம். தொடர்புள்ள ஒவ்வொருவருக்கும் அல்லது ஒவ்வோர் அமைப் புக்கும் என்று தனித்தனிக் கணக்கு வைத்திருக்க வேண்டும். இவை ஆள்சார் கணக்குகள் எனப்படும். ஆள்சார் கணக்குப் பயனைப் பெற் றிருக்குமாயின், அக் கணக்கில் பற்றும் பயனை அளித்திருக்குமாயின்,

அக் கணக்கில் வரவும் வைக்கப்படும். எவ்வாறு கணக்குகளில் பதிவதென்பதைப் பேரேட்டுக் கணக்குகள் (Ledger accounts) எனும் தலைப்பில் காண்போம்.

2. சொத்துக் கணக்குகள் (Real or property accounts): எவ்வகை வியாபாரத்திலும் அல்லது தொழிலிலும் சொத்துகள் இருக்கும். எடுத்துக் காட்டு:—ரொக்கம், சாக்கு, மனைத்துணைப் பொருள், பொறவகை, கட்டடம், கார் முதலியவை. ஒவ்வொரு வகைச் சொத்துக்கும் தனித்தனிக் கணக்கு வைத்திருக்க வேண்டும். சொத்து ஒன்றை வாங்கும்பொழுது, அக் குறிப்பிட்ட சொத்துக் கணக்கில் பற்றும், சொத்து ஒன்றை விற்கும் போழ்து அக் குறிப்பிட்ட சொத்துக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும்.

3. பெயரளவுக் கணக்குகள் (Nominal or Fictitious accounts): வாடகை, ஊதியம், விளம்பரம், பயணச் செலவு போன்ற செலவினங்களும், வாராக் கடன் போன்ற நட்டமும் எவ் வகை வணிக அமைப்பிற்கும் பொதுவானவை. அவ்வாறே வாடகை, வட்டி, இலாப ஈவு, கழிவு முதலியவற்றைப் பிறரிடமிருந்து பெறுதலும் உண்டு. அந் நிலையில் அவை வரவினங்களாகும். பிறரிடமிருந்து தள்ளுபடி பெற்றால் அது நமக்கு ஆதாயமாக அமைகிறது. ஆக, செலவினக் கணக்குகளையும் வரவினக் கணக்குகளையும் குறிப்பது பெயரளவுக் கணக்கு எனச் சொல்லலாம். ஒவ்வொரு செலவுக்கும், வரவுக்கும் தனித்தனிக் கணக்கு வைத்திருந்தால்தான், எவ்வெவ் வழிகளில் நாம் செலவு செய்துள்ளோம்; எவ்வெவ் முறைகளில் நாம் ஆதாயம் பெற்றுள்ளோம் என்பதைத் தெரிந்து கொள்ள முடியும். செலவாயினும் நட்டமாயினும் அக் குறிப்பிட்ட செலவு அல்லது நட்டக் கணக்கில் பற்றும், வரவு அல்லது ஆதாயமாயின் அக் குறிப்பிட்ட வரவு அல்லது ஆதாயக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும்.

## கணக்குப் பதிவியலின் முறைகள்
(Systems of Book-Keeping)

மேலே விளக்கப்பட்டது இரட்டைப் பதிவு முறையாகும். ஒவ்வொரு நடவடிக்கையிலுமுள்ள இரு தன்மைகளும் பதியப்படுகின்றன. இதுவே சிறந்த முறை. மற்றுமொன்று ஒற்றைப் பதிவு முறை (Single Entry System) எனப்படுவது. இதை ஒரு தனிப்பட்ட முறை என்று கூறுவதே வழுவாகும். காரணம், ஒவ்வொரு நடவடிக்கையிலுமுள்ள இரு தன்மைகளையும் இம் முறையில் பதிவதில்லை. அதாவது, ஒரு நடவடிக்கையில் தொடர்புற்றிருக்கும் இரு கணக்குகளிலும் பதிவு செய்வதில்லை. எக் கணக்கு

கள் இன்றியமையாதனவாக இருக்கின்றனவோ, அவைகளை மட்டும் எழுதி வைப்பர். ரொக்கக் கணக்கு, வாடிக்கையாளர்கள் (கடனாளிகள், கடனீந்தோர்) கணக்குகள் போன்றவையே இருக்கும். கடனுக்குச் சரக்கு விற்கும்பொழுது, கடனாளி கணக்கில் பதிவதோடு சரி; விற்பனைக் கணக்கில் பதிவதில்லை. சொத்துகள் பற்றிய கணக்குகள் இருப்பதில்லை. ஒவ்வொரு வகைச் செலவுக்கும் வரவுக்கும் எனத் தனித்தனிக் கணக்கு வைத்திருப்பதில்லை. கடன்பேரில் சொத்து ஒன்றை வாங்கின், இந் நடவடிக்கை எக் கணக்குகளிலும் பதியப் பெறுமல் போகும். ஆக, சில நடவடிக்கைகளில் ஒரு தன்மை மட்டிலும் (பற்று அல்லது வரவு) பதியப்பெறும்; ஒருசிலவற்றில் இரு தன்மைகளும் பதிவாகும்; சில நடவடிக்கைகள் பதியப்பெறுமலே விடப்பட்டிருக்கும். இதைத்தான் ஒற்றைப் பதிவு முறை என்கின்றனர். இரட்டைப் பதிவு முறையை முழுவதும் பின்பற்றுது, இன்றியமையாக் கணக்குகளை மட்டில் பதிவு செய்யும் முறையே ஒற்றைப்பதிவு முறை என்பது இதிலிருந்து தெளிவாகும். எனவேதான், ஒற்றைப் பதிவு முறை ஒரு தனி முறையன்று; குறைகள் நிறைந்த இரட்டைப் பதிவு முறைதான் அது என்று கூறப்படுகிறது. வேண்டிய விவரங்கள் உடனுக்குடன் கிடைப்பதில்லை. இருப்புப் பட்டியல் அல்லது இருப்புச் சோதனை (Trial Balance) தயாரித்துக் கணக்குகள் சரிவரப் பதியப் பட்டுள்ளனவா என்று சரிபார்த்துக் கொள்ளும் வாய்ப்பில்லை. மோசடி நிகழ்வதை உடனுக்குடன் உணரவும் முடியாது. அது நிகழாவண்ணம் தடுத்து நிறுத்தவும் முடிவதில்லை. சொத்துகளின் கணக்குகள் ஏடுகளில் பதியப் பெறுவதில்லையாகையால் அவற்றின் மதிப்பை அறிய முடிவதில்லை. இருக்கின்ற சொத்துகளை அவ்வப்பொழுது சந்தை விலைப்படி (Market value) மதிப்பிட்டே தெரிந்து கொள்ள முடியும். ஆண்டு முடிவில் இலாப நட்டக் கணக்கும் எளிதில் தயாரிக்க முடிவதில்லை. அரைகுறைக் கணக்குகளிலிருந்து தயாரிக்கப்பெறும் வணிக நிலையறிக்கையோ (Statement of affairs) வியாபாரத்தின் உண்மை நிலையைச் செவ்வையாகப் படம் பிடித்துக் காட்டுவதில்லை. இத்துணைக் குறைபாடுகள் மிகுந்திருந்த போழ்திலும் நாட்டில் பல்கிப் பெருகியுள்ள சிறு சிறு வியாபார அமைப்புகள் இவ் வழியில்தான் கணக்குகளைப் பதிந்து வருகின்றன.

## இரட்டைப் பதிவுமுறையின் நன்மைகள்
## (Advantages of Double Entry System)

ஒற்றைப்பதிவு முறையில் காணப்பெறும் குறைபாடுகள் அறவே அகற்றப்படுகின்றன.

நடவடிக்கைகள் அனைத்தும் பதியப்பெறுகின்றன. ஆள்சார் கணக்குகள் மட்டுமன்றிச் சொத்துக் கணக்குகளும் பதியப்பெறுகின்றன. எனவே, முழுமை பெற்ற ஒரு முறையாக இது இயங்குகின்றது.

வேண்டிய புள்ளி விவரங்களைத் தொல்லை சிறிதுமின்றிப் பெற முடியும். சொத்துகள்—பொறுப்புகள் — இவற்றின் மதிப்பினை அறியவும், குறிப்பிட்ட நாளில் தொழிலின் நிதிநிலையை உணரவும் முடியும்.

கணக்குகள் சரிவரப் பதியப்பட்டுள்ளனவா என்பதை இருப்புப்பட்டியல் தயாரிப்பதிலிருந்து அறிந்து கொள்ளலாம்.

வியாபார இலாப நட்டக் கணக்கு, ஏற்பட்ட இலாபம் அல்லது இழப்பை உணர்த்துகிறது. இருப்புநிலைக் குறிப்பு, குறிப்பிட்ட நாளில் தொழிலின் நிலையை விளக்குகிறது.

கடந்த ஆண்டுகளுடன் ஒப்பிட்டு விற்பனை கூடியுள்ளதா, செலவினங்கள் கட்டுப்படுத்தப்பட்டு ஆதாயம் அதிகரித்துள்ளதா என்பதை ஆய்ந்து, செய்யும் வணிகம் அல்லது தொழில் சீரிய முறையில் வளர்ந்தோங்கத் தேவையான முறைகளை மேற்கொள்ள முடியும்.

## பற்று வரவு விதிகள்
### (Rules for Debit and Credit)

1. ஆள்சார் கணக்கு

பெறுபவர் கணக்கில் பற்று வை; தருபவர் கணக்கில் வரவு வை. (Debit the Receiver and credit the Giver.)

எடுத்துக்காட்டு :- அன்பழகனுக்கு அளித்தது ரூ. 500.

இதில் அன்பழகன் நம்மிடமிருந்து ரூ. 500 பெறுகிறார் என்பது புலனாகும். அதாவது, அன்பழகன் பயன் பெறுகிறவர் ஆகிறார். ஆகவே, அவர் கணக்கில் இத் தொகைக்குப் பற்று வைக்க வேண்டும்.

ஆடலரசிடம் பெற்றது ரூ. 200.

இதில் ஆடலரசு என்பவர் நமக்கு ரூ. 200 அளித்திருக்கிறார். அதாவது பயன் தருபவர் ஆகிறார்., ஆகவே, ஆடலரசின் கணக்கில் இத் தொகைக்கு வரவு வைக்க வேண்டும்.

இந் நிலையிலேயே ஒன்றைத் தெளிவாக நாம் உணர வேண்டும். வியாபார அமைப்பின் ஏடுகளில்தான் நாம் பதிவுகளைச் செய்கிறோம். அவ் வியாபார அமைப்பின் உரிமையாளர் ஒருவரே

ஆயினும், அவரிடமிருந்து வேறுபட்டது வியாபாரம் ஆகும். எனவே, எந் நடவடிக்கையையும் வியாபாரத்தின் கண்கொண்டே நோக்க வேண்டும். மேற் கூறப்பட்ட எடுத்துக்காட்டுகளில் அன்பழகனுக்கு அளித்தது ரூ. 500 எனும் பொழுது, நமது வியாபாரம் அவர்களுக்கு ரூ. 500 அளித்தது என்று பொருள். ஆடலரசிடம் ரூ. 200 பெற்றது என்றால் நமது வியாபார நிறுவனம் அவரிடமிருந்து பெற்றிருக்கின்றது என்று பொருளாகும். இவ்வாறே சரக்கு வாங்கியது, மனைத்துணைப் பொருள் விற்றது, கூலி கொடுத்தது என்றெல்லாம் சொல்லும் போழுது நமது நிறுவனம் வாங்கியது, விற்றது, கொடுத்தது என்றே கொள்ள வேண்டும்.

2. சொத்துக் கணக்கு

விதி : உள்வரும் சொத்துக் கணக்கில் பற்று வை; வெளிச் செல்லும் சொத்துக் கணக்கில் வரவு வை (Debit what comes in and credit what goes out).

சொத்து ஒன்றை வாங்கும் போழுது அது உள் வருவதாகவும், விற்கும் பொழுது அது வெளிச் செல்வதாகவும் கொள்ள வேண்டும்.

எடுத்துக்காட்டு : தட்டெழுத்துப் பொறி ரூ. 2,000-க்கு வாங்கியது.

இது ஒரு ரொக்க நடவடிக்கை. ரொக்கம் கொடுத்துத் தட்டெழுத்துப் பொறி ஒன்றை வாங்கியுள்ளோம். தட்டெழுத்துப் பொறி நம்மிடம் வந்துள்ளதால் அதன் கணக்கில் பற்று வைக்க வேண்டும். அதன் விலையைச் செலுத்துவதால் ரொக்கம் வெளிச் செல்கிறது. ரொக்கமும் சொத்துக் கணக்கு வகையைச் சார்ந்தது. எனவே, ரொக்கக் கணக்கில் வரவு வைக்க வேண்டும்.

முன்னர் விளக்கப்பட்ட ஆடலரசிடம் பெற்றது ரூ. 200 எனும் எடுத்துக்காட்டில், தொடர்பான கணக்குகள் 1. ஆடலரசு; 2. ரொக்கம். ஆள்சார் கணக்கின் விதிப்படி, பயன் கொடுத்த ஆடலரசின் கணக்கில் வரவு வைத்து விட்டோம். சொத்துக் கணக்கு வகையைச் சேர்ந்த ரொக்கம் நம்மிடம் வந்துள்ளதால், 'உள் வரும் சொத்துக் கணக்கில் பற்றுவை' எனும் விதிப்படி ரொக்கக் கணக்கில் பற்று வைத்தாக வேண்டும்.

3. பெயரளவுக் கணக்கு

விதி : செலவு, நட்டக் கணக்கில் பற்று வை;
வரவு, ஆதாயக் கணக்கில் வரவு வை.

(Debit all losses and expenses; Credit all incomes and gains)

எடுத்துக்காட்டு:

விளம்பரம் கொடுத்தது ரூ. 1,000.

இதில் தொடர்பான கணக்குகள்: 1. விளம்பரம் என்ற செலவுக் கணக்கும், 2. ரொக்கக் கணக்குமாகும். செலவுக் கணக்கில் பற்று வை எனும் பெயரளவுக் கணக்கின் விதிப்படி, விளம்பரக் கணக்கில் பற்று வைக்க வேண்டும். விளம்பரத்துக்கெனக் கொடுக்கும் போழுது ரொக்கம் வெளிச் செல்வதால், சொத்துக் கணக்கின் விதிப்படி, ரொக்கக் கணக்கில் வரவு வைக்க வேண்டும்.

வட்டி பெற்றது ரூ. 200.

இதில் தொடர்பான கணக்குகள் 'வட்டி' என்ற பெயரளவுக் கணக்கும், ரொக்கம் என்ற சொத்துக் கணக்குமாகும். நாம் ரூ. 200 ரொக்கம் பெறுவதற்குக் காரணமாக, வழியாக இருப்பது வட்டியாகும். எனவே, இது நமக்கு வரவு ஆகும். பெயரளவுக் கணக்கின் விதிப்படி, வரவுக் கணக்கான 'வட்டிக்' கணக்கில் வரவு வைக்க வேண்டும். வட்டி எனும் ஒரு பொருளைப் பெறுவதில்லை. வட்டியின் காரணமாக ரொக்கத்தைத்தான் பெறுகிறோம். ஆகவே, ரொக்கக் கணக்கில் பற்று வைக்க வேண்டும்.

மேலே விளக்கப்பட்ட பற்று-வரவு விதிகளிலிருந்து நாம் உணர வேண்டியது: எந் நடவடிக்கையிலும் இரு கணக்குகள் தொடர்புற்றிருக்கும். முதலில் அவற்றைக் கண்டுபிடித்து, வகைப்படுத்த வேண்டும். (ஆள்சார் கணக்கா, சொத்துக் கணக்கா, பெயரளவுக் கணக்கா என்பதை அறிய வேண்டும்.) பிறகு அவ்வகைக் கணக்கிற்கான விதியைப் பயன்படுத்தின், பற்று வைக்க வேண்டிய கணக்கையும், வரவு வைக்க வேண்டிய கணக்கையும் உணரலாம்.

## சரக்குக் கணக்கு
(Goods a/c)

'சரக்கு' எனுஞ் சொல் வணிகம் செய்யும் பொருளைக் குறிக்கும் என்று முன்னரே கூறியுள்ளோம். அதாவது, அஃது ஒரு பொதுப் பெயர். சரக்கு மதிப்புடையது. எனவே, சொத்து வகையைச் சார்ந்ததாகும். சரக்கு வாங்கும்பொழுது அது உள் வருவதால், சரக்குக் கணக்கில் பற்று வைக்க வேண்டியதும் சரக்கு விற்கும் பொழுது வெளிச்செல்வதால், சரக்குக் கணக்கில் வரவு வைக்க வேண்டியதும் புலப்படும். நாம் சரக்கு வாங்கும்பொழுது, அதுவும் வெளியூரிலிருந்து வரவழைக்கும் பொழுது, சில சேதமடைந்திருக்கலாம்; நாம் குறிப்பிட்ட சரக்கின்றி வேறு வகையை நம்மிடம் அனுப்பியிருக்கலாம்; அல்லது நாம் வேண்டிய அளவினும் அதிகம் அனுப்பியிருக்கலாம். இந் நிலைகளில், வந்த சரக்கைத் திருப்பியனுப்புவது வழக்கம். வாங்கிய சரக்கைத் திருப்பியனுப்பும்

பொழுது, சரக்கு நம்மிடமிருந்து வெளிச் செல்கிறது. சொத்துக் கணக்கின் விதிப்படி அப்பொழுது சரக்குக் கணக்கில் வரவு வைக்க வேண்டும் அல்லவா? சரக்குக் கணக்கில் வரவு வைக்கும் பொழுது, அதை விற்றதால் வரவு வைக்கிறோமா அல்லது திருப்பி யனுப்பியதால் அதில் வரவு வைக்கிறோமா என்பது தெரிவதில்லை. இவ்வாறே, நம்மிடம் சரக்கு வாங்கியவர்கள் இதே காரணங்கட் காகச் சரக்கைத் திருப்பி யனுப்பலாம். நம்மிடம் சரக்கு உள் வருகிறது. சரக்குக் கணக்கில் பற்றுவைக்க வேண்டியதாகிறது. சரக்கு வாங்கியதால் அக் கணக்கில் பற்று வைக்கிறோமா அல்லது சரக்கு நம்மிடம் திருப்பியனுப்பப் பட்டதால் அதில் பற்று வைக் கிறோமா என்பது விளங்குவதில்லை. இதனுல் சரக்கு எனும் பொதுப் பெயரில் கணக்கெழுதி வைப்பதில் பயனில்லை என்பது தெளிவாகும். 'சரக்கு' எனுஞ் சொல் நான்கு வகைக் கணக்குகளை உணர்த்தும், நாம் சரக்கு வாங்கும்பொழுது 'கொள்முதல் கணக்கு' (purchase a/c) என்றழைத்து அதில் பற்று வைக்கலாம்; விற்கும்பொழுது 'விற்பனை (sales a/c) என்றழைத்து விற்பனைக் கணக்கில் வரவு வைக்கலாம்; வாங்கிய சரக்கை நாம் பிறர்க்குத் திருப்பியனுப்பும் பொழுது 'கொள்முதல் திருப்பம்' (purchase returns) அல்லது 'வெளித்திருப்பம்' (Returns outward) என் றழைத்து அக் கணக்கில் வரவு வைக்கலாம்; நாம் விற்ற சரக்கை நம் வாடிக்கையாளர்கள் நம்மிடம் திருப்பி யனுப்பும் பொழுது அதனை 'விற்பனைத் திருப்பம்' (Sales returns) அல்லது 'உள் திருப்பம்' (Returns inwards) என்றழைத்து அக் கணக்கில் பற்று வைக்கலாம். இவ்வாறு சரக்கை வகைப்படுத்திக் கூறும் பொழுது பொருள் தெளிவாகிறது; எதன் காரணமாகப் பற்று அல்லது வரவு வைக்கிறோம் என்றும் தெரிகிறது. 'கொள்முதல்' என்று சொல்லும்பொழுது சரக்கு வாங்குவதைத்தான் குறிக்கும். வேறு சொத்துகள் வாங்கும்பொழுது ஒவ்வொரு சொத்தின் பெயரில் தனித்தனிக் கணக்கு வைத்திருக்க வேண்டும் என்று முன்னரே கூறியிருக்கிறோம். அவ்வாறே, 'விற்பனை' எனும்பொழுது சரக்கு விற்பதைத்தான் அது குறிக்கும்.

சில எடுத்துக்காட்டுகள்:

1. அகமது ரூ. 10,000 வைத்து வியாபாரம் தொடங்கியது.

முதல் போட்டவர் அகமது. இதனுல் நாம் அகமதுவின் ஏடுகளில் எழுதுகிறோம். ஒருவர் முதல் போடுகிறார் என்றால் வியாபாரத்துக்கென ரொக்கம் தருகிறார் என்று பொருள். எந் நடவடிக்கையையும் வியாபாரத்தின் கண்கொண்டே நோக்க வேண்டுமென்று கூறியிருக்கிறோம். வியாபாரத்தைப் பொறுத்த

வரை ரொக்கம் உள் வருகிறது. ரொக்கம் சொத்து வகையைச் சேர்ந்த தாகையால், உள்வரும் ரொக்கக் கணக்கில் பற்று வைக்க வேண்டும். முதல் அல்லது மூலதனம் என்ற கணக்கு இப் பலனை வழங்கியுள்ளது. இது அகமதுவின் முதல் கணக்கு—அவர் பொருட்டு உள்ள கணக்கு. எனவே, பலனை அளித்துள்ள முதல் கணக்கில் வரவு வைக்க வேண்டும். முதல் ஒரு பொறுப்பு ஆகும். காரணம் அகமது இப்பொழுது போட்ட முதலை, வியாபாரம் மூடப்படும்பொழுது திருப்பித் தர வேண்டு மல்லவா?

2. ஆலாலத்திடம் சரக்கு வாங்கியது ரூ. 2,000.

முன் விளக்கியவாறு சரக்கு உள் வருகிறது. எனவே, கொள் முதல் கணக்கில் பற்றுவைக்க வேண்டும். ரொக்கத்துக்கு வாங்கியது என்று சொல்லப்படாமையாலும், யாரிடம் வாங்கியுள்ளோம் என்ற விளக்கம் குறிப்பிட்டுள்ளதாலும் இது ஒரு கடன் நடவடிக்கை. ஆலாலம் ரூ. 2,000 மதிப்புள்ள சரக்கு எனும் பயனைக் கொடுத்தவர் ஆகிறார். ஆகவே, ஆலாலம் கணக்கில் வரவு வைக்க வேண்டும்.

3. இன்பநாதனிடம் எந்திரம் விற்றது ரூ. 2,500.

இதுவும் ஒரு கடன் நடவடிக்கையே. தொடர்பான கணக்குகள் :- (1) இன்பநாதன் கணக்கு (2) எந்திரக் கணக்கு.

இன்பநாதன் கணக்கு ஒரு ஆள்சார் கணக்கு. நாம் கடன்பேரில் எந்திரத்தை விற்கும்பொழுது அவர் நம்மிடமிருந்து பயனைப் பெறுகிறார். எனவே, அவர் கணக்கில் பற்று வைக்கவேண்டும். எந்திரம் நம்மிடமிருந்து இன்பநாதன் கைக்குச் செல்கிறது. எந்திரக் கணக்குச் சொத்து வகையைச் சார்ந்தது. எனவே, எந்திரக் கணக்கில் வரவு வைக்கவேண்டும். எந்திரம் விற்பதை விற்பனை எனக் கொண்டு விற்பனைக் கணக்கில் வரவு வைக்கக் கூடாது— காரணம், சரக்கு விற்பனையை மட்டிலுமே விற்பனை என்றழைக்கிறோம்.

4. விற்பனை ரூ. 500.

வேறு விவரங்கள் கொடுக்கப்படாமையால், இது ஒரு ரொக்க நடவடிக்கையாகும். நாம் சரக்கு விற்கும்பொழுது ரொக்கம் உள் வருகிறது. இதில் தொடர்புற்ற கணக்குகளான ரொக்கக் கணக்கும் விற்பனைக் கணக்கும் இரண்டுமே சொத்துக் கணக்குகளாகும். ரொக்கம் உள் வருவதால் ரொக்கக் கணக்கில் பற்றும், சரக்கு வெளிச் செல்வதால் விற்பனைக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும்.

5. ஈசனிடம் பெற்ற கழிவு ரூ. 50.

கழிவு பெறுகிறோம் என்றால் கழிவுக்கென பெறும் ரொக்கத்தைத்தான் அது குறிக்கும். ரொக்கம் உள் வருகிறது. எனவே, ரொக்கக் கணக்கில் பற்று வைக்க வேண்டும். இத் தொகையைப் பெறுவதற்குக் காரணமாயிருந்த ஆதாயக் கணக்கின் பெயர் கழிவுக் கணக்காகும். எனவே கழிவுக் கணக்கில் வரவு வைக்க வேண்டும்.

6. உலகநாதனிடம் கொடுத்த வாடகை ரூ. 150.

நாம் கொடுத்த வாடகை ஒரு செலவினமாகும். பெயரளவுக் கணக்கின் விதியின்படி, செலவுக் கணக்கான வாடகைக் கணக்கில் பற்று வைக்க வேண்டும். வாடகை கொடுத்தோமெனில் ரொக்கம் நம்மிடமிருந்து வெளிச் சென்றிருக்கின்றதல்லவா? எனவே, வெளிச் செல்லும் ரொக்கக் கணக்கில் வரவு வைக்க வேண்டும்.

இதில் நாம் கொடுத்த வாடகையைப் பெறுபவர் உலகநாதன் என்று கொண்டு உலகநாதன் கணக்கில் பற்று வைக்கக் கூடாது. காரணம், நாம் உலகநாதனின் கட்டடத்தைப் பயன்படுத்தியதற்காகக் கொடுத்த தொகை. ஆகவே, வாடகை என்பது ஒரு வகைச் செலவாகிறது. செலவுக் கணக்கில்தான் பற்று வைக்க வேண்டும். அவ்வாறின்றி, உலகநாதன் கணக்கில் பற்று வைத்தால் பிறகு இத் தொகையை அவர் திருப்பித் தர வேண்டுமென்று பொருள் படலாம்; அல்லது முன்னரே அவர் கொடுத்த தொகைக்காக அல்லது பொருளுக்காக இப்பொழுது அத் தொகையைத் தருவதாகப் பொருள் ஏற்படலாம். ஆகவேதான், ஆள்சார் கணக்கில் பற்று வைக்கக்கூடாது.

7. கொள்முதல் ரூ. 200.

இது ரொக்கத்திற்குச் சரக்கு வாங்கியதைக் குறிக்கிறது. சரக்கு உள் வந்திருக்கிறது. எனவே, கொள்முதல் கணக்கில் பற்று வைக்க வேண்டும். ரொக்கங் கொடுத்து வாங்கியுள்ளதால், ரொக்கக் கணக்கில் வரவு வைக்க வேண்டும்.

8. அரசினர் கடன் பத்திரங்கள் வாங்கியது ரூ. 5,000.

இஃதும் ஒரு ரொக்க நடவடிக்கையே. அரசினர் கடன் பத்திரங்களை நாம் வாங்கியுள்ளோம். இது சரக்கன்று. எனவே, கொள்முதல் கணக்கில் பற்று வைக்கக் கூடாது. நாம் இப்பொழுது வாங்கியுள்ள அரசினர் கடன் பத்திரங்களை எப்பொழுது வேண்டுமாயினும் விற்றுப் பணமாக்கிக் கொள்ளலாம்; அல்லது கடன் பத்திரத்தில் குறிப்பிட்ட ஆண்டில் அரசினரிடம் கொடுத்து முழுத்

தொகையையும் பெற்றுக் கொள்ளலாம். அவ்வப்பொழுது அதற்கான வட்டியும் நமக்குக் கிடைக்கும். இதிலிருந்து அரசினர் கடன் பத்திரங்கள் நாம் செய்த முதலீடு (Investment) என்பதும், அது சொத்து வகையைச் சார்ந்தது என்பதும் நமக்குப் புலப்படும். ஆகவே, அரசினர் கடன் பத்திரங்கள் கணக்கில் பற்றும், ரொக்கக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும்.

9. ஊட்டி டிரேடர்சிடம் (Coty Traders) விற்றது ரூ. 1,000.

'ரொக்கத்திற்கு விற்றது' என்று குறிப்பிடாததாலும், யாருக்கு விற்ரேம் என்ற விவரம் இருத்தலாலும் இஃது ஒரு கடன் நடவடிக்கையாகும். 'பெறுபவர் கணக்கில் பற்று வை' எனும் ஆள்சார் கணக்கு விதிப்படி, ஊட்டி டிரேடர்ஸ் கணக்கில் பற்று வைக்க வேண்டும். என்ன விற்ரேம் என்ற விவரம் கொடுக்காமல் விற்றது என்று கொடுத்தாலே அது சரக்கு விற்றதைத்தான் குறிக்கும். எனவே, விற்பனைக் கணக்கில் வரவு வைக்க வேண்டும்.

10. எல்லப்பனிடம் திருப்பி அனுப்பிய சரக்கு ரூ. 50.

நாம் திருப்பி அனுப்பிய சரக்கு. அதாவது எல்லப்பனிடம் முன்னர்ச் சரக்கு வாங்கியிருப்போம். எக் காரணம் பற்றியோ அவரிடம் திருப்பியனுப்புகிறேம். எனவே, இது கொள்முதல் திருப்பம். இவ்வாறு சரக்கைத் திருப்பியனுப்பும் போழ்து, எல்லப்பன் அதனைப் பெறுகிருர். எனவே, எல்லப்பன் கணக்கில் பற்று வைக்க வேண்டும். சரக்கு வெளிச் செல்வதால் 'கொள் முதல் திருப்பக்' கணக்கில் அல்லது அதற்கு வேறு பெயரான 'வெளித் திருப்பக்' கணக்கில் வரவு வைக்க வேண்டும்.

11. ஏகாம்பரம் திருப்பியனுப்பிய சரக்கு ரூ. 75.

ஏகாம்பரத்திடம் நாம் விற்ற சரக்கில் ஒரு பகுதியை எக் காரணம் பற்றியோ அவர் நம்மிடம் திருப்பியனுப்புகிருர். எனவே, இதனை 'விற்பனைத் திருப்பக்' கணக்கில் அல்லது அதற்கு வேறு பெயரான 'உள் திருப்பக்' கணக்கில் பற்று வைக்க வேண்டும். இச் சரக்கைக் கொடுப்பவராக ஏகாம்பரம் இருத்தலால் ஏகாம்பரம் கணக்கில் வரவு வைக்க வேண்டும்.

12. வீட்டுச் செலவுக்கென அகமது எடுத்துக் கொண்டது ரூ. 300.

அகமது இந் நிறுவனத்தின் உரிமையாளர். அவர் எடுத்துக் கொண்ட ரூ. 300 வியாபாரத்தின் பொருட்டன்று. வியாபாரத்திற் கென்றில்லாமல் வேறு காரணங்கட்காகச் செலவழிப்பதைச் செலவாகக் கொள்ளல் தவறு. உரிமையாளர் தம் வீட்டுச்

செலவுக்கு எடுத்துள்ளதால் இதை எடுப்புக் கணக்கு (Drawings a/c) எனும் தனிக்கணக்கில் பதிய வேண்டும். உரிமையாளர் வியாபார நிறுவனத்திலிருந்து வியாபாரத்திற்கென்றல்லாமல் பிற காரணங் கட்காக எடுக்கும் தொகையைக் குறிப்பது எடுப்புக் கணக்காகும். எனவே, எடுப்புக் கணக்கில் பற்று வைக்க வேண்டும். ரொக்கம் வெளிச் செல்வதால், ரொக்கக் கணக்கில் வரவு வைக்க வேண்டும்.

வியாபாரத் தள்ளுபடி (Trade Discount)

உற்பத்தியாளர் மொத்த வியாபாரிக்கோ அல்லது மொத்த வியாபாரி சில்லறை வியாபாரிக்கோ அளிக்கும் தள்ளுபடி இது. விலைப் பட்டியலில் குறிப்பிட்ட விலையினின்றும் இத் தொகையைக் குறைத்தே இடாப்புத் (Invoice) தயார் செய்வர். விலைப்பட்டிய லில் காணப் பெறும் விலையிலேயே அனைவரும் விற்க வேண்டும் என்ற நோக்கத்துடன் இத் தள்ளுபடி அளிக்கப் படுகிறது. அதே நேரத்தில் விற்போர்க்கு ஆதாயம் கிடைக்கவும் இது வழி செய் கிறது. வியாபாரத்துக்கு வியாபாரம், பொருளுக்குப் பொருள் இத் தள்ளுபடியின் விகிதம் மாறுபடுகிறது. (இது கணக்கேடுகள் எதிலும் பதியப் பெறுவதில்லை.)

ரொக்கத் தள்ளுபடி (Cash Discount)

இது வியாபாரத் தள்ளுபடியினின்றும் முற்றிலும் மாறுபடு கிறது. குறிப்பிட்ட காலத்திற்குள் கடன் தொகையைப் பெற வேண்டும் என்ற நோக்கத்துடன் கடனளிக்குக் கடனீந்தோர் அளிக்கும் தள்ளுபடி இது. எடுத்துக் காட்டாக, பாரி, பல்லவனிடம் ரூ. 1,000க்குச் சரக்கு வாங்கியிருப்பதாகவும், சரக்கெடுத்த ஒரு திங்களுக்குள் விலை செலுத்தப் படுமாயின், 2% தள்ளுபடி கிடைப் பதாகவும் கொள்வோம். குறிப்பிட்ட காலத்திற்குள் பாரி தொகை யைச் செலுத்துவதாயின், அவர் ரூ. 1,000 தர வேண்டியதில்லை. ரூ. 20 தள்ளுபடி போக ரூ. 980 கொடுத்தால் போதுமானது. பாரியைப் பொறுத்தவரை ரூ. 20 ஆதாயம். ரூ. 1,000 மதிப்புள்ள சரக்குக்கு அவர் செலுத்திய தொகை ரூ. 980. எனவே, பெயரளவுக் கணக்கு விதிப்படி, அவர் ஏடுகளில் தள்ளுபடிக் கணக்கில் வரவு வைக்கப்படும். பல்லவனைப் பொறுத்த வரை இத் தள்ளுபடி ஒரு நட்டமாகும். ரூ. 1,000 மதிப்புள்ள சரக்கிற்கு அவர் பெறுவது ரூ. 980. எனவே, பல்லவன் ஏடுகளில் தள்ளுபடிக் கணக்கில் பற்று வைக்கப்படும். இவ்வாறு ரொக்கத் தள்ளுபடி, பெறுபவர்க்கு ஆதாயமாகவும், அதைத் தருபவருக்கு நட்டமாகவும் அமைவதால் இருவர் ஏடுகளிலும் இது பதியப் பெறுகிறது.

இதற்கான பற்று வரவு விதிகளை இனிக் காண்போம்:

13. ஐயாசாமியிடம் ரூ. 490 கொடுத்து ரூ. 500க்கான கணக்கைத் தீர்த்துக் கொண்டது.

இது ஒரு ரொக்க நடவடிக்கை. ஐயாசாமியிடம் ரூ. 490 கொடுத்திருப்பதால் ஐயாசாமி பெறுபவர்; ரொக்கம் வெளிச் செல்கிறது. எனவே, ஐயாசாமியின் கணக்கில் பற்றும், ரொக்கக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும். இதனுடன் இந் நடவடிக்கைக்கான பதிவு முற்றுப் பெறுவதில்லை. நாம் கொடுக்க வேண்டிய தொகையோ ரூ. 500; ஆனல் கொடுத்ததோ ரூ. 490. மீதி ரூ. 10 ஐ நாம் கொடுக்கத் தேவையில்லை. காரணம், கணக்கைத் தீர்த்துக் கொண்டோம். அதாவது, நாம் குறிப்பிட்ட காலக் கெடுவுக்குள் தொகையைச் செலுத்திய காரணத்தால், அவர் நமக்கு அளிக்கும் தள்ளுபடி ரூ. 10. என்பது புலப்படும். எனவே, இது ஆதாயமாக அமைகிறது. பெயளரவுக் கணக்கின் விதிப்படி ஆதாயமாக அமைந்துள்ள இதனைத் தள்ளுபடிக் கணக்கில் வரவு வைக்க வேண்டும். நமக்குக் கடனீந்தோரான ஐயாசாமிக் கணக்கு வரவு இருப்பைக் காட்டியிருக்கும். அவர் கணக்கை முடிக்க ஐயாசாமியின் கணக்கில் பற்று வைக்க வேண்டும்.

14. ஒலிம்பிக் டிரேடிங் கம்பெனியிடம் பெற்றது ரூ. 985. அவர்க்களித்த தள்ளுபடி ரூ. 15.

ரூ. 985 ரொக்கம் நம்மிடம் வந்துள்ளது. ரொக்கக் கணக்கில் பற்று வைக்க வேண்டும். ஒலிம்பிக் டிரேடிங் கம்பெனி இத் தொகையைத் தந்தவர். எனவே, ஒலிம்பிக் டிரேடிங் கம்பெனிக் கணக்கில் வரவு வைக்க வேண்டும். ரூ. 1,000 பெறுவதற்குப் பதிலாக ரூ. 985 பெற்றுக் கொண்டு ரூ. 15 தள்ளுபடி அவர்க்குக் கொடுத்துள்ளோம். இது நாம் அளித்த தள்ளுபடியாகும். இது ஒரு நட்டக் கணக்கு. எனவே, தள்ளுபடிக் கணக்கில் ரூ. 15ஐ பற்றுவைக்க வேண்டும். பற்றிருப்பைக் காட்டும் ஒலிம்பிக் டிரேடிங் கம்பெனிக் கணக்கை முடிக்க வேண்டியிருத்தலால், அவர் கணக்கில் இதே தொகைக்கு வரவு வைக்க வேண்டும்.

தள்ளுபடி நடவடிக்கைகளில் நாம் உணர வேண்டியது

1) நாம் பிறரிடம் பணம் பெறும் பொழுதுதான் தள்ளுபடி அளிக்கிறோம். தள்ளுபடிக் கணக்கில் பற்று வைக்க வேண்டும். யாருக்குத் தள்ளுபடி அளித்தோமோ அவர் கணக்கில் வரவு வைக்க வேண்டும்.

2) நாம் பிறரிடம் பணஞ் செலுத்தும் பொழுதுதான் நமக்குத் தள்ளுபடி அளிக்கப்படுகிறது. தள்ளுபடிக் கணக்கில் வரவு வைக்க

வேண்டும். யார் நமக்குத் தள்ளுபடி அளித்துள்ளனரோ, அவர் கணக்கில் பற்று வைக்க வேண்டும்.

15. வருமான வரி (Income Tax) செலுத்தியது ரூ 200.

இது ஒரு ரொக்க நடவடிக்கை. வருமானவரி என்பது ஒருவரின் மொத்த வருமானத்தின்மீது விதிக்கப்படும் வரியாகும். பல்வகையிலும் ஒருவர் பெறும் வருவாயினையும் கூட்டி அம் மொத்தத் தொகை மீது விதிக்கப்படுவது. வருமானவரி வியாபாரத்திற் குரிய செலவன்று. அது அகமதின் (உரிமையாளரின்) வருமானத்துக்கு விதிக்கப்படுவதால், அவருடைய சொந்தச் செலவாகக் கொள்ள வேண்டும். எனவே, எடுப்புக் கணக்கில் பற்று வைக்க வேண்டும். வருமான வரி செலுத்தும் போழுது ரொக்கம் வெளிச் செல்வதால் ரொக்கக் கணக்கில் வரவு வைக்க வேண்டும்.

## வங்கி நடவடிக்கைகள்
(Banking Transactions)

அலுவலகத்தில் பெருந் தொகையை வைத்திருப்பதால் எழும் இடையூறுகள் பல என்பதை அனைவரும் அறிவர். எனவே, நாள் தோறும் மேற்கொள்ளும் நடைமுறைகளுக்காகச் சிறு தொகை மட்டில் வைத்துக் கொண்டு மீதியை வங்கியில் போடுவது வழக்கம் என்பதை அனைவரும் அறிவர். பிறர்க்குப் பணம் கொடுக்க வேண்டியிருப்பின் காசோலையைப் (Cheque) பயன்படுத்திக் கொள்ளலாம். நம்மிடம் காசோலை பெற்றவர்கள் நம் வங்கியிலிருந்து பணத்தைப் பெற்றுக் கொள்வர். நமக்கு அலுவலகத்தில் ரொக்கம் தேவைப்படினும் காசோலை மூலம் பெற்றுக் கொள்ளலாம். வணிக-தொழில் நிறுவனங்களின் அளவு பெரிதாகப் பெரிதாக காசோலைகளே அதிக அளவில் பயன்படுத்தப்படுகின்றன. பெரிய நிறுவனங்களில் பெரும்பாலான செலவினங்கள் காசோலை வழியாகவே செய்யப்படுகின்றன. மிகக் குறைந்த அளவில் செய்யும் சிறுசிறு செலவினங்கட்கே ரொக்கம் பயன்படுத்தப்படுகிறது. வங்கி நடவடிக்கைகளில் பற்று-வரவு விதிகளை இனிக் காண்போம்.

வங்கிக் கணக்கு ஆள்சார் கணக்கு வகையைச் சார்ந்தது. நாம் வங்கியில் பணங்கட்டும் பொழுது, வங்கிக் கணக்கு அதைப் பெறுகிறது. பெறுபவர் கணக்கில் பற்றுவை, எனும் விதிப்படி வங்கிக் கணக்கில் பற்று வைக்க வேண்டும். ரொக்கம் வெளிச் செல்வதால், ரொக்கக் கணக்கில் வரவு வைக்க வேண்டும்.

16. ரூ. 5000. செலுத்தி வங்கிக் கணக்கு ஒன்று தொடங்கியது. மேலே விளக்கியவாறு வங்கிக் கணக்கில் பற்றும், ரொக்கக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும்.

17. ரூ. 500 மதிப்புள்ள சரக்கு காசோலை கொடுத்து வாங்கியது.

காசோலை கொடுப்பினும், அதையும் ஒரு ரொக்க நடவடிக்கை போன்றே கருதிப் பதிவு செய்ய வேண்டும். சரக்கு வாங்கியதால் கொள்முதல் கணக்கில் பற்றுவைக்க வேண்டும். காசோலை கொடுப்பதால் நமது வங்கி இதற்கான தொகையைச் செலுத்தும். எனவே, 'கொடுப்பவர் கணக்கில் வரவு வை' எனும் விதிக்கேற்ப வங்கிக் கணக்கில் வரவு வைக்க வேண்டும்.

18. விளம்பரச் செலவுக்குக் காசோலை கொடுத்தது ரூ. 500.

விளம்பரச் செலவுக் கணக்கில் பற்றும், வங்கிக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும். பிறரிடமிருந்து நமக்கு வரவேண்டிய தொகைக்கு ரொக்கத்திற்குப் பதில் காசோலையைப் பெறலாம். காசோலையைப் பெற்றவுடன் வங்கிக் கணக்குகளில் பற்றுவைக்கக் கூடாது. காரணம், பிறரிடமிருந்து பெற்ற இக் காசோலையை வங்கியில் செலுத்தினால்தான் வங்கி நம்மிடமிருந்து இப் பயனைப் பெறுபவர் ஆகிறார். எனவே, 'கணக்குகளில் காசோலை பெற்றது' என்று மட்டும் குறிப்பிட்டிருந்தால் அதை ரொக்கம் பெற்றதாகவே கருதி ரொக்கக் கணக்கில் பற்றுவைக்க வேண்டும். பின்னர் இக் காசோலையை நாம் வங்கிக்கு அனுப்பும் பொழுது நம்மிட மிருந்து ரொக்கம் வெளிச் செல்வதாகக் கொண்டு, ரொக்கக் கணக்கில் வரவு வைக்க வேண்டும். கீழ்க்கண்ட எடுத்துக்காட்டு இதனை விளக்கும்.

19. (அ) காசிநாதனிடமிருந்து காசோலை பெற்றது ரூ. 10,000.

ரொக்கத்திற்குப் பதில் காசோலையே பெறினும் ரொக்கம் உள் வந்ததாகவே கொள்ள வேண்டும். காரணம், காசோலை நம்மிடமே உள்ளது; வங்கிக்கு அனுப்பப்படவில்லை. எனவே, ரொக்கக் கணக்கில் பற்றும், காசிநாதன் கணக்கில் வரவும் வைக்க வேண்டும்.

(ஆ) காசிநாதனிடம் பெற்ற காசோலை வங்கிக் கனுப்பப் பட்டது.

இப்போது காசோலையை வங்கிக்கு அனுப்பும் பொழுது, வங்கி இப் பயனைப் பெறுவதால், வங்கிக் கணக்கில் பற்று வைக்க வேண்டும். காசோலை நம்மிடம் வந்த போழ்து ரொக்கம்

வந்ததாகக் கருதியது போலவே, இப்போது வங்கிக்கனுப்பும் போழ்தும் ரொக்கம் நம்மிடமிருந்து சென்றதாகக் கருதி, ரொக்கக் கணக்கில் வரவு வைக்க வேண்டும். அவ்வாறின்றி, காசோலை பெற்றது என்று கொடுத்து அது அதே நாளில் வங்கியில் செலுத்தப் பட்டு விட்டது என்றும் கொடுத்திருப்பின், வங்கிக் கணக்கிலேயே பற்று வைத்திடலாம்.

20. செல்வத்திடம் பெற்ற காசோலை ரூ. 200. அது உடனே வங்கிக்கு அனுப்பப்பட்டது.

வந்த காசோலையை அன்றே வங்கிக்கு அனுப்பி விட்டதால், வங்கி இப் பயனைப் பெறுகிறது. எனவே, வங்கிக் கணக்கில் பற்று வைக்க வேண்டும். இப் பயனைத் தந்த செல்வம் கணக்கில் வரவு வைக்க வேண்டும்.

21. தாளமுத்துவிடம் கழிவு காசோலை மூலம் பெற்றது ரூ. 200. அக் காசோலை வங்கியில் உடனடியாகச் செலுத்தப் பட்டது.

இதில் தொடர்பான கணக்குகள் கழிவுக் கணக்கும் வங்கிக் கணக்கும். பெற்ற காசோலையை வங்கிக்கு அனுப்பி விட்டதால், வங்கிக் கணக்கில் பற்று வைக்க வேண்டும். இது கழிவுத் தொகைக்கென நமக்குக் கொடுக்கப்பட்டது. எனவே, கழிவு ஒரு ஆதாயமாக நமக்கிருக்கிறது. பெயரளவுக் கணக்கின் விதிப்படி கழிவுக் கணக்கில்தான் வரவு வைக்க வேண்டும். யாரிடமிருந்து இக் கழிவுத் தொகை பெற்றோம் என்பது முக்கியம் அல்ல. நாம் ஆற்றிய பணிக்குக் கிடைத்தது இது. எனவே, தாளமுத்துக் கணக்கு இதில் தொடர்புறவில்லை.

இதுகாறும் விளக்கப்பட்டதிலிருந்து, நாம் தெரிந்து கொள்வது: காசோலை பெறும் பொழுது அது உடனடியாக வங்கிக் கனுப்பப்பட்டதா என்று நோக்க வேண்டும். காசோலை பெற்ற நாளிலேயே வங்கிக்கனுப்பப்பட்டிருப்பின், வங்கிக் கணக்கில் பற்று வைக்க வேண்டும். அவ்வாறு கூறப்படவில்லை என்றும் அல்லது அடுத்த நாளில் அல்லது பின்னர் அக் காசோலை வங்கிக்கு அனுப்பப் பட்டது என்று கொடுக்கப்பட்டிருப்பினும், காசோலை வரும் போழ்து ரொக்கக் கணக்கில் பற்று வைக்க வேண்டும். அக் காசோலை நம்மிடமிருந்து வங்கிக்குச் செல்லும் போழ்து ரொக்கக் கணக்கில் வரவு வைக்க வேண்டும். மேலும் சில நடவடிக்கைகளை ஆய்வோம்.

22. நக்கீரனிடம் பெற்ற காசோலை ரு. 585; அவர்க்களித்த தள்ளுபடி ரூ. 15.

முன்னர் விளக்கியவாறு, காசோலை பெற்றது என்று மட்டில் கொடுக்கப்பட்டிருப்பதால், ரொக்கக் கணக்கில் ரூ. 585-க்குப் பற்றும், நக்கீரன் கணக்கில் இத் தொகைக்கு வரவும் வைக்க வேண்டும். நாம் அளித்த தள்ளுபடி ரூ. 15 நமக்கு நட்டம். (அளித்த தள்ளுபடி என்று கூறும் பொழுது நாம் பணம் ஏதும் கொடுப்பதாகக் கொள்ளுதல் தவறு.) நாம் பெற வேண்டிய தொகை ரூ. 600-க்கு ரூ. 585 மட்டுமே பெற்றோம். எனவே, மீதமுள்ள ரூ. 15-ஐத் தள்ளுபடியாகக் கருதிக் கணக்கை முடித்து விட்டோம். எனவே, தள்ளுபடி கணக்கில் பற்றும், நக்கீரன் கணக்கில் வரவும் வைக்க வேண்டும்.

ஒரே நடவடிக்கையில் இரு பதிவுகள் உள்ளன. நக்கீரன் கணக்கு இருமுறை வரவு வைக்கப்படுகிறது. எனவே இரு முறை பதிவு செய்வதற்குப் பதிலாக ஒரே முறையிலும் பதிவு செய்யலாம். அதாவது ரொக்கக் கணக்கில் ரூ. 585-க்கும், தள்ளுபடி கணக்கில் ரூ. 15-க்கும் பற்று வைத்து, நக்கீரர் கணக்கில் ரூ. 600-க்கு வரவு வைக்கலாம். இதனைக் கூட்டுப் பதிவு (Compound Entry) என்கிறோம்.

23. பாப்புலர் ஸ்டோர்ஸிடம் ரூ. 295-க்குக் காசோலை கொடுத்து, ரூ 300-க்கான கணக்கைத் தீர்த்துக் கொண்டது.

பாப்புலர் ஸ்டோர்ஸ் காசோலையைப் பெறுகிறார். எனவே, அக் கணக்கில் ரூ. 295-க்குப் பற்று வைக்க வேண்டும். காசோலை கொடுக்கும் போழ்தெல்லாம் வங்கிக் கணக்கில்தான் வரவு வைக்க வேண்டும்—காரணம், காசோலைத் தொகையை நம் வங்கி தானே இறுதியில் கொடுக்கிறது? எனவே, வங்கிச் கணக்கில் ரூ. 295-க்கு வரவு வைக்க வேண்டும். ரூ. 300 கொடுப்பதற்கு மாறாக ரூ. 295 கொடுத்துக் கணக்கைத் தீர்த்துக் கொண்டதால், நாம் பெற்ற தள்ளுபடி ரூ. 5 ஆகும். தள்ளுபடிக் கணக்கில் இதை வரவு வைக்க வேண்டும். பாப்புலர் ஸ்டோர்ஸ் கணக்கை இத்துடன் முடித்துக் கொள்வதால், அக் கணக்கில் ரூ. 5-க்குப் பற்று வைக்க வேண்டும்.

மேல் எடுத்துக் காட்டில் கூறியவாறு, இரு முறை பாப்புலர் ஸ்டோர்ஸ் கணக்கில் தனித்தனியாகப் பற்று வைப்பதற்கு மாறாக, ஒரே முறையில் பதிவு செய்யலாம். பாப்புலர் ஸ்டோர்ஸ் கணக்கில் ரூ. 300 பற்றும், வங்கிக் கணக்கில் ரூ. 295-ம் தள்ளுபடிக் கணக்கில் ரூ. 5-ம் வரவு வைத்திடின் போதும்.

24. வங்கியிலிருந்து எடுத்தது ரூ.100.

வங்கியிலிருந்து பணம் எடுக்கும் போழ்து, ரொக்கம் உள் வருதலால் ரொக்கக் கணக்கில் பற்றும், வங்கி அத் தொகையைக்

கொடுப்பவராக இருப்பதால், வங்கிக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும்.

25. உரிமையாளர் அகமது ஆயுள் காப்பீட்டுக் கட்டணத் தொகை ரூ.75 காசோலை மூலம் செலுத்தியது.

அகமது செலுத்திய ஆயுள் காப்பீட்டுக் கட்டணத் தொகை ஒரு சொந்தச் செலவாகும். வியாபாரத்திற் குரியது அன்று. எனவே எடுப்புக் கணக்கில் (Drawings a/c) பற்று வைக்க வேண்டும். காசோலை மூலம் இதைச் செலுத்தியிருப்பதால், வங்கிக் கணக்கில் இத் தொகைக்கு வரவு வைக்க வேண்டும்.

## வினாக்கள்

1. 'கணக்குப் பதிவியல்' என்றால் என்ன ? அதன் நோக்கங்கள் யாவை ?
2. 'இரட்டைப் பதிவு முறை'யை விளக்குக. அதன் பயன்கள் யாவை ?
3. 'ஒற்றைப் பதிவு முறை' எனில் என்ன ? இரட்டைப் பதிவு முறை எவ்வெவ் வகைகளில் ஒற்றைப் பதிவு முறையினும் சிறந்தது ?
4. கணக்குகளை வகைப்படுத்தி, எடுத்துக் காட்டுகளுடன் விளக்குக.
5. பற்று—வரவு விதிகளை எடுத்துக்காட்டுகளின் துணை கொண்டு விளக்குக.
6. வியாபாரத் தள்ளுபடிக்கும் ரொக்கத் தள்ளுபடிக்கும் உள்ள வேற்றுமைகள் யாவை ?

## பயிற்சி

கீழே கொடுக்கப்பட்ட நடவடிக்கைகள் ஒவ்வொன்றிலும் பற்று, வரவு வைக்க வேண்டிய கணக்குகளைக் கூறுக.

1. சிவம் போட்ட முதல் ரூ.10,000.
2. ரூ.9,500 வங்கியில் செலுத்தி வங்கிக் கணக்குத் தொடங்கியது.
3. சரக்கு ரூ.700 காசோலை கொடுத்து வாங்கியது.

4. விற்பனை ரூ. 500.

5. வங்கியில் செலுத்தியது ரூ. 400.

6. நல்லசிவத்திடம் திருப்பியனுப்பிய சரக்கு ரூ. 70.

7. சாம்பசிவத்திடம் பெற்ற காசோலை ரூ.190. அவர்க்கு அளித்த தள்ளுபடி ரூ. 10. அக் காசோலை உடனடியாக வங்கிக் கனுப்பப்பட்டது.

8. பரமசிவத்திடம் வாடகை ரூ. 100 காசோலை மூலம் செலுத்தியது.

9. வங்கியிலிருந்து எடுத்தது ரூ. 75.

10. மேசை, நாற்காலி விற்றது ரூ. 150.

11. சதாசிவத்திடம் விற்றது ரூ. 500.

12. இலாப ஈவு பெற்றது ரூ. 50.

13. சிவம் வங்கியிலிருந்து வீட்டுச் செலவுக்கு எடுத்தது ரூ. 250.

# 2. குறிப்பேட்டுப் பதிவு முறை
## (Journalising)

நிகழும் நடவடிக்கைகள் அனைத்தும் இறுதியில் கணக்கு வடிவத்தில் பேரேடுகளில் (Ledgers) பதியப்படினும், முதன்முதலில் பல்வகையான துணை ஏடுகளில்தான் எழுதப்படுகின்றன. நடவடிக்கைகளின் தன்மைக் கேற்ப, கொள் முதல் ஏடு, விற்பனை ஏடு, கொள்முதல் திருப்ப ஏடு, விற்பனைத் திருப்ப ஏடு, வரவுடைய உண்டியல் ஏடு, செலுத்த வேண்டிய உண்டியல் ஏடு, ரொக்க ஏடு, குறிப்பேடு, அல்லது கையேடு என்று வகைப்படுத்தப்பட்டுள்ளன. இவை பற்றித் துணை ஏடுகள் (Subsidiary Records) எனுந் தலைப்பில் விளக்கமாகக் காணலாம்.

முன்பெல்லாம் நிகழ்ச்சிகள் அனைத்தும் வகைப்படுத்தப் பெறாது, கையேடு என்று சொல்லப்படும் குறிப்பேட்டில்தான் (Journal) பதியப்பட்டன. ஆனால், இற்றை நாள்களில் அவை வகைப்படுத்தப்பட்டு மேலே குறிப்பிட்ட தனித்தனி ஏடுகளில் பதியப் பெறுகின்றன. இவ்வாறு வகைப்படுத்த முடியா நடவடிக்கைகள்மட்டும் கையேட்டில் (Journal) பதியப்படுகின்றன. நிகழ்ச்சிகள் நிகழ்ந்தவுடன் இவ்வேடுகளில் முதன்முதலில் பதியப் பெறுவதால், இவை அனைத்தும் 'முதற் குறிப்பேடுகள்' (Books of Original Entry) எனப்படுகின்றன.

குறிப்பேட்டுப் பதிவு முறை அல்லது கையேட்டுப் பதிவு முறை
(Journalising)

'Journal' எனும் ஆங்கிலச் சொல்லைத் தமிழில் கையேடு என்று சொல்லுதலே சாலப் பொருந்தும். நடவடிக்கைகள் நிகழநிகழ இதில் எழுதப்படுகின்றன. எனவே, இது ஒரு நிகழ்ச்சிக் குறிப்பாக அமைகிறது.

**பலவகையான** முதற் குறிப்பேடுகள் இற்றை நாள்களில் பயன் படுத்தப்படினும், கையேட்டில் பதிவு முறையை நன்கு உணரின் பற்று-வரவு விதிகளில் ஐயம் ஏற்படாதாகையால், அதனை ஈண்டு ஆய்வோம். ஒரு நடவடிக்கையில் தொடர்பான கணக்குகளையும் எக் கணக்கில் பற்று வைக்க வேண்டும், எக் கணக்கில் வரவு வைக்க வேண்டும் என்பதையும் இது தெளிவுறுத்துகிறது. முன்னதிகாரத் தில் இது பற்றி விளக்கி யிருக்கிறோம். பற்றுக் கணக்கையும் வரவுக் கணக்கையும் குறிப்பேட்டில் பதியு முறையை இப்பொழுது காணு முன் பற்று வரவு விதிகளை மீண்டும் ஒரு முறை நினைவிற் கொள்ளுதல் நல்லது.

| கணக்கின் வகை | பற்று வைக்க வேண்டிய கணக்கு | வரவு வைக்க வேண்டிய கணக்கு |
|---|---|---|
| 1. ஆள்சார் கணக்கு | பயன் ஏதேனும் பெறுபவர் கணக்கு | பயன் ஏதேனும் அளிப்பவர் கணக்கு |
| 2. சொத்துக் கணக்கு | உள் வரும் சொத்துக் கணக்கு | வெளிச் செல்லும் சொத்துக் கணக்கு |
| 3. பெயரளவுக் கணக்கு | செலவு அல்லது நட்டக் கணக்கு | வரவு அல்லது ஆதாயக் கணக்கு |

குறிப்பேடு கீழ்க்கண்டவாறு கோடுகளிடப் பட்டிருக்கும்.

| நாள் (Date) (1) | விவரம் (Particulars) (2) | பே. ப. எ. L. F. (3) | பற்றுத் தொகை (Dr. Amount) (4) | வரவுத் தொகை (Cr. Amount) (5) |
|---|---|---|---|---|
| | | | | |

ஐந்து பத்திகளைக் கொண்டது குறிப்பேடு.

1. நாள் : நடவடிக்கை நிகழ்ந்த நாளை இங்குக் குறிக்க வேண்டும். நாள் வரிசையில் தான் இதில் பதியப்படுகின்றன என்பதை மறத்தலாகாது.

2. விவரம் : இரண்டாவது பத்தியில், நடவடிக்கைக்குரிய கணக்குகளை எழுத வேண்டும். முதல் வரியில் எப்பொழுதும் பற்று வைக்க வேண்டிய கணக்கு இருக்கும். அவ்வரியிலேயே இறுதியில் 'ப' எனும் எழுத்து சேர்க்கப்பட வேண்டும். இது, இக் கணக்குப் பற்றுக்குரிய கணக்கு என்பதைப் புலப்படுத்துகிறது. இரண்டாவது வரியில் வரவு வைக்க வேண்டிய கணக்கை எழுத வேண்டும்.

3. பே.ப.எ : பேரேடுப் பக்க எண் என்பதன் சுருக்கமே இது. விவரப் பத்தியில் குறிப்பிடப்பட்ட கணக்கைப் பேரேட்டில் எப்பக்கத்தில் பதிந்துள்ளோம் என்பதை இது காட்டுகிறது.

4. பற்றுத் தொகை : இப் பத்தியில் பற்றுக் கணக்கின் பெயர் எதிரில், அதாவது முதல் வரியிலேயே, பற்று வைக்க வேண்டிய தொகையை எழுத வேண்டும்.

5. வரவுத் தொகை : வரவு வைக்க வேண்டிய தொகையை இப் பத்தியில், வரவுக் கணக்கின் எதிரில், அதாவது இரண்டாவது வரிசையில் எழுத வேண்டும்.

ஒரு நடவடிக்கையில் உள்ள பற்றுக் கணக்கின் தொகையும் வரவுக் கணக்கின் தொகையும் ஒன்றாகத் தானிருக்கும் — காரணம். ஒரு கணக்குக் கொடுக்கும் பயனளவேதான் பிறிதொரு கணக்கு பயனைப் பெறுகிறது.

எடுத்துக் காட்டு : 1971, சனவரி 2ஆம் நாள். தட்டெழுத்துப் பொறி வாங்கியது ரூ. 2,000.

இது ஒரு ரொக்க நடவடிக்கை. தட்டெழுத்துப் பொறி உள் வருதலால் அக் கணக்கில் பற்றும், ரொக்கம் வெளிச் செல்லலால், ரொக்கக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும் என்பதை நாம் அறிவோம், இதனைப் பதியு முறை :

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை ரூ. | வரவுத் தொகை ரூ. |
|---|---|---|---|---|
| 1971<br>சனவரி 2 | தட்டெழுத்துப் பொறிக் க/கு ப<br>ரொக்கக் க/கு ...<br>(தட்டெழுத்துப் பொறி வாங்கியது) | | 2,000 | 2,000 |

விளக்கம் ; விவரப் பத்தியில் பற்றுக்கான தட்டெழுத்துப் பொறிக் கணக்கை முதல் வரியில் எழுதியுள்ளோம். அந்த வரியில் 'ப'

எனும் எழுத்து முள்ளது. அவ்வரியிலேயே பற்றுத் தொகைப் பத்தியின் கீழ்த் தொகையைக் குறித்துள்ளோம். விவரப் பத்தியில் இரண்டாவது வரியில் வரவுக் கணக்கின் பெயரைப் பதிந்துள்ளோம். இதே வரியில், வரவுப் பத்தியின் கீழ் வரவுத் தொகையைக் குறித்துள்ளோம். இரண்டாவது வரியை (விவரப் பத்தியில்) சிறிது இடம் விட்டுத் தொடங்குதல் நலம்.

இவ்விரு கணக்குகளையும் விவரப்பத்தியில் எழுதிய பிறகு, நடவடிக்கை பற்றிய சிறு குறிப்பைத் தருகிறோம். இது விளக்கக் குறிப்பு (Narration) எனப்படுகிறது. எதன் காரணமாக ஒரு கணக்கில் பற்றும், மற்றொரு கணக்கில் வரவும் வைக்கின்றோம் என்பதை இது உணர்த்துகிறது. இதனால் ஒவ்வொரு பதிவுக்கும் விளக்கக் குறிப்பு இன்றியமையாதது என்பது புலப்படும்.

முன்னதிகாரத்தில் விளக்கப்பட்ட நடவடிக்கை. தொகுக்கப் பட்டுக் கீழே தரப்பட்டுள்ளன. எக்கணக்கில் பற்றும், எக்கணக்கில், வரவும் வைக்க வேண்டும் என்பது நன்கு விளக்கப் பட்டுவிட்டதால் அவற்றைக் குறிப்பேட்டில் பதியுமுறையை மட்டில் இங்குக் காண்போம்.

எடுத்துக் காட்டு 1 :

| 1971 | | | ரூ. |
|---|---|---|---|
| மார்ச் | 1. | அகமது ரூ. 10,000 வைத்து வியாபாரந் தொடங்கியது. | |
| | 2. | ஆலாலத்திடம் சரக்கு வாங்கியது | ... 2,000 |
| | 4. | இன்பநாதனிடம் எந்திரம் விற்றது | ... 2,500 |
| | | விற்பனை | ... 500 |
| | 7. | ஈசனிடம் பெற்ற கழிவு | ... 50 |
| | 8. | உலகநாதனிடம் கொடுத்த வாடகை | ... 150 |
| | 9. | கொள்முதல் | ... 200 |
| | 15. | அரசினர் கடன் பத்திரங்கள் வாங்கியது | ... 5,000 |
| | 17. | ஊட்டி டிரேடர்ஸிடம் (Ooty Traders) விற்றது | ... 1,000 |

18. எல்லப்பனிடம் திருப்பியனுப்பிய சரக்கு ... 50

ஏகாம்பரம் திருப்பியனுப்பிய சரக்கு ... 75

வீட்டுச் செலவுக்கென அகமது எடுத்துக் கொண்டது ... 300

ஐயாசாமியிடம் ரூ. 490 கொடுத்து ரூ. 500க் கணக்கைத் தீர்த்துக் கொண்டது.

19. ஒலிம்பிக் டிரேடிங் கம்பனியிடம் பெற்றது ... 985

அவர்க்களித்த தள்ளுபடி ... 15

20. வருமானவரி செலுத்தியது ... 200

24. ரூ. 5,000 செலுத்தி வங்கிக் கணக்கு ஒன்று தொடங்கியது.

25. ரூ. 500 மதிப்புள்ள சரக்கு காசோலை கொடுத்து வாங்கியது.

26. விளம்பரச் செலவுக்குக் காசோலை கொடுத்தது ... 500

காசிநாதனிடமிருந்து காசோலை பெற்றது ... 1,000

27. காசிநாதனிடம் பெற்ற காசோலை வங்கிக் கனுப்பப் பட்டது.

28. செல்வத்திடம் பெற்ற காசோலை அது உடனே வங்கிக் கனுப்பப்பட்டது. ... 200

29. தாளமுத்துவிடம் கழிவு காசோலை மூலம் பெற்றது. அக் காசோலை வங்கியில் உடனடியாகச் செலுத்தப்பட்டது. ... 200

நக்கீரனிடம் பெற்ற காசோலை 585

அவர்க்களித்த தள்ளுபடி 15

30. பாப்புலர் ஸ்டோர்ஸிடம் ரூ. 295-க்குக் காசோலை கொடுத்து, ரூ. 300க்கான கணக்கைத் தீர்த்துக் கொண்டது.

வங்கியிலிருந்து எடுத்தது ... 100

31. உரிமையாளர் அகமது ஆயுள் காப்பீட்டுக் கட்டணத் தொகை ரூ. 75 காசோலை மூலம் செலுத்தியது.

**விடை :**

அகமதின் குறிப்பேட்டில்

| நாள் | | விவரம் | பே. ப எ. | பற்றுத் தொகை ரூ. | வரவுத் தொகை ரூ. |
|---|---|---|---|---|---|
| 1971 | | | | | |
| மார்ச் | 1. | ரொக்கக் க/கு ப<br>முதல் க/கு<br>(முதல் போட்டது.) | | 10,000 | 10,000 |
| | 2. | கொள் முதல் க/கு ப<br>ஆலாலம்<br>(ஆலாலத்திடம் கடன் பேரில் சரக்கு வாங்கியது.) | | 2,000 | 2,000 |
| | 4. | இன்பநாதன் ப<br>எந்திரம் க/கு<br>(இன்பநாதனிடம் கடன் பேரில் எந்திரத்தை விற்றது.) | | 2,500 | 2,500 |
| | 4. | ரொக்கக் க/கு ப<br>விற்பனைக் க/கு<br>(சரக்கு ரொக்கத்துக்கு விற்றது.) | | 500 | 500 |
| | 7. | ரொக்கக் க/கு ப<br>கழிவுக் க/கு<br>(ஈசனிடம் கழிவு பெற்றது.) | | 50 | 50 |
| | 8. | வாடகைக் க/கு ப<br>ரொக்கக் க/கு<br>(உலகநாதனிடம் வாடகை கொடுத்தது.) | | 150 | 150 |
| | 9. | கொள் முதல் க/கு ப<br>ரொக்கம் க/கு<br>(சரக்கு ரொக்கத்துக்கு வாங்கியது.) | | 200 | 200 |
| | 15. | அரசினர் கடன் பத்திரங்கள் க/கு ப<br>ரொக்கக் க/கு<br>(அரசினர் கடன் பத்திரங்களில் முதலீடு செய்தது.) | | 5,000 | 5,000 |

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை ரூ. | வரவுத் தொகை ரூ. |
|---|---|---|---|---|
| 17. | ஊட்டி டிரேடர்ஸ் ப | | 1,000 | |
| | விற்பனைக் க/கு | | | 1,000 |
| | (ஊட்டி டிரேடர்ஸிடம் கடன்பேரில் விற்றது.) | | | |
| 18. | எல்லப்பன் ப | | 50 | |
| | கொள்முதல் திருப்பக் க/கு | | | 50 |
| | (எல்லப்பனிடம் வாங்கிய சரக்கைத் திருப்பி அனுப்பியது.) | | | |
| 18. | விற்பனைத் திருப்பக் க/கு ப | | 75 | |
| | ஏகாம்பரம் | | | 75 |
| | (ஏகாம்பரத்திடமிருந்து விற்ற சரக்கு திரும்பி வந்தது.) | | | |
| 18. | (a) ஐயாசாமி ப | | *490 | |
| | ரொக்கக் க/கு | | | 490 |
| | (ஐயாசாமியிடம் ரொக்கம் பெற்றது.) | | | |
| | ஐயாசாமி ப | | *10 | |
| | தள்ளுபடிக் க/கு | | | 10 |
| | (ஐயாசாமி அளித்த தள்ளுபடி.) அல்லது | | | |
| | (b) ஐயாசாமி ப | | *500 | |
| | ரொக்க க/கு | | | 490 |
| | தள்ளுபடி க/கு | | | 10 |
| | (ஐயாசாமியிடம் ரூ. 490 கொடுத்து ரூ. 500க்கான கணக்கைத் தீர்த்தது.) | | | |
| 18. | எடுப்புக் க/கு ப | | 300 | |
| | ரொக்கக் க/கு | | | 300 |
| | (வீட்டுச் செலவுக்கு அகமது எடுத்தது.) | | | |

N.B : * (b) கூட்டுப் பதிவு (Compound Entry.) a அல்லது b ஏதாவது ஒரு பதிவு தான் செய்யப்பட வேண்டும். b-ல் குறிப்பிட்ட பதிவுதான் சிறந்தது.

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை ரூ. | வரவுத் தொகை ரூ |
|---|---|---|---|---|
| 19. | ரொக்கக் க/கு ப<br>தள்ளுபடி க/கு ப<br>ஒலிம்பிக் டிரேடிங் கம்பனி<br>(ஒலிம்பிக் டிரேடிங் கம்பனி யிடம் பெற்றது ரூ. 985; அவர்களித்த தள்ளுபடி ரூ. 15.) | | 985<br>15 | <br><br>1000 |
| 20. | எடுப்புக் க/கு ப<br>ரொக்கக் க/கு<br>(வருமான வரி செலுத்தியது.) | | 200 | <br>200 |
| 24. | வங்கிக் க/கு ப<br>ரொக்கக் க/கு<br>(வங்கியில் போட்டது.) | | 5,000 | <br>5,000 |
| 25. | கொள் முதல் க/கு ப<br>வங்கிக் க/கு<br>(சரக்கு காசோலை விடுத்து வாங்கியது) | | 500 | <br>500 |
| 26. | விளம்பரச் செலவுக்கு க/கு<br>வங்கிக் க/கு ப<br>(விளம்பரச் செலவுக்குக் காசோலை விடுத்தது.) | | <br>500 | <br><br>500 |
| 26. | ரொக்கக் க/கு ப<br>காசிநாதன்<br>(காசிநாதனிடமிருந்து காசோலை பெற்றது) | | 1,000 | <br>1,000 |
| 27. | வங்கிக் க/கு ப<br>ரொக்கக் க/கு<br>(காசிநாதனிடம் பெற்ற காசோலை வங்கிக்கனுப்பப் பட்டது.) | | 1,000 | <br>1,000 |
| 28. | வங்கிக் க/கு ப<br>செல்வம்<br>(செல்வத்திடம் காசோலை பெற்று அன்றே வங்கிக் கனுப்பப் பட்டது) | | 200 | <br>200 |

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை ரூ. | வரவுத் தொகை ரூ. |
|---|---|---|---|---|
| 29. | வங்கிக் க/கு ப | | 200 | |
| | கழிவுக் க/கு | | | 200 |
| | (தாள முத்துவிடம் கழிவு காசோலை மூலம் பெற்றது காசோலை வங்கிக் கனுப்பப் பட்டது. | | | |
| 29. | ரொக்கக் க/கு ப | | 585 | |
| | தள்ளுபடிக் க/கு ப | | 15 | |
| | நக்கீரன் | | | 600 |
| | (நக்கீரனிடம் காசோலை ரூ.585க்குப் பெற்று, அவர்க் களித்த தள்ளுபடி ரூ. 15) | | | |
| 30. | பாப்புலர் ஸ்டோர்ஸ் ப | | 300 | |
| | வங்கிக் க/கு | | | 295 |
| | தள்ளுபடிக் க/கு | | | 5 |
| | (பாப்புலர் ஸ்டோர்ஸிடம் காசோலை ரூ. 295-க்குக் கொடுத்து, அவரிடம் பெற்ற தள்ளுபடி ரூ. 5) | | | |
| 30. | ரொக்கக் க/கு ப | | 100 | |
| | வங்கிக் க/கு | | | 100 |
| | (வங்கியிலிருந்து எடுத்தது.) | | | |
| 31. | எடுப்புக் க/கு ப | | 75 | |
| | வங்கிக் க/கு | | | 75 |
| | (அகமது தன் ஆயுள் காப் பீட்டுக் கட்டணத் தொகையைக் காசோலை மூலம் செலுத்தியது.) | | | |

## பயிற்சி

(1) கீழ்க் காணும் நடவடிக்கைகளைப் பாண்டியன் குறிப் பேட்டில் (Journal) பதிக.

1971

| | | ரூ. |
|---|---|---|
| ஜனவரி 1. | வியாபாரம் தொடங்கியது ... | 10,000 |
| | வங்கிக் கணக்கு தொடங்கியது ... | 9,500 |
| 2. | தட்டெழுத்துப் பொறி தசரதன் கம்பனியில் வாங்கியது ... | 1800 |

| | | | ரூ. |
|---|---|---|---|
| 3. | ரொக்கக் கொள்முதல் (காசோலை விடுத்தது.) | | 1,200 |
| 5. | மாறனிடம் விற்றது | ... | 500 |
| | மூர்த்தியிடம் காசோலை மூலம் செலுத்திய வாடகை | ... | 200 |
| 6. | செழியனிடம் வாங்கிய சரக்கு | ... | 640 |
| 7. | மாறனிடமிருந்து திரும்பி வந்த சரக்கு | ... | 50 |
| 10. | தசரதன் கம்பனிக்கு ரூ. 1,750 காசோலை கொடுத்துப் பெற்ற தள்ளுபடி | ... | 50 |
| | வங்கியிலிருந்து எடுத்தது | ... | 300 |
| 12. | செழியனுக்குத் திருப்பி யனுப்பிய சரக்கு | ... | 50 |
| 19. | அரசினர் கடன் பத்திரங்களில் முதலீடு செய்தது (காசோலை விடுத்து) | ... | 500 |
| 20. | கரிகாலனிடம் பெற்ற கழிவு | ... | 70 |
| | விளம்பரத்துக்குக் கொடுத்த ரொக்கம் | ... | 100 |
| 25. | வளவனிடம் விற்பனையில் கிடைத்த ரொக்கம் ரூ. 250; காசோலை ரூ. 750. காசோலை உடனே வங்கிக்கனுப்பப் பட்டது. | | |
| 27. | பல்வகைச் செலவினங்கள் | ... | 75 |
| | வளவனிடம் பெற்ற காசோலைக்குப் பண மறுக்கப்பட்டு வங்கியிடமிருந்து திரும்பி வந்தது. | | |

(2) கீழ்க்கண்ட நடவடிக்கைகளைப் பன்னீரின் குறிப்பேட்டில் பதிக.

| 1970 | | | | ரூ. |
|---|---|---|---|---|
| சூன். | 1. | தமிழ் நாடு மனைத்துணை விற்பனை நிலயத்திடமிருந்து மேசை நாற்காலி காசோலை விடுத்து வாங்கியது | ... | 980 |
| | | கொள்முதல் | ... | 200 |
| | 3. | விற்பனையில் பெற்ற ரொக்கம் ரூ. 800 காசோலை ரூ. 200 காசோலை வங்கிக் கனுப்பப் பட்டது. | | |

| | | | ரூ. |
|---|---|---|---|
| 5. | சிந்தாமணி பேரங்காடியில் ரொக்கம் செலுத்தி வாங்கிய எழுதுபொருள் | ... | 80 |
| | பயணச் செலவு | ... | 70 |
| 9. | வாடிக்கையாளர் வரதன் வங்கியில் நேரடியாகச் செலுத்தியது | ... | 520 |
| 10. | மின் கட்டணம் செலுத்தியது | ... | 50 |
| 15. | கல்கத்தா ஸ்டோர்ஸிடம் திருப்பியனுப்பிய சரக்கு. | | 75 |
| | வீனஸ் கம்பனியிடம் வாங்கிய சரக்கு | ... | 300 |
| | வங்கியில் செலுத்தியது | ... | 1200 |
| 16. | வசந்தனிடம் கடன் பேரில் விற்றது | ... | 800 |
| | வீட்டுச் செலவுக்கு உரிமையாளர் வங்கியிலிருந்து எடுத்துக் கொண்டது | ... | 350 |
| 18. | வசந்தனிடம் பெற்ற காசோலை உடனே வங்கிக் கனுப்பப் பட்டது. | ... | 250 |
| 19. | தொலைபேசிக் கட்டணம் காசோலை மூலம் செலுத்தியது | ... | 350 |
| 20. | இலாப ஈவு பெற்றது | ... | 120 |
| 30. | ஊதியங் கொடுத்தது | ... | 500 |
| | வாசு தர வேண்டிய ரூ. 1000 த்தில் ரூ.700-க்குக் காசோலையும் ரூ. 200 ரொக்கமும் பெற்றுக் கடனைத் தீர்த்துக் கொண்டது. (காசோலை வங்கிக் கனுப்பப் பட்டது.) | | |
| | வங்கியிற் செலுத்தியது | ... | 200 |
| | விந்தனுக்குக் கொடுத்த கடன் (காசோலை கொடுத்தது.) | ... | 500 |

(3) பீட்டரின் ஏடுகளில் கீழ்க்கண்ட நடவடிக்கைகட்கான குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக.

| 1970 அக்டோபர் | | | ரூ. |
|---|---|---|---|
| 1. | ரொக்கக் கொள்முதல் (இதில் ரூ .700-க்கான காசோலை கொடுத்து வாங்கப்பட்டது.) | | 1,930 |
| 2. | விற்பனை | ... | 700 |
| 3. | தாமஸிடம் ரூ. 150 ரொக்கமாகவும் ரூ. 145 காசோலை மூலமாயும் பெற்றது. அவர்க்களித்த தள்ளுபடி | ... | 5 |
| 4. | இரயில்வே கட்டணம் செலுத்தியது | ... | 50 |
| 5. | அந்தோணியிடம் சரக்கு விற்றது | ... | 300 |
| 7. | அப்பாஸிடமிருந்து திரும்பி வந்த சரக்கு | ... | 25 |
| | அப்துல்லாவுக்குக் கொடுத்த கழிவு | ... | 75 |
| 10. | வங்கியிற் செலுத்தியது<br>ரொக்கம் ரூ. 200<br>காசோலை ரூ. 145 | | |
| 11. | காசோலை விடுத்துப் பாண்டியன் கம்பனியின் (பொறுப்பு வரையறுக்கப்பட்டது) பங்குகள் வாங்கியது | ... | 500 |
| 15. | வகாப்பிடமிருந்து காசோலை மூலம் பெற்ற வட்டி | | 175 |
| 16. | வளவனுக்குக் கொடுத்த கடன் (காசோலை மூலம்) | | 1000 |
| 17. | வரதனுக்கு ரூ. 195 கொடுத்து அவரிடம் பெற்ற தள்ளுபடி | ... | 5 |
| 18. | சாலமனிடம் வாங்கிய சரக்கு | ... | 420 |
| | அலுவலகத்திற்கென வங்கியிலிருந்து எடுத்தது. | | 150 |
| 21. | விற்பனையில் பெற்ற காசோலை | ... | 250 |
| 22. | சாலமனிடம் திருப்பி அனுப்பிய சரக்கு | ... | 20 |
| 23. | மனைத்துணைப் பொருள் விற்றது | ... | 155 |
| 24. | வளவனிடம் பெற்றது | ... | 200 |

| | | | |
|---|---|---|---|
| 25. | பீட்டரின் ஆணைப்படி வங்கி விற்ற அரசினர் கடன் பத்திரங்கள் | ... | 540 |
| 26. | வங்கிக் கட்டணம் | ... | 20 |
| | தட்டெழுத்துப் பொறி வாங்கியது | ... | 1,750 |
| 27. | எழுதுபொருள் எல்லப்பன் கம்பனியிடம் வாங்கியது | ... | 150 |
| | ஊதியம் காசோலை மூலம் கொடுத்தது | ... | 1,200 |
| 29. | பீட்டர் தன் வீட்டுக்கு எடுத்துக் கொண்டது. | | 180 |
| | வருமான வரி செலுத்தியது | ... | 150 |
| | எல்லப்பன் கம்பனிக்கு ரூ. 145 காசோலை விடுத்துப் பெற்ற தள்ளுபடி | ... | 5 |
| 30. | விளம்பரச் செலவு | ... | 90 |
| | பழுது பார்க்கும் செலவு | ... | 100 |
| 31. | கழிவு பெற்றது | ... | 50 |
| | வங்கியிற் கட்டியது | ... | 250 |

# 3. பேரேடு அல்லது பெயரேடு
## (LEDGER)

பேரேடு அல்லது பெயரேடு என்பது கணக்குகளின் முதன்மை ஏடாகும். குறிப்பேட்டில் நடவடிக்கைகள் நாள் வரிசையில் பதியப் படுவதால் குறிப்பிட்ட ஒருவரின் அல்லது ஒரு பொருளின் இறுதி நிலையை உணர முடிவதில்லை. எடுத்துக்காட்டாகச் சனவரித் திங்களில் நிகழ்ந்த நடவடிக்கைகள் அனைத்தும் அதில் பதியப்பட்டிருக்குமேயன்றி, அத் திங்களில் மொத்தம் பெற்ற ரொக்கம் எவ்வளவு, மொத்தம் செலவழிந்தது போகக் கையில் இருப்பது எவ்வளவு போன்ற விவரத்தைக் குறிப் பேட்டிலிருந்து உணர முடியாது. சுந்தரிடம் பல நாள்களில் சரக்கு கடன் பேரில் வாங்கியிருப்போம்; வாங்கிய சரக்கில் சிலவற்றைத் திருப்பியனுப்பியிருப்போம்; சில நாள்களில் பணம் கொடுத்திருப் போம்; அவரிடமிருந்து ரொக்கத் தள்ளுபடியும் பெற்றிருப்போம்; இறுதியில் அவர்க்குக் கொடுக்க வேண்டியது எவ்வளவு நிலுவையில் இருக்கிறது என்பதைக் குறிப்பேட்டிலிருந்து அறிய முடியாது. எனவே, ஒவ்வொரு கணக்கின் இறுதி நிலையை உணர வேண்டு மாயின், அது பற்றிய நடவடிக்கைகள் அனைத்தையும் ஒன்று திரட்டி எழுத வேண்டும் என்பது புலனாகும். அவ்வாறு வகைப் படுத்தி, பெற்ற பயனையும், அளித்த பயனையும், இறுதி நிலையையும் உடனே உணரும் வகையில் பதியப் பட்டிருக்கும் அறிக்கையைத் தான் கணக்கு (Account) என்கிறோம். கணக்குகள் பல அடங்கி யுள்ள ஏட்டைப் பேரேடு அல்லது பெயரேடு (Ledger) என்கிறோம். குறிப்பேட்டிலிருந்து அல்லது பல்வகையான துணையேடுகளிலிருந்து கணக்குகளில் எடுத்துப் பதிவதை 'எடுத்தெழுதுதல்' (Posting) என்கிறோம்.

கணக்கின் இடப்பகுதி பற்றுப் பகுதியாகும். அக் கணக்குப் பெற்ற பயன்களை அப் பகுதியில் எழுதுகிறோம். வலப்பகுதி வரவுப் பகுதியாகும். அக் கணக்கு அளித்த பயன்களை அப் பகுதியில் குறிக்கிறோம். பொதுவாகக் கீழ்க்கண்டவாறு கணக்குக் கோடுகளிடப் பட்டிருக்கும்.

ப வ

| நாள் (Date) (1) | விவரம் (Particulars) (2) | ப எ (F) (3) | தொகை ரூ. (Amount) (4) | நாள் (Date) (5) | விவரம் (Particulars) (6) | ப எ (F) (7) | தொகை ரூ. (Amount) Rs. (8) |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | |

விளக்கம் : 'ப' எனும் எழுத்து 'பற்று' என்பதன் சுருக்கம்; 'வ' எனும் எழுத்து 'வரவு' என்பதன் சுருக்கம். 'ப' 'வ' எனும் எழுத்துகள் ஒவ்வொரு கணக்கின்மேல் இருமுனைகளிலும் மேலே காட்டியவாறு எழுதப்பட வேண்டும்.

1. நாள் : நடவடிக்கை நிகழ்ந்த நாளைக் குறிக்க வேண்டும்.
2. விவரம் : நடவடிக்கையில் இக் கணக்குடன் தொடர்புற்ற மற்றக் கணக்கின் பெயரை எழுத வேண்டும். எடுத்துக் காட்டாக, நாம் நாவளவனின் கணக்கை எழுதுவதாக வைத்துக் கொள்வோம். நாவளவனுக்குக் கொடுத்தது ரூ.200 என்றால், நாவளவன் கணக்கில் பற்றும், ரொக்கக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும். நாவளவன் கணக்கில் பற்று வைக்க வேண்டியிருப்பதால், பற்றுப் பகுதியில் உள்ள விவரப் பத்தியின் கீழ் ரொக்கக் கணக்கு என்று குறிப்பிட வேண்டும். இவ்வாறு எழுதுவதால் ரொக்கக் கணக்கில் பற்று வைத்ததாகாது. காரணம், நாவளவன் கணக்கில் பற்றுப் பகுதியில் தான் வரைகிறோம். இப் பற்றுக் கணக்குடன் தொடர்புற்ற வரவுக் கணக்கு ரொக்கக் கணக்கு என்பதையே இது உணர்த்தும்.
3. ப. எ. இது பக்க எண் (Folio) என்பதன் சுருக்கம்.
4. தொகை: பற்று வைக்க வேண்டிய தொகையை இப் பத்தியில் குறிக்க வேண்டும்.

இவ்வாறே வரவுப் பகுதியையும் பதிகிறோம். இங்கு விவரப் பத்தியின் கீழ், இக் கணக்குடன் தொடர்புற்ற பற்றுக் கணக்கின் பெயரை எழுத வேண்டும்.

வங்கிகள் போன்ற சில நிறுவனங்கள் கணக்குகளைக் கீழே காட்டியவாறு வைத்திருப்பர். ஒரு பக்கம் முழுவதும் ஆறு பத்திகளாகப் பிரிக்கப்பட்டு எழுதப்படும்.

| நாள் | விவரம் | ப. எ. | பற்றுத் தொகை ரூ. | வரவுத் தொகை ரூ. | இருப்பு | |
|---|---|---|---|---|---|---|
| | | | | | ப. அ. வ. | தொகை ரூ. |
| | | | | | | |

ஒவ்வொரு நடவடிக்கையைப் பதிந்த உடனே இருப்பு நிலையை உணர்ந்து கொள்ளும் வாய்ப்பு இதில் உண்டு.

எடுத்துக் காட்டு : 2.

கீழ்க்கண்ட நடவடிக்கைகட்குரிய குறிப்பேட்டுப் பதிவுகளைத் தந்து, மாறனின் கணக்கைத் தயாரிக்கவும்.

| 1971 | | | ரூ |
|---|---|---|---|
| ஏப்ரல் 1. | மாறனிடம் சரக்கு வாங்கியது | ... | 1500 |
| 3. | மாறனுக்குத் திருப்பி அனுப்பிய சரக்கு | ... | 100 |
| 5. | மாறனிடம் வாங்கியது | ... | 250 |
| 6. | மாறனுக்குக் கொடுத்தது | ... | 500 |
| 10. | மாறனிடம் வாங்கிய சரக்கின் மதிப்பு | ... | 300 |
| 20. | மாறனிடம் கொடுத்த காசோலை | ... | 240 |
| | அவரிடம் பெற்ற தள்ளுபடி | ... | 10 |
| 25. | மாறனிடம் திருப்பியனுப்பிய சரக்கு | ... | 89 |

விளக்கக் குறிப்புத் தேவையில்லை.

விடை :

குறிப்பேட்டுப் பதிவுகள் :

| நாள் | | விவரம் | | பே. ப. எ. | பற்றுத் தொகை ரூ. | வரவுத் தொகை ரூ. |
|---|---|---|---|---|---|---|
| 1971 ஏப்ரல் | 1 | கொள்முதல் க/கு | ப | | 1500 | |
| | | மாறன் | | | | 1500 |
| | 3 | மாறன் | ப | | 100 | |
| | | கொள்முதல் திருப்பக் க/கு | | | | 100 |
| | 5 | கொள்முதல் க/கு | ப | | 250 | |
| | | மாறன் | | | | 250 |
| | 6 | மாறன் | ப | | 500 | |
| | | ரொக்கக் க/கு | | | | 500 |
| | 10 | கொள்முதல் க/கு | ப | | 300 | |
| | | மாறன் | | | | 300 |
| | 20 | மாறன் | ப | | 250 | |
| | | வங்கிக் க/கு | | | | 240 |
| | | தள்ளுபடிக் க/கு | | | | 10 |
| | 25 | மாறன் | ப | | 89 | |
| | | கொள்முதல் திருப்பக் க/கு | | | | 89 |

ப மாறன் வ

| நாள் | விவரம் | ப. எ. | தொகை ரூ. | நாள் | விவரம் | ப. எ. | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1971 ஏப்ரல்3 | கொள்முதல் திருப்பம் | | 100 | 1971 ஏப்ரல்1 | கொள்முதல் | | 1,500 |
| 6 | ரொக்கம் | | 500 | 5 | கொள்முதல் | | 250 |
| 20 | வங்கி | | 240 | 10 | கொள்முதல் | | 300 |
| ,, | தள்ளுபடி | | 10 | | | | |
| 25 | கொள்முதல் திருப்பம் | | 89 | | | | |

### இருப்புக் கட்டுதல் (Balancing)

குறிப்பிட்ட கால இறுதியிலோ அல்லது ஒவ்வொரு திங்களுமோ, தேவைக் கேற்பக் கணக்குகளை இருப்புக் கட்டலாம். காரணம் இருப்புக் கட்டினால்தான் ஒவ்வொரு கணக்கின் இறுதி நிலையை உணர முடியும்.

கணக்கின் இருபகுதிகளையும் தனித்தனியே கூட்ட வேண்டும். எப் பகுதியின் கூட்டுத் தொகை அதிகமாக இருக்கிறதோ, அத் தொகையை இரு பகுதிகளிலும் எழுத வேண்டும். கூட்டல் தொகை குறைவாயிருக்கும் பகுதியில் 'இருப்பு கீ/இ' என்று விவரப் பத்தியில் எழுதி, இவ்விரு கூட்டல் தொகைகளுக்கும் உள்ள வேறுபாட்டுத் தொகையைக் குறிக்க வேண்டும். இப்பொழுது இரு பகுதிகளின் கூட்டல்களும் ஒரே தொகையைக் காட்டும் அதாவது சமமாக இருக்கும். 'இருப்பு கீ/இ' என்பது இருப்பு கீழ் இறக்கப் பட்டுள்ளது என்று பொருள்.

எடுத்துக்காட்டு 2-ல் தயாரித்த மாறனின் கணக்கை இருப்புக் கட்டி மேலும் விளக்குவோம்.

மாறன் க/கு

| ப | | | | | வ |
|---|---|---|---|---|---|
| 1971 ஏப்ரல் | | | 1971 ஏப்ரல் | | |
| 3 | கொள்முதல் திருப்பம் | 100 | 1 | கொள்முதல் | 1500 |
| 6 | ரொக்கம் | 500 | 5 | கொள்முதல் | 250 |
| 20 | வங்கி | 240 | 10 | கொள்முதல் | 300 |
| | தள்ளுபடி | 10 | | | |
| 25 | கொள்முதல் திருப்பம் | 89 | | | |
| 30 | இருப்பு கீ/இ | 1,111 | | | |
| | | 2,050 | | | 2,050 |
| | | | 1971 | | |
| | | | மே. 1. | இருப்பு கீ/கொ | 1,111 |

இக் கணக்கின் பற்றுப் பகுதியின் கூட்டல் தொகை ரூ. 939 ஆகவும், வரவுப் பகுதியின் கூட்டல் தொகை ரூ. 2050 ஆகவும் இருக்கின்றன. மாறன் கணக்கு ரூ. 2050 மதிப்புள்ள பயனைக் கொடுத்துள்ளதையும் நம்மிடமிருந்து ரூ. 939 மதிப்புள்ள பயனைப் பெற்றுள்ளதையும் இது காட்டும். அவர் ரூ. 1,111 மதிப்புள்ள பயனை அதிகம் அளித்துள்ளார் என்பதையும், அதனை நாம் அவருக்குத் திருப்பித்தரக் கடன்பட்டவர்கள் என்பதையும் இருப்புக் கட்டுதல் மூலம் உணர்கிறோம். 'இருப்பு கீ/இ' என்று பற்றுப் பகுதியில் எழுதப் பட்டிருக்கிறது கணக்கைமுடித்து விட்டு, மீண்டும் தொடங்கும் போழ்து, அதே தொகையைக் கணக்கின் வரவுப் பகுதியில் 'இருப்பு கீ/கொ' என்றெழுதுகிறோம். 'கீ/கொ' என்பது கீழ்க் கொண்டு வரப்பட்டது என்பதை உணர்த்தும். அதாவது சென்ற கால இறுதி வரை நிகழ்ந்த நடவடிக்கைகளின் இறுதிநிலையைக் கொண்டு வந்து மீண்டும்நிகழும் நடவடிக்கைகளைப் பதியத் தொடங்குகிறோம். இவ்விருப்பு ஒரு வர விருப்பு.

மொத்த தொகையை எழுதுமுன் மேலே ஒரு கோடிட வேண்டும். மொத்தத் தொகையின் கீழ் இரு கோடுகளிட வேண்டும்.

பற்றிருப்பு (Debit Balance): பற்றுப் பகுதியின் கூட்டல் தொகை வரவுப் பகுதியின் கூட்டல் தொகையை விட அதிகமிருப்பின், அக் கணக்கு பற்றிருப்பைக் காட்டும்.

வர விருப்பு (Credit Balance): வரவுப் பகுதின்யி கூட்டல் தொகை, பற்றுப் பகுதியின் கூட்டல் தொகையை விட அதிக மிருப்பின், அக் கணக்கு வர விருப்பைக் காட்டும்.

இருப்புகள் உணர்த்துபவை

1. ஆள்சார் கணக்கு: ஆள்சார் கணக்கு பற்றிருப்பைக் காட்டுமானல் நம்மிடம் அவர் கொடுத்த பயனைவிட அதிகம் நம்மிடமிருந்து பெற்றுள்ளார் என்பதையும் அப்பயனின் மதிப்பை நமக்குத் திருப்பித் தந்திடக் கடமைப் பட்டவர் என்பதையும் அது உணர்த்தும். அவர் நமது கடனாளி எனப்படுவர்.

ஆள்சார் கணக்கு வர விருப்பைக் காட்டுமாயின் நாம் அவர்க் களித்த பயனினும் அவர் நமக்குக் கொடுத்த பயன் அதிகம் என்பதையும், எனவே அப் பயன் மதிப்பை நாம் அவர்க்குத் திருப்பித்தரக் கடமைப்பட்டவர் என்பதையும் உணர்த்துகிறது. அவர் நமது கடனீந்தோர் எனப்படுவார்.

2. சொத்துக் கணக்கு: இக் கணக்கு பற்றிருப்பைக் காட்டின் அம் மதிப்பளவு சொத்து நம்மிடம் உள்ளதாகப் பொருள். வர

விருப்பைக் காட்டுமாயின் நமக்கேற்பட்ட கடன்களும் இருக்கலாம் அல்லது சொத்து ஒன்றை விற்றதில் கிட்டிய ஆதாயமாகவும் இருக்கலாம்.

*3.* பெயரளவுக் கணக்கு : பெயரளவுக் கணக்கு பற்றிருப்பைக் காட்டுமாயின் அதனுல் ஏற்பட்ட செலவு அல்லது நட்டமென்பதையும், வர விருப்பைக் காட்டுமாயின் அதனுலுற்ற ஆதாயம் அல்லது வருவாய் என்பதையும் உணர்த்தும்.

எடுத்துக் காட்டு 3 :

கீழ்க் கொடுக்கப்பட்ட நடவடிக்கைகளை வளவனின் முதற் குறிப்பேட்டில் பதிந்து, கணக்குகளில் எடுத்தெழுதி இருப்புக் கட்டுக.

| 1972 | | | ரூ |
|---|---|---|---|
| சன. | 1. | முதல் ரூ. 5,000 வைத்துத் தொழில் தொடங்கியது<br>சரக்கு வாங்கியது | 700 |
| | 4. | மேசை, நாற்காலி செழியனிடம்<br>வாங்கியது | 800 |
| | 7. | விற்பனை | 400 |
| | | வழுதியிடம் வாங்கிய சரக்கு | 1,250 |
| | 9. | வழுதியிடம் சரக்கு திருப்பியனுப்பியது | 50 |
| | 10. | செழியனிடம் செலுத்தியது | 400 |
| | 11. | செங்குட்டுவனிடம் விற்றது | 500 |
| | | கொள்முதல் | 300 |
| | 13. | செங்குட்டுவனிடமிருந்து திருப்பி வந்த சரக்கு | 100 |
| | 19. | வழுதியிடம் சரக்கு வாங்கியது | 400 |
| | 22. | வாடகை கொடுத்தது | 120 |
| | 24. | செங்குட்டுவனிடமிருந்து பெற்றது | 390 |
| | | அளித்த தள்ளுபடி | 10 |
| | 25. | ரொக்க விற்பனை | 475 |
| | 27. | பாண்டியனிடம் கழிவு பெற்றது | 100 |
| | 28. | வழுதிக்குச் செலுத்தியது | 300 |

வளவன் ஏடுகளில்

குறிப்பேடு

| நாள் | விவரம் | | பே. ப. எ | பற்று ரூ. | | வரவு ரூ. |
|---|---|---|---|---|---|---|
| 1972 சன 1 | ரொக்கக் க/கு<br>முதல் க/கு<br>(ரூ 5,000 முதல் வைத்துத் தொழில் தொடங்கியது.) | ப | | 5,000 | | 5,000 |
| 1 | கொள்முதல் க/கு<br>ரொக்கக் க/கு<br>(சரக்கு வாங்கியது.) | ப | | 700 | | 700 |
| 4 | மனைத்துணைப் பொருள் க/கு<br>செழியன்<br>(மேசை நாற்காலி செழியனிடம் வாங்கியது.) | ப | | 800 | | 800 |
| 7 | ரொக்கக் க/கு<br>விற்பனைக் க/கு<br>(ரொக்கத்திற்குச் சரக்கு விற்றது.) | ப | | 400 | | 400 |
| 7 | கொள்முதல் க/கு<br>வழுதி<br>(வழுதியிடம் சரக்கு வாங்கியது.) | ப | | 1,250 | | 1,250 |
| 9 | வழுதி<br>கொள்முதல் திருப்பக் க/கு<br>(வழுதியிடம் சரக்கு திருப்பி யனுப்பியது.) | ப | | 50 | | 50 |
| 10 | செழியன்<br>ரொக்கக் க/கு<br>(செழியனிடம் செலுத்தியது.) | ப | | 400 | | 400 |
| 11 | செங்குட்டுவன்<br>விற்பனைக் க/கு<br>(செங்குட்டுவனிடம் சரக்கு விற்றது.) | ப | | 500 | | 500 |
| 12 | கொள்முதல் க/கு<br>ரொக்கக் க/கு<br>(சரக்கு வாங்கியது.) | ப | | 300 | | 300 |

| நாள் | விவரம் | | பே. ப. எ. | பற்று ரூ. | | வரவு ரூ |
|---|---|---|---|---|---|---|
| 13 | விற்பனைத் திருப்பக் க/கு | ப | | 100 | | |
| | செங்குட்டுவன் | | | | | 100 |
| | (செங்குட்டுவனிடமிருந்து திரும்பி வந்த சரக்கு.) | | | | | |
| 19 | கொள்முதல் க/கு | ப | | 400 | | |
| | வழுதி | | | | | 400 |
| | (வழுதியிடம் சரக்கு வாங்கியது.) | | | | | |
| 22 | வாடகைக் க/கு | ப | | 120 | | |
| | ரொக்கக் க/கு | | | | | 120 |
| | (வாடகை கொடுத்தது.) | | | | | |
| 24 | ரொக்கக் க/கு | ப | | 390 | | |
| | தள்ளுபடிக் க/கு | ப | | 10 | | |
| | செங்குட்டுவன் | | | | | 400 |
| | (செங்குட்டுவனிடம் ரூ. 390 பெற்று, தள்ளுபடி அளித்தது ரூ. 10.) | | | | | |
| 25 | ரொக்கக் க/கு | ப | | 475 | | |
| | விற்பனைக் க/கு | | | | | 475 |
| | (ரொக்க விற்பனை) | | | | | |
| 27 | ரொக்கக் க/கு | ப | | 100 | | |
| | கழிவுக் க/கு | | | | | 100 |
| | (பாண்டியனிடம் கழிவு பெற்றது.) | | | | | |
| 18 | வழுதி | ப | | 300 | | |
| | ரொக்கக் க/கு | | | | | 300 |
| | (வழுதிக்குச்செலுத்தியது.) | | | | | |

## பேரேட்டுக் கணக்குகள்

### ரொக்கக் க/கு

ப | வ

| நாள் | விவரம் | பே. ப. எ. | தொகை ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1972 | | | | 1972 | | | |
| சன. 1 | முதல் | | 5,000 | சன. 1 | கொள்முதல் | | 700 |
| 7 | விற்பனை | | 400 | ,, 10 | செழியன் | | 400 |
| 24 | செங்குட்டுவன் | | 390 | 11 | கொள்முதல் | | 300 |
| 25 | விற்பனை | | 475 | 22 | வாடகை | | 120 |
| 27 | கழிவு | | 100 | 28 | வழுதி | | 300 |
| | | | | 31 | இருப்பு கீ/இ | | 4,545 |
| | | | 6,365 | | | | 6,365 |
| 1972 | | | | | | | |
| பிப் 1 | இருப்பு கீ/கொ | | 4,545 | | | | |

### முதல் க/கு

| நாள் | விவரம் | பே. ப. எ. | தொகை ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1972 | | | ரூ. | 1972 | | | |
| சன 31 | இருப்பு கீ/இ | | 5,000 | சன 1 | ரொக்கம் | | 5,000 |
| | | | | 1972 | | | |
| | | | | பிப் 1 | இருப்பு கீ/கொ | | 5,000 |

### கொள்முதல் க/கு

| நாள் | விவரம் | பே. ப. எ. | தொகை ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1972 | | | ரூ. | 1972 | | | ரூ. |
| சன 1 | ரொக்கம் | | 700 | சன 31 | இருப்பு கீ/இ | | 2,650 |
| 7 | வழுதி | | 1,250 | | | | |
| 11 | ரொக்கம் | | 300 | | | | |
| 19 | வழுதி | | 400 | | | | |
| | | | 2,650 | | | | 2,650 |
| 1972 | | | | | | | |
| பிப். | இருப்பு கீ/கொ | | 2,650 | | | | |

### மனைத்துணைப் பொருள் க/கு

| நாள் | விவரம் | பே. ப. எ. | தொகை ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1972 | | | ரூ. | 1972 | | | ரூ. |
| சன 4 | செழியன் | | 800 | சன 31 | இருப்பு கீ/கு | | 800 |
| 1972 | | | | | | | |
| பிப் 1 | இருப்பு கீ/கொ | | 800 | | | | |

ப செழியன் வ

| நாள் | விவரம் | பே. ப. எ. | தொகை ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1972 | | | ரூ. | 1972 | | | ரூ. |
| சன 10 | ரொக்கம் | | 400 | சன 4 | மனைத்துணைப் பொருள் | | 800 |
| 31 | இருப்பு கீ/இ | | 400 | | | | |
| | | | 800 | | | | 800 |
| | | | | 1972 | | | |
| | | | | ஃபிப் 1 | இருப்பு கீ/கொ | | 400 |

வழுதி

| நாள் | விவரம் | பே. ப. எ. | தொகை ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1972 | | | ரூ. | 1972 | | | ரூ. |
| சன19 | கொள்முதல் திருப்பம் | | 50 | சன 7 | கொள்முதல் | | 1,250 |
| 28 | ரொக்கம் | | 300 | 19 | கொள்முதல் | | 400 |
| 31 | இருப்பு கீ/இ | | 1,300 | | | | |
| | | | 1,650 | | | | 1,650 |
| | | | | 1972 | | | |
| | | | | ஃபிப் 1 | இருப்பு கீ/கொ | | 1,300 |

கொள்முதல் திருப்பக் க/கு

| நாள் | விவரம் | பே. ப. எ. | தொகை ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1972 | | | ரூ. | 1972 | | | |
| சன 31 | இருப்பு கீ/இ | | 50 | சன 9 | வழுதி | | 50 |
| | | | | 1972 | | | |
| | | | | ஃபிப் 1 | இருப்பு கீ/கொ | | 50 |

செங்குட்டுவன்

| நாள் | விவரம் | பே. ப. எ. | தொகை ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1972 | | | ரூ. | 1972 | | | ரூ. |
| சன 11 | விற்பனை | | 500 | சன 13 | விற்பனைத் திருப்பம் | | 100 |
| | | | | ,, 24 | ரொக்கம் | | 390 |
| | | | | ,, | தள்ளுபடி | | 10 |
| | | | 500 | | | | 500 |

விற்பனைத் திருப்பக் க/கு

| நாள் | விவரம் | பே. ப. எ. | தொகை ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1972 | | | ரூ. | 1972 | | | ரூ. |
| சன 13 | செங்குட்டுவன் | | 100 | சன 31 | இருப்பு கீ/இ | | 100 |
| 1972 | | | | | | | |
| ஃபிப் 1 | இருப்பு கீ/கொ | | 100 | | | | |

வாடகைக் க/கு

| நாள் | விவரம் | பே. ப. எ | தொகை ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1972 சன 22 | ரொக்கம் | | ரூ. 120 | 1972 சன 31 | இருப்பு கீ/இ | | ரூ. 120 |
| 1972 ஃபிப் 1 | இருப்பு கீ/கொ | | 120 | | | | |

தள்ளுப்படிக் க/கு

| நாள் | விவரம் | பே. ப. எ | தொகை ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| சன 197224 | செங்குட்டுவன் | | ரூ. 10 | 1972 சன 31 | இருப்பு கீ/இ | | ரூ. 10 |
| ஃபிப் 1972 1 | இருப்பு கீ/இ | | 10 | | | | |

கழிவுக் க/கு

| நாள் | விவரம் | பே. ப. எ | தொகை ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1972 சன 31 | இருப்பு கீ/இ | | ரூ. 100 | 1972 சன 27 | ரொக்கம் | | ரூ. 100 |
| | | | | 1972 ஃபிப் 1 | இருப்பு கீ/கு | | 100 |

விற்பனைக் க/கு

| நாள் | விவரம் | பே. ப. எ | தொகை ரூ. | நாள் | விவரம் | பே. ப. எ. | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1972 சன 31 | இருப்பு கீ/இ | | ரூ. 1,375 | 1972 சன 7 | ரொக்கம் | - | ரூ. 400 |
| | | | | | செங்குட்டுவன் | | 500 |
| | | | | ,, 25 | ரொக்கம் | | 475 |
| | | | 1,375 | | | | 1,375 |
| | | | | 1972 ஃபிப் 1 | இருப்பு கீ/கொ | | 1,375 |

## பேரேட்டுக் கணக்குகளை வகைப்படுத்தல்.
## (Grouping of Ledger Accounts)

வேண்டிய விவரத்தினை உடனடியாகப் பெற வேண்டுமாயின், பேரேட்டுக் கணக்குகளைத் தக்க முறையில் வகைப்படுத்த வேண்டும். பெரிய நிறுவனங்களில் நடவடிக்கைகள் மிகுந்திருக்குமாகையால், கீழ்க்கண்டவாறு அவை வகைப்படுத்தப் படுகின்றன.

அ) கடனீந்தோர் பேரேடு (Creditors' Ledger)

நிறுவனத்தின் கடனீந்தோர் அனைவரின் கணக்குகளையும் உள்ளடக்குவது இப் பேரேடு. கொள்முதலேடு, கொள்முதல்

திருப்ப ஏடு, ரொக்க ஏடு போன்ற துணையேடுகளிலிருந்து 'இப்பே ரேட்டில் உள்ள கணக்குகளில் எடுத்தெழுதப் படுகின்றன. இதனைக் கொள்முதல் பேரேடு (Purchases Ledger or Bought Ledger)என்றும், அளிப்போர்ப் பேரேடு (Suppliers' Ledger) என்றும் அழைப்பது வழக்கம்.

ஆ) கடனாளிகள் பேரேடு (Debtors' Ledger)

கடனாளிகள் அனைவரின் கணக்குகளையும் உள்ளடக்குவது இப்பேரேடு. விற்பனை ஏடு, விற்பனைத் திருப்ப ஏடு, ரொக்க ஏடு போன்ற துணையேடுகளிலிருந்து பெரும்பாலும் இவற்றில் பதிவு செய்யப்படுகின்றன. வாடிக்கையாளர்கள் பேரேடு (Customer's Ledger), விற்பனைப் பேரேடு (Sales Ledger) போன்ற வேறு பெயர் களாலும் இது அழைக்கப் பெறுகிறது.

இ) பொதுப் பேரேடு (General Ledger)

கடனாளிகள், கடனீந்தோர் கணக்குகளைத் தவிர உள்ள பிற கணக்குகளை உள்ளடக்குவது, இது சொத்துக் கணக்குகளும், பெயரளவுக் கணக்குகளும் இதில் இடம் பெறும். பெயரளவுப் பேரேடு (Nominal Ledger) என்றும், ஆள்சாராப் பேரேடு (Impersonal Ledger) என்றும் இதற்கு வேறு பெயர்கள் உண்டு.

சில வேளைகளில் தனிப் பேரேடு (Private Ledger) என்றும் ஒன்று வைத்திருப்பர். கடன் வாங்கிய கணக்கு, முதல் கணக்கு, எடுப்புக் கணக்கு போன்ற தனிப்பட்ட கணக்குகளை இதில் அடக்குவர். இப் பேரேடு தனிப்பட்ட முறையில் வைத்திருக்கப் படுகிறது.

மிகப் பெரிய நிறுவனங்களில், கடனீந்தோர் பேரேடு, கடனாளிகள் பேரேடு போன்று வகைப்படுத்தின், அவை போதா மலிருக்கலாம். ஒவ்வொரு பேரேடும் அகர வரிசைக் கேற்ப அவை மீண்டும் வகைப் படுத்தப்படலாம். எடுத்துக்காட்டாக, கடனாளிகள் பேரேட்டில் குறிப்பிட்ட எழுத்துகள் (A விலிருந்து K வரை) உள்ள எழுத்துகளில் தொடங்கும் பெயர்களுக்கு ஒரு பேரேடு, L-லிருந்து R-வரை தொடங்கும் பெயர்களைக் கொண்ட கணக்கு கட்கு வேறொரு பேரேடு போன்று அகரவரிசைப்படி மேலும் பகுக்கப் படலாம் வங்கிகள் பெரும்பாலும் இம் முறையைப் பின்பற்றுகின்றன. வட்டாரத்தின் அடிப்படையில் (Geographical basis) பகுக்கப்படுவதும் உண்டு. துறைகளின் அடிப்படையிலும் (Departments) கணக்குகளைப் பகுக்கலாம். இவ்வாறு நடவடிக் கைகளின் தன்மைக் கேற்பவும், தேவைக் கேற்பவும் பேரேடுகள் பகுக்கப்படுகின்றன.

## வினாக்கள்

1. 'பேரேடு' என்றால் என்ன ?
2. 'இருப்புக் கட்டுதல்' எனில் என்ன ? அதனாலுறும் பயன்கள் யாவை ?
3. கணக்குகளின் வகைக் கேற்ப, இருப்புக் கட்டுதல் எதை உணர்த்தும் ?

## பயிற்சி

1. கீழ்வரும் நடவடிக்கைகளிலிருந்து, பன்னீரின் பேரேட்டுக் கணக்கினைத் தயாரிக்க.

| 1972 | | | ரூ. |
|---|---|---|---|
| பிப். | 2 | பன்னீரிடம் சரக்கு விற்றது | 1,200 |
| | 4 | பன்னீரிடமிருந்து திரும்பி வந்த சரக்கு | 75 |
| | 8 | பன்னீரிடம் கடன் விற்பனை | 400 |
| | 9 | பன்னீரிடமிருந்து பெற்றது | 300 |
| | 12 | பன்னீரிடமிருந்து பெற்றது | 590 |
| | | அளித்த தள்ளுபடி | 10 |

2. கீழ்க் கொடுக்கப்பட்டிருக்கும் நடவடிக்கைகட்குக் குறிப்பேட்டுப் பதிவுகள் தந்து, பேரேட்டில் எடுத்தெழுதி, இருப்புக் கட்டுக.

| 1972 | | | ரூ. |
|---|---|---|---|
| மார்ச் | 1 | தங்கவேலு முதல் போட்டது | 7,000 |
| | | மனைத்துணைப் பொருள் வாங்கியது | 1,200 |
| | | தட்டெழுத்துப் பொறி வாங்கியது | 1,500 |
| | 5 | சரக்கு வாங்கியது | 500 |
| | 7 | ரொக்க விற்பனை | 400 |
| | 10 | செங்கோடனிடம் வாங்கிய சரக்கு | 600 |
| | 11 | செங்கோடனிடம் திருப்பியனுப்பிய சரக்கு | 100 |
| | 14 | செங்கோடனிடம் செலுத்தியது | 200 |
| | 17 | கந்தனுக்குக் கொடுத்த கழிவு | 50 |
| | 18 | கந்தப்பனிடம் விற்றது | 300 |

| | | |
|---|---|---|
| 19 | கந்தப்பனிடமிருந்து திரும்பி வந்த சரக்கு | 50 |
| 22 | கூலி கொடுத்தது | 100 |
| | எழுதுபொருள் வாங்கியது | 125 |
| 24 | கந்தப்பனிடம் பெற்றது | 100 |
| 25 | மேலும் முதல் போட்டது | 3,000 |
| 26 | அரசினர் கடன் பத்திரங்கள் வாங்கியது | 1,000 |
| | விற்பனை | 300 |
| 28 | முத்துசாமியிடம் விற்ற சரக்கு | 400 |
| 29 | பழநியிடம் வாங்கியது | 300 |
| 30 | செங்கோடனுக்குச் செலுத்தியது | 100 |

# 4. ரொக்க ஏடு
## (Cash Book)

பெரிய வணிக, தொழில் நிறுவனங்கள் இற்றை நாள்களில் நடவடிக்கைகளை வகைப்படுத்திப் பல்வகைத் துணையேடுகளில் பதிந்துவருகின்றன. இங்கு அவற்றைச் சுருக்கிக் கூறுவோம்.

1. ரொக்க ஏடு (Cash Book): ரொக்க நடவடிக்கைகள் அனைத்தும் இதில் இடம் பெறுகின்றன. எக் காரணம் பற்றி ரொக்கம் பெறினும் அல்லது பிறர்க்குத் தரினும் அவை ரொக்க நடவடிக்கைகளாகும். வங்கி நடவடிக்கைகளையும் இதில் அடக்க லாம். இவை நிகழ்ந்தவுடன் முதன்முதலில் ரொக்க ஏட்டில் தான் பதியப் படுகின்றன.

2. கொள்முதல் ஏடு (Purchases Book): கடன்பேரில் சரக்கு வாங்கின், கொள்முதல் ஏட்டில் எழுதப்படும்.

3. விற்பனை ஏடு (Sales Book): கடன் விற்பனை நடவடிக்கை களைப் பதிய இது பயன் படுத்தப்படுகிறது.

4. கொள்முதல் திருப்ப ஏடு (Purchase Returns Book): நாம் வாங்கிய சரக்கை நமக்கு விற்றவர்களிடம் திருப்பி யனுப்பும் நடவடிக்கைகளைப் பதிய இவ்வேடு பயன்படுகிறது.

5. விற்பனைத் திருப்ப ஏடு (Sales Returns Book): நாம் விற்ற சரக்கை நம்மிடம் வாங்கியவர்கள் நமக்குத்திருப்பி யனுப்பும் நடவடிக்கைகள் இதில் பதியப் பெறுகின்றன.

6. வரவுடைய உண்டியல் ஏடு (Bills Receivable Book): நாம் பிறர் மீது வரையும் உண்டியல்கள், பிறர் நமக்கு மேலெழுதி மாற்றித்தரும் உண்டியல்கள், பிறர் எழுதித் தரும் கடனுறுதிச் சீட்டுகள் (Promisory Notes) போன்றவற்றின் விவரங்களைக் குறித்து வைக்க இவ்வேடு பயன்படுகிறது.

7. செலுத்த வேண்டிய உண்டியல் ஏடு (Bills Payable Book): நாம் ஏற்ற உண்டியல்கள், நாம் பிறர்க்குக் கொடுத்த கடனுறுதிச் சீட்டுகள் போன்றவற்றைக் குறித்து வைக்க இவ்வேடு பயன் படுகிறது.

8. குறிப்பேடு (Journal Proper): மேலே குறிப்பிட்ட துணை யேடுகள் எதிலும் எழுதமுடியா நடவடிக்கைகளைப் பதியக் குறிப் பேடு பயன் படுகிறது. தொடக்கப்பதிவுகள் (Opening Entries), சரிக்கட்டுப் பதிவுகள் (Adjusting Entries) போன்றவை. இவை பற்றிப் பின்னர் விளக்குவோம்.

மேற்கூறிய துணையேடுகளை வைத்திருப்பதில் உண்டாகும் பயன்கள் பலவாகும்.

நடவடிக்கைகளை அவற்றின் தன்மைக் கேற்ப வகைப் படுத்தித் தனித்தனி ஏடுகளில் பதிவதால், வேண்டிய விவரத்தினை உடனுக்குடன் உணர முடியும்.

எடுத்துக்காட்டாக, கடனுக்கு வாங்கிய சரக்கு முழுவதும் கொள்முதல் ஏட்டில் பதியப் படுவதால், பின்னர் விளக்கம் ஏதேனும் தேவைப்படின், கொள்முதல் ஏட்டினை நோக்கின் போதும்.

பலவகையான துணையேடுகள் பயன்படுத்தப் படுவதால், வேலையைப் பலர்க்கும் பகிர்ந்தளிக்க முடிகிறது. கொள்முதல் ஏட்டினை ஒருவர்க்கும், விற்பனை ஏட்டினை ஒருவர்க்கும்—இவ்வாறு பணியைப் பகிர்ந்து கொடுக்க முடிகிறது. இதனால் பணி விரைவிலும் முடிக்கப் பெறுகிறது.

திங்களொரு முறை அல்லது குறிப்பிட்ட காலத்திற்கொரு முறை துணையேடுகள் கூட்டப்பெற்றுக் கூட்டல் தொகை மட்டிலுமே அவ்வக் கணக்குகட்கு எடுத்துச் செல்லப் படுகின்றன. எடுத்துக் காட்டாக, விற்பனைத்திருப்ப ஏட்டின் மொத்தத் தொகை விற்பனைத் திருப்பக் கணக்கிற்கும், கொள்முதல் ஏட்டின் மொத்த தொகை கொள்முதல் கணக்கிற்கும் எடுத்துச் செல்லப்படுவதால் பெரும் உழைப்பு தவிர்க்கப் படுகிறது.

இப்பொழுது ரொக்க ஏட்டில் பதியும் முறையை ஆய்வோம்.

## ரொக்க ஏடு

ரொக்க ஏடு ஒரு கணக்கு வடிவத்தில் அமைந்திருக்கும். பற்று—வரவுப் பகுதிகளை உள்ளடக்கிய அது ரொக்கக் கணக் காகவே பயன்படுகிறது. ரொக்க நடவடிக்கைகள் அனைத்தும் முதன் முதலில் ரொக்க ஏட்டில் பதியப் பெறுவதால், ரொக்க ஏடு ஒரு முதற் குறிப்பேடாகும் (Book of Original Entry). வேறு ரொக்கக் கணக்கு ஏதும் நாம் வைத்திருப்பதில்லை. ரொக்க ஏடு

கணக்குப் போன்று கோடுகளிடப்பட்டுப் பற்று வரவுப் பகுதிகளில் பதியப்படுவதால், ரொக்க ஏடே ரொக்கக் கணக்கின் பணியைச் செய்து விடுகிறது. இதனால் ரொக்க ஏடு ஒரு முதற்குறிப்பேடாக மட்டுமின்றி, ஒரு முதன்மை ஏடாகவும் (Principal Book or Ledger) திகழ்கிறது. ரொக்க ஏடுகள் பலவகைப்படும்.

1. சாதாரண ரொக்க ஏடு (Simple Cash Book)
2. ரொக்கம், தள்ளுபடி பத்திகளுடைய ரொக்க ஏடு. (Cash Book with cash and Discount columns)
3. ரொக்கம், வங்கி, தள்ளுபடி பத்திகளுடைய ரொக்க ஏடு (Cash Book with Cash, Bank and Discount Columns)
4. வங்கி, தள்ளுபடி பத்திகளுடைய ரொக்க ஏடு (Cash Book with Bank and Discount Columns only)

## 1. சாதாரண ரொக்க ஏடு
(Simple Cash Book)

சென்ற அதிகாரத்தில் நாம் ரொக்கக் கணக்குத் தயாரித்தோம் அல்லவா? அவ்வாறே இது பதிப்படுகின்றது. இது ஒரு பத்தி ரொக்க ஏடு (Single Column Cash Book) எனவும் அழைக்கப் படுவதுண்டு. கீழ்க் கண்டவாறு இது கோடுகளிடப்பட்டிருக்கும்;

ப வ

| நாள் | விவரம் | ர.எ. | பே. ப. எ. | தொகை ரூ | நாள் | விவரம் | சா. சீ. எ. | பே ப. எ | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | | | |

ர.எ.: ரசீது எண் (Receipt Number) என்பதின் சுருக்கம் பிறரிடமிருந்து நாம் ரொக்கம் பெறும்போழ்து, அதைப் பெற்ற தற்கான ரசீது தரவேண்டும். ரசீது ஏடுகள் (Receipt Books) பெரும்பாலும் அச்சிடப்பட்டிருக்கும். அவற்றில் வரிசை எண்கள் இடப்பட்டிருக்கும். பிறர்க்கு ரசீது தரும்போழ்து அதன் எதிரிடைப்படி (counterfoil) ரசீது ஏட்டிலேயே இருக்கும். ரசீது எண்ணை இப் பத்தியில் குறித்துவிடின், பின்னர் விவரம் தேவைப் படும்போழ்து அந்தக் குறிப்பிட்ட எண்ணுள்ள ரசீதின் எதிரிடைப்படியை உற்று நோக்கின், வேண்டிய விவரங் கிடைக்கும்.

சா. சீ.எ. : சான்றுச் சீட்டு எண் (Voucher) என்பதின் சுருக்கமே இது. நாம் பணஞ் செலுத்தியதற்குச் சான்றாகப் பிறரிடமிருந்து பெறும் ரசீதுகளும் ரொக்கச் சீட்டுகளும் (Cash Bills) பயன்படுவதால் அவை இவ்வாறு அழைக்கப்படுகின்றன. சான்றுச் சீட்டுகட்கு நாம் வரிசை எண் கொடுக்கிறோம். அந்த எண்ணைக் குறிப்பிட்ட கணக்குக் கெதிரில் சா.சீ.எ. பத்தியில் எழுதவேண்டும்.

எடுத்துக் காட்டு 4:

கீழ்க் காணும் நடவடிக்கைகளிலிருந்து திரு. ஆப்ராகாமின் சாதாரண ரொக்க ஏட்டைத் தயாரிக்க.

1970

சனவரி

| | | ரூ |
|---|---|---|
| 2. | விற்பனை | ... 750 |
| | கண்ணனுக்குக் கொடுத்த கழிவு | ... 75 |
| 5. | சரக்கு வாங்கியது | ... 317 |
| 6. | வட்டி பெற்றது | ... 30 |
| | சரக்கு விற்றது | ... 257 |
| 7. | பயணச் செலவு | ... 50 |
| | மேசை, நாற்காலி வாங்கியது | ... 315 |
| 9. | ஆறுமுகத்திடம் பெற்றது | ... 500 |
| 10. | ஆசாதுக்குக் கொடுத்தது | ... 278 |
| 11. | கொள்முதல் | ... 280 |

விடை :

திரு. ஆப்ரகாமின் சாதாரண ரொக்க ஏடு

ப வ

| நாள் | விவரம் | ர. எ. | பே. ப. எ. | தொகை ரூ | நாள் | விவரம் | சா. சீ. எ. | பே. ப. எ. | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1970 சன | | | | | 1970 சன | | | | |
| 2 | விற்பனை | | | 750 | 2 | கழிவு | | | 75 |
| 6 | வட்டி | | | 30 | 5 | கொள்முதல் | | | 317 |
| ,, | விற்பனை | | | 257 | 7 | பயணச் செலவு | | | 50 |
| 9 | ஆறுமுகம் | | | 500 | ,, | மனைத் துணைப் பொருள் | | | 315 |
| | | | | | 10 | ஆசாது | | | 218 |
| | | | | | 11 | கொள்முதல் | | | 280 |
| | | | | | 31 | இருப்பு கீ/இ | | | 222 |
| | | | | 1537 | | | | | 1537 |
| 1970 பிப் 1 | இருப்பு கீ/கொ | | | 222 | | | | | |

சாதாரணமாக, கணக்கை இருப்புக் கட்டுவதுபோன்றே ரொக்க ஏட்டையும் இருப்புக் கட்டுகிறோம். ரொக்கக் கணக்கைப் பொறுத்தவரை, பற்றுப் பகுதியின் கூட்டல் தொகைதான் வரவுப் பகுதியினும் அதிகமிருக்கும். அல்லது பற்றுப்பகுதி அளவே வரவுப் பகுதியின் கூட்டல் தொகையும் இருக்கும். காரணம், ரொக்கம் பெறுவதைப் பற்றுப் பகுதியிலும், ரொக்கம் நம்மிடமிருந்து செல்வதை வரவுப் பகுதியிலும் பதிகிறோம். நம்மிடம் வந்ததினும் அதிக ரொக்கம் நம்மிடமிருந்து சென்றிருக்க முடியாதன்றோ?

## 2. ரொக்கம், தள்ளுபடி பத்திகளுடைய ரொக்க ஏடு
(Cash Book with Cash and Discount Columns)

இது இருப்த்தி ரொக்க ஏடு என்றும் அழைக்கப்பெறும்.

ரொக்கத் தள்ளுபடி பற்றி முன்னரே விளக்கியுள்ளோம் விரைவில் கடன் தீர்க்கப் படவேண்டும் என்ற நோக்கோடு அளிக்கப்படுவது இது. இதனால் நாம் பிறரிடம் ரொக்கம் செலுத்தும் போழ்து நமக்குத் தள்ளுபடி அளிக்கப்படுவதும் பிறரிடமிருந்து நாம் தொகை பெறும் போழ்து அவர்க்கு நாம் தள்ளுபடி அளிப்பதும் புலனாகும். ரொக்கம் செலுத்தும்போழ்தும் பெறும் போழ்தும்தான் தள்ளுபடி அளிக்கப்படுவதால்—ரொக்க நடவடிக்கையுடன் மட்டில் இது தொடர்புற்றிருப்பதால்—ரொக்க ஏட்டிலேயே தள்ளுபடிக்கு என்று ஒரு பத்தி ஒதுக்கப்படின் பதிவது எளிதாகுமன்றோ? எனவேதான் தள்ளுபடி பத்தியுடன் கூடிய ரொக்க ஏடு பயன்படுத்தப்படுகிறது.

ரொக்க ஏட்டில் பற்றுப் பகுதியில் ஒரு தள்ளுபடி பத்தியும் வரவும் பகுதியில் ஒரு தள்ளுபடி பத்தியும் இருக்கும். தள்ளுபடிக் கணக்கில் பற்று வைக்க வேண்டியிருப்பின், பற்றுப்பகுதியில் உள்ள தள்ளுபடிப்பத்தியிலும், தள்ளுபடிக்கணக்கில் வரவுவைக்க வேண்டியிருப்பின், வரவுப்பகுதியிலுள்ள தள்ளுபடிப்பத்தியிலும் தொகையைக் குறிக்க வேண்டும். ரொக்கக் கணக்கில் பற்று வைக்கும் பொழுதே தள்ளுபடிக் கணக்கிலும் பற்று வைக்க வேண்டியுள்ளது. காரணம், ரொக்கம் பெறும்போழ்துதான் தள்ளுபடி அளிக்கிறோம். இவ்விரண்டுக்குரிய ஒரே வரவுக் கணக்கு ஆள்சார் கணக்கு. இவ்வாறே ரொக்கக் கணக்கில் வரவு வைக்கும் போழ்துதான் தள்ளுபடிக்கணக்கிலும் வரவு வைக்க வேண்டியிருக்கும். காரணம் நாம் குறிப்பிட்ட காலத்தில் பணம் செலுத்தும் போழ்துதானே இது நமக்கு அளிக்கப்படுகிறது? இவ்விரண்டுக்குமுரிய ஒரே பற்றுக் கணக்கு ஆள்சார் கணக்கு (நாம்

யாரிடம் ரொக்கம் செலுத்துகிறோமோ அவர் கணக்கு). இதனால் இவற்றைப் பதிவது எளிதாகிறது.

தள்ளுபடிக்கென்று பத்தி இருப்பது போன்றே வங்கிக் கணக்கையும் ரொக்க ஏட்டிலேயே இணைப்பது வழக்கம். வங்கிக்கும் ரொக்கத்திற்கும் உள்ள தொடர்பும், காசோலை விடுப்பது ரொக்கம் கொடுப்பது போன்றே கருதப்படுவதும் இதற்குக் காரணமாகும். ஆனால், இருபத்திகளுடைய ரொக்க ஏட்டில் வங்கிப்பத்தி இல்லை. ஆயினும் வங்கி நடவடிக்கைகளையும் கணக்கில் கொடுப்பர். அந்நிலையில் அவற்றைப் பதியுமுறையை ஐயத்திற்கிடமின்றி அறிந்து கொள்ளுதல் நலமாகும்.

(1. காசோலை விடுக்கும் போழ்தெல்லாம் சாதாரணமாக வங்கிக் கணக்கில் வரவு வைப்பது வழக்கம். ஆனால், இருபத்தி ரொக்க ஏட்டில் பதியும் போழ்து காசோலை கொடுத்திருப்பினும், வங்கியிலிருந்து நாம் ரொக்கம் பெற்றதாகவும் பின்னர், ரொக்கங் கொடுத்துச் செலவழித்ததாகவும் கொண்டு இரு பதிவுகளைச் செய்ய வேண்டும்.

2. பிறரிடமிருந்து காசோலைகளைப் பெற்ற அன்றே வங்கிக் கனுப்பினும் முதலில் ரொக்கம் வந்ததாகப் பதிவு செய்து, பின்னர் அந்த ரொக்கத்தை வங்கியில் செலுத்தியதாக மற்றுமொரு பதிவும் செய்ய வேண்டும்,

3. நம் வாடிக்கையாளர்கள் நேரடியாக நம் வங்கிக் கணக்கில் பணங்கட்டியிருப்பினும், நம்மிடம் அவர்கள் ரொக்கம் கொடுத்ததாக ஒரு பதிவும், பின்னர் அதனை நாம் வங்கியில் செலுத்துவதாக இன்னுமொரு பதிவுஞ் செய்ய வேண்டும்.)

வங்கிக் கணக்கொன்று தனியே வைத்திருக்க வேண்டும்.

தள்ளுபடிக் கணக்கை இருப்புக் கட்டக்கூடாது. பற்றுப் பகுதியில் நாம் பிறர்க்கு அளிக்கும் தள்ளுபடியையும், வரவுப் பகுதியில் பிறரிடம் நாம் பெறும் தள்ளுபடியையும் பதிகிறோமல்லவா? நாம் பிறர்க்களித்த தள்ளுபடியும், பிறர் நமக்களித்த தள்ளுபடியையும் தனித்தனியே உணரும் நோக்குடன் இவை ரொக்க ஏட்டில் கூட்டப்படுகின்றன. பற்றுப் பகுதியிலுள்ள தள்ளுபடிப் பத்தியின் கூட்டல் தொகை அளித்த தள்ளுபடிக் கணக்கின் (Discount allowed A/c) பற்றுப் பக்கத்திற்கும், வரவுப் பகுதியில் உள்ள தள்ளுபடிப் பத்தியின் கூட்டல் தொகை, பெற்ற தள்ளுபடிக் கணக்கின் (Discount Received A/c) வரவுப் பகுதிக்கும் எடுத்துச் செல்லப் படுகிறது.

எடுத்துக் காட்டு 5:

கீழ்க் கொடுக்கப்பட்ட நடவடிக்கைகளிலிருந்து சாத்தனாரின் இருபத்தி ரொக்க ஏட்டில் பதிந்து இருப்புக் கட்டுக.

*1971*

ஏப்ரல் 1. இருப்பு : ரொக்கம் ரூ. 555
வங்கி ரூ. 5,555

2. சாத்தப்பனிடம் பெற்றது ரூ 880; தள்ளுபடி அளித்தது ரூ. 20.

5. ரூ. 200 மதிப்புள்ள சரக்கை ரொக்கம் கொடுத்தும் ரூ. 800 மதிப்புள்ள சரக்கைக் காசோலை விடுத்தும் வாங்கியது.

வங்கியிற் செலுத்தியது ரூ. 680.

7. ரொக்க விற்பனை ரூ. 240.

8. சட்டநாதனிடம் ரூ. 490க்குக் காசோலை விடுத்து ரூ. 500-க்கான கணக்கைத் தீர்த்துக் கொண்டது.

15. வங்கியிலிருந்து எடுத்தது ரூ. 150.

16. காசோலை விடுத்துத் தட்டெழுத்துப் பொறி வாங்கியது ரூ 2,000.

17. சரவணனிடம் காசோலை பெற்றது ரூ. 835; அளித்த தள்ளுபடி ரூ. 15.

18. வாடகை கொடுத்தது ரூ. 200; எழுது பொருள் வாங்கியது ரூ. 100.

சரவணனிடம் பெற்ற காசோலை வங்கிக்கனுப்பப் பட்டது.

21. சாமிநாதனிடம் காசோலை மூலம் பெற்ற வட்டி ரூ. 175; அக் காசோலை உடனே வங்கிக் கனுப்பப்பட்டது.

22. சம்பத், சாத்தனாரின் வங்கிக் கணக்கில் செலுத்தியது ரூ. 580.

23. வீட்டுச் செலவுக்கென சாத்தனார் வங்கியிலிருந்து எடுத்துக் கொண்டது ரூ. 460

25. வங்கியில் கட்டியது ரூ. 400

26. ஊதியம் காசோலை மூலம் கொடுத்தது ரூ. 1508. விளம்பரச் செலவு ரூ. 200.

சரவணனிடம் பெற்ற காசோலைக்குப் பணம் மறுக்கப் பட்டு விட்டதாக வங்கி திருப்பிவிட்டது.

29. சேதுவிடம் பெற்ற காசோலை ரூ. 240. அளித்த தள்ளுபடி ரூ. 10. (காசோலை வங்கிக் கனுப்பப்பட்டது)

30. விற்பனை ரூ. 177.

விடை:

ப சாத்தனுரின் இருபத்தி ரொக்க ஏடு வ

| நாள் | விவரம் | ர. எ. | பே. ப. எ. | தள்ளுபடி ரூ. | ரொக்கம் ரூ | நாள் | விவரம் | ர. எ. | பே. ப. எ. | தள்ளுபடி ரூ. | ரொக்கம் ரூ. |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1971 | | | | | | 1971 | | | | | |
| ஏப்ரல் 1 | இருப்பு கீ/கொ ... | | | | 555 | ஏப்ரல் 5 | கொள்முதல் ... | | | | 1,000 |
| 2 | சாத்தப்பன் ... | | | 20 | 880 | ,, | வங்கி ... | | | | 680 |
| 5 | வங்கி ... | | | | 800 | 8 | சட்டநாதன் ... | | | 10 | 490 |
| | | | | | | 16 | தட்டெழுத்துப் | | | | |
| 7 | விற்பனை ... | | | | 240 | | பொறி ... | | | | 2,000 |
| 8 | வங்கி ... | | | | 490 | 18 | வாடகை ... | | | | 200 |
| 15 | வங்கி ... | | | | 150 | ,, | எழுது பொருள் ... | | | | 100 |
| 16 | வங்கி ... | | | | 2,000 | ,, | வங்கி ... | | | | 830 |
| 17 | சரவணன் ... | | | 15 | 835 | 21 | வங்கி ... | | | | 175 |
| 21 | வட்டி ... | | | | 175 | 22 | வங்கி ... | | | | 580 |
| 22 | சம்பத் ... | | | | 580 | 23 | எடுப்பு ... | | | | 460 |
| 23 | வங்கி ... | | | | 460 | 25 | வங்கி ... | | | | 400 |
| 26 | வங்கி ... | | | | 1,508 | 26 | ஊதியம் ... | | | | 1,508 |
| ,, | வங்கி ... | | | | 835 | ,, | விளம்பரம் ... | | | | 200 |
| 29 | சேது ... | | | 10 | 240 | ,, | சரவணன் ... | | | 15 | 835 |
| 30 | விற்பனை ... | | | | 177 | 29 | வங்கி ... | | | | 240 |
| | | | | | | 30 | இருப்பு கீ/இ ... | | | | 222 |
| | | | | 45 | 9,925 | | | | | 25 | 9,925 |
| 1971 | | | | | | | | | | | |
| மே. 1 | இரும்பு கீ/கொ ... | | | | 222 | | | | | | |

ப வங்கிக் கணக்கு வ

| நாள் | விவரம் | பே. ப. எ | தொகை | நாள் | விவரம் | பே. ப. எ. | தொகை ரூ |
|---|---|---|---|---|---|---|---|
| 1971 | | | | | | | |
| ஏப் | இருப்பு கீ/இ ... | | 5,555 | 1971 | ரொக்கம் ... | | 800 |
| 5 | ரொக்கம் ... | | 680 | 8 | ரொக்கம் ... | | 490 |
| 18 | ரொக்கம் ... | | 835 | 15 | ரொக்கம் ... | | 150 |
| 21 | ரொக்கம் ... | | 175 | 16 | ரொக்கம் ... | | 2,000 |
| 22 | ரொக்கம் ... | | 580 | 23 | ரொக்கம் ... | | 460 |
| 25 | ரொக்கம் ... | | 400 | 26 | ரொக்கம் ... | | 1,508 |
| 29 | ரொக்கம் ... | | 240 | 30 | ரொக்கம் ... | | 835 |
| | | | | ... | இருப்பு கீ/இ | | 2,222 |
| | | | 8.465 | | | | 8.465 |
| 1971 | | | | | | | |
| மே 1. | இருப்பு கீ/கொ | | 2,222 | | | | |

விளக்கம் : 5-4-71 மொத்தம் சரக்கு வாங்கியது ரூ.1,000. வங்கி பத்தியற்ற ரொக்க ஏட்டின் முறைப்படி ரூ. 800க்குக் காசோலை விடுத்துச் சரக்கு வாங்கியிருப்பினும், ரூ. 800 வங்கியிலிருந்து பெற்றதாகவும் பின்னர் இதனையும் ரொக்கங் கொடுத்தே சரக்கு வாங்கியதாகவும் கொள்ளப்பட்டது. எனவே பற்றுப் பகுதியில் ரொக்கப் பத்தியில் ரூ. 800 வங்கியிலிருந்து எடுத்த தற்காகப் பற்று வைக்கப்பட்டுள்ளது. பின்னர்ச் சரக்கு வாங்கியதற்கு ரொக்கக் கணக்கில் ரூ.1,000 வரவு வைக்கப் பட்டுள்ளது.

21-4-71 சாமிநாதனிடம் வட்டிக்காகப் பெற்ற காசோலையை உடனே வங்கிக்கனுப்பினும், முதலில் அவர் ரொக்கமே கொடுத்ததாகக் கருதப்பட்டு ரொக்கக் கணக்கில் பற்று வைக்கப்படுகிறது. பின்னர், அந்த ரொக்கம் வங்கியில் செலுத்தப் படுவதாகக் கொண்டு ரொக்கக் கணக்கில் வரவு வைக்கப்படுகிறது.

22-4-71 சம்பத் சாத்தனூர் வங்கிக் கணக்கில் செலுத்தியது விளக்கம் மேற்கண்டவாறே.

26-4-71 சரவணனிடம் பெற்ற காசோலைக்குப் பண மறுக்கப் படினும் இம் முறையில் நேரடியாக வங்கிக் கணக்கில் வரவு வைப்பதற்கு மாறாக ரொக்கக் கணக்கில் பற்றும் வங்கிக் கணக்கில் வரவுக்கும் முதலில் பதிந்து பின்னர்ச் சரவணன் கணக்கில் பற்றும், ரொக்கக் கணக்கில் வரவும் வைக்கப்படு கின்றன. அவரிடமிருந்து காசோலை பெறும் போழ்து தள்ளு படிக் கணக்கில் பற்று வைத்தோம். காசோலை வசூலாகாத தால் தள்ளுபடிக் கணக்கில் வரவு வைத்தும் முன்னர்ச் செய்த பதிவை நீக்குகிறோம்.

## ரொக்கம், வங்கி, தள்ளுபடி பத்திகளுள்ள ரொக்க ஏடு
(Cash Book with Cash, Bank and Discount Columns)

இது முப்பத்தி ரொக்க ஏடு (Triple Column Cash Book) எனவும் அழைக்கப்படுகிறது.

வங்கி நடவடிக்கைகள் மிகுந்துள்ள இற்றை நாள்களில், வங்கிக் கணக்குக்கென்று ஒரு பத்தியையும் ரொக்க ஏட்டிலேயே இணைத்து விடுகின்றனர். இதனுல் மிகவும் எளிமையாக இவை பதியப்படுவதுடன், வங்கிக் கணக்கென்று ஒன்று தனியாகப் பேரேட்டில் இருக்க வேண்டிய தேவையும் நீங்கி விடுகிறது. தள்ளுபடிக் கணக்கில் பதிவது போன்றே, வங்கிக் கணக்கில் பற்று வைக்கப் பற்றுப் பகுதியில் உள்ள வங்கிப் பத்தியிலும், வங்கிக் கணக்கில் வரவு வைக்க, வரவுப் பகுதியில் உள்ள வங்கிப் பத்தியிலும் பதிய வேண்டும். காசோலை விடும் போழ்தெல்லாம், வங்கிக் கணக்கில் நேரடியாக வரவு வைக்கலாம். பிறரிடமிருந்து காசோலை பெற்றுல், அது உடனே வங்கிக்கனுப்பப் பட்டால், வங்கிக் கணக்கில் நேரடியாகப் பற்று வைத்திடலாம். குறிப்பேட்டுப் பதிவுகளில் விளக்கியவாறே முப்பத்தி ரொக்க ஏட்டில் பதிய வேண்டும்.

'வங்கியிலிருந்து எடுத்தது' எனும் நடவடிக்கையில் ரொக்கக் கணக்கில் பற்றும், வங்கிக் கணக்கில் வரவும் வைக்கப்பட வேண்டுமல்லவா ? இந் நடவடிக்கையில் பற்று வரவுக்குரிய கணக்குகள் இரண்டும் பேரேட்டின் ஒரே பக்கத்தில் எதிரெதிர்ப் பதிவுகளாக எழுதப்பட்டிருப்பதால், பே. பே. எ. பத்தியின் கீழ் 'எ' (எதிர்ப் பகுதி-contra-என்பதன் சுருக்கம்) என்று எழுதிவிடின் போதும். அதாவது ரொக்கம் பற்று வைக்கப்படும் போழ்து அதற்குரிய வரவுக் கணக்கான வங்கிக் கணக்கின் பெயரை விவரம் பத்தியில் எழுதுகிறேம். அவ்வங்கிக் கணக்கு அதே பக்கத்தில் வரவுப் பகுதியில்தான் உள்ளது என்பதன் பொருள் அது. அவ்வாறே வரவுப் பகுதியில் வங்கிக் கணக்கு வரவு வைக்கப்படுகிறது. விவரப் பத்தியில் அதற்குரிய பற்றுக் கணக்கான ரொக்கக் கணக்கின் பெயரை எழுதுகிறேம். அந்த ரொக்கக் கணக்கு அதே பக்கத்தில் எதிர்ப் பகுதியான பற்றுப் பகுதியில்தான் உள்ளது என்பதைக் காட்ட வரவுப் பகுதியிலும் பே. ப. எ. கீழ் 'எ' என்று எழுதுகிறேம். இப் பதிவுகள் எதிர்ப் பதிவுகள் (Contra Entries) எனப்படுகின்றன.

எடுத்துக் காட்டு 6 : எடுத்துக் காட்டு 5-ல் கொடுக்கப்பட்ட நடவடிக்கைகளை முப்பத்தி ரொக்க ஏட்டில் பதிந்து இருப்புக் கட்டுக.

விடை:

சாத்தனாரின் மூன்று பத்தி ரொக்க ஏடு

| ப | | | | | | | | | | | | | வ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| நாள் | விவரம் | ர. எ | பே. ப. எ. | தள்ளுபடி ரூ | ரொக்கம் ரூ | வங்கி ரூ | நாள் | விவரம் | சா சீ. எ. | பே. ப. எ, | தள்ளுபடி ரூ | ரொக்கம் ரூ | வங்கி ரூ |
| 1971 ஏப்ரல் | | | | | | | 1971 ஏப்ரல் | | | | | | |
| 1 | இருப்பு கீ/கொ ... | | | | 555 | 5,555 | 5 | கொள் முதல் ... | | | | 200 | 800 |
| 2 | சாத்தப்பன் ... | | | 20 | 880 | | ,, | வங்கி ... | | எ | | 680 | |
| 5 | ரொக்கம் ... | | எ | | | 680 | 8 | சட்டநாதன் ... | | | 10 | | 490 |
| 7 | விற்பனை ... | | | | 240 | | 15 | ரொக்கம் ... | | எ | | | 150 |
| 15 | வங்கி ... | | எ | | 150 | | 16 | தட்டெழுத்துப் பொறி ... | | | | | 2,000 |
| 17 | சரவணன் ... | | | 15 | 835 | | | | | | | | |
| 18 | ரொக்கம் ... | | எ | | | 835 | 18 | வாடகை ... | | | | 200 | |
| 21 | வட்டி ... | | | | | 175 | ,, | எழுது பொருள் ... | | | | 100 | |
| 22 | சம்பத் ... | | | | | 580 | ,, | வங்கி ... | | எ | | 835 | |
| 25 | ரொக்கம் ... | | எ | | | 400 | 23 | எடுப்பு ... | | | | | 460 |
| 29 | சேது ... | | | 10 | | 240 | 25 | வங்கி ... | | எ | | 400 | |
| 30 | விற்பனை ... | | | | 177 | | 26 | ஊதியம் ... | | | | | 1,508 |
| | | | | | | | ,, | விளம்பரம் ... | | | | 200 | |
| | | | | 45 | 2,837 | 8,465 | ,, | சரவணன் ... | | | 15 | | 835 |
| | | | | | | | 30 | இருப்பு கீ/இ ... | | | | 222 | 2,222 |
| 1971 | | | | | | | | | | | 25 | 2,837 | 8,465 |
| மே 1 | இருப்பு கீ/கொ ... | | | | 222 | 2,222 | | | | | | | |

## 4. வங்கி, தள்ளுபடி பத்திகளுடைய ரொக்க ஏடு
(Cash Book with Bank and Discount Columns)

பெரிய தொழில் அல்லது வணிக நிறுவனங்களில் ரொக்கம் கையாள்வது பெரும்பாலும் தவிர்க்கப்படுகிறது. செலவினங்களை மேற்கொள்ள வேண்டியிருப்பினும், பிறர்க்குப் பணந்தர வேண்டியிருப்பினும், காசோலையே பயன்படுத்தப் படுகிறது. வரும் ரொக்கமும், காசோலையும் உடனடியாக வங்கிக்கனுப்பப் படுகிறது. அஞ்சற் செலவு, சுமை கூலி (Carriage), எழுது பொருட் செலவு போன்ற மிகவும் சிறுசிறு செலவினங்கட்கே ரொக்கம் பயன் படுத்தப் படுகிறது. இதற்கெனச் சில்லரை ரொக்க ஏட்டினைப் (Petty Cash Book) பயன்படுத்திக் கொள்வர். ரொக்கப் பத்தி ரொக்க ஏட்டில் இருப்பதில்லை. வரவுகள் அனைத்திற்கும் வங்கிக் கணக்கில் பற்றும் செலவு அனைத்திற்கும் வங்கிக் கணக்கில் வரவும் வைத்துவிடின் போதும்.

எடுத்துக் காட்டு 7 :

அறவாணனின் வங்கி தள்ளுபடி பத்திகளுடைய ரொக்க ஏட்டில் பதிந்து இருப்புக் கட்டுக. செலவுகட்குக் காசோலை தருவதாகவும், பெறும் ரொக்கம் உடனடியாக வங்கிக் கனுப்புவதாகவும் கொள்க.

1971

ஜூலை 1. வங்கியிருப்பு ரூ.5,555; ரொக்கக் கொள்முதல் ரூ. 2,500; விற்பனை ரூ.2,758; வட்டி காசோலை மூலம் பெற்றது ரூ.72

3. சில்லரைக் காசுக் கணக்கருக்குக் கொடுத்தது ரூ 92.

4. மதிவாணனிடம் காசோலை ரூ. 1,770 பெற்றுக் கொண்டு அளித்த தள்ளுபடி ...ரூ. 30.

6. ரூ. 5,000 மதிப்புள்ள எந்திரம் 10% வியாபாரத் தள்ளுபடியில் வாங்கியது.

10. அறவாணன் தன் வீட்டுக்கு வேண்டிய மேசை, நாற்காலி வாங்கியது ரூ. 550.

,, அம்பலவாணனிடம் ரூ. 100 ரொக்கமும் ரூ.590க்குக் காசோலையும் பெற்றுக் கொண்டு அளித்த தள்ளுபடி ரூ.10.

15. ஊதியங் கொடுத்தது ரூ.500.

17. இலாப ஈவு வங்கி வசூலித்தது ரூ 100.

,, வங்கிக் கட்டணம் ரூ. 10.

20. ரூ. 1,200 ரொக்கமும் ரூ 350க்குக் காசோலையும் ரொக்க விற்பனையில் பெற்றது.

25. ரொக்க கொள்முதலுக்குக் கொடுத்தது ரூ.570.

,, கலைவாணனுக்கு ரூ. 690க்கு கொடுத்துத் தீர்த்துக் கொண்ட கணக்கு ரூ. 700.
கழிவு பெற்றது ரூ. 250.

விடை :

ப — அறவாணனின் ரொக்க ஏடு — வ

| நாள் | விவரம் | ர. எ. | பே. ப. எ. | தள்ளுபடி ரூ. | வங்கி ரூ. | நாள் | விவரம் | சா. சீ. எ. | பே. ப. எ. | தள்ளுபடி ரூ. | வங்கி ரூ. |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1971 சூலை 1. | இருப்பு ... | | | | 5,555 | 1971 சூலை 1 | கொள்முதல் ... | | | | 2,500 |
| | விற்பனை ... | | | | 2,758 | 3 | சில்லரைக் காசு க/கு ... | | | | 92 |
| | வட்டி ... | | | | 72 | 6. | எந்திரம் ... | | | | 4,500 |
| 4. | மதிவாணன் | | | 30 | 1,770 | 10. | எடுப்பு ... | | | | 550 |
| 10. | அம்பலவாணன் | | | 10 | 690 | 15. | ஊதியம் ... | | | | 500 |
| | | | | | | 17. | வங்கிக் கட்டணம் ... | | | | 10 |
| 17. | இலாப ஈவு ... | | | | 100 | | | | | | |
| 20. | விற்பனை ... | | | | 1,550 | 25. | கொள்முதல் ... | | | | 570 |
| 25. | கழிவு ... | | | | 250 | | கலைவாணன் ... | | | 10 | 690 |
| | | | | | | 31. | இருப்பு கீ/இ | | | | 3,333 |
| | | | | 40 | 12,745 | | | | | 10 | 12,745 |
| 1971 ஆக. 1 | இருப்பு கீ/கொ | | | | 3,333 | | | | | | |

## சில்லரை ரொக்க ஏடு
## (Petty Cash Book)

வரும் ரொக்கத்தை அவ்வப்பொழுது வங்கிக்கனுப்பிச் செலுத்த வேண்டியவற்றிற்குக் காசோலை விடும் வழக்கமுள்ள பெரிய நிறுவனங்கள், சிறுசிறு செலவினங்கட்கு மட்டில் ரொக்கத் தைத்தான் பயன் படுத்தியாக வேண்டும் என்று கண்டிருக்கிறோம். போக்குவரத்து, அஞ்சல், தந்தி, எழுதுபொருள், துப்புரவு செய்தல், வாடிக்கையாளர்கட்கு அளிக்கும் தேநீர்ச் செலவு போன்ற சில் லரைச் செலவுகளை மேற்கொள்ள சில்லரைக் காசுக் கணக்கர் (Petty Cashier) இருப்பார். இவ்வகையில் ரொக்க நடவடிக்கைகள் இரு பகுதிகளாகப் பிரிக்கப்படுகின்றன. பெருந் தொகைகளைப் பதிய தலைமைக் காசுக் கணக்கரும் (Chief Cashier) சில்லரை நடவடிக்கை களைப் பதிய சில்லரைக் காசுக் கணக்கரும் இருப்பர். முழுவதற்கும் காசோலைகளைப் பயன்படுத்தா நிறுவனங்களிலும் மிகவும் சிறுசிறு செலவினங்களை ரொக்க ஏட்டில் பதிந்து வருதல் அவ்வளவு சிறந்த தன்று. ரொக்க ஏட்டில் அளவிறந்த பதிவுகள் காணப்படுவதுடன் பிழையேற்படவும் காரணமாக இருக்கும். எனவே அந்நிறுவனங் களும் சில்லரைக் காசுக் கணக்கரிடம் இப் பணியை ஒப்படைக் கின்றனர்.

குறிப்பிட்ட காலத்திற்கு—ஒரு வாரம்—ஒரு திங்கள் என— எவ்வளவு தொகை தேவையிருக்கும் என்பதை மதிப்பிட்டு, அத்தொகையைச் சில்லரைக்காசுக் கணக்கரிடம் கொடுப்பர். அவர் இச்செலவினங்களை மேற்கொள்வதுடன், அவற்றைச் சில்லரை ரொக்க ஏட்டிலும் (Petty Cash Book) அவ்வப்பொழுது பதிந்து வருவர். சிறுசிறு செலவினங்களாயினும், ஒவ்வொன்றிற்கும் சான்றுச் சீட்டுகள் பெற்றாக வேண்டும்.

பஸ் கட்டணம், அஞ்சற் செலவு, போன்றவற்றிற்கு உரிய சான்றுச் சீட்டுகள் பிறரிடமிருந்து கிடைக்காமற் போகலாம். ஆனல், வணிக நிறுவனமே அவ்வகையான செலவினங்கட்கு அச்சடித்த சான்றுச் சீட்டுக்களைப் (Printed Vouchers) பயன்படுத்து கின்றன. செலவினங்களை மேற்கொள்பவர் அதில் எழுதி கையொப்பமிட வேண்டும். உரியவர்கள், அச்செலவினங்களை ஏற்றதற்கு மேலொப்பம் (Counters Sign) செய்ய வேண்டும்.

தலைமைக்காசுக் கணக்கரிடமிருந்து, தொகை பெறும்போழ்து, ரொக்க ஏட்டில் காசோலையாயின் வங்கிக் கணக்கிலும், ரொக்க மாயின் ரொக்கக் கணக்கிலும் வரவு வைக்கப்படும். சில்லரை ரொக்க ஏட்டில் மீண்டும் நிகழக்கூடிய செலவினங்களுக்குத் தனித்

தனிப் பத்திகள் ஒதுக்கி அவற்றில் பதிந்து வரின் பயன் மிகவும் விளையும். வாரம் ஒரு முறையோ, திங்களொரு முறையோ-வழக்கத் திற்கேற்ப சில்லறை ரொக்க ஏட்டை இருப்புக்கட்டும்போழ்து, பல் வகையாய்ப் பகுக்கப்பட்ட செலவினங்கள் ஒவ்வொன்றையும் தனித்தனியே கூட்டின், ஒவ்வொரு செலவினத்திற்கும் ஆன செலவு எவ்வளவு என்பதைக் கண்டவுடன் தெரிந்து கொள்ள முடியும். இவ் வகை ரொக்க ஏடு பாகுபடுத்தப்பட்ட சில்லறை ரொக்க ஏடு (Analytica Petty Cash Book) எனப்படும்.

எடுத்தெழுது முறை

ரொக்கம் அல்லது காசோலை பெறும்போழ்து, சில்லறை ரொக்கக் கணக்கில் பற்றும், ரொக்கம் அல்லது வங்கிக் கணக்கில் வரவும் வைக்கப்படுகிறது. பின்னர், கால இறுதியில் ஒவ்வொரு செலவினப் பத்தியின் கூட்டல் தொகையை அந்தந்த செலவினக் கணக்கில் பற்றும் சில்லறை ரொக்கக் கணக்கில் மொத்தத் தொகைக்கு வரவும் வைத்து ஒரு குறிப்பேட்டுப் பதிவு செய்தால் போதுமானது. சில்லறை ரொக்கக் கணக்கு காட்டும் இருப்பு இப்பொழுது சில்லறைக் காசுக் கணக்கர் கையில் இருக்க வேண்டும் என்பது புலனாகும்.

முன்பண மீட்புமுறை (Imprest System)

சில்லறை ரொக்க ஏட்டை முன்பண மீட்பு முறையில் வைத்திருப்பதே சாலவும் சிறந்தது. குறிப்பிட்ட காலத்திற்கு ஆகுஞ் சில்லறைச் செலவுகளை மதிப்பிட்டு அதாவது, ஒரு திங்கள் ஒரு வாரம் அல்லது 15 நாட்களுக்கு ஆகுஞ் செலவை மதிப் பிட்டு அத் தொகையைச் சில்லறைக் காசுக்கணக்கரிடம் முன் பணமாகக் கொடுப்பர். எடுத்துக்காட்டாக, ஒரு திங்கட்கு ரூ. 100 இம்முறையில் கொடுப்பதாகக் கொள்வோம். முன் விளக்கிய வாறு செலவுகளை மேற்கொண்டு பதிந்து வரும் சில்லறைக் காசுக் கணக்கர் அத்திங்கள் இறுதியில் இருப்புக்கட்டித் தலைமைக்காசுக் கணக்கரிடம் காண்பிப்பார். ரூ. 92 அவர் செலவழித்திருப்பின், அவர் கையில் ரூ. 8 இருக்க வேண்டும். இப்பொழுது தலைமைக் காசுக் கணக்கர் அவர் செலவழித்தத் தொகைக்குக் காசோலை ஒன்று தருவார். இவ்வெடுத்துக் காட்டின்படி ரூ. 92 அவர்க்கு இப்பொழுது தரப்படும். இதனால் அடுத்த திங்கள் முதல் நாள் அவர் கையில் ரூ. 100 இருக்கும். இவ்வாறு ஒவ்வொரு திங்களும் செலவழித்த தொகை தரப்படுவதால் முதன்முதலில் முன் பணமாகக் கொடுக்கப்பட்ட அதே தொகையை வைத்து ஒவ்வொரு திங்களும் நடவடிக்கைகளைத் தொடங்க முடிகிறது. இம் முறையை முன் பண மீட்புமுறை என்கிறோம்.

பயன்கள்

1. ரொக்க ஏட்டில் முக்கியமான பதிவுகளே காணப்படும். நாள்தோறும் நிகழக்கூடிய எண்ணற்ற சிறுசிறு செலவுகள் அதில் பதியப் பெறுது, சில்லரை ரொக்க ஏட்டில் பதியப்படுவதால் ரொக்க ஏடு சிறந்த முறையில் வைத்திருக்கப்படுகிறது.

2. சில்லரைக் காசுக் கணக்கர் அவ்வப்பொழுது தலைமைக் காசுக் கணக்கரிடம் சில்லரை ரொக்க ஏட்டினைக் காட்டிப் பணம் பெற வேண்டியுள்ளது. இதனால் தவறுகள் நிகழாமல் அவர் கண் காணித்துக் கொள்வார்.

3. சில்லரை ரொக்க ஏட்டில் பிழைகள் ஏதும் காணப்படினும் தலைமைக் காசுக் கணக்கர் அதனைக் கண்ணுறும் போழ்து, பிழைகளைத் திருத்திக் கொள்ளும் வாய்ப்பு ஏற்படுகிறது.

4. இம்முறையிலும், செலவினங்கள் பாகுபடுத்தப்பட்டுப் பதியப் பெறுகின்றன. ஒவ்வொரு வாரத்தில் அல்லது திங்கள் இறுதியிலும் செலவினங்கள் ஒவ்வொன்றின் மொத்தத் தொகையே பெயரளவுக் கணக்குகட்கு எடுத்துச் செல்லப்படுவதால், எடுத்தெழுதுவது மிகவும் எளிதாகின்றது. கடும் உழைப்பு இதனால் தவிர்க்கப் படுகிறது.

5. தலைமைக் காசுக் கணக்கரின் சுமை ஓரளவு குறைகிறது. இதனால் பெருந் தொகைகளைப் பெறுவதிலும் தருவதிலும் ஆழ்ந்த கவனத்தைச் செலுத்த அவரால் இயலும்.

சில்லரை ரொக்க ஏடு அடுத்த பக்கத்தில் (66) கண்டவாறு கோடுகளிடப் பட்டிருக்கும்.

1. முதல் பத்தி 'ரொக்கம் பெற்றது' ஆகும். அதாவது தலைமைக் காசுக் கணக்கரிடம் ரொக்கமோ, காசோலையோ பெறும் பொழுதுதான் இங்கெழுதப்படும். இதனால்தான் சில்லரை ரொக்க ஏட்டின் பற்றுப் பகுதியில் இப் பத்தி மட்டிலுமே உள்ளது. நாள், விவரம்—இப் பத்திகள் பற்று வரவுப் பகுதிகட்குப் பொதுவாக இருக்கும் வரையில் கோடுகளிடப்பட்டுள்ளன.

2. ரொ. ப. எ. (C. B. F.) ; 'ரொக்க ஏட்டுப் பக்க எண்' என்பதன் சுருக்கம். தலைமைக் காசுக் கணக்கரிடம் பணம் பெறும் பொழுது, ரொக்க ஏட்டில் வரவு வைக்கப்படும் என்கிறோம். எப் பக்கத்தில் ரொக்க ஏட்டில் பதிவாகியுள்ளது என்பதை இவண் குறிக்க வேண்டும்.

3. நாள் : நடவடிக்கைகள் நிகழும் நாளைக் குறிப்பிடுகிறோம்.

4. விவரம்: இங்குக் கணக்குகளின் பெயரைமட்டும் குறிப் பிடாது, சிறிது விளக்கமாகவே — எதனால் செலவழிந்தது என்பதை எழுதுகிறோம்.

முதலில் ரொக்கம் பெற்றதை ரொக்கம் என்றோ வங்கி என்றோ குறிக்கிறோம். பெற்ற தொகை பற்றுப்பகுதியில் குறிக்கப்படுகிறது. பிற செலவினங்களின் தொகைகள் வரவுப் பகுதியில் பதியப் படுகின்றன.

5. சா. சீ. எ. (V. N) சான்றுச் சீட்டு எண். செலவு மேற் கொள்ளும் போழ்தெல்லாம் சான்றுச் சீட்டுப் பெறுதல்வேண்டும் அல்லவா? அதற்கு நாம் வரிசை எண் குறிக்கிறோம். அதனை இங்குக் குறிப்பிட வேண்டும்.

6. மொத்தம் செலவழித்தது. (Total amount spent): விவரப்பத்தியில் எழுதப்படும் செலவினங்கட்கு எதிரில் இப் பத்தியின்கீழ் செலவழித்த தொகை குறிக்கப்படுகிறது. இதன் மொத்தத் தொகையைக் கூட்டின் ஒரு திங்களில் செல வழித்த மொத்தத் தொகை கிடைக்கும்.

7. பாகுபடுத்தப்பட்ட செலவினங்கள்: அஞ்சலும் தந்தியும், எழுது பொருள், சுமைகூலி, போக்கு வரத்துச் செலவு போன்ற மீண்டும் மீண்டும் நிகழக் கூடிய செலவினங்கட்குத் தனித்தனிப் பத்திகளிடுகிறோம். 'பொதுச்செலவு' என்ற பத்தியில் பகுக்கப் படாத செலவினங்களைக் குறிக்கிறோம். மொத்தம் செலவழித்த தொகைப் பத்தியில் தொகையை எழுதிய பிறகு, அது எச் செல வினத்திற்குரியதோ அப் பத்திக்கு எடுத்துச் செல்லப்படுகிறது. எடுத்துக்காட்டாக, அஞ்சல் தலைகள் வாங்கியது என்ற விவரத்தை முதலில் விவரப்பத்தியில் குறிப்பிட்டு அத்தொகையை மொத்தம் செலவழித்த தொகைப் பத்தியில் அதே வரியில் குறிக்கப்படு கிறது. பின்னர் அதே வரியில் அஞ்சல் செலவுப் பத்தியின்கீழ் மீண்டும் அத் தொகை எழுதப்படுகிறது.

திங்கள் முடிவில் பலவகைச் செலவினப் பத்திகளும் தனித் தனியே கூட்டப்படும். இப்பொழுது ஒவ்வொரு வகையிலும் எவ்வளவு செலவு ஆகியிருக்கிறது என்பதை உணர்கிறோம். செல வினங்கள் இவ்வாறு பாகுபடுத்தப்படுகின்றன.

இதனை இருப்புக்கட்டும் முறை கீழே கொடுக்கப்பட்ட எடுத்துக்காட்டில் காட்டப்பட்டுள்ளது.

எடுத்துக்காட்டு 8:

கீழே கொடுக்கப்பட்ட நடவடிக்கைகளிலிருந்து செழியனின் முன்பண மீட்பு முறையில் வைத்திருக்கும் பாகுபடுத்தப்பட்ட சில்லரை ரொக்க எட்டில் பதிக.

| 1971 | | | | ரூ |
|---|---|---|---|---|
| சூன் | 1 | சில்லரைக் காசுக் கணக்கருக்குக் கொடுத்த காசோலை | ... | 100 |

சூன் திங்களில் அவர் செலவழித்த விவரம்:-

| | | | |
|---|---|---|---|
| 3 | அஞ்சல் தலைகளும் உறைகளும் | ... | 7 50 |
| | பேனா, பென்சில் வாங்கியது | ... | 10 00 |
| 4 | வண்டிச் சத்தம் | ... | 2 20 |
| 5 | வாடகைக்கார் கட்டணம் | ... | 4 50 |
| | வாடிக்கையாளர்கட்குக் கொடுத்த தேநீர்ச் செலவு | ... | 3 50 |
| 19 | தந்தி கொடுத்தது | ... | 2 30 |
| 11 | பஸ் கட்டணம் | ... | 1 30 |
| 12 | சுமை கூலி | ... | 0 75 |
| 14 | குண்டூசி, கொக்கிகள் (pins and clips) | ... | 4 00 |
| 17 | நாளிதழ், வார இதழ்கட்குச் செலுத்தியது | ... | 8 [illegible] |
| 24 | சேரனுக்குக் கொடுத்தது | ... | 15 50 |
| 25 | பதிவஞ்சலில் அனுப்பியது | ... | 1 50 |
| 27 | இரசீது ஏடு அச்சடித்தது | ... | 20 00 |
| 29 | அலுவலகத்தைச் சுத்தப்படுத்தியது | ... | 2 00 |
| 30 | போக்கு வரத்துச் செலவு | ... | 3 00 |

வண்ட:
ப

செழியனின் பாகுபடுத்தப்பட்ட சில்லரை ரொக்க ஏடு.

வ

| பெறும் தொகை ரூ. | கா | ரொ. ப. எ. | நாள் | விவரம் | சா. சீ. எ. | மொத்தம் செலவழித்தது ரூ. | கா | பாகுபடுத்தப்பட்ட செலவினங்கள்: அஞ்சலும் தந்தியும் ரூ. | கா | சுமை கூலி ரூ. | கா | போக்குவரத்து ரூ. | கா | அலுவலகச் செலவு ரூ. | கா | அச்சுக் கூலியும் எழுது பொருளும் ரூ. | கா | பே. ப. எ. | பேரேட்டுக் க/கு ரூ. | கா |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | 1971 | | | | | | | | | | | | | | | | | |
| 100 | — | | சூன் 1 | வங்கி-காசோலை பெற்றது | | | | | | | | | | | | | | | | |
| | | | 3 | அஞ்சல் தலைகளும் உறைகளும் | | 7 | 50 | 7 | 50 | | | | | | | | | | | |
| | | | ,, | பேனா, பென்சில் | | 10 | | | | | | | | | | 10 | | | | |
| | | | 4 | வண்டிச் சத்தம் | | 2 | 20 | | | 2 | 20 | | | | | | | | | |
| | | | 5 | வாடகைக்கார் கட்டணம் | | 4 | 50 | | | | | 4 | 50 | | | | | | | |
| | | | ,, | வாடிக்கையாளர்-தேநீர்ச் செலவு | | 3 | 50 | | | | | | | 3 | 50 | | | | | |
| | | | 10 | தந்தி | | 2 | 30 | 2 | 30 | | | | | | | | | | | |
| | | | 11 | பஸ் கட்டணம் | | 1 | 30 | | | | | 1 | 30 | | | | | | | |
| | | | 12 | சுமை கூலி | | 0 | 75 | | | 0 | 75 | | | | | | | | | |
| | | | 14 | குண்டூசி, கொக்கிகள் | | 4 | | | | | | | | | | 4 | | | | |
| | | | 17 | நாளிதழ், வார இதழ் | | 8 | | | | | | | | 8 | | | | | | |
| | | | 24 | சேரன் | | 15 | | | | | | | | | | | | | 15 | |
| | | | 25 | பதிவஞ்சல் | | 1 | 50 | 1 | 50 | | | | | | | | | | | |
| | | | 27 | இரசீது ஏடு அச்சடித்தது | | 20 | | | | | | | | | | 20 | | | | |
| | | | 29 | அலுவலகம் சுத்தப்படுத்த | | 2 | | | | | | | | 2 | | | | | | |
| | | | 30 | போக்குவரத்து செலவு | | 3 | | | | | | 3 | | | | | | | | |
| | | | | | | 85 | 55 | 11 | 30 | 2 | 95 | 8 | 80 | 13 | 50 | 34 | | | 15 | |
| | | | ,, | இருப்பு கீ/இ | | 14 | 45 | | | | | | | | | | | | | |
| 100 | — | | | | | 100 | — | | | | | | | | | | | | | |
| 14 | 45 | | சூலை 1 | இருப்பு கீ/கொ | | | | | | | | | | | | | | | | |
| 85 | 55 | | ,, | வங்கி-காசோலை பெற்றது | | | | | | | | | | | | | | | | |

## வினாக்கள்

1. பல்வகைத் துணையேடுகள் யாவை? அவற்றால் விளையும் பயன்களை விவரி.
2. பலவகை ரொக்க ஏடுகளையும் விவரித்து கூறுக.
3. சில்லரை ரொக்க ஏடு என்றால் என்ன? அத்தகைய ஏடு வைத்திருப்பதின் நோக்கம் யாது?
4. முன்பண மீட்பு முறையில் வைக்கப்படும் சில்லரை ரொக்க ஏட்டை விவரி. அதனாலுறும் பயன்களைக் கூறுக.

## பயிற்சி

1. கீழ்க் கொடுக்கப்பட்ட நடவடிக்கைகளை மறைமலையின் ரொக்கம், தள்ளுபடி பத்திகளுடைய ரொக்க ஏட்டில் பதிந்து இருப்புக் கட்டுக. வங்கிக் கணக்கையும் தயாரிக்க.

| 1971 | | | | ரூ |
|---|---|---|---|---|
| சன | 1 | இருப்புகள்: வங்கி | ... | 2,761 |
| | | ரொக்கம் | ... | 902 |
| | | ரொக்க விற்பனை | ... | 540 |
| | 2 | படியெடுக்கும் பொறி (Duplicator) காசோலை விடுத்து வாங்கியது | ... | 2,000 |
| | 5 | மணிவண்ணனிடம் ரூ. 980 பெற்றுக் கொண்டு தீர்த்த கணக்கு | ... | 1,000 |
| | 6 | வட்டி பெற்றது | ... | 125 |
| | 7 | வங்கியிற் செலுத்தியது | ... | 1,500 |
| | | ரூ 451 ரொக்கம் கொடுத்தும் ரூ. 1200 க்குக் காசோலை விடுத்தும் சரக்கு வாங்கியது. | | |
| | 10 | மனைத்துணைப் பொருள் விற்றதில் பெற்ற காசோலை | ... | 750 |
| | | (காசோலை உடனே வங்கிக் கனுக்கப்பட்டது.) | | |
| | 11 | மணிவாசகத்திடம் காசோலை மூலம் பெற்றது. | ... | 490 |
| | | அளித்த தள்ளுபடி | ... | 10 |

| | | | ரூ |
|---|---|---|---|
| 12 | வங்கியிலிருந்து எடுத்தது | ... | 700 |
| 18 | ஊதியங் கொடுத்தது | ... | 1,250 |
| | மணிவாசகத்திடம் பெற்ற காசோலை வங்கிக் கனுப்பப்பட்டது | ... | 50 |
| 25 | மதிவாணனுக்குக் கொடுத்த கழிவு | ... | 75 |
| 26 | மாரிமுத்துவிடம் பெற்றது | ... | 190 |
| | அளித்த தள்ளுபடி | ... | 10 |
| 30 | மணிவாசகத்திடம் பெற்ற காசோலைக்குப் பணமறுக்கப் பட்டதாக வங்கி அறிவித்துக் காசோலையைத் திருப்பி விட்டது. | | |

(2) மேலே கொடுக்கப்பட்ட நடவடிக்கைகளை முப் பத்தி ரொக்க ஏட்டில் பதிந்து இருப்புக் கட்டுக.

(3) 1-7-1971ல் திரு. வி. கலியாணத்தின் கையில் ரூ. 111-ம் வங்கியில் ரூ 1,111-ம் இருந்தன. அத்திங்களுக்கான நடவடிக்கைகள் கீழ்க் கொடுக்கப்பட்டுள்ளன. அவற்றை ரொக்கம், வங்கி, தள்ளுபடி பத்திகளுள்ள ரொக்க ஏட்டில் பதிந்து இருப்புக் கட்டுக.

| ஜூலை. | | | ரூ |
|---|---|---|---|
| 2 | கொள்முதல் | ... | 200 |
| 2 | ரூ. 500 வங்கியிலிருந்து எடுத்து ரூ. 100 சில்லரைக் காசுக் கணக்கருக்கும் ரூ. 400 விளம்பரத்துக்கும் கொடுத்தது. | | |
| 8 | கனகனிடம் சரக்கு விற்றுப் பெற்ற ரொக்கம் ரூ. 200, காசோலை ரூ. 300. | | |
| 9 | விசயனிடம் வாங்கிய சரக்குக்குக் கொடுத்த காசோலை | ... | 250 |
| 9 | கனகனிடம் பெற்ற காசோலை ரூ. 300ம் வங்கிக்கனுப்பப்பட்டது | | |
| 10 | விற்பனையில் பெற்ற காசோலை (உடனே வங்கியிற் செலுத்தப்பட்டது) | .. | 1,000 |

| ஜூலை | | | ரூ |
|---|---|---|---|
| 12 | கபிலனுக்குக் கொடுத்த காசோலை | ... | 700 |
| | பெற்ற தள்ளுபடி | ... | 25 |
| | விளம்பரம் | ... | 519 |
| 18 | காளப்பனிடமிருந்து பணவாணை (M.O.) மூலம் பெற்ற வட்டி | ... | 50 |
| 19 | வங்கியிற் செலுத்தியது | ... | 200 |
| 20 | கன்னியப்பன் வங்கியில் நேரடியாகக் கட்டியது | ... | 150 |
| 21 | கண்ணப்பனிடம் பெற்ற காசோலை | ... | 886 |
| | அது உடனே வங்கிக்கனுப்பப்பட்டது அவர்க்களித்த தள்ளுபடி | ... | 14 |
| 25 | பங்குகள் வங்கி மூலம் விற்றது | ... | 900 |
| | வங்கிக் கட்டணம் | ... | 25 |
| 26 | கட்டி முத்துக்குக் கொடுத்தக் கழிவு | ... | 100 |
| 27 | காளிமுத்துவிடம் பெற்ற கடன் | ... | 1,000 |
| 28 | வங்கியிலிருந்து ரூ. 1,000 எடுத்து மேற் கொண்ட செலவுகள்: | | |
| | சைக்கிள் வாங்கியது ரூ. 500 | | |
| | விற்பனை வரி 120 | | |
| | சில்லறைச் செலவுகள் 50 | | |
| 30 | நகர் மன்ற வரி காசோலை மூலம் கட்டியது | ... | 150 |
| | உரிமையாளர் வி. கல்யாணம் தன் வீட்டுச் செலவுக்குக் கொடுத்தது | ... | 300 |
| 31 | விற்பனை | ... | 150 |

(4) மேலே கொடுக்கப்பட்ட நடவடிக்கைகளைத் திரு. வி. கலியாணத்தின் இரு பத்தியுள்ள ரொக்க ஏட்டில் (ரொக்கம், தள்ளுபடி) பதிக. பேரேட்டில் உள்ள வங்கிக் கணக்கையும் தயாரிக்க.

(5) கவிமணியின் முப்பத்தி ரொக்க ஏட்டில் கீழே கொடுக்கப் பட்ட நடவடிக்கைகளைப் பதிந்து இருப்புக் கட்டுக.

| 1971 | | | ரூ |
|---|---|---|---|
| ஆகஸ்டு 1 | இருப்புகள் ; வங்கி | ... | 2,222 |
| | ரொக்கம் | ... | 222 |
| 1 | ரொக்க விற்பனை | ... | 1,028 |
| 3 | கருணாகரனிடம் பெற்ற காசோலை | ... | 980 |
| | அவர்க்களித்த தள்ளுபடி | ... | 20 |
| ,, | ரூ. 200 ரொக்கங் கொடுத்தும் ரூ. 300க்குக் காசோலை விடுத்தும் வாங்கிய சரக்கு. | | |
| 4 | கருணாகரனிடம் பெற்ற காசோலை வங்கிக் கனுப்பப் பட்டது. | | |
| 5 | கலைமணிக்குக் காசோலை ரூ. 250 விடுத்துத் தீர்த்துக் கொண்ட ரூ. | ... | 260 |
| 6 | மனைத்துணைப் பொருள் மணி அன்கோவில் காசோலை விடுத்து வாங்கியது | ... | 750 |
| 7 | கவிமணி தன் ஆயுள் காப்பீட்டுக் கட்டணத்திற்கு விடுத்த காசோலை | ... | 150 |
| 8 | வீரமணியிடம் சரக்கு விற்றதில் பெற்றவை: ரொக்கம் ரூ. 150 காசோலை ரூ. 350 காசோலை உடனே வங்கிக் கனுப்பட்டது. | | |
| 12 | சிவமணிக்கு வாடகை பணவாணை மூலம் செலுத்தியது | ... | 100 |
| ,, | பணவாணைக் கழிவு (M. O. Commission.) | ... | 2 |
| 14 | எந்திரத்தை ஆலையில் நிறுவக் கொடுத்த கூலி (Installation Expenses.) | ... | 200 |
| 17 | அன்புமணியிடம் ரூ. 240 கொடுத்துப் பெற்ற தள்ளுபடி | ... | 10 |

| | | | ரூ |
|---|---|---|---|
| 22 | வருமான வரி காசோலை மூலம் செலுத்தியது | ... | 200 |
| 24 | வீரமணியிடம் பெற்ற காசோலைக்குப் பண மறுக்கப் பட்டதாக வங்கி திருப்பியனுப்பியது. | | |
| 25 | வாங்கிய சரக்கைக் கொண்டு வரக் கொடுத்த லாரிக் கட்டணம் | ... | 25 |
| 28 | பங்குகளை விற்றது | ... | 500 |
| | காசோலை விடுத்து அரசினர் கடன் பத்திரங்கள் வாங்கியது | ... | 500 |
| | பேரேடுகள், இரசீது ஏடுகள் முதலியவற்றைத் தயாரிக்கக் கொடுத்த அச்சுக் கூலி | ... | 250 |
| 29 | விற்பனை வரி காசோலை மூலம் செலுத்தியது | ... | 219 |
| | அறிவுமணியிடம் காசோலை பெற்றது | ... | 2,150 |
| | அவர்களித்த தள்ளுபடி | ... | 50 |
| 30 | வீட்டைப் பழுது பார்ப்பதற்குக் கவிமணி எடுத்துக் கொண்டது | ... | 200 |
| | நூறு ரூபாய் நோட்டு ஒன்று கொடுத்துச் சில்லறை பெற்றுக் கொண்டது. | | |
| 31 | அறிவுமணியிடம் பெற்ற காசோலையும் ரூ. 350ம் வங்கியிற் செலுத்தப்பட்டது. | | |

(6) கருணாகரனின் ரொக்கம், தள்ளுபடி, வங்கிப் பத்திகளுடைய ரொக்க ஏட்டில் கீழ்க் கொடுக்கப்பட்ட நடவடிக்கையைப் பதிந்து இருப்புக் கட்டுக.

| 1971 | | | | ரூ |
|---|---|---|---|---|
| செப் | 1 | கையில் உள்ள ரொக்கம் | ... | 333 |
| | | வங்கிமேல் வரைப் பற்று. (Bank Overtraft.) | ... | 3,333 |
| | 4 | சில்லரைக் காசுக் கணக்கருக்குக் கொடுத்த காசோலை | ... | 100 |
| | 6 | கருணானந்தத்திடம் ரூ. 1,000 மதிப்புள்ள சரக்கை 10% வியாபாரத் தள்ளுபடியில் காசோலை விடுத்து வாங்கியது | | |

| | | | ரூ |
|---|---|---|---|
| 7 | விற்பனையில் பெற்றது : ரொக்கம் | ... | 150 |
| | காசோலை | ... | 300 |
| 9 | கருணாநந்தம் வங்கியில் நேரடியாகக் கட்டியது | ... | 200 |
| | அவர்க்களித்த தள்ளுபடி | ... | 10 |
| 10 | முதலீட்டில் பெற்ற வட்டி | ... | 75 |
| 11 | பல்வகைச் செலவு | ... | 100 |
| 15 | கருணாநிதியிடம் பெற்ற கடன் வங்கியில் கட்டியது | ... | 2,000 |
| 16 | ரசீது ஏடுகள் அச்சுக் கூலி (காசோலை கொடுத்தது) | | 200 |
| 17 | வங்கியிலிருந்து எடுத்தது | ... | 150 |
| 21 | இலாப ஈவு காசோலை மூலம் பெற்றது | ... | 50 |
| | கருணாமூர்த்தியிடம் ரூ. 490க்குக் காசோலை விடுத்துப் பெற்ற தள்ளுபடி | ... | 10 |
| | வாடகைக்கென கருணாநாதனிடம் பெற்ற காசோலை | ... | 255 |
| 22 | உள் சுமை கூலி | ... | 20 |
| | கருணாநாதனிடம் பெற்ற காசோலையும் இலாப ஈவில் பெற்ற காசோலையும் வங்கிக் கனுப்பப் பட்டன. | | |
| 23 | உரிமையாளர் கருணாகரன் தன் வீட்டைப் பழுது பார்க்க வங்கியிலிருந்து எடுத்துக் கொண்டது | ... | 1,123 |
| 24 | பழைய எந்திரம் ஒன்றை ரூ. 7,500 விற்றதில் பெற்ற ரொக்கத்துடன் கையில் இருந்த ரொக்கத்தையும் சேர்த்து வங்கியில் கட்டியது | ... | 7,750 |
| 25 | கருணாமூர்த்திக்குக் கொடுத்த காசோலை 1972 என்று தவருக நாளிடப்பட்டிருந்தால் திரும்பி வந்து விட்டது | | |
| 26 | நாதமுனியிடம் பண விடை மூலம் பெற்றது | ... | 95 |
| | அவர்களித்த தள்ளுபடி | ... | 5 |

| | | ரூ |
|---|---|---|
| 27 | முனியப்பனுக்குக் கொடுத்த கழிவு ... | 120 |
| 28 | வராக் கடன் என முன்னர் நீக்கி விட்ட ரூ. 111ம் அப்பாசாமியிடம்பெற்றது | |
| 29 | ரூ. 1,000 மதிப்புள்ள மேசை, நாற்காலி முதலியவற்றை 5% வி. தள்ளுபடியில் வாங்கியதற்குச் சாமிநாதனிடம் காசோலை விடுத்தது. | |

(7) பெறும் ரொக்கமனைத்தும் உடனடியாக வங்கிக்கனுப்பப் படுகிறதென்றும் பணஞ் செலுத்துவதற்குக் காசோலை விடப்படுகிறதென்றும் கொண்டு, கீழ்க்கண்ட நடவடிக் கைகளை, வங்கி, தள்ளுபடி, பத்திகளுடைய ரொக்க ஏட்டில் பதிக.

| 1971 | | | ரூ |
|---|---|---|---|
| அக் | 1 | வங்கியிருப்பு ... | 4,444 |
| | | ரூ. 300 வங்கியிலிருந்து எடுத்துக் கூலிக்கு ரூ. 200ம் சில்லரைக் காசுக் கணக்கருக்கு ரூ. 100ம் கொடுத்தது. | |
| | 2 | முதல் மீண்டும் போட்டது ... | 3,000 |
| | 3 | பன்னீர்செல்வத்திடம் பெற்றது ... | 980 |
| | | அவர்க்களித்த தள்ளுபடி ... | 20 |
| | 5 | செல்வமணிக்குக் காசோலை விடுத்தது ... | 545 |
| | | அவரிடம் பெற்ற தள்ளுபடி ... | 5 |
| | 10 | தட்டெழுத்துப் பொறி ரூ. 1,500 மதிப்புள்ளதை 3% வி. தள்ளுபடியில் வாங்கியது | |
| | 11 | மணிகுமாரிடம் கொடுத்த விளம்பரச் செலவு ... | 300 |
| | 12 | குமாரசாமியிடம் பெற்ற கழிவு ... | 100 |
| | 13 | எழுது பொருள் செலவு ... | 200 |
| | 15 | சாமுவேலிடம் கொடுத்தது ... | 195 |
| | | பெற்ற கழிவு ... | 5 |
| | 18 | வேலப்பனிடம் சைக்கிள் வாங்கியதற்குக் கொடுத்தது ... | 600 |

| | | | ரூ |
|---|---|---|---|
| 19 | அப்பாதுரையிடம் பெற்ற வட்டி | ... | 100 |
| 20 | துரையரசுக்குக் கொடுத்த தணிக்கைக் கட்டணம் | ... | 300 |
| 25 | சொந்த செலவிற்கு எடுத்தது | ... | 200 |
| 26 | விற்பனை | ... | 1,470 |
| 29 | சொந்த செலவிற்கு எடுத்துக் கொண்டது | ... | 244 |

(8) *1-5-71* அன்று சில்லறைக் காசுக் கணக்கர் தலைமைக் காசுக் கணக்கரிடம் பெற்ற காசோலை ரூ. 75. அவ்வாரத்திற்கான நடவடிக்கைகள் கீழே கொடுக்கப் பட்டுள்ளன. அவற்றைப் பாகுபடுத்தப்பட்ட சில்லறை ரொக்க ஏட்டில் பதிந்து இருப்புக் கட்டுக. தேவையான குறிப்பேட்டுப் பதிவையும் தருக.

| | | | ரூ |
|---|---|---|---|
| 1 | அஞ்சலுறைகளும் அஞ்சல் தலைகளும் வாங்கியது | ... | 7.50 |
| 2 | தாள், மை முதலியன வாங்கியது | ... | 3.50 |
| | பஸ் கட்டணம் | ... | 0.75 |
| 4 | வாடிக்கையாளர்கட்குக் கொடுத்த தேநீர்ச் செலவு | . | 2.00 |
| | கல்கத்தாவில் வாடிக்கையாளர்க்குக் கொடுத்த தந்திக் கட்டணம் | ... | 5.50 |
| 5 | அலுவலகத்திற்கு நாளிதழ்கள் வார இதழ்கள் வாங்கியது (Dailies and Weeklies) | ... | 12.75 |
| 6 | தட்டெழுத்து நாடா (Type writer ribbon) வாங்கியது | ... | 5.00 |
| | மேலாளரின் வாடகைக் கார் கட்டணம் | ... | 5.30 |
| | அலுவலகத்தில் மேசை, நாற்காலி முதலியவற்றை மாற்றிப் போடக் கொடுத்தக் கூலி | ... | 5.00 |
| | செல்வத்துக்குக் கொடுத்தது | ... | 15.00 |
| | பதிவஞ்சல் செலவு | ... | 1.50 |
| | அச்சுக் கூலி கொடுத்தது | ... | 4.54 |

9 கீழ்க்கண்ட நடவடிக்கைகளை முன் பண மீட்பு முறையில் பாகுபடுத்தப்பட்ட சில்லரைக் ரொக்க ஏட்டில் பதிந்து இருப்புக் கட்டுக

| 1971 | | | ரூ |
|---|---|---|---|
| நவ. 10 | இருப்பு | ... | 9.30 |
| ,, | முன் பண மீட்பு முறைக்குப் பெற்ற காசோலை | ... | 90.70 |
| 11 | பஸ் கட்டணம் | ... | 0.80 |
| 13 | அஞ்சல் உறைகள் வாங்கியது | ... | 3.20 |
| 14 | விலைப்பட்டியல் அச்சடிக்கக் கொடுத்தது | ... | 12.50 |
| ,, | நாளிதழ் ஒன்றில் விளம்பரத்துக்குக் கொடுத்தது | ... | 10.00 |
| 15 | வாடகைக் கார் கட்டணம் | ... | 5.30 |
| | மேலுறைகள் (Envelopes) வாங்கியது | ... | 2.25 |
| 16 | கந்தப்பனுக்குக் கொடுத்தது | ... | 25.00 |
| ,, | தந்தி செலவு | ... | 4.00 |
| ,, | பேனா, பென்சில் வாங்கியது | ... | 10.00 |
| ,, | விற்பனையர்க்குக் (Sales men) கொடுத்த வாடகை கட்டணம் | ... | 7.50 |
| 17 | இரயில் சத்தம் செலுத்தியது | ... | 4.20 |
| ,, | அலுவலகச் செலவு | ... | 4.98 |
| ,, | சுமை கூலி | ... | 2.20 |

(10) கீழ்க்கண்ட நடவடிக்கைகளை ரொக்கம் வங்கி, தள்ளுபடி பத்திகளுடைய ரொக்க ஏட்டில் பதிந்து இருப்புகளைக் காட்டவும்.

| | | | ரூ |
|---|---|---|---|
| மார்ச் 1 | வங்கி இருப்பு | | 2,000 |
| | சரக்கு காசோலை விடுத்து வாங்கியது | ... | 1,000 |
| | அலுவலக ரொக்கத்திற்குக் காசோலை விடுத்தது | ... | 50 |
| | எழுதுபொருள் ரொக்கத்திற்கு வாங்கியது | ... | 10 |
| 8 | 'C'-யிடமிருந்து காசோலை பெற்றது | ... | 125 |

| | | | ரூ |
|---|---|---|---|
| | தள்ளுபடி அளித்தது | ... | 3 |
| 9 | 'A'-யிடமிருந்து காசோலை பெற்றது | ... | 140 |
| | தள்ளுபடி அளித்தது | ... | 4 |
| 10 | சுமை கூலிக்கு ரொக்கம் கொடுத்தது | ... | 3 |
| 12 | 'D'யிடமிருந்து காசோலை பெற்றது | ... | 175 |
| | தள்ளுபடி அளித்தது | ... | 3 |
| 13 | சுமை கூலி கொடுத்தது | ... | 8 |
| | வாடகைக்கென 'G'யிடம் காசோலை விடுத்தது | ... | 180 |
| 15 | கொள் முதலுக்குக் கொடுத்தது—காசோலை | ... | 2,000 |
| | 'C'யிடமிருந்து காசோலை பெற்றது | ... | 90 |
| | தள்ளுபடி அளித்தது | ... | 2 |
| 20 | அஞ்சலுக்குக் கொடுத்தது ரொக்கம் | ... | 5 |
| | 'K'யிடம் காசோலை மூலம் செலுத்தியது | ... | 195 |
| | தள்ளுபடி அளிக்கப்பட்டது | ... | 5 |
| 22 | விற்பனையில் காசோலை பெற்றது | ... | 150 |
| 23 | அலுவலகத்தைச் சுத்தப்படுத்தக் கொடுத்தது | ... | 5 |
| 27 | கூலி கொடுத்தது ரொக்கம் | ... | 50 |
| 30 | ஊதியத்திற்குக் காசோலை விடுத்தது | ... | 200 |
| | அலுவலகப் பயனுக்குக் (Office use) காசோலை விடுத்தது | ... | 300 |

(CAIIB-May 1969)

(*11*) கீழ்க் கண்ட நடவடிக்கைகளை ரொக்கம் தள்ளுபடி பத்திகள் மட்டுமுள்ள ரொக்க ஏட்டில் பதிக.

| ***1969*** | | | ரூ |
|---|---|---|---|
| **சனவரி *1*** | ரொக்க இருப்பு | ... | 200 |
| | பங்கு விற்பனையில் பெற்ற ரொக்கம் | ... | 12,000 |
| 2 | வங்கியில் செலுத்தியது | ... | 10,000 |

| | | | ரூ |
|---|---|---|---|
| 3 | ஜூல்ஸுக்குக் காசோலை மூலம் செலுத்தியது | ... | 2,400 |
| | அவர் அளித்த தள்ளுபடி | ... | 100 |
| | ஹேலிடமிருந்து காசோலை பெற்றது | ... | 1,960 |
| | அவருக்கு அளித்த தள்ளுபடி | ... | 40 |
| 4 | கூலி ரொக்கமாகக் கொடுத்தது | ... | 500 |
| 10 | ஹேலிடமிருந்து பெற்ற காசோலையை வங்கியில் செலுத்தியது | ... | 1,960 |
| 16 | ரொக்கம் கொடுத்துச் சரக்கு வாங்கியது | ... | 1,200 |
| 18 | ரொக்கம் கொடுத்து எழுதுபொருள் வாங்கியது | ... | 300 |
| 19 | ஃபேல்ஸிடம் காசோலை கொடுத்தது | ... | 740 |
| | அவர் அளித்த தள்ளுபடி | ... | 50 |
| | வங்கியிலிருந்து எடுத்தது | ... | 640 |
| 20 | ரொக்க விற்பனையில் பெற்றது | ... | 340 |
| 24 | தன் சொந்த செலவுக்கு எடுத்துக் கொண்ட ரொக்கம் | ... | 400 |
| | இராபின்ஸிடமிருந்து பெற்றது | ... | 3,600 |
| | அவருக்கு அளித்த தள்ளுபடி | ... | 150 |
| 25 | வங்கியில் செலுத்தியது | ... | 400 |
| 26 | கொள் முதலுக்காகக் காசோலை விடுத்தது | ... | 400 |
| | சொந்த செலவுக்காகக் காசோலை விடுத்தது | ... | 200 |
| | ஊதியம் ரொக்க மூலம் கொடுத்தது | ... | 650 |
| 27 | ஸ்மித்திடம் காசோலை பெற்று வங்கியில் செலுத்தியது | ... | 800 |
| | அலுவலகத்திற்காகக் காசோலை விடுத்தது | ... | 600 |

குறிப்பு : வங்கி நடவடிக்கைகட்கு எதிர்ப் பதிவுகள் (Contra entries) தருக. (CAIIB-May 1970)

(12) 1957 ஏப்ரல் 1ஆம் நாள் சில்லரைக் காசு கணக்கரிடம் ரூ. 100 கொடுக்கப்பட்டது. அத் திங்களில் கீழ்க்கண்டவாறு செலவு செய்யப்பட்டது.

| | | | ரூ |
|---|---|---|---|
| ஏப்ரல் 2 | அஞ்சல் தலைகள் | ... | 10.00 |
| 2 | விற்ற சரக்கிற்கான சுமை கூலி | ... | 7.50 |
| 2 | எழுதுபொருள் வாங்கியது | ... | 5.54 |
| 5 | சோப்பு 5 வாங்கியது | ... | 3.96 |
| 7 | அலுவலக ஊழியர்க்காக ஒரு பவுண்டு தேயிலை | ... | 4.00 |
| 10 | பணியாட்களின் டிராம் கட்டணம் | ... | 0.36 |
| 15 | தந்தி | ... | 7.00 |
| 16 | சுருக்கு எழுத்து நோட்டு 2 | ... | 6.44 |
| 18 | மேலுறைகள் | ... | 8.00 |
| 19 | தட்டெழுத்து நாடா | ... | 3.00 |
| 20 | விற்ற சரக்கிற்கான சுமை கூலி | ... | 5.10 |
| 21 | அலுவலகத்திற்கு வாங்கிய 1 டசன் தூசு துடைப்பான் (Duster) | ... | 6.56 |
| 23 | நெடுந் தொலைபேசிக் கட்டணம் | ... | 8.00 |
| 25 | மைப்புட்டி | ... | 3.00 |
| 29 | அஞ்சல் தலைகள் | ... | 10.00 |

முன் பண மீட்பு முறையில் பாகுபடுத்தப்பட்ட பத்திகளிட்ட சில்லரை ரொக்க ஏட்டைத் தயாரிக்க. ஏப்ரல் 30-ல் கணக்கை முடிக்க. இருப்புக் கட்டி மே 1ஆம் நாள் சில்லரைக் காசு கணக்கர்க்குக் கொடுத்த முன் பண மீட்புக் காசோலை எவ்வாறு சில்லரை ரொக்க ஏட்டில் பதியப்படுகிறது என்பதைக் காட்டு.

(CAIIB-1958)

(13) 1962 மார்ச் 1ஆம் நாள் கீழ்க்கண்ட நடவடிக்கைகளைப் பத்திகளிட்ட சில்லரை ரொக்க ஏட்டில் முன் பண மீட்பு முறையில் பதிக.

| 1962 | | | ரூ |
|---|---|---|---|
| மார்ச் 1 | அஞ்சல் தலைகள் | ... | 50 |
| 5 | கூலி கொடுத்தது | ... | 30 |
| 6 | எழுதுபொருள் வாங்கியது | ... | 10 |

| | | | ரூ |
|---|---|---|---|
| 8 | விற்பனையர்க்குக் கொடுத்த பயணப்படி | ... | 130 |
| 10 | மேலுறைகளும் மடல் தாள்களும் (Letter heads) | ... | 30 |
| 12 | முகவரி அச்சடித்த செலவு | ... | 10 |
| 14 | கோக்கும் ஊசிகள் 1 பெட்டி | ... | 10 |
| 15 | மேலாளருக்குக் கொடுத்த வாடகைக் கார் கட்டணம் | ... | 2 |
| 15 | வாடிக்கையாளர்க்குக் கொடுத்த சிற்றுண்டி | ... | 18 |
| 16 | கடல் வழித் தந்தி (Cables) | ... | 30 |
| 17 | வண்டிச் சத்தம் | ... | 10 |
| 17 | இரயில் கட்டணம் | ... | 80 |
| 19 | செய்தித் தாள்களுக்கான தொகை | ... | 18 |
| 19 | மைட்புட்டி ஒன்று | ... | 2 |
| 22 | விளம்பரம்—'மாலைச் செய்தி' | ... | 150 |
| 23 | நில உரிமையாளர்க்குப் பதிவஞ்சலில் அறிக்கை அனுப்பியதும், சட்டக் கட்டணமுடம் | ... | 60 |
| 24 | மனைத்துணைப் பொருள் பழுது பார்த்தது | ... | 30 |
| 26 | மேலாளர் தில்லி செல்லக் கொடுத்த இரயில் கட்டணம் | ... | 230 |
| 27 | வருவாய்த் தலைகள் (Revenue Stamps) | ... | 15 |
| 28 | அஞ்சல் தலைகள் | ... | 35 |
| 31 | அஞ்சல் தலைகள் வாங்கியது | ... | 30 |

(CAIIB-1962)

**(14)** A அன் கோவின் பத்திகள் இட்ட சில்லரை ரொக்க ஏட்டில் கீழ்க்கண்ட நடவடிக்கைகளைப் பதிக. 1965 ஏப்ரல் முதல் நாள் ரூ. 100 முன் பண மீட்புப் பணத்துடன் காசுக் கணக்கர் திரு. A தொடங்கினார். திங்கள் இறுதியில் அவர் செல வழித்த தொகை மீண்டும் அவர்க்குத் தரப்படுகிறதென்று கொள்க.

| 1965 | | | ரூ |
|---|---|---|---|
| ஏப்ரல் 2 | வருவாய்த் தலைகள் | ... | 2.00 |
| 5 | சன்னல்களைத் துப்புரவு செய்தது | ... | 2.50 |
| 5 | அலுவலகத் துப்புரவு செய்வோரின் கூலி | ... | 10.00 |

| | | | ரூ |
|---|---|---|---|
| 6 | கிளிப் 2 பெட்டி | ... | 0.50 |
| 8 | அனுப்புகை எழுத்தர்க்குக் கொடுத்த வாடகைக் கார் கட்டணம் | ... | 12.50 |
| 10 | மேலுறைகள் ஒரு குரோஸ் | ... | 1.50 |
| 10 | மேலுறைகளில் முகவரி பொறித்தது | ... | 2.00 |
| 12 | இணை-ஊக்கு | ... | 0.35 |
| 13 | மேலாளர்க்குக் கொடுத்த வாடகைக் கார் கட்டணம் | ... | 1.25 |
| 15 | நெடுந் தொலை பேசிக் கட்டணம் | ... | 1.75 |
| 17 | தேயிலை 4 கட்டுகட்கான சுமை கூலி | ... | 4.00 |
| 18 | மை புட்டி ஒன்று | ... | 0.75 |
| 20 | J. P. அன் கோவிடம் கொடுத்தது | ... | 4.50 |
| 22 | 'இந்தியன் எக்ஸ்பிரசில்' கொடுத்த விளம்பரம் | ... | 11.40 |
| 26 | வாடிக்கையாளர்க்குப் பதிவஞ்சலில் அனுப்பிய அறிக்கை | ... | 0.25 |
| 29 | சாப்பாட்டு மேசையை மெருகிட்டது | ... | 1.50 |
| 30 | இந்தியாவில் 'ஈவினிங் நியூஸுக்கு'க் கொடுத்த விளம்பரம் | ... | 20.75 |
| 30 | கடன் வசூலிக்க மேலாளர் பூனு சென்றதின் இரயில் கட்டணம் | ... | 12.50 |

(CAIIB-Feb'66)

# 5. வங்கிக் கணக்குச் சரிக்கட்டும் பட்டி
## (Bank Reconciliation Statement)

அலுவலகத்தில் நிறையப் பணம் வைத்திருப்பதில் பல இடையூறுகள் ஏற்படலாம். அவற்றைக் களைந்து பல்வேறு பயன்களை அடைந்திட இற்றைக் காலங்களில் வங்கிகள் சிறந்த முறையில் பணிபுரிந்து வருகின்றன என்பதை நாம் அனைவரும் அறிவோம்.

பொதுமக்களிடமிருந்து பலவகை வைப்புக் கணக்குகளில் பணம் பெற்று, இவ்வாறு திரட்டிய தொகையை நிதி வறட்சியில் வாடும் வணிக, தொழில் நிறுவனங்கட்குக் கடன் அளிக்கும் பணியில் ஈடுபட்டவை வங்கிகளாகும். சேமிப்புக் கணக்குகள் வணிக நிறுவனங்கட்கு ஏற்றதல்ல. பணம் எடுக்கக் காசோலைகளைப் பயன்படுத்த முடியும் எனினும், வாரத்துக்கு இத்துணை முறைதான் எடுக்கலாம் அல்லது குறிப்பிட்ட தொகைக்குமேல் எடுக்க விரும்பின் முன்னறிவிப்பு (Notice) செய்ய வேண்டும் என்பன போன்ற தடைகள் உண்டு. தவணை வைப்புகளில் (Fixed Deposit) போடும் பணத்தைக் குறிப்பிட்ட காலக் கெடு வரும் வரை எடுக்க முடியாது. எனவே, வணிக, தொழில் நிறுவனங்கட்கு ஏற்றது நடப்புக் கணக்கே (current Account) ஆகும்.

நடப்புக் கணக்கைத் தொடங்கிட, வங்கிக்குத் தெரிந்தவர் யாராவது அறிமுகப்படுத்த வேண்டும். பணம், காசோலைகள் முதலியவற்றை வங்கியில் கட்டச் 'செலுத்துச் சீட்டுகள்' (paying-in-slips) பயன்படுத்தப்படுகின்றன. வங்கியிலிருந்து பணம் எடுக்கப் பயன்படுத்துவது காசோலை (cheque) எனப்படும். குறிப்பிட்ட தொகையைக் குறிப்பிட்டவர்க்குச் செலுத்துமாறு வாடிக்கையாளர் வங்கியிடம் கோரும் ஆணைப்பத்திரமே காசோலை

யாகும். வங்கியிலிருந்து ரொக்கம் பெற வேண்டியிருப்பினும், பிறர்க்குத் தொகை ஏதேனும் செலுத்த வேண்டியிருப்பினும் காசோலையில் இவ்விவரங்களைக் குறித்துக் கையெழுத்திட்டுக் கொடுத்திடின் போதும். நாம் யாருக்குக் கொடுத்தோமோ, அவர் நம் வங்கியில் அதைக் கொடுத்துப் பணம் பெற்றுக் கொள்வார்.

கணக்குத் தொடங்கும் போழ்தே வாடிக்கையாளர் தன் மாதிரிக் கையொப்பங்களை வங்கியிடம் தருகிறார். இவற்றுடன் காசோலையில் உள்ள கையெழுத்தை ஒப்பிட்டு, அது ஒத்திருந்தால் மட்டுமே, அக் காசோலைக்குரிய பணந்தரப்படும்.

காசோலைகளைப் பிறர்க்கு மேலெழுதி (Endorse) மாற்றித்தர முடியும். தகாதவர்கள் காசோலைகட்குரிய பணம் பெறுவதைத் தவிர்க்கக் காசோலைகளில் கீறலிடலாம் இரு இணை சாய்கோடுகளிட்டு அதனிடையில் 'அண்கோ' ('& co') என்பதை எழுதினும் எழுதாவிடினும் அது பொதுக்கீறல் (General crossing) எனப்படும். இவ்விரு கோடுகளிடையே வங்கியொன்றின் பெயரை எழுதின் அது சிறப்புக்கீறல் (special crossing) எனப்படும். கீறலிடப் பெற்ற காசோலைகட்குப் பணத்தை வங்கி கையில் தராது. வங்கிக் கணக்கில் போட்டே அதைப் பின்னர் வசூலித்துக் கொள்ள முடியும். சிறப்புக் கீறலிடப் பெற்ற காசோலையை அதில் குறிப்பிடப் பட்டுள்ள வங்கியில் கொடுத்தே வசூலித்துக் கொள்ள முடியும். இதனால் யார் கணக்கு மூலமாக ஒரு கீறலிடப்பட்ட காசோலை வசூலாகியுள்ளது என்பதை யறிந்து கொள்ள முடியும்.

விடுநரின் கையெழுத்து மாதிரிக் கையெழுத்தினின்றும் மாறியிருப்பினும், போதிய தொகை வங்கிக் கணக்கில் இல்லையெனினும், எழுத்தால் எழுதப்பட்ட தொகையும் எண்ணால் குறிப்பிடப் பட்டிருக்கும் தொகையும் காசோலையில் மாறுபட்டுக் காணப்படினும், பின் நாளிட்ட காசோலையாயினும் (post dated cheque) காசோலைக்குரிய பணத்தைப் பெறமுடியாது. இதனைக் 'காசோலைக்குப் பணமறுக்கப்பட்டது' (Dishonoured) என்கிறோம்.

மாதிரி-பல்வகைக் கீறல்கள் (crossings) பொதுக் கீறல் (General crossing) [அடுத்த பக்கம் (86)-பார்க்கவும்]

நாம் பிறரிடமிருந்து பெற வேண்டிய தொகைக்குப் பதிலாக காசோலை பெறலாம். அவற்றை நாமே அவ் வங்கிக்குச் சென்று பணம் பெறுவது இயலாமலிருக்கலாம். நாம் நமது வங்கிக்கு அதை அனுப்பிவிடின், அது வசூலித்து நமது கணக்கில் சேர்த்து விடும் காசோலைகள் மட்டுமன்றி, நமக்குச் சேரவேண்டிய வட்டி, வாடகை, ஓய்வூதியம் (pension) முதலியவற்றை வசூலிக்க

## மாதிரி-பல்வகைக் கீறல்கள் (Crossings)

பொதுக் கீறல் (General Crossings)

(1)

(2). அன் கோ

(3) மாற்றுத் தன்மை இல்லை. (Not Negotiable

(4) பெறுநர் க/கு மட்டும் (Account Payee only)

சிறப்புக் கீறல். (Special Crossings)

(1) கடனோர் வங்கி

(2). மாற்றுத் தன்மை இல்லை கடனோர் வங்கி

(3) கடனோர் வங்கி பெறுநர் க/கு மட்டும்

நாம் கோரினும், வங்கி அவ்வாறே வசூலித்து நமது கணக்கில் சேர்க்கும். அரசினர் கடன் பத்திரங்கள்மீது வட்டி பெற வேண்டியிருப்பினும், நாம் வைத்துள்ள பங்குகட்கான இலாப ஈவினை (Dividend) வசூலிக்க வேண்டியிருப்பினும், வங்கியிடம் அறிவித்தால் போதும். அவ்வாறே வாடகை, ஆயுள் காப்பீட்டுக் கட்டணத்தொகை போன்றவற்றை அவ்வப்பொழுது செலுத்த வேண்டியிருக்கலாம். இவை குறித்து நடைமுறை அறிவிப்பு (Standing Instructions) கொடுத்துவிடின் போதும். குறிப்பிட்ட நாள்களில் இச் செலவினங்களை வங்கி நம் பொருட்டுச் செலுத்தி, நம் கணக்கில் பற்றுவைத்து எடுத்துக்கொள்ளும் இப் பணிகளை முகவர் பணிகள் (Ageney Services) எனலாம். இவற்றிற்கு நாம் கழிவு (Commission) கொடுக்க வேண்டியிருக்கும். (நடப்புக் கணக்கின்மீது பெரிய வங்கிகள் பெரும்பாலும் வட்டி ஏதும் கொடுப்பதில்லையெனினும், சில வங்கிகள் மிகவும் குறைந்த அளவு வட்டியளிக்கின்றன.)

வங்கி பல வழிகளில் கடனளித்து நிதிப் பற்றுக் குறையைப் போக்குகிறது என்று கூறியிருக்கிறோம். அவற்றில் ஒரு வழி மேல் வரைப்பற்று (over draft) வழங்குதலாகும். சாதாரணமாக, நம் கணக்கில் பணம் இருக்கும் வரைதான் நாம் விடும் காசோலைகட்கு வங்கிபணந்தரும் என்றோம். ஆனல், மேல்வரைப்பற்று என்பது கணக்கில் இருக்கும் தொகை தீர்ந்த பின்னரும் நாம் விடும் காசோலைகட்கு வங்கி பணந் தருவதைக் குறிக்கும். நாம் போட்டதைவிட அதிகங் கொடுக்கப் படும் தொகை 'மேல்வரைப் பற்று' எனப்படும். வங்கி நமக்குக் கடன் கொடுப்பதற்கு இது ஒப்பாகும். இத்தொகைக்கு வட்டி நாம் செலுத்தியாக வேண்டும்.

இவ்வாறு பல்வகை வங்கி நடவடிக்கைகள் நிகழும். இவற்றை நாம் நம் ரொக்க ஏட்டில் வங்கிக் கணக்கில் (வங்கிப் பத்தியில்) பதிந்து வருகிறோம். குறிப்பிட்ட நாளில் வங்கியிருப்பை உணர்கிறோம். இது போன்று வங்கியும் இந் நடவடிக்கைகளை அதன் பேரேடுகளில் நம் கணக்கில் குறித்து வரும். வங்கி வைத்திருக்கும் நம் கணக்கின் நகலை எழுதி நமக்குத் தரும். இதைத்தான் வங்கிக் கணக்கு நகலேடு (Bank Pass Book) என்கிறோம். வங்கி நகலேட்டினை நம் ரொக்க ஏட்டில் உள்ள வங்கிப் பத்தியுடன் ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும். தவறிருப்பினும் நடவடிக்கைகள் பதிவாகாது விடப்பட்டிருப்பினும் வங்கிக்குணர்த்தலாம். எனவே, வங்கி நகலேடு என்பது வங்கி வைத்திருக்கும் நம் கணக்கின் நகல் என்பதையும் அதில் வங்கிதான் பதிவுகளைச் செய்யும் என்பதையும் நாம் உணர்ந்து கொள்ளுதல் நலம்

வங்கி நகலேட்டின் மாதிரி கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

| நாள் Date 1 | விவரம் (Particulars) 2 | எடுத்தல் (Withdrawals) 3 | செலுத்துதல் (Deposit) 4 | ப (அ) வ Dr. (or) Cr. 5 | இருப்பு (Balance) 6 |
|---|---|---|---|---|---|
| 1971 ஏப்ரல் | | | | | |
| 1 | ரொக்கம் | | 500 | வ | 500 |
| 4 | காசோலை எண் O/Q 045678 | 200 | | வ | 300 |
| | காசோலை வசூல் | | 1,400 | வ | 1,700 |
| 10 | காசோலை எண் O/Q 045680 | 750 | | வ | 950 |
| 15 | வங்கிக் கட்டணம் | 25 | | வ | 925 |
| 17 | ரொக்கம் | | 110 | வ | 1,035 |
| 30 | காசோலை O/Q 045679 | 26 | | வ | 1,009 |

நாம் வங்கியில் பணம் அல்லது காசோலை செலுத்தும்போழ்து 'செலுத்துதல்' பத்தியில் குறிக்கப்படும். காசோலை விடும்போழ்து 'எடுத்தல்' பத்தியில் குறிக்கப்படும். நடவடிக்கையைப் பதிந்த வுடனேயே இருப்புத் தெரிகிறது. அது பற்றிருப்பா அல்லது வரவிருப்பா என்பது ஐந்தாவது பத்தியில் எழுதப்படும் 'ப அல்லது வ' எனும் எழுத்து இதை உணர்த்தும் 'ப' என்றெழுதியிருப்பின் அது பற்றிருப்பு— மேல்வரைப் பற்றாகும். 'வ' என்றெழுதி யிருப்பின், நமது பணம் வங்கியில் உள்ள தென்பதை உணர்த்தும்

## வங்கிக் கணக்குச் சரிக்கட்டும் பட்டி

வங்கியில் உள்ள நம் இருப்பை ரொக்க ஏட்டையோ வங்கிக் கணக்கேட்டையோ கண்டுணர முடியும். எந்தக் குறிப்பிட்ட நாளிலும் ரொக்க ஏடு காட்டும் வங்கியிருப்பும் வங்கிக் கணக்கேடு காட்டும் வங்கியிருப்பும் ஒரே தொகையாகத் தானிருக்க வேண்டு மல்லவா? ஆயினும் பெரும்பாலும் அவ்வாறு இராது. வங்கி நகலேடு உணர்த்தும் வங்கியிருப்பும் ரொக்க ஏட்டின்படி உள்ள வங்கியிருப்பும் வெவ்வேறாக இருக்கும். கீழ்க்கண்ட சூழ்நிலைகள் இவ்வேறுபாட்டிற்குக் காரணங்களாக அமையலாம்,

1. நாம் பிறர்க்குக் காசோலைவிடுத்தவுடனே ரொக்க ஏட்டில் வரவு வைத்து விடுகிறோம். ஆனால் வங்கியோ நம்மிடம் காசோலை பெற்றவர் வங்கியிடத்தில் காசோலையைக் கொடுத்துப் பணம் பெற்ற பின்னரே நகலேட்டில் பதியும். நாம் காசோலை விடுத்த நாளுக்கும், வங்கி பணம் செலுத்திய நாளுக்கும் இடைவெளி இருப்பதால் இவ்விடைப்பட்ட நாள்களில் ரொக்க ஏட்டின்படி உள்ள வங்கியிருப்பு, நகலேட்டின்படி உள்ளதினின்றும் மாறு பட்டிருக்கும்.

2. பிறரிடமிருந்து நாம் பெறும் காசோலைகளை இவ்வாறே வங்கிக்கனுப்பிய உடனேயே ரொக்க ஏட்டில் வங்கிப் பத்தியில் பதிந்துவிடுகின்றோம். ஆனால், பெரும்பாலும் அவை வசூலான பின்னரே வங்கி தன் கணக்குகளில் பதியும். காசோலையை வங்கிக் கனுப்பிய நாளிலிருந்து அது வசூலாகி வங்கி தன் கணக்கில் பதியும் நாள்வரைரொக்க ஏடும் வங்கி நகலேடும் வெவ்வேறு இருப்புகளைக் காட்டும்.

3. வங்கி நம்பொருட்டு வாடகை, ஆயுள் காப்பீட்டுக் கட்டணத் தொகை போன்றவற்றைச் செலுத்தியிருக்கலாம். எனவே, இவை கணக்குகளில் பதியப்பட்டு நகலேட்டில் காணப் படும். ஆனால் வங்கி இதை அறிவித்த பிறகே அல்லது நகலேட் டைக் கண்ட பின்னரே இதை அறிகிறோம். பின்னரே இவற்றிற் கான பதிவுகளை ரொக்க ஏட்டில் நாம் செய்வோம்.

அவ்வாறே நாம் ஆணைப்படி நமக்குச் சேரவேண்டிய இலாப ஈவு, வட்டி, முதலியவற்றை வசூலித்து வங்கி நம் கணக்கில் சேர்த்திருக்கும். வங்கி நகலேட்டைக் கண்ட பின்னரே இதனை உணர்கிறோம். எனவே, இவை ரொக்க ஏட்டில் பதிவாகாக் கார ணத்தால், இரு இருப்புகளும் வேறுபட்டிருக்கின்றன. நமது நடப்புக் கணக்கின் பேரில் வங்கிவட்டி கொடுப்பினும் அல்லது மேல்வரைப்பற்று மீது வட்டி நாம் செலுத்தவேண்டியிருப்பினும், வங்கிதான் முதலில் தன் கணக்கேடுகளில் பதியும். நகலேட்டைப் பார்த்தே நாம் ரொக்க ஏட்டில் பதிவோம். இதுவும் இருப்பு களின் வேறுபாட்டுக்குக் காரணமாக இருக்கிறது.

பிறரிடமிருந்து நாம் காசோலைகளைப் பெற்றவுடன் வங்கிக் கனுப்ப எண்ணி ரொக்க ஏட்டில் பதிந்திருக்கலாம். ஆனால், அவற்றை வங்கிக் கனுப்பத் தவறிவிட்டால், ரொக்க ஏட்டிருப் புக்கும் வங்கி நகலேட்டிருப்புக்கும் வேறுபாடு இருக்கும்.

நம் வாடிக்கையாளர்கள் சிலர் நேரடியாக வங்கியில் நம் கணக்கில் பணஞ்செலுத்தியிருப்பின், உடனே வங்கி பதிந்து விடுகிறது. ஆனால் நாமோ நகலேட்டைப் பார்த்த பின்னரே ரொக்க

ஏட்டில் பதிவோம். இந் நிகழ்ச்சியும் இடைப்பட்ட நாள்களில் இருப்புகளின் வேறுபாட்டுக்குக் காரணமாகும்.

மேற்கூறியவற்றிலிருந்து நாம் உணர்வது: ஒரு நடவடிக்கையை நாம் ரொக்க ஏட்டில், பதியும் நாளுக்கும், வங்கி தன் ஏடுகளில் பதியும் நாளுக்கும் கால இடைவெளி இருக்கும்போழ்து இவ்விடைப் பட்ட நாட்களில் இவ்விரண்டும் வெவ்வேறு வங்கியிருப்புகளைக் காட்டுகின்றன.

நாம் ரொக்கப்பத்தியில் எழுதவேண்டியதை வங்கிப் பத்தியிலோ அல்லது வங்கிப் பத்தியில் எழுத வேண்டியதை ரொக்கப்பத்தியிலோ மாற்றிப் பதியின் ரொக்க ஏடு தவறான இருப்பைக் காட்டும். இவ்வாறே வங்கி பிறர் கணக்கில் பதிய வேண்டியவற்றை நம் கணக்கில் தவறாக எழுதினும் வங்கி நகலேடு தவறான இருப்பைக் காட்டும். வங்கியோ, நாமோ தவறான தொகைகளைப் பதிந்து விடினும் வேறுபட்ட இருப்புகளே கிடைக்கும்,

நகலேடும் ரொக்க ஏடும் வெவ்வேறு இருப்புகளைக் காட்டினும் அவற்றை ஆய்ந்து அவை இரண்டும் சரியானவைதான் என அறிந்து கொள்ளமுடியும். வேற்றுமைக்குக் காரணமாயிக்கும் நடவடிக்கைகளை எழுதி வங்கிக் கணக்கைச் சரிபார்த்துக் கொள்ளும் பட்டியல் வங்கிக் கணக்குச் சரிக்கட்டும் பட்டி (Bank Reconciliation Statement) எனப்படுகிறது.

## வங்கிக் கணக்குச் சரிக்கட்டும் பட்டி தயார் செய்யும் முறை

ரொக்க ஏட்டினையும் வங்கி நகலேட்டினையும் எடுத்துக் கொண்டு ஒப்பிட வேண்டும். இவ்விரண்டிலும் காணப்படும் பதிவுகள் வேற்றுமைக்குக் காரணமாக இரா. ரொக்க ஏட்டில் பதிவாகி, வங்கி நகலேட்டில் எழுதப் பெறாப்பதிவுகளும், வங்கி நகலேட்டில் பதிவாகி ரொக்க ஏட்டில் எழுதப் பெறாப் பதிவுகளுந் தான் வேறுபட்டிருக்கும் இருப்புகட்குக் காரணமென்பதை உணர லாம். இந் நடவடிக்கைகளை எடுத்துக்கொண்டு சரிக்கட்டும் பட்டி தயார் செய்யவேண்டும்.

ரொக்க ஏட்டு வங்கியிருப்பையோ, வங்கி நகலேட் டிருப்பையோ ஆதாரமாகக் கொண்டு தொடங்க வேண்டும். எடுத்துக் காட்டாக, ரொக்க ஏட்டிருப்பிலிருந்து தயாரிப்பின் வேறுபாட்டுக்குக் காரணமாயுள்ள நடவடிக்கைகளை அவற்றின் தன்மைக் கேற்பக் கூட்டியோ, கழித்தோ, நகலேட்டிருப்பைக் காண வேண்டும்.

கீழே இம் முறை விவரிக்கப்பட்டுள்ளது.

வங்கி நகலேட்டின் படியுள்ள வங்கியிருப்பிலிருந்து தொடங்கு வோம்.

1. நாம் பெற்ற காசோலைகளை வங்கியில் செலுத்தியும் வங்கி நகலேட்டில் அவை பதியப் பெற வில்லையெனில், காசோலைகளை வங்கியில் செலுத்தும் போழ்து, பணங்கட்டுவது போன்றேயாத லால் வங்கிக் கணக்கில் பற்று வைத்து இருப்பைக் கூட்டியிருப் போம். ஆனால், வசூலான பிறகே வங்கி இதைப் பதியுமாதலால் வங்கி நகலேட்டின்படியுள்ள இருப்பு ரொக்க ஏட்டின் இருப்பை விடக் குறைவாக இருக்கும். அதிகமுள்ள ரொக்க ஏட்டிருப்பைக் காண, வங்கி நகலேட்டிருப்புடன் இத் தொகையைக் கூட்ட வேண்டும்.

2. வங்கிப் பத்தியில் பதிந்த பின்னரும் வங்கியில் காசோலை களைச் செலுத்தத் தவறினும் இதே போன்று செய்ய வேண்டும்.

3. நாம் விடுத்த காசோலைகட்கு வங்கியில் பணம் பெற வில்லையெனில்,

நாம் காசோலை விடுத்த அன்றே வங்கி கொடுத்ததாகக் கருதி, வங்கிப் பத்தியில் வரவு வைத்து இருப்பைக் குறைத்திருப் போம். ஆனால், இவற்றிற்கான தொகைகளை வங்கி இதுவரை கொடுக்காதலால் வங்கிக் கணக்கேடுகளில் இத் தொகைகள் குறைக் கப்பட்டிருக்க மாட்டா. எனவே, வங்கி நகலேட்டிருப்பு அதிக மிருக்கும். ரொக்க ஏட்டிருப்பைக் காண வேண்டுமாதலால் வங்கி நகலேட்டிருப்பிலிருந்து இத் தொகைகளைக் கழித்துவிடின் போதும்.

4. வங்கிக் கட்டணங்கள், நம்பொருட்டு வங்கி ஏற்றிருக்கும் செலவினங்கள் ரொக்க ஏட்டில் பதியாகி இராவிடில், நம்பொருட்டு வங்கி இத்தொகைகளைச் செலுத்தியிருப்ப தால், நம் கணக்கிலிருந்து இவற்றைக் கழித்திருக்கும், ஆனால் இவை ரொக்க ஏட்டில் பதியப் பெறாமையால், ரொக்க ஏட்டிருப்பு அதிகமிருக்கும். இதனால் வங்கி நகலேட்டிருப்புடன் இத்தொகைகளைக் கூட்டினால் ரொக்க ஏட்டிருப்பு கிடைக்கும்.

5. நம் ஆணையின்படி வங்கி வசூலித்த இலாப ஈவு வட்டி போன்றவை வங்கி நகலேட்டில் மட்டும் பதிவாகியிருப்பின்,

இவை நமக்குச் சேர வேண்டியவை. எனவே இவ்வாறு வசூலான தொகைகளை வங்கி நமது கணக்கில் கூட்டியிருக்குமாத லால் வங்கி நகலேட்டிருப்பு அதிகமாயிருக்கும். இவை ரொக்க ஏட்டில் பதிவாகாததால் ரொக்க ஏட்டின்படி வங்கி இருப்பு

குறைந்திருக்கும். ரொக்க ஏட்டிருப்பைத் தான் நாம் கண்டு பிடிக்க வேண்டியிருத்தலால், வங்கி நகலேட்டிருப்பிலிருந்து இத் தொகைகளைக் கழித்து விட வேண்டும்.

நம்பொருட்டு நமது பங்குகளை வங்கி விற்றிருப்பினும் இவ்வாறே செய்ய வேண்டும்.

நமது வாடிக்கையாளர்கள் நேரடியாக வங்கியில் நம் கணக்கில் பணஞ் செலுத்தியிருப்பினும், இதே நிலைதான். இவை ரொக்க ஏட்டில் பதிவாகியிருப்பதில்லை எனவே, ரொக்க ஏட்டிருப்பு வங்கி நகலேட்டிருப்பினும் குறைந்திருக்கும். வங்கி நகலேட்டிருப்பி லிருந்து இதைக் கழித்தால், ரொக்க ஏட்டிருப்புக் கிடைக்கும்.

நாம் வங்கியில் வசூலிக்கனுப்பிய காசோலைகட்குப் பண மறுக்கப்பட்டதாக வங்கியிலிருந்து செய்தி கிடைப்பின், காசோலை களை வங்கிக்கனுப்பும் போழ்து ரொக்க ஏட்டில் வங்கிக் கணக்கில் பற்று வைத்து இருப்பினைக் கூட்டுவோம். வங்கியோ வசூலான பிறகுதான் நம் கணக்கில் பதியுமாதலால், வங்கி, இருப்பைக் கூட்டியிருக்காது. இந்நிலையில் ரொக்க ஏட்டு வங்கியிருப்பு வங்கி நகலேட்டு இருப்பினும் கூடுதலாயிருக்கும். காசோலைகட்குப் பணம் மறுக்கப்பட்டுவிடின் வங்கி அவற்றைத் திருப்பியனுப்பி விடும். அவற்றை நம்மிடமிருந்து பெற்ற போழ்து வங்கி நமது கணக்கில் பதிவதில்லை யாதலால் அவற்றைத் திருப்பியனுப்பும் போழ்தும் பதிவதில்லை. நாம் மறுக்கப்பட்ட காசோலைகளின் தொகையை இன்னும் ரொக்க ஏட்டில் கழிக்காதலால், நமது ரொக்க ஏட்டு வங்கியிருப்புக் கூடுதலாகவேயிருக்கும். எனவே, வங்கி நகலேட்டிருப்புடன் இத்தொகையைக் கூட்டின், ரொக்க ஏட்டிருப்புக் கிடைக்கும்.

இவ்வாறு வங்கிக் கணக்குச் சரிகட்டும் பட்டி தயார் செய்வதில் ரொக்க ஏட்டிருப்பைக் கண்டு பிடிக்கிறோம். இந்தத் தொகையும் ரொக்க ஏடு காட்டுந் தொகையும் ஒன்றாக விருப்பின், நாம் பதிந்ததும், வங்கி நகலேட்டில் வங்கி பதிந்ததும் சரியே. கணக்கில் தவறில்லை: நாளடைவில் இவை சரியாகும் என்பது புலப் படும். ஆனால் சரிகட்டும் பட்டி மூலமாகக் கண்டு பிடித்த ரொக்க ஏட்டிருப்பு, ரொக்க ஏடு காட்டுமிருப்பினும் மாறியிருப்பின், பற்று வரவு வைக்கும் போழ்தோ, இருப்புக் கூட்டும் போழ்தோ தவறி ழைத்து விட்டதாகப் பொருள். ரொக்க ஏட்டினை மீண்டும் சரி பார்த்தால் செய்த தவறு விளங்கும் சரிகட்டுப் பதிவு மூலம் இதைத் திருத்திக் கொள்ளலாம். வங்கி தவறாகப் பதிந்திருப்பினும் வங்கி நகலேட்டில் திருத்தக் கோரலாம்.

ரொக்க ஏட்டிருப்பிலிருந்து வங்கியிருப்பைக் கண்டு பிடிக்க வேண்டியிருப்பினும், இதே போன்று ஒவ்வொரு நடவடிக்கையையும் ஆய வேண்டும். முதலில் யார் பதிவது—நாமா வங்கியா, அப் பதிவால் ரொக்க ஏட்டிருப்புக் கூடியுள்ளதா அல்லது குறைந்துள்ளதா, வங்கியிருப்புக் கூடியுள்ளதா அல்லது குறைந்துள்ளதா என்பனவற்றை உணர வேண்டும், ரொக்க ஏட்டிருப்பினும் வங்கியிருப்பு அந் நடவடிக்கையால் கூடியிருப்பின் கொடுக்கப்பட்ட ரொக்க ஏட்டிருப்புடன் அத் தொகையைக் கூட்ட வேண்டும். அவ்வாறின்றி, வங்கியிருப்புக் குறைந்திருக்குமாயின் கொடுக்கப்பட்ட ரொக்க ஏட்டிருப்பிலிருந்து அத் தொகையைக் கழித்திடின் போதும்.

எடுத்துக்காட்டு 9 :

1. சேரனின் ரொக்க ஏடு *31-12-1969*-ல் ரூ. *9,531* வங்கியிருப்பு இருப்பதாகக் காட்டியது. கீழ்க் கொடுக்கப்பட்ட விவரங்களிலிருந்து வங்கிக் கணக்குச் சரிக்கட்டும் பட்டி தயார்செய்து வங்கி நகலேடு காட்டும் வங்கியிருப்பைக் கண்டுபிடி,

(i) ரூ. *1,500*க்கு விடுத்த காசோலைகளில் ரூ. 870-க்கானவை மட்டிலுமே ரொக்கமாக்கப் பட்டுள்ளன.

(ii) வங்கியில் தண்டலுக்கனுப்பிய (Collection) ரூ. *1,750* மதிப்புள்ள காசோலைகளில் ரூ. *350*க்கானவை *31-12-69* வரை வசூலாகாமையால் நகலேட்டில் வரவு வைக்கப்படவில்லை.

(iii) செங்குட்டுவன் நேரடியாக வங்கியில் கட்டிய ரூ. *650* ரொக்க ஏட்டில் பதியப்படவில்லை.

(iv) இளங்கோவிடம் பெற்ற காசோலை ரூ. *575* ரொக்க ஏட்டில் வங்கிப் பத்தியில் பதிவாகியும், வங்கிக்கனுப்புத் தவறிவிட்டது.

2. கீழ்வருவன வங்கி நகலேட்டில் மட்டும் காணப்படுகின்றன.

(i) வங்கி வசூலித்த இலாப ஈவு ... ரூ. *100*.

(ii) நடைமுறை ஆணையின்படி செலுத்திய ஆயுள் காப்பீட்டுக் கட்டணத் தொகை ரூ. *100*.

(iii) வங்கிக் கட்டணம் ...... ரூ. *10*

விடை :

சேரனின் 31-12-1969-க்கான வங்கிக் கணக்குச் சரிக்கட்டும் பட்டி.

| | | ரூ |
|---|---|---|
| ரொக்க ஏட்டின்படி வங்கியிருப்பு | | 9,531 |
| கூட்டு : | | |
| விடுத்த காசோலைகளில் வங்கியில் பணம் பெறாதவை (ரூ. 1500–870) | 630 | |
| செங்குட்டுவன் நேரடியாக வங்கியில் கட்டியது | 650 | |
| வங்கி நகலேட்டில் மட்டும் பதிவாகியுள்ள இலாப ஈவு | 100 | 1,380 |
| | | 10,911 |
| கழி : | ரூ | |
| வங்கியில் செலுத்திய காசோலைகள் நகலேட்டில் வரவு வைக்கப் படாதவை | ... 350 | |
| ரொக்க ஏட்டில் பதிவாகியும் வங்கியில் செலுத்தத் தவறிய காசோலை | ... 575 | |
| ரொக்க ஏட்டில் மட்டும் பதியப் பெறாத ஆயுள் காப்பீட்டுக் கட்டணம் | ... 100 | |
| வங்கிக் கட்டணம் | ... 10 | 1,035 |
| வங்கி நகலேட்டின்படி வங்கியிருப்பு | ... ரூ. | 9,876 |

எடுத்துக் காட்டு 10

1-1-1970ல் சோழனின் வங்கி நகலேடு ரூ. 9,858 இருப்பைக் காட்டியது. ரொக்க ஏடு வேறு தொகையைக் காட்டவே இரண்டையும் ஒப்பிட்டதில் கீழ்க்கண்டவை தெரிய வந்தன.

1. கீழே கொடுக்கப்பட்டோரிடம் விடுத்த காசோலைகள் வங்கியில் பணமாக்கப் படவில்லை.

| | | ரூ |
|---|---|---|
| (i) வேலுமணி | ... | 175 |
| (ii) மணிக்குமார் | ... | 571 |
| (iii) குமாரசாமி | ... | 715 |
| (iv) சாமியப்பன் | ... | 517 |

2. ரூ. 1250க்கான காசோலைகளை வங்கியில் வசூலுக்கனுப்பியும் ரூ. 750க்கான காசோலைகளே வங்கி நகலேட்டில் வரவு வைக்கப்பட்டுள்ளன.

3. செழியனிடம் பெற்ற ரொக்கம் ரூ. 270 ரொக்க ஏட்டில் தவறுதலாக வங்கிப் பத்தியில் பதியப் பட்டிருந்தது.

4. கீழ்வருவன ரொக்க ஏட்டில் பதிவாகவில்லை.

   (i) வட்டி அளித்தது ... ரூ. 25

   (ii) வங்கி மூலம் விற்ற பங்குகள்... ரூ. 550

5. வளவனிடம் பெற்ற காசோலை ரூ. 350-க்குப் பண மறுக்கப் படவே வங்கி நகலேட்டில் பற்று வைக்கப்பட்டிருந்தது. 31-1-1970 ரொக்க ஏட்டில் பதிவாகவில்லை.

6. வழுதியிடம் பெற்ற காசோலை ரூ. 340. 30-1-70ல் ரொக்க ஏட்டில் பதிவாகியிருந்தும், 2-2-70ல்தான் வங்கிக்கனுப்பப் பட்டது. —இவற்றிலிருந்து ரொக்க ஏடு காட்டும் வங்கி யிருப்பைக் கண்டுபிடி.

விடை :

சோழனின் 1-1-1970க்குரிய வங்கிக் கணக்குச் சரிக்கட்டும் பட்டி.

| | | ரூ | ரூ |
|---|---|---|---|
| வங்கி நகலேட்டின்படி வங்கியிருப்பு | ... | | 9,858 |
| கூட்டு : | | | |
| தண்டலுக்கனுப்பிய காசோலைகளில் நகலேட்டில் வரவு வைக்கப் பெறாதவை | ... | 500 | |
| தவறாக ரொக்க ஏட்டில் வங்கிப் பத்தியில் பற்று வைக்கப்பட்ட ரொக்கம் | ... | 270 | |
| பணம் மறுக்கப்பட்ட காசோலை ரொக்க ஏட்டில் பதிவாகாதது | ... | 350 | |
| ரொக்க ஏட்டில் பதிந்தும் வங்கியில் செலுத்தப் பெறாக் காசோலை | ... | 340 | 1,460 |
| | | | 11,318 |

கழி :

விடுத்த காசோலைகள் வங்கியில் பணம் பெறுதவை :

| | | ரூ | ரூ |
|---|---|---|---|
| வேலுமணி | ... | 175 | |
| மணிக்குமார் | ... | 571 | |
| குமாரசாமி | ... | 715 | |
| சாமியப்பன் | ... | 517 | 1978 |

நகலேட்டில் எழுதப் பெற்று ரொக்க ஏட்டில் பதிவாகாதவை :

| | | ரூ | ரூ |
|---|---|---|---|
| வட்டி | ... | 25 | |
| வங்கி விற்ற பங்குகள் | ... | 550 | 2553 |
| ரொக்க ஏட்டின்படி வங்கி இருப்பு. | | | ரூ. 8765 |

மேற் குறிப்பிட்ட இரு எடுத்துக்காட்டுகளும் வங்கியில் நம் பணம் இருக்கும்போழ்து ஏற்படும் நிலையாகும். வங்கி நகலேடு பற்றிருப்பைக் காட்டும்போழ்து—அதாவது, மேல்வரைப் பற்றைக் காட்டும்போழ்து—வங்கிக் கணக்குச் சரிகட்டும் பட்டி தயார் செய்யும் முறையை இனி ஆய்வோம்.

வங்கி மேல்வரைப் பற்று என்பது நாம் வங்கியிலிருந்து கடன் பெறுவதற்கு ஒப்பாகும். நாம் செலுத்திய தொகையினும் மேல் வரைப் பற்று அதிகமான தொகையை வங்கியிலிருந்து பெற்றுள் ளோம் என்பது பொருள். இந் நிலையில் நாம் பிறர்க்கு மேலும் காசோலை விடும்போழ்து, அதற்கான தொகையை மேலும் வங்கி அளிக்குமல்லவா? இதனால் நாம் பெறும் கடன் அதிகரிக்கும் மேல்வரைப் பற்று அதிகமாகும் என்பது புலப்படும். பிறரிட மிருந்து பெறும் காசோலைகளை வங்கியில் செலுத்தும் போழ்து, மேல்வரைப் பற்று குறையும்-(கடன் திருப்பியடைப்பதற்கு அது ஒப்பாகிறது).

மேல்வரைப் பற்றுமீது நாம் வட்டி செலுத்த வேண்டும். வங்கிக் கட்டணம், நம்பொருட்டு வங்கி ஏற்கும் செலவினங்கள் முதலியவை மேல்வரைப் பற்றைக் கூட்டுந் தன்மையன. நமக்குச் சேர வேண்டிய இலாப ஈவு, வாடகை போன்றவற்றை வசூலிக்கும் போழ்து மேல்வரைப் பற்று குறையும்.

இவற்றைக் கருத்திற் கொண்டு, முன் கூறப்பட்டவாறே வங்கிக் கணக்குச் சரிகட்டும் பட்டியலைத் தயார் செய்யலாம்.

எடுத்துக் காட்டு—11

பாண்டியனின் ரொக்க ஏடு 31-3-1970-ல் ரூ. 9,247 மேல் வரைப்பற்றிருப்பதாகக் காட்டியது. கீழே கொடுக்கப்பட்ட விவரங்களிலிருந்து வங்கிக் கணக்குச் சரிக்கட்டும் பட்டி தயாரித்து வங்கி நகலேட்டின்படி உள்ள வங்கியிருப்பைக் கண்டுபிடி.

(i) ரூ. 500 மதிப்புள்ள செலுத்தவேண்டிய உண்டியலுக்கு வங்கி பணம் செலுத்தியது ரொக்க ஏட்டில் பதிவாகி யிருக்கவில்லை.

(ii) வங்கியில் செலுத்திய ரூ. 2,500 மதிப்புள்ள காசோலை களில் ரூ. 375-க்கானவை 2-4-70-ல்தான் வரவு வைக்கப் பட்டுள்ளன.

(iii) ரூ. 1,500 மதிப்புள்ள காசோலைகளைப் பிறர்க்குக் கொடுத் ததில் கீழ்க் குறிப்பிட்டவற்றிற்கு மட்டுமே வங்கி நக லேட்டில் பற்று வைக்கப்பட்டுள்ளது.

1. மாறன் ... ரூ. 285
2. வழுதி ... ரூ. 567

(iv) நம்பியிடம் பெற்ற ரூ. 200-க்குக் காசோலைக்குப் பணம் மறுக்கப்பட்டு விட்டதற்கான வங்கியின் அறிவிப்பு 2-4-1970 அன்றே கிடைத்தது. உடனே ரொக்க ஏட்டில் தக்க பதிவு செய்யப்பட்டது.

(v) வங்கி வசூலித்த உண்டியல் தொகை ரூ. 1,800 ரொக்க ஏட்டில் பதிவாக வில்லை.

(vi) வங்கி நகலேட்டில் காணப்படும் மேல்வரைப் பற்று மீதான வட்டி ரூ. 100-ம் ரொக்க ஏட்டில்3-4-1970 அன்று தான் பதிவாகியிருந்தது.

(vii) வேறொருவர்க்குச் சேர வேண்டிய தொகை ரூ. 320 பாண்டியன் நகலேட்டில் தவறுதலாக வரவு வைக்கப் பட்டிருந்தது.

விடை:

பாண்டியனின் 31-3-1970-க்கான வங்கிக் கணக்குச் சரிக்கட்டும் பட்டி.

| | | ரூ |
|---|---|---|
| ரொக்க ஏட்டின்படி வங்கி மேல்வரைப்பற்று ரூ. ... | | 9,247 |
| கூட்டு: | | ரூ |
| வங்கி செலுத்திய செலுத்த வேண்டிய உண்டியல் ரொக்க ஏட்டில் பதிவாகாதது ... | 500 | |
| வங்கியிற் செலுத்திய காசோலைகள் நகலேட்டில் வரவுவைக்கப் பெறுதவை ... | 375 | |
| பணம் மறுக்கப்பட்ட காசோலை ரொக்க ஏட்டில் பதிவாகாது ... | 200 | |
| நகலேட்டில் மட்டும் காணப்படும் மேல் வரைப்பற்று மீதான வட்டி ... | 100 | 1,175 |
| | | 10,422 |
| கழி: | | |
| விடுத்த காசோலைகளில் வங்கியில் பணம் பெறுதவை (ரூ-1,500—(285+567) ... | 648 | |
| வங்கி வசூலித்த உண்டியல் ரொக்க ஏட்டில் பதிவாகாதது ... | 1800 | |
| நகலேட்டில் தவருக வைக்கப்பட்ட வரவு ... | 320 | 2,768 |
| வங்கி நகலேட்டின்படி மேல்வரைப் பற்று ... ரூ | | 7,654 |

விளக்கக் குறிப்பு:

1. செலுத்த வேண்டிய உண்டியலுக்கான தொகை ரூ. 500-ஐ வங்கி செலுத்தியுள்ளதால், மேல்வரைப் பற்று அதிகமாக நகலேட்டில் காட்டப்பெற்றிருக்கும் இக் கணக்கில் ரொக்க ஏட்டிலிருந்து, நகலேட்டிருப்பைக் காணவேண்டியுள்ளதால் ரொக்க ஏட்டிருப்புடன் இதைக் கூட்டுகிருேம்.

2. வங்கி நம் வரவுக்குரிய உண்டியலை வசூலித்ததால், நம் கடன் குறைவதற்கு ஒப்பாகிறது. அதாவது நகலேட்டில் காணப்படும் மேல்வரைப் பற்று குறைந்திருக்கும். எனவே, ரொக்க ஏட்டிருப்பிலிருந்து இது கழிக்கப் பெறுகிறது.

3. வேருெருவர் நகலேட்டில் வரவு வைப்பதற்கு மாருக வங்கி நமது நகலேட்டில் வரவு வைத்திருப்பதால் மேல்வரைப்

பற்று குறைந்து காணப்படும். எனவே, இது ரொக்க ஏட்டிருப்பிலிருந்து கழிக்கப் பெறுகிறது.

(இதற்கான திருத்தப் பதிவை வங்கி பிறகு செய்துவிடும். இத் திங்களுக்குள் அதற்காகப் பற்று வைக்கப் படாததால் மேல் வரைப்பற்றுத் தொகை வேறுபட்டிருக்கக் காரணமாகிறது.)

எடுத்துக் காட்டு—12

31-7-71 அன்று மூவேந்தனின் வங்கி நகலேடு ரூ. 6,832 மேல் வரைப்பற்று இருப்பதாகக் காட்டியது. ரொக்க ஏட்டை ஒப்பிட்ட போழ்து கீழ்க்கண்ட உண்மைகள் வெளியாயின.

1. ஜூலை 30-ல் விடுத்த காசோலைகள் ரூ. 1,960. இவற்றில் ரூ. 160க்கான காசோலை மட்டிலுமே நகலேட்டில் பற்று வைக்கப் பட்டிருந்தது. பிற ஆகஸ்டுத் திங்களில்தான் ரொக்கமாக்கப் பட்டன.

2. ரூ. 2,050-க்கான ரொக்கம் காசோலைகள் முதலியவை 30-7-71-ல் வங்கியில் செலுத்தப்பட்டன. இவற்றில் ரூ. 586 மட்டிலுமே நகலேட்டில் வரவு வைக்கப்பட்டிருந்தது.

3. வேறொருவரின் வாடிக்கையாளர் விடுத்த காசோலை ரூ. 375 நகலேட்டில் தவறாகப் பற்று வைக்கப்பட்டிருந்தது.

4. ரொக்க ஏட்டின் வரவுப் பகுதியில் உள்ள வங்கிப் பத்தி ரூ. 200 தவறாகக் குறைத்துக் காட்டப்பட்டிருந்தது.

5. தீ ஈட்டுறுதித் தவணைத் தொகை ரூ. 100 செலுத்தியதும், இலாப ஈவு ரூ. 50 வசூலானதும் நகலேட்டில் பதிவாகியிருக்கின்றன. இவை 2-8-71-ல்தான் ரொக்க ஏட்டில் பதிவு செய்யப் பட்டன.

இவற்றிலிருந்து வங்கிக் கணக்குச் சரிக்கட்டும் பட்டி தயார் செய்து, ரொக்க ஏடு காட்டும் வங்கியிருப்பைக் கண்டுபிடி.
விடை :

மூவேந்தனின் 31-7-71-க்கான வங்கிக் கணக்குச் சரிக்கட்டும் பட்டி.

| | | ரூ |
|---|---|---|
| வங்கி நகலேட்டின்படி மேல்வரைப்பற்று ... | | 6,832 |
| கூட்டு : | ரூ | |
| விடுத்த காசோலைகள் வங்கியில் பணம் பெருதவை ... | 1800 | |
| வங்கி வசூலித்த இலாப ஈவு ரொக்க எட்டில் பதிவாகாதது ... | 50 | 1,850 |
| | | 8,682 |
| கழி: | | |
| வங்கியிற் செலுத்திய காசோலைகளில் ... | | |
| நகலேட்டில் வரவுவைக்கப் பெருதவை (ரூ 2,050—586) ... | 1,464 | |
| நகலேட்டில் தவருகப் பற்று வைக்கப் பட்டது ... | 375 | |
| ரொக்க ஏட்டில் வரவுப் பகுதி குறைவாகக் கூட்டப்பட்டது ... | 200 | |
| தீ ஈட்டுறுதித் தவணைத் தொகை நகலேட்டில் மட்டும் பற்று வைக்கப் பட்டது. ... | 100 | 2,139 |
| ரொக்க ஏட்டின்படி வங்கி மேல்வரைப் பற்று. | ரூ. | 6,543 |

விளக்கக் குறிப்பு :

1. வேறொருவர் விடுத்த காசோலை ரூ. 375 தவருக நம் நகலேட்டில் பற்று வைக்கப்பட்டு விட்டதால், மேல்வரைப் பற்று கூடியிருக்கும். எனவே, ரொக்க ஏட்டிருப்பைக்காண நகலேட்டிருட்பில் இது கழிக்கப் பெறுகிறது.

2. ரொக்க ஏட்டில் வரவுப் பகுதி குறைவாகக் கூட்டப்பட்டு விட்டது. (அதாவது செலவுப் பகுதி தவருகக் குறைத்துக்

கூட்டப் பட்டுள்ளது.) எனவே, மேல்வரைப் பற்று குறைத்துக் காட்டப்படுவதாகப் பொருள். நகலேட்டு இருப்பிலிருந்து இத்தொகையைக் கழித்திடின் குறைவாக உள்ள ரொக்க ஏட்டு மேல்வரைப் பற்றுத் தொகை கிடைக்கும்.

எடுத்துக் காட்டு —13

சன்மார்க்கத்தின் ரொக்க ஏடும் (வங்கிப் பத்தி மட்டில்) வங்கி நகலேடும் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. அவற்றிலிருந்து *31-8-1971*-க்குரிய வங்கிக் கணக்குச் சரிக்கட்டும் பட்டி தயார் செய்க.

**ரொக்க ஏடு (வங்கிப் பத்திமட்டில்.)**

| நாள் | விவரம் | தொகை ரூ | நாள் | விவரம் | தொகை ரூ |
|---|---|---|---|---|---|
| 1971 ஆக.1 | இருப்பு கீ/கொ | 4,782 | 1971 ஆக 2 | கொள்முதல் | 790 |
| 4 | ரொக்கம் | 2,040 | 6 | மீரான் | 580 |
| 7 | மரியதாஸ் | 750 | 7 | மனைத்துணைப் பொருள் | 270 |
| 10 | விற்பனை | 200 | 12 | வளவன் | 460 |
| 17 | ஜோஸப் | 340 | 15 | முருகன் | 540 |
| | ஜோன்ஸ் | 700 | 20 | வங்கிக் கட்டணம் | 5 |
| 21 | கழிவு | 120 | 26 | ரொக்கம் | 220 |
| 25 | தட்டெழுத்துப் பொறி | 1,000 | 28 | ஊதியம் | 310 |
| | இராமன் | 275 | ,, | சேது பிரதர்ஸ் | 700 |
| | ஜமாலுதீன் | 560 | 30 | சேகர் ட்ரேடர்ஸ் | 105 |
| | | | 31 | இருப்பு கீ/இ | 6,787 |
| | | 10,767 | | | 10,767 |
| 1971 செப் 1 | இருப்பு கீ/கொ | 6,787 | | | |

| நாள் | விவரம் | எடுத்தது ரூ | செலுத்தியது ரூ | ப அ வ | இருப்பு ரூ |
|---|---|---|---|---|---|
| 1971 | | | | | |
| ஆக 1 | இருப்பு | | | வ | 4,782 |
| 4 | ரொக்கம் | | 2,040 | வ | 6,822 |
| | காசோலை எண் 04578 | 790 | | வ | 6,032 |
| 8 | ,, 04580 | 270 | | வ | 5,762 |
| 9 | காசோலை தண்டல் (வசூல்) | | 750 | வ | 6,512 |
| 12 | ,, ,, | | 200 | வ | 6,712 |
| 13 | காசோலை எண் 04581 | 460 | | வ | 6,252 |
| | வங்கிக் கட்டணம் | 5 | | வ | 6,247 |
| 15 | காசோலை எண் 04579 | 580 | | வ | 5,667 |
| 18 | தண்டல் | | 700 | வ | 6,367 |
| | தண்டல் கட்டணம் (Collection Charges) | 3 | | வ | 6,364 |
| 19 | தண்டல் | | 340 | வ | 6,704 |
| | காசோலை எண் 04582 | 540 | | வ | 6,164 |
| 26 | ரொக்கம் காசோலை எண் 04583 | 220 | | வ | 5,944 |
| 27 | இலாப ஈவு வசூலித்தது | | 125 | வ | 6,069 |
| | தண்டல் கட்டணம் | 2 | | வ | 6,067 |
| 28 | காசோலை 04584 | 310 | | வ | 5,757 |
| 30 | ரொக்கம் | | 275 | வ | 6,032 |
| | வாடகை செலுத்தியது நடைமுறை ஆணையின்படி | 220 | | வ | 5,812 |
| 31 | உண்டியல் பணமறுக்கப் பட்டது | 500 | | வ | 5,312 |
| | காசோலை வசூல் | | 120 | | 5,432 |

கீழே சில குறிப்புகள் கொடுக்கப்பட்டுள்ளன.

*1.* தாம்சன் அன் கோவிடம் தட்டெழுத்துப் பொறி ரூ. 1,000 விற்றதில் பெற்ற காசோலைக்குப் பண மறுக்கப்பட்ட செய்தி 31-8-1971-ல் கிடைத்தது. அன்றே ரொக்க ஏட்டில் பதிவாகவில்லை.

*2.* வங்கி நகலேட்டில் 30-8-71-ல் ரொக்கம் செலுத்தியது ரூ. 275 வகாப் நேரிடையாக வங்கியில் கட்டியதாகும்.

3. நகலேட்டில் உண்டியல் மறுக்கப்பட்டதற்கான பற்று காணப்படுகிறது. இது 'மே' திங்களில் தள்ளுபடிக்கு மாற்றப் பட்டதாகும்.

விடை :

முதலில் ரொக்க ஏட்டினையும் வங்கி நகலேட்டினையும் ஒப் பிட்டுப் பார்த்தால் சில பதிவுகள் ரொக்க ஏட்டில் மட்டும், சில நகலேட்டில் மட்டும் காணப்படுவது புலப்படும். இவைதான் வேறுபட்ட வங்கி இருப்புகட்குக் காரணமாகும் அவை கீழே கொடுக்கப் பட்டுள்ளன:

1. தாம்சனிடம் தட்டெழுத்துப் பொறிக்காகப் பெற்ற ரூ. 1,000-க்கான காசோலைக்குப் பணம் மறுக்கப்பட அதற்கான பதிவு ஒன்று ரொக்க ஏட்டில் செய்ய வேண்டியுள்ளது.

2. இராமனிடமிருந்தும் ஜமாலுதீனிட மிருந்தும் பெற்ற காசோலைகள் 31-8-71 வரை வசூலாகாமையால், நகலேட்டில் வரவு வைக்கப்படவில்லை.

3. சேது பிரதர்ஸுக்கும். சேகர் ட்ரேடர்ஸுக்கும் விடுத்த காசோலைகள் 31-8-71 வரை பணமாக்கப் படவில்லை.

4. தண்டல் கட்டணம் ரூ. 5 (18-8-71-ல் ரூ 3 ம் 27-8-71-ல் ரூ. 2ம்) நகலேட்டில் மட்டுமே பற்று வைக்கப்பட்டுள்ளது.

5. நடைமுறை ஆணையின்படி வங்கி செலுத்திய வாடகையும் வங்கி வசூலித்த இலாப ஈவும் ரொக்க ஏட்டில் 31-8-71 வரைப் பதியப் பெறவில்லை.

6. வகாப் நேரடியாக வங்கியில் செலுத்திய தொகை ரூ. 275 ரொக்க ஏட்டில் பதிவாகவில்லை.

7. மே திங்களில் தள்ளுபடிக்கு மாற்றிய உண்டியலுக்குப் பணம் மறுக்கப்பட்டு விட்டது. இது வங்கி நகலேட்டில் மட்டுமே பதிவாகியுள்ளது.

மேற்குறிப்பிட்டவற்றிலிருந்து இனி வங்கிக் கணக்குச் சரிக்கட்டும் பட்டி தயாரிக்கலாம். ரொக்க ஏட்டிருப்பிலிருந்தோ, வங்கி நகலேட்டிருப்பிலிருந்தோ இதனைத் தயாரிக்கலாம்.

சன்மார்க்கத்தின் 31-8-1971-க்கான வங்கிக் கணக்குச் சரிக் கட்டும் பட்டி.

| | | | ரூ. |
|---|---|---|---|
| ரொக்க ஏட்டின்படி வங்கியிருப்பு ரூ. | | ... | 6,787 |
| கூட்டு : | | | |
| விடுத்த காசோலைகள் வங்கியில் பணம் பெறாதவை: | | | |
| சேது பிரதர்ஸ் ... | 700 | | |
| சேகர் ட்ரேடர்ஸ் ... | 105 | 805 | |
| வங்கி வசூலித்த இலாப ஈவு நகலேட்டில் மட்டும் பதியப்பெற்றது ... | | 125 | |
| வகாப் நேரடியாக வங்கியில் கட்டியது ரொக்க ஏட்டில் பதிவாகாதது ... | | 275 | 1,205 |
| | | | 7,992 |
| கழி : | | | |
| பணம் மறுக்கப்பட்ட காசோலை ரொக்க ஏட்டில் பதிவாகாதது ... | | 1,000 | |
| வங்கியில் செலுத்திய காசோலைகள் நகலேட்டில் வரவு வைக்கப் பெறாதவை : | | | |
| இராமன் ... | 275 | | |
| ஜமாலுதீன் ... | 560 | 835 | |
| நகலேட்டில் மட்டும் பதிவாகியுள்ள தண்டல் கட்டணம் ... | | 5 | |
| வங்கி செலுத்திய வாடகை ரொக்க ஏட்டில் பதிவாகாதது ... | | 220 | |
| தள்ளுபடிக்கு மாற்றிய உண்டியல் பணம் மறுக்கப்பட்டது ரொக்க ஏட்டில் பதிவாகாதது ... | | 500 | 2,560 |
| நகலேட்டின்படி வங்கி இருப்பு ... | | | ரூ. 5,432 |

குறிப்பு: நகலேட்டில் வரவு வைக்கப்படும் போழ்து, வங்கி இருப்பு கூடும்; மேல்வரைப் பற்றாயின், அதிகப் பற்று குறையும். நகலேட்டில் பற்றுவைக்கப்படும் போழ்து சாதாரணமாக வங்கி யிருப்பு குறையும்; மேல்வரைப்பற்றாயின், அதிகப்பற்று அதிகரிக்கும்.

## வினாக்கள்

1. ரொக்க ஏடு காட்டும் வங்கியிருப்பும் நகலேடு காட்டும் வங்கியிருப்பும் வேறுபட்டிருக்கக் காரணங்கள் யாவை?

2. வங்கிக் கணக்குச் சரிக்கட்டும் பட்டி ஏன், எவ்வாறு தயாரிக்கப்படுகிறது?

## பயிற்சி

1. 30-6-71ல் கருணாநிதியின் ரொக்க ஏடு ரூ. 2,294 வங்கி யிருப்பைக் காட்டியது. ஆனால், நகலேடு வேறு இருப்பைக் காட்டவே, இரண்டையும் ஒப்பிட்டதில் கீழ்க்கண்ட உண்மைகள் புலப்பட்டன. இவற்றிலிருந்து வங்கிக் கணக்குச் சரிக்கட்டும் பட்டி தயார் செய்து, வங்கி நகலேடு காட்டும் வங்கியிருப்பைக் கண்டுபிடி.

1. (i) வங்கியில் செலுத்திய ரூ. 2,050-க்கான ரொக்கம் காசோலை முதலியவைகளில் 30-6-71 வரை ரூ. 1,270 தான் வரவு வைக்கப்பட்டிருந்தது.

(ii) ரூ. 1,274-க்கு விடுத்த காசோலைகளில் ரூ. 568-க்கானவை மட்டிலுமே ரொக்கமாக்கப் பட்டுள்ளன.

(iii) நடைமுறை ஆணையின்படி வங்கி செலுத்திய வாடகை ரூ. 250 ம், வங்கி வசூலித்த கடன் பத்திரங்கள் மீதான வட்டி ரூ. 64ம் நகலேட்டில் மட்டிலுமே காணப் படுகின்றன.

(vi) ரொக்க ஏட்டில் பதிந்தும், வங்கிக் கனுப்பத் தவறிய காசோலை ரூ. 377.

(v) வீட்டுச் செலவுக்கு விடுத்த காசோலை ரூ. 423 ரொக்க ஏட்டில் பதிவாகியிருக்க வில்லை.

2. 31-7-1971-ல் கம்பரின் வங்கி நகலேட்டின்படி வங்கி இருப்பு ரூ. 2,890, கீழே கொடுக்கப்பட்ட விவரங்களிலிருந்து வங்கிக் கணக்குச் சரிக்கட்டும் பட்டி தயார்செய்க

(i) வாடிக்கையாளர் தசரதன் நேரடியாக வங்கியில் கட்டிய ரூ. 357 ரொக்க ஏட்டில் பதிவாக வில்லை.

(ii) 31-7-71-ல் காசோலைகள் கீழ்க்கண்டோர்க்குக் கொடுக்கப் பட்டன. இவை நகலேட்டில் காணப்படவில்லை.

| | | |
|---|---|---|
| இராமன் | ... | ரூ 354 |
| சந்திரன் | ... | ரூ. 453 |
| இராமச்சந்திரன் | ... | ரூ. 543 |

(iii) பரதனிடம் பெற்ற ரூ. 258-க்கான காசோலைக்குப் பணம் மறுக்கப்படவே நகலேட்டில் பற்று வைக்கப்பட்டிருந்தது. ரொக்க ஏட்டில் இது 2-8-1971-ல்தான் பதியப்பட்டது.

(iv) இலக்குவனிடம் ரூ. 278-க்கும் அநுமனிடம் ரூ 1,566-க்கும் பெற்ற காசோலைகள் வங்கியில் 25-7-1971-ல் செலுத்தப்பட்டன. இவற்றில் அநுமனிடம் பெற்ற காசோலை மட்டிலுமே நகலேட்டில் 31-7-71-ல் வரவு வைக்கப்பட்டிருந்தது.

(v) வேறொருவர் விடுத்த காசோலை ரூ. 548 தவறுதலாகக் கம்பரின் நகலேட்டில் பற்று வைக்கப்பட்டிருந்தது.

(vi) வங்கி வசூலித்த இலாப ஈ வு. ரூ. 75ம், வங்கிக் கட்டணம் ரூ. 15-ம் ரொக்க ஏட்டில் 30-7-71 வரை பதிவாகியிருக்கவில்லை.

3. கீழ்க் கொடுக்கப்பட்ட விவரங்களிலிருந்து இளங்கோவன் 31-8-71-க்குரிய வங்கிக் கணக்குச் சரிக்கட்டும் பட்டி தயார் செய்து ரொக்க ஏடு காட்டும் வங்கி இருப்பைக் கண்டுபிடி.

(i) 31-8-71ல் நகலேட்டின்படி வங்கி மேல்வரைப் பற்று ரூ. 3,168

(ii) ஜூலைத் திங்களில் தள்ளுபடிக்கு மாற்றிய வரத்துண்டியலுக்குப் பணம் மறுக்கப் படவே நகலேட்டில் ரூ. 755-க்குப் பற்றுவைக்கப் பட்டிருந்தது. இது ரொக்க ஏட்டில் காணப்படவில்லை.

(iii) கீழ்த்தரப்பட்டவை வங்கி நகலேட்டில் மட்டும் காணப்படுவன.

(1) வங்கி வசூலித்த உறுதிப் பத்திரம் ரூ. 200.

(2) தீ ஈட்டுறுதிக் கட்டணம் செலுத்தியது ரூ 150.

(3) மேல்வரைப்பற்று மீதான வட்டி ரூ. 75

(iv) ரொக்கம் கொடுத்து வாங்கிய எழுதுபொருள் தொகை, ரூ. 75 ரொக்க ஏட்டில் தவறுக வங்கிப் பத்தியில் எழுதப் பட்டிருந்தது.

(v) ரூ. 1,758-க்கு விடுத்த காசோலைகளில் ரூ. 1,234-க்கான வையே 31-8-71-க்குள் ரொக்கமாக்கப் பட்டுள்ளன.

(vi) வங்கியில் தண்டலுக்கனுப்பிய காசோலைகள் ரூ. 765 செப்டம்பர்த் திங்களில்தான் நகலேட்டில் வரவு வைக்கப் பட்டிருந்தன.

4. கீழே கொடுக்கப்பட்ட விவரங்களிலிருந்து ஷேக்ஸ்பியரின் 30-9-1971-க்கான வங்கிக் கணக்குச் சரிக்கட்டும் பட்டி தயார் செய்து, நகலேடு காட்டும் வங்கி மேல்வரைப் பற்றைக் காண்க.

(i) 30-9-1971-ல் ரொக்க ஏடு காட்டிய வங்கி மேல்வரைப் பற்று ரூ. 4,743.

(ii) மில்டனுக்கும் கீட்ஸுக்கும் விடுத்த காசோலைகள் முறையே ரூ. 748ம், ரூ. 847-ம் ஆகும். இவற்றில் கீட்ஸ் மட்டும் 30-9-1971-ல் காசோலைக்கு வங்கியில் பணம் பெற்றுக் கொண்டார்.

(iii) 28-9-1971-ல் வங்கியில் தண்டலுக்கு அனுப்பிய வரவுக் குரிய உண்டியல் ரூ. 600 வங்கி நகலேட்டில் 3-10-1971-ல் வரவு வைக்கப்பட்டுள்ளது. (ரொக்க ஏட்டில் பதிவாகி யுள்ளது).

(iv) 25-9-71-ல் வங்கியிற் செலுத்திய காசோலைகள் :

| | | |
|---|---|---|
| 1. | பைரனிடம் பெற்ற காசோலை | ரூ. 345 |
| 2. | ஷெல்லியிடம் ,, ,, | ரூ. 456 |
| 3. | டென்னிசனிடம் ,, ,, | ரூ. 657 |

இவற்றில் ஷெல்லியிடம் பெற்ற காசோலை 1-10-71-ல் வரவு வைக்கப்பட்டுள்ளது.

(v) மேல்வரைப் பற்று மீதான வட்டி ரூ. 90ம் வங்கிக் கட்டணம் ரூ. 5ம் ரொக்க ஏட்டில் பதிவாகவில்லை.

(vi) ரொக்க ஏட்டின் வரவுப் பகுதியில் உள்ள வங்கிப்பத்தி தவறுக ரூ. 100 அதிகம் கூட்டப்பட்டிருந்தது.

(vii) வேர்ட்ஸ் ஓர்த்திடம் பெற்ற காசோலை ரூ. 255 நகலேட்டில் வரவு வைக்கப்பட்டிருந்தும் ரொக்க ஏட்டில் பதியத் தவறிவிட்டது.

5. கீழே கொடுக்கப்பட்ட விவரங்களிலிருந்து வங்கிக் கணக்குச் சரிக்கட்டும் பட்டி தயார் செய்து, ரொக்க ஏடு காட்டும் வங்கியிருப்பைக் காண்.

(i) 30-6-1971-ல் வங்கி நகலேட்டின்படி உள்ள பற்றிருப்பு ரூ. 5,841.

(ii) கீழ்க்கண்டோர்க்கு 30-6-71-க்கு முன் காசோலைகள் விடப்பட்டன.

| | | |
|---|---|---|
| துரையரசன் | ரூ. | 555 |
| கருணாகரன் | ரூ. | 454 |
| செழியன் | ரூ. | 545 |

இவற்றில் செழியனுக்குக் கொடுத்த காசோலை 30-6-71-க்குள் ரொக்கமாக்கப்படவில்லை.

கருணாகரனுக்கு விடுத்த காசோலை ரூ. 455 ரொக்க ஏட்டில் தவறாக ரூ. 544 என்பதிவாகி யிருந்தது.

(iii) ரூ. 1,870 மதிப்புள்ள காசோலைகள் வங்கியில் செலுத்தப்பட்டதில் ரூ. 565-க்கானவை மட்டுமே நகலேட்டில் வரவு வைக்கப்பட்டுள்ளன.

(iv) மே திங்களில் தள்ளுபடிக்கு மாற்றிய ரூ. 500-க்கான உண்டியலுக்குப் பணம் மறுக்கப்படவே, நகலேட்டில் பற்று வைக்கப்பட்டுள்ளது. இது ரொக்க ஏட்டில் பதிவாகவில்லை.

(v) அரசின் கடன் பத்திரங்கள் மீது வசூலான வட்டி ரூ. 100-ம் நடைமுறையின் ஆணைப்படி செலுத்திய வாடகை ரூ. 150ம் நகலேட்டில் மட்டுமே பதிவாகி யிருக்கின்றன.

(vi) மாதவனிடம் பெற்ற காசோலை ரூ. 376 ரொக்க ஏட்டில் பற்றுவைக்கப்பட்டும் வங்கிக்கனுப்பப் படவில்லை.

(vii) 30-6-71-ல் மதிவாணன் வங்கியில் நேரடியாகக் கட்டிய ரூ. 200 ரொக்க ஏட்டில் 2-7-71-ல்தான் பதிவாகி யிருந்தது.

6. 30-11-1971-ல் திரு மீரானின் ரொக்க ஏடு ரூ. 8,841 ஆக வங்கி யிருப்பைக் காட்டியது. வங்கி நகலேட்டில் உள்ள பதிவுகளை ஒப்பிட்டதில், கீழ்க்கண்ட விவரங்கள் தெரியவந்தன. அவற்றி லிருந்து நகலேடு காட்டும் வங்கியிருப்பைக் கண்டுபிடி.

(i) ரூ. 2,780-க்கான காசோலைகள் வங்கியில் செலுத்தப் பட்டன. இவற்றில் 30-11-71-க்குள் ரூ. 1,258-க்கான வையே வங்கி வசூலித்துள்ளது.

(ii) சுந்தர்லாலிடம் கொடுத்த காசோலை ரூ. 378-ம், மோகன் லாலிடம் கொடுத்த காசோலை ரூ. 279-ம் ரொக்கமாக்கப் படவில்லை.

(iii) மித்ராவிடம் கொடுத்த காசோலை ரூ. 541 ரொக்க ஏட்டில் தவறாக ரூ. 514 ஆகப் பதிவாகி யிருந்தது.

(iv) நடைமுறை ஆணையின்படி வங்கி கட்டிய தீ ஈட்டுறுதிக் கட்டணத் தொகை ரூ. 75-ம் வசூலித்த வாடகை ரூ. 120-ம் ரொக்க ஏட்டில் பதிவாக வில்லை.

(v) வங்கிக் கட்டணம் ரூ. 15 நகலேட்டில் மட்டுமே பதிவாகி யிருந்தது.

(vi) விற்பனையில் பெற்ற ரொக்கம் ரூ. 549 ரொக்க ஏட்டில் தவறாக வங்கிப் பத்தியில் பதிவாகியிருந்தது.

(vii) முந்திராவிடம் பெற்ற காசோலை ரூ.1875-பணம் மறுக்கப் பட்டுவிட்டதாக வங்கி அறிவித்தது. இதற்கான பதிவு ரொக்க ஏட்டில் 1-12-71-ல் தான் செய்யப்பட்டது.

7. (i) கனகராகவனின் நகலேடு 31-12-71-ல் ரூ. 4,830 பற் றிருப்பைக் காட்டியது.

(ii) சஞ்சீவியிடம் பெற்ற காசோலை ரூ. 597 நகலேட்டில் வரவு வைக்கப்பட்டுள்ளது. ரொக்க ஏட்டில் பதிவாக வில்லை.

(iii) கோஷியின் நகலேட்டில் பதியவேண்டிய ரூ. 1,212-க் கான வரவுத் தொகை கனக ராகவனின் நகலேட்டில் பதிவாகியிருந்தது.

(iv) வங்கிக் கட்டணம் ரூ. 10ம் மேல்வரைப்பற்று மீதான வட்டி ரூ. 125ம் நகலேட்டில் மட்டும் காணப்படுகின்றன.

(v) வங்கி வசூலித்த இலாப ஈவு ரூ. 75, ரொக்க ஏட்டில் ரூ. 57 ஆகப் பதிவாகியிருந்தது.

(vi) வங்கியில் செலுத்திய ரூ. 1,258-க் கான காசோலைகளில் ரூ. 358-க்கானவை 1-1-1972-ல் தான் நகலேட்டில் வரவு வைக்கப்பட்டுள்ளன.

(vii) கீழ்க் கண்டோர்க்கு விடுத்த காசோலைகள் ரொக்க மாக்கப் படாமையால் நகலேட்டில் பற்று வைக்கப் படவில்லை.

1. கனகலிங்கம் ... ரூ. 279
2. சந்திரகுப்தன் ... ரூ. 175
3. பாட்டங்கர் ... ரூ. 548

(viii) தண்டலுக் கனுப்பிய உண்டியல் ரூ. 950, 31-12-71-ல் நகல் ஏட்டில் வரவு வைக்கப்பட்டுள்ளது.

(ix) கனகராகவன் எழுதித் தந்த உறுதிப் பத்திரத்துக்காக தவணை நாளில் (30-12-71) வங்கி செலுத்திய ரூ. 500, ரொக்க ஏட்டில் 3-1-72ல் தான் வரவு வைக்கப் பட்டிருந்தது.

மேற்கூறிய விவரங்களிலிருந்து கனகராகவனின் வங்கிக் கணக்குச் சரிக்கட்டும் பட்டி தயாரித்து ரொக்க ஏடு காட்டும் வங்கி மேல் வரைப் பற்றைக் கண்டுபிடி.

8. 1-1-1970 அன்று சிவனின் ரொக்க ஏடு ரூ. 5,662 வங்கி யிருப்பைக் காட்டியது. நகலேட்டை ஒப்பிட்டதில் வெளியான விவரங்கள் கீழே தரப்பட்டுள்ளன. அவற்றி லிருந்து 1-1-70க் கான வங்கிக் கணக்குச் சரிகட்டும் பட்டியல் தயார் செய்து நகலேடு காட்டும் வங்கி யிருப்பைக் கண்டுபிடி.

(i) சனவரித் திங்களில் கீழ்க் கண்டோர்க்கு விடுத்த காசோலைகள் பிப்ரவரியில்தான் நகலேட்டில் பற்று பட்டுள்ளன.

1. பழனி ... ரூ. 454
2. குமரன் ... ரூ. 355
3. முருகன் ... ரூ. 563

(ii) விளம்பரச் செலவுக்கென வேலனிடம்ரூ. 567-க்குக் காசோலை 31-1-1970-ல் வேலனிடமிருந்து திரும்பிவந்தது இதை ரொக்க ஏட்டில் சனவரித் திங்களில் பதியவில்லை.

(iii) வட்டி ரூ. 50-க்கு வரவும் கட்டணம் ரூ. 5க்குப் பற்றும் நகலேட்டில் காணப்படுகின்றன. இவை ரொக்க ஏட்டில் பதிவாகவில்லை.

(iv) ரூ. 858-க் கான காசோலைகளை வங்கியில் செலுத்தியதில் ரூ. 254-க் கானவை நகலேட்டில் வரவு வைக்கப் படவில்லை.

(v) வங்கி மூலம் விற்ற கடன் பத்திரங்கள் ரூ. 750 நகலேட்டில் மட்டுமே வரவு வைக்கப்பட்டிருந்தது.

(vi) சுப்பிரமணியத்துக்கு விடுத்த காசோலை ரூ. 343, நகலேட்டில் ரூ. 433 ஆகப் பதிவாகியிருந்தது.

(vii) மயிலைநாதனிடம் பெற்ற காசோலை ரூ. 275, ரொக்க ஏட்டில் 30-1-70ல்- பற்று வைக்கப்பட்டது. ஆனால் 1-2-70ல் தான் வங்கிக் கனுப்பபப்பட்டது.

9. கண்ணனின் நகலேடு 31-3-1970-ல் ரூ. 9,747 வங்கி மேல் வரைப் பற்றாகக் காட்டியது. ரொக்க ஏடும் நகலேடும் ஒப்பிடப்பட்டதில் வெளியான தகவல்கள் கீழ்க் கொடுக்கப் பட்டுள்ளன.

(i) ரூ. 2,757க் கான காசோலைகளை வங்கியில் தண்டலுக்கு அனுப்பப்பட்டன. அவற்றுள் ரூ. 1,381-க் கானவை இன்னும் வசூலாகாமையால் நகலேட்டில் வரவு வைக்கப்படவில்லை.

(ii) ரூ. 1,235-க்கு விடுத்த காசோலைகளில் ரூ. 857-க்கான வையே வங்கியில் ரொக்கமாக்கப் பட்டுள்ளன.

(iii) நகலேட்டில் மட்டும் காணப்படுபவை :

| | | ரூ |
|---|---|---|
| 1. | முதலீடுகள் மீதான வட்டி வசூலானது | 250 |
| 2. | தவணை வைப்பு மீதான வட்டி | 50 |
| 3. | ஆயுள் காப்பீட்டுத் தவணைத்தொகை செலுத்தியது | 95 |
| 4. | மேல்வரைப்பற்று மீதான வட்டி | 102 |

(iv) நகலேட்டில் தவறாகக் காணப்பட்ட
பற்றுத்தொகை 158

(v) ரொக்க ஏட்டின் பற்றுப் பகுதியில் உள்ள வங்கிப்பத்தி ரூ. 100 தவறாகக் குறைத்துக் கூட்டப்பட்டிருந்தது.

(vi) கர்ணனிடம் பெற்ற காசோலை ரூ. 351 ரொக்க ஏட்டில் 12-3-1970-ல் பதிவாகியிருந்தது. ஆனால், இதைத் தவறாக தர்மனின் நகலேட்டில் வங்கி வரவு வைத்திருந்தது. 2-4-1970-ல் வங்கி இதைத் திருத்தியது.

(vii) பீமன் நேரிடையாக வங்கியிற் செலுத்தியது ரூ. 450. இதுரொக்க ஏட்டில் 1-4-1970-ல்தான் பதிவானது.

இவற்றிலிருந்து 31-3-1970-க்கான வங்கிக் கணக்குச் சரிக்கட்டும் பட்டி தயார் செய்து ரொக்க ஏடு காட்டும் வங்கி மேல்வரைப் பற்றைக் காண்க.

10. கீழ்க் கொடுக்கப்பட்டிருக்கும் விவரங்களிலிருந்து 1968 ஜூன் 30-ல் கேலப்பனின் ரொக்க ஏட்டின்படி உள்ள வங்கியிருப்பைக் கண்டுபிடி.

(i) வங்கி நகலேட்டின்படி வங்கி இருப்பு... ரூ. 4,098

(ii) ரூ. 725-க்கு விடுத்த காசோலைகளில் ரூ. 421-க்கானவை மட்டுமே அந்நாளுக்குள் ரொக்கமாக்கப்பட்டன.

(iii) ரூ. 1020-க்கான காசோலைகளை வங்கியில் செலுத்தியதில் ரூ. 328-க்கான காசோலைகள் 3-7-1968 அன்று தான் வங்கி நகலேட்டில் காணப்பட்டன.

(iv) வேறொரு வாடிக்கையாளர் செலுத்திய ரூ. 548-க்கான காசோலை தவறாக நகலேட்டில் வரவு வைக்கப்பட்டிருந்தது.

(v) திரு. ஆசானிடமிருந்து பெற்ற காசோலை ரூ. 475 ரொக்க ஏட்டில் பதிவாகியிருந்தும் வங்கி அனுப்பத் தவறிவிட்டது.

(vi) வருமான வரி ரூ. 450-ம் இலாப ஈவு வசூலித்தது ரூ. 125-ம் நகலேட்டில் மட்டுமே காணப்படுகின்றன.

(Calicut University-Pre-Degree Oct. 1970)

11. 1968 டிசம்பர் 31ல்- குகாவின் நகலேட்டின்படியுள்ள வங்கி யிருப்பினைக் கண்டுபிடி.

(i) 1968 டிசம்பர் 31-க்கு முன் வங்கியில் செலுத்திய, ஆனால் வசூலாகா காசோலைகள் ரூ 1,085 ஆகும்.

(ii) வெளியூர்க் காசோலைகள் மீது தண்டல் கட்டணம் (Collection Charge) ரூ. 2 நகலேட்டில் பற்று வைக்கப்பட்டுள்ளது. ஆனால், ரொக்க ஏட்டில் பதிவாகி யிருக்க வில்லை.

(iii) டிசம்பர் 31-க்கு முன் காசோலை விடுத்தும் ரொக்கமாக்கப் படாதவை ரூ. 1,500.

(iv) இலாப ஈவு ரூ. 800 வசூலித்து ரொக்க ஏட்டில் பதிவா காதது.

(v) வங்கியின் நடைமுறை ஆணையின்படி வங்கி செலுத்திய ஈட்டுறுதி முனைமம் ரூ. 300 ரொக்க ஏட்டில் பதிவாக வில்லை.

(vi) டிசம்பர் 31-ல் ரொக்க ஏட்டின்படி வங்கி மேல்வரைப் பற்று ரூ. 3,500 ஆக இருந்தது.

(Company Secretary Exam—Oct. 1969—Preliminary)

12. 1964 டிசம்பர் 31-ல் A லிமிடெட்டின் ரொக்க ஏட்டின் படி வங்கி இருப்பு ரூ. 2,160 ஆக இருந்தது. நடப்புக் கணக்கு 1-ஐயும், வங்கி நகலேட்டையும் ஒப்பிட்டதில் கீழ்க்கண்ட விவரங்கள் வெளியாயின.

(i) நடப்புக் கணக்கு 2 மீது விடுத்த காசோலை ரூ. 80, கணக்கு 1-ல் தவறாகப் பற்றுவைக்கப்பட்டது.

(ii) நடப்புக் கணக்கு2-ல் செலுத்திய காசோலை ரூ. 200 கணக்கு-1ல் வரவு வைக்கப்பட்டது.

(iii) கணக்கு 1-ல் செலுத்திய காசோலை ரூ. 60 கணக்கு2-ல் தவறாக வரவு வைக்கப்பட்டது.

(iv) கணக்கு 1-க்குரிய காசோலை ரூ. 40 பணம் மறுக்கப்பட்டது. ரொக்க ஏட்டில் இதற்கான பதிவு தவறாகக் கணக்கு 2-ல் எழுதப்பட்டது.

(v) டிசம்பர் 29-ல் செலுத்திய காசோலைகள் ரூ. 240 நகலேட்டில் சனவரி 3 அன்றுதான் வரவு வைக்கப்பட்டிருந்தன.

(vi) டிசம்பர் 28 அன்று விடுத்த ரூ. 500-க்கான காசோலைகளில் டிசம்பர் 31-க்கு முன் ரூ. 220க்கான காசோலை மட்டுந்தான் ரொக்கமாக்கப்பட்டிருந்தது.

(vii) நகலேட்டில் காணப்படும் வங்கிக் கட்டணம் ரூ. 6-ம் வங்கி வட்டி ரூ. 25-ம் ரொக்க ஏட்டில் பதிவாகி யிருக்கவில்லை.

1964 டிசம்பர் 31க்கான வங்கிக் கணக்குச் சரிக்கட்டும் பட்டி தயார் செய்க.

(CA II B . Feb—66)

13. சுரேந்திரனுடைய 1967 மார்ச் திங்கட்கான நடப்புக் கணக்கின் வங்கி அறிக்கையையும் ரொக்க ஏட்டையும், ஒப்பிட்டதில் கீழ்க்கண்டவை விளங்கின.

(i) ரொக்க ஏட்டின்படி வங்கி மேல்வரைப்பற்று ரூ. 4,500

(ii) ரொக்க ஏட்டின் வரவுப் பகுதி ரூ. 150 குறைத்துக் கூட்டப்பட்டிருந்தது.

(iii) சேமிப்பு வங்கிக்கணக்குமீது விடுத்த காசோலை ரூ. 750 நடப்புக் கணக்குமீது விடுத்ததாகக் கூட்டப்பட்டிருக்கிறது.

(iv) சுரேந்திராவின் ஆணையின்படி தவணை வைப்பு மீதான வட்டி ரூ. 900. நடப்புக் கணக்குக்கு 1967-ஏப்ரல் 3-ல் மாற்றப்பட்டது. ஆனால், இது ரொக்க ஏட்டில் 1967 மார்ச் 31-க்கு முன்னால் எடுத்துச் செல்லப்பட்டு விட்டது.

(v) ரூ. 7,500-க்கு விடுத்த காசோலைகள் ரொக்க ஏட்டில் பதிவாகியும் வங்கியில் பணமாக்கப்படவில்லை.

(vi) ரூ. 6,000-க்கான காசோலைகள் வங்கிக்கனுப்பப்பட்டன. ரொக்க ஏட்டில் பதிவாயிருந்தும் வங்கி வரவு வைக்கவில்லை.

(vii) வங்கி அறிக்கையில் காணப்படும் வங்கிக் கட்டணம் ரூ. 75 ரொக்க ஏட்டில் பதிவாகி இருக்கவில்லை.

(viii) இலாப-ஈவு ரூ. 3,000 வங்கியில் நேரடியாகச் செலுத்தப் பட்டிருந்தது. ரொக்க ஏட்டில் இப் பதிவு காணப்பட வில்லை.

(ix) இரபிக்கிடம் விடுத்த ரூ. 200க்கான காசோலைக்கு மாருக நாள் கடந்து விட்டதால் வேருெரு காசோலைவிடப் பட்டது. ஆனுல், இது ரொக்க ஏட்டில் மீண்டும் எழுதப் பட்டது. வேறு பதிவேதும் காணப்படவில்லை. வங்கி யில் கொடுத்து பணம் பெருக் காசோலைகளின் கூட்டுத் தொகையில் மேற்சொன்ன இரு காசோலைகளும் சேர்க்கப் பட்டிருந்தன.

1967 மார்ச் 31-க்கான வங்கி அறிக்கையின்படி உள்ள வங்கி யிருப்பைக் கண்டுபிடி.

(Company Secretaries Exam. Inter—Oct. 1969

14. 31-12-1968 அன்று P. K. சென்குப்தாவின் ஏடுகளி லிருந்து எடுத்த விவரங்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. ரொக்க ஏட்டின்படி வங்கி இருப்பு (மேல்வரைப் பற்று—Over Draft) ரூ. 160.

வங்கி அறிக்கையின்படி இருப்பு (சாதகமானது) ரூ. 120. வெளியூர்க் காசோலைகள்மீது வங்கி வசூலித்த கட்டணம் இன்னும் கணக்கில் எடுத்துக் கொள்ளப்படவில்லை. R. குப்தாவுக்குக் கொடுத்த காசோலை ரூ. 40 தவருக ரொக்கப் பத்தியில் பதியப் பட்டது. ரொக்க ஏட்டின் பற்றுப் பகுதி (வங்கிப் பத்தி) ரூ. 100 குறைத்துக் கூட்டப்பட்டது. வாடிக்கையாளர்களிடமிருந்து பெற்ற காசோலைகள் ரூ. 52 வங்கியில் 30-12-1968-ல் செலுத்தப்பட்டும் 2-1-1969-ல் தான் வங்கி வரவு வைத்தது.

1968-ஆம் ஆண்டில் சரக்களித்தவர்கட்குக் காசோலைகள் ரூ. 288 இன்னும் ரொக்கமாக்கப்படவில்லை.

31-12-1968-க்குரிய வங்கிக் கணக்குச் சரிக்கட்டும் பட்டி தயாரி செய்க.

(Company Secretaries Exam, April 1969)

15. ரொக்க ஏட்டின் வங்கிப் பத்திகள்

| 1955 டிசம்பர் | | ரூ. | 1955 டிசம்பர் | | ரூ. |
|---|---|---|---|---|---|
| 4 | இருப்பு கீ/கொ | 380 | 3 | எடுப்பு | 200 |
| 8 | வால்டர் அன்கோ | 420 | 10 | முர்ரே | 1,190 |
| 17 | டிரம்மன் பிரதர்ஸ் | 1,000 | 17 | வங்கிக் கட்டணம் | 10 |
| 22 | ஸ்கேரஃப் | 1,310 | 21 | கார்லில் அன்கோ | 520 |
| 30 | யூவன் அன்கோ | 300 | 30 | ஹோ அன்கோ | 380 |
| 31 | கார்னர்ஸ் லிமிடெட் | 180 | 31 | எயிட்கின்சன் | 10 |
| | | | | கழிவு | 10 |
| | | | | கூலியும் ஊதியமும் | 400 |
| | | | | இருப்பு கீ/இ | 470 |
| | | 3,590 | | | 3,590 |
| 1956 சனவரி | இருப்பு கீ/கொ | 700 | | | |

வங்கி நகலேடு (X-வுடன் வங்கிக் கணக்கு)

| 1956 | | ரூ. | 1956 | | ரூ. |
|---|---|---|---|---|---|
| சன. 1 | இருப்பு கீ/கொ | 920 | சன. 3 | கார்லில் அன்கோ | 520 |
| 3 | யூவன் அன்கோ | 300 | | ஹேரிஸ் லிமிடெட் | 40 |
| 4 | மெக்லியல்டு | 70 | 6 | யூவன் அன்கோ | |
| 5 | கார்னர்ஸ் | 180 | | காசோலை பணமறுக்கப்பட்டது | 300 |
| 6 | தாவு | 490 | 7 | ஹிக்மேன் அன்கோ | 350 |
| | | | 8 | எயிட்கின்சன் | 110 |

1955 டிசம்பர் 31ஆம் நாளுக்குரிய வங்கிக் கணக்குச் சரிக்கட்டும் பட்டி தயார் செய்க.

(C A II B - 1956)

# 6. துணை ஏடுகள்
## (Subsidiary Books)

எண்ணற்கரிய நடவடிக்கைகள் நிறைந்திருக்கும் இற்றைய தொழில், வணிக நிலையங்களில், அவற்றின் தன்மைக்கேற்பப் பல் வகைத் துணையேடுகளில் அவை பதியப்படுகின்றன என்று முன் அதிகாரத்திலேயே கூறினோம். அவற்றை இங்குக் காண்போம்.

### கொள்முதல் குறிப்பேடு
### (Invoice Book)

கடனுக்குச் சரக்கு வாங்குவது இதில் பதியப் பெறுகிறது. ரொக்கக் கொள்முதல் முதன்முதலில் ரொக்க ஏட்டில் பதியப் பெறுவதால், கடன் கொள்முதலைப் பதியவே இவ்வேடு பயன்படுத் தப்படுகிறது. எப்பொருளில் ஒருவர் வணிகஞ் செய்கிறாரோ அதைக் குறிப்பதுதான் 'சரக்கு' என்று முன்னரே விளக்கியுள்ளோம். எனவே, வேறு சொத்துகளைக் கடனுக்கு வாங்கும்போழ்து, இவ் வேட்டில் பதியக் கூடாது. எடுத்துக்காட்டாக நூல் விற்பனையாளர் (Book Seller) ஒருவர் மேசை, நாற்காலி முதலியவற்றைக் கடன் பேரில் வாங்கும்போழ்து, அதைக் கொள்முதல் குறிப்பேட்டில் பதியக் கூடாது. ஆனால், ஒரு மனைத் துணைப்பொருள் வியாபாரி அவற்றை வாங்கின், அவர் இவ்வேட்டில் அவற்றைப் பதிவர். நாம் சரக்கு வாங்கும்போழ்து அத்துடன் 'இடாப்பு' (Invoice) ஒன்றையும் அனுப்புவர். அனுப்பிய பொருள்களின் எண்ணிக்கை, விலைவீதம். வியாபாரத் தள்ளுபடி, அனுப்புஞ் செலவு, மொத்தத்தில் நாம் செலுத்த வேண்டிய தொகை முதலியவை இதில் குறிப்பிடப்பட் டிருக்கும். 'கடன் பில்'தான் (Credit Bill) இவ்வாறு குறிக்கப்படு கிறது. சரக்கு வாங்கும்போழ்து அத்துடன் இவ்விடாப்பும் நம் மிடம் வருதலால் இதை 'உள் வருமிடாப்பு' (Inward Invoice) எனலாம். எடுத்துக்காட்டாக, இது கீழே காட்டியவாறு அமைந் திருக்கும்.

## மாதிரி இடாப்பு

தொலைபேசி எண் : 456 தந்தி : 'வசதி'

பாண்டி மனைத்துணை விற்பனையாளர்
77, பாரதி தெரு, பாண்டிச்சேரி—1.

இடாப்பு எண் : 11 நாள் : 5-6-1971

பெறுநர் : பாண்டியன் அன்கோ
85, கடைத் தெரு, திண்டிவனம்.

பார்வை : 30-5-1971 நாளிட்ட தங்களின் ஆணை எண் (Order—No.) - 18

மேல் குறிப்பிட்ட ஆணையெண்ணில் கண்டுள்ளபடி, கீழ்க் கண்டவற்றை லாரி வழியாக அனுப்பியுள்ளோம். அதற்கான லாரி வழிச்சீட்டு எண் (Lorry Way Bill No.) 48124 (செலுத்தப் பட்டது—Paid) இத்துடன் இணைத்துள்ளோம். விரைவில் பணஞ் செலுத்தக் கோருகிறோம்.

| எண்ணிக்கை | விவரம் | விலை வீதம் ரூ. | தொகை ரூ | தொகை கா. | தொகை ரூ. | தொகை கா. |
|---|---|---|---|---|---|---|
| 10 | நாற்காலிகள் (மரம்) | 25-00 | 250 | — | | |
| 20 | ,, (இரும்பு) கைகளுடையது | 50-50 | 1,010 | — | | |
| 15 | மடக்கு நாற்காலிகள் (இரும்பு) | 30-00 | 450 | — | | |
| 20 | மடக்கு மேசை (இரும்பு) சிறியது | 40-00 | 800 | — | | |
| | | | 2,510 | — | | |
| | கழிவு : 5% வீ. தள்ளுபடி | | 125 | 50 | | |
| | கூட்டு | | 2,384 | 50 | 2,456 | 04 |
| | விற்பனை வரி 3% | | 71 | 54 | | |
| | கட்டுக் கூலி | | | | 30 | 00 |
| | (ரூபாய் இரண்டாயிரத்து நானூற்று எண்பத்தாறும் காசு நான்கு மட்டும்) | | | | 2,486 | 04 |

பி. வி. நீ.
(பி.வி.நீ. : பிழையும் விடுபிழையும் நீங்கலாக
(E. & O. E. : Errors & Omissions Excepted.)

பழநி
உரிமையாளர்
பாண்டிமனைத்துணை
விற்பனையாளர்

இவ்வாறு நம்மிடம் வரும் இடாப்புக்கு நாம் வரிசை எண் தரவேண்டும். இதனை உள் வரும் இடாப்பு எண் (Inward Invoice Number) என்கிறோம்.

இடாப்பு கிடைத்தவுடன் நாம் கட்டுகளை அவிழ்த்து, இடாப்பில் கண்டுள்ள சரக்கனைத்தும் வந்துள்ளனவா என்பதை அறிய வேண்டும். அவர்கட்கு அனுப்பிய நம் ஆணைப் படிவத்தையும் (Order Form) ஒப்பிட்டு, நாம் கேட்ட பொருள்கள்தான் வந்துள்ளனவா என்பதை உறுதிப்படுத்திக் கொள்ளவேண்டும். வேண்டாப் பொருள்கள் வந்திருப்பினும் அல்லது வந்து சேர்ந்த பொருள்கள் சேதமடைந்திருப்பினும் அவற்றை திருப்பியனுப்ப உடனே ஏற்பாடு செய்யவேண்டும்.

பின்னர், இவ்விடாப்பினை வைத்துக் கொள்முதல் குறிப்பேட்டில் பதியவேண்டும். கொள்முதல் ஏட்டின் மாதிரி கீழ்க் கொடுக்கப்பட்டுள்ளது.

கொள்முதல் குறிப்பேடு

| நாள் 1 | விவரம் 2 | உ.வ. இ.எண் 3 | பே. ப. எண் 4 | தொகை ரூ. 5 |
|---|---|---|---|---|
| | | | | |

பதியும் முறை :

1. நாள்: இங்கு நமக்கு இடாப்பு வந்த நாளினைக் குறிப்பிட வேண்டும்.

2. விவரம்: நாம் யாரிடமிருந்து சரக்கு கடன்பேரில் வாங்கியுள்ளோமோ அவர் பெயரைப் பதிய வேண்டும். என்னென்ன வாங்கினோம் என்ற விவரத்தைக் குறிக்கத் தேவையில்லை.

3. உ.வ.இ. எண்:— இது உள்வரு இடாப்பு எண். நம்மிடம் வந்த இடாப்புக்கு நாம் வரிசை எண் கொடுத்திருக்கிறோமல்லவா? அவ்வெண்ணை இவண் குறிக்க வேண்டும். இங்குக் குறிப்பிடப் பட்ட எண்ணுள்ள இடாப்பை எடுத்துப் பார்த்தால், எப்

பொருள்கள் வாங்கினோம், விலை வீதம் தள்ளுபடி எவ்வளவு போன்ற விவரங்களை உடனே அறிந்திடலாம்.

4. பே. ப. எண். விவரப் பத்தியில் குறிப்பிடப்பட்டுள்ள ஆள் சார் கணக்குப் பேரேட்டில் எப்பக்கத்தில் உள்ளது என்பதை இதை உணர்த்துகிறது.

5. தொகை தள்ளுபடி போக இறுதியில் நாம் செலுத்த வேண்டிய தொகையை மட்டிலுமே இங்கு எழுத வேண்டும்.

எடுத்தெழுது முறை (Posting)

திங்களொரு முறையோ, குறிப்பிட்ட காலத்திற்கொரு முறையோ, கொள்முதல் குறிப்பேடு கூட்டப்படும். அந்தத் திங்களில் நாம் மொத்தம் கடனுக்குச் சரக்கு வாங்கிய தெவ்வளவு என்பதை இக் கூட்டுத் தொகை உணர்த்துகிறது. இத் தொகையைப் பேரேட்டில் உள்ள 'கொள்முதல் கணக்கில்' பற்றுப் பக்கத்தில் எடுத்தெழுத வேண்டும். இதனால் பெரும் உழைப்புத் தவிர்க்கப் படுகிறது. (தனித்தனியே பற்று வைக்கக் கூடாது.) நாம் சரக்கு வாங்கிய ஒவ்வொருவருக்கும் தனித்தனிக் கணக்குகள் பேரேட்டில் எழுதி அவற்றில் வரவு வைக்கவேண்டும்.

நினைவிற்கொள்க: கொள்முதல் குறிப்பேட்டின் மொத்தத் தொகையைக் கொள்முதல் கணக்கில் பற்றுவைக்க வேண்டும். அவ் வேட்டில் காணப்பெறும் ஆள்சார் கணக்குகளில் தனித்தனியே வரவு வைக்கவேண்டும்.

எடுத்துக்காட்டு 14:

கீழ்க் கொடுக்கப்பட்ட நடவடிக்கைகளைச் சுந்தர் புக் டிப்போவின் கொள்முதல் குறிப்பேட்டில் பதிந்து பேரேட்டுக் கணக்குகளில் பெயர்த் தெழுதுக:—

செப்டம்பர், 1971.

10. பாண்டிச்சேரி பொதிகைப் பதிப்பகத்திடம்

60-புகுமுக வணிகவியல் (கு. ஆ. பிள்ளை) ரூ. 7 வீதம் (15% வி. தள்ளுபடியில்)

24-பட்டவகுப்பு ஐரோப்பிய வரலாறு

(திரு ஆலாலம்) ரூ. 5.50 வீதம் (15% வி. தள்ளுபடியில்)

25. திருச்சி புதுமைப் பதிப்பகத்திடம் வாங்கியது.
20-'வங்கிகளின் வளர்ச்சி' ரூ. 15 வீதம் (20% வி. தள்ளுபடி.)

12-'சங்க காலம்-ஒரு மதிப்பீடு' ரூ. 5% வீதம் (25% வி. தள்ளுபடி)

28. நாதன் கம்பனியிடம் வாங்கிய நூல்களின் மதிப்பு ... ரூ. 1,750

விடை :

சுந்தர் புக் டிப்போவின்
கொள்முதல் குறிப்பேடு

| நாள் | விவரம் | உ.இ. எ. | பே.ப. எ. | தொகை | |
|---|---|---|---|---|---|
| 1971 | | | | | |
| | | | | ரூ. | |
| செப். 10. | பொதிகைப் பதிப்பகம் | | | 469 | 20 |
| ,, 25 | புதுமைப் பதிப்பகம் | | | 285 | — |
| ,, 28 | நாதன் கம்பனி | | | 1,750 | — |
| | | | | 2,504 | 20 |

பேரேட்டுக் கணக்குகள்

ப கொள்முதல் கணக்கு வ

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1971 செப். 30 | பல் வகை | | ரூ 2,504 | 20 | | | | ரூ | |

பொதிகைப் பதிப்பகம்

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | ரூ | | 1971 செப். 10 | கொள் முதல் | | ரூ 469 | 20 |

புதுமைப் பதிப்பகம்

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | ரூ. | | 1971 செப். 25 | கொள் முதல் | | ரூ. 285 | |

நாதன் கம்பனி

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | ரூ. | | 1971 செப். 28 | கொள் முதல் | | ரூ. 1,750 | |

## விற்பனைக் குறிப்பேடு
## (Sales Book)

ரொக்க விற்பனை ரொக்க ஏட்டில் முதலில் எழுதப்படும் என்பதை நாம் உணர்வோம். நாம் கடன் பேரில் சரக்கு விற்பதையெல்லாம் முதன் முதலில் விற்பனைக் குறிப்பேட்டில்தான் குறிக்க வேண்டும். கடன்பேரில் பிற சொத்துக்களை விற்ருல், அவற்றை இவ்வேட்டில் பதியக் கூடாது. எனவே, கடனுக்கு விற்கும் சரக்கு மட்டிலுமே இதில் பதியப் பெறும். சரக்கு விற்கும் போழ்து அத்துடன் 'இடாப்பு' தயாரித்து அனுப்புவோம். இவ்விடாப்பு 'வெளிச்செல் இடாப்பு' (Outward Invoice) எனப்படும். வரிசை எண் இடப்பட்டுள்ள இவ்விடாப்பின் நகல் நம்மிடம் இருக்கும். அதன் துணைகொண்டே விற்பனைக் குறிப்பேடு தயாரிக்கப்படுகிறது. அதன் மாதிரி கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

விற்பனைக் குறிப்பேடு

| நாள் 1 | விவரம் 2 | வெ. இ.எண் 3 | பே. பே. எண் 4 | தொகை ரூ. 5 |
|---|---|---|---|---|
| | | | | |

முதல் பத்தியில் சரக்கு விற்ற நாளும், இரண்டாவது பத்தியில் நாம் யாருக்குச் சரக்கு விற்ருேமோ அவர் பெயரையும் எழுத வேண்டும். பிற விவரங்கள் தேவையில்லை. காரணம், மூன்ருவது பத்தியில் குறிப்பிடப்படும் எண்ணுள்ள வெளிச்செல் இடாப்பினைப் பார்த்து என்ன விற்ருேம், விலை வீதம், அளித்த தள்ளுபடி போன்ற விவரங்களை உணர்ந்து கொள்ளலாம். தள்ளுபடிபோக நாம் பெற வேண்டிய நிகரத் தொகையைத்தான் தொகைப்பத்தியில் எழுதவேண்டும்.

எடுத்தெழுதும் முறை

மொத்த விற்பனைக் குறிப்பேடு—திங்கள் ஒரு முறை கூட்டப் படும். இக் கூட்டல் தொகை, நாம் கடன்பேரில் சரக்கு விற்ற மொத்தத் தொகையை உணர்த்துகிறது. இத் தொகையை விற்பனைக் கணக்கின் வரவுப்பகுதியில் எழுத வேண்டும். நம்மிடம் கடனுக்கு வாங்கிய ஒவ்வொருவர்க்கும் தனித்தனிக் கணக்கு, பேரேட்டில் தொடங்கி அதற்கான தொகையைத் தனித்தனியே அவற்றில் பற்று வைக்க வேண்டும்.

நினைவிற் கொள்க: விற்பனைக் குறிப்பேட்டின் மொத்தத் தொகையை விற்பனைக் கணக்கில் வரவு வைக்க வேண்டும். இவ் காணப்பெறும் ஆள்சார் கணக்குகளில் தனித்தனியே பற்று வைக்க வேண்டும்.

எடுத்துக் காட்டு 15:

கீழ்க் கொடுக்கப்பட்ட நடவடிக்கைகளை மதியொளி மின் பொருட்கடையின் விற்பனைக் குறிப்பேட்டில் பதிந்து, உரிய பேரேட்டுக் கணக்குகளில் எடுத்தெழுதுக:—

*1971*

**ஆகஸ்டு** *8.* கடலூரர், பாம்பே எலக்ட்ரிகல்ஸிடம் விற்றது:
*50 — 25* வாட்ஸ் பல்புகள் ரூ. *1-75* வீதம்
*20 — 40* வாட்ஸ் பல்புகள் ரூ. *1-75* வீதம்

*10.* நம்பி அன்கோவிடம் விற்றவை:
*10* - மேசை விளக்கு ரூ. *20* வீதம்
*20* - எலக்ட்ரிக் ஹீட்டர்ஸ் ரூ. *25* வீதம்

*23.* நல்ல முத்துவிடம் ரூ. *500*-க்கான பொருள்கள் *5%* வியாபாரத் தள்ளுபடியில் விற்றது.

விடை: விற்பனைக் குறிப்பேடு

| நாள் | விவரம் | வெ. இ. எ. | பே. ப. எ. | தொகை ரூ. | |
|---|---|---|---|---|---|
| 1971 ஆக. 8 | பாம்பே எலக்டிரிகல்ஸ், கடலூரர். | | | 122 | 50 |
| ,, 10 | நம்பி அன்கோ | | | 700 | — |
| ,, 23 | நல்ல முத்து | | | 475 | — |
| | | | | 1,297 | 50 |

## பேரேட்டுக் கணக்குகள்.

ப விற்பனைக் கணக்கு வ

| | | | ரூ | | | | | ரூ | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | 1971<br>ஆக.31 | பல்வகை | | 1,297 | 50 |

பாம்பே எலக்ட்ரிகல்ஸ், கடலூர்

| | | | ரூ | | | | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1971<br>ஆக. 8 | விற்பனை | | 122 | 50 | | | | | |

நம்பி அன் கோ

| | | | ரூ | | | | | ரூ | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1971<br>ஆக.10 | விற்பனை | | 700 | | | | | | |

நல்ல முத்து

| | | | ரூ | | | | | ரூ | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1971<br>ஆக.23 | விற்பனை | | 475 | | | | | | |

## கொள்முதல் திருப்ப ஏடு
## (Purchase Returns Book)

நாம் வாங்கிய சரக்கில் சில வரும் வழியில் மிகவும் சேதமுற்றிருக்கலாம்; அல்லது நாம் குறிப்பிடாதவற்றைத் தவருக அனுப்பியிருக்கலாம்; அல்லது வேண்டிய அளவினும் அதிகம் அனுப்பியிருக்கலாம். அவற்றை நாம் திருப்பியனுப்பவேண்டும். இதனைக் கொள் முதல் திருப்பம் என்கிறோம். அதாவது நாம் வாங்கிய சரக்கை யாரிடம் வாங்கினேமோ அவரிடமே திருப்பி விடுகிறோம். கொள்முதல் திருப்ப நடவடிக்கைகளை முதன் முதலில் பதியப் பயன்படும் ஏடு கொள்முதல் திருப்ப ஏடு எனப்படும். இந்நிலையில் நாம் அனுப்பும் சரக்கு வெளிச் செல்வதால் இதை 'வெளித் திருப்பம்' என்றும் கொள்முதல் திருப்ப ஏட்டை வெளித்திருப்ப ஏடு (Returns Outward Book) என்றும் அழைப்பதுண்டு.

பற்றுக் குறிப்பு: (Debit Note)

நாம் சரக்கைத் திருப்பியனுப்பும் போழ்து அத்துடன் அது பற்றிய குறிப்பொன்றையும் அனுப்ப வேண்டும். அதில் நாம் திருப்பியனுப்பும் சரக்கு பற்றிய விவரம், அளவு, விலைவீதம் தள்ளுபடிபோக நிகர மதிப்பு போன்ற விவரங்கள் அடங்கியிருக்கும். யாருக்குத் திருப்பியனுப்புகிறோமோ அவர் கணக்கில் இத்தொகை பற்று வைக்கப் படுகிறது என்பதை இக்குறிப்பு உணர்த்துவதால் இதனைப் 'பற்றுக் குறிப்பு' (Debit Note) என்கிறோம்.

சரக்கு வாங்கியவர் விற்றவர்க்குக் கீழ்க்கண்ட நிலைகளில் பற்றுக் குறிப்பை அனுப்புவார்:

1. வேண்டப் பெருத அல்லது விற்க முடியா வண்ணம் வரும் வழியில் சேதமுற்ற அல்லது தேவைக்கும் அதிகமாக அனுப்பியுள்ள சரக்கைத் திருப்பியனுப்பும் போழ்து.

2. விற்பவர் தனது இடாப்பில் தவருக அதிக விலையைக் குறித்திருந்தால், அதிகமாகக் குறிப்பிடப்பட்ட தொகைக்குப் பற்று வைத்து இது அனுப்பப்படும்.

3. குறிப்பிட்ட விலையினும் தவருகக் குறைந்த விலையை இடாப்பில் குறித்திருந்தால், விற்றவர் வாங்கியவர்க்கு அத்தொகைக்கான பற்றுக் குறிப்பை அனுப்புவார்.

பற்றுக் குறிப்பு சாதாரணமாகக் கறுப்பு அல்லது நீல மையில் தயாரிக்கப்பட்டிருக்கும். இதன் மாதிரி கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

**பற்றுக் குறிப்பு**
**என். எஸ். பிரதர்ஸ்,**
**துணியணி விற்பனையாளர்,**
**71, லாரன்ஸ் ரோடு,**
**கடலூர்-2**

எண்: 11 நாள்: 15-2-1971

பெறுநர்: காவேரி ஸில்க் ஹவுஸ்,
125, அண்ணாசாலை,
சென்னை-2.
பார்வை: 10-2-1971 நாளிட்ட தங்களின்
இடாப்பு எண், 112

அன்புடையீர்,

எங்கள் ஆணை எண் 110-ல் வேண்டப்பெறாத கீழ்க் கண்ட வகைகள் திருப்பியனுப்பப்படுகின்றன. எனவே, தங்கள் கணக்கில் ரூபாய் தொள்ளாயிரம் பற்றுவைக்கப்படுகிறது.

| எண்ணிக்கை | விவரம் | விலை வீதம் ரூ. | தொகை ரூ. | தொகை ரூ. |
|---|---|---|---|---|
| 10 | டெரிகாட் சட்டை (ஃபேஷன் பேலஸ் அளவு 36 செ. மீ.) | 60.00 | 600.00 | |
| 5 | டெரிகாட் ஸ்லாக் (ஃபேஷன் பேலஸ் அளவு 36 செ. மீ.) | 40.00 | 200.00 | |
| 20 | 2 × 2—துணி (பாரதி மில்ஸ்) | 10.00 | 200.00 | |
| | | | 1000.00 | |
| | கழி: 10% வி. தள்ளுபடி | | 100.00 | 900.00 |

இளவழகன்
உரிமையாளர்

வரிசை எண் இடப்பட்டுள்ள இப்பற்றுக் குறிப்பின் நகல் நம்மிடம் இருப்பதால் இதைக் கொண்டே நாம் கொள்முதல் திருப்ப ஏட்டில் பதிகிறோம். கொள்முதல் திருப்ப ஏடு அடுத்து வரும் பக்கத்தில்(129) காட்டிய வகையில் கோடிடப் பட்டிருக்கும்.

முதல் பத்தியில் நாம் சரக்கைத் திருப்பியனுப்பிய நாளையும், இரண்டாம் பத்தியில் யாருக்கு அது திருப்பியனுப்பப்படுகிறது என்பதையும் மூன்றும் பத்தியில் சரக்குடன் அனுப்பப்பட்ட பற்றுக்

கொள்முதல் திருப்ப ஏடு.

| நாள் 1 | விவரம் 2 | ப.கு.எ. 3 | பே.ப.எ. 4. | தொகை 5 ரூ. |
|---|---|---|---|---|
| | | | | |

குறிப்பின் எண்ணையும், நான்காம் பத்தியில் சரக்கு திருப்பி யனுப்பப் பெறுநர் கணக்கு பேரேட்டில் எப்பக்கத்தில் உள்ளதென் பதையும், ஐந்தாம் பத்தியில் திருப்பியனுப்பப்பட்ட சரக்கின் தள்ளுபடிபோக நிகரமதிப்பையும் குறிக்கவேண்டும். நான்காம் பத்தியில் குறிப்பிடப்பட்ட எண்ணுள்ள பற்றுக் குறிப்பை நோக்கின் திருப்பியனுப்பட்ட சரக்கின் விவரத்தை உணர்ந்து கொள்ளலாமாதலால், விவரப்பத்தியில் வேறு விவரம் தேவை யில்லை. சரக்கனுப்பப் பெறுநரின் பெயரை மட்டும் எழுதிடின் போதும்.

எடுத்தெழுது முறை

கொள்முதல் திருப்ப ஏட்டினைத் திங்கள்தோறும் கூட்டலாம். இக் கூட்டல் தொகை நாம் பலருக்கும் திருப்பியனுப்பிய சரக்கின் மதிப்பை உணர்த்துகிறது. இதனைக் கொள்முதல் திருப்பக் கணக்கில் வரவு வைக்கவேண்டும். விவரப்பத்தியில் உள்ள ஆள்சார் கணக்குகளில் தனித்தனியே பற்றுவைக்கவேண்டும்.

எடுத்துக் காட்டு 16:

கீழ்க் காணும் நடவடிக்கைகளை திரு. நான்முகனின் கொள் முதல் திருப்ப ஏட்டில் பதிந்து பேரேட்டுக் கணக்குகளில் எடுத் தெழுதுக:

1971

அக்டோபர்

11. பஞ்சநாதனிடம் திருப்பியனுப்பியவை.
    1-மூட்டை சர்க்கரை ... ரூ. 195
    50-கிலோ காப்பிக் கொட்டை ஒரு கிலோ ரூ. 10 வீதம்
22. ஆறுமுகத்திடம் திருப்பியனுப்பிய சரக்கின் மதிப்பு ... ரூ. 500,
    (10% தள்ளுபடிக் குட்பட்டது.)
30. ஏழுமலை பண்டசாலையிடம் திருப்பியனுப்பியவை.
    50-கிலோ பச்சரிசி 1 கிலோ ரூ. 1.50 வீதம்.
    20-கிலோ புழுங்கலரிசி 1 கிலோ ரூ. 1-10 வீதம்.

**விடை:**

கொள்முதல் திருப்ப ஏடு

| நாள் | விவரம் | ப. கு. எ. | பே. ப. எ. | தொகை ரூ | |
|---|---|---|---|---|---|
| 1971 | | | | | |
| அக். 11 | பஞ்ச நாதன் | | | 695 | — |
| ,, 22 | ஆறுமுகம் | | | 450 | — |
| ,, 30 | ஏழுமலை பண்டசாலை | | | 97 | — |
| | | | | 1,242 | — |

பேரேட்டுக் கணக்குகள்

ப கொள்முதல் திருப்பக் கணக்கு வ

| | | | ரூ | | | | | ரூ |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | 1971 அக். 31 | பல் வகை | | 1,242 |

பஞ்ச நாதன்

| | | | ரூ | | | | | ரூ |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1971 அக். 11 | கொள் முதல் திருப்பம் | | 695 | — | | | | |

ஆறுமுகம்

| | | | ரூ | | | | | ரூ |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1971 அக். 11 | கொள் முதல் திருப்பம் | | 450 | — | | | | |

ஏழுமலை பண்டசாலை

| | | | ரூ | | | | | ரூ |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1971 அக். 30 | கொள் முதல் திருப்பம் | | 97 | — | | | | |

## விற்பனைத் திருப்ப ஏடு.
## (Sales Returns Book)

பல்வகைக் காரணங்களை முன்னிட்டு நாம் சரக்கைத் திருப்பி யனுப்புவது போன்றே நம்மிடம் வாங்கியோர் சரக்கை நமக்குத் திருப்பியனுப்புவதும் உண்டு. இதனை விற்பனைத் திருப்பம் (Sales Return) என்கிறோம். விற்ற சரக்கு நம்மிடம் திருப்பியனுப் பப்படும்பொழுது உள் வருவதால், விற்பனைத் திருப்பத்தை 'உள் திருப்பம்' (Returns Inward) என்பதும் உண்டு.

நம்மிடம் சரக்கு வரும்போழ்து அத்துடன் அதனைத் திருப்பி யனுப்பியவர் நம் கணக்கைப் பற்றுவைப்பதாகக் கூறும் பற்றுக் குறிப்பையும் அனுப்புவாரன்றோ? பற்றுக் குறிப்பில் கூறியுள்ள சரக்கு வந்துள்ளதா என்று கண்டு அது வந்து சேர்ந்ததற்கான அறிவிப்பை அனுப்ப வேண்டும். நம்மிடம் சரக்கைத் திருப்பி யனுப்புவர் கணக்கில் அத் தொகைக்கு நாம் வரவு வைப்பதாகக் கூறும் 'வரவுக் குறிப்பு' ஒன்று தயார் செய்து அனுப்புவது வழக்கம்.

வரவுக் குறிப்பு கீழ்க் கண்ட நிலைகளில் சரக்கு விற்றவர் தம்மிடம் வாங்கியவருக்கு அனுப்புகிறார் :

1. தாம் விற்ற சரக்குத் தம்மிடம் திருப்பியனுப்பும்போழ்து
2. தவறாக அதிக விலையைத் தாம் அனுப்பிய இடாப்பில் குறித்திருப்பின் அதிகமாகக் குறிப்பிட்ட தொகைக்கு வரவுக் குறிப்பு அனுப்பப்படும்.
3. உரிய விலையினும் குறைந்த விலையில் இடாப்பு தயாரிக்கப் பட்டு அனுப்பியிருப்பின் சரக்கு வாங்கியவர் விற்றவர்க்கு வரவுக் குறிப்பினை அனுப்புகிறார்.

சாதாரணமாக வரவுக் குறிப்பு சிவப்பு மையினால் அச்சிடப் பட்டிருக்கும். இது கீழ்க் காட்டியவாறு அமைந்திருக்கும்.

வரவுக் குறிப்பு
கல்லூரி நூல் விற்பனை நிலையம்.
237, சேலம் சாலை,
நாமக்கல்.

எண் : 33. நாள் : 5-8-1971

பெறுநர் : சேலம் டிரேடிங் கார்ப்பரேஷன்,
34, பெரிய கடைத் தெரு,
சேலம்

பார்வை : 18 எண்ணுள்ள தங்களின் பற்றுக் குறிப்பு.

அன்புடையீர்,

கீழ்க் குறிப்பிடப்பட்டவற்றைத் தாங்கள் திருப்பியனுப்பிய வகையில் தங்கள் கணக்கில் ரூ. 105-06 (ரூபாய் நூற்றுஐந்தும் காசு ஆறும்) வரவு வைக்கப்படுகிறது.

| அளவு | விவரம் | விலை வீதம் ரூ | தொகை ரூ | தொகை ரூ. |
|---|---|---|---|---|
| 50 | நோட் புக் (200 பக்கம்) | 0-65 | 32-50 | |
| 20 | தாவர வியல் பதிவேடு | 3-25 | 65-00 | |
| 18 | பென்சில் | 0-25 | 4-50 | |
| | | | 102-00 | |
| | விற்பனை வரி 3% | | 3-06 | 105-06 |

தங்களன்புள்ள,
பாரதி
மேலாளர்

வரவுக் குறிப்பு வரிசை எண்ணிடப்பட்டிருக்கும். இவ்வாறு நாம் அனுப்பும் வரவுக் குறிப்பின் நகல் நம்மிடம் இருக்கும். இதன் துணைகொண்டு விற்பனைத் திருப்ப ஏடு பதியப்படுகிறது. விற்பனைத் திருப்ப ஏடு கீழ்க் கண்ட வகையில் அமைந்திருக்கும்.

விற்பனைத் திருப்ப ஏடு

| நாள் | விவரம் | வ.கு. எண். | பே. ப. எண். | தொகை ரூ. |
|---|---|---|---|---|
| | | | | |

விவரப் பத்தியின்கீழ் யாரிடமிருந்து சரக்குத் திரும்பிவந்தது என்பதைக் குறிக்க வேண்டும். நான்காவது பத்தியில் குறிப்பிடப் பட்டுள்ள எண்ணுள்ள வரவுக் குறிப்பைப் பார்த்தால், நமக்குத் திரும்பிவந்த சரக்கு பற்றிய விவரத்தை உணர்ந்து கொள்ளலாம் அல்லவா? திரும்பிவந்த சரக்கின் நிகர மதிப்பைத்தான் (தள்ளுபடி போக உள்ளது) தொகைப் பத்தியில் குறிக்க வேண்டும்.

எடுத்தெழுதும் முறை

திங்கள்தோறும் விற்பனைத் திருப்ப ஏட்டைக் கூட்டலாம். ஒரு திங்களில் மொத்தம் நமக்குத் திரும்பிவந்த சரக்கின் மொத்த மதிப்பை இக் கூட்டல் தொகை உணர்த்துகிறது. இத் தொகையை விற்பனைத் திருப்பக் கணக்கில் பற்று வைக்க வேண்டும். விற்பனைத் திருப்ப ஏட்டில் விவரப் பத்தியில் உள்ள ஆள்சார் கணக்குகளில் தனித்தனியே வரவு வைக்க வேண்டும்.

எடுத்துக் காட்டு 17 :

கீழ்க் கொடுக்கப்பட்ட நடவடிக்கைகளை நாதன் பதிப்பகத்தின் விற்பனைத் திருப்ப ஏட்டில் பதிந்து பேரேட்டுக் கணக்குகளில் எடுத்தெழுதுக.

*1969*

நவம்பர். 17:

மலர்விழி நூல் நிலையத்திடமிருந்து திரும்பி வந்தவை :
25 படிகள்-வணிகவியல் நூல்கள் (இளங்கோ எழுதியது) ரூ. 8 வீதம்.
(15%வி. தள்ளுபடி அளிக்கப்பட்டிருந்தது.)

50 படிகள்-தமிழ்த் துணைவன் (புகுமுக வகுப்பு) அரசு எழுதியது. ரூ. 500 வீதம்.
(25%வி. தள்ளுபடிக்குட்பட்டது.)

22. பாப்புலர் புக் டிப்போவிடம் திருப்பியனுப்பியவை.
10 படிகள்-புகுமுக வகுப்பு பொருளாதாரம் (சிவஞானம் எழுதியது) ரூ. 4.00 வீதம்.
(15% தள்ளுபடிக்குட்பட்டது.)

விடை :

விற்பனைத் திருப்ப ஏடு

| நாள் | விவரம் | வ.கு. எ. | பே. ப. எ. | தொகை ரூ | |
|---|---|---|---|---|---|
| 1971 | | | | | |
| நவ 17 | மலர் விழி நூல் நிலையம் | | | 357 | 50 |
| ,, 22 | பாப்புலர் புக் டிப்போ | | | 34 | — |
| | | | | 391 | 50 |

## பேரேட்டுக் கணக்குகள்

ப விற்பனைத் திருப்பக் கணக்கு வ

| | | | ரூ | | | | | ரூ | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1971 நவ 30 | பல் வகை | | 391 | 50 | | | | | |

ப மலர் விழி நூல் நிலையம் வ

| | | | ரூ | | | | | ரூ | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | 1969 நவ 17 | விற்பனைத் திருப்பம் | | 357 | 50 |

ப பாப்புலர் புக் டிப்போ வ

| | | | ரூ | | | | | ரூ | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | 1969 நவ 22 | விற்பனைத் திருப்பம் | | 34 | |

### வினாக்கள்

1. துணை ஏடுகள் யாவை? அவை ஏன் பயன்படுத்தப் படுகின்றன?
2. பற்றுக்குறிப்பு எனில் என்ன? அது எச் சூழ்நிலைகளில் அனுப்பப் படுகிறது?
3. வரவுக் குறிப்பின் மாதிரி ஒன்றை வரைக. அது ஏன் எப்பொழுது அனுப்பப்படுகிறது?

### பயிற்சி

1. கீழ்க்கண்ட நடவடிக்கைகளைத் திரு கம்பனின் கொள் முதல், விற்பனை ஏடுகளில் பதிந்து கணக்குகளில் பெயர்த் தெழுதுக.

1971

சனவரி 2, சென்னை கமர்ஷியல் எலக்ட்ரிக் ஸ்டோர்ஸிடம் விற்றது.
10 மின் விசிறி 56" ரூ. 300 வீதம்
48 பல்புகள் (40 வாட்ஸ்) ரூ. 1-25 வீதம்

15. இன்டியன் எலக்ட்ரான்சிடம் திருப்பியனுப்பியவை:
5 மேசை விசிறிகள் ரூ. 200 வீதம்
(இவற்றிற்கு 10% தள்ளுபடி உண்டு)

,, ஜெனரல் எலக்ட்ரிக் கம்பனியிடம் வாங்கிய
மின் பொருள்களின் மதிப்பு ...... ரூ. 1,200
(10% தள்ளுபடி உண்டு)

16. இன்டியன் எலக்ட்ரான்சிடம் வாங்கிய
மின் பொருள்களின் மதிப்பு ... ரூ 2,500

20. கமர்ஷியல் எலக்ட்ரிக் ஸ்டோர்ஸிடம் விற்றது ரூ.750

22. ஜெனரல் எலக்ட்ரிக் கம்பனியிடம் திருப்பி
யனுப்பியது ரூ. 200
(10% வி. தள்ளுபடிக்குட்பட்டவை

25. ஃபஷன் ட்ரேடர்சிடம் விற்றது:—
5 மேசை மின் விளக்கு ரூ. 30 வீதம்
2 பெட்டி போடும் மின் கருவி ரூ. 45 வீதம்
(Electric Iron Box)
(5% வி. தள்ளுபடிக்குட்பட்டது)

26. கார்னர் ஷாப்பிடமிருந்து திரும்பி வந்த
மின்பொருள்கள் ......... ரூ. 100
ஜெனரல் எலக்ட்ரிக் கம்பெனியிடம் வாங்கிய
சரக்கின் மதிப்பு ......... ரூ. 750

28. சென்டினரி எலக்ட்ரிக் ஸ்டோர்ஸிடம்
10% வி. தள்ளுபடியில் விற்றவை.
10 மின் அடுப்பு ... ரூ. 15 வீதம்
24 ஸ்விட்ச் ... ரூ. 1.25 வீதம்

(2) கீழ்க் கொடுக்கப்பட்ட நடவடிக்கைகளிலிருந்து

1971 இளங்கோவின் துணை ஏடுகளில் பதிந்து பேரேட்டுக் கணக்கு களில் பெயர்த் தெழுதி இருப்புக் கட்டுக.

| | | ரூ |
|---|---|---|
| ஃபிப். 1 | ரொக்கம் கையிருப்பு | 1,225 |
| 4 | விற்பனை | 500 |
| | தாவீதுவிடம் வாங்கிய சரக்கு | 1,500 |
| 5 | சாலமனிடம் விற்றது | 750 |
| 6 | தாவீதிடம் திருப்பியனுப்பிய சரக்கு | 100 |
| 10 | வாடகை கொடுத்தது | 150 |
| 11 | மோசசிடம் 7½% தள்ளுபடியில் வாங்கிய சரக்கின் மதிப்பு | 800 |
| 12 | சாலமனிடம் 5% தள்ளுபடியில் விற்றது | 200 |
| 18 | சாலமனிடமிருந்து பெற்றது | 100 |
| 19 | தாவீதுக்குக் கொடுத்தது | 550 |
| 21 | மோசசிடம் திருப்பியனுப்பிய சரக்கு | 200 |
| | ஜோஸப்பிடம் விற்றது | 750 |
| 23 | மோசசிடம் வாங்கியது | 1,200 |
| 25 | ஜோஸப் திருப்பியனுப்பிய சரக்கு | 100 |
| 26 | சாலமன் செலுத்திய ரொக்கம் | 200 |

*3.* கீழே கொடுக்கப்பட்ட நடவடிக்கைகளிலிருந்து வள்ளுவனின் துணையேடுகளைத் தயாரித்து, உரிய கணக்குகளில் எடுத்தெழுதி இருப்புக் கட்டுக.

*1971 மார்ச் 31* —க்கான இருப்புப் பட்டியலையும் தயாரிக்க:

1971 ரூ.

மார்ச் 5 சாத்தனாரிடம் வாங்கியவை:

25 மூட்டை ஆத்தூர் கிச்சிலி சம்பா நெல் மூட்டை ரூ. 45 வீதம்

10 ,, துவரம் பருப்பு மூட்டை ரூ. ..........

,, 10 இளங்கோவிடம் விற்றவை ...

50 மூட்டை சர்க்கரை மூட்டை ரூ. வீதம்

10 குவிண்டால் புளி (பங்களூர்)

,, 11 சாத்தனாரிடம் திருப்பியனுப்பிய 2 மூட்டைநெல்

15 ரொக்க விற்பனை ... 2,750

சாத்தனாரிடம் செலுத்தியது ... 700

17 செங்குட்டுவனிடம் 5% தள்ளுபடியில் வாங்கிய சரக்கு ... 800

18 இளங்கோவிடம் பெற்றது ... 500

20 செங்குட்டுவனுக்குத் திருப்பியனுப்பிய சரக்கு ... 100

25 இளங்கோவிடம் விற்றது ... 750

26 செங்குட்டுவனிடம் வாங்கியவை:

10 மூட்டைக் காப்பிக் கொட்டை (அரபிக் மூட்டை) ரூ. வீதம்

குவின்டால் கடலைப் பருப்பு 1 குவிண்டால் விலை வீதம்

31. ரொக்கக் கொள்முதல் ... ரூ. 575

*4.* கீழ்க்கொடுக்கப்பட்ட நடவடிக்கைகளைத் திரு பாரியின் பல்வகைத் துணையேடுகளில் பதிந்து, பேரேட்டுக் கணக்குகளில் எடுத்தெழுதி இருப்புக் கட்டுக.

| 1971 | | | ரூ. |
|---|---|---|---|
| ஏப்ரல் 1 | மனைத்துணைப் பொருள் விற்பனை | ... | 2,00 |
| | ஓரியிடம் 10% தள்ளுபடியில் வாங்கிய மேஜை நாற்காலிகளின் மதிப்பு | | 1,000 |
| 3 | ரொக்கக் கொள்முதல் | ... | 250 |
| 4 | காரியிடம் விற்றது சரக்கின் மதிப்பு 5% வி. தள்ளுபடியில் | ... | 500 |
| 8 | விளம்பரச் செலவு | ... | 100 |
| | காரியிடம் பெற்றது | ... | 250 |
| 9 | குமணனிடம் விற்ற அலமாரிகள் | | 1,200 |
| 14 | ஓரியிடம் திருப்பியனுப்பிய மேஜையின் மதிப்பு | ... | 200 |
| 15 | சீதக்காதியிடம் வாங்கியது | ... | 2,000 |
| 18 | ஓரிக்குச் செலுத்தியது | ... | 400 |
| 19 | கூலிகொடுத்தது | ... | 300 |
| 20 | குமணனிடமிருந்து திரும்பி வந்த சரக்கு | ... | 150 |
| | கொள்முதல் | ... | 400 |
| | ரொக்க விற்பனை | ... | 730 |
| 21 | சிபியிடம் வாங்கியவை: 5 அலமாரிகள் ரூ. 250 வீதம் 10 மேசைகள் ரூ. 75 வீதம் | | |
| 22 | ஓரிக்குக் கொடுத்தது | ... | 320 |
| | கழிவுபெற்றது | ... | 75 |
| 26 | அரசினர் கடன் பத்திரங்களில் முதலீடு செய்தது | ரூ. | 500 |
| 27 | சிபியிடம் திருப்பியனுப்பியவை; 2 அலமாரிகள் 1 மேசை | | |
| 30 | சிபிக்குச் செலுத்தியது | | 425 |

# 7. துணை ஏடுகள் (தொடர்ச்சி)—
## உண்டியல்
## (Subsidiary Records (Continued)—Bills)

சரக்கு வாங்குதல், விற்றல், திருப்பியனுப்புதல், திருப்பப் பெறுதல்—இவற்றிற்கான நடவடிக்கைகளை எவ்வாறு உரிய துணையேடுகளில் பதிந்து, பேரேட்டுக் கணக்குகளில் எடுத்தெழுதுவது என்பதை முன்னதிகாரத்தில் கண்டோம். உண்டியல் பற்றிய நடவடிக்கைகள் நிகழும் போழ்து, எவ்வாறு எவ்வேடுகளில் பதிவதென்பதைக் இவண் விளக்குவோம்.

கடன் பேரில் சரக்கு விற்றவர் தம்மிடம் வாங்கியவரிடம் குறிப்பிட்ட தவணையில் பணம் பெற விரும்புவது இயற்கையே. சரக்கு வாங்கியவர் குறிப்பிட்ட நாளில் பணந்தர ஒப்புக் கொள்வது எழுத்து வடிவத்தில் இருப்பின், நலம் மிக பயக்கும் என்பதில் ஐயமில்லை. இவ்வாறு, வாங்கியவர் பணந்தர ஏற்றுக் கொள்ளும் உறுதி மொழி வணிக வழக்கில் சிறப்புத் தன்மை பெற்று விளங்குகிறது. இது உண்டியலாகவோ (Bill of Exchange) அல்லது கடனுறுதிச் சீட்டாகவோ (உறுதிப் பத்திரமாகவோ—Promissory Note) இருக்கும்.

சோமு, வேணுவிடம் ரூ. 500-க்குச் சரக்கு விற்பதாகக் கொள்வோம். சோமுவுக்குப் பணஞ் சேர வேண்டியுள்ளதால் அவர் கடனீந்தோர். சரக்கு வாங்கிய வேணு, கடனாளி. சோமு, விற்பனைத் தொகையை இரண்டு திங்களில் பெற விரும்பின், அவர் இத் தொகையை இரு திங்களில் செலுத்தக் கோரி எழுதி அனுப்புவார். வேணு இதனை 'ஏற்கிறேன்' என்று சோமு எழுதிய பத்திரத்தின்மீது எழுதிக் கையெழுத்திட்டுவிடின்,

இப் பத்திரத்திற்கு மதிப்பு ஏற்படுகிறது. கடனாளி தன் பொறுப்பை ஏற்றுக் கொண்டதற்கான சான்று எழுத்தில் கிடைத்து விடுகிறது. இரு திங்கள் தவணை முடிந்து உரிய நாளில் சோமு வேணுவிடம் அவர் ஏற்ற பத்திரத்தைக் காட்டிப் பணம் பெறுவார். இப் பத்திரத்தின்மீது சோமு பணம் பெறுவதால் இது 'வரவுடைய உண்டியல்' (Bill Receivable) எனப்படும். வேணுவைப் பொறுத்த வரை, தான் அதன்மீது பணஞ் செலுத்த வேண்டியுள்ளதால், அதுவே 'செலுத்த வேண்டிய உண்டியல்' (Bill Payable) எனப்படும், "பத்திரத்தைக் கொணர்பவர்க்கோ, அல்லது குறிப்பிட்ட ஒருவருக்கோ அல்லது அவர் ஆணை பெற்றவர்க்கோ, ஒரு குறிப்பிட்ட தொகையைக் கொடுக்கக் கோரி, குறிப்பிட்ட ஒருவர் மீது எழுதப் பெற்ற ஆணைப் பத்திரம் உண்டியலாகும்."

இவ்விலக்கணத்தைச் சற்று ஆய்ந்து பார்த்தால் கீழ்க் கண்ட விளக்கங்கள் புலனாகும்.

உண்டியல்,

1. எழுத்தால் ஆகிய ஒரு ஆணைப் பத்திரமாகும்.

2. அவ்வாணை குறிப்பிட்ட தொகையைச் செலுத்தக் கோர வேண்டும்.

3. குறிப்பிட்ட ஒரு கடனாளிமீது கடனீந்தோர் வரைவது

4. விடுநர் அதில் கையெழுத்திட்டிருக்க வேண்டும்.

உண்டியல் விடுபவரை 'விடுநர்' (Drawer) என்றும், யார்மீது வரையப்படுகிறதோ (அதாவது பணஞ் செலுத்தக் கடமைப் பட்டவர்)அவரை 'விடப் பெறுநர்' (Drawee) என்றும், யாருக்கு அவ்வுண்டியல் தொகையைச் செலுத்த வேண்டுமோ அவரை 'பணம் பெறுநர்' (Payee) வன்றும் அழைக்கலாம். எவ்வளவு நாள்கள் அல்லது திங்களுக்குப்பின் பணஞ் செலுத்தக் கோரியுள்ளதோ, அதனைத் 'தவணைக் காலம்' (Term of the Bill) எனலாம். உண்டியல் தொகைக் கேற்றவாறு முத்திரை (Stamp) ஒட்ட வேண்டும். கேட்கும் போது பணஞ் செலுத்தக் கோரி இருப்பின், அது 'நடப்பு உண்டியல்' (Demand Bill) எனப்படும். குறிப்பிட்ட காலத்திற்குப் பின் பணஞ் செலுத்துமாறு அமைந் திருப்பின் அது 'தவணை உண்டியல்' (Time Bill) எனப்படும்.

ஏற்பு (Acceptance): தவணை உண்டியலாயின், அதனை விடப் பெறுநர் ஏற்ருக வேண்டும். 'ஏற்றுக் கொண்டேன்' (Accepted)

என உண்டியல் முகப்பில் எழுதி, விடப் பெறுநர் கையெழுத்திடின் இது முடிந்து விடும். உண்டியலை ஏற்றவரை 'ஏற்குநர்' (ஏற்றவர்-(Acceptor) என்றும் ஏற்கப்பட்ட உண்டியலை 'ஏற்பு'' எனவும் கூறுவது வழக்கம். அதாவது விடப் பெறுநர் 'ஏற்குநர்' ஆகிறார். அவ்வாறே உண்டியலும் 'ஏற்பு' ஆகிறது.

"பார்வைக்குப் பின்" (After Sight) எனவிருக்கும் உண்டியல் 'ஏற்பு'க்காக விடப்பெறுநரிடம் உண்டியல் வரைந்த சில நாள்களுக்குள் (Within a Reasonable time) காண்பிக்கப்பட வேண்டும். தொழில் நடைபெறும் நாள்களில் (Business Days), தொழில் நேரத்தில் (During business hours) குறிப்பிட்ட இடத்தில் அல்லது தொழில் அலுவலகத்தில் அல்லது விடப்பெறுநரின் இருப்பிடத்தில் உண்டியல் காண்பிக்கப்படவேண்டும். இருவர் அல்லது அதற்கு மேற்பட்டவர்கள் மீது உண்டியல் வரையப்படின் ஒவ்வொருவரிடமும் ஏற்புக்காகக் காட்டப்படவேண்டும்.

ஏற்பில் பலவகையுண்டு.

பொதுப்பட்ட ஏற்பு (General Acceptance): விடப் பெறுநர் நிபந்தனை ஏதுமின்றி ஏற்றுக்கொள்வது.

நிபந்தனைக் குட்பட்ட ஏற்பு. (Qualified Acceptance): உண்டியலை ஏற்பதற்கு நிபந்தனை ஏதேனும் ஒன்றை விடப்பெறுநர் விதித்தால், அது நிபந்தனைக் குட்பட்ட ஏற்பு எனப்படும். நிபந்தனையிடும் போழ்து, விடுநரின் ஆணை மாற்றப்படுவதற் கொப்பாவதால், நிபந்தனைக் குட்பட்ட உண்டியலை விடுநர் ஏற்க மறுத்தது போன்றே நிராகரித்து விடலாம். இந் நிபந்தனை,

1. காலம் பற்றியிருக்கலாம். இரண்டு திங்களில் செலுத்தக் கோரும் உண்டியலை மூன்று திங்களில் செலுத்த ஏற்கலாம்.

2. இடம் பற்றியிருக்கலாம். குறிப்பிட்ட இடத்தில்தான் பணம் செலுத்துவதாக ஏற்றுக்கொள்வது இவ்வகையைச் சார்ந்தது. 'கடலூர் இந்தியன் வங்கியில் செலுத்த ஏற்கிறேன்' என்பது நிபந்தனையுடன் கூடிய ஏற்பன்று. ஆனால் 'கடலூர் இந்தியன் வங்கியில் மட்டும் செலுத்தி ஏற்கிறேன்' எனின், அது இடம் பற்றிய நிபந்தனைக்குட்பட்ட ஏற்பாகும்.

3. பகுதி ஏற்பு (Partial Acceptance): ரூ. 500க்கு வரைந்த உண்டியலை 'ரூ. 200க்கு ஏற்கிறேன்' என எழுதியிருப்பின் அது பகுதி ஏற்பு எனப்படும்.

## உண்டியல் அல்லது கடனுறுதிச் சீட்டு முதிர்வடைதல் (Maturity of a Bill or a Note)

பணந்தர வேண்டிய நாளே உண்டியல் அல்லது கடனுறுதிச் சீட்டு முதிர்வடையும் நாளாகும். இதனைக் கெடுநாள் அல்லது தவணை நாள் (Due date) எனவுங் கூறலாம். பணஞ் செலுத்தக் காண்பிக்கப்படும் போழ்து நடப்புண்டியலுக்கான பணம் தர வேண்டும். தவணை உண்டியலாயின், உண்டியல் கால முடிவு நாளுடன் மூன்று நாள்கள் சேர்த்துக்கொள்ள வேண்டும். இந் நாள்கள் சலுகை நாள்கள் (Days of grace) எனப்படும்.

பார்வைக்குப்பின் அல்லது, உண்டியல் நாளுக்குப்பின் குறிப்பிட்ட திங்களில் பணஞ் செலுத்த வேண்டியிருப்பின், குறிப்பிட்ட காலஞ் சென்றபின் அதே நாளுடன் மூன்று நாள் களைச் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

எடுத்துக்காட்டு : உண்டியல் நாளுக்குப்பின் மூன்று திங்களில் பணஞ் செலுத்தத் தக்க உண்டியல் 30 - 4 - 1971-ல் எழுதப்படின் 2 - 8 - 1971ல் உண்டியலுக்கான பணஞ் செலுத்த வேண்டும். (மூன்று திங்கள் 30 - 7 - 1971-ல் முடிவடைகிறது, இத்துடன் மூன்று நாள்களைக் கூட்டின் 2 - 8 - 1971 கிடைக்கிறது)

உண்டியல் நாளிலிருந்து குறிப்பிட்ட திங்களுக்குப்பின் செலுத்த வேண்டிய உண்டியலில் தவணைக் காலம் முடிவுறும் நாள் அத் திங்களில் இல்லை எனில், அத் திங்களின் இறுதி நாளில் தவணை முடிவடைவதாகக் கொண்டு, மூன்று நாள்களை அத்துடன் சேர்த்துக் கொள்ளவேண்டும். எடுத்துக்காட்டாக, உண்டியல் நாளிலிருந்து ஒரு திங்களில் பணஞ் செலுத்தக்கோரும் உண்டியலை 30-1-1971-ல் வரைவதாகக் கொண்டால் உண்டியல் காலம் ஃபிப்ரவரித் திங்களில் 30-ம் நாள் முடிவடைய வேண்டும். ஆனால், பிப்ரவரித் திங்களில் 30-ம் நாள் இல்லை யாதலால், ஃபிப்ரவரியின் இறுதி நாளான 28ல் உண்டியல் காலம் முடிவடைவதாகக் கொண்டு அத்துடன் மூன்று நாள்களைச் சேர்த்து 3-3-1971 உண்டியலின் கெடுநாள் என்று கணக்கிட வேண்டும்.

'பார்வைக்குப் பின்' (After Sight), குறிப்பிட்ட திங்களில் பணஞ் செலுத்தக் கோரியிருப்பின், உண்டியல் ஏற்கப்பட்ட நாளிலிருந்து தவணைக் காலத்தைக் கணக்கிட வேண்டும். கடனுறுதிச் சீட்டாயின் அதைப் பார்வைக்காகக் காண்பிக்கப்பட்ட நாளிலிருந்து தவணைக் காலத்தைக் கணக்கிட வேண்டும்.

எடுத்துக் காட்டு: பார்வைக்குப் பின் இரு திங்களில் செலுத்த வேண்டிய உண்டியல் மே 15-ம் நாளிடப்பட்டிருந்தது. இது மே 20-ல் ஏற்கப்பட்டது. இப்பொழுது உண்டியல் ஏற்கப்பட்ட நாளான மே 20- லிருந்து இரு திங்கள் கணக்கிட்டு அத்துடன் மூன்று நாள்களைச் சேர்த்துக்கொள்ள வேண்டும். அதாவது சூலை 23 இவ்வுண்டியலின் கெடு நாளாகும்.)

(சலுகை நாள்களின் இறுதி நாள் அதாவது உண்டியல் கெடு நாள் அரசினர் விடுமுறை நாளாக இருப்பின், அதற்கு முன் நாளே உண்டியலுக்கான பணஞ்செலுத்த வேண்டிய நாளாகும். சூலை 12ல் எழுதப்பெற்ற ஒரு திங்கள் தவணை உண்டியலின் கெடுநாள் ஆகஸ்டு 15 ஆகும். ஆனால், இது அரசினர் பொது விடுமுறை நாளானகையால் ஆகஸ்டு 14, உண்டியலின் கெடு நாளாகக் கொள்ளப்படும்.)

மேலெழுத்து (புறக் குறிப்பிடல்) (Endorsement): மாற்று முறை ஆவணமொன்றின் (செலவாணிப்பத்திரம்—Negotiable Instrument). விடுநரோ, அதை வைத்திருப்பவரோ, அதன் பின் புறத்தில் பிறர்க்கு மாற்றிக்கொடுக்கும் விருப்பத்துடன் தன் கையெழுத்தை யிடுவாரானால், செலாவணிப் பத்திரம் மேலெழுதப் படுகிறது. (புறக்குறிப்பிடப் படுகிறது) என்று பெயர். அவரை மேலெழுதுநர் (புறக் குறிப்பிடுநர்—Endorser) என்றும், யாருக்கு அதன் உரிமை மாற்றித்தரப்படுகிறதோ அவரை மேலெழுத்துப் பெறுநர் (புறக் குறிப்பிடப் பெறுநர்—Endorsee) என்றும் அழைக்கலாம்.

மேலெழுத்து பல்வகைப்படும். உண்டியல், கடனுறுதிச் சீட்டு அல்லது காசோலையின் பின்புறத்தில் தன் கையெழுத்தை மட்டும் இடுவாரானால் அது வெற்று மேலெழுத்து (Blank Endorsement) என்று பெயர். அத்தகைய பத்திரத்தைப் பிறர்க்குக் கொடுப்பதாலேயே, பிறர் அதன் உரிமையாளராகி விடுவார், அவ்வாறின்றிக் குறிப்பிட்ட ஒருவர்க்கோ அல்லது அவர் ஆணைக்கோ கொடுக்கக் கோரிக் கையெழுத்திடுதலை, முழு மேலெழுத்து (முழு புறக் குறிப்பிடல்—Full Endorsement) என்று பெயர். மேலும், அதனைப் பிறர்க்கு மாற்றிக் கொடுப்பதைத் தடுக்கும் வண்ணம் அல்லது குறிப்பிட்ட வகையில் அதனை பைசல் செய்யும் வண்ணம் மேலெழுதுவதை வரையறை மேலெழுத்து (Restrictive Endorsement) என்கிறோம்.

எ.கா. (1) அரசப்பனுக்கு மட்டும் செலுத்துக.

—வேந்தன்.

எ.கா. (2) அரசப்பனிடம் ஆண்டியப்பன் கணக்கிற்காகச் செலுத்துக.

—வேந்தன்.

உண்டியலுக்குக் கெடுநாளில் பணம் மறுக்கப்படுமாயின் தன்னை நோக்கக் கூடாது என்றுணர்த்தும் வண்ணம் மேலெழுது வதை வழியகற்றும் மேலெழுத்து (Sans Recourse Endorsemeut) என்று பெயர். அவ்வாறு மேலெழுதுபவரைப் பொறுப்பில் கட்டுப்படுத்த முடியாது.

எ.கா. அரசப்பனிடம் செலுத்துக.

—வழியில்லை.

வேந்தன்.

சாதாரணமாக முகவர் செலாவணிப் பத்திரமொன்றை மாற்றிக் கொடுக்கும் போழ்து இவ்வாறு மேலெழுதுவது வழக்கம்.

தனக்குள்ள உரிமையை விட்டுக் கொடுக்கும் வகையிலும் மேலெழுதித் தரலாம். இதனைக் கடமை தவிர் மேலெழுத்து (Facultative Endorsement) என்பர். எ.கா: அரசப்பனுக்குச் செலுத்துக—உண்டியல் பண மறுப்பிற்கான அறிவிப்பு விட்டுக் கொடுக்கப்படுகிறது.

வேந்தன்.

இந் நிலையில் தவணை நாளில் உண்டியலுக்கான பணம் மறுக்கப் பட நேரின், அதனை வைத்திருப்பவர் இதுபற்றி அறிவிக்கவில்லை யெனினும் இவ்வாறு மேலெழுதியவர் பொறுப்பாவார்.

கடனுறுதிச் சீட்டையும் இவ்வகைகளில் மேலெழுதலாம்.

உற்றுழி நோக்க வேண்டியவர் (Referee in case of need) விடப் பெறுநர் உண்டியலை ஏற்காமலோ, பணஞ் செலுத்தாமலோ மறுக்கும்பொழுது குறிப்பிட்ட ஒருவரை அணுகுமாறு உண்டியலை வரையலாம். அல்லது மேலெழுதுநர் எவரேனும் அவ்வாறு செய்யலாம்.

எ.கா. "தேவையாயின் செல்வ நிதியை அணுகவும்.

வேந்தன்"

என்று உண்டியலில் எழுதின் போதுமானது.

கடனுறுதிச் சீட்டை எழுதித் தருபவரும், காசோலை விடுநரும். உண்டியல் ஏற்கப்படும்வரை உண்டியல் விடுநரும், ஏற்றபின் ஏற்குநரும் செலாவணிப் பத்திரத்தினுல் பொறுப்பாவார்கள்.

மேலெழுதுநர், தனக்குப் பின் செலாவணிப் பத்திரத்தை வைத்திருப்பவர்க்குப் பொறுப்பாவார். பணம் மறுக்கப்பட்டச் செய்தியை அவர்க்கு உடனே உணர்த்த வேண்டும்.

உண்டியலைப் பயன்படுத்தும் முறைகள் (Disposal of Bill)

உண்டியலை உடையவர் பல வழிகளில் அதைப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

1. அவரே அதைத் தவணைநாள்வரை வைத்திருந்து பணம் பெற்றுக் கொள்ளலாம்.

2. உடனே பணந் தேவைப்படின், தனது வங்கியில் அதனைத் தள்ளுபடி செய்து கொள்ளலாம் (Discounting the Bill). வங்கி அந்த உண்டியலை வாங்கிக்கொள்ளும் கெடுநாளில் அதனை ஏற்பவரிடம் காட்டிப் பணம்பெற்றுக் கொள்ளும். உண்டியல் காலம் முடியும்வரை, வங்கிக் காத்திருக்க வேண்டியிருத்தலால், முழுத் தொகையையும் வங்கி, தராது. குறிப்பிட்ட தள்ளுபடி எடுத்துக் கொண்டு மீதத் தொகையைத் தான் தரும்.

தான் பிறர்க்குக் கடன் கொடுக்கவேண்டியிருப்பின், உண்டியலை அவர்க்கு மேலெழுதி மாற்றிக் கொடுத்துக் கணக்கைத் தீர்த்துக் கொள்ளலாம். உண்டியலைத் தானே வைத்திருந்து, தனது வங்கிக் கனுப்பி வசூலித்துக் கொள்ளலாம்.

உண்டியலைக் காட்டுதல் (Presentation of a Bill)

உண்டியலை உடையவர் தவணை நாளில் ஏற்றவரிடம் பணஞ் செலுத்துமாறு அதனைக் காட்டவேண்டும். உண்டியலை ஏற்பதற்கும் இதனைக் காட்டலாம்; ஏற்ற உண்டியலுக்குப் பணஞ் செலுத்தவும் காட்டலாம்; நடப்பு உண்டியல்களும் குறிப்பிட்ட நாளில் பணஞ் செலுத்தப்பட வேண்டிய உண்டியல்களும் காட்டப் படத் தேவையில்லை.

எ.கா. உண்டியல் நாளிலிருந்து 40 நாள்களில் பணஞ் செலுத் தக்கோரும் உண்டியல்.

'பார்வைக்குப் பின்' எனும் உண்டியல்கள் ஏற்புக்காகக் காட்டப்பட வேண்டும். பணஞ் செலுத்தக் காண்பிப்பதற்கு முன் ஏற்கவும் காண்பிக்க வேண்டும் என உண்டியலில் குறிப் பிட்டிருப்பினும் உண்டியலைக் காட்டுதல் இன்றியமையாதது.

இத்தகைய உண்டியலை உடையவர் ஏற்பவரிடம் காட்டத் தவறின், விடுநரும், பிற மேலெழுத்துப் பெற்றவர்களும் தங்கள் பொறுப்பைத் தீர்த்துக் கொள்வர்.

### உண்டியல் மறுப்பு (Dishonour of Bills)

விடப்பெறுநர் உண்டியலை ஏற்க மறுத்தால், அது ஏற்காமையின் மறுக்கப் பட்டதாகக் கொள்ளப்படும் (Dishonoured for non-acceptance) ஏற்கப்பட்ட உண்டியலுக்குத் தவணை நாளில் (கெடுநாளில்) ஏற்குநர் பணஞ் செலுத்தவில்லையெனில், அது பணஞ் செலுத்தாமையின் மறுக்கப்பட்டது (Dishonoured for non-payment) எனப்படும். உண்டியல் மறுக்கப்படின், விடுநரும் பிற மேலெழுத்துப் பெற்றவர்களும் உண்டியலை உடையவருக்குப் பொறுப்பாவார்கள். உண்டியலை உடையவர் உண்டியல் மறுப்பை உடனே அறிவிக்க வேண்டும். யார் யாரை உண்டியல் மீது கட்டுப் படுத்தவேண்டுமோ அனைவருக்கும் இவ்வறிவிப்பைத் தர வேண்டும். உண்டியல் மறுப்பறிவிப்புத் தரவில்லையெனில் விடுநரையும் ஏற்குநரையும் தவிரப் பிறரைக் கட்டுப்படுத்த முடியாது. இத் தவற்றால் அவர்களின் பொறுப்புத் தீர்ந்து விடுகிறது.

### மறுப்புக் குறிப்பு (Noting)

கடனுறுதிச் சீட்டோ ((Promissory Note), உண்டியலோ மறுக்கப் படுமாயின், அதனை உடையவர், அதற்குச் சான்றாக 'மறுப்புக் குறிப்பு' எடுத்துக் கொள்ளலாம். அதாவது, சான்றுறுதி அதிகாரியிடம் (Notary Public) மறுக்கப்பட்ட உண்டியலை அல்லது கடனுறுதிச் சீட்டைக் கொடுக்க வேண்டும். அவ்வலுவலர் ஏற்புக்காகவோ, பணம் பெறவோ உரியவரிடம் மீண்டும் அதனைக் காட்டுவார். மீண்டும் ஏற்கவில்லையாயினும், பணஞ் செலுத்த வில்லையாயினும், அப்பத்திரத்திலோ அல்லது தனியொரு தாளிலோ, உண்டியல் மறுக்கப்பட்ட நாள், மறுக்கப்பட்டதின் காரணம், குறிப்புக் கட்டணம் முதலிய விவரங்களைக் குறிப்பார். உள்நாட்டு உண்டியல்களில் மறுப்புக் குறிப்பு செய்ய வேண்டும் என்று கட்டாயம் இல்லை. ஆனால் அயல்நாட்டு உண்டியல்களாயின் 'உண்டியல் மறுப்புச்சான்றிதழ்' இன்றியமையாதது.

### உண்டியல் மறுப்புச் சான்றிதழ் (Protesting)

தான் செய்த மறுப்புக் குறிப்பினடிப்படையில், உண்டியல் மறுக்கப் பட்டதற்கான சான்றிதழைச் சான்றுறுதி அதிகாரி வழங்குவதை இது குறிக்கிறது.

நாணயத்திற்காக ஏற்குநர் (Acceptor for honour)

ஏற்காமையால் மறுக்கப்பட்ட உண்டியலை, கெடுநாள் கடந்துவிட வில்லையாயின், அவ்வுண்டியல் பொறுப்பேற்கா எவரும், உடையவரின் இசைவுடன், ஏற்கலாம். இதை 'மறுப் புக்குப் பின் ஏற்பு' (Acceptance Supra Protest) எனவும் சொல்ல லாம். அவ்வாறு ஏற்பவர் 'நாணயத்திற்காக ஏற்குநர்' (Acceptor for honour) எனப்படுவர். கெடுநாளில், விடப்பெறுநர் (Drawee) பணஞ் செலுத்தவில்லையாயின், தான் உண்டியலில் கண்டவாறு பணஞ் செலுத்த ஒப்புகிறார். யாருடைய நாணயத்தைக் காக்கும் பொருட்டு ஏற்றுக் கொண்டாரோ, அவர்க்குப்பின் உண்டியலில் தொடர்புற்ற அனைவர்க்கும் அவர் பொறுப்பாவார்.

உற்றுழி விடப்பெறுநர் (Drawee in case of need)

விடுநர் அல்லது அதனை மேலெழுதுநர் எவரும் 'உற்றுழி விடப் பெறுநர்' என ஒருவரை உண்டியலில் சேர்க்கலாம். அதாவது, ஏற்காமையாலோ பணஞ் செலுத்தாமையாலோ உண்டியல் மறுக்கப்படுமாயின், அவ்வாறு குறிப்பிடப்பட்டவரை நாட வேண்டும் என்பது பொருள். எடுத்துக்காட்டாக, இங்கிலாந்தி லுள்ள ஒரு ஏற்றுமதி நிறுவனம், இந்திய இறக்குமதியாளர்மீது உண்டியல் வரையும் போழ்து இந்தியாவிலுள்ள தங்கள் முகவர் களை (Agents) உற்றுழி விடப்பெறுநராகக் குறிப்பது வழக்கம். உண்டியல் மறுக்கப்படும் பொழுது, உற்றுழிவிடப் பெறுநரிடம் காட்டவேண்டும். அவரும் மறுத்தால்தான் உண்டியல் மறுக்கப் பட்டதாகக் கொள்ளப்படும்.

பெயர் பேணுஞ் செலுத்தம் (Payment for honour)

செலுத்தப் படாமையால் மறுக்கப்பட்ட உண்டியலுக்கு மறுப்புக் குறிப்பு செய்தபின், உண்டியலில் முன்னர் தொடர்புறு எவரும் விடுநரின் அல்லது மேலெழுதிய ஒருவரின் நாணயத்திற் காகப் பணஞ் செலுத்தலாம். இதனைப் பெயர் பேணுஞ் செலுத் தம் அல்லது மறுப்புக் குறிப்புக்குப் பின் செலுத்தல் (Payment Supra Protest) என்கிறோம்.

கடனுறுதிச் சீட்டு (Promissory Note)

குறிப்பிட்ட நாளில் அல்லது கேட்கும் போழ்து குறிப்பிட்ட தொகையைச் செலுத்துவதாகக் கடனாளி கடனீந்தோர்க்கு உறுதி மொழியை எழுத்தில் கொடுக்கலாம். இதனைத்தான் கடனுறுதிச் சீட்டு (Promissory Note) என்கிறோம். 'புரோநோட்' (Pro Note) என்று பரவலாக இது வழக்கில் உள்ளது.

'ஆவணத்தைக் (பத்திரத்தைக்) கொணர்பவர்க்கு அல்லது குறிப்பிட்ட ஒருவர்க்கு அல்லது அவர் ஆணை பெற்றவர்க்குக்

குறிப்பிட்ட தொகையைச் செலுத்துவதாகக் கூறும், நிபந்தனை யற்ற உறுதிமொழியை உடைய, எழுதியவர் கையெழுத்திட்ட ஒரு பத்திரமே கடனுறுதிச் சீட்டு' என்று மாற்று முறை ஆவணங்கள் சட்டத்தின் 4-வது பிரிவு (Section 4 of the Negotiable Instruments Act) இலக்கணம் வகுத்துள்ளது.

கடனுறுதிச் சீட்டுக்கும் உண்டியலுக்கும் உள்ள சில முக்கியமான வேறுபாடுகள்:

1. கடனுறுதிச் சீட்டை எழுதுபவர் கடனாளி; பணந்தர வேண்டியவர். ஆனால் உண்டியலை எழுதுபவர் (விடுநர்) கடனீந்தோராவர்.

2. கடனுறுதிச் சீட்டில் குறிப்பிட்ட தொகையைத் தருவதாகக் கூறும் நிபந்தனையற்ற உறுதிமொழி இருக்கிறது; உண்டியலில் குறிப்பிட்ட தொகையைச் செலுத்தக் கோரும் நிபந்தனையற்ற ஆணையுள்ளது.

3. கடனாளியே கடனுறுதிச் சீட்டை எழுதித் தருவதால் இதனை 'ஏற்க' வேண்டியதில்லை. தவணை உண்டியலை விடப் பெறுநர் ஏற்றாக வேண்டும்.

4. கடனுறுதிச் சீட்டில் எழுதித் தருபவர் (கடனாளி), எழுதப் பெறுநர் (கடனீந்தோர்) என இருவரே உண்டு. ஆனால், உண்டியலில் விடுநர், விடப் பெறுநர், பணம் பெறுநர் என மூவர் உண்டு.

வகைகள்

கடனுறுதிச் சீட்டு ஒருவர் எழுதித்தரும் தனிக்கடனுறுதிச் சீட்டாகவோ (Single Promissory Note) அல்லது பலர் ஒன்று சேர்ந்து எழுதித்தரும் கூட்டுக் கடனுறுதிச் சீட்டாகவோ (Joint Promissory Note) இருக்கலாம். கூட்டுப் பொறுப்பெனில், கடனுறுதிச் சீட்டைத் தந்தவர் அனைவரும் சேர்ந்தே கூட்டாக அத்தொகைக்குப் பொறுப்பாவர். அவ்வாறன்றி ஒவ்வொருவரும் தனித்தனியாகவும் கூட்டாகவும் பொறுப்பெனில், அது கூட்டுத் தனித்தனிப் பொறுப்பு (Joint and Several Liability) எனப்படும். இந்தியாவில் கூட்டுக் கடனுறுதிச் சீட்டை எழுதியவர்களின் பொறுப்பு, கூட்டுத் தனித்தனிப் பொறுப்பாகும் அதாவது பணம் பெறவேண்டியவர் அதில் கையெழுத்திட்ட எவரிடமும் தனியாகவே முழுத்தொகையையும் கோரலாம்; அல்லது அனைவரையும் ஒன்று சேர்த்துக் கோரலாம்: அல்லது ஒவ்வொருவராகத் தன் கடன் தீரும் வரை கோரப் பெறலாம்.

கடனுறுதிச் சீட்டையும் கேட்கும் போழ்து அல்லது குறிப்பிட்ட காலக் கெடுவில் செலுத்தத் தக்கதாக எழுதலாம். கேட்கும் போழ்து கொணர்பவர்க்குக் கொடுக்கிறேன்' என்று மட்டு மிருக்கக் கூடாது. காரணம் அது செலாவணித் தாளாகி (Currency Note) விடுகிறது.

முதிர்வு நாள், மேலெழுத்து போன்ற உண்டியலுக்குக் கூறப்பட்ட அனைத்தும் இதற்கும் பொருந்தும்.

கணக்கேடுகளில் தான் பிறர்க்கு எழுதிக் கொடுக்கும் கடனுறுதிச் சீட்டுச் செலுத்த வேண்டிய உண்டியல் போன்றும், தனக்குப் பிறர் எழுதிக் கொடுத்த கடனுறுதிச் சீட்டுகள் வரவுடைய உண்டியல் போன்றும் கருதப்படும்.

## மாற்று முறை ஆவணங்களால் ஏற்படும் பயன்கள்.
(Advantages of Negotiable Instruments)

காசோலை, உண்டியல், கடனுறுதிச் சீட்டு – இம்மூன்றும் மாற்று முறை ஆவணங்களாகக் கருதப்படுகின்றன. ரொக்கமில்லாத போழ்தும், கடன் பேரில் சரக்கு வாங்குவதற்கு உண்டியலும் கடனுறுதிச் சீட்டும் பெரிதும் துணையாயிருக்கின்றன.

கடன் பேரில் சரக்கு விற்றவர்க்கும் தொல்லை ஏதும் இருப்பதில்லை. உண்டியலையோ கடனுறுதிச் சீட்டையோ பிறர்க்கு எளிதில் மேலெழுதி உரிமையை மாற்றித் தரலாம். இவ்வாறு, தான் கொடுக்க வேண்டிய கடனுக்கு இவற்றைக் கொடுத்துத் தீர்த்துக் கொள்ளலாம். உடனடியாக நிதி தேவைப் படின், வங்கியில் தள்ளுபடி செய்து பணம் பெறலாம்.

கடன் பேரில் விற்றிருப்பினும், எழுத்து வடிவில் கடனாளி தன் பொறுப்பை ஏற்கும் சான்று அமைகிறது. கேட்கும் போழ்தோ, குறிப்பிட்ட தவணையிலோ பணஞ் செலுத்தத் தக்கதாய் அவை இருக்குமாதலால், கெடுநாள் உறுதியிடப்படுகிறது. அதற்கேற்ப கடனீந்தோர் தன் நடவடிக்கைகளை அமைத்துக் கொள்ளலாம். கடனாளியும் தான் செலுத்த வேண்டிய நாளை உணர்கிறார். இதற்கிடையில் பணஞ் செலுத்தத் தேவையில்லை.

ஓரிடத்திலிருந்து மற்ற இடத்திற்குப் பணம் அனுப்பும் வழியாகவும் இது இருக்கிறது.

பண வசதி உண்டியல்களைப் பயன்படுத்தித் தமக்கு ஏற்படும் நிதி நெருக்கடியைச் சமாளித்துக்கொள்ள முடிகிறது.

## உண்டியலின் வகைகள்

உள் நாட்டு உண்டியல் (Inland Bill)

விடுநரும் விடப் பெறுநரும் நம் நாட்டிலே இருப்பின், அல்லது இந்தியாவிலேயே எழுதப்பட்டு, இந்தியாவிலேயே செலுத்த வேண்டியிருப்பின் அது உள் நாட்டு உண்டியல் எனப்படும். வேறெந்த உண்டியலும் அயல் நாட்டு உண்டியல் (Foreign Bill) எனப்படும்.

ஏற்குநரோ அல்லது விடுநரோ வேறு நாட்டில் இருப்பின், அது அயல் நாட்டு உண்டியல் எனப்படும். வெளி நாட்டில் எழுதப் பெற்ற வெளி உண்டியலுக்கு நம் நாட்டில் பணஞ் செலுத்த வேண்டியிருப்பினும் அதுவும் அயல் நாட்டு உண்டியலே. அயல் நாட்டு உண்டியல்கள் மூன்று படிகள் எடுக்கப்பட்டு, ஒவ்வொன்றும் தனித்தனி அஞ்சலில் அனுப்பப்படுகின்றன. ஏதேனும் ஒன்றாவது அயல் நாட்டில் உள்ளவரைக் கிட்டும் என்பதே இதன் நோக்கம். ஓர் உண்டியலுக்குப் பணஞ் செலுத்தப்படின், பிற ரத்தாகி விடுகின்றன.

பணஞ் செலுத்த வேண்டியதைப் பொறுத்தும் உண்டியல்கள் வகைப்படுத்தப் படுகின்றன.

கேட்ட போழ்து அல்லது காட்டியவுடன் அல்லது கொடுத்த வுடன் (On demand or at sight or on presentment) செலுத்தப்பட வேண்டியதாயிருப்பின், அது நடப்புண்டியல் (Demand Bill) எனப் படும். கேட்ட போழ்து எனவிருக்கும் உண்டியலை வசூ லிக்கக் காலக்கெடு (Period of Limitation) உண்டியல் நாளி லிருந்து மூன்றாண்டுகள் கணக்கிடப்படும். ஆனால் 'காட்டியவுடன்' என்றோ அல்லது 'கொடுத்தவுடன்' என்றோ இருக்கும் உண்டியலை வசூலிக்கக் காலக்கெடு, பணங் கேட்கப்பட்ட அல்லது உண்டியலைக் காட்டிய நாளிலிருந்து மூன்றாண்டுகள் கணக்கிடப்படும். நடப்பு உண்டியல் ஏற்கப்பட வேண்டியதில்லை.

குறிப்பிட்ட காலத் தவணைக்குப் பின் செலுத்த வேண்டிய உண்டியல் 'தவணை உண்டியல்' (Time Bill) எனப்படும். தவணை உண்டியலை விடப் பெறுநர் ஏற்றாக வேண்டும்.

நெடுந்தவணை உண்டியல் (Long Bill) : உண்டியல் நாளுக்கும் தவணை நாளுக்குமிடையே ஒரு திங்களோ அதற்கு மேலோ இருக்கு மாயின் அது இவ்வாறு அழைக்கப்படுகிறது.

குறுந்தவணை உண்டியல் (Short Bill): நடப்புண்டியலும் அல்லது ஒரு திங்கள் தவணைக்குள் செலுத்தப்பட வேண்டிய உண்டியலும் இவ்வாறு அழைக்கப்படுகிறது.

ஆவணஞ் சேர்ந்த உண்டியல் (Documentary Bill): இது அயல் நாட்டு வணிகத்தில் அதிகம் பயன்படுத்தப்படுகிறது. சரக்கைக் கப்பல் வழி அனுப்பிவிட்டுக் கப்பல் வழிச் சீட்டு (Bill of Lading), கடல் ஈட்டுறுதித் திட்டம் (Marine Insurance Policy) தன் இடாப்பு, தோற்றுவாய்ச் சான்றிதழ் (Certificate of Origin) போன்ற கப்பல் ஆவணங்களுடன் (Shipping Documents) தான் வரையும் உண்டியலையும் தன் வங்கி மூலம், இறக்குமதியாளரின் இடத்துள்ள வங்கிக்கனுப்புவார். இவ்வாறு கப்பல் ஆவணங்களுடன் அனுப்பப் படும் உண்டியல், ஆவணங்கள் சேர்ந்த உண்டியல் (Documentary Bill) எனப்படும். இவ்வுண்டியல் ஏற்கப் பட்டவுடன் பிற ஆவணங்களை இறக்குமதியாளர்க்கு வங்கி கொடுக்க வேண்டியிருப்பின், அது ஏற்புழி உண்டியல் (D/A Bill—Documents against acceptance) என்றும் உண்டியல் தொகையைச் செலுத்திய பின்னர்த்தான் ஆவணங்களைக் கொடுக்க வேண்டுமெனில், அது செலுத்துழி உண்டியல் (D/P Bill—Documents against Payment) என்றும் அழைக்கப்படும்.

தனி உண்டியல் (clear Bill): இவ்வாறு ஆவணங்களுடன் அனுப்பப் பெறுத உண்டியல் தனியுண்டியல் எனப்படும். வணிக உண்டியல் (Trade Bill) சரக்கோ அல்லது பணியோ பெற்றதற்காகச் செலுத்தக் கோருவது வணிக உண்டியலாகும். அதாவது இவ்வகை உண்டியலில் மறிபயன் (Consideration) உள்ளது. வணிக நடவடிக்கைகளின் தொடர்பாக இது எழுகிறது.

பணவசதி உண்டியல் (Accommodation Bill or Kite): மேற்கூறியவாறு சரக்கு வாங்குதல், விற்றல் அல்லது பணி பெறுதல், அளித்தல்—இவற்றின் காரணமின்றியும் உண்டியல் வரைவதுண்டு. அதாவது மறுபயன் ஏதுமின்றியே உண்டியல் வரைவதும் அதைப் பிறர் ஏற்பது உண்டும். அத்தகைய உண்டியல் பணவசதி உண்டியல் எனப்படும். அதாவது பணவசதி செய்து கொள்ளும் நோக்குடன் இது கையாளப்படுகிறது. எடுத்துக் காட்டாக, நம்பியார், நம்பூதிரி இருவருக்கும் பணந் தேவைப்படுவதாகக் கொண்டால், நம்பியார் நம்பூதிரி மீது உண்டியல் வரைய, அதை நம்பூதிரி ஏற்றுத் தரலாம். நம்பியார் அதனைத் தன் வங்கியில் தள்ளுபடி செய்து, உடனடியாகப் பணம் பெறலாம். இத்தொகையை இருவரும் குறிப்பிட்ட விகிதத்தில் பிரித்துக்

கொள்ளலாம். அதே விகிதத்தில் தள்ளுபடியை இருவரும் ஏற்றுக் கொள்ள வேண்டும். தவணை நாளுக்கு முன்னர் விடுநர் தான் பெற்ற தொகையை ஏற்குநர்க்கனுப்ப, ஏற்குநர் உண்டியலுக்குப் பணஞ் செலுத்துவார். இவ்வாறு விடுநர்க்கோ, ஏற்குநர்க்கோ பணவசதி செய்து கொடுக்கும் நோக்குடன் இருவரும் பணவசதி தேடிக் கொள்ளும் நோக்குடன் இது பயன் படுத்தப்படுகிறது.

மாதிரிகள்:

கடனுறுதிச் சீட்டின் வகைகள்

விநாயகர் கோவில் தெரு,
காராமணிக் குப்பம்,
22 - 7 - 1962.

புதுவை, பொதிகைப் பதிப்பகத்துக்கு அல்லது அவர் ஆணை பெற்றவர்க்கு மதிப்புப் பெற்றமைக்காகக் கேட்கும் போழ்து ரூபாய் ஐந்நூறு மட்டில் செலுத்துவதாக உறுதி கூறுகிறேன்.

ரூ. 500. ர. அண்ணாமலை

விநாயகர் கோவில் தெரு,
காராமணிக் குப்பம்,
22-7-1962.

புதுவை, பொதிகைப் பதிப்பகத்துக்கு அல்லது அவர் ஆணை பெற்றவர்க்கு, மதிப்புப் பெற்றமைக்காகச் சீட்டு நாளிலிருந்து இரு திங்களில் ரூபாய் ஐந்நூறு மட்டில் செலுத்துவதாக உறுதி கூறுகிறேன்.

ரூ. 500. ர. அண்ணாமலை

விநாயகர் கோவில் தெரு,
காராமணிக் குப்பம்,
22-7-1962.

புதுவை, பொதிகைப் பதிப்பகத்துக்கு அல்லது அவர் ஆணை பெற்றவர்க்கு மதிப்புப் பெற்றமைக்காகச் சீட்டு நாளிலிருந்து 90 நாள்களில் ரூபாய் ஐந்நூறு மட்டில் செலுத்துவதாகக் கூட்டாகவும் தனித்தனியாகவும் உறுதி கூறுகிறோம்.

ரூ. 500

ர. அண்ணாமலை
க. சோமசுந்தரம்

மாதிரி உண்டியல்கள்

'பார்வைக்குப்பின்' உண்டியல்

ரூ. 1,000

முத்திரை

ஏற்கிறேன்.
கருணாகரன்
18-9-1969

71, லாரன்ஸ்
ரோடு,
கடலூர்,
15-9-1969

மதிப்புப் பெற்றமைக்குப் பார்வைக்குப் பின் மூன்று திங்களில் எனக்கு அல்லது என் ஆணை பெற்றவர்க்கு ரூ. ஆயிரம் செலுத்துக.

இளவழகன்.

பெறுநர்:

கருணாகரன்,
70, இரண்டாம் குறுக்குத் தெரு,
அண்ணா நகர்.
சென்னை.

அயல்நாட்டுண்டியல்.
(மூன்று படிகளாக எடுக்கப்படும்)

ரூ. 1,000

முத்திரை

ஏற்கிறேன்.
நம்பி அன் கம்பனி
27-2-1971

இலண்டன்,
ஃபிப்ரவரி 21,
1971.

மதிப்புப் பெற்றமைக்குப் பார்வைக்குப்பின் அறுபது நாள்களில், இம் மாற்றுண்டியலின் முதற்படிக்காக (இதே தவணையுடைய இதே நாளுண்டியலின் இரண்டாவது, மூன்றுவது படிகள் செலுத்தப் படாநிலையில்) எங்கட்காவது அல்லது எங்கள் ஆணை பெற்றவர்க்காவது ரூபாய் ஆயிரம் செலுத்துக.

பெறுநர் :

நம்பி அன் கம்பனி,
15, அண்ணு சாலை,
சென்னை—2.

வில்லியம் அன் கம்பனிக்காக
பீட்டர்
மேலாளர்.

---

ரூ. 1,000

முத்திரை

இலண்டன்,
பிப்ரவரி 21, 1971

மதிப்புப் பெற்றமைக்குப் பார்வைக்குப் பின் அறுபது நாள்களில், இடம் மாற்றுண்டியலின் இரண்டாவது படிக்காக (இதே தவணையுடைய இதே நாளுண்டியலின் முதல்படியும் மூன்றும் படியும் செலுத்தப்படா நிலையில்) எங்கட்காவது அல்லது எங்கள் ஆணை பெற்றவர்க்காவது ரூபாய் ஆயிரம் செலுத்துக.

பெறுநர் :

நம்பி அன் கம்பனி,
15. அண்ணு சாலை,
சென்னை—2.

வில்லியம் அன் கம்பனிக்காக
பீட்டர்
மேலாளர்

ரூ. 1,000

முத்திரை

இலண்டன்,
பிப்ரவரி, 21, 1971

மதிப்புப் பெற்றமைக்குப் பார்வைக்குப் பின் அறுபது நாள்களில், இம் மாற்றுண்டியலின் மூன்றாவது படிக்காக (இதே தவணையுடைய இதே நாளுண்டியலின் முதல் படியும் இரண்டாம் படியும் செலுத்தப்படா நிலையில்) எங்கட்காவது அல்லது எங்கள் ஆணை பெற்றவர்களுக்காவது ரூபாய் ஆயிரம் செலுத்துக.

பெறுநர் :

நம்பி அன் கம்பனி.
15, அண்ணா சாலை,
சென்னை — 2

வில்லியம் அன் கம்பனிக்காக
பீட்டர்
மேலாளர்.

ஆவணஞ் சார்ந்த உண்டியல்
(Documentary Bill)

மாற்று £ 550

முத்திரை

35, சித்தரஞ்சன் அவன்யூ,
கல்கத்தா-2,
26-8-1962.

கப்பல் 'ஜல உஷா'விலிருந்து 20 கட்டுகள் பொருள்கள் பெற்றதற்குப் பார்வைக்குப் பின் அறுபது நாள்களில், இம் மாற்றுண்டியலின் முதற்படிக்காக (இதே தவணையுடைய இதே நாளுண்டியலின் இரண்டாம் மூன்றாம் படிகள் செலுத்தப்படா நிலையில்) ஜோன்ஸ் அன் கம்பனியின் ஆணைக்கு ஐந்நூற்றைம்பது பவுண்டு ஸ்டர்லிங் செலுத்தி, அறிவித்தவாறே கணக்கில் வைக்கவும் இத்துடன் இணைக்கப் பட்ட கப்பல் ஆவணங்களை உண்டியல் ஏற்கப்பட்டதும் கொடுக்கவும்.

பெறுநர் :

வில்லியம் பிரதர்ஸ்,
45, பிஷப் கேட்,
இலண்டன்.

ஜோசப் அன் கம்பனி.

மேற் குறிப்பிட்ட உண்டியல் தள்ளுபடி செய்யும் வங்கியின் சார்பில் மேலெழுதித் தரப்படும் கப்பல் சரக்குமீது கடன் தரும் வங்கி, இதனை வெளிநாட்டில் உள்ள தன் வங்கிக்கு அனுப்பும். இறக்குமதியாளர் உண்டியலை ஏற்றவுடன், அங்குள்ள வங்கி கப்பல் ஆவணங்களைக் கொடுக்கும்.

### உண்டியல் நடவடிக்கைகளைப் பதியுமுறை

பெரும் வணிக, தொழில் நிறுவனங்களில் உண்டியல் நடவடிக்கைகளும் மிகுந்திருக்கும். நாம் பிறர்மீது உண்டியல் வரைவதும் பிறர் நம்மீது வரைந்த உண்டியலை ஏற்பதும், நாம் கடனுறுதிச் சீட்டு எழுதித் தருவதும், பிறர் நமக்குக் கடனுறுதிச் சீட்டு எழுதிக் கொடுப்பதும் அடிக்கடி நிகழக் கூடியவை. அந் நிலையில் அவற்றை முதலில் உண்டியலுக்கென உள்ள துணை ஏடுகளில் பதிந்த பின்னர்ப் பெயரேடுகளில் பெயர்த் தெழுதுதல் மிகவும் நலம்.

### வரவுடைய உண்டியல்கள் ஏடு (Bills Receivable Book)

நாம் பிறர் மீது வரைபவை, தவணை நாள்களில் இவற்றிற்கு நாம் பணம் பெறுவோம். இவை சொத்துக்கள் வகையைச் சார்ந்தவை. பிறர் நமக்கு எழுதித்தரும் கடனுறுதிச் சீட்டுகளையும் வரவுடைய உண்டியல்களாகவே கொள்ளலாம். இவற்றை வரவுடைய உண்டியல்கள் ஏட்டில் முதலில் பதியவேண்டும். அது எடுத்துக் காட்டில் காட்டிய வண்ணம் கோடுகளிடப் பட்டிருக்கும். உண்டியல் நமக்கு வந்த நாள், யாரிடமிருந்து பெறப்பட்டது, ஏற்குநர் பெயர், உண்டியல் நாள், தவணைக்காலம், தவணை அல்லது கெடு நாள், தொகை போன்ற விவரங்களுக்கான பத்திகளும் அவ்வுண்டியலை நாம் எவ்வாறு பயன்படுத்தியுள்ளோம். நம்மிடம் வைத்திருந்து தவணை நாளில் பணம் பெற்றோமா, வங்கியில் தள்ளுபடிக்கு மாற்றினோமா, பிறர்க்கு மேலெழுதித் தந்தோமா, உண்டியல் மறுக்கப்பட்டதா போன்றவற்றைக் குறிக்க ஒரு பத்தியும் அதிலிருக்கும்.

மாதிரி உண்டியல் ஏடுகள் அடுத்து வரும் எதிர்ப் பக்கத்தில் (157) காட்டப்பட்டிருக்கின்றன.

எடுத்தெழுது முறை: வரவுடைய உண்டியல் ஏட்டைத் திங்களொரு முறைக் கூட்டின், மொத்தம் நாம் பெற்றுள்ள உண்டியல்களின் மதிப்பு கிடைக்கிறது. இதனை வரவுடைய உண்டியல்கள் கணக்கில் பற்று வைத்தும், நமக்கு இவற்றைக் கொடுத்தவர்கள் ஒவ்வொருவர் கணக்கிலும் தனித்தனியாக வரவு வைத்து மிட்டால் போதும்.

எடுத்துக்காட் 18:

கீழ்க் கொடுக்கப்பட்ட நடவடிக்கைகளைப் பாண்டியனின் வரவுடைய உண்டியல்கள் ஏட்டில் பதிக.

மாதிரி

## வரவுடைய உண்டியல் ஏடு (Bills Receivable Book)

| வரிசை எண் | நாள் | எவரிடமிருந்து பெறப்பட்டது | பே. ப. எ. | விடுநர் | ஏற்குநர் | செலுத்துமிடம் | உண்டியல் நாள் | தவணைக் காலம் | கெடு நாள் | தொகை ரூ | ரொ. ப. எ. | குறிப்பு |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | | | | | | |

## எளிய வரவுடைய உண்டியல் ஏடு (Simple Bills Receivable Book)

| வரிசை எண் | நாள் | எவரிடமிருந்து பெறப்பட்டது | பே. ப. எ. | தவணைக்காலம் | கெடு நாள் | தொகை ரூ |
|---|---|---|---|---|---|---|
| | | | | | | |

1971

ஏப்ரல் 10 கரிகாலன் ஏற்றுத்தந்த ஏப்ரல் 8ம் நாளிடப்பட்ட உண்டியல் ரூ. 1,500. உண்டியல் நாளிலிருந்து மூன்று திங்கள் தவணையில் செலுத்த வேண்டியிருந்தது.

15 செழியனிடமிருந்து பெற்ற நெடுமாறன் ஏற்ற இரு திங்கள் தவணை உண்டியல் ரூ. 750. கடலூர் இந்தியன் வங்கியில் பணஞ் செலுத்துவதாகக் குறிப்பிடப் பட்டிருந்தது. உண்டியல் 11 - 4 - 1971 நாளிடப் பட்டிருந்தது.

17 நான்கு திங்கள் தவணையில் பணஞ் செலுத்துவதாகக் கூறும் ரூ. 500-க்கான கடனுறுதிச் சீட்டைக் காரிக் கண்ணனிடமிருந்து பெற்றது.

18 உண்டியல் நாளிலிருந்து 60 நாள்களில் திருச்சி சென்டிரல் வங்கியில் செலுத்தக் கூடிய உண்டியலை வாணன் ஏற்றுத் தந்தது. உண்டியல் ஏப்ரல் 17ம் நாளிடப்பட்டிருந்தது. தொகை ரூ. 1,250.

25 பார்வைக்குப் பின் இரு திங்களில் செலுத்தக் கோரி எழுதிய உண்டியலை (ரூ.1,750) முத்துமணி 25 - 4 - 71-ல் ஏற்றது. நாமக்கல் ஸ்டேட் வங்கியில் பணஞ் செலுத்துவதாகக் குறிப்பிடப் பட்டிருந்தது.

குறிப்பு : கரிகாலனின் உண்டியலுக்குக் கெடு நாளில் பணம் பெற்றது.

செழியனிடமிருந்து பெற்ற உண்டியலை வங்கியின் தள்ளுபடிக்கு 17- 4 - 1971-ல் மாற்றியது.

காரிக்கண்ணனின் கடனுறுதிச் சீட்டை 17 - 5 - 71 அன்று மேலெழுதி மாற்றித் தந்தது.

முத்துமணி ஏற்ற உண்டியலுக்குக் கெடு நாளில் பணங் கிடைத்தது.

விடை அடுத்த பக்கத்தில் கொடுக்கப் பட்டிருக்கிறது

விடை :

## பாண்டியனின் வரவுடைய உண்டியல் ஏடு

| வரிசை எண் | நாள் | எவரிடமிருந்து பெறப்பட்டது | பே. ப. எ. | விடுநர் | ஏற்குநர் | செலுத்துமிடம் | உண்டியல் நாள் | தவணைக் காலம் | கெடு நாள் | தொகை ரூ. | | ரொ. ப. எ. | குறிப்பு |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | 1971 | | | | | | | | | | | | |
| 1 | ஏப். 10 | கரிகாலன் | | தாமே (Self) | கரிகாலன் | - | ஏப். 8 | 3. திங்கள் | சூலை 11 | 1,500 | — | | உரிய நாளில் பணம் கிடைத்தது |
| 2 | ,, 15 | செழியன் | | செழியன் | நெடுமாறன் | இந்தியன் வங்கி கடலூர் | ஏப். 11 | 2- ,, | சூன் 14 | 750 | — | | 17-4-71 வங்கியில் தள்ளுபடி செய்யப் பட்டது |
| 3 | ,, 17 | காரிக் கண்ணன | | - | காரிக் கண்ணன் | | ஏப். 17 | 4 ,, | ஆக 20 | 500 | — | | 17-5-71ல் இரும் பொறைக்கு மேலெழுதித் தந்தது. |
| 4 | ,, 18 | வாணன் | | தாமே (Self) | வாணன் | சென்டிரல் வங்கி, திருச்சி | ஏப். 17 | 60 நாள்கள் | சூன் 19 | 1,250 | — | | |
| 5 | ,, 25 | முத்துமணி | | தாமே (Self) | முத்துமணி | ஸ்டேட் வங்கி, நாமக்கல் | ஏப். 25 | 2- திங்கள் | சூன் 28 | 1,750 | — | | கெடுநாளில் பணம் கிடைத்தது |
| | | | | | | | | | | 5,750 | | | |

செலுத்த வேண்டிய உண்டியல் ஏடு (Bills Payable Book)

நாம் ஏற்ற உண்டியல்களையும் நாம் பிறர்க்கு எழுதிக் கொடுத்த கடனுறுதிச் சீட்டுகளையும் முதன்முதலில் செலுத்த வேண்டிய உண்டியல் ஏட்டில்தான் பதிய வேண்டும். இதுவும் பல பத்திகளாகப் பிரிக்கப்பட்டுப் பல விவரங்களை உள்ளடக்கி யிருக்கும். யாரிடம் ஏற்றுக் கொடுத்தோம், எங்குச் செலுத்த வேண்டியது, கெடுநாள் எது போன்ற விவரங்கள் இருக்கும். எடுத்துக்காட்டில் காட்டியவாறு கோடுகளிடப் பட்டிருக்கும்.

(செலுத்த வேண்டிய உண்டியல் ஏடு: அடுத்த பக்கம் (161) பார்க்கவும்)

எடுத்தெழுது முறை: திங்கள்தோறும் இவ் வுண்டியல் ஏட்டைக் கூட்டின், மொத்தம் நாம் பிறர்க்கு உண்டியல்/கடனுறுதிச் சீட்டுக்கள் மீது செலுத்த வேண்டிய தொகை கிடைக்கிறது. இதனைச் செலுத்த வேண்டிய உண்டியல் கணக்கின் வரவுப் பக்கத்தில் எழுதவேண்டும். விடுநரின் கணக்குகளில் தனித்தனியே பற்று வைக்கவேண்டும்.

எடுத்துக் காட்டு 19 :

கீழ்க் கண்ட நடவடிக்கைகளை நறுமலர்ப் பதிப்பகத்தின் செலுத்த் வேண்டிய உண்டியல் ஏட்டில் பதிக.

1971

மே. 2 பார்வைக்குப் பின் 60 நாள்களில் செலுத்த வேண்டிய நாதன் கம்பனி எழுதிய ரூ. 820க் கான உண்டியலை ஏற்றுத் தந்தது.

உண்டியல் ஏப்ரல் 30-ம் நாளிடப்பட்டிருந்தது. இந்தியன் ஓவர்ஸீஸ் வங்கி கோவையில் செலுத்துவதாகக் குறிப்பிட்டிருந்தது.

8 பார்வைக்குப் பின் மூன்று திங்களில் பாப்புலர் புக் டிப்போவுக்குச் செலுத்த வேண்டிய முத்தமிழ்ப் பதிப்பகம் எழுதிய ரூ. 1,000-க்கான உண்டியலை ஏற்றுத் தந்தது. உண்டியல் 5-5-71 நாளிடப் பட்டுள்ளது.

16 பறம்புப் பதிப்பகம் வரைந்த உண்டியல் நாளிலிருந்து இரு திங்கள் தவணை உண்டியலை (ரூ. 1,500) ஏற்றுத் தந்தது. உண்டியல் மே 12ம் நாளிடப்பட்டிருந்தது.

மாதிரிகள்

## செலுத்த வேண்டிய உண்டியல் ஏடு (Bills Payable Book)

| வரிசை எண் | நாள் | எவருக்குக் கொடுத்தோம் | பே. ப. எ. | பெறுநர் | செலுத்துமிடம் | உண்டியல் நாள் | தவணைக் காலம் | கெடு நாள் | தொகை ரூ | ரொ. ப. எ | குறிப்பு |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | | | | | | | | |

## எளிய செலுத்நுண்டியல் ஏடு (Simple Bill Payable Book)

| வரிசை எண் | நாள் | | பே. ப. எ. | தவணைக்காலம் | கெடு நாள் | தொகை |
|---|---|---|---|---|---|---|
| | | | | | | |

நறுமலர்ப் பதிப்பகத்தின் செலுத்த வேண்டிய உண்டியல் ஏடு.

| வரிசை எண் | நாள் | எவருக்குக் கொடுத்தோம் | பே. ப. எ. | பெறுநர் | செலுத்துமிடம் | உண்டியல் நாள் | தவணைக் காலம் | கெடு நாள் | தொகை ரூ | | ரொ. ப. எ. | குறிப்பு |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 1971 மே 2 | நாதன் கம்பனி | | நாதன் கம்பனி | இந்தியன்ஓவர்சீஸ் வங்கி, கோவை. | ஏப். 30 | 60 நாள்கள் | ஜூலை, 4 | 820 | — | | பணஞ் செலுத்தப் பட்டது. |
| 2 | ,, 8 | முத்தமிழ்ப் பதிப்பகம் | | பாப்புலர் புக் டிப்போ | — | மே. 5 | 3 திங்கள் | ஆக. 11 | 1,000 | — | | |
| 3 | ,, 16 | பறம்புப் பதிப்பகம் | | பறம்புப் பதிப்பகம் | — | மே. 12 | 2 திங்கள் | ஜூலை, 15 | 1,500 | — | | பணஞ் செலுத்தப் பட்டது. |
| | | | | | | | | | 3,320 | — | | |

குறிப்பு: நாதன் கம்பனி எழுதிய உண்டியலுக்கும், பறம்புப் பதிப்பகம் வரைந்த உண்டியலுக்கும், உரிய நாளில் பணஞ் செலுத்தப்பட்டது.

(செலுத்த வேண்டிய உண்டியல் ஏடு முந்திய பக்கம் 162 பார்க்க)

உண்டியல் நடவடிக்கைகள் நிறைந்திருக்கும் நிலையில் இவ்வாறு வரவுடைய உண்டியல் ஏடு, செலுத்தவேண்டிய உண்டியல் ஏடு என்று தனித்தனி ஏடுகளில் பதிந்து பின்னர்ப் பேரேடுகளில் எடுத்தெழுதுவதைக் கண்டோம். ஆனால், உண்டியலைப் பிறர்க்கு மேலெழுதி மாற்றும்போழ்தும், உரிய நாளில் உண்டியல் மறுக்கப் படும் போழ்தும் குறிப்பேட்டுப் பதிவுகளே செய்தாக வேண்டும். உண்டியல் நடவடிக்கைகள் அதிக மில்லாவிடின் அனைத்தையுமே குறிப்பேட்டில் பதிந்து, பேரேடுகளில் எடுத்தெழுதிக் கொள்ள லாம். அதாவது, வரவுடைய உண்டியல் ஏடும், செலுத்த வேண்டிய உண்டியல் ஏடும் வைத்திராமல், உண்டியல் நடவடிக்கை களை நேரடியாகக் குறிப்பேட்டில் பதிந்து, பேரேட்டுக் கணக்கு களில் எடுத்தெழுதிக் கொள்ளலாம். அவற்றை இனிக் காண்போம்.

## உண்டியல் விடுநர் ஏடுகளில்

## (In the Books of the Drawer)

விடுநரைப் பொறுத்தவரை, உண்டியல் உள்வருகிறது. அது சொத்தினத்தைச் சார்ந்தது. கெடுநாளில் அதற்குரிய பணம் வர வேண்டியிருக்கிறது. எனவே, பிறர் ஏற்றுத் தந்தோ — அல்லது நம் பெயர்க்கு மேலெழுதி மாற்றித் தந்தோ, நம்மிடம் அது வரும் போழ்து வரவுடைய உண்டியல் கணக்கில் பற்றும், உண்டியல் தந்தவர் கணக்கில் வரவும் வைக்க வேண்டும்.

வரவுடைய உண்டியல் க/கு ப
ஏற்குநர் க/கு
(நாம் உண்டியலை வரைந்ததற்கு)

இவ்வுண்டியலைப் பலவகைகளில் நாம் பயன்படுத்திக் கொள்ள லாம் என்று கூறியிருக்கிறோம். ஒவ்வொரு வகையிலும் என்னென்ன பதிவுகளைச் செய்வதென்பதை இவண் ஆய்வோம்.

1. கெடுநாள் வரை நாமே வைத்திருந்து உண்டியலுக்கான தொகையைப் பெறுவதாக வைத்துக் கொள்வோம். அந்நிலையில்

ரொக்கம் உள்வருதலால் ரொக்கக் கணக்கில் அல்லது வங்கிக் கணக்கில் பற்று வைக்கவேண்டும். உண்டியலை ஏற்குநரிடம் கொடுத்து விடுகிறோம். எனவே அக் கணக்கில் வரவு வைக்க வேண்டும்.

பதிவு;

வங்கிக் க/கு அல்லது

ரொக்கக் க/கு ப

வரவுடைய உண்டியல் க/கு

(கெடுநாளில் உண்டியலுக்குப்

பணம் பெற்றது.)

2. பிறர் ஏற்றுத் தந்த உண்டியலை நாமே கெடுநாள் வரை வைத்திராது, வங்கியில் தள்ளுபடிசெய்வதாக வைத்துக் கொள்வோம். அந்நிலையில் வங்கி நமக்குப் பணந்தருகிறது. எனவே, அத்தொகைக்கு வங்கிக் கணக்கில் (நமது வங்கிக் கணக்கில் அதைச் சேர்ப்பதாகக் கொள்கிறோம்.) அல்லது ரொக்கக் கணக்கில் பற்று வைக்க வேண்டும். உண்டியலில் கண்டுள்ள முழுத்தொகையும் நமக்குக் கிடைக்காது. தள்ளுபடிக்கு வங்கி எடுத்துக் கொண்டது நமக்கு நட்டம். ஆகவே, தள்ளுபடிக் கணக்கிலும் பற்று வைக்க வேண்டும். உண்டியல் நம்மிடமிருந்து வங்கியிடம் சென்று விடுவதால், உண்டியல் கணக்கில் முழுத்தொகைக்கும் வரவு வைக்க வேண்டும்.

பதிவு:

வங்கிக் க/கு அல்லது

ரொக்கக் க/கு ... ப

தள்ளுபடிக் க/கு ... ப

வரவுடைய உண்டில் க/கு

(உண்டியலை வங்கியில் தள்ளுபடி செய்தது)

வங்கி இவ்வுண்டியலைக் கெடுநாள் வரை வைத்திருந்து, ஏற்குநரிடம் காட்டிப் பணம் பெற்றுக் கொள்ளும். அப்போழ்து நாம் ஏட்டில் (விடுநர் ஏட்டில்) பதிவொன்றும் செய்யக்கூடாது; காரணம் நம் வங்கிக்கும் ஏற்குநருக்கும் ஏற்படும் நடவடிக்கை. நாம் அதில் தொடர்புற்றிருக்கவில்லை,

3. இப்பொழுது நம் கடனாளி ஏற்ற உண்டியலைப் பிறர்க்கு மேலெழுதி மாற்றித் தருவதாகக் (Endorsement) கொள்வோம். அப்பொழுது மேலெழுத்துப் பெறுநர் நம்மிடமிருந்து உண்டியலைப் பெறுவதால், அவர் கணக்கில் பற்றும், வரவுடைய உண்டியல் அவர் கைக்குச் செல்வதால் அக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும்.

பதிவு :

மேலெழுத்துப் பெறுநர் க/கு ப
வரவுடைய உண்டியல் க/கு
(உண்டியலை மேலெழுதி மாற்றித் தந்ததற்கு)

கெடுநாளன்று, மேலெழுத்துப் பெறுநர் உண்டியலை ஏற்கு நரிடம் காட்டிப் பணம் பெற்றுக் கொள்வார். அப்பொழுது நம் ஏட்டில் பதிவொன்றும் செய்யக்கூடாது.

4. (i) அவ்வாறெல்லாமின்றிப் பிறர் ஏற்றுத் தந்த உண்டியலை நாமே வைத்திருந்து வங்கியில் தண்டலுக்கு அனுப்பு வதாகக் (வசூலுக்கு-for collection) கொள்வோம். உண்டியலை வசூலித்த பிறகே நம் கணக்கில் வரவு வைக்குமாதலால், வங்கிக் கணக்கில் நாம் பற்று வைக்கக் கூடாது. வசூலாகும் வரை வங்கி உண்டியல் தண்டல் கணக்கு என்று ஒன்று தொடங்கி அதில் பற்று வைக்கிறோம். வரவுடைய உண்டியல் நம்மிடமிருந்து சென்று விடுவதால் அக் கணக்கில் வரவு வைக்க வேண்டும்.

பதிவு :

வங்கி உண்டியல் தண்டல் (வசூல்) க/கு ப
வரவுடைய உண்டியல் க/கு
(உண்டியலை வசூலுக்காக வங்கியில் செலுத்தியது)

(ii) உண்டியல் தொகையை வசூலித்து விட்டதாக வங்கியின் அறிவிப்பு நமக்குக் கிடைக்கும் போழ்து, வங்கிக் கணக்கில் பற்று வைக்க வேண்டும். (வசூலான பணம் நம் வங்கிக் கணக்கில் சேர்க்கப்பட்டுவிட்டது.) தாற்காலிகமாகத் தொடங்கிய வங்கி உண்டியல் தண்டல் கணக்கை, அதில் வரவுவைத்து முடித்திடலாம்.

பதிவு :

வங்கிக் க/கு ப
வங்கி உண்டியல் தண்டல் க/கு
(வங்கி உண்டியலை வசூலித்ததற்கு)

மேற்கூறிய பல நிலைகளிலும்—உண்டியலுக்கான பணத்தைக் கெடுநாளில் நாமே பெறும் போழ்தும்—தள்ளுபடிக்கு வங்கியில்

மாற்றும் போழ்தும்—பிறர்க்கு மேலெழுதி மாற்றித்தரும் போழ்தும்—தண்டலுக்கு வங்கியில் உண்டியலை அனுப்பும் போழ்தும்—வரவுடைய உண்டியல் கணக்கில்தான் வரவு வைக்கப் படுகிறது என்பதை நாம் மறத்தலாகாது.

## ஏற்குநர் ஏடுகளில்

(In the Books of the Drawee)

நம்மீது உண்டியல் ஒன்று வரையப்பட்டு அதை நாம் ஏற்றுக் கொள்வோமானல்:

விடுநர் க/கு ப

செலுத்த வேண்டிய உண்டியல் க/கு

விடுநர் நம்மிடமிருந்து இவ்வுண்டியலைப் பெறுவதால் அவர் கணக்கில் பற்று வைக்கிறோம்: நாம் ஏற்றுக் கொடுத்த உண்டியல் மீது கெடுநாளன்று நாம் பணஞ் செலுத்தக் கடமைப்பட்டோம். எனவே, செலுத்த வேண்டிய உண்டியல் கணக்கில் வரவு வைக்கப் படுகிறது.

நாம் கொடுக்கும் இவ்வுண்டியலை விடுநர் தாமே வைத்திருப் பினும், பிறர்க்கு மேலெழுதி மாற்றித்தரினும், தள்ளுபடிக்கு மாற்றினும் அல்லது அவரது வங்கியிடம் தண்டலுக்குச் செலுத் தினும், நமது ஏட்டில் பதிவேதும் செய்யக்கூடாது. காரணம்- அந் நடவடிக்கைகளில் நாம் தொடர்புற்றிருக்கவில்லை. ஆனல், கெடுநாளன்று உண்டியலை வைத்திருப்பவர் நம்மிடம் கொடுக்கும் போழ்து அதற்குப் பணஞ் செலுத்துகிறோம். நாம் ஏற்ற உண்டியல் நம்மிடமே திரும்பி வருகிறது; நாம் ரொக்கங் கொடுப் போம் அல்லது காசோலை விடுப்போம். எனவே, தேவையான பதிவு :

செலுத்த வேண்டிய உண்டியல் க/கு ப

ரொக்கம் க/கு அல்லது

வங்கிக் க/கு

(நாம் ஏற்ற உண்டியலுக்குப் பணஞ்

செலுத்தியதற்கு)

இதுவரை நாம் கெடுநாளன்று ஏற்குநர் பணஞ் செலுத்து வதாகக் கொண்டு நடவடிக்கைகளைப் பதிந்தோம்; உண்டிய

லுக்குப் பணம் மறுக்கப்பட்டால் எவ்வாறு பதிவதென்பதை இனி ஆய்வோம்.

உண்டியல் விடுநர் ஏடுகளில் :

உண்டியலுககுக் கெடுநாளன்று பண மறுக்கப்பட்டால், உண்டியல் ஏற்குநர் கணக்கில் பற்று வைத்து அவரை மீண்டும் நமது கடனாளியாக்க வேண்டும். அதாவது உண்டியலை அவர் ஏற்றுக் கொடுத்த போழ்து அவர் கணக்கில் வைத்த வரவு இதனால் நீக்கப்படுகிறது. எக்கணக்கில் வரவு வைப்பது என்பது சூழ்நிலையைப் பொறுத்துள்ளது.

1. உண்டியல் நம்மிடமேயிருக்குமாயின், வரவுண்டியல் கணக்கில் வரவு வைக்க வேண்டும்.

பதிவு :

ஏற்குநர் க/கு ப

வரவுடைய உண்டியல் க/கு

2. உண்டியலை நாம் வங்கியில் தள்ளுபடி செய்திருப்பின் முன்னர் வங்கிக் கணக்கில் வைத்த பற்றை நீக்க, அக் கணக்கில் முழுத்தொகைக்கும் வரவு வைக்க வேண்டும். (நமது கணக்கிலிருந்து இத் தொகையை வங்கி எடுத்துக்கொள்ளும். தள்ளுபடி செய்த நாளிலிருந்து இதுவரை, வங்கி தந்த பணத்தை நாம் பயன்படுத்தி வந்திருக்கிறோம். வங்கி முன் கூட்டிக் கொடுத்த தொகைக்கு வட்டி போன்றதுதான் தள்ளுபடி. எனவே, தள்ளுபடிக்கணக்கில் வரவு வைக்கக் கூடாது. தேவையான பதிவு :

ஏற்குநர் க/கு ப

வங்கிக் க/கு

(வங்கியில் தள்ளுபடி செய்த உண்டியல் கெடு நாளன்று பணம் மறுக்கப் பட்டதால்)

3. பிறரிடம் மேலெழுதித் தந்த உண்டியலுக்குப் பணம் மறுக்கப் படுவாயின், மேலெழுத்துப் பெறுநர் கணக்கில் வரவு வைக்க வேண்டும். இதனால் மேலெழுதித் தந்த நேரத்தில் அவர் கணக்கில் வைத்தப் பற்று நீக்கப்படுகிறது.. தேவையான பதிவு :)

ஏற்குநர் ... க/கு ப

மேலெழுத்துப் பெறுநர் க/கு

4. வங்கியில் தண்டலுக்கனுப்பிய உண்டியலுக்குப் பண மறுக்கப்படுமாயின் தாற்காலிகமாகத் தொடங்கிய வங்கி உண்டி

யல் தண்டல் கணக்கில் வரவு வைக்கவேண்டும். இதனால் உண்டியலை வசூலுக்கு அனுப்பும் போழ்து இக் கணக்கில் வைத்த பற்று நீக்கப் படுகிறது. தேவையான பதிவு :

ஏற்குநர் க/கு ப
வங்கி உண்டியல் தண்டல் க/கு
(தண்டலுக் கனுப்பிய உண்டியலுக்குப் பணமறுக்கப் பட்டது.)

## ஏற்குநர் ஏடுகளில்

உண்டியலுக்குப் பணம் மறுக்கப்படும் போழ்து, ஏற்குநரைப் பொறுத்தவரை தாம் ஏற்ற உண்டியல் தம்மிடம் திரும்பி வந்து விடுகிறது. அதை ஏற்கும் போழ்து அக் கணக்கில் வரவு வைத்தோம், எனவே, இக் கணக்கை முடித்திட செலுத்துண்டியல் கணக்கில் பற்று வைக்க வேண்டும். உண்டியலை யார் வைத்திருப் பினும், ஏற்குநர், விடுநருக்குத்தான் பொறுப்பாவார். உண்டியலை ஏற்கும் போழ்து அவர் கணக்கில் வைத்த பற்றை நீக்க, இப்போது வரவு வைக்க வேண்டும். சுருங்கச் சொல்லின், ஏற்கும்போது செய்த பதிவை மாற்றி எழுதவேண்டும். செய்யவேண்டிய குறிப்பேட்டுப் பதிவு :

செலுத்த வேண்டிய உண்டியல் க/கு ப
விடுநர் க/கு

உண்டியல் மறுக்கப்படும் போழ்து அதனை வைத்திருப்பவர் பொதுக் குறிப்பாளரிடத்தில் அதைக் காட்டிக் குறித்துக் கொள்ள வேண்டும் என்றும் அதற்கான குறிப்புக் கட்டணமாகச் சிறு தொகையைச் செலுத்த வேண்டுமென்றும் முன்னரே விளக்கி யிருக்கிறோம். உண்டியல் கெடுநாளன்று மறுக்கப்படக் காரணமா யிருந்தவர் ஏற்றவர்தான். ஆகையால் இறுதியில் அவரே இச் செலவுக்கும் பொறுப்பாவார். உண்டியல் வைத்திருப்பவர் (Holder) இக் குறிப்புக் கட்டணத்தைச் செலுத்தியிருப்பின், தம்மிடம் உண்டியல் கொடுத்தவர் கணக்கில் இத்தொகைக்கும் பற்று வைப்பார். இத்தொகையை அவர் செலவழித்துள்ளதால் ரொக்கக் கணக்கில் வரவு வைப்பார்.

ஏற்குநரைப் பொறுத்தவரைக் குறிப்புக் கட்டணம் ஒரு செலவாகும்; தான்தான் அதை ஏற்க வேண்டிய பொறுப்புள்ளது. எனவே, குறிப்புக் கட்டணக் கணக்கில் பற்று வைப்பார். தாம் உண்டியல் தொகையுடன் இதனையும் விடுநருக்குத் தரவேண்டி யுள்ளதால், விடுநர் கணக்கில் உண்டியல் தொகையுடன் குறிப்புக் கட்டணத்தையும் சேர்த்து வரவு வைக்கப்படும். எனவே, குறிப்புக்

கட்டணம் என்ற கணக்கு ஏற்றவர் ஏடுகளில் மட்டும்தான் தனியாகக் காணப்படும் என்பதை உணர வேண்டும்.

கீழ்க்கண்ட எடுத்துக்காட்டுகள் இதுகாறும் விளக்கியவற்றைத் தெளிவாக்கும்.

எடுத்துக்காட்டு 20 :

*1.* முருகன் பழநிமீது மூன்று திங்கள் தவணையில் ரூ. *1,000*-க்கு வரைந்த உண்டியலைப் பழநி ஏற்றார். கெடு நாளன்று அதற்கான பணஞ் செலுத்தப்பட்டது.

விடை :

முருகன் ஏடுகளில்

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை ரூ. | வரவுத் தொகை ரூ. |
|---|---|---|---|---|
| | (1) வரவுடைய உண்டியல் க/கு ப | | 1,000 | |
| | பழநி | | | 1,000 |
| | (உண்டியலைப் பழநிமீது வரைந்தது) | | | |
| | (2) வங்கி அல்லது ரொக்க க/கு ப | | 1,000 | |
| | வரவுடைய உண்டியல் க/கு | | | 1,000 |
| | (உண்டியல் பணம் கெடு நாளன்று கிடைத்தது) | | | |

குறிப்பு : உண்டியல் பணம் பெற்றதும் வங்கியில் கட்டப் படுகிறது என்று கொண்டு வங்கிக் கணக்கில் பற்று வைக்கப்படுவது வழக்கம். அவ்வாறே ரொக்கம் செலுத்துவதாயின், காசோலை விடுப்பதாகக் கொண்டு வங்கிக் கணக்கில் வரவு வைக்கலாம்.

பழநி ஏடுகளில்

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை ரூ. | வரவுத் தொகை ரூ. |
|---|---|---|---|---|
| | (1) முருகன் ப | | 1,000 | |
| | செலுத்த வேண்டிய உண்டியல் க/கு (உண்டியல் ஏற்றது) | | | 1,000 |
| | (2) செலுத்த வேண்டிய உண்டியல் க/கு ப | | 1,000 | |
| | வங்கி அல்லது ரொக்கக் க/கு | | | 1,000 |
| | (கெடு நாளன்று ஏற்ற உண்டியல் மீது காசோலை விடுத்தது) | | | |

எடுத்துக் காட்டு 21.

*மூன்று திங்கள் தவணையில் 1-4-1971 அன்று ரூ. 1,000-க்கு வேணு வரைந்த உண்டியலை வேலு ஏற்றார். உடனே வங்கியில் 6% தள்ளுபடிக்கு மாற்றப்பட்டது. கெடு நாளில் உண்டியலுக்குப் பணம் செலுத்தப்பட்டது என்று கொண்டு பதிக.*

விடை:

வேணுவின் ஏடுகளில்

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை ரூ. | வரவுத் தொகை ரூ. |
|---|---|---|---|---|
| | (1) வரவுடைய உண்டியல் க/கு ப<br>வேலு<br>(உண்டியலை வேலு மீது வரைந்தது) | | 1,000 | 1,000 |
| | (2) வங்கிக் க/கு ப<br>தள்ளுபடிக் க/கு ப<br>வரவுடைய உண்டியல் க/கு<br>(வங்கியில் 6% தள்ளுபடிக்கு உண்டியலை மாற்றியது) | | 985<br>15 | 1,000 |

வேலுவின் ஏடுகளில்

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை ரூ. | வரவுத் தொகை ரூ. |
|---|---|---|---|---|
| | (1) வேணு ப<br>செலுத்த வேண்டிய உண்டியல் க/கு<br>(உண்டியல் ஏற்றது) | | 1,000 | 1,000 |
| | (2) செலுத்த வேண்டிய உண்டியல் க/கு ப<br>வங்கிக் க/கு<br>கெடு நாளில் ஏற்ற உண்டியலுக்குப் பணஞ் செலுத்தியது) | | 1,000 | 1,000 |

மேற் சொன்ன எடுத்துக்காட்டில் கெடு நாளன்று உண்டியலுக்குப் பண மறுக்கப்பட, வங்கி செய்த குறிப்புக் கட்டணம் ரூ. 5 என்றால் பதிவு முறை:

வேணுவின் ஏடுகளில்

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| வேலு | ... | 1,005 | |
| வங்கிக் க/கு | ... | | 1,005 |

(கெடு நாளன்று உண்டியல் பண மறுக்கப்பட, வங்கி செலுத்திய குறிப்புக் கட்டணம் ரூ. 5)

வேலுவின் ஏடுகளில்

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| செலுத்த வேண்டிய உண்டியல் க/கு | ப | 1,000 | |
| குறிப்புக் கட்டணம் க/கு | ... ப | 5 | |
| வேணு | ... | | 1,005 |

(கெடு நாளன்று உண்டியலுக்குப் பண மறுத்ததும் ஏற்க வேண்டிய குறிப்புக் கட்டணம் ரூ. 5.)

3. எடுத்துக் காட்டு 22 :

இரு திங்கள் தவணையில் ரூ. 500க்குக் கம்பர் வரைந்த உண்டியலைக் கபிலர் ஏற்றார். கம்பர் இதனைக் காளமேகத்துக்கு மேலெழுதி மாற்றித் தந்தார். (i) கெடு நாளன்று உண்டியலுக்குப் பணஞ் செலுத்தியதாகக் கொண்டு, (ii) உண்டியலுக்குப் பண மறுக்கப்பட்டுச் செலுத்திய குறிப்புக் கட்டணம் ரூ. 5 எனக் கொண்டு ஒவ்வொருவர் ஏடுகளிலும் தேவையான பதிவுகளைச் செய்க.

கம்பர் ஏடுகளில்

| | | | ரூ | ரூ |
|---|---|---|---|---|
| 1. | வரவுடைய உண்டியல் க/கு | ப | 500 | |
| | கபிலர் | ... | | 500 |
| | (கபிலர்மீது உண்டியல் வரைந்தது) | | | |
| 2. | காள மேகம் | ப | 500 | |
| | வரவுடைய உண்டியல் க/கு | ... | | 500 |
| | (உண்டியலைக் காளமேகத்துக்கு மேலெழுதி மாற்றிக் கொடுத்தது.) | | | |

(i) கெடு நாளில் உண்டியலுக்குப் பணந்தரப்பட்டால் பதிவு தேவையில்லை.

(ii) பணம் மறுக்கப் பட்டால்,

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| கபிலர் | ... ப | 505 | |
| காள மேகம் | ... | | 505 |

(உண்டியலுக்குப் பண மறுக்கப்பட, காளமேகம் செலுத்திய குறிப்புக் கட்டணம் ரூ. 5.)

காளமேகம் ஏடுகளில்

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| வரவுடைய உண்டியல் க/கு | ... ப | 500 | |
| கம்பர் க/கு | ... | | 500 |

(கபிலர் ஏற்ற உண்டியலைக் கம்பர் மேலெழுதி மாற்றிக் கொடுத்தது).

(i) கெடு நாளில் பணம் பெறின்,

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| வங்கிக் க/கு | ... ப | 500 | |
| வரவுடைய உண்டியல் க/கு | ... | | 500 |

(உண்டியலுக்குப் பணம் பெற்றது)

(ii) பண மறுக்கப் படின்,

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| கம்பர் | ... ப | 505 | |
| வரவுடைய உண்டியல் க/கு | ... | | 500 |
| ரொக்க க/கு | ... | | 5 |

(உண்டியலுக்குப் பண மறுக்கப்படச் செலுத்திய குறிப்புக் கட்டணம் ரூ. 5)

கபிலர் ஏடுகளில்

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| கம்பர் | ... ப | 500 | |
| செலுத்த வெண்டிய உண்டியல் க/கு | | | 500 |

(உண்டியல் ஏற்றது)

(i) பணந்தரின்,

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| செலுத்த வேண்டிய உண்டியல் க/கு | ... ப | 500 | |
| வங்கிக் க/கு | ... | | 500 |
| (கெடுநாளில் உண்டியலுக்குப் பணந்தரக் காசோலை விட்டது) | | | |

(ii) பணம் மறுக்கப்படின்,

| | | | |
|---|---|---|---|
| செலுத்த வேண்டிய உண்டியல் க/கு | ... ப | 500 | |
| குறிப்புக் கட்டணம் க/கு | ... ப | 5 | |
| கம்பர் | ... | | 505 |
| (உண்டியலுக்குப் பணமறுக்கப்பட, ஏற்க வேண்டிய குறிப்புக் கட்டணம் ரூ. 5) | | | |

எடுத்துக் காட்டு 23 :

ரூ. 1,000-க்கு இருதிங்கள் தவணையில் பாரி வரைந்த உண்டியலை ஓரி ஏற்றார். பாரி அதனைக் காரியிடம் மேலெழுதித் தந்தார்: காரி அதனைப் பேகனிடம் மேலெழுதித் தந்தார். பேகன் அவ்வுண்டியலைத் தன் வங்கியில் ரூ. 980-க்குத் தள்ளுபடிக்கு மாற்றினார். கெடுநாளில் உண்டியல் பணம் மறுக்கப்பட, ஆனகுறிப்புக் கட்டணம் ரூ. 10. பணம் மறுக்கப்பட்டவுடன், பாரி அதற்கான பணஞ் செலுத்துவதாகக் கொண்டு அனைவர் ஏடுகளிலும் பதிக.

விடை :

பாரியின் ஏடுகளில்

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| வரவுடைய உண்டியல் க/ | ... | 1,000 | |
| ஓரி | | | 1,000 |
| (உண்டியல் வரைந்தது) | | | |
| காரி | ... ப | 1,000 | |
| வரவுடைய உண்டியல் க/கு | ... | | 1,000 |
| (காரியிடம் உண்டியலை மேலெழுதிக் கொடுத்தது) | | | |

| | | | ரூ. | ரூ. |
|---|---|---|---|---|
| ஓரி | ... | ப | 1,010 | |
| வங்கிக் க/கு | | | | 1,010 |
| (உண்டியல் கெடுநாளில் பண மறுக்கப்பட, அதற்கான தொகையையும், குறிப்புக் கட்டணம் ரூ. 10 ஐயும் செலுத்தியது) | | | | |

ஓரியின் ஏடுகளில்

| | | | | |
|---|---|---|---|---|
| பாரி | ... | ப | 1,000 | |
| செலுத்த வேண்டிய உண்டியல் க/கு | | | | 1,000 |
| (உண்டியலை ஏற்றது) | | | | |
| செலுத்த வேண்டிய உண்டியல் க/கு | ... | ப | 1,000 | |
| குறிப்புக் கட்டணம் க/கு | ... | ப | 10 | |
| பாரி க/கு | ... | | | 1010 |
| (கெடு நாளில் பணம் மறுக்கப்பட்டது குறிப்புக் கட்டணம் ரூ.) | | | | 10 |

காரி ஏடுகளில்

| | | | | |
|---|---|---|---|---|
| வரவுடைய உண்டியல் க/கு | ... | ப | 1,000 | |
| பாரி | ... | | | 1,000 |
| (ஓரி ஏற்ற உண்டியலை பாரி மேலெழுதித் தந்தது) | | | | |
| பேகன் | ... | ப | 1,000 | |
| வரவுடைய உண்டியல் க/கு | ... | | | 1,000 |
| (உண்டியலைப் பேகனிடம் மேலெழுதித் தந்தது) | | | | |

குறிப்பு : உண்டியல் கெடுநாளன்று மறுக்கப்படினும், பாரி அதற்கானத் தொகையைச் செலுத்திவிட்டதால், வேறு பதிவு தேவையில்லை.

பேகன் ஏடுகளில்

| | | | | |
|---|---|---|---|---|
| வரவுடைய உண்டியல் க/கு | ... | ப | 1,000 | |
| காரி | ... | | | 1,000 |

| | | | ரூ. | ரூ. |
|---|---|---|---|---|
| (உண்டியலை மேலெழுதிப் பெற்றது) | | | | |
| வங்கிக் க/கு | ... | ப | 980 | |
| தள்ளுபடிக் க/கு | ... | ப | 20 | |
| வரவுடைய உண்டியல் க/கு | | | | 1000 |
| (வங்கியில் உண்டியலைத் தள்ளுபடிக்கு மாற்றியது.) | | | | |

குறிப்பு : கெடுநாளில் உண்டியல் மறுக்கப்படினும், பாரி அதற்கான தொகையைச் செலுத்திவிட்டதால், வேறு பதிவு எதுவும் தேவையில்லை.

## உண்டியலைப் புதுப்பித்தல்
## (Renewal of Bills)

கெடுநாளில் பணந்தர இயலா நிலையில், ஏற்குநர், விடுநரை அணுகித் தந்நிலையை விளக்கிப் பழைய உண்டியலைப் புதுப்பிக்கு மாறு வேண்டலாம். இப்பொழுது பழைய உண்டியல் பயனற்று விடுவதால் அதனை நீக்க (ரத்து செய்ய - Cancel) பதிவு செய்ய வேண்டும். பண மறுக்கப்படும் போது செய்யும் பதிவேதான் இதற்குமாகும். பணம் வரவேண்டிய காலம் மேலும் நீடிக்கப் படுவதால், ஏற்குநர் அக்காலத்துக்கு வட்டி தரவேண்டியிருக்கும். உண்டியல் பிறர் கைக்குப் போகாமல் தன்னிடமேயிருந்தால்தான் கெடுநாளுக்கு முன்னர் இவ்வாறு உண்டியலைப் புதுப்பித்துக் கொள்ளலாம்.

புதுப்பித்தலுக்குத் தேவையான பதிவுகள் :

### விடுநர் ஏட்டில்

1. உண்டியலைப் புதுப்பிக்கும் போழ்து. பழைய உண்டியலை நீக்க வேண்டும். இதற்கு ஏற்குநர் கணக்கில் பற்று வைத்து, வரவுடைய உண்டியல் கணக்கில் வரவு வைக்க வேண்டும்.

2. ஏற்குநரிடமிருந்து வட்டி பெற வேண்டியுள்ளது. இதனால் ஏற்குநர் கணக்கில் பற்றும், வட்டிக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும்.

3. புது உண்டியல் வரையும் போழ்து உண்டியல் கணக்கில் பழைய உண்டியல் தொகையுடன் வட்டியும் சேர்த்துப் பற்று வைக்க வேண்டும். ஏற்குநர் கணக்கில் வரவு வைக்க வேண்டும்.

ஏற்குநர் ஏடுகளில்

1. பழைய உண்டியலை நீக்க, முதலில் செலுத்த வேண்டிய உண்டியல் கணக்கில் பற்றும், விடுநர் கணக்கில் வரவும் வைக்க வேண்டும்.

2. வட்டி தர வேண்டியுள்ளதால், வட்டிக் கணக்கில் பற்றும் விடுநர் கணக்கில் வரவும் வைக்க வேண்டும்.

3. பழைய உண்டியல் தொகையுடன் வட்டி சேர்த்த தொகைக்குப் புதிய உண்டியல் வரைவதால், அதை ஏற்கும் போழ்து, விடுநர் கணக்கில் பற்றும், செலுத்த வேண்டிய உண்டியல் கணக்கில் வரவும் வைக்க வேண்டும்.

எடுத்துக் காட்டு 24 :

கண்ணன் மூன்று திங்கள் தவணையில் ரூ 1800-க்கு எழுதிய உண்டியலைக் குசேலன் ஏற்றார். கெடுநாளில் கண்ணனை அணுகி உண்டியலுக்குப் பணந்தர இயலாத நிலையைக் கூறி,

(i) ரூ. 800 ரொக்கம் கொடுப்பதாகவும் புதிய உண்டியல் ஒன்றை ரூ. 1,030-க்கு (ரூ. 30 வட்டியுட்பட) ஆறு திங்கள் தவணையில் வரையுமாறு வேண்டின்,

(ii) ரூ. 48 வட்டி ரொக்கமாகக் கொடுத்து விடுவதாகவும், ரூ. 1800-க்குப் புதிய உண்டியலொன்றை ஆறு திங்கள் தவணையில் வரையுமாறு வேண்டின்,

(iii) ரூ. 830 (வட்டி ரூ. 30 உட்பட) உடனே கொடுத்து விடுவதாகவும், மீதத் தொகைக்குப் புதிய உண்டியலொன்றை ஆறு திங்கள் தவணையில் வரையுமாறு வேண்டின்,

(iv) புதிய உண்டியலொன்றை ரூ 1,854-க்கு (வட்டியுட்பட) வரையுமாறும் வேண்டின்,

இருவர் ஏடுகளிலும் ஒவ்வொரு சூழ்நிலையிலும் எவ்வாறு பதியவேண்டும் ?

விடை :

கண்ணன் ஏடுகளில்

| | குறிப்பேடு | பற்று | வரவு |
|---|---|---|---|
| | | ரூ. | ரூ. |
| | வரவுடைய உண்டியல் க/கு ப<br>குசேலன்<br>(மூன்று திங்கள் தவணை உண்டியலை வரைய, குசேலன் ஏற்றது.) | 1,8 00 | 1,800 |
| | குசேலன் ப<br>வரவுடைய உண்டியல் க/கு<br>(பழைய உண்டியலை நீக்க) | 1,800 | 1,800 |
| (i) | (அ) வங்கிக் க/கு ப<br>குசேலன்<br>(குசேலனிடமிருந்து பெற்றது.) | 800 | 800 |
| | (ஆ) குசேலன் ப<br>வட்டிக் க/கு<br>(புதிய உண்டியலுக்கான வட்டி பெற வேண்டியது.) | 30 | 30 |
| | (இ) வரவுடைய உண்டியல் க/கு ப<br>குசேலன்<br>(வட்டி சேர்ந்த தொகைக்குப் புதிய உண்டியல் குசேலன் மீது வரைந்தது.) | 1,030 | 1,030 |
| (ii) | (அ) குசேலன் ப<br>வட்டிக் க/கு<br>(குசேலனிட மிருந்து பெற வேண்டிய வட்டி) | 48 | 48 |
| | (ஆ) வங்கிக் க/கு ப<br>குசேலன்<br>(குசேலனிட மிருந்து பெற்றது.) | 48 | 48 |
| | வரவுடைய உண்டியல் க/கு ப<br>குசேலன்<br>(புதிய உண்டியல் குசேலன்மீது 6 திங்கள் தவணையில் வரைந்தது.) | 1,800 | 1,800 |
| (iii) | (அ) குசேலன் ப<br>வட்டிக் க/கு | 30 | 30 |

| | குறிப்பேடு | பற்று | வரவு |
|---|---|---|---|
| | | ரூ. | ரூ. |
| | (குசேலனிடமிருந்து பெற வேண்டிய வட்டி.) | | |
| | (ஆ) வங்கிக் க/கு ப<br>குசேலன்<br>(வட்டி ரூ. 30 உட்பட, குசேலனிட மிருந்து பெற்றது ) | 830 | 830 |
| | (இ) வரவுடைய உண்டியல் க/கு ப<br>குசேலன்<br>(புதிய உண்டியல் ஆறு திங்கள் தவணையில் குசேலன்மீது வரைந்தது.) | 1,000 | 1,000 |
| (iv) | (அ) குசேலன் ப<br>வட்டிக் க/கு<br>குசேலனிட மிருந்து பெற வேண்டிய வட்டி) | 54 | 54 |
| | (ஆ) வரவுடைய உண்டியல் க/கு ப<br>குசேலன்<br>(புதிய உண்டியல் வட்டி யுட்பட்ட தொகைக்குக் குசேலன் மீது வரைந்தது. | 1,854 | 1,854 |

குறிப்பு: முதல் இரு பதிவுகளும் எல்லாச் சூழ்நிலைகட்கும் பொதுவானவை.

குசேலன் ஏடுகளில்

| குறிப்பேடு | பற்று | வரவு |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| கண்ணன் ப<br>செலுத்த வேண்டிய உண்டியல் க/கு<br>(மூன்று திங்கள் தவணை உண்டியலைக் கண்ணன் வரைய ஏற்றுத் தந்தது.) | 1,800 | 1,800 |
| செலுத்த வேண்டிய உண்டியல் க/கு ப<br>கண்ணன்<br>(பழைய உண்டியலை நீக்க.) | 1,800 | 1,800 |

| | குறிப்பேடு | | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| (i) | (அ) கண்ணன் <br> வங்கிக் க/கு <br> (கண்ணனிடம் கொடுத்தது.) | ப | 800 | 800 |
| | (ஆ) வட்டிக் க/கு <br> கண்ணன் <br> (கண்ணனுக்குத் தரவேண்டிய வட்டி.) | ப | 30 | 30 |
| | (இ) கண்ணன் <br> செலுத்தவேண்டிய உண்டியல் க/கு <br> (புதிய உண்டியலொன்றை 6 திங்கள் தவணையில் வட்டியுட்பட்ட தொகைக்கு ஏற்றுத் தந்தது.) | ப | 1,030 | 1,030 |
| (ii) | (அ) வட்டிக் க/கு <br> கண்ணன் <br> (கண்ணனுச்குத் தரவேண்டிய வட்டி ) | ப | 48 | 48 |
| | (ஆ) கண்ணன் <br> வங்கிக் க/கு <br> (கண்ணனிடம் செலுத்தியது.) | ப | 48 | 48 |
| | (இ) கண்ணன் <br> செலுத்தவேண்டிய உண்டியல் க/கு <br> (ஆறு திங்கள் தவணையில் புதிய உண்டிபலொன்றை ஏற்றுத் தந்தது.) | ப | 1,800 | 1,800 |
| (iii) | (அ) வட்டிக் க/கு <br> கண்ணன் <br> (கண்ணனுக்குத் தரவேண்டிய வட்டி.) | ப | 30 | 30 |
| | (ஆ) கண்ணன் <br> வங்கிக் க/கு <br> (கண்ணனிடம் வட்டியுட்படச் செலுத்தியது.) | ப | 830 | 830 |
| | (இ) கண்ணன் <br> செலுத்த வேண்டிய உண்டியல் க/கு <br> (6 திங்கள் தவணையில் வரைந்த புதிய உண்டியலை ஏற்றுத் தந்தது.) | ப | 1,000 | 1,000 |

| | குறிப்பேடு | | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| (iv) | (அ) வட்டிக்கு க/கு | ப | 54 | |
| | கண்ணன் | | | 54 |
| | (கண்ணனுக்குத் தரவேண்டிய வட்டி.) | | | |
| | (ஆ) கண்ணன் | ப | 1,854 | |
| | செலுத்த வேண்டிய உண்டியல் க/கு | | | 1,854 |
| | புதிய உண்டியலை வட்டியுட்பட்ட தொகைக்கு ஏற்றுத் தந்தது.) | | | |

குறிப்பு : முதல் இரு பதிவுகளும் எல்லாச் சூழ்நிலைகட்கும் பொதுவானவை.

## தள்ளுபடிக்கு உண்டியலை விலக்கல்
(Retiring the Bill under Discount)

உண்டியலை ஏற்குநர் கெடுநாளுக்கு முன்னரே உண்டியல் தொகையைச் செலுத்த விரும்பலாம். இப்பொழுது கெடுநாளுக்கு முன்னரே உண்டியல் பணம் கிடைப்பதால், விடுநர் தள்ளுபடி (Rebate) அளிப்பது வழக்கம். இவ்வாறு கெடுநாளுக்கு முன், உண்டியல் தொகையைச் செலுத்திவிடுவதைத் 'தள்ளுபடிக்கு உண்டியலை விலக்கல்' எனலாம். இத் தள்ளுபடி ஏற்குநர்க்கு ஆதாயம்; விடுநர்க்கு நட்டம்.

விடுநர் ஏட்டில், ரொக்கம் அல்லது வங்கிக் கணக்கில், பெற்ற தொகைக்குப் பற்றும், 'தள்ளுபடிக்' கணக்கில் (Discount) தள்ளுபடித் தொகைக்குப் பற்றும், வரவுடைய உண்டியல் கணக்கில் முழுத் தொகைக்கு வரவும் வைக்கவேண்டும்.

ஏற்குநர் ஏடுகளில் பதியும்போழ்து, செலுத்த வேண்டிய உண்டியல் கணக்கில், உண்டியல் தொகைக்குப் பற்றும், ரொக்கம் அல்லது வங்கிக் கணக்கில், கொடுத்த தொகைக்கு வரவும், தள்ளுபடிக் கணக்கில், பெற்ற தள்ளுபடித் தொகைக்கு வரவும் வைக்க வேண்டும்.

எடுத்துக் காட்டு 25 :

அப்பர், சுந்தரரிடம் ரூ. 2,000 மதிப்புள்ள சரக்கை 1-1-1971-ல் விற்றார். இதற்குச் சுந்தரர் ரூ. 1,000-க்கு நான்கு திங்கள்

தவணையில் ஓர் உண்டியலையும், ரூ. 600-க்கு மூன்று திங்கள் தவணையில் ஓர் உண்டியலையும் ரூ. 400-க்கு இரு திங்கள் தவணையில் ஓர் உண்டியலையும் ஏற்ருர். ரூ. 1,000-க்,கான உண்டியலை வங்கியில் 6%-க்குத் தள்ளுபடி செய்தார். மூன்ருவது உண்டியலுக்குக் கெடு நாளில் சுந்தரர் பணஞ் செலுத்திஞர். 1-4-71-ல், சுந்தரர், அப்பரை அணுகி இரண்டாவது உண்டியலுக்குப் பணந்தர இயலவில்லை யென்றும், எனவே அதை ரத்துசெய்யுமாறும், அதற்குப் பதில் ரூ. 250 உடனே ரொக்கமாகக் கொடுத்து விடுவதாகவும், மீதித் தொகையுடன் ரூ. 15 வட்டி சேர்த்த தொகைக்கு இருதிங்கள் தவணையில் கடனுறுதிச் சீட்டுத் (Promissory Note) தருவதாகவும் கூறிஞர். அப்பர் இதற்கு இசைந்தார். இவ்வுண்டியலை, அப்பர், மணிவாசகரிடம் மேலெழுதி மாற்றித் தந்தார்.

முதல் உண்டியலுக்குக் கெடுநாளில் பண மறுக்கப்பட வங்கி, செலுத்திய குறிப்புக் கட்டணம் ரூ. 5. 5-5-71-ல் உண்டியல் தொகையுடன் குறிப்புக் கட்டணமும் வட்டியும் (ரூ. 20ம்) சேர்ந்த தொகைக்குப் புதிய உண்டியல் ஒன்றை மூன்று திங்கள் தவணையில் வரைய, சுந்தரர் வேண்டிஞர். அப்பர் அவ்வாறே செய்தார்.

சுந்தரர் தாம் எழுதித் தந்த கடனுறுதிச் சீட்டுக்குக் கெடு நாளில்,பணஞ் செலுத்திஞர். அதே நாளில் தாம் ஏற்றிருந்த புதிய உண்டியலையும் ரூ, 10 தள்ளுபடியில் விலக்கிஞர் (Retired the Bill under Discount).

1. அப்பர், சுந்தரர், மணிவாசகர் ஏடுகளில் இதற்கான பதிவுகளைத் தருக.

2. அப்பர் ஏட்டில் சுந்தரர் கணக்கையும், சுந்தர் ஏட்டில் அப்பர் கணக்கையும் தயாரிக்க.

விடை :

அப்பர் ஏடுகளில்

குறிப்பேடு

| | | | ரூ. | ரூ. |
|---|---|---|---|---|
| 1971<br>சன. 1 | சுந்தரர்<br>விற்பனைக் க/கு<br>(சரக்கு விற்றது.) | ப | 2,000 | 2,000 |

| | குறிப்பேடு | | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| 1971 | | | ரூ. | ரூ. |
| சன. 1 | வரவுடைய உண்டியல் க/கு | ப | 2,000 | |
| | சுந்தரர் | | | 2,000 |
| | (ரூ 1,000-க்கு 4 திங்கள் உண்டியலையும், ரூ. 600-க்கு 3 திங்கள் உண்டியலையும், ரூ. 400-க்கு 2 திங்கள் உண்டியலையும் சுந்தரரிடமிருந்து பெற்றது.) | | | |
| ,, | வங்கிக் க/கு | ப | 980 | |
| | தள்ளுபடிக் க/கு | ப | 20 | |
| | வரவுடைய உண்டியல் க/கு | | | 1,000 |
| | (வங்கியில் 6% க்குத்தள்ளுபடி செய்தது.) | | | |
| மார் 4 | வங்கிக் க/கு | ப | 400 | |
| | வரவுடைய உண்டியல் க/கு | | | 400 |
| | (3 திங்கள் உண்டியலுக்குச் சுந்தரர் பணஞ் செலுத்தியது.) | | | |
| ஏப். 1 | சுந்தரர் | ப | 600 | |
| | வரவுடைய உண்டியல் க/கு | | | 600 |
| | (4 திங்கள் தவணை உண்டியலை நீக்க.) | | | |
| ,, | வங்கிக் க/கு | ப | 250 | |
| | சுந்தரர் | | | 250 |
| | (சுந்தரரிடமிருந்து பெற்றது.) | | | |
| ,, | சுந்தரர் | ப. | 15 | |
| | வட்டிக் க/கு | | | 15 |
| | (சுந்தரரிடமிருந்து வட்டி பெற வேண்டியது.) | | | |
| ,, | வரவுடைய உண்டியல் க/கு | ப | 365 | |
| | சுந்தரர் | | | 365 |
| | (வட்டியுட்பட்ட தொகைக்கு இரு திங்கள் தவணையிலான கடனுறுதிச் சீட்டைச் சுந்தரரிடமிருந்து பெற்றது.) | | | |
| ,, | மணிவாசகர் | ப | 365 | |
| | வரவுடைய உண்டியல் க/கு | | | 365 |
| | (சுந்தரரிடம் பெற்ற கடனுறுதிச் சீட்டை மணிவாசகரிடம் மேலெழுதி மாற்றித் தந்தது ) | | | |

| | குறிப்பேடு | | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| 1971 | | | | |
| மே. 4 | சுந்தரர் | ப | 1,005 | |
| | வங்கிக் க/கு | | | 1,005 |
| | (வங்கியில் தள்ளுபடி செய்த சுந்தரரின் உண்டியலுக்கு உரிய நாளில் பண மறுக்கப்பட, வங்கி செலுத்திய குறிப்புக் கட்டணம் ரூ. 5.) | | | |
| மே. 5 | சுந்தரர் | ப | 20 | |
| | வட்டிக் க/கு | | | 20 |
| | (சுந்தரரிடமிருந்து பெறவேண்டிய வட்டி.) | | | |
| ,, | வரவுடைய உண்டியல் க/கு | ப | 1,025 | |
| | சுந்தரர் | | | 1,025 |
| | (குறிப்புக் கட்டணமும் வட்டியுமுட்பட்ட தொகைக்கு 3 திங்கள் தவணை உண்டியலைச் சுந்தரரிடமிருந்து பெற்றது.) | | | |
| ஜுன் 4 | வங்கிக் க/கு | ப | 1,015 | |
| | தள்ளுபடிக் க/கு | ப | 10 | |
| | வரவுடைய உண்டியல் க/கு | | | 1,025 |
| | (உண்டியலை ரூ 10 தள்ளுபடியில் விலக்கிச் சுந்தரரிடமிருந்து பணம் பெற்றது.) | | | |

ப சுந்தரர் வ

| 1971 | | ரூ. | 1971 | | ரூ |
|---|---|---|---|---|---|
| சன 1 | விற்பனை | 2,000 | சன 1 | வரவுடைய உண்டியல் | 2,000 |
| ஏப் 1 | வரவுடைய உண்டியல் | 600 | ஏப் 1 | வங்கி | 250 |
| ,, | வட்டி | 15 | ,, | வரவுடைய உண்டியல் | 365 |
| மே 4 | வங்கி | 1,005 | மே 5 | வரவுடைய உண்டியல் | 1,025 |
| மே 5 | வட்டி | 20 | | | |
| | | 3,640 | | | 3,640 |

சுந்தரர் ஏடுகளில்

குறிப்பேடு

| | குறிப்பேடு | பற்று | வரவு |
|---|---|---|---|
| 1971 | | ரூ. | ரூ. |
| சன. 1 | கொள்முதல் க/கு ப<br>அப்பர்<br>(சரக்கு வாங்கியது.) | 2,000 | 2,000 |
| ,, | அப்பர் ப<br>செலுத்த வேண்டிய உண்டியல் க/கு<br>(ரூ. 1,000-க்கு 4 திங்கள் உண்டியலையும், ரூ. 00-க்கு 3 திங்கள் உண்டியலையும் ரூ. 400-க்கு 2 திங்கள் உண்டியலையும் ஏற்றுத் தந்தது.) | 2,000 | 2,000 |
| மார் 4 | செலுத்த வேண்டிய உண்டியல் க/கு ப<br>வங்கிக் க/கு<br>(இரு திங்கள் உண்டியலுக்குப் பணஞ் செலுத்தியது.) | 400 | 400 |
| ஏப். 1 | செலுத்த வேண்டிய உண்டியல் க/கு ப<br>அப்பர்<br>(அப்பர் வரைந்த 3 திங்கள் உண்டியலை நீக்க.) | 600 | 600 |
| ,, | அப்பர் ப<br>வங்கிக் க/கு<br>(அப்பரிடம் ரொக்கஞ் செலுத்தியது.) | 250 | 250 |
| ,, | வட்டிக் க/கு ப<br>அப்பர்<br>(அப்பருக்குத் தர வேண்டிய வட்டி.) | 15 | 15 |
| ,, | அப்பர் ப<br>செலுத்த வேண்டிய உண்டியல் க/கு<br>(வட்டி கூடிய தொகைக்கு இரு திங்கள் தவணையில் அப்பரிடம் எழுகிக் கந்த கடனுறுதிச் சீட்டு.) | 365 | 365 |

| | குறிப்பேடு | | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| மே. 4 | செலுத்த வேண்டிய<br>உண்டியல் க/கு | ப | 1,000 | |
| | குறிப்புக் கட்டணம்<br>அப்பர்<br>(ரூ 1,000-க்கான உண்டியலுக்குப் பணமறுக்க, அப்பர் செய்த குறிப்புக் கட்டணம் ரூ. 5.) | ப | 5 | 1,005 |
| மே. 5 | வட்டிக் க/கு<br>அப்பர்<br>(அப்பரிடம் தரவேண்டிய வட்டி) | ப | 20 | 20 |
| மே. 5 | அப்பர்<br>செலுத்த வேண்டிய<br>உண்டியல் க/கு<br>(புதிய 3 திங்கள் உண்டியல் ஒன்றை, வட்டியும், குறிப்புக் கட்டணமும் கூடிய தொகைக்கு அப்பர் வரைய, ஏற்றுத் தந்தது.) | ப | 1,025 | 1,025 |
| ஜுன். 4 | செலுத்த வேண்டிய<br>உண்டியல் க/கு<br>வங்கிக் க/கு<br>(ஏப்ரல் 1-ல் எழுதிக் கொடுத்த கடனுறுதிச் சீட்டுக்குப் பணந் தந்தது.) | ப | 365 | 365 |
| ,, | செலுத்த வேண்டிய<br>உண்டியல் க/கு<br>வங்கி க/கு<br>தள்ளுபடிக் க/கு<br>(மே 5-ல் ஏற்ற 3 திங்கள் தவணை உண்டியலை ரூ. 10 தள்ளுபடியில் இன்று விலக்கிப் பணஞ் செலுத்தியது.) | ப | 1,025 | 1,015<br>10 |

| ப | | அப்பர் | | | வ |
|---|---|---|---|---|---|
| 1971 | | ரூ. | 1971 | | ரூ. |
| சன. 1 | செலுத்த வேண்டிய உண்டியல் | 2,000 — | சன. 1 | கொள் முதல் | 2,000 — |
| ஏப். 1 | வங்கி | 250 — | ஏப். 1 | செலுத்த வேண்டிய உண்டியல் | 600 — |
| ,, | செலுத்த வேண்டிய உண்டியல் | 365 — | ,, | வட்டி | 15 — |
| மே. 5 | செலுத்த வேண்டிய உண்டியல் | 1,025 — | மே. 4 | செலுக்த வேண்டிய உண்டியல் | 1,000 — |
| | | | ,, | குறிப்புக் கட்டணம் | 5 — |
| | | | மே. 5 | வட்டி | 20 — |
| | | 3,640 | | | 3,640 — |

மணிவாசகர் ஏடுகளில்

| | குறிப்பேடு | பற்று | வரவு |
|---|---|---|---|
| | | ரூ. | ரூ. |
| 1971 ஏப். 1 | வரவுடைய உண்டியல் க/கு ப<br>சுந்தரர்<br>இரு திங்கள் தவணை உண்டியலை சுந்தரரிடமிருந்து மேலெழுதிப் பெற்றது.) | 365 | 365 |
| ஜூன். 4 | வங்கிக் க/கு ப<br>வரவுடைய உண்டியல் க/கு<br>(தவணை நாளில் உண்டிலுக்கான பணம் பெற்றது.) | 365 | 365 |

✓பணவசதி உண்டியல்.

(Accommodation Bill)

மறுபயன் (Consideration) ஏதுமின்றியே விடுநர், ஏற்குநர் மீது வரையும் உண்டியல் பணவசதி உண்டியல் என்று கூறியிருக்கிறோம். பணவசதியை ஏற்படுத்திக் கொள்ளும் நோக்கோடு ஒருவர் பிறர்மீது உண்டியல் வரைய, அதை அவர் ஏற்றுக் கொள்

கிறார். அதை வங்கியில் தள்ளுபடி செய்து பணம் பெறுகின்றனர். குறிப்பிட்ட விகிதத்தில் இருவரும் இத்தொகையைப் பிரித்துக் கொள்வர். தொகையைப் பங்கிட்டுக் கொள்ளும் அதே விகிதத்திலேயே தள்ளுபடியும் அவர்கள் பிரித்துக்கொள்ள வேண்டும். ஏற்குநர் கெடுநாளில் அவ்வுண்டியலுக்குப் பணஞ் செலுத்த, விடுநர் தாம் பெற்ற தொகையை ஏற்குநரிடம் அனுப்ப வேண்டும்.

முன்னர் விளக்கியவாறே பதிவுகளைச் செய்ய வேண்டும். விடுநர் ஏடுகளில் வங்கியில் உண்டியலைத் தள்ளுபடிக்கு மாற்றியதும் தொகையில் ஒரு பகுதியை ஏற்குநர்க்கு அனுப்பும் போழ்து, ஏற்குநர் கணக்கில் பற்றும், வங்கி அல்லது ரொக்கக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும். தள்ளுபடியில் ஒரு பகுதியையும் ஏற்குநர் ஏற்றுக் கொள்ள வேண்டுமாகையால் அத்தொகைக்கும் ஏற்குநர் கணக்கில் பற்றும், தள்ளுபடிக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும். அதாவது

ஏற்குநர் க/கு ப
வங்கி அல்லது ரொக்கக் க/கு
தள்ளுபடிக் க/கு

எடுத்துக்காட்டு 26 :

1-7-1971-ல் அன்புமணி தன் பண வசதிக்காக அறவணன் மீது பார்வைக்குப் பின் இருதிங்கள் தவணையில் ரூ. 1000-க்கு உண்டியல் ஒன்று வரைந்தார். அறவணன் 3-7-71-ல் அதை ஏற்றார். அன்புமணி தனது வங்கியில் அதை 6%க்குத் தள்ளுபடி செய்தார்.

தவணை நாளில், அன்புமணி தேவையான பணத்தை அறவணனிடம் அனுப்ப, உண்டியலுக்குப் பணம் செலுத்தப் பட்டது. இருவர் ஏடுகளிலும் பதிக.

விடை :

அன்புமணியின் ஏடுகளில்

குறிப்பேடு

| | | பற்று | | வரவு | |
|---|---|---|---|---|---|
| | | ரூ. | | ரூ. | |
| 1971 ஜூலை. 3 | வரவுடையஉண்டியல் க/கு ப<br>அறவணன்<br>(அறவணனிடமிருந்து இரு திங்கள் தவணை உண்டியலைப் பண வசதிக் காகப் பெற்றது.) | 1,000 | — | 1,000 | — |

| | குறிப்பேடு | | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | |
| 1971 சூலை. 3 | வங்கிக் க/கு | ப | 990 — | |
| | தள்ளுபடிக் க/கு | ப | 10 — | |
| | வரவுடைய உண்டியல் க/கு (அறவணனிடமிருந்து பெற்ற உண்டியலை 6%க்குத் தள்ளுபடி செய்தது.) | | | 1,000 — |
| செப். 6 | அறவணன் | ப | 1,000 — | |
| | வங்கிக் க/கு (உண்டியலுக்கான தொகையை அறவணன் செலுத்தும் பொருட்டு அனுப்பியது.) | | | 1,000 — |

அறவணன் ஏடுகளில்

| | குறிப்பேடு | | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| 1971 சூலை. 3 | அன்புமணி | ப | 1,000 | |
| | செலுத்த வேண்டிய உண்டியல் க/கு (அன்புமணியின் பண வசதிக்காக அவர் வரைந்த இரு திங்கள் தவணை உண்டியலை ஏற்றுத் தந்தது.) | | | 1,000 — |
| செப். 6 | வங்கிக் க/கு | ப | 1,000 | |
| | அன்புமணி (அன்புமணியின் உண்டியலை ஏற்றதற்காக அவரிடமிருந்து பெற்ற தொகை.) | | | 1,000 — |
| | செலுத்த வேண்டிய உண்டியல் க/கு | ப | 1,000 | |
| | வங்கிக் க/கு (உண்டியலுக்குப் பணஞ் செலுத்தியது.) | | | 1,000 — |

எடுத்துக் காட்டு 27 :

இருவரின் பண வசதிக்காக சேரன் எழுதிய ரூ. 6000-க்கான மூன்று திங்கள் தவணை உண்டியலை சேகர் 1-8-71.ல் ஏற்றார். உடனே அதை வங்கியில் தள்ளுபடிசெய்து ரூ. 5,850 பெற்றார். அதில்

மூன்றிலொரு பங்கைச் சேரன் சேகருக் கனுப்பினர். கெடு நாளில், தான் தரவேண்டிய தொகையைச் சேகருக்கனுப்பினர். உண்டியலுக்குச் சேகர் பணஞ் செலுத்தினர். இருவர் ஏடுகளிலும் பதிக.

விடை :

சேரன் ஏடுகளில்

குறிப்பேடு

| | | பற்று | வரவு |
|---|---|---|---|
| 1971 | | ரூ. | ரூ. |
| ஆக. 1 | வரவுடைய உண்டியல் க/கு ப | 6,000 | |
| | சேகர் | | 6,000 |
| | (இருவரின் பண வசதிக்காக, சேகர் ஏற்றுத் தந்த மூன்று திங்கள் தவணை உண்டியல்.) | | |
| ,, | வங்கிக் க/கு ப | 5,850 | |
| | தள்ளுபடிக் க/கு ப | 150 | |
| | வரவுடைய உண்டியல் க/கு | | 6,000 |
| | (சேரனின் உண்டியலை வங்கியில் ரூ. 5,850-க்குத் தள்ளுபடி செய்தது.) | | |
| ,, | சேகர் ப | 2,000 | |
| | வங்கிக் க/கு | | 1,950 |
| | தள்ளுபடிக் க/கு | | 50 |
| | (வங்கியில் தள்ளுபடி செய்து பெற்ற தொகையில் மூன்றிலொரு பகுதியைச் சேகருக்கு அனுப்பியது. தள்ளுபடியும் அதே வீதத்தில் அவர் கணக்கருக்கு மாற்றியது.) | | |
| நவ. 4 | சேகர் ப | 4,000 | |
| | வங்கிக் க/கு | | 4,000 |
| | (சேகர் உண்டியலை ஏற்றதற்கு, மீதித் தொகையை அனுப்பியது.) | | |

சேகர் ஏடுகளில்

குறிப்பேடு

| 1971 | | | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ | ரூ. |
| ஆக. 1 | சேரன் | ப | 6,000 | |
| | செலுத்த வேண்டிய உண்டியல் க/கு | | | 6,000 |
| | (இருவரின் பண வசதிக்காக, சேரன் வரைந்த மூன்று திங்கள் உண்டியலை ஏற்றுத் தந்தது.) | | | |
| ,, | வங்கிக் க/கு | ப | 1,950 | |
| | தள்ளுபடிக்கு க/கு | ப | 50 | |
| | சேரன் | | | 2,000 |
| | (உண்டியல் தள்ளுபடி செய்யப் பட்ட தொகையில் மூன்றிலொரு பகுதியைப் பெற்றதற்குத் தள்ளு படியை அதே வீதத்தில் ஏற்பதற் கும்.) | | | |
| நவ. 4 | வங்கிக் க/கு | ப | 4,000 | |
| | சேரன் | | | 4,000 |
| | (உண்டியல் மீது மீதி வர வேண்டிய தொகையைச் சேரனிடமிருந்து பெற்றது.) | | | |
| ,, | செலுத்த வேண்டிய உண்டியல் க/கு | ப | 6,000 | |
| | வங்கிக் க/கு | | | 6,000 |
| | (உண்டியலுக்குக் கெடுநாளில் பணஞ் செலுத்தியது.) | | | |

எடுத்துக் காட்டு 28 :

தங்கள் பண வசதியின் பொருட்டு, 31-8-1971-ல் ரூ. 2,000-க்குக் கண்ணன் வரைந்த நான்கு திங்கள் தவணை உண்டியலை நன்னன் ஏற்றார். உடனே வங்கியில் 6%க்குத் தள்ளுபடி செய்து கால் பங்கை நன்னனிடம் அனுப்பினார்.

தவணை நாளில் நன்னன் உண்டியலுக்குப் பணஞ் செலுத்தினார் ஆனால், கண்ணன் தான் தரவேண்டிய தொகையை நன்னனுக்கு அனுப்ப வில்லை. இதற்குப் பதிலாக ரூ. 500 கையில் கொடுப்ப தாகவும், மீதித் தொகையுடன் ரூ. 30 வட்டி சேர்த்த தொகைக்கு இரு திங்கள் தவணையில் நன்னனைத் தம்மீது உண்டியல் வரைய

வேண்டினர். கண்ணன் அதனை ஏற்றுக் கொண்டார். இவ்வுண்டியலுக்கு உரிய நாளில் பணஞ் செலுத்தப் பட்டதெனக் கொண்டு இருவர் ஏடுகளில் குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக.

**விடை :**

கண்ணன் ஏடுகளில்

| | குறிப்பேடு | | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| 1971 | | | ரூ. | ரூ. |
| ஆக.31 | வரவுடைய உண்டியல் க/கு | ப | 2,000 | |
| | நன்னன் | | | 2,000 |
| | (இருவரின் பண வசதிக்காக நன்னன் ஏற்றுத் தந்த உண்டியல்.) | | | |
| ,, | வங்கிக் க/கு | ப | 1960 | |
| | தள்ளுபடிக்கு க/கு | ப | 40 | |
| | வரவுடைய உண்டியல் க/கு | | | 2,000 |
| | (நன்னனின் உண்டியலை வங்கியில் 6%க்குத் தள்ளுபடி செய்தது.) | | | |
| ,, | நன்னன் | ப | 500 — | |
| | வங்கிக் க/கு | | | 490 — |
| | தள்ளுபடிக் க/கு | | | 10 — |
| | (வங்கியில் தள்ளுபடி செய்து பெறற தொகையில் கால் பங்கை நன்னனுக்கு அனுப்பியதற்கும், தள்ளுபடியை அதே வீதத்தில் அவர் கணக்குக்கு மாற்றவும்.) | | | |
| 1972 | | | | |
| சன.. 3 | நன்னன் | ப | 500 — | |
| | வங்கிக் க/கு | | | 500 — |
| | (நன்னனிடம் உண்டியலுக்கு அனுப்ப வேண்டிய தொகையில் ஒரு பகுதியை அனுப்பியது.) | | | |
| | வட்டிக் க/கு | ப | 30 — | |
| | நன்னன் | | | 30 — |
| | (நன்னனுக்குத் தரவேண்டிய வட்டி.) | | | |
| ,, | நன்னன் | ப | 1,030 — | |
| | செலுத்த வேண்டிய உண்டியல் க/கு | | | 1,030 — |
| | (வட்டி சேர்த்த தொகைக்கு நன்னன் வரைந்த உண்டியலை ஏற்றுத் தந்தது.) | | | |

| | குறிப்பேடு | | பற்று | | வரவு | |
|---|---|---|---|---|---|---|
| | | | ரூ. | | ரூ. | |
| மார். 6 | செலுத்த வேண்டிய<br>உண்டியல் க/கு<br>வங்கிக் க/கு<br>(உரிய நாளில் உண்டியலுக்குப் பணஞ் செலுத்தியது.) | ப | 1,030 | — | 1,030 | — |

நன்னன் ஏடுகளில்

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 1971<br>ஆக. 31 | கண்ணன்<br>செலுத்த வேண்டிய<br>உண்டியல் க/கு<br>இருவரின் பண வசதிக்காக, கண்ணன் வரைந்த உண்டியலை ஏற்றுத் தந்தது.) | ப | 2,000 | — | 2,000 | — |
| ,, | வங்கிக் க/கு | ப | 490 | — | | |
| | தள்ளுபடிக் க/கு<br>கண்ணன்<br>(உண்டியல் தள்ளுபடி செய்யப் பட்ட தொகையில் கால் பங்கைப் பெற்றதற்கும், தள்ளுபடியை அதே வீதத்தில் ஏற்பதற்கும்.) | ப | 10 | — | 500 | — |
| 1972<br>சன. 3 | வங்கிக் க/கு<br>கண்ணன்<br>(நன்னனிடமிருந்து உண்டியல் தொகையில் ஒரு பகுதியைப் பெற்றது.) | ப | 500 | — | 500 | — |
| ,, | கண்ணன்<br>வட்டிக் க/கு<br>(நன்னனிடமிருந்து பெற வேண்டிய வட்டி) | ப | 30 | — | 30 | — |
| ,, | வரவுடைய உண்டியல் க/கு<br>கண்ணன்<br>(வட்டி சேர்த்த தொகைக்கு உண்டியலைக் கண்ணன் ஏற்றுத் தந்தது.) | ப | 1,030 | — | 1,030 | — |

குறிப்பேடு

| | | | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| 1972 | | | ரூ. | ரூ. |
| சன. 3 | செலுத்த வேண்டியல் க/கு | ப | 2,000 — | |
| | வங்கிக் க/கு | | | 2,000 — |
| | (உண்டியலுக்குப் பணஞ் செலுத்தியது.) | | | |
| மார்.6 | வங்கிக் க/கு | ப | 1,030 — | |
| | வரவுடைய உண்டியல் க/கு | | | 1,030 — |
| | (உண்டியலுக்குப் பணம் பெற்றது.) | | | |

எடுத்துக்காட்டு 29 :

இருவரின் பண வசதிக்காகவும் 1970 அக்டோபர் 26-ல், கதிரவன் வரைந்த ரூ. 1,500-க்கான இரு திங்கள் தவணை உண்டியலை மதிவாணன் ஏற்றார். அதே நாளில் அதே தொகைக்கு மதிவாணன் வரைந்த உண்டியலைக் கதிரவன் ஏற்றார். தம்தம் வங்கிகளில் அவற்றை 6% அளவில் தள்ளுபடி செய்தனர். தவணை நாளில் இருவரும் தாம் ஏற்ற உண்டியலுக்குப் பணஞ் செலுத்தினர். இருவர் ஏடுகளிலும் பதிக.

விடை :

கதிரவனின் ஏடுகளில்

| | | | | |
|---|---|---|---|---|
| 1970 | | | ரூ. | ரூ. |
| அக். 26 | வரவுடைய உண்டியல் க/கு | ப | 1,500 — | |
| | மதிவாணன் | | | 1,500 — |
| | (இருவரின் பண வசதிக்காக மதிவாணன் ஏற்றுத் தந்த உண்டியல்.) | | | |
| ,, | மதிவாணன் | ப | 1,500 — | |
| | செலுத்த வேண்டிய உண்டியல் க/கு | | | 1,500 — |
| | (இருவரின் பண வசதிக்காக, மதிவாணன் வரைந்த உண்டியலை ஏற்றுத் தந்தது.) | | | |
| ,, | வங்கிக் க/கு | ப | 1,485 | |
| | தள்ளுபடிக் க/கு | ப | 15 — | |
| | வரவுடைய உண்டியல் க/கு | | | 1,500 — |
| | (வங்கியில் 6% தள்ளுபடிக்கு உண்டியலை மாற்றியது.) | | | |

| | குறிப்பேடு | | பற்று | | வரவு | |
|---|---|---|---|---|---|---|
| | | | ரூ. | | ரூ. | |
| டிச. 29 | செலுத்த வேண்டிய உண்டியல் க/கு | ப | 1,500 | — | | |
| | வங்கிக் க/கு | | | | 1,500 | — |
| | (உண்டியலுக்குக் கெடுநாளில் பணஞ் செலுத்தியது.) | | | | | |

மதிவாணன் ஏடுகளில்

| | | | ரூ. | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|
| 1970 அக். 26 | கதிரவன் | ப | 1,500 | — | | |
| | செலுத்த வேண்டிய உண்டியல் க/கு | | | | 1,500 | |
| | (இருவரின் பணவசதிக்காக கதிரவன் வரைந்த உண்டியலை ஏற்றுத் தந்தது.) | | | | | |
| ,, | வரவுடைய உண்டியல் க/கு | ப | 1,500 | — | | |
| | கதிரவன் | | | | 1,500 | |
| | (இருவரின் பணவசதிக்காக கதிரவன் ஏற்றுத் தந்த உண்டியல்.) | | | | | |
| | வங்கிக் க/கு | ப | 1,485 | — | | |
| | தள்ளுபடிக் க/கு | ப | 15 | — | | |
| | வரவுடைய உண்டியல் க/கு | | | | 1,500 | |
| | (வங்கியில் 6% தள்ளுபடிக்குக் கதிரவனின் உண்டியலை மாற்றியது.) | | | | | |
| டிச.29 | செலுத்த வேண்டிய உண்டியல் க/கு | ப | 1,500 | — | | |
| | வங்கிக் க/கு | | | | 1,500 | |
| | (கெடுநாளில் உண்டியலுக்குப் பணஞ் செலுத்தியது.) | | | | | |

எடுத்துக்காட்டு 30 :

இருவரின் பண வசதிக்காகவும் பூங்குன்றன் வரைந்த ரூ. 4,000-க்கான நான்கு திங்கள் தவணை உண்டியலைப் புகழேந்தி 21-2-1971-ல் ஏற்றார். பூங்குன்றன் தன் வங்கியில் தள்ளுபடி செய்து பெற்ற தொகையான ரூ. 3,840-ல் நான்கில் ஒரு பங்கைப் புகழேந்திக்கு அனுப்பினார்.

கெடுநாள் முன், தான் தரவேண்டிய தொகையைச் செலுத்த முடியவில்லையென்றும், அதற்கு மாறாக ரூ. 600 (வட்டி ரூ. 40 உட்பட்டது) கொடுத்து விடுவதாகவும் மீதித் தொகைக்கு இரு திங்கள் தவணையில் கடனுறுதிச் சீட்டு எழுதித் தருவதாகவும் பூங்குன்றன் கூறினார். புகழேந்தி இதற்கு இசைந்து பூங்குன்றனின் கடனுறுதிச் சீட்டை 20-6-71ல் தன் வங்கியில் 6% தள்ளுபடிக்கு மாற்றினார், தான் ஏற்ற உண்டியலுக்குக் கெடுநாளில் புகழேந்தி பணஞ் செலுத்தினார்.

பூங்குன்றனின் கடனுறுதிச் சீட்டுக்குக் கெடுநாளில் பண மறுக்கப்பட, வங்கி செய்த குறிப்புக் கட்டணம். ரூ. 5.

பூங்குன்றன் நொடிப்புநிலை (Bankrupt) யடைந்து விடவே, அவரிடமிருந்து அக்டோபர் 10-ல் ரூபாய்க்கு 20 காசுகளே கிடைத்தது.

இருவர் ஏடுகளிலும் குறிப்பேட்டுப் பதிவுகளைத் தந்து பேரேட்டுக் கணக்குகளைத் தயாரிக்க.

விடை :

பூங்குன்றன் ஏடுகளில்

குறிப்பேடு

| 1971 | | பற்று | வரவு |
|---|---|---|---|
| | | ரூ. | ரூ. |
| ஃபிப். 21 | வரவுடைய உண்டியல் க/கு ப | 4,000 | |
| | புகழேந்தி | | 4,000 — |
| | (இருவரின் பணவசதிக்காக புகழேந்தி ஏற்றுத் தந்த உண்டியல்.) | | |
| ,, | வங்கிக் க/கு ப | 3,840 — | |
| | தள்ளுபடிக் க/கு ப | 160 — | |
| | வரவுடைய உண்டியல் க/கு | | 4,000 — |
| | (புகழேந்தியின் உண்டியலை வங்கியில் தள்ளுபடி செய்து பெற்றது.) | | |
| ,, | புகழேந்தி ப | 1,000 — | |
| | வங்கிக் க/கு | | 960 — |
| | தள்ளுபடிக் க/கு | | 40 — |
| | (வங்கியில் தள்ளுபடி செய்து பெற்ற தொகையில் கால் பங்கைப் புகழேந்திக்கு அனுப்பியதற்கும், தள்ளுபடியை அதே வீதத்தில் அவர் கணக்கிற்கு மாற்றுவதற்கும்.) | | |

| | குறிப்பேடு | | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| ஜூன் 20 | வட்டிக் க/கு<br>புகழேந்தி<br>(புகழேந்திக்குத் தர வேண்டிய வட்டி.) | ப | 40 — | 40 — |
| ,, | புகழேந்தி<br>வங்கிக் க/கு<br>(புகழேந்தியிடம் செலுத்தியது.) | ப | 600 — | 600 — |
| ,, | புகழேந்தி<br>செலுத்த வேண்டிய<br>உண்டியல் க/கு<br>(மீதித் தொகைக்குக் கடனுறுதிச் சீட்டு புகழேந்தியிடம் எழுதித் தந்தது.) | ப | 2,440 — | 2,440 — |
| ஆக 23 | செலுத்த வேண்டிய<br>உண்டியல் க/கு<br>குறிப்புக் கட்டணக் க/கு<br>புகழேந்தி<br>(கெடுநாளில் கடனுறுதிச் சீட்டுக்குப் பணம் மறுக்கப்பட, புகழேந்தி ஏற்ற குறிப்புக் கட்டணம் ரூ. 5) | ப<br>ப | 2,440 —<br>5 — | 2,445 — |
| அக் 10 | புகழேந்தி<br>வங்கிக் க/கு<br>(நொடிப்பு நிலையில், ரூபாய்க்கு 20 காசுகள் வீதம் கொடுத்தது.) | ப | 489 — | 489 |

புகழேந்தி

| 1971 | | ரூ. | | 1971 | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|
| பிப் 21 | வங்கி | 960 | — | பிப். 21 | வரவுடைய உண்டியல் | 4,000 | — |
| ,, | தள்ளுபடி | 40 | — | சூன் 20 | வட்டி | 40 | — |
| சூன் 20 | வங்கி | 600 | — | ஆக. 23 | செலுத்த வேண்டிய உண்டியல் | 2,440 | — |
| ,, | செலுத்த வேண்டிய உண்டியல் | 2,440 | — | ,, | ... குறிப்புக் கட்டணம் | 5 | — |
| அக் 10 | வங்கி | 489 | | | | | |
| | இருப்பு, கீ/இ | 1,956 | — | | | | |
| | | 6,485 | — | | | 6,485 | — |
| | | | | | இருப்பு கீ/கொ | 1,956 | — |

புகழேந்தி ஏடுகளில்

| 1971 | | ரூ. | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| பிப் 2 | பூங்குன்றன் செலுத்த வேண்டிய உண்டியல் (இருவரின் பணவசதிக்காக, பூங்குன்றன் வரைந்த உண்டியலை ஏற்றுத் தந்தது.) | 4,000 | — | 4,000 | — |
| ,, | வங்கிக் க/கு ப | 960 | — | | |
| | தள்ளுபடிக் க/கு ப | 40 | — | | |
| | பூங்குன்றன் (உண்டியல் தள்ளுபடி செய்யப்பட்ட தொகையில் கால் பங்கைப் பூங்குன்றனிடமிருந்து பெற்றதற்கும், தள்ளுபடியை அதே வீதத்தில் ஏற்பதற்கும்.) | | | 1,000 | — |

| | | | ரூ. | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|
| ஜூன் 20 | பூங்குன்றன் வட்டிக் க/கு (பூங்குன்றனிடமிருந்து பெற வேண்டிய வட்டி) | ப | 40 | — | 40 | — |
| ,, | வங்கிக் க/கு பூங்குன்றன் (பூங்குன்றனிட மிருந்து பெற்றது.) | ப | 600 | — | 600 | — |
| ,, | வரவுடைய உண்டியல் க/கு பூங்குன்றன் (மீதித் தொகைக்குப் பூங்குன்றனிடமிருந்து கடனுறுதிச் சீட்டு பெற்றது. | ப | 2,440 | — | 2,440 | — |
| ,, | வங்கிக் க/கு<br>தள்ளுபடிக் க/கு<br>வரவுடைய உண்டியல் க/கு (பூங்குன்றனின் கடனுறுதிச் சீட்டை 6%-க்கு வங்கியில் தள்ளுபடி செய்தது.) | ப<br>ப | 2,415<br>24 | 60<br>40 | 2,440 | — |
| ஜூன் 24 | செலுத்த வேண்டிய உண்டியல் க/கு வங்கிக் க/கு (ஏற்ற உண்டியலுக்குப் பணஞ் செலுத்தியது.) | ப | 4,000 | — | 4,000 | — |
| ஆக.23 | பூங்குன்றன் வங்கிக் க/கு (பூங்குன்றனின் கடனுறுதிச் சீட்டுக்குப் பணமறுக்கப்பட, வங்கி செலுத்திய குறிப்புக் கட்டணம் ரூ. 5.) | ப | 2,445 | — | 2,445 | — |
| ,, | வங்கிக் க/கு<br>வராக்கடன் க/கு<br>பூங்குன்றன் க/கு (ரூபாய்க்கு 20 காசுகள் வீதம் பூங்குன்றனிடமிருந்து பெற்றதற்கும் மீதியை வராக்கடனாக நீக்குவதற்கும்) | ப<br>ப | 489<br>1,956 | —<br>— | 2,445 | — |

| ப | | | | | பூங்குன்றன் | | | | வ |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1971 | | | ரூ. | | 1971 | | | ரூ. | |
| ஃபிப். 21 | செலுத்த வேண்டிய உண்டியல் | | 4,000 | — | ஃபிப். 21 | வங்கி | | 960 | — |
| | | | | | ,, | தள்ளுபடி | | 40 | — |
| ஜூன் 20 | வட்டி | | 40 | — | ஜூன் 20 | வங்கி | | 500 | — |
| ஆக. 23 | வங்கி | | 2,445 | — | ,, | வரவுடைய உண்டியல் | | 2,440 | — |
| | | | | | அக் 10 | வங்கி | | 489 | — |
| | | | | | ,, | வராக் கடன் | | 1,956 | — |
| | | | 6,485 | — | | | | 6,485 | — |

எடுத்துக் காட்டு 31 :

இருவரும் பண வசதி பெறும் நோக்குடன் 30-7-71 அன்று ரூ.5,000-க்கு மூன்று திங்கள் தவணையில் குசேலன் வரைந்த உண்டியலைக் குபேரன் ஏற்றார். குசேலன் அதைத் தன் வங்கியில் 6% தள்ளுபடிக்கு மாற்றி, வந்த தொகையை இருவரும் சமமாகப் பங்கிட்டுக் கொண்டனர்.

கெடுநாளுக்கு முன்னரே, தன் பங்குத் தொகையைச் செலுத்த முடியவில்லையென்று குசேலன் கூற, குபேரன் இரு திங்கள் தவணையில் ரூ. 4,000-க்கு உண்டியல் வரைந்தார். குசேலன் அதனை ஏற்றதும், உடனே தன் வங்கியில் ரூ. 3,960-க்குத் தள்ளுபடிக்கு மாற்றினார். இதில் ரூ. 470-ஐக் குசேலனுக் கனுப்பினார்.

கெடுநாளில் குசேலன் நொடிப்பு நிலையடைந்தார். இறுதியாக 1972 மார்ச் 31-ல் அவரிடம் 30% தான் பெறப்பட்டது. இருவர் ஏடுகளிலும் குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக. குசேலன் ஏட்டில் குபேரன் கணக்கையும் குபேரன் ஏட்டில் குசேலன் கணக்கையும் தயாரிக்கவும்.

விடை :

குசேலன் ஏடுகளில்

| | | ரூ. | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| 1971 ஜூலை 30 | வரவுடைய உண்டியல் க/கு ப<br>குபேரன்<br>(இருவரின் பண வசதிக்காக குபேரன் ஏற்றுத் தந்த உண்டியல்.) | 5,000 | — | 5,000 | — |
| ,, | வங்கிக் க/கு ப<br>தள்ளுபடிக் க/கு ப<br>வரவுடைய உண்டியல் க/கு<br>(குபேரனின் உண்டியலை வங்கியில் 6%-க்குத் தள்ளுபடி செய்தது.) | 4,925<br>75 | —<br>— | 5,000 | — |
| ஜூலை 30 | குபேரன் ... ப<br>வங்கிக் க/கு ...<br>தள்ளுபடிக் க/கு ...<br>(தள்ளுபடி செய்து பெற்ற தொகையில் பாதியைக் குபேரனுக்கு அனுப்பியதற்கும், தள்ளுபடியில் பாதியை அவர் கணக்குக்கு மாற்றியதற்கும்) | 2,500 | — | 2,462<br>37 | 50<br>50 |
| நவ. 2 | குபேரன் ... ப<br>செலுத்த வேண்டிய உண்டியல் க/கு<br>(உண்டியல் ஏற்றுத் தந்தது) | 4,000 | — | 4,000 | — |
| ,, | வங்கிக் க/கு ... ப<br>தள்ளுபடிக் க/கு ப<br>குபேரன் ... | 470<br>30 | —<br>— | 500 | — |
| 1972 சன. 5 | செலுத்த வேண்டிய உண்டியல் க/கு ... ப<br>குபேரன் ...<br>(கெடுநாளில் உண்டியலுக்குப் பண மறுத்ததற்கு) | 4,000 | — | 4,000 | — |

| | | | ரூ. | ரூ. |
|---|---|---|---|---|
| மார். 31 | குபேரன் ... | ப | 3,000 | |
| | வங்கிக் க/கு ... | | | 900 — |
| | பற்றுக்குறைக் க/கு ... | | | 2,100 — |
| | (ரூபாய்க்கு 30 காசுகள் வீதம் இறுதியாகக் குபேரனுக்குக் கொடுத்ததற்கும், மீதியைப் பற்றுக்குறைக் கணக்கிற்கு எடுத்துச் செல்வதற்கும்). | | | |

குறிப்பு : தள்ளுபடி கீழ்க்கண்டவாறு கணக்கிடப் படுகிறது.

| | ரூ. |
|---|---|
| குபேரனுக்குச் செலுத்த வேண்டிய ஆனால் அனுப்பாத தொகை | 2,500 |
| கூட்டு : குபேரனிடமிருந்து பெற்றது | 470 |
| மொத்தம். | 2,970 |

இத் தொகை தள்ளுபடி செய்து பெற்ற தொகையில்

உள்ள வீதம் $= \frac{2,970}{3,960} = \frac{3}{4}$

தள்ளுபடி ரூ. 40 - ல் ஏற்க வேண்டிய தள்ளுபடி =

$40 \times \frac{3}{4} =$ ரூ. 30

பேரேட்டுக் கணக்கு

ப குபேரன் வ

| | | ரூ. | | | | ரூ. |
|---|---|---|---|---|---|---|
| 1971 ஜூலை 30 | வங்கி | 2,462 | 50 | 1971 ஜூலை. 30 | வரவுடைய உண்டியல் | 5,000 |
| ,, | தள்ளுபடி | 37 | 50 | நவ. 2 | வங்கி | 470 |
| நவ 2. | செலுத்த வேண்டிய உண்டியல் | 4,000 | | ,, | தள்ளுபடி | 30 |
| 1972 மார் 31 | வங்கி | 900 | | 1972 சன. 5 | செலுத்த வேண்டிய உண்டியல் | 4,000 |
| ,, | பற்றுக் குறைக் க/கு | 2,100 | | | | |
| | | 9, 650 | | | | 9,500 |

குபேரன் ஏடுகளில்

| 1971 | | ரூ. | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| ஜூலை 30 | குசேலன் ப | 5,000 | — | | |
| | செலுத்த வேண்டிய உண்டியல் | | | 5,000 | — |
| | (இருவரின் பண வசதிக்காக, குசேலன் வரைந்த உண்டியலை ஏற்றுத் தந்தது.) | | | | |
| ,, | வங்கிக் க/கு ப | 2,462 | 50 | | |
| | தள்ளுபடிக்குக் க/கு ப | 37 | 50 | | |
| | குசேலன் | | | 2,500 | — |
| | (தள்ளுபடி செய்து பெற்ற தொகையில் பாதியைக் குசேலனிடமிருந்து பெற்றதற்கும், பாதித் தள்ளுபடியை ஏற்பதற்கும்.) | | | | |
| நவ 2 | வரவுடைய உண்டியல் க/கு ப | 4,000 | — | | |
| | குசேலன் | | | 4,000 | — |
| | (குசேலன் மீது உண்டியல் வரைந்தது.) | | | | |
| ,, | வங்கிக் க/கு ப | 3,960 | — | | |
| | தள்ளுபடிக் க/கு ப | 40 | — | | |
| | வரவுடைய உண்டியல் க/கு | | | 4,000 | — |
| | (உண்டியலை வங்கியில் தள்ளுபடி செய்து பெற்றது.) | | | | |
| ,, | குசேலன் ப | 500 | — | | |
| | வங்கிக் க/கு | | | 470 | — |
| | தள்ளுபடிக் க/கு | | | 30 | — |
| | (தள்ளுபடி செய்ததில் குபேரன் தர வேண்டியதற்கு எடுத்துக்கொண்டு முக்கால் பங்கில் மீதியை அவர்க்கனுப்பியது.) | | | | |
| ,, | செலுத்த வேண்டிய உண்டியல் க/கு ப | 5,000 | — | | |
| | வங்கிக் க/கு | | | 5,000 | — |
| | (உண்டியலுக்குப் பணஞ் செலுத்தியது.) | | | | |

| | | | ரூ. | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|
| 1972 சன. 5 | குசேலன் | ப | 4,000 | — | | |
| | வங்கிக் க/கு | | | | 4,000 | — |
| | (குசேலனின் உண்டியலுக்குப் பண மறுக்கப்பட்டதற்கு.) | | | | | |
| மார் 31 | வங்கிக் க/கு | ப | 900 | — | | |
| | வராக் கடன் க/கு | ப | 2,100 | — | | |
| | குசேலன் | | | | 3,000 | — |
| | (குசேலனிடமிருந்து ரூபாய்க்கு 30 காசுகள் பெற்றதற்கும், மீதியை வராக்கடனாக நீக்கியதற்கும்.) | | | | | |

ப குசேலன் வ

| | | ரூ. | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 1971 | | | | 1971 | | | |
| சூலை 30 | செலுத்த வேண்டிய உண்டியல் | 5,000 | — | சூலை 30 | வங்கி | 2,462 | 50 |
| | | | | ,, | தள்ளுபடி | 37 | 50 |
| நவ 2 | வங்கி | 470 | — | நவ 2 | வரவுடைய உண்டியல் | 4,000 | — |
| ,, | தள்ளுபடி | 30 | — | மார் 31 | வங்கி | 900 | — |
| 1972 | | | | | | | |
| சன 5 | வங்கி | 4,000 | — | ,, | வராக் கடன் | 2,100 | — |
| | | 9,500 | — | | | 9,500 | — |

## வினாக்கள்

1. 'உண்டியல்'—இலக்கணம் தந்து சிறப்புக் கூறுகளை விளக்குக.
2. 'சலுகை நாள்கள்' (Days of grace) என்றால் என்ன? உண்டியலின் கெடுநாளை (Due date) கணக்கிடுவது எவ்வாறு?
3. உண்டியல் கெடுநாளில் மறுக்கப்படுமாயின் எந் நடவடிக்கையை மேற்கொள்ள வேண்டும்?

4. கடனுறுதிச் சீட்டு (Promissory Note) என்றால் என்ன? அது எவ் வகைகளில் உண்டியலினின்றும் மாறுபடுகிறது?

5. உண்டியல்களின் வகைகள் யாவை?

6. வரவுடைய உண்டியல் ஏடு, செலுத்த வேண்டிய உண்டியல் ஏடு,—இவை எவ்வாறு கோடுகளிடப் பட்டிருக்கும்?

7. 'உண்டியலைப் புதுப்பித்தல்' (Renewal), 'உண்டியலை விலக்கல்' (Retirement of a Bill) என்றால் என்ன?

8. மாற்றுமுறை ஆவணங்களால் (Nogotiable Instruments) உண்டாகும் பயன்கள் யாவை?

9. பணவசதி உண்டியல் (Accommodation Bill) என்றால் என்ன? அதனாலுறும் நன்மைகள் யாவை?

10. உண்டியலை மேலெழுதும் முறைகளை விவரி.

11. கீழ்க் கண்டவற்றை விளக்குக.

   (i) நாணயத்திற்காக ஏற்பு (Acceptance for honour)

   (ii) நாணயத்திற்காகச் செலுத்துதல் (Payment for honour)

   (iii) மறுப்புக் குறிப்பு (Protesting)

   (iv) ஆவணங்கள் சேர்ந்த உண்டியல் (Documentary Bill)

12. அயல்நாட்டு உண்டியலின் மாதிரி ஒன்றினை வரைக.

13. 'நிபந்தனைக் குட்பட்ட ஏற்பு' (Qualified acceptance.)— விளக்குக.

பயிற்சி

கீழ்வரும் நடவடிக்கைகளைத் தமிழ்மணியின் உண்டியல் ஏடுகளில் பதிக.

1971

ஆகஸ்ட். 1. உண்டியல் நாளிலிருந்து ஒரு திங்கள் தவணையில், சென்னை பாண்டியன் வங்கியில் செலுத்த வேண்டிய மாறன் ஏற்ற ரூ. 750-க்கான உண்டியலை வழுதியிடமிருந்து பெற்றது. உண்டியல் சூலை 28ஆம் நாளிடப் பட்டிருந்தது.

ஆகஸ்டு 4. ரூ. 1,250-க்கான பார்வைக்குப் பின் அறுபது நாள் களில் செலுத்துமாறு வரைந்த உண்டியலை வளவன் ஏற்றுத் தந்தது. உண்டியல் நாள் 2-8-71 உண்டியலை வளவன் ஏற்ற நாள் 3-8-71.

5. மூன்று திங்கள் தவணையில் ரூ. 500 செலுத்துவதாகக் கடனுறுதிச் சீட்டை எழுதி எழிலனிடம் தந்தது.

6. ஆகஸ்ட் 4 நாளிடப்பட்ட ரூ. 540க்கான பார்வைக் குப் பின் இரு திங்கள் தவணை உண்டியலைக் கடலூர் தமிழ் நாடு 'வங்கியில்' செலுத்துவதாக ஏற்று நன்னனிடம் தந்தது.

9. பொழிலனிடமிருந்து மூன்று திங்கள் தவணையில் செலுத்துவதாகக் கூறும் ரூ. 800-க்கான கடனுறுதிச் சீட்டைப் பெற்றது.

10. மூன்று திங்கள் தவணையில், திருச்சி, 'தமிழக வங்கி' யில் செலுத்துவதாகப் பாண்டியன் ஏற்றிருந்த ரூ. 1,500க்கான உண்டியலைப் பல்லவனிடமிருந்து பெற்றது. உண்டியல் சூலை 10 நாளிடப்பட் டிருந்தது.

12. பெருஞ்சித்திரனுக்குச் செலுத்தக் கோரி நெடுங்கிள்ளி எழுதிய ரூ. 1,000க்கான 'பார்வைக்குப் பின்' இரு திங்கள் தவணை உண்டியலை ஏற்றுத் தந்தது.

குறிப்பு : வழுதியிடம் பெற்ற உண்டியலை செப்டம்பர் 1-ல் தள்ளுபடிக்கு மாற்றியது.

வளவன் ஏற்ற உண்டியலைப் பாரியிடம் மேலெழுதித் தந்தது.

நன்னனுக்குக் கொடுத்த உண்டியலுக்குக் கெடுநாளில் பணஞ் செலுத்தியது.

பல்லவன் பெற்ற உண்டியல் கெடுநாளில் பணஞ்செலுத்தப் பட்டது.

2. கீழ்க் கண்ட நடவடிக்கைகளை அறணவனின் உண்டியல் ஏடுகளில் பதிந்து பேரேடுகளில் எடுத்தெழுதுக.

1971
செப்டம்பர்.

2. ரூ. 400-க்கான பார்வைக்குப்பின் 60 நாள்களில் செலுத்தத் தக்க உண்டியலை எட்வர்டிடமிருந்து பெற்றது. உண்டியல் ஏற்ற நாள் செப்டம்பர் 1.

செப்டம்பர்

4. உண்டியல் நாளிலிருந்து 90 நாள்களில் அகமதுக்குச் செலுத்துமாறு இயேசுதாசு வரைந்த ரூ. 777-க்கான உண்டியலை ஏற்றுக் கொடுத்தது. 'மதுரை கமர்ஷியல் வங்கி'யில் செலுத்துவதாக ஏற்கப்பட்டது. உண்டியல் நாள் செப்டம்பர் 2, 1971.

5. மூன்று திங்கள் தவணையில் செலுத்துவதாகக் கூறும் ரூ. 500-க்கான கடனுறுதிச் சீட்டை மகாவீரர்க்குக் கொடுத்தது.

10. பார்வைக்குப் பின் இரு திங்கள் தவணையில் செலுத்தக் கோரி எழுதிய ரூ. 475க்கு வரைந்த உண்டியலை மகாஜன் ஏற்றுத் தந்தது. உண்டியல் வரைந்த நாள் 5-9-71. திருநெல்வேலியிலுள்ள 'மதுரை வங்கியில்' செலுத்துவதாக ஏற்கப் பட்டிருந்தது.

15. வள்ளலார் ஏற்ற இரு திங்கள் தவணை உண்டியலை (ரூ. 870) அருளிடமிருந்து பெற்றது. உண்டியல் நாள் 14-8-1971 வடலூரில் உள்ள 'கடலூர் வங்கி'யில் செலுத்துவதாகக் கூறப்பட்டிருந்தது.

18. உண்டியல் நாளிலிருந்து நான்கு திங்கள் அப்பாசுக்குச் செலுத்தக் கோரி, அப்பர் எழுதிய ரூ. 800-க்கான உண்டியலைக் கடலூர் 'தமிழக-வங்கியில்' செலுத்துவதாக ஏற்றுத் தந்தது. உண்டியல் நாள் 17-9-1971.

22. பார்வைக்குப் பின் ஒரு திங்களில் செலுத்தக் கோரி எழுதிய ரூ. 1,350-க்கான உண்டியலை பீட்டர் ஏற்றுத் தந்தது. உண்டியல் ஏற்ற நாள் 21-9-1971. கெடுநாள் ஞாயிற்றுக் கிழமை எனக் கொள்க.

25. நான்கு திங்கள் தவணையில் செலுத்துவதாகக் கூறும் ரூ. 500-க்கான இராமனின் கடனுறுதிச் சீட்டை (செப்டம்பர் 7 நாளிடப் பட்டிருந்தது) இஸ்மாயிலிடமிருந்து பெற்றது. (தவணை நாள் ஞாயிற்றுக் கிழமையென்றும் தவணை நாளுக்கு முன் நாள் அரசினர் பொது விடுமுறை நாளென்றும் கொள்க.)

3. கீழ்க் கண்ட நடவடிக்கைகளைக் குமாரின் குறிப்பேட்டில் பதிக.

1971

அக்டோபர்

1 உருத்திராபதி ஏற்ற ரூ. 500-க்கான உண்டியல் மேலும் இரு திங்கட்காக ரூ. 25 வட்டியுடன் புதுப்பிக்கப்பட்டது.

3 வச்சிரவேலிடம் ஏற்றுத் தந்த ரூ. 1,000-க்கான உண்டியல் மேலும் மூன்று திங்கட்குப் புதுப்பிக்கப்பட்டது. வட்டி ரூ. 40-க்குக் காசோலை விட்டது.

6 இளவழகன் ஏற்ற உண்டியலுக்கு (ரூ. 750) பணமறுக்கப் பட்டதாக இலக்குவனிடமிருந்து மறுப்புக் குறிப்பு வந்தது. அவர்கள் செய்த குறிப்புச் செலவு ரூ. 10.

8 சிங்காரத்திடம் கொடுத்த ரூ. 300-க்கான கடனுறுதிச் சீட்டுக்கு இன்று பண மறுக்கப்பட்டது. சிங்காரம் செய்த குறிப்புக் கட்டணம் ரூ. 10. இத்துடன் வட்டி ரூ. 20 சேர்த்த தொகைக்கு இரு திங்களில் செலுத்துவதாகப் புதிய கடனுறுதிச் சீட்டை எழுதித் தந்தது.

10 வேலாயுதம் ஏற்றுத் தந்த ரூ. 500க்கான உண்டியலுக்குப் பணமறுக்கப் பட்டுவிட்டதாகத் தள்ளுபடி செய்யப்பட்ட வங்கி அறிவித்தது. வங்கி செய்த குறிப்புக் கட்டணம் ரூ. 10.

12 ரூ. 300-க்கான இராமலிங்கம் ஏற்ற உண்டியலுக்கு ஒரு திங்களுக்கு முன்னரே பணஞ் செலுத்திப் பெற்றுக் கொண்ட தள்ளுபடி ரூ. 10.

நடராசனிடம் எழுதிக் கொடுத்த ரூ. 250க்கான கடனுறுதிச் சீட்டிற்காகக் கெடுநாளான இன்று, செல்வம் ஏற்றுத் தந்த ரூ. 250க்கான உண்டியலை மேலெழுதிக் கொடுத்துத் தீர்த்தது.

4. ரூ. 1,000 மதிப்புள்ள சரக்கை 10% வியாபாரத் தள்ளுபடியில் 1-1-1971 அன்று தாவீது தாகூரிடம் சரக்கு வாங்கினார் ரூ. 400 உடனே கொடுத்து, மீதித் தொகைக்கு இரு திங்கள் தவணையில் கடனுறுதிச் சீட்டு எழுதித்தந்தார். இதனைத் தாகூர் தன் வங்கியில் 6% தள்ளுபடி செய்தார்.

தவணைநாளில் உண்டியலுக்குப் பணஞ்செலுத்தப் பட்டதாகக் கொண்டு இருவர் ஏடுகளிலும் பதிக.

அவ்வாறில்லாமல் உண்டியலுக்குப் பணமறுக்கப்பட, குறிப்புக் கட்டணம் கொடுத்தது ரூ. 10 எனக் கொண்டும் தேவையான பதிவுகளைத் தருக.

5. மணி எழுதிய ரூ. 1,000-க்கான இரு திங்கள் தவணை உண்டியலை ரமணி ஏற்ருர். அதை மணி வீரமணிக்கு மேலெழுதி ஞர். வீரமணி அதனை வெங்கடரமணிக்கு மேலெழுதி மாற்றிஞர். வெங்கடரமணி தனது வங்கியில் ரூ. 980-க்குத் தள்ளுபடி செய்தார்.

கெடுநாளன்று (i) உண்டியலுக்குப் பணஞ் செலுத்தப்பட்ட தென்றும் (ii) உண்டியலுக்குப் பணம் மறுக்கப்பட, வங்கி செய்த குறிப்புக் கட்டணம் ரூ. 10; உடனே மணி வங்கியில் பணத்தைச் செலுத்தி விட்டார் என்றும் கொண்டு, அனைவர் ஏடுகளிலும் பதிக.

6. ஆடலரசு எழுதி இசைமணி ஏற்ற ரூ. 400-க்கான உண்டியலுக்குக் கெடுநாளில் பணஞ்செலுத்த இயலவில்லை யென்றும் அதை ரத்து செய்துவிட்டு ரூ. 150 பெற்றுக் கொண்டு, மீதித் தொகையுடன் வட்டி ரூ. 10 சேர்த்த தொகைக்கு இரு திங்கள் தவணையில் புதிய உண்டியல் வரையுமாறும் வேண்டிஞர். ஆடலரசு அவ்வாறே செய்தார். இவ்வுண்டியலை ஆடலரசு முத்தமிழிடம் மேலெழுதிக் கொடுத்தார். தவணைநாளில் உண்டியலுக்குப் பணஞ்செலுத்தப்பட்டது என்று கொண்டு, இசைமணி, ஆடலரசு, முத்தமிழ்—இவர்களின் ஏடுகளில் பதிக.

7. ஆர்ஞல்டு ஆபிரகாமிடம் ரூ. 1,000 மதிப்புள்ள சரக்கை 17-11-1970 அன்று விற்ருர். ஆபிரகாம் ரூ. 300-க்குக் காசோலையொன்றும், ஆல்பர்ட்டிடம் தான் பெற்ற ரூ.500-க்கான உண்டியலை ஆர்ஞல்டுக்கு மேலெழுதியும் (இதன் கெடுநாள் 20-12-1970) மீதித் தொகைக்கு மூன்று திங்கள் தவணையில் கடனுறுதிச் சீட்டு (Promissory Note) எழுதியும் கொடுத்தார்.

ஆல்பர்ட்டிடம் ஏற்ற உண்டியலை ஆர்ஞல்டு தன் வங்கியில் ரூ. 495-க்குத் தள்ளுபடி செய்து மாற்றிஞர். கெடுநாளில் இதற்குப் பண மறுக்கப்பட வங்கி செலுத்திய குறிப்புக் கட்டணம் ரூ. 5.

ஆப்ரகாம் இதஞல் இத்தொகையுடன் குறிப்புக் கட்டணம் வட்டி ரூ. 20 சேர்த்த தொகைக்குப் புது உண்டியலை ஏற்ருர். கெடுநாள்களில் ஆப்ரகாம் ஏற்ற உண்டியல்கட்குப் பணஞ்

செலுத்தப்பட்டன என்று கொண்டு இருவர் ஏடுகளிலும் பதிவுகளைத் தருக.

(8) முரளி முகுந்தனிடம் ரூ. 300-க்கு 10% வியாபாரத்தள்ளுபடியில் சரக்கு விற்ருர். முரளி எழுதிய மூன்று திங்கள் தவணை உண்டியலை முகுந்தன் ஏற்றுத்தந்தார். இவ்வுண்டியலைத் தனக்கு ரூ. 400-க்குச் சரக்கு விற்ற முனியனிடம் மேலெழுதித் தந்தார். மீதித் தொகைக்குக் காசோலை விடுத்தார். தவணைநாளில் உண்டியல் மறுக்கப்பட்டதெனில், முனியன் இத் தொகைக்கு யாரை நோக்க வேண்டும்? முரளி, முகுந்தன், முனியன் ஏடுகளில் தேவையான பதிவுகளைத் தருக.

(9) 12-4-1971-ல் மாடலனிடம் வாங்கிய மனைத்துணைப் பொருள்கள் ரூ. 2,500-க்கு மாதவன் எழுதிக் கொடுத்த இருதிங்கள் தவணைக் கடனுறுதிச் சீட்டைத் தவணைநாளில் வசூலுக்காக வங்கிக் கனுப்பினுர். அது வசூலாக வில்லையென்று வங்கி அறிவித்தது. மாடலன், மாதவன் ஏடுகளில் இந் நடவடிக்கைகளைப் பதிக.

(10) ரூ. 500 மதிப்புள்ள சரக்கு விற்றதற்கு ஷெல்லி வரைந்த 'பார்வைக்குப் பின்' இரு திங்கள் தவணை உண்டியலை 19-6-1971 அன்று ஷேக்ஸ்பியர் ஏற்ருர். ஷெல்லி இவ்வுண்டியலை ஷாவிற்கு மேலெழுதி மாற்றினுர். 22-8-71 ஞாயிற்றுக்கிழமையாயின் உண்டியலின் கெடுநாள் (Due date) எது? கெடுநாளில் ஷேக்ஸ்பியர் உண்டியலுக்குப் பணம் செலுத்தினுர் எனக்கொண்டு, அனைவர் ஏடுகளிலும் தேவையான பதிவுகளைத் தருக.

11. குமார் ரூ. 4,000 மதிப்புள்ள சரக்கை 10% வியாபாரத் தள்ளுபடியில் சுகுமாரிடம் 1-9-71-ல் வாங்கியதற்குத் தன்மீது வரைந்த ரூ. 2,500-க்கான உண்டியல் ஒன்றையும் ரூ. 1,500-க்கான உண்டியல் ஒன்றையும் ஏற்று, சுகுமாரிடம் தந்தார். இரு உண்டியல்களும் 3-9-71 நாளிடப் பட்டிருந்தன. முதல் உண்டியல், உண்டியல் நாளிலிருந்து, இரு திங்கள் தவணையிலும், இரண்டாவது உண்டியல் மூன்று திங்கள் தவணையிலும் எழுதப்பட்டன.

முதல் உண்டியலைச் சுகுமார் தனது வங்கியில் 6% தள்ளுபடிக்கு மாற்றி யிருந்தார். கெடுநாளில் பணம் மறுக்கப்பட வங்கி கட்டிய குறிப்புக் கட்டணம் ரூ. 10. 8-11-71-ல் தாம் ஏற்ற இரண்டாவது உண்டியலையும் ரத்து செய்து விடுமாறும், அதற்கு மாருகக் கீழ்க்கண்ட முறையில் கடனைத் தீர்ப்பதாகவும் குமார் கூறினுர்.

(i) காசோலை ரூ. 1,100 தருவது (இதில் குறிப்புக் கட்டணமும் வட்டி ரூ. 90ம் அடங்கியுள்ளது.)

(ii) ரூ. 1,000-க்குச் சிவகுமார் ஏற்றுத்தந்த உண்டியலை மேலெழுதிக் கொடுப்பது. (இதன் கெடுநாள் 11-12-71)

(iii) மீதித் தொகைக்கு இரு திங்கள் தவணையில் கடனுறுதிச் சீட்டு ஒன்றை எழுதித்தருவது.

சுகுமார் இதற்கிசைந்தார்.

மேலெழுதி மாற்றித்தரப்பட்ட உண்டியலுக்குச் சிவகுமார் கெடுநாளில் பண மறுத்தார். செய்த குறிப்புக் கட்டணம் ரூ. 10. இதற்குப் பதிலாகப் புதிய உண்டியலை ரூ.1035-க்கு (வட்டி ரூ.25 + குறிப்புக் கட்டணம் ரூ. 10 உட்பட்டது.) ஒரு திங்கள் தவணையில் வரைய வேண்டினர். சுகுமார் இதற்குமிசையக் குமார் ஏற்றுத் தந்தார்.

இப் புதிய உண்டியலையும் சுகுமார் 8-11-71-ல் எழுதித்தந்த கடனுறுதிச் சீட்டையும் ரவிகுமாருக்கு மேலெழுதித் தந்தார். கெடுநாளில் குமார் நொடிப்புநிலை (Insolvent) அடையவே உண்டியல்கள் மறுக்கப்பட்டன. ரவிகுமார் செய்த குறிப்புக் கட்டணம் ரூ. 10. சிவகுமார் ரவிக்குமாரிடம் காசோலை விடுத்துத் தீர்த்துக் கொண்டார். இறுதியாகக் குமாரிடம் ரூபாய்க்கு 20 காசுகளே கிடைத்தது எனக்கொண்டு, குமார், சிவகுமார், ரவிகுமார் ஆகியோர் ஏடுகளில் குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக. சுகுமாரின் ஏடுகளில் குமார் கணக்கைத் தயாரிக்க.

12. பணவசதி செய்து கொள்ளும்பொருட்டு, 1-4-1971-ல் சுந்தர் நந்தன்மீது மூன்று திங்கள் தவணை உண்டியலை ரூ. 800-க்கு வரைந்தார். அதே தொகைக்கு அதே தவணையில் சங்கர் சுந்தர் மீது வரைந்தார். உண்டியல்கள் ஏற்கப்பட்டுத் தம்தம் வங்கியில் 8% தள்ளுபடிக்கு மாற்றப்பட்டன. கெடுநாளில் சுந்தர் தான் ஏற்ற உண்டியலுக்குப் பணஞ் செலுத்தினர். ஆனால், சங்கர் பண மறுக்கவே, குறிப்புக் கட்டணம் ரூ. 5 உட்பட, சுந்தர் அத் தொகையைச் செலுத்தினர். தான் கொடுக்க வேண்டிய தொகையுடன் ரூ. 20 வட்டி சேர்த்த தொகைக்குச் சுந்தர் வரைந்த இருதிங்கள் தவணை உண்டியலை ஏற்றார். இதற்குப் பணஞ் செலுத்தப்பட்டதென்று கொண்டு, சுந்தர், சங்கர் இருவர் ஏடுகளிலும் பதிவுகளைச் செய்க.

13. கருப்பையன் வரைந்த ரூ. 1,200-க்கான மூன்று திங்கள் தவணை பணவசதி உண்டியலை நீலமேகம் ஏற்றார். உடனே அதை வங்கியில் ரூ. 1160-க்குத் தள்ளுபடிக்கு மாற்றினார். கிடைத்த தொகையைக் கருப்பையனும் நீலமேகமும் 3% விகிதத்தில் பங்கிட்டுக் கொண்டனர். தவணை நாளில் தன் பகுதியைக் கருப்பையன் அனுப்ப, நீலமேகம் உண்டியலுக்குப் பணஞ் செலுத்தினார். இருவர் ஏடுகளில் குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக.

14. இருவரின் பணவசதிக்காகவும், 1-5-1971-ல் மூன்று திங்கள் ரூ. 2,000-க்கான உண்டியலை மித்ரா வரைய, முகர்ஜீ ஏற்றுத் தந்தார். அதனை மித்ரா தனது வங்கியில் தள்ளுபடிசெய்து ரூ. 1,160 பெற்றார். அதில் பாதித் தொகையை முகர்ஜீக்கு அனுப்பினார். தவணை நாளன்று, தான் செலுத்த வேண்டிய தொகையை மித்ரா அனுப்பத் தவறவே, முகர்ஜீ உண்டியலுக்குப் பண மறுத்தார். இதனால் மித்ரா வங்கியில் உண்டியல் தொகையைச் செலுத்தினார். தான் தர வேண்டிய தொகையுடன் ரூ. 20 வட்டி சேர்த்த அத்தொகைக்கு ஒரு திங்கள் தவணையில் கடனுறுதிச் சீட்டு எழுதித் தந்தார். முகர்ஜீ இதற்குக் கெடுநாளில் பணஞ் செலுத்தப் பட்டது என்று கொண்டு இருவர் ஏடுகளில் இந் நடவடிக்கையைப் பதிக.

15. 8-12-1971 அன்று பாலு பாபுமீது இருதிங்கள் தவணையில் பணவசதி உண்டியல் ஒன்றை ரூ. 1,500-க்கு வரைந்தார். உண்டியல் ஏற்கப்பட்டவுடன் வங்கியில் 6% தள்ளுபடிக்கு மாற்றி அதில் மூன்றில் ஒரு பகுதியைப் பாபுவுக்கு அனுப்பினார். அதே நாளில் மூன்று திங்கள் தவணையில் ரூ. 2,200-க்குத் தான் வரைந்த உண்டியலை பாலு ஏற்க, அதனை வங்கியில் 6% தள்ளுபடி செய்து மூன்றில் ஒரு பங்கைப் பாலுவுக்கு அனுப்பினார்.

கெடுநாளுக்கு முன்னர்ப் பாலு தான் வரைந்த உண்டியலுக்குச் செலுத்த வேண்டிய தொகையை அனுப்ப இயலவில்லை எனவும், எனவே அத் தொகையுடன் வட்டி ரூ. 20 சேர்த்து அத் தொகைக்கு இரு திங்கள் தவணையில் கடனுறுதிச் சீட்டு எழுதித் தருவதாகவும் கூறினார். பாபு இதற்கு உடன்பட்டார். இதனைத் தனது வங்கியில் 6% தள்ளுபடிக்கு மாற்றிப் பாபு தான் ஏற்ற உண்டியலுக்குக் கெடுநாளில் பணஞ் செலுத்தினார். தான் வரைந்த உண்டியலுக்குச் செலுத்த வேண்டிய தொகையைப் பாபு பாலுவிடம் அனுப்ப, அவ்வுண்டியலுக்குப் பணஞ் செலுத்தப் பட்டது.

பாலுவின் கடனுறுதிச் சீட்டுக்கும் கெடுநாளில் பணந்தரப் பட்டது. இந் நடவடிக்கைகளை இருவர் ஏடுகளிலும் பதிக.

16. பணவசதி செய்து கொள்ளும்பொருட்டு 11-10-1971-ல் நாயகம் எழுதிய ரூ. 3,000-க்கான மூன்று திங்கள் உண்டியலை நாவரசு ஏற்றார். இதனை வங்கியில் 6% தள்ளுபடி செய்து பாதித் தொகையை நாவரசுக்கு அனுப்பினார். 10-1-72-ல் தன்னால் பணம் அனுப்ப இயலவில்லையென்றும் எனவே தம்மீது இரு திங்கள் தவணை ஒன்றை ரூ. 2,100-க்கு வரையவும் நாயகம் வேண்டினார். நாவரசு அவ்வாறே செய்தார். இவ்வுண்டியலை நாவரசு தன் வங்கியில் தள்ளுபடிக்கு மாற்றி ரூ. 2,076 பெற்றார். இதில் ரூ. 25-ஐ நாயகத்துக் கனுப்பினார்.

இவ்வுண்டியல் தவணை நாளில் நாயகம் நொடிப்பு நிலையடையவே (Insolvent) ரூபாய்க்கு 30 காசுகள்தான் இறுதியாக அவரிடமிருந்து பெறப்பட்டது. இருவரின் ஏடுகளிலும் குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருவதுடன், நாயகம் கணக்கை நாவரசின் ஏடுகளில் தயாரிக்க.

17. 30-7-71-ல் இலக்குவன் எழுதிய ரூ. 1,800-க்கான பணவசதி உண்டியலை இராமன் ஏற்றார். உண்டியல் நாளிலிருந்து மூன்று திங்களில். பணஞ் செலுத்த வேண்டிய இவ்வுண்டியலை, உடனே இலக்குவன் தன் வங்கியில் ரூ. 1,760-க்குத் தள்ளுபடிக்கு மாற்றி, நான்கிலொரு பங்கை இராமனுக்கனுப்பினார்.

தவணை நாளில் தான் செலுத்த வேண்டிய தொகையை இலக்குவன் அனுப்பவியல வில்லையென்றும், அதனால் காசோலை ரூ. 320-க்குத் தருவதாகவும், பரதன் ஏற்றுத் தம்மிடமுள்ள உண்டியலை இராமனுக்கு மேலெழுதி மாற்றிக் கொடுப்பதாகவும், மீதித் தொகையுடன் ரூ. 25 வட்டி சேர்த்து அத்தொகைக்குக் கடனுறுதிச் சீட்டு எழுதித் தருவதாகவும் கூறினார். இலக்குவன் இதற்கிசைந்தார். பரதனின் உண்டியலையும் இராமனின் கடனுறுதிச் சீட்டையும் வங்கியில் 6% தள்ளுபடி செய்தார்.

தவணை நாளில், தான் ஏற்ற உண்டியலுக்கு இராமன் பணஞ் செலுத்தினார். கெடுநாளில் பரதன் ஏற்ற உண்டியலும் வசூலாகியது. ஆனால், இலக்குவனின் கடனுறுதிச் சீட்டுக்குப் பணமறுக்கப்பட, வங்கி கட்டிய குறிப்புக் கட்டணம் ரூ. 5.

இலக்குவன் நொடிப்பு நிலையடைய, அவரிடம் 40% தான் பெறப்பட்டது என்று கொண்டு, இராமன், இலக்குவன்-இருவர் ஏடுகளிலும் இந் நடவடிக்கைகளைப் பதிக.

18. 1-2-1971-ல் சிங்காரம் ரூ. 6,000 மதிப்புள்ள சரக்கை இராமலிங்கத்திடம் விற்கச் சுந்தர் ஏற்ற ரூ. 2,000-க்கான உண்டிய

லொன்றையும், ரூ. 4,000-க்கான உண்டியலொன்றையும் பெற்றார். முதல் உண்டியல் மூன்று திங்கள் தவணையிலும் இரண்டாவது நான்கு திங்களிலும் செலுத்த வேண்டியன. சிங்காரம் இவ்விரு உண்டியல்களையும் 6%-க்குத் தள்ளுபடி செய்தார்.

முதல் உண்டியல் தவணை நாளுக்கு முன் ரூ. 1,500 கொடுப்பதாகவும், இதற்கு மாறாக ரூ. 1,550-க்கு (ரூ. 50 வட்டியுட்பட) புதிய உண்டியலொன்று நான்கு திங்கள் தவணையில் வரையுமாறும் இராமலிங்கம் சிங்காரத்திடம் வேண்டினார். சிங்காரம் இதற்கொப்பினார். இராமலிங்கம் ஏற்ற உண்டியலைத் தன் வங்கியில் தள்ளுபடிசெய்து ரூ. 1,530 பெற்றார். ரூ. 1 500 இராமலிங்கத்துக் கனுப்பினார். முதல் உண்டியலுக்குப் பணம் தவணை நாளில் செலுத்தப்பட்டது.

இரண்டாவது உண்டியலின் கெடுநாளுக்கு முன்னர் ரூ. 3,000 சிங்காரத்திடம் வேண்டினார். பணந்தரத் தம்மால் இயலவில்லையென்றும், ஆனால் தன் மீது இரு உண்டியல்களை இருதிங்கள் தவணையிலும் மூன்று திங்கள் தவணையிலும் முறையே ரூ. 2,000-க்கும் ரூ. 1,000-க்கும் வரையின் ஏற்றுக் கொள்வதாகவும் கூறினார். அவ்வாறே இராமலிங்கம் வரைய, சிங்காரம் ஏற்றார். இவ்வுண்டியல்களைத் தம் வங்கியில் 6% தள்ளுபடி செய்து பெற்ற தொகையின் உதவியால், தாம் ஏற்றிருந்த ரூ. 4000-க்கான உண்டியலுக்குப் பணஞ் செலுத்தினார்.

தாம் ஏற்ற இரு உண்டியல்கட்கும் சிங்காரம் தவணை நாட்களில் பணஞ் செலுத்தினார். ஆனால், இராமலிங்கம் 7-9-71 அன்று நொடிப்பு நிலையடைந்தார். இறுதியாக அவரிடமிருந்து ரூபாய்க்கு 60 காசுகள் கிடைத்ததாகக் கொண்டு சிங்காரத்தின் ஏடுகளில் பதிக. இராமலிங்கத்தின் கணக்கையும் தயாரிக்க.

19. 'C'-க்கு 'B' ரூ. 600 தரவேண்டும். 1965 ஏப்ரல் 1-ல் மூன்று திங்கள் தவணைக்கடனுறுதிச் சீட்டு எழுதி C யிடம் தருகிறார். அதை 'C' ரூ. 590-க்குத் தள்ளுபடி செய்தார். தவணை நாளில் உண்டியலுக்குப் பண மறுக்கப்பட, வங்கி செலுத்திய குறிப்புக் கட்டணம் ரூ. 5. பிறகு 'B' ரூ . 200 ரொக்கங் கொடுத்து, மீதியுள்ள தொகையுடன் வட்டி ரூ. 10 கூடிய தொகைக்கான உண்டியலை ஏற்கிறார். இவ் வுண்டியல் இரு திங்கள் தவணைக் கானது. இவ் வுண்டியலும் தவணை நாளில் மறுக்கப்பட 'C' செலுத்திய குறிப்புக் கட்டணம் ரூ. 5.

'C'யின் ஏடுகளில் பதிக.

(C A II B. Nov. 1966)

20. ரூ. 3,000-க்கான உண்டியலின் தவணை நாளுக்கு முன்.

(i) அதனை ஏற்குநர் 'A' 'B'யிடம் வந்து ரூ. 1,000 கொடுத்து ரூ. 150 வட்டி சேர்த்து ரூ. 2,150-க்கான புதிய உண்டியலை வரைய வேண்டுகிறார். B அதற்கு இசைகிறார்.

(ii) வட்டிக்காக ரூ. 250 'B'யிடம் தருகிறார். முழுத் தொகைக்கும் புதிய உண்டியல் 'B' வரைய 'A' அதனை ஏற்கிறார்.

(iii) 'A' 'B'யிடம் ரூ. 1,150 தந்து ரூ. 2,000-க்கான வேறொரு உண்டியலை ஏற்கிறார்.

(iv) 'A' 'B'யிடம் ரூ. 1,000 ரொக்கமும் ரூ. 750-க்கு அவர் வைத்திருந்த உண்டியலை 'B'க்கு மேலெழுதியும் கொடுக்கிறார். ரூ. 200 வட்டி உட்பட மீதித் தொகைக்குப் புதிய உண்டியலை 'A' வரைகிறார்.

மேற் குறிப்பிட்ட ஒவ்வொரு நிலைகளிலும் தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளை 'B'யின் ஏடுகளில் தருக.

(M. U. B. Com. Sept .1950)

21. கீழ்க் கண்ட நடவடிக்கைகட்குக் குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக :

(i) ஜவகரின் ரூ. 3,500-க்கான உண்டியல் ரூ. 250 வட்டி சேர்த்துப் புதுப்பிக்கப்பட்டது.

(ii) ரூ. 5,000-க்கு நாம் ஏற்ற உண்டியலுக்குப் பணம் கொடுப்பதற்கு மாறாகக் காசோலை ரூ. 2,000-க்குக் கொடுத்தோம். வட்டி ரூ. 150 சேர்த்த மீதித் தொகைக்கு இரு திங்கள் தவணையில் புதிய உண்டியலை ஏற்றுக் கொடுத்தோம்.

(iii) ரூ. 4,000-க்குக் காசிநாதனிடம் நாம் ஏற்றுத் தந்த உண்டியல் 5% வட்டி சேர்த்த தொகைக்கு மீண்டும் மூன்று திங்கட்கு புதுப்பிக்கப்பட்டது.

(iv) ரூ. 800-க்கான உண்டியலுக்கு அதனை ஏற்குநர் சாமிநாதன் காசோலை ரூ. 300 கொடுத்தார். மீதித் தொகைக்கு நான்கு திங்கட்கான புதிய உண்டியல் ஒன்றும் 6% வீதத்தில் வட்டிக்கான ரொக்கமும் கொடுக்கப்பட்டது.

(v) பெஸ் தோன்றியின் ரூ. 6,500-க்கான உண்டியலுக்குப் பணம் மறுக்கப்பட்டு விட்டதாக ஆதம் அன்கோ (நமது

கடனீந்தோரில் ஒருவர்) அறிவிக்கிறார். அவர்கள் செலுத்திய குறிப்புக் கட்டணம் ரூ. 125. நாம் காசோலை விடுத்து அதனை மாற்றிக் கொள்கிறோம்.

(vi) (நமது வங்கிக்குப் பணம் செலுத்தக் கோரிச் சரியான நிபந்தனை கொடுக்காத காரணத்தால்) தாவூது அன்கோ விடம் நாம் ஏற்றுத் தந்த உண்டியலுக்குப் பணம் மறுக்கப் பட்டு விட்டது. அதற்காக ரூ. 300 குறிப்புக் கட்டணம் சேர்த்து ரூ. 9,000-க்குக் காசோலை விடுத்து முடிக்கப் பெறுகிறது.

(C A II B 1950)

22. 1967 ஏப்ரல் 1-ம் நாள் ரூ. 10,000 மதிப்புள்ள சரக்கை 'X', 'Y'யிடம் விற்றார். ஏப்ரல் 3ல் Yயின் வேண்டுகோளுக்கு ஏற்ப விற்பனைத் தொகையினின்றும் $2\frac{1}{2}\%$ தள்ளுபடி போக மீதியுள்ள தொகைக்கு மூன்று திங்கள் தவணை உண்டியலை 'X' வரைந்தார், Y அதை ஏற்றுத் தந்தார். ஏப்ரல் 4ல் 'X' அதைத் தனது வங்கியில் 6% தள்ளுபடிக்கு மாற்றினார். தவணைநாளன்று அவ்வுண்டிய லுக்குப் பண மறுக்கப்பட ரூ. 10 செலவுடன் வங்கி அதனை X யிடம் திருப்பியனுப்பியது.

ஜூலை 10ம் நாள் 'Y' ரூ. 5,000மும் செலவுத் தொகையையும் கொடுத்தார், பழைய கடன் தொகையுடன் ஆண்டு வட்டி 9% வீதம் கூடிய தொகைக்கு நான்கு திங்கள் உண்டியலை 'X' வரைய 'Y' அதனை ஏற்றுத் தந்தார்.

செப்டம்பர் 30ல் 'Y' நொடிப்பு (Insolvent) அடைந்தார்) டிசம்பர் 17ல் ரூபாய்க்கு 60 காசுகள் வீதம் இறுதியில் கொடுத்தார்.

'X'ன் ஏடுகளில் மேற்கண்ட நடவடிக்கைகளைப் பதிக.

(M. U. B. Com. April 1968)

23. 1968 டிசம்பர் 31-ல் முருகேசன் ஆறுமுகத்திற்கு ரூ. 2,400 தரவேண்டியிருந்தது. 1969 சனவரி 1-ல் மூன்று உண்டியல்களை ஏற்றுக் கணக்கைத் தீர்த்துக் கொண்டார், இரண்டு திங்கள் உண்டியல் ஒன்று ரூ. 600-க்கும், மூன்று திங்கள் உண்டியல் ஒன்று ரூ. 800-க்கும், ஆறு திங்கள் உண்டியல் ஒன்று மீதித் தொகைக்கும் வரையப் பட்டிருந்தன. ஆண்டுக்கு 4% வீதத்தில் எல்லா உண்டி யல்களையும் ஆறுமுகம் தனது வங்கியில் தள்ளுபடி செய்தார்.

முதல் உண்டியலுக்கு உரிய நாளில் பணப் செலுத்தப்பட்டது. இரண்டாவது உண்டியல் ஆண்டு வட்டி 6% வீதத்தில் மேலும்.

இரு திங்கட்குப் புதுப்பிக்கப்பட்டது. இவ் வுண்டியலுக்கு உரிய நாளில் பணம் செலுத்தப்பட்டது. மூன்றுவது உண்டியலுக்கு உரிய நாளில் பணம் மறுக்கப்பட்டது. முருகன் நொடிப்பு நிலை அடைந்தார். 1965 அக்டோபர் 25ஆம் நாள் ரூபாய்க்கு 40 காசுகள் வீதம் அவரிடமிருந்து இறுதியாகப் பெறப்பட்டது.

ஆறுமுகத்தின் ஏடுகளில் மேற்கண்ட நடவடிக்கைகட்கான குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக.

(M. U. B. Com. April 1970)

24. 15-1-1964-ல் தங்கள் பண வசதிக்காக A, B இருவரும் ரூ. 3,000-க்கான இரு திங்கள் தவணை உண்டியல்களை ஒருவர்மீது ஒருவர் வரைந்தனர். 18-1-1964-ல் விடுநர்கள் தங்கள் தங்கள் உண்டியல்களை 5% தள்ளுபடிக்கு மாற்றித் தொகைகளை வைத்துக் கொண்டனர். தவணை முதிர்வு நாளில் A தாம் ஏற்ற உண்டியலுக்குப் பணஞ் செலுத்தினர். ஆனல் B அவ்வாறு செலுத்தவில்லை. குறிப்பேட்டுப் பதிவுகளை இருவர் ஏடுகளிலும் தருக.

(M. U. B Com. April 1968)

25. தங்கள் இருவரின் பணவசதிக்காக ரூ. 3,000-க்கான உண்டியலை 'A' வரைய 'B' ஏற்றனுப்புகிறார். $\frac{3}{5}$, $\frac{2}{5}$ எனும் விகிதத்தில் பங்கிட்டுக் கொள்ள விரும்புகின்றனர். ரூ, 2,820-க்குத் தள்ளுபடிக்கு A அதை மாற்றி அதில் $\frac{2}{5}$ பகுதியை 'B'யிடம் அனுப்புகிறார். இவ்வுண்டியலுக்குப் பணம் செலுத்த உதவும் பொருட்டுத் தவணை நாளுக்கு முன் 'B', 'A' மீது ரூ. 4,200-க்கு ஓர் உண்டியலை வரைகிறார். இவ் விரண்டாவது உண்டியலைத் தள்ளுபடிக்கு மாற்றியதில் ரூ. 4,080 கிடைக்கிறது. இதனல் முதல் உண்டியலுக்குப் பணம் செலுத்தப்படுகிறது. மீதி $\frac{3}{5}$ பகுதியை A யிடம் அனுப்புகிறார். இரண்டாம் உண்டியல் தவணை நாளுக்கு முன் 'A' நொடிப்பு நிலை அடைகிறார். இறுதியாக, ரூபாய்க்கு 50 காசுகள் வீதம் 'A'யிடமிருந்து B பெறுகிறார்.

Aயின் ஏடுகளில் தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளைத் தந்து, Bயின் ஏடுகளில் பேரேட்டுக் கணக்குகளைத் தயாரிக்க.

(M. U. B. Com. Sept. 1969)

26. 1,500-க்கான உண்டியல் ஒன்றை அஜாய் வரைய இருவரின் பணவசதிக்காக விஜெய் ஏற்கிறார். $\frac{2}{3}$, $\frac{1}{3}$ விகிதத்தில் பிரிக்க ஒப்புகின்றனர். உண்டியலை அஜாய் ரூ. 1,410-க்குத் தள்ளு

படி செய்து அதில் $2\frac{2}{5}$ பங்கை விஜெய்க்கு அனுப்புகிறார். தவணை நாளுக்கு முன்னர் முதல் உண்டியலுக்குப் பணம் செலுத்தும் வசதிக்காக அஜாய் மீது ரூ. 2,100-க்கான உண்டியல் ஒன்றை விஜெய் வரைகிறார். இரண்டாம் உண்டியல் ரூ. 2,040-க்குத் தள்ளுபடி செய்யப்படுகிறது. இதன் உதவியுடன் முதல் உண்டியலுக்குப் பணம் தரப்படுகிறது. ரூ. 360 அஜாய்க்கு அனுப்பப்படுகிறது. இவ் விரண்டாம் உண்டியலின் தவணை நாளுக்கு முன்னர் அஜாய் நொடிப்பு நிலை அடைகிறார். ரூபாய்க்கு 50 காசுகள் அளவே இறுதியில் விஜெய் பெறுகிறார். அஜாய், விஜெய் இருவர் ஏடுகளிலும் தேவையான பதிவுகளைத் தருக.

(B. U. Inter Com. April 67)

**27.** 1950 சனவரி 1-ல் ரூ. 10,000-க்கான மூன்று திங்கள் உண்டியலை 'A' வரைய 'B' ஏற்றார். சனவரி 4-ல் அதனை ஆண்டுக்கு 6% வீதத்தில் 'A' தள்ளுபடிக்கு மாற்றினார். இதில் பாதித் தொகையை 'B'க்கு அனுப்பினார். 1950 பிப்ரவரி 1-ல் ரூ. 4,000-க்கான மூன்று திங்கள் உண்டியல் ஒன்றை 'B' வரைய 'A' ஏற்றுக் கொண்டார். பிப்ரவரி 4-ல் ஆண்டுக்கு 6% வீதத்தில் 'B' அதைத் தள்ளுபடி செய்தார். அதில் பாதி தொகையை 'A' யிடம் அனுப்பினார். தள்ளுபடியைச் சமமாகப் பங்கிட்டுக் கொள்ள இருவரும் இசைந்தனர்.

தவணை முதிர்வு நாளன்று தாம் ஏற்ற உண்டியலுக்கு A பணஞ் செலுத்தினார். ஆனால் 'B', தம் உண்டியலுக்குப் பணம் செலுத்தத் தவறிவிடவே 'A' யிடம் வழிகாண வேண்டியிருந்தது. உண்டியல் தொகையுடன் ஆண்டு வட்டி 5% கூடிய தொகைக்கு மூன்று திங்கள் உண்டியல் ஒன்றை A வரைய B ஏற்றார்.

1950 ஜூலை 1-ல் 'B' நொடிப்பு நிலை அடைந்தார். 1950 அக்டோபர் 31-ல் Bயின் பொறுப்புரிமையர் (Trustee) இறுதியாக ரூபாய்க்கு 50 காசுகள் வீதம் கொடுத்தனர். டிசம்பர் 5-ல் நொடிப்பு நிலையினின்றும் விடிவு பெற்றார். 'A'க்கு இன்னும் செலுத்த, வேண்டிய தொகையைக் கொடுத்து விடுவதாக 'B' கூறினார்.

'A' யின் ஏடுகளில் 'B' யின் கணக்கைத் தயாரிக்க. 1950 டிசம்பர் 31-ல் தயாரிக்கும் தனது இருப்பு நிலைக் குறிப்பில் 'B' கணக்குக் காட்டும் இருப்பை எவ்விதம் காட்டவேண்டும்? திங்கள் அடிப்படையில் கணக்கைச் செய்க. ஒவ்வொரு உண்டியலின் முக மதிப்பில் தள்ளுபடியைக் கணக்கிடுக.

(C. U. B. Com. 1952.)

28. சனவரி 1-ம் நாள் 'B' க்கு 'A' £ 6,000 தரவேண்டியுள்ளது. இரு திங்களில் செலுத்தத் தக்க £ 2,000-க்கான உண்டியல் ஒன்றையும் நான்கு திங்களில் செலுத்த வேண்டிய £ 4,000-க்கான உண்டியலொன்றையும் A யிடமிருந்து B பெறுகிறார். சனவரி 4-ம் நாள் இவ்விரு உண்டியல்களையும் 4% வீதத்தில் தமது வங்கியில் தள்ளுபடி செய்கிறார். முதல் உண்டியலின் தவணை நாளுக்கு முன் உண்டியலுக்குப் பணஞ் செலுத்த வகைசெய்யு முறையில் £ 1,000 ரொக்கம் கொடுக்குமாறு வேண்டுகிறார். இதற்கு மாறாக முதல் உண்டியலின் தவணை நாளிலிருந்து மூன்று திங்கள் தவணையில் அத் தொகையுடன் 5% வட்டி கூட்டிய தொகைக்கு உண்டியல் ஒன்று வரையவும் வேண்டுகிறார். B இதற்கிசைந்து கேட்ட தொகையைத் தந்து, உண்டியல் வரைந்து அதனைத் தனது வங்கியில் 4% வட்டிக்குத் தள்ளுபடி செய்கிறார்.

£ 4,000-க்கான இரண்டாம் உண்டியலின் கெடு நாளுக்கு முன்னர், £ 2,500 கொடுத்து உதவுமாறு மீண்டும் A வேண்டுகிறார். Aயின் உண்டியல்களை Bயின் வங்கி இனித் தள்ளுபடி செய்யப் போவதில்லை யாதலால் B இதற்கு உடன்பட முடியவில்லை. ஆனல், B ஒரு மாற்ற ஏற்பாடு செய்கிறார். £ 4,000-க்கான உண்டியல் தவணை நாளிலிருந்து இரு திங்கள் தவணை, மூன்று திங்கள் தவணைக் கான இரு உண்டியல்களை முறையே £ 1,131-16-8-க்கும், £ 1,408-3-4க்கும் தம் மீது A வரைய இசைகிறார். அவற்றை ஏற்று A யிடம் அனுப்புகிறார். தமது வங்கியில் A அவற்றை 4%க்குத் தள்ளுபடி செய்து, அதன் உதவியால் £ 4,000-க்கான உண்டியலுக்குப் பணம், செலுத்துகிறார். தவணைநாளில் B தமது இரு உண்டியல்கட்கும் பணஞ் செலுத்துகிறார். சூன் 7-ம் நாள் A நொடிப்பு நிலையடைய தமது மூன்றும் உண்டியலுக்குப் பணஞ் செலுத்தப் படாமலிருக்கிறது. B யின் ஏடுகளில் பதிக.

(London Chamber of Commerce)

# 8. குறிப்பேடு

## (Journal)

வாணிகம் வளர்ச்சியுறு நாள்களில், எவ்வகை நடவடிக்கையும் முதலில் குறிப்பேட்டில் எழுதப்படும்; பின்னர், அது பேரேடுகட்கு எடுத்துச் செல்லப்படும் என்பதையும் கண்டிருக்கிறோம். பேரளவில் தொழில் நடக்கும் இற்றை நாள்களில், தன்மைக் கேற்றவாறு பல்வகைத் துணையேடுகளில் முதலில் நடவடிக்கைகள் பதியப் பெறுகின்றன என்பதையும், பின்னர் அவற்றின் கூட்டல் தொகைகள் மட்டிலுமே அப் பேரேட்டுக் கணக்குகளில் எடுத்தெழுதப்படுகின்றன என்பதையும் முன் அதிகாரங்களில் விளக்கியிருக்கிறோம். துணையேடுகளைப் பயன்படுத்தலால் எடுத்தெழுதும் பணி மிகவும் குறைகிறது என்பதையும் விளக்கி யிருக்கிறோம்.

கொள் முதலேடு, கொள்முதல் திருப்ப ஏடு, விற்பனை ஏடு, விற்பனைத் திருப்ப ஏடு, வரவுடைய உண்டியல் ஏடு, செலுத்த வேண்டிய உண்டியல் ஏடு, ரொக்க ஏடு, ஆகிய துணையேடுகள் எதிலும் பதியாத நடவடிக்கைகளைப் பதியவே குறிப்பேடு இற்றை நாள்களில் பயன்படுத்தப்படுகிறது. அதாவது கீழ்க் கண்ட நடவடிக்கைகளை இதில் பதிகிறோம்.

1. தொடக்கப் பதிவுகள் (Opening Entries)

2. சொத்துகளைக் கடன்பேரில் வாங்கி விற்றல் (Credit purchase and Sale of Assets)

3. மாற்றுப் பதிவுகள் (Transfer Entries)

4. பிழை நீக்கப் பதிவுகள் (Rectification Entries)

5. சரிக்கட்டும் பதிவுகள் (Adjusting Entries)

6. முடிவுப் பதிவுகள் (Closing Entries)

7. உண்டியல் மறுப்பு நடவடிக்கைகட்கான பதிவுகள். (Entries relating to dishonour of Bills.)

8. தனி முதற் குறிப்பேடற்ற பிற நடவடிக்கைகளின் பதிவுகள். (அனுப்பீடு, இணை நிறுவனம்—போன்றவை) (Entries relating to transactions for which there is no special book of original entry such as consignment, joint venture etc.)

1. தொடக்கப் பதிவுகள் (Opening Entries)

வணிகர் ஒருவர் தன்னிடமுள்ள சொத்துகளை வைத்தும் தொழில் தொடங்கலாம். அவ்வாறாயின், அவற்றைக் குறிப்பேட்டில் பதிவு செய்தே பேரேட்டுக் கணக்குகளில் எடுத்தெழுத வேண்டும்.

எடுத்துக் காட்டு :

(1) சாத்தனார் ரூ. 10,000 முதல் வைத்துத் தொழில் தொடங்குகிறார். அவரிடமுள்ள கீழ்க் கண்ட சொத்துக்களையும் தொழிலுக்குக் கொண்டு வந்தார்.

| | | ரூ. |
|---|---|---|
| மேசை, நாற்காலிகள் முதலியவை | ... | 1,750. |
| தட்டெழுத்துப் பொறி | ... | 1,500. |
| கார் | ... | 16,750. |

இவற்றைப் பதியத் தேவையான தொடக்கப் பதிவு :

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| மனைத்துணைப் பொருள் க/கு | ... ப | 1,750 | |
| தட்டெழுத்துப் பொறி க/கு | ப | 1,500 | |
| கார் க/கு | ... ப | 16,750 | |
| ரொக்கக் க/கு | ... ப | 10,000 | |
| முதல் க/கு | ... | | 30,000 |

(சொத்துகளைத் தொழில் தொடங்கக் கொண்டு வந்தது.)

இவ்வாறே சென்ற ஆண்டுக் கணக்குகளை இவ்வாண்டுக் கணக்குகட்குக் கொண்டு வரவும் தொடக்கப் பதிவுகள் செய்யப்

படுகின்றன. சொத்துகளில் பற்று வைத்தும், பொறுப்புகளில் வரவு வைத்தும், பொறுப்புகளினின்றும் சொத்துகள் அதிகமுள்ள தொகைக்கு முதல் கணக்கில் வரவு வைத்தும் இப் பதிவு செய்யவேண்டும்.

(ப்) 31-12-1971-ல் கஸ்தூரி ரங்கனின் கணக்கிருப்புகள் கீழ்க் கண்டவாறிருந்தன.

| | ரூ |
|---|---|
| இறுதிச் சரக்கிருப்பு ... | 5,000 |
| மனைத்துணைப் பொருள்கள் ... | 2,500 |
| வரவுடைய உண்டியல்கள் ... | 1,200 |
| கட்டடம் ... | 20,000 |
| ரொக்கம் ... | 250 |
| வங்கி யிருப்பு ... | 4,750 |
| கடன் ... | 8,500 |
| செலவுடைய உண்டியல் ... | 1,700 |
| முதல் ... | 23,500 |

இவற்றை இவ்வாண்டு ஏடுகளில் கொண்டுவரத் தேவையான தொடக்கப் பதிவு :

| நாள் | விவரம் | பே. ப. எ. | பற்றுத் தொகை ரூ. | வரவுத் தொகை ரூ. |
|---|---|---|---|---|
| 1972 சன. 1 | ரொக்கம் ... ப | | 250 | |
| | வங்கி ... ப | | 4,750 | |
| | வரவுடைய உண்டியல் ... ப | | 1,200 | |
| | இறுதிச் சரக்கிருப்பு ... ப | | 5,000 | |
| | மனைத்துணைப் பொருள் ... ப | | 2,500 | |
| | கட்டடம் ... ப | | 20,000 | |
| | செலவுடைய உண்டியல் ... | | | 1,700 |
| | கடன் ... | | | 8,500 |
| | முதல் ... | | | 23,500 |
| | (கடந்த ஆண்டிலிருந்து சொத்துகளையும் பொறுப்புகளையும் இவ்வாண்டுக் கணக்குகட்குக் கொண்டு வர.) | | | |

## 2. சொத்துகள் பற்றிய கடன் நடவடிக்கைகள்
## (Credit transaction relating of Assets)

சொத்துகளை ரொக்கங் கொடுத்து வாங்கினும், விற்கினும், அவை ரொக்க நடவடிக்கைகளாகி விடுகின்றன. எனவே, முதலில் ரொக்க ஏட்டில் பதியப் பெற்றுப் பின்னர்ப் பேரேட்டுக் கணக்கு களில் எடுத்தெழுதப்படும். ஆனால், ரொக்கத்திற்கன்றிக் கடன் பேரில் அவற்றை வாங்கின், கொள்முதல் ஏட்டில் பதியக் கூடாது.— காரணம் சரக்கு கடன்பேரில் வாங்கின் மட்டுமே அவ்வேட்டில் பதியவேண்டும் என்று முன்னரே விளக்கி யிருக்கிறோம். எனவே, அத்தகைய நடவடிக்கைகளைக் குறிப்பேட்டில் பதிதல் இன்றியமை யாததாகிறது.

எடுத்துக் காட்டு : எந்திரம் ஒன்றை ரூ. 8,000-க்கு எட்டப்பன் கம்பனியிடம் விற்றது.

லாரி ஒன்றைப் பாரியிடமிருந்து ரூ. 35,00-க்கு வாங்கியது.

| நாள் | விவரம் | | பே. ப. எ. | பற்றுத் தொகை ரூ. | வரவுத் தொகை ரூ. |
|---|---|---|---|---|---|
| | எட்டப்பன் | ... ப | | 8,000 | |
| | எந்திரக் க/கு | ... | | | 8,000 |
| | (எந்திரம் எட்டப்பனிடம் விற்றது) | | | | |
| | லாரி க/கு | ... ப | | 35,000 | |
| | பாரி | ... | | | 35,000 |
| | (பாரியிடம் லாரி வாங்கியது.) | | | | |

## 3. மாற்றுப் பதிவுகள் (Transfer Entries)

ஒரு கணக்கிலிருந்து வேறொரு கணக்கிற்கு எடுத்துப்பதிவது மாற்றுப் பதிவாகும். வியாபாரக் கணக்கு காட்டும் மொத்த இலாபம் அல்லது நட்டத்தை, இலாப நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்வதையும், இலாப நட்டக் கணக்குக் காட்டும் நிகர இலாபம் அல்லது நட்டத்தை முதல் கணக்கிற் கெடுத்துச் செல்வதையும் மாற்றுப் பதிவுக்கு எடுத்துக்காட்டுகளாகக் கூறலாம்.

எடுத்துக் காட்டு :

வேலன் கணக்கில் உள்ள வரவைப் பாலன் கணக்கிற்கு மாற்ற

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| வேலன் | ... ப | 100 | |
| பாலன் | ... | | 100 |

(வேலன் கணக்கிலிருந்த வரவைப்
பாலன் கணக்கிற்கு மாற்ற)

சரிக்கட்டும் பதிவுகளும் அனுப்பீடு போன்ற நடவடிக்கை கட்கான பதிவுகளும் தனி அதிகாரத்தில் விளக்கப்பட்டுள்ளன. முடிவுப் பதிவுகள் வாணிகக் கணக்கு (Trading a/c) எனுந் தலைப்பில் கூறப்பட்டுள்ளன. உண்டியல் மறுப்பு நடவடிக்கைகட்கான பதிவுகளை 'உண்டியல் நடவடிக்கைகள்' எனும் அதிகாரத்தில் முன்னரே விளக்கியுள்ளோம். இங்குப் பிழை நீக்கப் பதிவுகளைக் காண்போம்.

## பிழை நீக்கப் பதிவுகள்
## (Rectification Entries)

அளப்பரிய நடவடிக்கைகள் நாள்தோறும் நிகழும் இற்றை நாள்களில் துணையேடுகளில் பதியும் போழ்தோ, பின்னர் அவற்றைத் தந்த பேரேட்டுக் கணக்குகளில் எடுத்தெழுதும் போழ்தோ தவறுகள் ஏற்படுவது இயற்கையே. பதியும் போழ்தே கண்டு பிடிக்கப்படும் தவறுகளை அவ்வப்பொழுதே நீக்க முடியும். ஆனால், நாள்கள் பல சென்ற பின்—பின்னர்க் கணக்குகளைச் சரி பார்க்கும் போழ்து புலனாகும் பிழைகளைத் திருத்த வேண்டுமாயின், குறிப்பேட்டுப் பதிவுகளைச் செய்தாக வேண்டும். முதலில், நாம் செய்யும் பிழைகளை வகைப் படுத்தலாம்.

1. விடு பிழை (Error of Ommission)

எந் நடவடிக்கையும் முதலில் துணையேடுகளில்தான் பதியப் பெறும் என்பதையும், பின்னர் அவை கணக்குகளில் எடுத்தெழுதப் படுகின்றன என்பதையும் பல முறை கூறியிருக்கிறோம். அவ்வாறு துணையேடுகளில் எழுத மறந்து விடுவதையும், துணையேட்டில் பதிவாகிப் பேரேட்டுக் கணக்கில் எடுத்தெழுத விட்டு விடுவதையும் இது குறிக்கும். பின்னதை (கணக்குகளில் எடுத்தெழுத விட்டு விடுவதை, ஒரு தரப்பட்ட விடுபிழை (Partial Error of Ommission) எனலாம். ஒரு நடவடிக்கை முதற் குறிப்பேட்டில்—துணையேடு களில் எழுதப் பெறுமற் போகுமாயின், பற்று-வரவு ஆகிய இரு கூறுகளும் பதியப்படுவதில்லை. ஆகையால், அதற்குரிய குறிப் பேட்டுப் பதிவைக் கொடுத்துவிடின், பிழை நீங்கப் பெறும்.

எடுத்துக்காட்டு: ரஹ்மானிடம் ரூ. 777-க்குச் சரக்கு விற்றது விற்பனை ஏட்டில் பதிவாகவில்லை.

பிழை நீக்கப் பதிவு :

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| ரஹ்மான் | ... ப | 777 | |
| விற்பனைக் க/கு | | | 777 |

(விற்பனை ஏட்டில் பதிவாகா
நடவடிக்கையைப் பதிய)

பின்னர், உரிய கணக்குகளில் எடுத்தெழுதிக் கணக்கைச் சரி செய்து கொள்ளலாம்.

ஒரு தரப்பட்ட விடுபிழை (Partial Error of Ommission).

துணையேட்டிலிருந்து பேரேட்டுக் கணக்கில் எடுத்தெழுத விட்டுவிடல்.

ஒரு நடவடிக்கை துணையேட்டில் பதிவாகி விட்டது. ஆகவே, அத் துணையேட்டுக் கணக்கின் கூட்டல் தொகையும் சரியாக இருக்கும். ஆனால், அதிலுள்ள ஆள்சார் கணக்குகளில்—அல்லது செலவுக் கணக்குகளில்-எடுத்தெழுதத் தவறி விட்டதால், அவ்வாறு விடப்பட்ட கணக்கில் பற்றோ, வரவோ வைத்துவிடின் சரியாகி விடும்.

எடுத்துக் காட்டு : பெரியசாமியிடம் திருப்பியனுப்பிய சரக்கு ரூ. 55.பெரியசாமியின் கணக்கில் பதிவாகவில்லை.

இது ஒரு கொள்முதல் திருப்ப நடவடிக்கை, கொள்முதல் திருப்ப ஏட்டில் எவ்வகைத் தவறும் ஏற்படவில்லை. ஆனால், சரக்கு திருப்பியனுப்பப்பட்ட பெரியசாமி கணக்கில் பற்று வைக்க வேண்டியது விடப்பட்டு விட்டது. எனவே, இப் பிழைநீங்க பெரியசாமி கணக்கில் ரூ.55-க்குப் பற்று வைத்துவிடின் போதும்.

ஊதியங் கொடுத்தது. ரூ. 1,000. ஊதியக் கணக்கில் எடுத்தெழுதப் படவில்லையெனில், ஊதியக் கணக்கில் ரூ. 1,000-க்குப் பற்று வைத்துவிடின் போதுமானதாகும். ரொக்க ஏட்டில் சரியாகப் பதியப்பட்டுள்ளது. எனவே, ரொக்கக் கணக்கில் பதிவேதும் செய்யத் தேவையில்லை.

2. செய் பிழை (Error of Commission)

ஒரு நடவடிக்கை முதற்குறிப் பேட்டிலேயே எழுதாமல் விடப்படுவது விடு பிழை என்றோம். ஆனால், செய் பிழை என்பது பதிவதில் தவறுகள் ஏற்படுவதையும் பற்றுப் பகுதி அல்லது வரவுப்

பகுதி பதியப் பெற்றுப் பிறபகுதி கணக்கில் பதியப் பெருமற் போவதையும் குறிக்கும். கீழ்க்கண்ட முறைகளில் அவை ஏற்படலாம்.

(i) எடுத்தெழுதும் போழ்து தவருன கணக்கில் பதிதல்.

துணையேடுகளிலிருந்து எடுத்தெழுதும் போழ்து, தவருன கணக்கில் பற்ருே வரவோ வைத்திடுவதை இது குறிக்கும்.

எடுத்துக்காட்டு : சேகரிடமிருந்து திரும்பி வந்த சரக்கு ரூ. 100, சேரன் கணக்கில் வரவு வைக்கப்பட்டிருந்தது.

இது ஒரு விற்பனைத் திருப்ப நடவடிக்கை. விற்பனைத் திருப்ப ஏட்டில் பதியப்பட்டிருக்கிறது. அதன் கூட்டுத் தொகை விற்பனைத் திருப்பக் கணக்கில் பற்று வைக்கப்படுமாதலால், அக் கணக்கில் தவறேதும் ஏற்படவில்லை. ஆனல், சரக்கைத் திருப்பி யனுப்பிய சேகர் கணக்கில் வரவு வைக்கப்படாமல் சேரன் கணக்கில் வரவு வைக்கப்பட்டுவிட்டது. சேரன் கணக்கில் வைக்கப்பட்ட வரவு முதலில் நீக்கப்பட வேண்டும். வரவு நீக்கப்பட, அதே கணக்கில் அதே தொகைக்குப் பற்று வைத்துவிடின் போதும். பின்னர், சேகர் கணக்கில் வரவு வைத்து விட்டால் இப் பிழை நீங்கப் பெறுகிறது. எனவே இதற்குத் தேவையான பதிவு :

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| சேரன் | ப | 100 | |
| சேகர் | | | 100 |
| (சேரன் கணக்கில் வைத்த தவருன பதிவு நீக்கப்படவும் சேகர் கணக்கில் வரவு வைக்கவும்) | | | |

(ii) பெயர்த்தெழுதும் போழ்து தவருன பகுதியில் பதிதல் :

இங்குச் சரியான கணக்கில் தான் எடுத்தெழுதுகிருேம். ஆனல், பற்றுப் பகுதியில் பதிவதற்குப் பதில் வரவுப் பகுதியிலோ, வரவுப் பகுதியில் பதிவதற்கு மாருகப் பற்றுப் பகுதியிலோ பதிவதை இது குறிக்கும்.

எடுத்துக்காட்டு : செந்திலிடம் சரக்கு வாங்கியது ரூ. 500, செந்தில் கணக்கில் பற்று வைக்கப்பட்டு விட்டது.

இங்கு தவறு செந்தில் கணக்கில்தான் நிகழ்ந்துள்ளது. (கொள் முதல் ஏட்டில் பதியப் பெற்று விட்டதால், கொள்முதல் கணக்கில் தவறேற்படவில்லை என்பதை மறத்தலாகாது.) செந்தில் கணக் கில் வரவு வைப்பதற்கு மாருகப் பற்று வைக்கப்பட்டுவிட்டது. இப் பற்று நீங்க, அதே கணக்கில் ரூ. 500 வரவு வைத்துவிடின் போதும். இப்பொழுது தவருன பற்றுதான் நீக்கப்பட்டுவிட்டதே யன்றி அதில் வைக்க வேண்டிய வரவு இன்னும் வைக்கப்படவில்லை. எனவே, அக் கணக்கில் ரூ. 500 மீண்டும் வரவு வைத்துவிடின் பிழை நீங்கப் பெற்றுப் பதிவும் முடிவுறும். ஆகவே, மொத்தத்தில் செந்தில் கணக்கில் ரூ. 1,000-க்கு வரவு வைத்துவிடின் போதும் என்பது இதிலிருந்து தெளிவாகிறதன்ருே?

இவ்வாறே வாடகை பெற்றது ரூ. 250 வாடகைக் கணக்கில் பற்று வைக்கப்பட்டுவிட்டதென்ருல், வாடகைக் கணக்கில் ரூ. 500-க்கு வரவு வைத்துவிடின் தவருன பற்றும் நீங்குகிறது; வேண்டிய பதிவும் செய்யப் படுகிறது. இத் தகு பிழைகளால் ஒரே கணக்குதான் தொடர்புற்றிருப்பதால், குறிப்பேட்டுப் பதிவு தேவையில்லை.

(iii) பெயர்த்தெழுதும் போழ்து தவருன தொகையை எழுதுதல்.

துணையேட்டில் தவறு நிகழவில்லை. எடுத்தெழுதப்படுகின்ற கணக்கில்தான் தவறு ஏற்படுகிறது என்பதை மறத்தலாகாது.

எடுத்துக் காட்டு : அலுவலகச் செலவு ரூ. 113, அலுவலகச் செலவுக் கணக்கில் ரூ. 131 ஆக பதிவாகியிருந்தது. (துணையே டான ரொக்க ஏட்டில் சரியாகப் பதியப்பட்டு விட்டது.) அலுவல கச் செலவுக் கணக்கில் ரூ. 18 அதிகமாகப் பற்று வைக்கப்பட்டு விட்டது. இது நீங்க அதிகமாக எழுதிய தொகைக்கு அதே கணக்கில் வரவு வைத்துவிடின் பிழை நீங்கிவிடும். எனவே, அலுவலகச் செலவுக் கணக்கில் ரூ. 18 வரவு வைக்கவேண்டும்.

(iv) துணையேட்டில் தவருகக் கூட்டல்

இவ்வகையில் தவறு துணை ஏட்டில் ஏற்படுகிறது. முதலில் துணையேட்டின் கூட்டல் தொகை திருத்தப்பட வேண்டும். துணை யேட்டின் கூட்டல் தொகை அத் துணையேட்டுக் கணக்கிற் கெடுத் துச் செல்லப்படுவதால் அக் கணக்கிலும் பிழை நீக்கப் பதிவு செய்ய வேண்டும்.

எடுத்துக்காட்டு : விற்பனை ஏடு ரூ. 1,000 குறைத்துக் கூட்டப் பட்டது.

விற்பனை ஏட்டில் கூட்டல் திருத்தப்பட வேண்டும். பின்னர், இக் கூட்டல் தொகை விற்பனைக் கணக்கில் வரவு வைக்கப்படு மாகையால் ரூ. 1,000 குறைத்து வரவு வைக்கப்பட்டிருக்கும். இதை நீக்க விற்பனைக் கணக்கில் ரூ. 1,000-க்கு வரவு வைத்துவிடின் இப் பிழை சரி செய்யப்படுகிறது.

இவ்வாறே கொள்முதலேடு ரூ. 100 அதிகம் கூட்டப்படு வதாகக் கொள்வோம். இப்பொழுது கொள்முதல் கணக்கில் ரூ. 100 அதிகம் பற்று வைக்கப்பட்டிருக்கும். இதைப் போக்கக் கொள்முதல் கணக்கில் ரூ. 100 வரவு வைத்துவிடின் போதும். இவ்வகைப் பிழையிலும் ஒரே கணக்குதான் தொடர்ப்புற்றிருப் பதால், குறிப்பேட்டுப் பதிவு தேவையில்லை.

(vi) துணையேட்டில் தவறான தொகையை எழுதிவிடல்.

துணையேட்டில் பதியும் போழ்தே இத் தவறு நிகழ்ந்து விடுவதால், இரு கணக்குகள் தொடர்பாகின்றன. குறிப்பிட்ட அத் துணையேட்டுக் கணக்கிலும் தவறிருக்கும். அத் தவறு ஏற்பட்ட ஆள்சார் கணக்கிலும் அதே தவறு எடுத்தெழுதும் போழ்து செய்யப்படும். எனவே, இரு கணக்கிலும் பிழை நீக்கம் செய்ய வேண்டும்.

எடுத்துக் காட்டு : ஜெயகுமாரிடம் சரக்கு வாங்கியது ரூ. 515, கொள்முதலேட்டில் தவறாக ரூ. 550 ஆகப் பதியப்பட்டுவிட்டது.

இப் பதிவால் கொள்முதல் ஏட்டின் கூட்டல் தொகை ரூ. 35 அதிகம் கூட்டப்பட்டு விட்டது. இது கொள்முதல் கணக்கில் எடுத் தெழுதப்படுவதால் அக் கணக்கில் ரூ. 35 அதிகம் பற்று வைக்கப்பட்டிருக்கும். அதை நீக்கக் கொள்முதல் கணக்கில் ரூ. 35-க்கு வரவு வைக்க வேண்டும். அடுத்து, கொள்முதல் ஏட்டில் விவரப் பத்தியில் உள்ள ஆள்சார் கணக்கில் வரவு வைக்கப் படுகிறது. ஆகவே, ஜெயகுமார் கணக்கில் ரூ. 35 அதிகம் வரவு வைக்கப்பட்டிருக்கும். இதனை நீக்க அக் கணக்கில் ரூ. 35-க்குப் பற்று வைக்க வேண்டும். ஆகவே, தேவையான பிழை நீக்கப் பதிவு :

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| ஜெயகுமார் | ப | 35 | |
| கொள்முதல் க/கு | | | 35 |
| (கொள் முதலேட்டில் ரூ. 35 அதிகம் எழுதியதை நீக்க) | | | |

மேலே கூறப்பட்ட எல்லா வகையும் செய் பிழையின் பாலடங்கும்.

### 3. விதிப் பிழை (Error of Principle)

கணக்குப் பதிவியலின் விதிகளை மீறுவதால் ஏற்படும் பிழை இது. முதலீட்டு வரவு அல்லது செலவுக்கும், நடைமுறை வரவு அல்லது செலவுக்கும் உள்ள வேற்றுமையை உணராது பதிவதும் இப் பிழையிலடங்கும். எடுத்துக் காட்டாகக் கட்டடம் வாங்கும் போழ்து, வழக்குரைஞர்க்குக் கொடுக்கும் கட்டணம் ஒரு முதலீட்டுச் செலவாகும். எனவே, அதைக் கட்டடக் கணக்கில் சேர்க்க வேண்டும். அவ்வாறின்றி, 'வழக்குரைஞர் கட்டணக்' கணக்கில் பற்று வைப்பின் தவறாகும். இது விதிப் பிழை.

எடுத்துக் காட்டு : எந்திரம் நிறுவக் கொடுத்த கூலி ரூ. 250, கூலிக்கணக்கில் பற்றுவைக்கப்பட்டது.

கூலிக்கணக்கில் வைத்த பற்று நீங்க, அக் கணக்கில் அதே தொகைக்கு வரவு வைக்க வேண்டும். எந்திரக் கணக்கில் பற்று வைக்கவில்லை யாகையால் அக் கணக்கில் இப்பொழுது பற்று வைப்பின் சரியாகி விடும். எனவே, தேவையான திருத்தப் பதிவு.

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| எந்திரக் க/கு ... | ப | 250 | |
| கூலிக்கு க/கு | | | 250 |
| (தவறாகக் கூலிக் கணக்கில் வைத்த பற்றை நீக்க) | | | |

### 4. ஈடுசெய் பிழை (Compensating Error)

எளிதில் கண்டு பிடிக்க முடியாது. இரண்டு அல்லது பல இடங்களில் ஏற்படும் பிழைகளால், இருப்புப் பட்டியல் பாதிக்கப் படுவதில்லை. ஒரு கணக்கில் வைக்கப்படும் அதிகமான வரவு, அதே தொகைக்குப் பிறிதொரு கணக்கில் வைக்கப்படும் அதிக மான பற்றால் ஈடு செய்யப்படுகிறது. பிழைகள் இருப்பதையே நாம் உணர முடிவதில்லை. எடுத்துக்காட்டாக, ஊதியக் கணக்கில் ரூ. 200 குறைத்துப் பற்று வைக்கப் பட்டதென்றும் இலாப ஈவுக் கணக்கில் ரூ. 200 குறைத்து வரவு வைக்கப்பட்டிருப்பதென்றும் கொண்டால், இவ்விரு பிழைகளும் ஈடுகட்டும் பிழைகளாகும்.

*பிழை நீக்க உணர வேண்டியவை :*

(i) ஒரு கணக்கில் உள்ள பற்றிருப்பை அதிகரிக்க, அக் கணக்கில் பற்றுப் பக்கத்தில் பதிக. பற்றிருப்பைக் குறைக்க, அக் கணக்கில் வரவுப் பகுதியில் பதிக.

(ii) ஒரு கணக்கில் வரவிருப்பை அதிகரிக்க, அக் கணக்கில் வரவுப் பகுதியில் பதிக. வரவிருப்பைக் குறைக்க அக் கணக்கில் பற்றுப் பகுதியில் பதிக.

எடுத்துக் காட்டு 32.

*கீழ்க் கண்ட பிழைகளைத் திருத்தத் தேவையான பதிவுகளைத் தருக.*

(i) முருகனிடமிருந்து திரும்பி வந்த சரக்கு ரூ. 250 விற்பனைத் திருப்ப ஏட்டில் பதிவாகவில்லை.

(ii) மணிவாசகத்திடம் பெற்ற கழிவு ரூ. 150, மணிவாசகத்தின் கணக்கில் வரவு வைக்கப்பட்டுள்ளது.

(iii) மேசை, நாற்காலி வாங்கியது ரூ. 500, கொள்முதல் கணக்கில் பற்று வைக்கப்பட்டுள்ளது.

(iv) ஆப்ரகாமிடம் விற்ற சரக்கு ரூ. 300, இப்ரகாம் கணக்கில் பதிவாகி யுள்ளது.

(v) ரொக்க ஏட்டின் பற்றுப் பகுதியில் உள்ள தள்ளுபடி பத்தி ரூ. 15 குறைத்துக் கூட்டப்பட்டிருந்தது.

(vi) கொள்முதலேட்டிலிருந்து குமணன் கணக்கில் எடுத்தெழுதும் போழ்து, ரூ. 250-க்குச் சரக்கு வாங்கியது அவர் கணக்கில் பற்று வைக்கப்பட்டது.

(vii) உரிமையாளர் தன் இல்லத்துக்கு வாங்கிய மனைத்துணைப் பொருள்கள் ரூ. 500 மனைத்துணைப் பொருள் கணக்கில் பற்று வைக்கப்பட்டது.

(viii) பொறியொன்றைக் கொண்டு வரக் கொடுத்த கட்டணம் ரூ. 100. சுமை கூலிக் கணக்கில் பற்று வைக்கப்பட்டது.

(ix) ஜமாலிடம் வாங்கிய சரக்கு ரூ. 331, கொள்முதல் ஏட்டில் ரூ. 313 ஆகப் பதிவாகியிருந்தது.

(x) நம்பியிடம் திருப்பியனுப்பிய சரக்கு ரூ. 75, விற்பனை ஏட்டில் பதிவாகியிருந்தது.

விடை :

(i) விற்பனைத் திருப்ப ஏட்டிலேயே எழுதத் தவறி விட்டதால், தொடர்பான இரு கணக்குகளிலும் இந் நடவடிக்கை பதிவாகவில்லை. எனவே, தேவையான திருத்தப் பதிவு:

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| விற்பனைத் திருப்ப க/கு | ப | 250 | |
| முருகன் | | | 250 |
| (விற்பனைத் திருப்பம் பதியாததை நீக்க.) | | | |

(ii) கழிவுக் கணக்கில் வைக்க வேண்டிய வரவு மணிவாசகத்தின் கணக்கில் வரவு வைக்கப்பட்டுவிட்டது, மணிவாசகத்தின் கணக்கில் பற்று வைப்பதால் அவ் வரவு நீங்கும். கழிவுக்கணக்கில் வரவு வைத்து இப் பிழையைச் சரி செய்யலாம். பதிவு :

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| மணிவாசகம் | ப | 150 | |
| கழிவுக் க/கு | | | 150 |
| (மணிவாசகம் கணக்கில் வைத்த தவறான பதிவு நீக்கப் படவும், கழிவுக் கணக்கில் பதியவும்.) | | | |

(iii) மனைத்துணைப் பொருள் கணக்கில் பற்று வைப்பதற்கு மாறாகக் கொள்முதல் கணக்கில் பற்று வைக்கப்பட்டுள்ளது, கீழ்க் கண்ட பதிவால் இதைச் சரி செய்யலாம்.

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| மனைத்துணைப் பொருள் க/கு | ப | 500 | |
| கொள்முதல் க/கு | | | 500 |
| (கொள்முதல் கணக்கில் வைத்த தவறான பற்றை மனைத்துணைப் பொருள் கணக்கில் கொண்டு வர.) | | | |

(iv) விற்பனைக் கணக்கில் தவறேதும் ஏற்படவில்லை. ஆப்ரகாம் கணக்கில் பற்று வைப்பதற்கு மாறாக இப்ரகாம் கணக்கில் பற்று வைக்கப்பட்டுள்ளது. தேவையான பதிவு :

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| ஆப்ரகாம் | ப | 300 | |
| இப்ரகாம் | | | 300 |
| (இப்ரகாம் கணக்கில் வைத்தத் தவறான பற்றை ஆப்ரகாம் கணக்கிற்கு மாற்ற.) | | | |

(v) ரொக்க ஏட்டின் பற்றுப் பகுதியில் உள்ள தள்ளுபடிப் பத்தியின் கூட்டல் தொகை, தள்ளுபடிக் கணக்கின் பற்றுப் பக்கத்தில் கொண்டு செல்லப்படும். இப் பத்தி தவறாக ரூ. 15 குறைத்துக் கூட்டப் பட்டுள்ளதால், தள்ளு படிக் கணக்கில் ரூ. 15 குறைத்து, பற்று வைக்கப்பட்டி ருக்கும் முதலில் கூட்டலைத் திருத்த வேண்டும். குறைவான பற்றைச் சரிசெய்ய அதே கணக்கிலேயே பற்று வைத்தால் சரியாகிவிடும். ஆகவே, தள்ளுபடிக் கணக்கில் ரூ. 15 பற்று வைக்க வேண்டும்.

இதில் தொடர்புற்றிருப்பது பற்றுப் பகுதிக்கான கணக்கு மட்டிலுமே. எனவே, குறிப்பேட்டில் பதிவு தேவையில்லை.

(vi) கொள்முதலேட்டில் தவறு நிகழவில்லை. எடுத்தெழுதும் போழ்து குமணன் கணக்கில் வரவு வைப்பதற்கு மாறாகப் பற்று வைக்கப்பட்டுவிட்டது. பற்று நீங்கவும், அக் கணக்கு வரவிருப்பைக் காட்டவும், இரு மடங்காக வரவு வைக்க வேண்டும். அதாவது குமணன் கணக்கில் ரூ. 500 வரவு வைக்க வேண்டும்.

(vii) உரிமையாளர் தன் இல்லத்துக்கு வாங்கிய மனைத்துணைப் பொருளாதலால், எடுப்புக் கணக்கில் பற்று வைக்க வேண்டும். ஆனால், மாறாக மனைத்துணைப் பொருள் கணக்கில் பற்று வைக்கப்பட்டுள்ளது. இதை நீக்க, முன்னர் விளக்கியவாறு, கீழ்க் கண்டவாறு பதிய வேண்டும்.

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| எடுப்புக் க/கு | ப | 500 | |
| மனைத்துணைப் பொருள் க/கு | | | 500 |

(மனைத்துணைப் பொருள் கணக்கில் வைத்த தவறான பற்றை எடுப்புக் கணக்கிற்கு மாற்ற)

(viii) பொறியைக் கொண்டுவரக் கொடுத்தக் கட்டணம் ஒரு முதலீட்டுச் செலவாகும். வாங்கிய சொத்துக் கணக்கில் சேர்க்க வேண்டும். ஆனால், சுமை கூலிக் கணக்கில் பற்று வைத்து விட்டனர். தேவையான பதிவு :

| | | | |
|---|---|---|---|
| பொறிக் க/கு | ப | 100 | |
| சுமை கூலிக் க/கு | | | 100 |

(சுமை கூலிக் கணக்கில் வைத்தத் தவறான பற்றைப் பொறி கணக்கிற்குக் கொண்டு வர.)

(ix) கொள் முதலேட்டிலேயே தவறாகப் பதியப் பட்டதால் இரு கணக்குகளிலும்—கொள்முதல் கணக்கிலும், ஆள்சார் கணக்கான ஜமால் கணக்கிலும்—தவறு இருக்கிறது. ரூ. 331 என்பது ரூ. 313 ஆகப் பதிவாகியுள்ளதால், கொள்முதல் கணக்கில் ரூ. 18-க்குக் குறைந்த பற்றும், ஜமால் கணக்கில் ரூ 18 குறைத்து வரவும் வைக்கப் பட்டிருக்கும். இதை நீக்கத் தேவையான பதிவு :

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| கொள்முதல் க/கு ...... | ப | 18 | |
| ஜமால் ...... | | | 18 |

(கொள்முதலேட்டில் ரூ. 18 குறைத்துப் பதிந்ததை நீக்க.)

(x) இது ஒரு கொள்முதல் திருப்ப நடவடிக்கை. ஆனால் விற்பனை ஏட்டில் பதிவாகியுள்ளதால், நம்பி கணக்கில் ரூ. 75-க்குப் பற்றும், விற்பனைக் கணக்கில் ரூ. 75-க்கு வரவும் வைத்ததாகப் பொருள். கொள்முதல் திருப்பத் திற்கான பதிவு செய்யப்படவில்லை. நம்பி கணக்கில்

பற்றும் கொள்முதல் திருப்பக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும். முன்னரே நம்பி கணக்கில் பற்று வைக்கப் பட்டு விட்டதால், இப்பொழுது அதைச் செய்யத் தேவை யில்லை. விற்பனைக் கணக்கில் வைத்த வரவு நீங்க வேண்டும்; கொள்முதல் திருப்பக் கணக்கில் வரவு வைக்க வேண்டும்; இதற்குத் தேவையான பதிவு :

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| விற்பனைக் க/கு | ப | 75 | |
| கொள்முதல் திருப்பக் க/கு | | | 75 |

(விற்பனைக் கணக்கில் வைத்த தவறான பற்றைக் கொள்முதல் திருப்பக் கணக்கில் கொண்டுவர.)

## இடை நிலைக் கணக்கு அல்லது அனுமத்துக் கணக்கு (Suspense a/c.)

ஆண்டு இறுதியில் பேரேட்டுக் கணக்குகள் இருப்புக் கட்டப் படுகின்றன என்பதையும், அப் பற்றிருப்புகளையும் வரவிருப்புகளை யும் ஒன்று தொகுத்து இருப்புப் பட்டியல் (Trial Balance) தயாரிப் பது வழக்கமென்பதையும் கண்டோம். அவற்றின் கூட்டல் தொகைகள்—பற்றிருப்புகளின் கூட்டல் தொகையும் வரவிருப்பு கூட்டல் தொகையும் ஒன்றாக விருக்க வேண்டும். ஆனால் அவ்வா றில்லையானால், தவறு எங்கோ நிகழ்ந்து விட்டதென்று நோக்கிய வுடன் உணர்ந்து கொள்ளலாம். இது பற்றி அடுத்து வரும் அதிகாரத்தில் மேலும் விளக்குவோம்.

(இருப்புப் பட்டியலின் பற்றிருப்புகளின் கூட்டல் தொகையும் வரவிருப்புகளின் கூட்டல் தொகையும் ஒன்றாக வில்லையெனில் முதலில் 'இடைநிலைக் கணக்கென்று (அனுமத்துக் கணக்கு-Suspense a/c) ஒன்று தொடங்கி, இரண்டிற்கும் உள்ள வேற்றுமைத் தொகையை அதில் எழுதிடலாம். இக் கணக்கை 'ஏடுகளின் வேற் றுமைக் கணக்கு'(Difference in Books Account) என்றும் அழைப்பர். பற்றிருப்புகளின் கூட்டல் தொகை அதிகமிருக்குமாயின் இடை நிலைக் கணக்கில் வரவு வைக்க வேண்டும்; வர்விருப்புகளின் கூட்டல் தொகை அதிகமிருக்குமாயின் இக் கணக்கில் பற்று வைக்க வேண்டும். இவ்வாறு இடைநிலைக் கணக்கில் இத் தொகையைச் சேர்ப்பதால் இருப்புப் பட்டியல் சரியாகி விடும். இக் கணக்கு இருப்பு நிலைக் குறிப்பில் (Balance Sheet) எடுத்துச்செல்வது வழக்கம்.)

இடைநிலைக் கணக்கு தயாரிப்பதால், பிழைகள் சரியாகி விட்டன என்பது பொருளல்ல. பின்னர், கணக்குகள் மீண்டும் ஆயப்படுத்தத் தவறுகள் கண்டு பிடிக்கப்படுமாயின், அவை திருத் தப்பட்டு இக் கணக்கை முடித்திடலாம்.

மேலே விளக்கப்பட்ட பிழைகளில் இவற்றைத் திருத்தக் குறிப்பேட்டுப் பதிவுகள் தேவைப்பட்டன. ஆனால், சிலவற்றிற்கு அவை தேவைப்படவில்லை. பற்றுப் பகுதியில் மட்டும் அல்லது வரவுப் பகுதியில் மட்டும் தொகை எழுத வேண்டியிருந்தது. இத்தகைய பிழைகள்—பற்று வரவு என இரு கூறுகளில் ஒன்றில் மட்டும் ஏற்படும் பிழைகள்—இருப்புப் பட்டியலில் (Trial Balance) உள்ள பற்றிருப்புக் கூட்டுத் தொகையும் வரவிருப்புக் கூட்டல் தொகையும் மாறுபடக் காரணமாகும். அவ்வகைப் பிழைகளின் மொத்த விளைவே இவ்விடைநிலைக் கணக்கென்பது புலனாகும் எனவே, அவ்வாறு பிழையைத் திருத்த ஒரு குறிப்பிட்ட கணக்கில் மட்டும் பற்று வைக்க வேண்டியிருப்பின், இடைநிலைக் கணக்கில் அதே தொகைக்கு வரவு வைக்க வேண்டும். ஒரு குறிப்பிட்ட கணக்கில் மட்டும் வரவு வைக்க வேண்டியிருப்பின், இடைநிலைக் கணக்கில் அதே தொகைக்குப் பற்று வைக்க வேண்டும். இவ் வகையில் இத்தகைய பிழைகள் அனைத்தும் திருத்தப் பட்டு, இடை நிலைக் கணக்கில் பற்று, வரவு வைக்கப்படின், இறுதியில் இக் கணக்கு இருப்பு ஒன்றையும் காட்டாது—அனைத்துப் பிழைகளும் திருத்தப் பட்டுவிட்டன என்று பொருள்.

எடுத்துக்காட்டு 32ல் நடவடிக்கைகள் v, vi ஆகியவை மட்டிலுமே இடைநிலைக் கணக்கிற்கு எடுத்துச் செல்லத் தக்கவை; இடைநிலைக் கணக்கென்று ஒன்றிருக்குமாயின், கீழ்க்கண்டவாறு அக் கணக்கில் கொடுக்கப்பட்ட பிழைகளைத் திருத்தவேண்டும்:

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| (v) | தள்ளுபடிக் க/கு ... ப | 15 | |
| | இடைநிலைக் க/கு ... | | 15 |
| | (தள்ளுபடிப் பத்தி குறைத்துக் காட்டப் பட்டதைத் திருத்த.) | | |

| | | ரூ. | |
|---|---|---|---|
| (vi) | இடைநிலைக் க/கு ...ப | 500 | |
| | குமணன் ... | | 500 |
| | (குமணன் கணக்கில் வரவு வைப்பதற்கு மாறாகப் பற்று வைத்ததைத் திருத்த.) | | |

குறிப்பு: சில தேர்வுக் கணக்குகளில் இடைநிலைக் கணக்கில் வைக்கப்பட்ட இருப்புப் பட்டியலின் வேற்றுமைத் தொகையைக் கொடுக்காம லிருக்கலாம். அந் நிலையில் இங்கு விளக்கியவாறே, இடைநிலைக் கணக்கைத் தயாரித்து, இருபக்கங்களின் வேற்றுமைத் தொகையைக் (இருப்பை) குறைந்த கூட்டல் தொகையுடைய பகுதியில், முதல்வரியில் 'இருப்புப் பட்டியலின் வேறுபாடு' என்றெழுதிக் குறிக்க வேண்டும்.

எடுத்துக்காட்டு 33 :

துரையின் இருப்புப் பட்டியலில் பற்றிருப்புகள் ரூ. 521 அதிக மிருப்பதாய்க் காட்டவே, அதை இடைநிலைக் கணக்கிற்கு எடுத்துச் சென்றார். பின்னர்க் கீழ்க் கொடுக்கப்பட்ட பிழைகள் கண்டு பிடிக்கப்பட்டன. அவைகளைத் திருத்தி இடைநிலைக் கணக்கைத் தயார் செய்.

(i) செழியனுக்குத் திருப்பியனுப்பிய சரக்கு ரூ. 50 கொள் முதல் திருப்ப ஏட்டிலிருந்து எடுத்தெழுதும் போழ்து, செழியன்கணக்கில் வரவு வைக்கப்பட்டது.

(ii) செலுத்த வேண்டிய உண்டியல் ஏட்டின் மொத்தத் தொகை ரூ. 500 குறைத்துக் கூட்டப்பட்டது.

(iii) அன்பரசிடம் வாங்கிய சரக்கு ரூ. 350 விற்பனை ஏட்டில் பதிவாகியிருந்தது.

(iv) மாதவனுக்கு அளித்த தள்ளுபடி ரூ. 25 ரொக்க ஏட்டில் பதிவாகியும் அவர் கணக்கில் எடுத்தெழுதப்படவில்லை.

(v) தட்டெழுத்துப் பொறியைப் பழுது பார்த்த செலவு ரூ. 50, தட்டெழுத்துப் பொறிக் கணக்கில் பதிவாகி யிருந்தது.

(vi) முத்துவிடம் விற்ற சரக்கு ரூ. 258, கொள்முதல் ஏட்டில் ரூ. 282 ஆகப் பதிவாகியிருந்தது.

(vii) சரக்கு விற்றது ரூ 185 விற்பனைக் கணக்கில் ரூ. 158 ஆகப் பதிவாகியிருந்தது.

(viii) மேசை, நாற்காலி விற்றது ரூ. 180, விற்பனைக் கணக்கில் பதிவாகியிருந்தது.

(ix) கழிவு பெற்றது ரூ. 308, கழிவுக் கணக்கில் பற்று வைக்கப் பட்டது.

(x) தர்மனின் கணக்கிலிருந்து சென்ற ஆண்டு நீக்கப்பட்ட வராக்கடனென ரூ. 75 இவ்வாண்டில் பெற்றது. இது தர்மனின் கணக்கில் வரவு வைக்கப்பட்டது.

(xi) விற்பனைத் திருப்ப ஏட்டின் மொத்த தொகை ரூ. 582 விற்பனை திருப்பக் கணக்கில் ரூ. 285 ஆக எடுத்தெழுதப் பட்டது.

(xii) கண்ணனிடம் பெற்ற வாடகை ரூ. 150 இருமுறை வாடகைக் கணக்கில் எடுத்தெழுதப்பட்டிருந்தது.

(xiii) சாதிக்கிடம் வரவேண்டிய ரூ. 100 கடனாளிகள் பட்டிய வில் சேர்க்கப் படவில்லை.

விடை :

குறிப்பேடு

| நாள் | விவரம் | | பே பு எ | பற்று ரூ. | | வரவு ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|
| (i) | செழியன் | ப | | 100 | — | | |
| | இடைநிலைக் க/கு | | | | | 100 | — |
| | (செழியன் கணக்கில் வைத்த வரவு ரூ. 50– ஐப் பற்றாக மாற்ற) | | | | | | |
| (ii) | இடைநிலைக் க/கு | ப | | 500 | — | | |
| | செலுத்த வேண்டிய உண்டியல் க/கு | | | | | 500 | — |
| | (செலுத்த வேண்டிய உண்டியல் ஏடு ரூ. 500 குறைத்துக் கூட்டப் பட்டதை நீக்க—செலுத்த வேண்டிய உண்டியல் கணக்கில் ரூ. 500 குறைத்து வரவு வைக்கப் பட்டிருக்கும்.) | | | | | | |
| (iii) | கொள்முதல் க/கு | ப | | 350 | — | | |
| | விற்பனைக் க/கு | ப | | 350 | — | | |
| | அன்பரசு | | | | | 700 | — |
| | (அன்பரசிடம் ரூ. 350 சரக்கு வாங்கியதைக் விற்பனை ஏட்டில் பதிவு செய்ததை நீக்க.) | | | | | | |

| | குறிப்பேடு | | பற்று | | வரவு | |
|---|---|---|---|---|---|---|
| | | | ரூ. | | ரூ. | |
| (iv) | இடைநிலைக் க/கு ப<br>மாதவன்<br>(அளித்த தள்ளுபடியை மாதவன் கணக்கில் எடுத்தெழுத விட்டு விட்டதை நீக்க.) | | 25 | — | 25 | — |
| (v) | பழுது பார்க்குஞ் செலவுக் க/கு ப<br>தட்டெழுத்துப் பொறிக் க/கு<br>(தட்டெழுத்துப் பொறிக் கணக்கில் வைத்த பற்றை நீக்கவும், பழுது பார்க்குஞ் செலவுக் கணக்கில் பற்று வைக்கவும்.) | | 50 | — | 50 | — |
| (vi) | முத்து ப<br>கொள்முதல் க/கு<br>விற்பனைக் க/கு<br>(கடன் விற்பனைக் கொள்முதல் ஏட்டில் பதிவாகியது. கொள்முதல் கணக்கில் வைத்த பற்று ரூ. 282-ஐ நீக்கவும், முத்து கணக்கில் வைத்த ரூ. 282-க்கான வரவை ரூ. 258-க்கான பற்றாக மாற்றவும், விற்பனைக் கணக்கில் ரூ. 258 வரவு வைக்கவும்.) | | 540 | — | 282<br>258 | —<br>— |
| (vii) | இடைநிலைக் க/கு ப<br>விற்பனைக் க/கு<br>(விற்பனைக் கணக்கில் ரூ. 27 குறைத்து வரவு வைத்ததை போக்க.) | | 27 | — | 27 | — |
| (viii) | விற்பனைக் க/கு ப<br>மனைத்துணைப் பொருள் க/கு<br>(மேசை நாற்காலி விற்றது விற்பனைக் கணக்கில் பதிவாகியது. விற்பனைக் கணக்கில் வைத்த வரவை நீக்கவும், மனைத்துணைப் பொருள் கணக்கில் வரவு வைக்கவும்.) | | 180 | — | 180 | — |
| (ix) | இடைநிலைக் க/கு ப<br>கழிவுக் க/கு<br>(கழிவுக் கணக்கில் வைத்த தவறான பற்று ரூ. 308-ஐ நீக்கி ரூ. 308 வரவு வைக்க.) | | 616 | — | 616 | — |

| | குறிப்பேடு | பற்று | | வரவு | |
|---|---|---|---|---|---|
| | | | | ரூ. | |
| (x) | தர்மன் ப<br>திரும்பப் பெற்ற வராக்கடன் க/கு<br>(திரும்பப் பெற்ற வராக் கடனில் வரவு வைப்பதற்கு மாறாக, தர்மன் கணக்கில் வைத்த வரவைச் சரி செய்ய.) | 75 | — | 75 | — |
| (xi) | விற்பனைத் திருப்பக் க/கு ப<br>இடைநிலைக் க/கு<br>(விற்பனைத் திருப்பக் கணக்கில் ரூ. 297 குறைவாகப் பற்றுவைத்ததைச் சரி செய்ய.) | 297 | — | 297 | — |
| (xii) | வாடகைக் க/கு ப<br>இடைநிலைக் க/கு<br>(வாடகைக் கணக்கில் தவறாக இருமுறை வரவு வைத்ததை நீக்க.) | 150 | — | 150 | — |
| (xiii) | கடனாளிகள் ப<br>இடைநிலைக் க/கு<br>(சாதிக்கின் கணக்கு கடனாளிகள் பட்டியலில் விடப்பட்டிருந்ததைச் சரி செய்ய.) | 100 | — | 100 | — |

ப இடைநிலைக் கணக்கு வ

| | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| செலுத்த வேண்டிய உண்டியல் ... | 500 | — | இருப்புப் பட்டியலின் வேற்றுமைத் தொகை | 521 | — |
| மாதவன் ... | 25 | — | செழியன் ... | 100 | — |
| விற்பனை ... | 27 | — | விற்பனைத் திருப்பம் | 297 | — |
| கழிவு ... | 616 | — | வாடகை | 150 | — |
| | | | கடனாளிகள் ... | 100 | — |
| | 1,168 | — | | 1,168 | — |

விளக்கம் :

(iii) மூன்றாவது நடவடிக்கை, கொள்முதல் ஏட்டில் பதிவதற்கு மாறாக விற்பனை ஏட்டில் பதிந்துவிட்டனர். முதலில் விற்பனை ஏட்டில் பதிந்ததைத் திருத்தும் பதிவு:

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| விற்பனைக் க/கு | ... ப | 350 | |
| அன்பரசு | ... | | 350 |

கொள்முதல் ஏட்டில் இது எழுதப்படாததால் அதற்கான பதிவும் செய்ய வேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| கொள்முதல் க/கு | ... ப | 350 | |
| அன்பரசு | ... | | 350 |

இவ்விரு பதிவுகளையும் இணைத்துக் கீழ்க்கண்டவாறு விடையில் கொடுக்கப்பட்டிருக்கிறது.

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| கொள்முதல் க/கு | ... ப | 350 | |
| விற்பனைக் க/கு | ... ப | 350 | |
| அன்பரசு | ... | | 700 |

(vi) இந் நடவடிக்கையும் மேல் விளக்கியவாறே. அத்துடன் தொகையிலும் பிழை ஏற்பட்டுவிட்டது. முதலில் கொள்முதல் ஏட்டில் பதிந்ததை நீக்க :

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| முத்து | ... | 282 | |
| கொள்முதல் க/கு | ... | | 282 |

விற்பனை ஏட்டில் பதியவில்லை. அதற்கான பதிவு :

| | | | |
|---|---|---|---|
| முத்து | ... ப | 258 | |
| விற்பனை க/கு | ... | | 258 |

இவ்விரண்டையும் இணைத்துக் கூட்டுப் பதிவாக விடையில் கீழ்க்கண்டவாறு கொடுக்கப்பட்டிருக்கிறது.

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| முத்து க/கு ... | ப | 540 | |
| கொள்முதல் க/கு ... | | | 282 |
| விற்பனைக் க/கு ... | | | 258 |

வினாக்கள்

1. குறிப்பேடு இற்றை நாள்களில் எதற்குப் பயன்படுகிறது ?
2. 'தொடக்கப் பதிவுகள்' எனில் என்ன?
3. பிழைகளின் வகைகளை எடுத்துக்காட்டுகளுடன் விளக்குக.
4. 'இடைநிலைக் கணக்கு' (அனாமத்துக் கணக்கு-Suspense a/c) என்றால் என்ன ?

பயிற்சி

1. கீழே கொடுக்கப்பட்ட இருப்புகள் 31-12-1970-க்கானவை. அவற்றை 1971-ம் ஆண்டுக்குக் கொண்டுவரத் தேவையான பதிவுகளைத் தருக.

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| ரொக்கம் | | ... | 500 |
| இறுதிச் சரக்கிருப்பு | | ... | 2,300 |
| சைகிள் | | ... | 400 |
| தட்டெழுத்துப்பொறி | | ... | 900 |
| பற்றிருப்புகள் : | | | |
| இராமன் ... | | 300 | |
| இலக்குவன் ... | | 400 | |
| பரதன் ... | | 500 | 1,200 |
| வங்கி மேல்வரைப்பற்று | | ... | 2,300 |
| செலுத்த வேண்டிய உண்டியல்கள் | | | 900 |
| வரவிருப்புகள் : | | | |
| இராவணன் ... | | 300 | |
| வாலி ... | | 500 | 800 |
| முதல் ... | | | 1,300 |

2. கீழே கொடுக்கப்பட்ட பிழைகளை எவ்வாறு திருத்துவாய்?

(i) இளங்கோவிடம் வாங்கிய சரக்கு ரூ. 3,500 இறுதிச் சரக்கிருப்பில் சேர்த்துக்கொள்ளப்பட்டது. ஆனால், அவர் அனுப்பிய இடாப்பு ஆண்டு இறுதிக்குள் வந்து சேரவில்லை.

(ii) விற்பனை ஏடு ரூ. 1,000 குறைத்துக் கூட்டப்பட்டது.

(iii) கட்டடத்தைப் பழுது பார்க்கச் செய்த சிறு செலவு ரூ. 100 கட்டடக் கணக்கில் பதியப்பட்டது.

(iv) விற்பனை ஏட்டிலிருந்து வில்லாளன் கணக்கில் எடுத்தெழுதும் போது ரூ. 178 என்பது ரூ. 187 ஆகப் பதியப்பட்டது.

(v) மேசை, நாற்காலி விற்றது விற்பனைக் கணக்கில் எடுத்தெழுதப்பட்டது.

3. கீழே கொடுக்கப்பட்டவற்றிற்குத் திருத்தப் பதிவுகளைத் தருக.

(i) ரொக்க ஏட்டின் வரவுப் பகுதியில் உள்ள தள்ளுபடிப் பத்தி ரூ. 20 அதிகம் கூட்டப்பட்டது.

(ii) சோமுவிடம் விற்ற சரக்கு ரூ. 200, சோமசுந்தரத்திடம் விற்றதாக விற்பனை எட்டில் பதிவாகியிருந்தது.

(iii) கட்டடத்தை வெள்ளையடிக்க ஆன செலவு ரூ. 100 கட்டடக் கணக்கிற் கெடுத்துச் செல்லப் பட்டது.

(iv) பயணச் செலவு ரூ. 12, பயணச் செலவுக் கணக்கில் ரூ. 21 ஆகப் பதிவாகியிருந்தது.

(v) கூலி கொடுத்தது ரூ. 75, இருமுறை தவறாகக் கூலிக் கணக்கில் பற்று வைக்கப்பட்டது.

4. கீழ்க்கண்ட பிழைகளைத் திருத்துமுறை யாது?

(i) 30-6-1971-ல் தாமசின் கணக்கு ரூ. 565 வரவிருப்பைக் காட்டியது. அவ்விருப்பு இவ்வாண்டுக் கணக்கில் (1971-72) ரூ. 655 ஆகக் கொண்டுவரப்பட்டது.

(ii) வராக் கடன் என சென்ற ஆண்டு நீக்கிய ரூ. 111, இவ் வாண்டில் வேம்புவிடமிருந்து பெற்றது, அவர் கணக்கில் வரவு வைக்கப்பட்டது.

(iii) சைக்கிள் விற்றது ரூ. 215, விற்பனைக் கணக்கில் வரவு வைக்கப்பட்டது.

(iv) முகமது அலியிடம் வாங்கிய சரக்கு ரூ. 315, விற்பனைத் திருப்ப ஏட்டில் பதிவாகியது.

(v) கொள்முதலேடு ரூ. 100 அதிகம் கூட்டப்பட்டிருந்தது.

5. கீழ்க் கொடுக்கப்பட்டவற்றிற்குத் தேவையான திருத்தப் பதிவுகளைத் தருக.

(i) பழநியிடமிருந்து திரும்பி வந்த சரக்கு ரூ. 115, கொள் முதலேட்டில் ரூ 151 ஆகப் பதிவாகியிருந்தது.

(ii) செலுத்த வேண்டிய உண்டியல் ஏடு ரூ. 500 குறைத்துக் கூட்டப்பட்டது.

(iii) வாடகைபெற்றது ரூ. 100 வாடகைக் கணக்கில் பற்று வைக்கப்பட்டது.

(iv) அம்பலவாணன் அன் கோவிடம் அலுவலகத்திற்கு வாங்கிய நாற்காலிகள் ரூ. 250 கொள்முதலேட்டில் பதிவாகியிருந்தது.

(v) வில்லியமிடம் விற்ற சரக்கு ரூ. 458 ஷில்லியத்தின் கணக்கில் ரூ. 485 ஆக வரவு வைக்கப்பட்டது.

6. கீழே கொடுக்கப்பட்ட பிழைகளை எங்ஙனம் திருத்துவாய்?

(i) எழுது பொருள் ரூ. 80 க்கு வாங்கியது, பலவகைச் செல வுக்கு எடுத்துச் செல்லப்பட்டது.

(ii) செல்வத்திடம் வாங்கிய சரக்கு ரூ. 468 விற்பனை ஏட்டில் தவறுகப் பன்னீர்செல்வத்திடம் ரூ. 486-க்கு விற்றதாக எழுதப்பட்டிருந்தது.

(iii) பாண்டியன் திருப்பியனுப்பிய சரக்கு ரூ. 150 இறுதிச் சரக்கிருப்பில் சேர்த்துக் கொள்ளப்பட்டும், எவ்வேடுகளி லும் பதிவாகியிருக்க வில்லை.

(iv) திரவியத்துக்கு அளித்த தள்ளுபடி ரூ. 20 ரொக்க ஏட்டில் பதிவாகவில்லை. ஆனால், திரவியத்தின் கணக்கில் முழுத் தொகையும் (தள்ளுபடியுட்பட) வரவு வைக்கப்பட்டது.

(v) மறவனிடம் திருப்பியனுப்பிய சரக்கு ரூ. 50, மறவன் கணக்கில் வரவு வைக்கப்பட்டது.

(vi) கொள்முதல் திருப்ப ஏட்டின் கூட்டல் தொகை ரூ. 250, கொள்முதல் கணக்கிற் கெடுத்துச் செல்லப்பட்டது.

(vii) கழிவு பெற்றது ரூ. 135, வாடகைக் கணக்கில் ரூ. 153 ஆகப் பதிவாகியிருந்தது.

(viii) நல்லானிடம் வாங்கிய சரக்கு ரூ. 431, ரூ. 413-க்கு வாங்கியதாகக் கொள்முதலேட்டில் பதிவாகியிருந்தது. இந் நடவடிக்கை தவருக நம்பியின் கணக்கில் எடுத்தெழு தப்பட்டது.

7. இருப்புப் பட்டியலில் பற்றிருப்புகளின் கூட்டுத் தொகையும் வரவிருப்புகளின் கூட்டுத் தொகையும் வேறு பட்டிருக்கவே, அது இடைநிலைக் கணக்கிற்கு (அனுமத்துக் கணக்கு-Suspense a/c.) எடுத்துச் செல்லப்பட்டது. கணக்குகளை மீண்டும் ஆய்ந்ததில் கீழ்க் கண்டவை புலனாயின. அவற்றைத் திருத்தும் பதிவுகளைத் தந்து இடைநிலைக் கணக்கைத் தயாரிக்க.

(i) நாதன் கம்பனியிடம் பெற்ற தொகை ரூ. 175 ரொக்க ஏட்டில் பதிவாகியும் பேரேட்டுக் கணக்கிற்கு எடுத்துச் செல்லப்படவில்லை.

(ii) உரிமையாளர் தம் இல்லத்துக்கு வாங்கிய மேசைகள் ரூ. 300, மனைத்துணைப் பொருள் கணக்கில் சேர்க்கப் பட்டுள்ளது.

(iii) விற்பனைத் திருப்ப ஏட்டின் கூட்டல் தொகை ரூ. 100 அதிகம் கூட்டப்பட்டது.

(iv) நாதமுனியிடம் வாங்கிய சரக்கு ரூ. 500 விற்பனை ஏட்டில் பதிவாகியுள்ளது.

(v) கற்பகம் எம்போரியத்திடம் வாங்கிய சரக்கு ரூ. 250 கொள்முதலேட்டில் ரூ. 520 ஆகப் பதிவாகியிருந்தது.

ஆனால், கற்பகம் எம்போரியம் கணக்கில் சரியாக எழுதப் பட்டது.

(vi) எழுதுபொருள்கள் ரூ. 125-க்கு வாங்கியது வியாபாரச் செலவுக் கணக்கில் ரூ. 152 ஆக எடுத்தெழுதப்பட்டது.

(vii) தட்டெழுத்துப் பொறியைக் கடன் பேரில் விற்றது ரூ. 500, விற்பனை ஏட்டில் பதிந்து பேரேட்டுக் கணக்கில் எடுத்தெழுதப்பட்டது.

(viii) எந்திரம் நிறுவக் கொடுத்த கூலி ரூ. 200, கூலிக் கணக்கில் சேர்க்கப்பட்டது.

8. இருப்புப் பட்டியலில் பற்று இருப்புகள் ரூ. 1,250 அதிகமிருப்பதாகக் காட்டவே, இடைநிலைக் கணக்கில் அது எழுதப் பட்டது. பின்னர்க் கீழ்க் கொடுக்கப்பட்ட பிழைகள் கண்டு பிடிக்கப்பட்டன. தேவையான திருத்தப் பதிவுகளைத் தருக; இடைநிலைக் கணக்கையும் தயாரிக்க.

(i) இளவழகனிடம் வாங்கிய சரக்கு ரூ. 310, இளவழகன் கணக்கில் பற்று வைக்கப்பட்டது.

(ii) சேதுமணியிடம் பெற்ற தள்ளுபடி ரூ. 25 ரொக்க ஏட்டில் பதிவாகியும் பேரேட்டுக் கணக்கிற்கு எடுத்துச் செல்லப் படவில்லை.

(iii) செல்லப்பன் ரூ. 1,000-க்கு ஏற்ற உண்டியலை வங்கியில் தண்டலுக்கு (வசூல்-Collection) அனுப்பப்பட்டு, பண மறுக்கப்படத் திரும்பிவந்தது. இது வரவுடைய உண்டியல் கணக்கில் பற்று வைக்கப்பட்டது.

(iv) மரியதாசிடம் வாங்கிய சரக்கு ரூ. 358 அவர் கணக்கில் தவறாக ரூ. 538-க்குப் பற்று வைக்கப் பட்டிருந்தது.

(v) அபுபக்கரிடமிருந்து வரவேண்டியது ரூ. 250, கடனாளிகள் பட்டியலில் சேர்க்கத் தவறியது.

(vi) ரூ. 250 வீட்டுச் செலவுக்காக உரிமையாளர் எடுத்துக் கொண்டது வியாபாரச் செலவுக் கணக்கில் எடுத்தெழுதப் பட்டிருந்தது.

(vii) வட்டிக்காகப் பெற்ற ரூ. 125 வாடகைக்குப் பெற்றதென ரொக்க ஏட்டில் குறிப்பிடப் பட்டிருந்தது.

(viii) ரொக்க ஏட்டின் வரவுப் பகுதியில் உள்ள தள்ளுபடிப் பத்தி ரூ. 15 குறைத்துக் காட்டப்பட்டது.

(ix) சிவராமன் கணக்கில் ரூ. 120 பற்று வைப்பதற்கு மாருக விஷ்ணுராம் கணக்கில் பற்றுவைக்கப்பட்டது.

**9.** இருப்புப் பட்டியல் தயாரிக்கும் போழ்து, பற்றிருப்புகளும் வரவிருப்புகளும் வேறுபட்ட தொகைகளைக் காட்டவே இடைநிலைக் கணக்குத் தொடங்கி அதில் இத் தொகை எழுதப் பட்டது. கீழ்க் கண்ட பிழைகள் கண்டு பிடிக்கப்படவே, அவற்றுக் குத் தேவையான திருத்தப் பதிவுகளைத் தருக. இடைநிலைக் கணக்கையும் தயார் செய்க.

(i) இராசேந்திரன் அளித்த தள்ளுபடி ரூ. 15 அவர் கணக்கில் பற்று வைக்கப்பட்டும், ரொக்க ஏட்டில் தள்ளுபடிப் பத்தியில் எழுதத் தவறிவிட்டது.

(ii) இராமச் சந்திரனிடம் கழிவுக்காகப் பெற்ற தொகை ரூ. 215, அவர் கணக்கில் ரூ. 251 ஆக எடுத்தெழுதப் பட்டது.

(iii) கொள்முதல் திருப்ப ஏட்டின் கூட்டுத் தொகை ரூ. 512, விற்பனைத் திருப்பக் கணக்கிற் கெடுத்துச் செல்லப்பட்டது.

(iv) இராமசாமியிடம் விற்ற சரக்கு ரூ. 154, கொள்முதலேட்டில் இராதாவிடம் ரூ. 451-க்கு விற்றதாகப் பதிவாகியிருந்தது.

(v) இன்பநாதனிடம் வாங்கிய சரக்கு ரூ. 1,100 கொள் முதலேட்டில் ரூ. 100 ஆக எழுதப் பட்டிருந்தது.

(vi) ரொக்க ஏட்டின் பற்றுப் பகுதியில் உள்ள தள்ளுபடிப் பத்தியின் கூட்டல் தொகை ரூ. 35, தள்ளுபடிக் கணக்கில் ரூ. 53 ஆக வரவு வைக்கப் பட்டிருந்தது.

(vii) இஸ்மாயில் கணக்கு சென்ற ஆண்டிறுதியில் ரூ. 150 பற்றிருப்புக் காட்டியது. அதை இவ் வாண்டுக் கணக்கிற் கொண்டு வரும் போழ்து, அவர் கணக்கில் வரவுப் பக்கத் தில் அவ் விருப்பு எழுதப்பட்டது.

(viii) பொறியைக் கொண்டு வரச் செலுத்திய இரயில் கட்டணம் ரூ. 200, இரயில் கட்டணக் கணக்கில் பதிவாகியிருந்தது.

(ix) விற்பனைத் திருப்ப ஏடு ரூ. 50 அதிகம் கூட்டப் பட்டிருந்தது.

(x) அலமாரி செய்யக் கொடுத்தக் கூலி ரூ. 100, கூலிக் கணக்கிற்கு எடுத்துச்செல்லப்பட்டிருந்தது.

10. கீழ்க் கண்ட பிழைகளை எவ்வாறு திருத்துவாய் ?

(i) வில்லியத்திடம் பெற்ற வட்டி ரூ. 100, அவர் கணக்கில் வரவு வைக்கப்பட்டிருந்தது ?

(ii) 'B' யிடமிருந்து சரக்கு வாங்கியது ரூ. 500, தவருக கொள்முதல் திருப்ப ஏட்டில் பதிவாகியிருந்தது.

(iii) ரொக்க ஏட்டில் பற்றுப் பகுதியிலுள்ள தள்ளுபடிப் பத்தி ரூ. 25 குறைத்துக் கூட்டப்பட்டிருந்தது.

(iv) 'R' இடம் விற்ற சரக்கு ரூ. 413, விற்பனை ஏட்டில் ரூ. 430 ஆகப் பதிவாகியிருந்தது.

(v) பொறி நிறுவதற்குச் செலவழித்த தொகை ரூ. 1,200 கூலிக் கணக்கிற்கு எடுத்துச்செல்லப்பட்டது.

(Calicut University-Pre Degree-Oct. 1970)

11. ஒரு தனியாள் வணிகரின் 1968 டிசம்பர் 31-ற்கான இருப்புப் பட்டியலைத் தயாரிக்கும் போழ்து கீழ்க்கண்ட பிழைகள் கண்டுபிடிக்கப்பட்டன. பிழை திருத்தப் பதிவுகளைத் தந்து, அப் பிழை ஒவ்வொன்றும் நீக்கப் படுமுன், எந்த அளவில் அவ் வாண்டின் இலாப-நட்டக் கணக்கைப் பாதிக்கும் என்பதைக் கூறுக.

(i) தீயிலழிந்த சரக்குக்கென ஈட்டுறுதிக் கம்பனியிடம் நட்ட ஈடாகப் பெற்ற காசோலை ரூ. 5,000 முதல் கணக்கில் வரவு வைக்கப்பட்டது.

(ii) பழுது பார்க்குஞ் செலவில் சேர்க்கப் பட்டிருந்த ரூ. 2,000 ஆலையில் கொட்டகை (shed) கட்டுவதற்கான தாகும்.

(iii) இராமனுக்குக் கொடுத்த ரூ. 500, ஷ்யாமின் கணக்கில் பற்று வைக்கப்பட்டது.

(iv) தன் சொந்தப் பயனுக்கு வாங்கிய மனைத்துணைப் பொருள் ரூ. 3,000, மனைத்துணைப் பொருள் கணக்கில் பற்று வைக்கப் பட்டது.

(Company Secretaries Exam. Preli. April, 1969)

12. 1964-ம் ஆண்டு சாஸ்திரி அன்கோ ஏடுகளில் கீழ்க்கண்ட பிழைகள் கண்டுபிடிக்கப்பட்டன. இப் பிழைகளை நீக்கத் தேவையான சரிக்கட்டும் பதிவுகளைத் தருக.

(i) 1964 டிசம்பர் 31-ல் காசிநாதனிடம் பெற்ற ரூ. 200. 1965 டிசம்பர் 1-ம் நாள் ரொக்க ஏட்டில் பதிவு செய்யப் பட்டது.

(ii) வெளித்திருப்ப ஏட்டில் டிசம்பருக்கான பக்கம் ரூ. 100 குறைத்துக் கூட்டப்பட்டது.

(iii) ரூ. 600-க்கு வாங்கிய அலுவலக மேசை கொள்முதல் ஏட்டில் பதியப் பெற்றது.

(iv) காட்சிப் பெட்டிகள் (Show cases) செய்யக் கொடுத்த கூலி ரூ. 525, கூலிக் கணக்கிற்கு எடுத்துச் செல்லப் பட்டிருந்தது.

(v) ரூ. 379-க்கான கொள்முதல், கொள்முதல் ஏட்டில் எழுதப் பெற்றும் கடனீந்தோர் கணக்கில் ரூ. 307 ஆக வரவு வைக்கப்பட்டது.

(vi) பிக்காஜியிடமிருந்து பெற்ற வரவுடைய உண்டியலுக்குரிய நாளில் பண மறுக்கப்பட்டுத் தள்ளுபடிக் கணக்கில் வரவு வைக்கப்பட்டது.

(vii) கூட்டாளிகளில் ஒருவர்க்காக ரூ. 750 கொடுத்து வாங்கிய மோட்டார் சைக்கிள் பல்வகைச் செலவுக் கணக்கில் பற்று வைக்கப்பட்டது.

(viii) ரூ. 150 மதிப்புள்ள சரக்கை வாடிக்கையாளர் ஒருவர் திருப்பியனுப்பிவிட்டார். சரக்கிருப்பில் அது சேர்க்கப் பட்டும் ஏடுகளில் அது பதிவாகவில்லை.

(ix) சென் அவர்களிடம் விற்ற சரக்கு ரூ. 200 அவர் கணக்கில் தவறாக வரவு வைக்கப்பட்டிருந்தது.

(x) விற்பனைத் திருப்ப ஏட்டின் நவம்பர் திங்கட்கான பக்கம் ரூ. 75 அதிகம் கூட்டப்பட்டது,

(CAIIB-1965)

13. டெக்ஸ்மாஸ் கம்பனியின் (தனி வரையறுக்கப்பட்டது) 31-12-1969-க்கான இருப்புப்பட்டியல் வேறுபட்ட கூட்டுத் தொகைகளைக் காட்டியது. கீழ்க் கண்டவை கண்டுபிடிக்கப் பட்டன:

(i) விற்பனை ஏடு ரூ. 3,000 அதிகம் கூட்டப் பட்டிருந்தது.

(ii) ஸிஸ்கோவிடமிருந்து பெற்ற ரூ.1,000, திஸ்கோ கணக்கில் வரவு வைக்கப்பட்டது.

(iii) கடனீந்தோர் ஒருவரின் இருப்பு ரூ. 345, ஆனால் இது ரூ. 1,345 ஆக எடுத்துக் கொள்ளப்பட்டது.

(iv) ரூ. 9,184-க்கான விற்பனைச் சீட்டு (Sales Bill) தவறாக வாடிக்கையாளர் கணக்கில் ரூ. 9,810-ஆகப் பற்று பட்டது.

(v) கொள்முதல் ஏடு ரூ. 1,000, குறைவாகக் கூட்டப்பட்டது.

(vi) தட்டெழுத்துப் பொறி ரூ. 2,000 வாங்கப்பட்டது. இதன் இடாப்பு கொள்முதல் கணக்கில் பற்று வைக்கப் பட்டிருந்தது.

மேற் சொன்ன தவறுகளை நீக்கக் குறிப்பேட்டுப் பதிவுகளைத் தந்து இப் பிழைகள் ஒவ்வொன்றும் இருப்புப்பட்டியலைப் பாதிக்குமா என்பதையும் கூறுக.

(Company Secretaries Exam. Preli. April, 70)

14. இடைநிலைக் கணக்கு என்றால் என்ன? அது எப்போது தொடங்கப் பெறுகிறது.

இருப்புப் பட்டியலின் பற்றுப் பகுதி ரூ. 1,669-37 குறைவாக இருக்கவே இடைநிலைக் கணக்கிற்கு எடுத்துச்செல்லப்பட்டது. பின்னர்க் கீழ்க்கண்ட பிழைகள் வெளியாயின :

(i) மோகன் திருப்பியனுப்பிய சரக்கு ரூ. 100 விற்பனைத் திருப்ப ஏட்டில் பதிவாகியும் அவர் கணக்கில் எடுத்து எழுதப்படவில்லை,

(ii) தள்ளுபடி பெற்றது ரூ. 100-37 அதிகம் கூட்டப் பெற்றது.

(iii) வட்டிக் கணக்கின் வரவிருப்பு ரூ. 200 இருப்புப் பட்டியலில் பற்றுப் பகுதியில் எழுதப்பட்டது.

(iv) ராமன் கணக்கில் ரூ. 130 பற்று வைப்பதற்கு மாறாக ஹரியின் கணக்கில் பற்று வைக்கப்பட்டது.

(v) தயாள்பாடு ஸ்டோர்ஸுக்குக் கொடுத்தாக ரொக்க ஏட்டில் காணப்படும் தொகை ரூ. 734-50 ஸ்டோர்ஸ் கணக்கில் வரவு வைக்கப் பெற்றிருந்தது.

(vi) மனைத்துணைப் பொருள் கணக்கு ரூ. 400 இருப்புப் பட்டியலுக்குக் கொண்டுவரப் படவேயில்லை..

(vii) கொள்முதல் ஏடு ரூ. 100 குறைத்துக் காட்டப் பட்டிருந்தது.

(viii) ஊதியக் கணக்கு ரூ. 4,100 இருப்புப் பட்டியலில் ரூ. 4,000 எனப் பதியப் பட்டிருந்தது.

(ix) பொறி ஒன்றை விற்றுப் பெற்ற ரூ. 2,000 விற்பனைக் கணக்கில் வரவு வைக்கப் பட்டிருந்தது.

மேற் சொன்ன பிழைகளைத் திருத்தும் குறிப்பேட்டுப் பதிவுகளைத் தந்து இடைநிலைக் கணக்கைத் தயாரிக்க.

(Sagar I Com)

15. இருப்புப் பட்டியலில் காணப்பட்ட வேற்றுமைத் தொகை இடைநிலை கணக்கிற்கு (suspense a/c) எடுத்துச் செல்லப் பட்டது. தேவையான திருத்தப் பதிவுகளைத் தருக.

கீழ்க் கண்ட பிழைகள் பின்னர்க் கண்டுபிடிக்கப்பட்டன. இடைநிலைக் கணக்கையும் தயாரிக்க.

(i) J அன் ஸன்ஸிடம் திரும்பி வந்த சரக்கு ரூ. 90, தவறாக விற்பனை ஏட்டில் பதிவாகியிருந்தது.

(ii) B-யிடம் கடன் பேரில் விற்ற சரக்கு ரூ. 120, விற்பனை ஏட்டிலிருந்து தவறாக B-யின் கணக்கில் வரவு வைக்கப் பட்டது.

(iii) H அன்கோவிடம் பெற்ற ரூ. 450-க்கான வரவுடைய உண்டியல் அவர்கள் கணக்கில் ரூ. 1,044 ஆக வரவு வைக்கப்பட்டது.

(iv) நவம்பர் திங்களில் வெளித் திருப்ப ஏட்டில் ஒரு பக்கத்தின் மொத்த தொகை ரூ. 610 தவறாக ரூ. 700 என்று அடுத்த பக்கத்தில் எடுத்துச் செல்லப்பட்டது.

(v) வெளித்திருப்ப ஏட்டின் டிசம்பர் திங்கள் மொத்தத் தொகை ரூ. 200 குறைத்துக் கூட்டப்பட்டது.

(vi) டிசம்பர் 26-ல் W பிரதர்ஸிடம் திரும்பப் பெற்ற சரக்கு ரூ. 110 உட்திருப்ப ஏட்டில் பதிவாகவில்லை. ஆனால் இச் சரக்கு இறுதிச் சரக்கிருப்பில் சேர்த்துக் கொள்ளப் பட்டது.

(vii) டிசம்பர் 25-ல் G அன்ஸிடம் ரூ. 950-க்குச் சரக்கு வாங்கப் பட்டது. ஆனால் இச் சரக்கு வழியில் வந்துகொண்டிருந் ததால், அடுத்த சனவரி 7-ஆம் நாளன்றுதான் வந்து சேர்ந்தது.

(viii) விற்பனை ஏட்டிலிருந்து L. அன்கோவின் கணக்கில் ரூ. 350-க்குப் பதிலாக ரூ. 314 ஆகப் பற்று வைக்கப் பட்டது.

(ix) விற்பனை ஏட்டில் செப்டம்பர் திங்கட்கான கூட்டல் தொகை ரூ. 2,000 அதிகம் கூட்டப்பட்டது.

(x) S அன்கோவிடம் ரொக்கத்திற்கு விற்ற சரக்கு ரூ. 180, பேரேட்டில் அவர் கணக்கில் வரவு வைக்கப்பட்டிருந்தது.

(xi) தட்டெழுத்துப் பொறி ரூ. 750-க்கு வாங்கியது பல்வகைச் செலவு கணக்கில் பற்று வைக்கப்பட்டது.

(xii) முன் கூட்டிச் செலுத்தப் பட்டிருந்த தொகை ரூ. 250 சென்ற ஆண்டிலிருந்து இவ்வாண்டுக் கணக்கிற்கு எடுத்து வரத் தவறிவிட்டது.

(xiii) R அன்கோவின் கணக்கில் வரவு வைக்கப்பட்ட தள்ளுபடி ரூ. 40, ரொக்க ஏட்டில் தள்ளுபடிப் பத்தியில் பதிவு செய்யப் படவில்லை.

(xiv) பழைய பொறியொன்று ரூ. 680-க்குக் கடன்பேரில் விற்றது விற்பனை ஏட்டில் பதிவாகியிருந்தது.

(xv) W அன்கோவிடம் கடனுக்கு வாங்கிய சரக்கு ரூ. 310 அவர் கணக்கில் ரூ. 31 ஆக வரவு வைக்கப் பட்டது.

(xvi) விற்பனைத் திருப்பம் ரூ. 60 விற்பனைத் திருப்ப ஏட்டி லிருந்து வாடிக்கையாளர் கணக்கில் வரவு வைப்பதற்கு மாறாக விற்பனை ஏட்டில் எழுதப்பட்டு அங்கிருந்து வாடிக்கையாளர் கணக்கில் வரவு வைக்கப்பட்டது.

(CAIIB. Feb. 1966.)

# 9. இருப்புப் பட்டியல்

## இருப்புச் சோதனை— (Trial Balance)

ஒவ்வொரு பற்றுப் பதிவுக்கும் தொடர்பான ஒரு வரவுப் பதிவு உண்டு என்பதே இரட்டைப் பதிவு முறைக் கணக்குப் பதிவியலின் அடிப்படையாகும் என்று கண்டிருக்கிறோம். அதாவது, எந்நடவடிக்கையும் இரு கணக்குகளில் பதிவாகின்றன என்பதை உணர்ந்திருக்கிறோம். எடுத்துக்காட்டாக, விற்பனை ஏட்டின் மொத்தத் தொகை விற்பனைக் கணக்கில் வரவு வைக்கப்படும் போழ்து, விற்பனை ஏட்டில் காணப்பெறும் ஆள்சார் கணக்குகள் ஒவ்வொன்றிலும் தனித்தனியே பற்று வைக்கப்படுகின்றன. இவ்வாறு பற்று வைக்கப்படும் தொகைகளின் கூட்டுத் தொகையும் விற்பனைக் கணக்கில் வரவுவைக்கப்படும் தொகையும் சமமாகவே இருக்கும். இதிலிருந்து நாம் அறிவது: எல்லாக் கணக்குகளின் பற்றுப் பகுதிகளின் கூட்டுத் தொகையும், எல்லாக் கணக்குகளின் வரவுப் பகுதிகளின் கூட்டுத்தொகையும் ஒன்றாக இருக்க வேண்டும். ஒவ்வொரு கணக்கையும் இருப்புக் கட்டுகிறோம். சில கணக்குகள் பற்றிருப்பைக் காட்டும்; சில வரவிருப்பைக் காட்டும்; சில இருப்பு ஒன்றையும் காட்டாது. பற்றிருப்பு களின் கூட்டுத் தொகையும் வரவிருப்புகளின் கூட்டுத் தொகையும் ஒன்றாக விருக்க வேண்டும் என்பதும் இதிலிருந்து புலனாகும். அவ்வாறில்லையாயின், தவறு எங்கோ நிகழ்ந்து விட்டது என்பது பொருள். எடுத்தெழுதும் போழ்து தவறான தொகையை எழுதிவிடினோ அல்லது ஒரு கணக்கில் நடவடிக்கை எழுதப்பெற்று, அதற்குத் தொடர்பான பிறிதொரு கணக்கில் எழுதப்படாவிடினோ, பற்றிருப்புகளின் கூட்டுத்தொகையும் வர விருப்புகளின் கூட்டுத் தொகையும் வெவ்வேறாக இருக்கும்.

ஆண்டு இறுதியில் கணக்குகளை முடித்து, நடத்திவந்த தொழிலின் நிலையுணரவும், விளைவு என்ன என்பதை அறியவும்

வேண்டு மல்லவா? அவற்றை அறிய உதவும் இறுதிக் கணக்குகட்கு ஆதாரமாக இருக்கும் இருப்புப் பட்டியலைத் தயார் செய்வது வழக்கம். இருப்புப் பட்டியலாவது, கணக்குகள் காட்டும் பற்றிருப்புகளையும் வர விருப்புகளையும் ஒன்றாய்த் திரட்டித் தயார் செய்யும் பட்டியலைக் குறிக்கும். இருப்புப் பட்டியலால் உண்டாகும் நன்மைகளைப் பிறகு ஆய்வோம். இருப்புப் பட்டியல் இருமுறைகளில் தயாரிக்கப்படுகிறது.

முதல் முறை:

குறிப்பேட்டிற்குரிய கோடுகளிடப்பட்ட தனித்தாள்களில் இதைத் தயாரிக்கலாம். பேரேட்டுப் பக்க எண்ணைக் குறித்துக் கொண்டு கணக்கின் பெயரை விவரப்பத்தியின் கீழ் எழுதிக் கொள்ளலாம். ஒவ்வொருக் கணக்கின் பற்றுப் பகுதியின் கூட்டல் தொகையைக் கண்டு பிடித்துப் பற்றுப் பத்தியின் கீழும், வரவுப் பகுதியின் கூட்டல் தொகையை வரவுப் பத்தியின் கீழும் குறித்தால் போதும். கணக்கேடுகள் சரிவரப் பதியப் பட்டிருப்பின், இவ்விரு பத்திகளின் கூட்டுத் தொகைகளும் ஒன்றாகவே இருக்கும்.

மாதிரி :

*30-6-1971*-க்கான இரத்தினத்தின் இருப்புப் பட்டியல்.

| வரிசை எண் | கணக்கின் பெயர் | பே. ப. எ. | கூட்டல் தொகை | |
|---|---|---|---|---|
| | | | பற்று ரூ. | வரவு ரூ. |
| 1 | இரத்தினத்தின் முதல் க/கு ... | | ... | 8,500 |
| 2 | இரத்தினத்தின் எடுப்புக் க/கு ... | | 500 | ... |
| 3 | கொள்முதல் ... | | 6,700 | ... |
| 4 | விற்பனை ... | | ... | 12,300 |
| 5 | மனைத்துணைப் பொருள் ... | | 1,950 | ... |
| 6 | சைக்கிள் ... | | 400 | ... |
| 7 | விளம்பரச் செலவு ... | | 480 | ... |
| 8 | கூலி ... | | 1,200 | ... |

| வரிசை எண் | கணக்கின் பெயர் | பே. ப எ. | கூட்டல் தொகை | |
|---|---|---|---|---|
| | | | பற்று ரூ. | வரவு ரூ. |
| | | | ரூ. | ரூ. |
| 9 | ஊதியம் ... | | 2,500 | ... |
| 10 | வட்டி ... | | 100 | ... |
| 11 | தள்ளுபடி ... | | 75 | ... |
| 12 | பொன்னுசாமி ... | | 7,504 | 8,754 |
| 13 | தங்கராஜ் கம்பனி ... | | 4,611 | 5,456 |
| 14 | வைரமணி பிரதர்ஸ் ... | | 3,879 | 3,879 |
| 15 | வாடகை ... | | 360 | ... |
| 16 | இலாப ஈவு ... | | | 50 |
| 17 | கொள்முதல் திருப்பம் ... | | | 200 |
| 18 | விற்பனைத் திருப்பம் ... | | 100 | ... |
| 19 | முதலீடு ... | | 3,500 | ... |
| 20 | செலுத்த வேண்டிய உண்டியல் ... | | 1,500 | 1,870 |
| 21 | கடன் ... | | 5,000 | 5,000 |
| 22 | வங்கி ... | | 10,750 | 11,980 |
| 23 | ரொக்கம் ... | | 31,128 | 30,978 |
| 24 | மரகதம் கம்பனி ... | | 5,345 | 5,345 |
| 25 | உள்சுமை கூலி ... | | 30 | ... |
| 26 | மாணிக்கம் ... | | 9,553 | 7,843 |
| 27 | எழுது பொருள் ... | | 140 | ... |
| 28 | கற்பகம் ஸ்டோர்ஸ் ... | | 6,795 | 4,375 |
| 29 | சரக்கிருப்பு | | 2,430 | |
| | | | 1,06,530 | 1,06,530 |

இரண்டாவது முறை:

இவ்வாறு கணக்குகளின் இருபகுதிகளின் கூட்டல் தொகைகளைத் திரட்டி இருப்புப் பட்டியல் தயார் செய்வதற்கு மாறுகக் கணக்குகளின் இருப்புகளைத் தொடுத்துத் தயார் செய்யும் முறைதான் பரவலாக உள்ளது. மேற்காட்டிய இருப்புப் பட்டியலை இருப்புகளைக் கொண்டு தயார் செய்யும்முறை கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

| வரிசை எண் | கணக்குகளின் பெயர் | பே. ப. எ. | இருப்புகள் பற்று ரூ. | இருப்புகள் வரவு ரூ. |
|---|---|---|---|---|
| 1 | இரத்தினத்தின் முதல் க/கு ... | | ... | 8,500 |
| 2 | இரத்தினத்தின் எடுப்புக் க/கு ... | | 500 | |
| 3 | கொள்முதல் ... | | 6,700 | |
| 4 | விற்பனை ... | | ... | 12,300 |
| 5 | மனைத்துணைப் பொருள் ... | | 1,950 | |
| 6 | சைகிள் ... | | 400 | |
| 7 | விளம்பரச் செலவு ... | | 480 | |
| 8 | கூலி ... | | 1,200 | |
| 9 | ஊதியம் ... | | 2,500 | |
| 10 | வட்டி ... | | 100 | |
| 11 | தள்ளுபடி .. | | 75 | |
| 12 | பொன்னுசாமி ... | | ... | 1,250 |
| 13 | தங்கராஜ் கம்பனி ... | | ... | 845 |
| 14 | வாடகை ... | | 360 | |
| 15 | இலாப ஈவு ... | | ... | 50 |
| 16 | கொள் முதல் திருப்பம் ... | | ... | |

| வரிசை எண் | கணக்கின் பெயர் | பே. ப. எ. | இருப்புகள் பற்று ரூ. | இருப்புகள் வரவு ரூ. |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| 17 | விற்பனைத் திருப்பம் ... | | 100 | |
| 18 | முதலீடு ... | | 3,500 | |
| 19 | செலுத்த வேண்டிய உண்டியல்கள் ... | | ... | 370 |
| 20 | வங்கி ... | | ... | 1,230 |
| 21 | ரொக்கம் ... | | 150 | |
| 22 | உள்சுமை கூலி ... | | 30 | |
| 23 | மாணிக்கம் ... | | 1,710 | |
| 24 | எழுது பொருள் ... | | 140 | |
| 25 | கற்பகம் ஸ்டோரிஸ் ... | | 2,420 | |
| 26 | சரக்கிருப்பு ... | | 2,430 | |
| | | | 24,745 | 24,745 |

மேற்கூறிய எடுத்துக் காட்டில் 'கடனீந்தோர்' (Creditors) என்ற ஒரே தலைப்பில் கீழ்க் கண்டோரைக் குறிப்பிடலாம்.

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| பொன்னுசாமி | ... | 1250 | |
| தங்கராசு கம்பனி | ... | 845 | 2095 |

அவ்வாறே, 'கடனாளிகள்' என்ற தலைப்பில் ரூ. 4130-ஐ எழுதிடலாம்.

| | ரூ. | ரூ. |
|---|---|---|
| மாணிக்கம் | 1,710 | |
| கற்பகம் ஸ்டோர்ஸ் | 2,420 | 4,130 |

மேல் விளக்கியவாறு கணக்கேடுகளில் ஏற்படும் தவற்றை அறிய இருப்புப்பட்டியல் உதவுகிறது. எண்ணற்ற நடவடிக்கைகள் நாள்தொறும் நிகழும் தொழில், வணிக நிறுவனங்களில் ஒரு சில பதிவுகளில் தவறேற்படுவது தவிர்க்க முடியாத ஒன்றாகும். இருப்புப் பட்டியல் தயாரிப்பதில் ஒரு சில பிழைகள் இருப்பதை

உணரும் வாய்ப்புண்டு. இருப்புப் பட்டியலில் உள்ள பற்றிருப்பு களின் கூட்டல் தொகையும் வரவிருப்புகளின் கூட்டல் தொகையும் ஒத்திருக்குங் காரணத்தாலேயே கணக்குகள் அனைத்தும் சரிவர எழுதப்பட்டுள்ளன என்றோ, பிழைகள் ஏதும் இல்லை என்றோ கொள்ளக் கூடாது. ஏனெனில் ஏற்படும் சிலவகையான பிழைகளை இருப்புப்பட்டியலும் வெளிக்காட்டாது. இவை பற்றிக் கீழே விளக்குவோம்.

இருப்பு பட்டியல் உணர்த்தும் பிழைகள் :

எவ்வகைப் பிழைகள் ஒரு கணக்கை மட்டும் பாதிக்குமோ அவற்றை இருப்புப் பட்டியல் உணர்த்தும். அதாவது அப் பிழை களின் காரணமாய்ப் பற்றிருப்புகளும் வரவிருப்புகளும் ஒரே தொகையைக் காட்டாது.

1. பேரேட்டுக் கணக்கில் தவறான பகுதியில் எடுத்தெழுதுதல்.

எடுத்துக்காட்டாக, வட்டி பெற்றது ரூ. 100 என்ற நடவடிக் கையைச் சரியாக ரொக்க ஏட்டில் பற்று வைத்திருப்பதாகக் கொள் வோம். ரொக்க ஏட்டிலிருந்து எடுத்தெழுதும் போழ்து, வட்டிக் கணக்கில் வரவு வைப்பதற்குப் பதிலாகப் பற்று வைத்துவிட்டால், இப் பிழை இருப்புப் பட்டியலைப் பாதிக்கும். பற்றிருப்புகள் ரூ. 200 அதிகம் காட்டும்.

2. எடுத்தெழுதும் போழ்து தவறான தொகையை எழுதுதல்.

இதுவும் இருப்புப் பட்டியலில் வேற்றுமையை உண்டாக்கும். எழுதுபொருள் வாங்கியது ரூ. 215 என்பது ரொக்க ஏட்டில் ரூ. 215 வரவு வைக்கப்பட்டிருக்கும். எழுதுபொருள் கணக்கில் ரூ. 215-க்கு மாறாக ரூ. 251-க்குப் பற்று வைத்திருப்பின், இருப்புப் பட்டியலில் பற்றுப் பகுதிகள் ரூ. 36 அதிகங் காட்டும்.

3. துணையேட்டிலிருந்து பேரேட்டுக் கணக்கில் எடுத்தெழுத விட்டு விடல்.

பெரியண்ணனிடம் வாங்கிய சரக்கு ரூ. 500, கொள்முதலேட் டில் பதியப்பட்டும் பெரியண்ணன் கணக்கில் வரவு வைக்கவில்லை என்று கொள்வோம். கொள்முதலேட்டின் கூட்டுத் தொகை கொள்முதல் கணக்கில் பற்று வைக்கப்படுகிறது; அதற்கான வரவு பெரியண்ணன் கணக்கில் வைக்கப்படாததால், இருப்புப் பட்டிய லில் பற்றுப் பகுதி ரூ. 500 அதிகமிருக்கும். துணையேடுகளில் எழுதப்படுவதால் அத் துணையேட்டுக் கணக்குகளில் மட்டும் பற்றோ வரவோ வைக்கப்படுகிறது. அவற்றின் தொடர்புற்ற ஆள்சார்

அல்லது பிற கணக்குகளில் எடுத்தெழுதவில்லை யென்றால், இரட்டைப் பதிவு முறை பின் பற்றப்பட வில்லையென்று பொருள். இதனால் இருப்புப் பட்டியலில் பற்றிருப்புகளும் வரவிருப்புகளும் வேறுபட்ட கூட்டுத் தொகையைக் காட்டும்.

4. துணையேட்டில் தவறாகக் கூட்டல்.

துணையேட்டின் கூட்டுத் தொகை அத் துணையேட்டுக் கணக்கில் பற்றோ வரவோ வைக்கப்படுகிறது. குறைத்துக் கூட்டியிருப்பின், பற்று அல்லது வரவு குறைந்தும் அதிகங் கூட்டிருப்பின், பற்று அல்லது வரவு அதிகமாயும் இருப்புப் பட்டியலில் காணப்படும். எடுத்துக்காட்டாக, விற்பனை ஏட்டின் கூட்டுத் தொகை ரூ. 200 அதிகங் கூட்டப்பட்டிருப்பின், விற்பனைக் கணக்கில் ரூ. 200 அதிகம் வரவு வைக்கப்ப்ட்டிருக்கும். இருப்புப் பட்டியலில் வரவிருப்புகளின் கூட்டுத் தொகை ரூ. 200 அதிகமிருக்கும், [ஆள்சார் கணக்குகளில் தனித்தனியே பற்று வைக்கப்படுவதால் அவற்றில் தவறு ஏற்படவில்லை.]

5. கணக்கு ஒன்றை இருப்புக் கட்டுவதில் ஏற்படும் தவற்றையும் இருப்புப் பட்டியல் உணர்த்தும்.—காரணம் ஒரு கணக்கின் இருப்பு மட்டும் கூடுதலாகவோ, குறைவாகவோ இருக்கும்.

6. பேரேட்டிலிருந்து ஒரு கணக்கின் இருப்பை இருப்புப் பட்டியலுக்கு எடுத்துச் செல்லவில்லையெனினும், பற்றிருப்புகளின் கூட்டுத் தொகையும் வரவிருப்புகளின் கூட்டுத் தொகையும் மாறுபடும். எடுத்துக்க்ாட்டாக, சுமை கூலி எனுங் கணக்கு ரூ. 100 பற்றிருப்பைக் காட்டுவதாகக் கொள்வோம். இதனை இருப்புப் பட்டியலுக்குக் கொண்டு செல்லவில்லையெனின் பற்றிருப்புகளின் கூட்டுத் தொகை ரூ. 100 குறைந்து காணப்படும்.

7. இருப்புப் பட்டியலில் ஒரு கணக்கின் இருப்பை மாற்றி எழுதிவிடினும் கூட்டுத் தொகை மாறுபடும். எடுத்துக் காட்டாக, முதல் கணக்கு ரூ. 10,000 வரவிருப்பைக் காட்டின் அதைப் பற்றுப் பகுதியில் எழுதிவிடின், வரவுப் பகுதி ரூ. 20,000 குறைந்து காணப்படும்.

மேற்கூறிய இவ்வகைப் பிழைகளால், இருப்புப் பட்டியலில் உள்ள பற்றிருப்புகளும் வரவிருப்புகளும் சமமான கூட்டுத் தொகைகளைக் காட்டுவதில்லை. இதனால் தவறு நிகழ்ந்ததை உணர்ந்து கொள்கிறோம். ஆனால் சில்வகைப் பிழைகள் இருப்புப் பட்டியலைப் பாதிப்பதில்லை. ஒரு தவறு இரு கணக்குகளிலும் ஏற்படின், பற்று, வரவு ஆகிய இரு கூறுகளும் சமமாகப் பாதிக்கப் படுகின்றன. இவற்றை இனிக் காண்போம்.

இருப்புப் பட்டியல் உணர்த்தாப் பிழைகள் :

1. ஈடு செய்பிழை, (Compensating Error) : ஒன்றிற்கு மேற்பட்ட தவறுகள் ஒன்றையொன்று நீக்கிக் கொள்வதால் இருப்புப் பட்டியலின் பற்று, வரவுக் கூட்டுத் தொகைகள் சமமாகவேயிருக்கும்.

எடுத்துக்காட்டு.

(i) விற்பனை ஏடு ரூ. 250 அதிகங் கூட்டப்பட்டது.

(ii) பழுது பார்க்குஞ் செலவு ரூ. 50 தவறுக இருமுறை எடுத்தெழுதப்பட்டது.

(iii) கொள்முதல் திருப்ப ஏடு ரூ. 70 குறைத்துக் கூட்டப்பட்டது.

(iv) கண்ணனிடம் பெற்றது ரூ. 65 அவர் கணக்கில் பற்று வைக்கப்பட்டது.

மேற்கூறிய நடவடிக்கைகளில் முதலில் ஏற்பட்ட பிழையால் ரூ. 250 அதிகம் வரவு வைக்கப்பட்டுள்ளது. ஆனல் இரண்டாவதால் ரூ. 50 பற்று அதிகமாகவும், மூன்ருவதால் ரூ. 70 வரவு குறைவாகவும் (பற்று அதிகரித்தும்), நான்காவதால் ரூ. 130 பற்று அதிகமாகவும் உள்ளன. இவ்வாறு இந் நான்கு பிழைகளாலும் மொத்தத்தில் பற்று, வரவு சமமாக ஆகிவிடுகின்றன. இவ்வகைப் பிழைகளை இருப்புப் பட்டியல் வெளிக்காட்டாது.

2. விதிப்பிழை (Error of Principle) : இது பற்றி முன்னரே விளக்கியுள்ளோம்.

(i) சொத்து ஒன்றைச் செலவாகக் கருதிப் பதிதல் :

எந்திரம் நிறுவக் கொடுத்த கூலி ரூ. 250ஐ எந்திரக் கணக்கில் பற்று வைப்பதற்கு மாருகக் கூலிக் கணக்கில் பற்று வைக்கப்படின் இது இருப்புப் பட்டியலை பாதிப்பதில்லை—காரணம் சரியான தொகை சரியான பகுதியில்தான் எழுதப்பட்டுள்ளது. (பதிவான கணக்குத்தான் தவறு.)

(ii) செலவினத்தைச் சொத்தாக கருதுதல் :

கட்டடத்தைப் பழுது பார்க்க ஆன செலவு ரூ. 200 கட்டடக் கணக்கில் பற்று வைக்கப் படுவதாகக் கொள்வோம். பழுது பார்க்குஞ் செலவு ஒரு நடைமுறைச் செலவு—பராமரிப்புச் செலவு. இதைக் கட்டடக் கணக்கில் பற்று வைத்தது மூலதனச் செலவுக்

கும் நடைமுறைச் செலவுக்குமுள்ள வேற்றுமையை உணராக் காரணத்தால். எனினும் பற்று வைக்கப்பட வேண்டிய தொகை பற்றுதான் வைக்கப்பட்டிருக்கிறது எனவே, இருப்புப் பட்டியலில் இப் பிழை வெளிப்படுவதில்லை.

3. விடு பிழை (Error of Omission) : துணையேடுகளிலேயே நடவடிக்கைகள் பதிவாகாக் காரணத்தால் பற்று, வரவு ஆகிய இரண்டும் பதியப்படுவதில்லை. எனவே, இருப்புப் பட்டியலில் பற்று, வரவுப் பகுதிகளின் கூட்டுத் தொகைகளில் வேறுபாட்டை உண்டு பண்ணுவதில்லை.

முரளியிடம் விற்ற சரக்கு ரூ. 300 விற்பனை ஏட்டில் பதிவாக வில்லையெனில், விற்பனைக் கணக்கில் ரூ. 300 வரவு வைக்கப்பட வில்லை; அவ்வாறே முரளி கணக்கிலும் ரூ. 300 பற்று வைக்கப்பட வில்லை. (காரணம் விற்பனை ஏட்டிலிருந்து பேரேட்டுக் கணக்குகளில் எடுத்தெழுதுகிறோம்.) ஆகவே, இருப்புப் பட்டியல் சமமான தொகைகளைக் காட்டும்.

4. செய் பிழை (Error of Commission) : கீழ்க்கண்டவற்றை இருப்புப் பட்டியல் உணர்த்தாது.

(i) துணையேட்டில் தவறான தொகையை எழுதுதல் :

இவ்வகைப் பிழையால் பற்று வரவு இரு பகுதிகளிலும் ஒரே அளவில் தவறு ஏற்படுகிறது. இதனால் இவ்வகைப் பிழைகளை இருப்புப் பட்டியல் உணர்த்தாது. அரசுவிடமிருந்து திரும்பி வந்த சரக்கு ரூ. 75, விற்பனைத் திருப்ப ஏட்டில் ரூ. 95 ஆக எழுதப் பட்டிருப்பின், விற்பனைத் திருப்பக் கணக்கில் ரூ. 20 அதிகம் பற்று வைக்கப்பட்டிருக்கும்; விற்பனைத் திருப்ப ஏட்டிலிருந்து ஆள்சார் கணக்கில் எடுத்தெழுதப் படுவதால், அரசுவின் கணக்கில் ரூ. 20 அதிகம் வரவு வைக்கப்பட்டிருக்கும். துணையேட்டில் ஏற்பட்ட இப் பிழையால் பற்று ரூ. 20 அதிகரிக்கிறது; வரவும் ரூ. 20 அதிகரிக்கிறது. இதனால் இருப்புப் பட்டியல் பாதிக்கப் படுவதில்லை.

(ii) சரியான தொகையைச் சரியான பகுதியில் தவறான கணக்கில் பதிதல் :

சரியான பகுதியில் சரியான தொகையே பதியப்படுவதால் பற்று, வரவு—இவற்றில் மாறுபாடு நிகழ்வதில்லை. இதனால் இருப்புப் பட்டியல் சமமான கூட்டல் தொகைகளையே காட்டும். பிழை வெளியாவதில்லை.

எடுத்துக் காட்டு : இராமனிடத்தில் வாங்கிய சரக்கு ரூ. 100 எடுத்தெழுதும் போழ்து இராமன் கணக்கில் வரவு வைக்க வேண்டிய ரூ. 100 இரமணன் கணக்கில் வரவு வைத்தல். இதனால் இராமன் கணக்கு ரூ. 100 குறைந்த வரவையும் ஆனால் இரமணன் கணக்கு ரூ. 100 அதிக வரவையும் காட்டும். ஆகவே இருப்புப் பட்டியல் இவ்வகைப் பிழைகளைக் வெளிக்காட்டாது.

இருப்புப் பட்டியல் வேறுபட்ட பற்று, வரவுக் கூட்டுத் தொகைகளைக் காட்டுமாயின், அவ்வேறுபாட்டிற்கான காரணத்தை ஆய முயல வேண்டும். கீழ்க்கண்ட வகைகளில் இதைச் செய்யலாம் :

1. பேரேட்டுக் கணக்குகள் அனைத்தின் இருப்புகளையும் இருப்புப் பட்டியலுக்குக் கொண்டுவந்து விட்டோமா என்று பார்க்க வேண்டும். ரொக்கம், வங்கி முதலியவை ரொக்க ஏட்டிலிருந்து கொண்டுவரப்பட்டுள்ளனவா என்பதையும் நோக்க வேண்டும்.

2. இருப்புப்பட்டியலின் வேற்றுமைத் தொகையை உணர வேண்டும். அதே தொகையை இருப்பாகக் காட்டும் எக்கணக்காவது பேரேட்டில் இருப்பின், அது இருப்புப் பட்டியலுக்குக் கொண்டுவரப் பட்டுள்ளதா என்று காண வேண்டும்.

3. பற்றிருப்புக் காட்டும் கணக்கை வரவுப் பத்தியிலும் வரவிருப்புக் காட்டும் கணக்கைப் பற்றிருப்புப் பத்தியிலும் எழுதி விட்டோமா என்று காண வேண்டும். இவ்விரு கூட்டுத் தொகைகளின் வேற்றுமையைக் கண்டு, அத்தொகையில் பாதியளவில் எக்கணக்கிருப்பும் இருக்கிறதா என்று பார்த்தால் கணக்கிருப்பை மாற்றி எழுதியிருப்பது எளிதில் தெரிந்துவிடும்.

4. ‘கடனாளிகள்’, ‘கடனீந்தோர்’ பட்டியலில் எல்லாக் கணக்குகளும் அடங்கியுள்ளனவா என்பதைக் காண வேண்டும்.

5. கணக்குகள் சரிவர இருப்புக் கட்டப்பட்டுள்ளனவா என்று பார்க்க வேண்டும்.

6. துணையேடுகள் சரியாகக் கூட்டப்பட்டுள்ளனவா என்று காணவேண்டும்.

7. இருப்புப் பட்டியலில் உள்ள வேற்றுமைத் தொகை அளவிற்குத் துணையேடுகளில் காணப்படும் கணக்குப் பேரேட்டில் எடுத்தெழுதப் பட்டுள்ளதா என்பதை அறிய வேண்டும்.

8. வேற்றுமைத் தொகை மிகவும் அதிக மிருப்பின், கடந்த கால இருப்புப் பட்டியலை ஒப்பு நோக்கின், எக்கணக்கில் அதிக மாற்ற முள்ளது என்பதை உணரலாம். அக்கணக்கை மீண்டும் ஆழ்ந்து ஆய்ந்தால் பிழை புலப்படலாம்.

9. சென்ற ஆண்டு இருப்புகள் சரியாக இவ்வாண்டுக் கணக்குகளில் கொண்டுவரப் பட்டுள்ளனவா என்று சரிபார்க்கவேண்டும்.

இவ்வாறு மேற் கொள்ளும் முயற்சிகள் ஏற்பட்ட பிழையை உணர்த்தவில்லை யெனில், சென்ற அதிகாரத்தில் விளக்கியவாறு அவ்வேற்றுமைத் தொகையை இடைநிலைக் கணக்கிற்கு (Suspense account) எடுத்துச் செல்ல வேண்டும். பின்னர் எல்லாக் கணக்குகளும் மீண்டும் சரிபார்க்கப்படும் போழ்து பிழைகள் வெளிப்படும். அப்பொழுது திருத்தப் பதிவுகள் செய்வது மூலம் இடைநிலைக் கணக்கை முடித்துக் கொள்ளலாம்.

## இருப்புப் பட்டியலின் பயன்கள்

இருப்புப் பட்டியலின் கூட்டுத் தொகைகள் சமமாக இருப்பின், கணக்குகள் சரிவர எடுத்தெழுதப் பட்டுள்ளன என்பதை அறிந்து கொள்ளலாம். அல்லது இல்லையெனில் பிழைகள் ஏற்பட்டு விட்டன என்பதை யுணர்ந்து அவற்றைக் கண்டு பிடிக்கலாம். பிழைகளைத் திருத்திக் கொள்ளும் வாய்ப்பை இருப்புப் பட்டியல் நல்குகிறது.

குறிப்பிட்ட காலத்திற்குப் பின் குறிப்பிட்ட நாளில் கணக்குகளின் நிலையுணரலாம். குறிப்பிட்ட காலத்தில் நிகழ்ந்த நடவடிக்கைகளின் தொகுப்பை அறிய இது உதவுகிறது. செய்த கொள்முதல், விற்பனை முதலியவற்றை உணரலாம்.

கடந்த ஆண்டுகளின் நிலையுடன் ஒப்பிட்டு இவ்வாண்டின் வியாபாரப் போக்கை அறிந்துகொள்ள முடிகிறது. விற்பனை கூடியுள்ளதா, குறைந்துள்ளதா என்பதை உணரலாம்.

குறிப்பிட்ட காலத்தில் ஏற்பட்டது ஆதாயமா, இழப்பா என்பதை இலாப நட்டக் கணக்குத் தெளிவாக்குகிறது. வியாபாரத்தின் இருப்பு நிலையை—நிதிநிலையை இருப்பு நிலைக் குறிப்பு தெரிவிக்கிறது. இவற்றைத் தயாரிப்பதற்கு ஆதாரமாக விளங்குவது இருப்புப் பட்டியலே.

இதுகாறும் விளங்கியவற்றின் துணைகொண்டு கீழ்க்கண்ட கணக்கைச் செய்யலாம்.

எடுத்துக் காட்டு 34:

*1-7-1971*-ல் செங்கோடனின் இருப்புகள் கீழ்க்கண்டவாறிருந்தன.

கையிருப்பு ரொக்கம் ரூ. *547*; மனைத்துணைப் பொருள்கள் ரூ. *1,750*; தட்டெழுத்துப் பொறி ரூ. *950*; கட்டடம் ரூ. *15,800*; சரக்கிருப்பு ரூ. *9,500*; கடனாளிகள் : பெரியண்ணன் ரூ. *1,300*; சின்னுசாமி ரூ. *570*; செல்லக்கனி ரூ. *3,500*.

பொறுப்புகள்: வங்கி மேல்வரைப்பற்று ரூ. *2,800*; கடனீந்தோர் : அபுபேக்கர் ரூ. *3,750*; நஞ்சுண்டான் ரூ. *2,310*.

ஜூலைத் திங்கட்கான நடவடிக்கைகள் கீழ்க்கொடுக்கப் பட்டுள்ளன. அவற்றை உரிய துணையேடுகளில் பதிந்து, பேரேட்டுக் கணக்குகளில் எடுத்தெழுதி இருப்புக் கட்டுக. *31-7-1971*-ற்கான இருப்புப் பட்டியலையும் தயார் செய்க.

| 1971 | | | | ரூ. |
|---|---|---|---|---|
| ஜூலை 1 | பெரியண்ணனிடம் பெற்ற காசோலை ரூ. 290 வங்கிக் கனுப்பப் பட்டது. அவர்க்களித்த தள்ளுபடி | | ... | 10 |
| | விற்பனை | | ... | 325 |
| 3 | நஞ்சுண்டானிடம் 10% தள்ளுபடியில் வாங்கிய சரக்கின் மதிப்பு | | ... | 2,500 |
| 5 | வங்கியிலிருந்து எடுத்தது | | ... | 100 |
| | நஞ்சுண்டானிடம் திருப்பியனுப்பிய சரக்கு | | ... | 300 |
| 6 | சின்னுசாமியிடம் 5% தள்ளுபடியில் விற்ற சரக்கின் மதிப்பு | | ... | 500 |
| 7 | செல்லக்கனியிடமிருந்து பெற்றது | | ... | 1,875 |
| | அவர்க்களித்த தள்ளுபடி ... | 25 | | |
| | பயணச் செலவு ... | 50 | | |
| 9 | வாடகை காசோலை மூலம் பெற்றது | | ... | 100 |
| 10 | பழநிவேலனிடம் சரக்கு வாங்கியது | | ... | 2,000 |
| | ரொக்கக் கொள்முதல் | | ... | 300 |

| | | | |
|---|---|---|---|
| | வாடகைக்காகப் பெற்ற காசோலை வங்கியிற் செலுத்தப் பட்டது. | | |
| 11 | அபுபேக்கருக்கு இரு திங்கள் தவணையில் செலுத்துவதாக எழுதிக் கொடுத்த கடனுறுதிச் சீட்டு | ... | 500 |
| 12 | பெரியண்ணனிடம் காசோலை பெற்றது ரூ. 295; அவர்க்களித்த தள்ளுபடி (காசோலை வங்கியிற் செலுத்தப் பட்டது.) | ... | 5 |
| 13 | பழநிவேலனிடம் திருப்பியனுப்பிய சரக்கு | ... | 75 |
| 15 | முத்துசாமியிடம் 8% தள்ளுபடியில் விற்றது | ... | 900 |
| 16 | விற்பனை | ... | 750 |
| 17 | ரூ. 200 ரொக்கங் கொடுத்தும் ரூ. 500-க்குக் காசோலை விடுத்தும் சரக்கு வாங்கியது முத்துசாமி திருப்பியனுப்பிய சரக்கு (தள்ளுபடி போக) | ... | 100 |
| 18 | பெரியண்ணனிடம் பெற்ற காசோலைக்குப் பணமறுக்கப்பட்டதாகத் திரும்பி வந்தது. உரிமையாளர் செங்கோடன் தன் வீட்டுச் செலவுக்கென காசோலை மூலம் எடுத்துக் கொண்டது | ... | 200 |
| 19 | நஞ்சுண்டானிடம் வாங்கிய சரக்கு | ... | 300 |
| 20 | நஞ்சுண்டான் மூன்று திங்கள் தவணையில் செலுத்தக் கோரி எழுதிய ரூ. 500-க்கான உண்டியலை சேலம் இந்தியன் வங்கியில் செலுத்துவதாக ஏற்றது. | | |
| 22 | இரு திங்கள் தவணையில் செலுத்தக் கோரி எழுதிய ரூ. 300-க்கான உண்டியலைப் பெரியண்ணன் ஏற்றுத் தந்தது. மனைத்துணைப் பொருளை விற்றது | ... | 300 |
| 23 | செல்லக்கனி ஏற்றுத் தந்த ஒரு திங்கள் தவணை உண்டியல் | ... | 1,500 |
| | மதுரை வங்கி தூத்துக்குடியில் செலுத்துவதாக ஏற்கப்பட்டிருந்தது. | | |

24 செங்கோடன் மேலுங் கொண்டு வந்த முதல் ரூ. 4,000 வங்கியிற் செலுத்தப் பட்டது.

| | | |
|---|---|---|
| 25 | அபுபேக்கருக்குக் கொடுத்த காசோலை | 3,200 |
| | பெற்ற தள்ளுபடி ... | 50 |
| 27 | சைக்கிள் காசோலை விடுத்து வாங்கியது ... | 750 |
| 30 | விற்பனையில் பெற்ற ரொக்கம் ... | 500 |
| | காசோலை ... | 1,500 |
| | (காசோலை வங்கிக் கனுப்பப் பட்டது) | |
| 31 | செங்கோடன் தன் வீட்டிற்குச் சரக்கிலிருந்து எடுத்துக் கொண்டது ... | 300 |
| 31 | வங்கியிற் செலுத்தியது ... | 3,280 |

விடை :

| | குறிப்பேடு | | பே ப எ | பற்று ரூ | | வரவு ரூ | |
|---|---|---|---|---|---|---|---|
| 1971 ஜூலை 1. | ரொக்கம் | ப | | 547 | — | | |
| | மனைத்துணைப் பொருள்கள் | ப | | 1,750 | — | | |
| | தட்டெழுத்துப் பொறி | ப | | 950 | — | | |
| | கட்டடம் | ப | | 15,800 | — | | |
| | சரக்கிருப்பு | ப | | 9,500 | — | | |
| | பெரியண்ணன் | ப | | 1,300 | — | | |
| | சின்னுசாமி | ப | | 570 | — | | |
| | செல்லக்கனி | ப | | 3,500 | — | | |
| | வங்கி மேல்வரைப் பற்று | | | | | 2,800 | — |
| | அபுபேக்கர் | | | | | 3,750 | — |
| | நஞ்சுண்டான் | | | | | 2,310 | — |
| | முதல் கணக்கு * | | | | | 25,057 | — |
| | (மேற் கண்ட சொத்துகளையும் பொறுப்புகளையும் கணக்கிற் கொண்டு வர.) | | | | | | |
| ஜூலை31 | எடுப்புக் க/கு | ப | | 300 | — | | |
| | கொள்முதல் க/கு | | | | | 300 | — |
| | (செங்கோடன், தன்வீட்டிற்காகச் சரக்கிலிருந்து எடுத்துக் கொண்டது.) | | | | | | |

* சொத்துகளிலிருந்து பொறுப்புகளைக் கழித்து வருந் தொகை முதல் என்று கொள்ளப்பட்டது.

செங்கோடனின்

ரொக்க ஏடு

ப

| நாள் | விவரம் | ர. எ. | பே. ப. எ. | தள்ளுபடி ரூ. | ரொக்கம் ரூ. | வங்கி ரூ. |
|---|---|---|---|---|---|---|
| 1971 | | | | | | |
| ஜூலை 1 | இருப்பு கீ/கொ | | | | 547 — | |
| ,, | பெரியண்ணன் | | | 10 — | | 290 — |
| ,, | விற்பனை | | | | 325 — | |
| 5 | வங்கி | | ஏ | | 100 — | |
| 7 | செல்லக்கனி | | | 25 — | 1,875 — | |
| 9 | வாடகை | | | | 100 — | |
| 10 | ரொக்கம் | | ஏ | | | 100 — |
| 12 | பெரியண்ணன் | | | 5 — | | 295 — |
| 16 | விற்பனை | | | | 750 — | |
| 22 | மனைத்துணைப்பொருள் | | | | 300 — | |
| 24 | முதல் | | | | | 4,000 — |
| 30 | விற்பனை | | | | 500 — | 1,500 — |
| 31 | ரொக்கம் | | ஏ | | | 3,280 — |
| | | | | 40 — | 4,497 — | 9,465 — |
| ஆக.1 | இருப்பு கீ/கொ | | | | 567 | 1.620 |

வ

| நாள் | விவரம் | சா. சீ. எ. | பே. ப. எ. | தள்ளுபடி ரூ. | ரொக்கம் ரூ. | வங்கி ரூ. |
|---|---|---|---|---|---|---|
| 1971 | | | | | | |
| ஜூலை 1 | இருப்பு கீ/கொ | | | | | 2,800 — |
| 5 | ரொக்கம் | | ஏ | | | 100 — |
| 7 | பயணச் செலவு | | | | 50 — | |
| 10 | கொள்முதல் | | | | 300 — | |
| 10 | வங்கி | | | | 100 — | |
| 17 | கொள்முதல் | | ஏ | | 200 — | 500 — |
| 18 | பெரியண்ணன் | | | 5 — | | 295 — |
| ,, | எடுப்பு | | | | | 200 — |
| 25 | அபுபேக்கர் | | | 50 — | | 3,200 — |
| 27 | சைக்கிள் | | | | | 750 — |
| 31 | வங்கி ... | | ஏ | | 3,280 — | |
| ,, | இருப்பு கீ/இ | | | | 567 | 1,620 — |
| | | | | 55 — | 4,497 — | 9,465 — |

### கொள்முதல் குறிப்பேடு

| நாள் | விவரம் | உ. இ. எ. | பே. ப. எ. | தொகை ரூ. | |
|---|---|---|---|---|---|
| 1971 | | | | | |
| ஜூலை 3 | நஞ்சுண்டான் | | | 2,250 | — |
| ,, 10 | பழநிவேலன் | | | 2,000 | — |
| ,, 19 | நஞ்சுண்டான் | | | 300 | — |
| | | | | 4,550 | — |

### விற்பனைக் குறிப்பேடு

| நாள் | விவரம் | வெ. இ. எ. | பே. ப. எ. | தொகை ரூ. | |
|---|---|---|---|---|---|
| 1971 | | | | | |
| ஜூலை 6 | சின்னுசாமி | | | 475 | — |
| ,, 15 | முத்துசாமி | | | 828 | — |
| | | | | 1,303 | — |

### கொள்முதல் திருப்ப ஏடு

| நாள் | விவரம் | ப. கு. எ. | பே. ப. எ. | தொகை ரூ. | |
|---|---|---|---|---|---|
| 1971 | | | | | |
| ஜூலை 5 | நஞ்சுண்டான் | | | 270 | — |
| ,, 13 | பழநிவேலன் | | | 75 | — |
| | | | | 345 | — |

## வரவுடைய உண்டியல் ஏடு

| வரிசை எண் | நாள் | எவரிடமிருந்து பெறப்பட்டது | பே. ப. எ. | விடுநர் | ஏற்குநர் | செலுத்துமிடம் | உண்டியல் நாள் | தவணைக் காலம் | கெடு நாள் | தொகை ரூ. | ரொ. ப. எ. | குறிப்பு |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 1971 ஜூலை.22 | பெரியண்ணன் | | தாமே | பெரியண்ணன் | — | ஜூலை. 22 | 2 திங்கள் | செப். 25 | 300 | | |
| 2 | ,, 23 | செல்லக்கனி | | ,, | செல்லக்கனி | மதுரை வங்கி தூத்துக்குடி | ஜூலை. 23 | 1 ,, | ஆக 26 | 1,500 | | |
| | | | | | | | | | | 1,800 | | |

## செலுத்த வேண்டிய உண்டியல் ஏடு

| வரிசை எண் | நாள் | எவருக்குக் கொடுத்தோம் | பே. ப. எ. | பெறுநர் | செலுத்துமிடம் | உண்டியல் நாள் | தவணைக் காலம் | கெடு நாள் | தொகை ரூ | ரொ. ப. எ. | குறிப்பு |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 1971 ஜூலை 11 | அபுபேக்கர் | | அபுபேக்கர் | — | ஜூலை. 11 | 2 திங்கள் | செப். 14 | 500— | | |
| 2 | ,, 20 | நஞ்சுண்டான் | | நஞ்சுண்டான் | இந்தியன் வங்கி சேலம் | ஜூலை. 20 | 3 ,, | அக். 23 | 500— | | |
| | | | | | | | | | 1,000 — | | |

விற்பனைத் திருப்ப ஏடு

| நாள் | விவரம் | வ. கு. எ. | பே. ப. எ. | தொகை ரூ. | |
|---|---|---|---|---|---|
| 1971 சூலை 17 | முத்துசாமி | | | 100 | — |

பேரேட்டுக் கணக்குகள்

ப மனைத்துணைப் பொருள் கணக்கு வ

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1971 | | | ரூ. | | 1971 | | | ரூ. | |
| சூலை 1 | இருப்பு கீ/கொ | | 1,750 | — | சூலை 22 | ரொக்கம் | | 300 | — |
| | | | | | ,, 31 | இருப்பு கீ/இ | | 1,450 | — |
| | | | 1,750 | — | | | | 1,750 | — |
| ஆக. 1 | இருப்பு கீ/கொ | | 1,450 | — | | | | | |

தட்டெழுத்துப் பொறிக் கணக்கு

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1971 | | | ரூ. | | 1971 | | | ரூ. | |
| சூலை 1 | இருப்பு கீ/கொ | | 950 | — | சூலை 31 | இருப்பு கீ/இ | | 950 | — |
| ஆக. 1 | இருப்பு கீ/கொ | | 950 | — | | | | | |

## கட்டடக் கணக்கு

| 1971 | | ரூ. | | 1971 | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|
| ஜூலை 1 | இருப்பு கீ/கொ | 15,800 | — | ஜூலை 31 | இருப்பு கீ/இ | 15,800 | — |
| ஆக. 1 | இருப்பு கீ/கொ | 15,800 | | | | | |

## (தொடக்க) சரக்கிருப்புக்கணக்கு

| 1971 | | ரூ. | | 1971 | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|
| ஜூலை 1 | இருப்பு கீ/கொ | 9,500 | — | ஜூலை 31 | இருப்பு கீ/இ | 9,500 | — |
| ஆக. 1 | இருப்பு கீ/கொ | 9,500 | — | | | | |

## பெரியண்ணன்

| 1971 | | ரூ. | | 1971 | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | ஜூலை 1 | வங்கி | 290 | — |
| ஜூலை 1 | இருப்பு கீ/கொ | 1,300 | — | ,, | தள்ளுபடி | 10 | — |
| ,, 18 | வங்கி | 295 | — | 12 | வங்கி | 295 | — |
| ,, | தள்ளுபடி | 5 | — | ,, | தள்ளுபடி | 5 | — |
| | | | | 22 | வரவுடைய உண்டியல் | 300 | — |
| | | | | 31 | இருப்பு கீ/இ | 700 | — |
| | | 1,600 | — | | | 1,600 | — |
| ஆக. 1 | இருப்பு கீ/கொ | 700 | — | | | | |

சின்னுசாமி

| 1971 | | ரூ. | | 1971 | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|
| சூலை 1 | இருப்பு கீ/கொ | 570 | — | சூலை 31 | இருப்பு கீ/இ | 1,045 | — |
| ,, 6 | விற்பனை | 475 | — | | | | |
| | | 1,045 | — | | | 1,045 | — |
| ஆக. 1 | இருப்பு கீ/கொ | 1,045 | — | | | | |

செல்லக்கனி

| 1971 | | ரூ. | | 1971 | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|
| சூலை 1 | இருப்பு கீ/கொ | 3,500 | — | சூலை 7 | ரொக்கம் | 1,875 | — |
| | | | | ,, | தள்ளுபடி | 25 | — |
| | | | | சூலை 23 | வரவுடைய உண்டியல் | 1,500 | — |
| | | | | ,, 31 | இருப்பு கீ/இ | 100 | — |
| | | 3,500 | — | | | 3,500 | — |
| ஆக. 1 | இருப்பு கீ/கொ | 100 | | | | | |

அபுபேக்கர்

| 1971 | | ரூ. | | 1971 | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|
| சூலை 11 | செலுத்த வேண்டிய உண்டியல் | 500 | — | சூலை 1 | இருப்பு கீ/கொ | 3,750 | — |
| 25 | வங்கி | 3,200 | — | | | | |
| ,, | தள்ளுபடி | 50 | — | | | | |
| | | 3,750 | — | | | 3,750 | — |

நஞ்சுண்டான்

| 1971 | | ரூ. | | 1971 | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|
| சூலை 5 | கொள் முதல் திருப்பம் | 270 | — | சூலை 1 | இருப்பு கீ/கொ | 2,310 | — |
| | | | | ,, 3 | கொள் முதல் | 2,250 | — |
| ,, 20 | செலுத்த வேண்டிய உண்டியல் | 500 | — | ,, 19 | கொள் முதல் | 300 | — |
| ,, 31 | இருப்பு கீ/இ | 4,090 | — | | | | |
| | | 4,860 | — | | | 4,860 | — |
| | | | | ஆக. 1 | இருப்பு கீ/கொ | 4,090 | — |

பழநிவேலன்

| 1971 | | ரூ. | | 1971 | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|
| சூலை 13 | கொள் முதல் திருப்பம் | 75 | — | சூலை 10 | கொள் முதல் | 2,000 | — |
| ,, 31 | இருப்பு கீ/இ | 1,925 | — | | | | |
| | | 2,000 | — | | | 2,000 | — |
| | | | | ஆக. 1 | இருப்பு கீ/கொ | 1,925 | — |

முத்துசாமி

| 1971 | | ரூ. | | 1971 | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|
| சூலை 15 | விற்பனை | 828 | — | சூலை 17 | விற்பனைத் திருப்பம் | 100 | — |
| | | | | ,, 31 | இருப்பு கீ/இ | 728 | — |
| | | 828 | — | | | 828 | — |
| ஆக. 1 | இருப்பு கீ/கொ | 728 | — | | | | |

## வரவுடைய உண்டியல் கணக்கு

| 1971 | | ரூ. | | 1971 | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|
| சூலை 31 | பல்வகை | 1,800 | — | சூலை 31 | இருப்பு கீ/இ | 1,800 | — |
| ஆக. 1 | இருப்பு கீ/கொ | 1,800 | — | | | | |

## செலுத்த வேண்டிய உண்டியல் கணக்கு

| 1971 | | ரூ. | | 1971 | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|
| சூலை 31 | இருப்பு கீ/இ | 1,000 | — | சூலை 31 | பல்வகை | 1,000 | — |
| | | | | ஆக. 1 | இருப்பு கீ/கொ | 1,000 | — |

## முதல் கணக்கு

| 1971 | | ரூ. | | 1971 | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|
| சூலை 31 | இருப்பு கீ/இ | 29057 | — | சூலை 1 | இருப்பு கீ/கொ | 25,057 | — |
| | | | | ,, 24 | வங்கி | 4,000 | — |
| | | 29057 | — | | | 29,057 | — |
| | | | | ஆக. 1 | இருப்பு கீ/கொ | 29,057 | — |

எடுப்புக் கணக்கு

| 1971 | | ரூ. | | 1971 | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|
| ஜூலை 18 | வங்கி | 200 | — | ஜூலை 31 | இருப்பு கீ/இ | 500 | — |
| ,, 31 | கொள் முதல் | 300 | — | | | | |
| | | 500 | — | | | 500 | — |
| ஆக. 1 | இருப்பு கீ/கொ | 500 | — | | | | |

கொள்முதல் கணக்கு

| 1971 | | ரூ. | | 1971 | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|
| ஜூலை 10 | ரொக்கம் | 300 | — | ஜூலை 31 | எடுப்பு | 300 | — |
| ,, 17 | ரொக்கம் | 200 | — | ,, | இருப்பு கீ/இ | 5,250 | — |
| ,, | வங்கி | 500 | — | | | | |
| ,, 31 | பல்வகை | 4,550 | — | | | | |
| | | 5,550 | — | | | 5,550 | — |
| ஆக. 1 | இருப்பு கீ/கொ | 5,250 | — | | | | |

விற்பனைக் கணக்கு

| 1971 | | ரூ. | | 1971 | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|
| ஜூலை 31 | இருப்பு கீ/இ | 4,378 | — | ஜூலை 1 | ரொக்கம் | 325 | — |
| | | | | 16 | ரொக்கம் | 750 | — |
| | | | | 30 | ரொக்கம் | 500 | — |
| | | | | ,, | வங்கி | 1,500 | — |
| | | | | 31 | பல்வகை | 1,303 | — |
| | | 4,378 | — | | | 4,378 | — |
| | | | | ஆக. 1 | இருப்பு கீ/கொ | 4,378 | — |

கொள்முதல் திருப்பக் கணக்கு

| 1971 | | | ரூ. | | 1971 | | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| சூலை 31 | இருப்பு கீ/இ | | 345 | — | சூலை 31 | பல் வகை | | 345 | — |
| | | | | | ஆக. 1 | இருப்பு கீ/கொ | | 345 | — |

விற்பனைத் திருப்பக் கணக்கு

| 1971 | | | ரூ. | | 1971 | | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| சூலை 31 | பல்வகை | | 100 | — | சூலை 31 | இருப்பு கீ/இ | | 100 | — |
| ஆக. 1 | இருப்பு கீ/கொ | | 100 | — | | | | | |

வாடகைக் கணக்கு

| 1971 | | | | | 1971 | | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| சூலை 31 | இருப்பு கீ/இ | | 100 | — | சூலை 9 | ரொக்கம் | | 100 | — |
| | | | | | ஆக. 1 | இருப்பு கீ/கொ | | 100 | — |

பயணச் செலவுக் கணக்கு

| 1971 | | ரூ. | | 1971 | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|
| ஜூலை 7 | ரொக்கம் | 50 | — | ஜூலை 31 | இருப்பு கீ/இ | 50 | — |
| ஆக. 1 | இருப்பு கீ/இ | 50 | — | | | | |

சைக்கிள் கணக்கு

| 1971 | | ரூ. | | 1971 | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|
| ஜூலை 27 | வங்கி | 750 | — | ஜூலை 31 | இருப்பு கீ/இ | 750 | |
| ஆக. 1 | இருப்பு கீ/கொ | 750 | — | | | | |

தள்ளுபடிக் (அளித்தது) கணக்கு

| 1971 | | ரூ. | | 1971 | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|
| ஜூலை 31 | பல்வகை | 40 | — | ஜூலை 31 | இருப்பு கீ/இ | 40 | — |
| ஆக. 1 | இருப்பு கீ/கொ | 40 | — | | | | |

ஈட்டிய தள்ளுபடிக் கணக்கு

| 1971 | | ரூ. | | 1971 | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|
| சூலை 31 | இருப்பு கீ/இ | 55 | — | சூலை 31 | பல்வகை | 55 | — |
| | | | | ஆக 1 | இருப்பு கீ/கொ | 55 | — |

30-7-1971-க்கான செங்கோடனின் இருப்புப் பட்டியல்

| வரிசை எண் | கணக்கின் பெயர் | பே. ப. எ. | பற்றிருப்பு | | வரவிருப்பு | |
|---|---|---|---|---|---|---|
| | | | ரூ. | | ரூ. | |
| 1 | ரொக்கம் .. | | 567 | — | | |
| 2 | வங்கி ... | | 1,620 | | | |
| 3 | மனைத்துணைப் பொருள்கள் ... | | 1,450 | — | | |
| 4 | தட்டெழுத்துப் பொறி ... | | 950 | — | | |
| 5 | கட்டடம் ... | | 15,800 | — | | |
| 6 | தொடக்க சரக்கிருப்பு ... | | 9,500 | — | | |
| 7 | வரவுடைய உண்டியல் ... | | 1,800 | — | | |
| 8 | செலுத்த வேண்டிய உண்டியல் ... | | | | 1,000 | — |
| 9 | முதல் ... | | | | 29,057 | — |
| 10 | எடுப்பு ... | | 500 | — | | |
| 11 | கொள்முதல் ... | | 5,250 | — | | |
| 12 | விற்பனை ... | | | | 4,378 | — |
| 13 | கொள்முதல் திருப்பம் ... | | | | 345 | — |

| வரிசை எண் | கணக்கின் பெயர் | பே. ப. எ. | பற்றிருப்பு | | வரவிருப்பு | |
|---|---|---|---|---|---|---|
| 14 | விற்பனைத் திருப்பம் ... | | 100 | — | | |
| 15 | வாடகை ... | | | | 100 | — |
| 16 | பயணச் செலவு ... | | 50 | — | | |
| 17 | சைக்கிள் ... | | 750 | — | | |
| 18 | தள்ளுபடி அளித்தது ... | | 40 | — | | |
| 19 | ஈட்டிய தள்ளுபடி ... | | | | 55 | — |
| 20 | கடனாளிகள் +1 ... | | | | | |
| 21 | கடனீந்தோர் +2 ... | | 2,573 | — | 6,015 | — |
| | | | 40,950 | | 40,950 | |

**விளக்கம் :** கடனாளிகள் +1

நம்மிடம் கடனுக்குச் சரக்கு வாங்கியவர்கள். இவர்களுடைய கணக்குகள் காட்டும் இருப்புகளை ஒன்றாய்த் திரட்டின், கடனாளிகள் தொகை கிடைக்கும். எடுத்துக் காட்டில், கீழ்க்கண்டவாறு இது கணக்கிடப்பட்டது.

| | ரூ. |
|---|---|
| பெரியண்ணன் | 700 |
| சின்னுசாமி | 1,045 |
| செல்லக்கனி | 100 |
| முத்துசாமி | 728 |
| ரூ. | 2,573 |

கடனீந்தோர் +2 : நம்மிடம் கடனுக்குச் சரக்கு விற்றவர்கள். இவர்களின் கணக்குகள் காட்டும் இருப்புகளை ஒன்றாய்த் திரட்

டின், கடனீந்தோர் தொகை கிடைக்கும். எடுத்துக் காட்டில், கீழ்க் காட்டியவாறு இது கணக்கிடப்பட்டது.

| | ரூ. |
|---|---|
| நஞ்சுண்டான் | 4,090 |
| பழநிவேலன் | 1,925 |
| ரூ. | 6,015 |

### வினாக்கள்

1. இருப்புப் பட்டியல் என்றால் என்ன? அதனாலுறும் பயன்கள் யாவை?
2. இருப்புப் பட்டியல் எவ்வகைப் பிழைகளை வெளிக் காட்டும்?
3. "இருப்புப் பட்டியல் சமமான கூட்டுத் தொகைகளைக் காட்டுவதாலேயே கணக்குகள் சரிவர எழுதப் பட்டுள்ளன என்று கொள்ளக் கூடாது"—இக் கூற்று சரியா?
4. இருப்புப் பட்டியல் பற்று, வரவிருப்புகளின் கூட்டுத் தொகைகள் வெவ்வேறாக இருப்பின் எடுத்துக்கொள்ள வேண்டிய முயற்சிகள் யாவை?

### பயிற்சி

1. கீழ்க்கண்ட இருப்புகளிலிருந்து கீரனின் இருப்புப் பட்டியலைத் தயார் செய்க.

| | | ரூ. |
|---|---|---|
| தொடக்கச் சரக்கிருப்பு | ... | 8,500 |
| பல்வகை வரவு | ... | 245 |
| கடன் பெற்றது | ... | 4,500 |
| பொறிவகை | ... | 10,000 |
| மனைத்துணைப் பொருள்கள் | ... | 1,200 |

| | | ரூ. |
|---|---|---|
| விற்பனை | ... | 35,750 |
| உட்திருப்பம் | ... | 750 |
| கடனாளிகள் | ... | 10,400 |
| கடனீந்தோர் | ... | 7,320 |
| வரவுடைய உண்டியல்கள் | ... | 3,200 |
| கொள்முதல் | ... | 20,180 |
| அளித்த தள்ளுபடி | ... | 275 |
| ஊதியம் | ... | 7,300 |
| கூலி | ... | 2,500 |
| செலுத்த வேண்டிய உண்டியல்கள் | ... | 3,457 |
| வெளித் திருப்பம் | ... | 728 |
| உள் சுமை கூலி | ... | 125 |
| எழுதுபொருள் செலவு | ... | 370 |
| வாடகை | ... | 1,200 |
| முதல்-கணக்கு | ... | 14,000 |

8. கீழ்க்கண்ட இருப்புகள் மாறனின் ஏடுகளிலிருந்து 1-4-1971-ல் எடுக்கப்பட்டன.

சொத்துகள் : கட்டடம் ரூ. 25,000; பொறிவகை ரூ. 10,000; மனைத்துணைப் பொருள்கள் ரூ. 3,000; கடனாளிகள் : நக்கீரன் ரூ. 2,000; நாவலன் ரூ. 1,000; நம்பி ரூ. 1,500; நாயகம் ரூ 800; ரொக்கம் ரூ. 280; வங்கி ரூ. 4,200; பொறுப்புகள் : கடன் ரூ. 5,000; கடனீந்தோர் : தாளமுத்து ரூ. 2,100; தனிநாயகம் ரூ. 1,870; தணிகைமலை ரூ. 750.

1971 ஏப்ரல் திங்களுக்கான நடவடிக்கைகள் கொடுக்கப் பட்டுள்ளன. அவற்றைத் துணையேடுகளில் பதிந்து, கணக்குகளில் எடுத்தெழுதி இருப்புக் கட்டுக. 30-4-71-க்கான இருப்புப் பட்டியலையும் தயார் செய்க.

| 1971 | | | ரூ. |
|---|---|---|---|
| ஏப்ரல். 1 | தாளமுத்துக்குக் காசோலை மூலம் செலுத்தியது ரூ. 1,080. | | |
| | அவர் அளித்த தள்ளுபடி | ... | 20 |

| 1971 | | | ரூ. |
|---|---|---|---|
| | ரொக்க விற்பனை | . | 560 |
| 2 | தணிகைமலையிடம் 10% தள்ளுபடியில் வாங்கிய சரக்கின் மதிப்பு | ... | 500 |
| 3 | நாயகத்திடம் காசோலை மூலம் பெற்றது | ... | 790 |
| | தள்ளுபடி அளித்தது | ... | 10 |
| 5 | தணிகைமலையிடம் திருப்பியனுப்பிய சரக்கு | ... | 100 |
| | வங்கியிலிருந்து எடுத்தது | ... | 350 |
| | நாயகத்திடம் பெற்ற காசோலை வங்கிக் கனுப்பியது. | | |
| 6 | மாறன் தன் ஆயுள் காப்புறுதிக் கட்டணம் வங்கி மூலம் செலுத்தியது | ... | 200 |
| | நம்பியிடம் 5% தள்ளுபடியில் விற்ற சரக்கின் மதிப்பு | ... | 300 |
| 9 | விற்பனையில் பெற்ற ரொக்கம் | ... | 340 |
| | காசோலை | ... | 360 |
| 10 | நாயகத்திடம் பெற்ற காசோலைக்குப் பண மறுக்கப் பட்டுக் காசோலை திரும்பி வந்தது. | | |
| 11 | நான்மணியிடம் விற்ற சரக்கு | ... | 350 |
| 12 | நான்மணி திருப்பியனுப்பிய சரக்கு | ... | 50 |
| 13 | இருதிங்கள் தவணையில் செலுத்துமாறு எழுதிய உண்டியலை நான்மணி ஏற்றுத்தந்தது | ... | 300 |
| 14 | ஒரு திங்கள் தவணையில் தருவதாக நாயகம் எழுதிக் கொடுத்த கடனுறுதிச் சீட்டு | ... | 800 |
| | ரூ. 300 ரொக்கம் கொடுத்தும் ரூ. 200-க்குக் காசோலை விடுத்தும் வாங்கிய சரக்கு. | | |
| 15 | தமிழ்மணியிடம் 5% தள்ளுபடியில் வாங்கிய சரக்கின் மதிப்பு | ... | 1,000 |
| 17 | தட்டெழுத்துப் பொறி காசோலை விடுத்து வாங்கியது | ... | 1,800 |

| | | ரூ. |
|---|---|---|
| 18 | மூன்று திங்கள் தவணையில் செலுத்துமாறு தனி நாயகம் எழுதிய ரூ. 1000-க்கான உண்டியலைச் சென்னையில் உள்ள 'கடலூர் வங்கியில்' செலுத்துவதாக ஏற்றுத் தந்தது. | |
| 21 | விளம்பரத்துக்கெனச் சரக்கிலிருந்து மாதிரியாகக் கொடுத்தது ... ... | 200 |
| | கழிவுபெற்றது ... ... | 100 |
| | தாளமுத்துவிடம் 5% தள்ளுபடியில் விற்றது ... | 800 |
| 24 | வாடகை கொடுத்தது ... ... | 150 |
| 25 | தாளமுத்துவிட மிருந்து திரும்பி வந்த சரக்கு ... | 100 |
| 26 | கொள்முதல் ... | 360 |
| 27 | பார்வைக்குப் பின் 60 நாள் தவணையில் செலுத்தக் கோரி எழுதிய உண்டியலை இன்று தாளமுத்து ஏற்றுத் தந்தது ... | 1,665 |
| 29 | மேசை, நாற்காலி, புதியதாக காசோலை விடுத்து வாங்கியது ... | 250 |
| 30 | கடனடைத்தது (காசோலை விடுத்து) ... | 1,000 |

3. கீழ்க் கொடுக்கப்பட்ட இருப்புகள் 30-9-1971-க் குரியவை. அவற்றிலிருந்து அந்நாளுக்கான இருப்புப் பட்டியல் தயார் செய்க.

| | ரூ. |
|---|---|
| முதல் கணக்கு ... | 20,680 |
| எடுப்புக் கணக்கு ... | 2,400 |
| கொள்முதல் ... | 10,700 |
| விற்பனைச் செலவு ... | 300 |
| வாடகை ... | 1,100 |
| ஈட்டுறுதி ... | 250 |
| கடனாளிகள் ... | 7,540 |

| | | ரூ. |
|---|---|---|
| வரவுடைய உண்டியல்கள் | ... | 2,375 |
| கொள் முதல் திருப்பம் | ... | 350 |
| விற்பனைத் திருப்பம் | ... | 270 |
| கழிவுபெற்றது | ... | 1,250 |
| இலாப ஈவு | ... | 120 |
| தொடக்கச் சரக்கிருப்பு | ... | 5,400 |
| முதலீடு | ... | 2,000 |
| கூலியும் ஊதியமும் | ... | 3,700 |
| எழுது பொருள்கள் | ... | 375 |
| பொதுச் செலவு | ... | 250 |
| விற்பனை | ... | 16,760 |
| கடனீந்தோர் | ... | 9,500 |
| கடன் பெற்றது | ... | 6,500 |
| லாரி | ... | 20,500 |

4. கீழே தரப்பட்டுள்ள இருப்புப் பட்டியல் தவறாகத் தயாரிக்கப் பட்டுள்ளது. அதனைச் சரி செய்க.

| பற்றிருப்புகள் | | ரூ | வரவிருப்புகள் | | ரூ. |
|---|---|---|---|---|---|
| கொள் முதல் | ... | 10,400 | விற்பனை | ... | 14,670 |
| கொள்முதல் திருப்பம் | ... | 400 | விற்பனைத் திருப்பம் | ... | 200 |
| மனைத்துணைப் பொருள் | ... | 2,700 | | | |
| செலுத்த வேண்டிய உண்டியல்கள் | ... | 3,200 | வரவுடைய உண்டியல்கள் | ... | 2,200 |
| சைக்கிள் | ... | 560 | முதல் | ... | 10,165 |
| ஊதியம் | ... | 2,400 | எடுப்பு | ... | 1,200 |
| விளம்பரம் | ... | 500 | கடன் பெற்றது | ... | 2,300 |
| இலாப ஈவு | ... | 120 | வெளிச்சுமை கூலி | ... | 370 |

| | | | | |
|---|---|---|---|---|
| உள்சுமை கூலி ... | 100 | தள்ளுபடி | | |
| ரொக்கம் ... | 275 | அளித்தது | ... | 250 |
| வங்கி மேல்வரைப்பற்று ... | 3,200 | முதலீடு | ... | 3,000 |
| தள்ளுபடி பெற்றது ... | 300 | | | |
| கட்டடம் ... | 10,200 | | | |
| | 34,355 | | | 34,355 |

# 10. வாணிகக் (வியாபாரக்) கணக்கு
## (Trading Account)

தொழில் தொடங்கத் தூண்டிய இலாப நோக்கு ஈடேறி விட்டதா, நடத்தி வரும் வணிகம் நலியாது வளர்ந்தோங்கும் வாய்ப்புள்ளதா, என்பவற்றிற்கு விடை பகர்வதே இறுதிக் கணக்குகளாகும். வியாபாரக் கணக்கு என்று பரவலாக அழைக் கப்படும் வாணிகக் கணக்கு தயாரிக்கும் முறையையும் நோக்கத் தையும் இவண் காண்போம்.

கணக்குகள் சரிவர எடுத்தெழுதப் பட்டுள்ளனவா என்பதை இருப்புப் பட்டியல் காட்டுகிறது என்று முன்னரே பார்த்தோம். இருப்புப் பட்டியலில் இடங் கொண்டுள்ள கணக்குகள் ஆள்சார் கணக்குகளாகவும் சொத்துக் கணக்குகளாகவும் பெயரளவுக் கணக்குகளாகவும் இருக்கலாம். சரக்கு வாங்கி விற்பதில் ஏற்படும் ஆதாயம் அல்லது நட்டத்தை விளக்கும் நோக்குடன் தயாரிப்பது வாணிகக் கணக்காகும். எனவே, இருப்புப் பட்டியலில் காணப் படும் கணக்குகளுள் சரக்கு பற்றிய கணக்குகளையும் அதன் மீது நேரடியாகச் செய்த செலவுக் கணக்குகளையும் மட்டுமே வாணிகக் கணக்கிற் கொண்டு வருவோம். வாணிக இலாப-நட்டக் கணக்குகளை விளக்குமுன் அவைகளில் எழுதவேண்டிய நடை முறைச் செலவினக் கணக்குகளையும் நடைமுறை வரவினக் கணக்கு களையும் ஆய்தல் நன்று.

மூலதனச் செலவிற்கும் நடைமுறைச் செலவிற்கு முள்ள வேறுபாடு ஒரு அடிப்படை வேறுபாடாகும். இறுதிக் கணக்குகள் நடைமுறைச் செலவினங்களையும் வரவினங்களையு மட்டிலுமே உள்ளடக்கியிருக்க வேண்டும். மூலதனச் செலவினங்களை நடை

முறைச் செலவாகவோ அல்லது மாற்றியோ கொண்டு விட்டால் உண்மையான இலாப நட்டத்தைக் கணக்குகள் காட்டா. அவ்வாறே மூலதன வரவுகளும் செலவினங்களும் இக் குறிப்பில் இடம் பெற வேண்டியவை. இதில் தவறு ஏற்படினும் இக்குறிப்பு உண்மையான நிதிநிலையை உணர்த்தாது. எனவே, ஒரு செலவு நடைமுறைச் செலவா, மூலதனச் செலவா என்பதையும், ஒரு வரவு நடைமுறைச் வரவா, மூலதன வரவா என்பதையும் ஐயத்திற்கிடமின்றி அறிந்து கொள்ளுதல் நலம் பயக்கும்.

மூலதனச்செலவினம் (Capital Expenditure)

வருவாய் ஈட்டும் விருப்புடன் தொழிலில் பயன்படுத்தும் பொருட்டுச் சொத்துகள் வாங்குவது மூலதனச் செலவாகும். விற்கும் நோக்குடன் இவை வாங்கப்படுவதில்லை என்பது புலனாகும். கட்டடம், எந்திர தளவாடங்கள், கார், மனைத்துணைப் பொருள்கள், கருவிகள் போன்றவற்றை வாங்கிச் செலவிடுவதை மூலதனச் செலவென்கிறோம். இருக்கின்ற சொத்து ஒன்றைச் சிறந்த முறையில் பயன்படும் வண்ணம் மாற்றியமைக்கும் செலவையும் இதிலடக்கலாம்.

எடுத்துக்காட்டு ; கட்டட மொன்றை மாற்றியமைக்குஞ் செலவு. எந்திரம் ஒன்றை நிறுவ ஆகுஞ் செலவும் மூலதனச் செலவே. சொத்து ஒன்றை வாங்கக் கொடுக்கும் வழக்குரைஞர் கட்டணம் தொழில் வல்லுநர் கட்டணம் போன்றவையும் இதன் பாற் படுவனவேயாகும்.

நடைமுறைச் செலவினங்கள் (Revenue Expenditure)

தொழில் நடத்துவதில் ஏற்படும் செலவுகள் அனைத்தையும் இது குறிக்கும். ஊதியம், சுமைகூலி, கூலி, வாடகை, விளம்பரம், கொள்முதல் போன்றவை.

எடுத்துக் காட்டுகள் : சொத்துகளின் பயன்படுந்திறனை அதிகரிக்காமல் பராமரிப்புக்காகுஞ் செலவு நடைமுறைச் செலவே யாகும். பொருள் தயாரிப்பதாயிருப்பின், தயாரிப்புக்குத் தேவை யான உற்பத்தியில் பயன்படுத்தக்கூடிய செலவினங்களும் இதிலடங்கும்.

எடுத்துக்காட்டு :

நீர், எரிவளி போன்றவை. பிறர்க்கு அளிக்கும் தள்ளுபடி, கழிவு போன்றவற்றையும் இச் சொல் உணர்த்தும். நாம் பெற்ற பணிக்காகக் கழிவு போன்றவற்றைக் கொடுக்கிறோம்.

கீழ்வருவன நடைமுறைச் செலவினங்களாகும்:

1. மேல் விளக்கியவாறு, தொழில் அல்லது வியாபாரம் நடத்தும் செலவுகள். (வாடகை, ஊதியம், கூலி, ஈட்டுறுதி, விளம்பரம் போன்றவை.)

2. வாங்கிய சொத்துகளைத் தொழிலில் பயன்படுத்தும் நிலையில் வைத்திருக்க ஆகும் செலவு—இவை பராமரிப்புச் செலவுகளாகும். அவ்வப் பொழுது ஏற்படும் பழுது பார்க்கும் செலவும் புதுப்பிக்கும் செலவுகளும் இதிலடங்கும்.

3. விற்கும் நோக்குடன் வாங்கும் சரக்கு.

4. உற்பத்தித் தொழிலில் தேவையான கச்சாப் பொருள்கள், பண்டங்கள், வெப்பச் செலவு, எரி பொருள் செலவு, மின் செலவு போன்றவை.

5. ஆலையில் பணிபுரிவோர்க்குக் கொடுக்கும் கூலி, அலுவலகப் பணிபுரிவோர்க்குத் தரும் ஊதியம் போன்றவை.

6 பல்வகை முகவர்கட்கு (Agents) அளிக்கும் கழிவுத் தொகைகளும், பிற விநியோக விற்பனைச் செலவுகளும்.

தொழிலில் பயன்படும் சொத்துகள் ஆண்டுகள் செல்லச் செல்ல மதிப் பிழக்கும். பயன்படுத்தலாலும் நாள்கள் செல்வதாலும் இம் மதிப்பிழப்பு ஏற்படலாம். ஆக, தேய்மானம் போன்ற நட்டங்கள்.

கடன் வாங்கியிருப்பின், தரவேண்டிய வட்டி; சொத்து ஒன்றை விற்பதால் ஏற்படும் நட்டம் போன்றவை.

சட்டச் செலவு. இது சாதாரணமாக நடைமுறைச் செலவாயினும், சொத்து ஒன்றை வாங்கும் போழ்து மேற்கொள்ளும் இச் செலவு மூலதனச் செலவேயாகும்.

பழுது பார்க்குஞ் செலவு : இது ஒரு நடைமுறைச் செலவே. ஆனால், பழைய பொறி ஒன்றை வாங்கி அது பயன்படுமாறு செய்யும் பழுது பார்க்கும் செலவு மூலதனச் செலவேயாகும்.

சுமைகூலி, கப்பல், இரயில் கட்டணம் : சாதாரணமாக இவை நடைமுறைச் செலவினங்களாகக் கருதப்படினும், புதிய

வாங்கிய சொத்துகளைக் கொண்டுவரக் கொடுக்கும் இவ்வகைச் செலவுகளை மூலதனச் செலவாகவே கொள்ள வேண்டும்.

அமைப்புச் செலவுகள் (Formation or Preliminary Expenses): கூட்டுப் பங்குக் கம்பனி ஒன்றை அமைக்க ஆகுஞ் செலவு இது. இதை மூலதனச் செலவாகக் கொண்டு இருப்பு நிலைக்குறிப்பில் சொத்துகள் பகுதியில் காட்டலாம். ஆனால், சில ஆண்டுகளில் இதனைக் கணக்கினின்றும் நீக்கிட வேண்டுமாகையால் ஒவ்வோராண்டும் குறிப்பிட்ட, தொகையைக் இக் கணக்கில் நடைமுறைச் செலவாகக் கருதி எழுத வேண்டும். பங்குகளை விற்கப் பங்குமுகவர்க்குத் தரும் கழிவு, கடன் பத்திரங்களை (Debentures) விற்க ஆகும் செலவு போன்றவற்றையும் மூலதனச் செலவாகவே கொள்ளலாம்.

நெடு நாள் பயன்தரு செலவு (Deferred Revenue Expenditure): ஒரு நடைமுறைச் செலவிற்கு மிகவும் அதிகமான தொகை செலவழிக்கப் படுவதாகவும், அதன் பயன் செலவழிந்த ஆண்டுக்கு மட்டுமின்றிப் பின்வரும் ஆண்டுகட்கும் உரியது எனில், அச் செலவு முழுவதையும் செலவழிந்த ஆண்டுக்கு மட்டும் உரிய செலவு என்று நடைமுறைக் கணக்கிற்கு எடுத்துச் செல்லுதல் தவறு. எத்துணை ஆண்டுகட்கு அப் பயன் கிட்டும் என்று கருதுகிறோமோ அத்துணை ஆண்டுகட்கும் அச் செலவினைப் பகுத்துக் கொள்ளலாம். இவ்வாறு சாதாரணமாக நடைமுறைச் செலவாக உள்ளது மூலதனச் செலவாகக் கருதப்படுகிறது. இதனையே நெடுநாள் பயன்தரு நடைமுறைச் செலவென்கிறோம். மிகவும் அதிகமாகச் செலவழியும் விளம்பரச் செலவு, கம்பனி தொடக்கச் செலவு, பங்கு திரட்ட ஆகுஞ் செலவு, ஓரிடத்திலிருந்து வேறிடத்திற்குத் தொழிலை மாற்றுவதற்கு ஆகுஞ் செலவு போன்றவற்றை இதற்கு எடுத்துக் காட்டுகளாகக் கூறலாம்.

மூலதன வரவும் நடைமுறை வரவும் (Capital Receipts and Revenue Recepits) :

வியாபாரம் நடத்துவதில் பெறும் வரவினங்களை இச் சொல் உணர்த்தும். சரக்கு விற்பனையில் பெறும் தொகையும், வாடகை, வட்டி பெறுவது, தள்ளுபடி பெறுவது போன்றவற்றை எடுத்துக் காட்டுகளாகக் கூறலாம். ஆனால், சொத்து ஒன்றை விற்பதால் கிடைக்கும் தொகை மூலதன வரவெனப்படும். நம்மிடமுள்ள கட்டடம் ஒன்றை ரூ. 50,000-க்கு விற்கும் போழ்து, கட்டடம் என்ற சொத்துக்கு மாறுக ரொக்கம் ரூ. 50,000 அதிகரித்துள்ளது. சொத்தை விற்கும் போழ்து ஏற்படும் ஆதாயம் நடைமுறை வர

வாகும்; அப்பொழுது ஏற்படும் நட்டம் நடைமுறைச் செலவாகும். கடன் வாங்குவது மூலதன வரவாகும்.)

எடுத்துக்காட்டுகள் :

கீழ்க் கொடுக்கப்பட்டவற்றில் எது மூலதனச் செலவு, எது நடைமுறைச் செலவு எனக் காரணங்களுடன் விளக்குக.

1. பழைய லாரி ஒன்றை வாங்கிப் பழுது பார்ப்பதற்கும், வண்ணம் பூசுவதற்குமான செலவு.

2. பொறி ஒன்றை நிறுவ, தொழிலாளர்களுக்குக் கொடுத்த கூலி.

3. ஓரிடத்திலிருந்து இன்னோர் இடத்திற்கு ஆலையை மாற்ற எந்திர தளவாடங்களைப் பெயர்த்தெடுக்கவும், கொண்டு செல்லவுமான செலவு ரூ. 4,000.

4. பொறி வகை ரூ. 50,000-ல் ஒரு பொறியின் ஏட்டு மதிப்பு (Book Value) ரூ. 3,500. இதை ரூ. 1,200-க்கு விற்றுப் புதிய பொறியொன்று ரூ. 4 000-க்கு வாங்கியது.)

5. மேலாளரின் அறைகள் வசதி செய்து தரப்பட்டது.

6. கட்டடம் கட்டுவதற்குத் தேவைப்படும் கருவிகளையும் பொருள்களையும் வைப்பதற்குத் தாற்காலிகமாகக் கொட்டகைகள் கட்டப்பட்டன.

7. ஒரு படக்காட்சி அரங்கினை மீண்டும் அழகுபடுத்த ஆகுஞ் செலவு.

8. அரசினரின் ஆணையின்படி, ஒரு படக்காட்சி அரங்கில் மேலும் சில வழிகள் அமைக்கப்பட்டன.

9. ரூ. 800 மதிப்புடைய தட்டெழுத்துப் பொறியொன்று ரூ.850-க்கு விற்கப்பட்டது.

10. வங்கியிடம் வாங்கிய கடன் ரூ. 5,000.

விடை :

1. பழைய லாரியை வாங்கி அது சரிவர ஓடும் நிலைக்குக் கொண்டுவரச் செலவிடப்பட்டுள்ளது, பழைய சொத்து பயன்

படச் செய்த செலவாகும். இதனுல் லாரியின் மதிப்புக் கூடியுள்ளது. எனவே, இது ஒரு மூலதனச் செலவாகும்.

2. பொறியை நிறுவக் கொடுத்தக் கூலி ஒரு மூலதனச் செலவேயாகும்.—அது பயன்படும் நிலைக்குக் கொண்டுவரச் செய்த செலவன்ருே ?

3. இது ஒரு நடைமுறைச் செலவே. ஆனுல், வேறிடத்துக்கு இவற்றை மாற்றுவதால் இதன் பயன் பல ஆண்டுகட்குக் கிட்டக் கூடும். மேலும் மீண்டும் மீண்டும் நிகழக் கூடியதல்ல. எனவே, இதனை நெடுநாள் பயன்தரு நடைமுறைச் செலவாகக் கொண்டு, சில ஆண்டுகட்கு இச் செலவை உரித்தாக்கலாம். ஒவ்வோராண்டும் குறிப்பிட்ட தொகையை நடைமுறைச் செலவாகக் கொள்ள வேண்டும்.

4. ரூ. 3,500 மதிப்புள்ள பொறியை ரூ. 1,200-க்கு விற்றதில் ரூ. 2,300 நட்ட மேற்பட்டுள்ளது. இந் நட்டம் ஒரு நடைமுறை நட்டமாகும். (விற்பனையில் கிடைத்த ரூ. 1,200 மூலதன வரவாகும்.) புதிதாக வாங்கிய சொத்து ரூ. 4,000 மூலதனச் செலவாகும்.

5. இது ஒரு மூலதனச் செலவாகும். இதன் பயன் நெடுநாள் வரும். குளிர் சாதனப் பெட்டியை எப்பொழுது வேண்டுமாயினும் விற்றுப் பணமாக்கிக் கொள்ளலாம்.

6. கட்டடம் கட்டுவதற்கு இது ஒரு தேவையான செலவு. ஆகவே, இதை மூலதனச் செலவாகக் கொண்டு கட்டடக் கணக்கில் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

7. இது ஒரு நடைமுறைச் செலவே யாகும். இதனுல் இட வசதி அதிகரிக்கப் போவதில்லை. ஆனுல் பெருவளவில் இதற்குச் செலவாகி யிருப்பின் இதை நெடுநாள் பயன்தரு நடைமுறைச் செலவாய்க் கொள்ளலாம்.

8. மேலே விளக்கியவாறு, இதனுல் இடவசதி கூடுவதில்லை. எனவே, இதையும் நடைமுறைச் செலவாகவே கொள்ள வேண்டும்.

9. ரூ. 800 மதிப்புள்ள தட்டெழுத்துப் பொறியானது ரூ. 850-க்கு விற்கப்படுவதில் ஆதாயம் ரூ. 50 கிடைக்கிறது. ஒரு சொத்தை விற்பதில் கிடைக்கும் ஆதாயம் நடைமுறை வரவாகும். ரூ 800 மூலதன வரவாகும். காரணம் தட்டெழுத்துப் பொறி

யாக இருந்தது ரொக்கமாக மாறியுள்ளது. அதாவது ஒரு சொத்து வேறொரு சொத்தாக மாறியுள்ளது. அவ்வளவே.)

10 வங்கியிடம் கடன் வாங்கப் பட்டுள்ளது. இது திருப்பி யடைக்க வேண்டிய பொறுப்புள்ளது. எனவே, இது ஒரு மூலதன வரவே யாகும்.

மேலே விளக்கப்பட்ட (மூலதனச் செலவு நடைமுறைச் செலவு களுள் நடைமுறைச் செலவுகளே வாணிக, இலாப நட்டக் கணக்குகளில் இடம் பெறும். அவ்வாறே நடைமுறை வரவினங் களே இக் கணக்குகட்குக் கொண்டு வரப்படும். மூலதனச் செல வினங்களும் முலதன வரவினங்களும் இருப்பு நிலைக் குறிப்பில்தான் (Balance sheet) இடம் பெறும் என்று கூறியதை மீண்டும் நினைவிற் கொள்வோம்.)

வாணிக நடவடிக்கைகளின் விளைவை உணர்த்துவது வாணிகக் கணக் கென்றோம். அதாவது சரக்கு வாங்கி விற்பதில் ஏற்படும் விளைவு. சரக்கு வாங்கிய செலவினங்களைவிட, விற்பதின் மூலம் கிடைத்த வருவாய் அதிகமெனில் ஆதாயங் கிட்டியது என்று கொள்ளலாம்; விற்பனையில் பெற்ற வருவாயினும் அதிகஞ்செல வழித்துள்ளோமெனில், நட்ட மேற்பட்டதாகக் கொள்ளலாம். பொருள் உற்பத்தியில் ஈடுபட்டுள்ளவரைப் பொறுத்தவரை உற்பத்திச் செலவைவிட அதனை விற்றுப் பெற்ற தொகை அதிக மெனின் ஆதாயமாகவும் மாறியிருப்பின் நட்டமாகவும் கொள்ள வேண்டும். (சரக்கு உற்பத்திக்கான நேர்முகச் செலவுகளையே கணக்கிலெடுத்துக் கொள்கிறோம். பிற செலவினங்களை—விற்பனைச் செலவுகள்—அலுவலகச் செலவுகள்—வாணிக அல்லது தயாரிப்புக் கணக்கில் (Manufacturing account) இடம் பெறுவதில்லை. அவை இலாப-நட்டக்கணக்கிற் கெடுத்துச் செல்லப்படும்.)

முன்னரே சரக்கு இருப்பு இருப்பின் அதையும் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டும். எடுத்துக் காட்டாக, 1-1-1970 அன்று தொடக்க சரக்கிருப்பு ரூ. 7500 இருப்பதாகக் கொள்வோம். சரக்கு வாங்கியது ரூ. 15,000 எனவும், உள்சுமை கூலி, கூலி போன்ற நேர்முகச் செலவுகள் ரூ. 2,500 எனவும் கொண்டால், மொத்தம் ஆன செலவு ரூ. 25,000. 31-12-70. ல் (ஆண்டு இறுதியில்) ரூ. 5,000 பெறுமான சரக்கு கையில் இருக்கிறது என்று கொண் டால், ரூ. 20,000 மதிப்புள்ள சரக்குகள் விற்பனையாகி உள்ளன என்று பொருள் (ரூ. 25000—ரூ. 5000.) இப்பொழுது இவ்வாண்டு விற்பனைக் கணக்கு ரூ. 30,000 இருப்புக் காட்டின், இவ்வாண்டு

ஏற்பட்ட மொத்த இலாபம் ரூ. 10,000 (விற்பனை—விற்றசரக்கின் மதிப்பு) எனக் கொள்ளலாம் அல்லவா? இதனைக் கணக்கு வடிவத்தில் எழுதுவதைத்தான் வாணிகக் கணக்கென்கிறோம். கீழ்க்கண்ட வாறு வாணிகக் கணக்கு அமைந்திருக்கும்.

………… முடியும் ஆண்டுக்கான வாணிகக் க/கு

ப வ

| | | தொகை ரூ | | | தொகை ரூ |
|---|---|---|---|---|---|
| தொடக்கச் சரக்கிருப்பு | | | விற்பனை … | | |
| கொள்முதல் .. | | | கழி விற்பனைத் திருப்பம் | ——— | |
| கழி கொள்முதல் திருப்பம் | ——— | | இறுதிச் சரக்கிருப்பு | | |
| உள் சுமை கூலி | | | இலாப-நட்டக் க/கு (மொத்த நட்டம் எடுத்துச் செல்லப் படுகிறது.) | | ——— |
| கூலி | | | | | |
| இலாப-நட்டக் க/கு (மொத்த இலாபம் எடுத்துச் செல்லப் படுகிறது.) | | ——— | | | ——— |
| | | ——— | | | |

விளக்கம் :

தொடக்கச் சரக்கிருப்பு: இது சென்ற ஆண்டின் இறுதிச் சரக்கிருப்பாகும்.

கொள்முதல் : கொள்முதலிலிருந்து கொள்முதல் திருப்பத்தைக் (வெளித் திருப்பத்தைக்) கழித்துக் காட்ட வேண்டும். வாங்கிய சரக்கிலிருந்து நாம் திருப்பி யனுப்பிய சரக்கைக் கழித்தால்தானே நிகர கொள்முதல் கிடைக்கிறது. எனவேதான் இவ்வாறு வாணிகக் கணக்கில் காட்டப் படுகிறது. இதற்குத் தேவையான முடிவுப் பதிவு (Closing entry) :

கொள்முதல் திருப்பக் க/கு …ப

கொள்முதல் க/கு

(கொள்முதல் திருப்பத்தைக்

கொள்முதல் கணக்கிற் கொண்டுவர.)

இப்பொழுது கொள்முதல் திருப்பக் கணக்கு முடியப் பெறுகிறது.

நேர்முகச் செலவுகள் : சரக்கு வாங்கும் போழ்து செய்யப் படுஞ் செலவை இது குறிக்கும். வாங்கிய சரக்கைக் கொண்டு வருஞ் செலவு அல்லது நல்ல முறையில் விற்கும் வண்ணம் சரக்கு மீது செய்யும் செலவும் இதில் அடங்கும். கீழ்வரும் செலவுகளை எடுத்துக் காட்டுகளாகக் குறிப்பிடலாம்:

(i) சத்தம் (Freight) :சரக்கைக் கொண்டுவர ஆகும் இரயில் சத்தம், லாரிக் கட்டணம், கப்பல் கட்டணம் போன்றவை. சொத்து ஒன்று வாங்கும் போழ்து ஆகுஞ் செலவு சொத்துக் கணக்கில் சேர்க்கப்பட வேண்டு மென்பதை முன்னரே விளக்கியிருக்கிறோம்.

(ii) சுமை கூலி (Carriage): பண்டசாலைக்குக் கொண்டு போகக் கொடுக்கும் வண்டிச் சத்தம், தூக்குக் கூலி போன்றவை. இது உள்சுமை கூலி (Carriage Inwards) எனப்படும். அதாவது சரக்கு நம்மிடம் வரும்போழ்து ஆகுஞ் செலவு. சரக்கு விற்கும் போழ்து ஏற்கப்படும் இத்தகைய செலவு வெளிச்சுமை கூலி அல்லது வெளித் தூக்கு கூலி (Carriage .Outwards) எனப்படும். அதை இலாப-நட்டக் கணக்குக்குத்தான் கொண்டு செல்ல வேண்டும். கணக்கில் வெளிச்சுமை கூலி என்று குறிப் பிட்டுச் சொல்லாவிடில், அதை உள்சுமை கூலியாகக் கொண்டு வாணிகக் கணக்கில் பற்று வைக்க வேண்டும்.

(iii) சுங்கவரி (Customs Duty) : துறைமுகக் கட்டணம் (Dock Dues), இறக்குமதி வரி (Import Duty) : இவையெல்லாம் சரக்கு இறக்குமதி செய்யப்படும் போழ்து செய்யும் செலவுகளாகும். அதாவது சரக்கு அயல் நாட்டிலிருந்து வாங்கும் போழ்து செலுத்தும் தீர்வைகளாதலால் இவையும் வாணிகக் கணக்கில் பற்று வைக்கப்பட வேண்டும்.

(iv) கூலி (Wages) : சரக்கை நல்ல முறையில் விற்கும் நோக் கோடு செய்யும் செலவையும், கச்சாப் பொருள்களை முடிவுப் பொருள்களாக மாற்றும் உற்பத்தித் தொழிலில் ஈடுபட்டுள்ள ஊழியர்கட்குக் கொடுக்கும் கூலியையும் இது குறிக்கும். அதாவது அது தயாரிப்புக் கூலியாகிறது. எனவே, கூலி எனக் கொடுக்கப்படின், அதைச் சரக்கு மீதான நேர்முகச் செலவாய்க் கொண்டு வாணிகக் கணக்கில் பற்று வைக்க வேண்டும்.

இனி வரவுப் பக்கத்தை நோக்குவோம்.

விற்பனை (Sales) : இவ்வாண்டில் நிகழ்ந்த விற்பனை. இதில் விற்பனைத் திருப்பம் அல்லது உட்திருப்பம் (Returns Inward) இருப்பின் அது கழிக்கப்பட வேண்டும். அப்பொழுதுதானே இறுதியாக விற்பனையான தொகை கிடைக்கும். விற்பனைத் திருப்பத்தை விற்பனைக் கணக்கில் கொண்டு வருவதற்கான முடிவுப் பதிவு :

விற்பனைக் க/கு ப
விற்பனைத் திருப்பக் க/கு
(விற்பனைத் திருப்பத்தை விற்பனைக்
கணக்கில் கொண்டுவர.)

இறுதிச் சரக்கிருப்பு (Closing Stock) : குறிப்பிட்ட எந்த நாளிலும், விற்கப்படாச் சரக்கு இருக்கும். அவ்விறுதிச் சரக்கைத் தக்க முறையில் மதிப்பிட்டு வியாபாரக் கணக்கில் வரவு வைக்க வேண்டும். இது வியாபாரக் கணக்கின் வரவுப் பகுதியில் காணப்படுவதால் இதில் ஆழ்ந்த கவனம் செலுத்த வேண்டும். மொத்த இலாப நட்டம் மாறுபடுவது இதைப் பொறுத்துள்ளது. எனவே, ஆண்டு இறுதியில் சரக்கிருப்பைக் கணக்கிடுவது மிகவும் சிறப்பு வாய்ந்த பணியாகக் கருதப் படுகிறது.

முதலில் கடையில்—கிடங்கில்—ஆலையில் உள்ள சரக்குப் பட்டியலைத் தயாரிக்க வேண்டும். இதைத் தயாரிப்பதில் கீழ்க் கண்டவற்றை நினைவில் வைத்துக் கொள்ளுதல் வேண்டும்.

கீழ்க்கண்ட வகையில் பெற்றிருக்கும் சரக்கைச் சரக்கிருப்புப் பட்டியலில் சேர்க்கக் கூடாது:

1. அனுப்பீட்டு (consignmemt) அடிப்படையில் தம்மிடம் இருக்கும் சரக்கு. இவ்வகைச் சரக்கின் உரிமை அனுப்பீட்டாளரிடம் தான் (consignor) உள்ளது. எனவே, இதைத் தம் சரக்காய்க் கொள்ளுதல் தவறாகும்.

2. 'விற்பனை அல்லது திருப்பம்' (Sale or return basis) அடிப்படையில் உள்ள சரக்கு. அவ்வாறிருக்கும் சரக்கை ஒப்பி ஏற்காவிடின், அதை அனுப்பியவரிடம் திருப்பியனுப்ப வேண்டும். எனவே, இவ்வகையில் தம்மிடம் உள்ள சரக்கையும் பட்டியலில் சேர்க்கக் கூடாது.

3. பிறர்க்கு விற்றுவிட்ட, ஆனால் தம்மிடம் வாங்கியோர்க்கு அனுப்பப்படாமல் தம் கிடங்கிலேயே இருக்கும் சரக்கு. இதற்கான இடாப்புத் தயாரிக்கப்பட்டு ஏடுகளில் விற்பனையாகப் பதியப் பட்டிருக்கும். எனவே, இவ்வகைச் சரக்கையும் சரக்கு இருப்புப் பட்டியலில் சேர்க்கக் கூடாது.

4. சரக்கு வாங்கியும் வந்து சேராமலிருக்கலாம். அதைக் கொள்முதலாகக் கருதிக் கொள்முதல் ஏட்டில் பதியத் தேவை யில்லை. அந்நிலையில் வராச் சரக்கை இறுதிச் சரக்கிருப்பிலும் சேர்த்துக்கொள்ளுதல் அவ்வளவு சரியன்று. அத்தகைய சரக் கினைப் பிறரின் முகவர் என்ற முறையில் நம்மிடமிருக்கும் சரக்கை யும் பிணையாக நம்மிடம் கொடுத்து வைக்கப்பட்டிருக்கும் சரக் கையும் இறுதிச் சரக்கிருப்பில் சேர்க்கக் கூடாது.

('வழியிலுள்ள சரக்கு' (Goods-in-Transit) எனுந் தனிக் கணக்கில் பற்று வைத்து நம்மிடம் விற்றவர் கணக்கில் வரவு வைத்திடுதலே சிறந்த முறை. 'வழியிலுள்ள சரக்குக்' கணக்கு இருப்பு நிலைக் குறிப்பில் சொத்துகள் பகுதியிலும், சரக்கை விற்றவர் கணக்கு பொறுப்புகள் பகுதியிலும் காண்பிக்கப் பெறும்.)

விற்பனை அல்லது திருப்பம் அடிப்படையில் பிறரிடம் அனுப்பிய சரக்கு அவரால் ஒப்பி ஏற்கப்படாவரை, அதை விற்றதாகக் கொள்ளுதல் வழுவாகும். எனவே, அவ்வாறு அனுப் பப்படாச் சரக்கையும் இறுதிச் சரக்கிருப்புப் பட்டியலில் சேர்த்துக் கொள்ள வேண்டும். நம் சரக்கு முகவர் கைவச மிருப்பினும் அல்லது பிணையாகப் பிறரிடம் கொடுத்து வைக்கப்பட்டிருப் பினும் அதனையும் இறுதிச் சரக்கிருப்பில் சேர்க்க வேண்டும்.

இவ்வாறு சரக்கிருப்புப் பட்டியலைத் (Stock List) தயாரித்த பின் அவற்றை மதிப்பிட வேண்டும். இதுதான் மிகவும் முக்கிய மான பணியாகும். சரக்கு விற்கப்பட்ட பின்தான் ஆதாயம் கிட்டியதாகக் கொள்ள வேண்டும். எனவே, சந்தை விலை (Market Price) அதிகமாயிருக்குமாயின், அதனடிப்படையில் இறுதிச் சரக்கு மதிப்பிடப் படுமாயின், விற்பனையாகா முன்னரே ஆதாயத் தைப் பெற்று விட்டதாக உணர்த்தும். எனவே, அதன் அடக்க விலை (Cost Price) சந்தை விலையினும் குறைந்திருப்பின் அடக்க விலை வீதத்திலேயே மதிப்பிட வேண்டும். அவ்வாறின்றி நிலவும் விலை அடக்க விலையினும் குறைந்திருக்கு மாயின், சந்தை விலை வீதத்தில் தான் இறுதிச் சரக்கை மதிப்பிட வேண்டும். காரணம் இப்பொழுது

அவை விற்கப்படுமாயின் அந்த விலைக்கே விற்றாக வேண்டும். நட்டம் ஏற்படுவதாக உணரின், அதற்கு வகை உடனேயே செய்ய வேண்டும். ஆனால் இலாபம் பெறு முன்னரே இலாபம் அடைந்து விட்டதாகக் கருதுதல் தவறு. இதிலிருந்து பெறப்படும் உண்மை அடக்கவிலை, சந்தைவிலை— இவற்றில் எது குறைந்துள்ளதோ— அதன் அடிப்படையில் இறுதிச் சரக்கிருப்பு மதிப்பிட வேண்டும் (Cost Price or Market Price whichever is lower). இவ்வாறு மதிப்பிடப்பட்ட இறுதிச் சரக்கிருப்பைக் கணக்கில் கொண்டு வரத் தேவையான பதிவு.

இறுதிச் சரக்கிருப்புக் க/கு ப

வாணிகக் க/கு

(இறுதிச் சரக்கிருப்பை வாணிகக்

கணக்கில் கொண்டு வர.)

இவ்விறுதிச் சரக்கிருப்பு மதிப்புடைய பொருள். அதாவது சொத்தினத்தைச் சார்ந்தது. எனவே, இருப்பு நிலைக் குறிப்பில் சொத்துகள் பகுதியில் காட்டப் பெறும்.

முடிவுப் பொருள்களைப் பொறுத்தவரை இம்முறையை ஏற்றுக் கொள்ளலாம். ஆனால், ஆலையில் உள்ள கச்சாப் பொருள்களையோ உற்பத்தியில் பயன்படுத்தப்படும் பஞ்சு, எண்ணெய் போன்ற பண்டங்களையோ மதிப்பிடுவதில் இம் முறை பின்பற்றப்படுவதில் கருத்து வேறுபாடுண்டு. கச்சாப் பொருள்களை விற்கப் போவதில்லை யாதலால் சந்தை விலையை நோக்கத் தேவையில்லையென்றும், அதனால் அதன் அடக்க விலையிலேயே மதிப்பிடல் போதும் என்றும் சிலர் கருதுகின்றனர். ஆனால், அதை மீண்டும் பெறும் விலை அல்லது அடக்க விலை—இதில் எது குறைவோ அவ் விலையில் மதிப்பிடல் நன்கு என்றும் சிலர் கருதுகின்றனர். அதாவது அந்தச் சரக்கை இப்பொழுது பெற வேண்டுமாயின் என்ன விலை தரவேண்டும் என்பது. காரணம் இப்பொழுது கச்சாப் பொருள்களின் விலை திடீரென்று குறையுமாயின் முடிவுப் பொருளின் விலையும் வீழும் பின்னர் ஏற்பட இருக்கும் நட்டத்திற்கு இப்பொழுதே ஈடு செய்ய இம் முறை பின்பற்றப்படுதல் நலம். பயன்படும் பிற பண்டங்களை (Stores) அடக்க விலையிலேயே மதிப்பிடலாம். காரணம் மொத்த உற்பத்திச் செலவில் அவற்றின் பங்கு மிகவும் குறைந்திருக்கும்.

கீழ்க்கண்ட முறைகளில் கச்சாப் பொருள்கள் உற்பத்தியில் பயன்படு பண்டங்கள் முதலியவற்றின் அடக்கவிலை கணக்கிடப் படுகின்றன,

(i) "முவ முவெ" (முதலில் வந்தது முதலில் வெளியேறும்) முறை : (FIFO = First In First Out). முதலில் வந்த சரக்கு முதலில் அனுப்பப்படுகிறது என்ற அடிப்படையில், இப்பொழுதிருக்கும் இறுதிச் சரக்கிருப்பு இறுதியில் —கடைசியாக—வாங்கியதாக இருக்கும் என்று கொள்ளப் படுகிறது. அதாவது, முதலில் வாங்கியிருந்த கச்சாப் பொருள்கள் உற்பத்திக்குப் பயன்படுத்தப்பட்டிருக்கும்.

ஆகவே இறுதியில் வாங்கிய கச்சாப் பொருள்களே கைவசம் உள்ளதென்று கொள்ளப்பட்டு இறுதியில் வாங்கிய விலை வீதத்தில் சரக்கிருப்பு கணக்கிடப்படும்.

எடுத்துக்காட்டு : கீழ்க்கண்ட நாள்களில் கச்சாப் பொருள்கள் வாங்கப்பட்டன என்று கொள்வோம்.

செப்டம்பர் 15, 1970-ல் ஒன்று ரூ. 10 வீதம் 200 அலகுகள் (Units).

டிசம்பர் 8, 1970-ல் ,, ரூ. 12 வீதம் 75 ,,

நவம்பர் 17-ல் 150 அலகுகள் (Units) உற்பத்திக்கு வழங்கப் பட்டது என்று கொண்டால் சரக்கிருப்பு 125 அலகுகள் இருக்கின்றன. இங்கு விளக்கப்பட்ட முறையில் மதிப்பிடப்படின், முதலில் வாங்கியதில் உள்ள 50 அலகுகளை அவ்விலை வீதத்திலும் பின்னர் வாங்கிய 75 அலகுகளை பின் வாங்கிய விலை வீதத்திலும் கணக்கிடப்பட வேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| அதாவது : | 50 அலகுகள்—ஒன்று ரூ. 10 வீதம் | ... ரூ. | 500 |
| | 75 ,, ,, ரூ. 12 ,, | ... ரூ. | 900 |
| இறுதிக் கச்சாப் பொருள்கள் இருப்பு | | ... ரூ. | 1400 |

(ii) "இவமுவெ" முறை (இறுதியில் வந்தது முன் வெளியேறும் முறை) (LIFO—Last In First Out) : முன் விவரிக்கப்பட்ட முறைக்கு மாறிய முறை இது. இறுதியாக வாங்கிய கச்சாப் பொருள்கள் முதலில் உற்பத்திக்குப் பயன்படுத்த வழங்கப்படுகின்றன என்ற அடிப்படையில் இறுதிச் சரக்கிருப்பு மதிப்பிடப்படுகிறது. ஆகவே, எப்பொழுது வாங்கியது பயன்படுத்தப் படாமல் இருக்கிறது என்பதை முதலில் உணர்ந்து, அது வாங்கப்பட்ட விலை வீதத்தில் மதிப்பிடப்பட வேண்டும்.

எடுத்துக்காட்டு : கீழ்க்கண்டவாறு கச்சாப் பொருள்கள் வாங்கப்பட்டன என்று கொள்வோம்.

11-10-1971-ல் 40 அலகுகள் ஒன்று ரூ. 6 வீதம்.

12-11-1971-ல் 30 ,, ,, ரூ. 7 ,,

17-12-1971-ல் 30 ,, ,, ரூ. 8 ,,

5-12-1971-ல் 25 அலகுகள் உற்பத்திக்காக வழங்கப்பட்டன என்று கொண்டால் அது 12-11-1971-ல் வாங்கியதிலிருந்து வழங்கப்பட்டது என்பது இதன் அடிப்படை. (5-12-71 அன்றைய நிலையில் இறுதியாக வாங்கிய நாள் 12-11-1971 அன்றுதானே ?) கீழ்க்கண்ட முறையில் இறுதிச் சரக்கிருப்பான 75 அலகுகளும் மதிப்பிடபட வேண்டும்.

| | ரூ. |
|---|---|
| 11-10-71-ல் வாங்கிய 40 அலகுகள் ரூ. 6 வீதம் ... | 240 |
| 12-11-71-ல் ,, 5 ,, ரூ. 7 ,, | 35 |
| 17-12-71-ல் ,, 30 ,, ரூ. 8 ,, | 240 |
| | 515 |

(iii) சராசரி அடிப்படை (Average Basis) : சராசரி என்பது எளிய சராசரி (Simple average) என்றும் சிறப்பு வாய்ந்த சராசரி (Weighted average) என்றும் இருவகைப்படும் முன் முறையில் வாங்கியிருக்கும் பல விலை வீதங்களைக் கூட்டி, எத்துணைமுறை வாங்கியிருக்கிறோமோ அதால் வகுத்தால் கிடைக்கும் தொகை சராசரித் தொகையாகும். முன் சொன்ன எடுத்துக்காட்டில் மூன்று முறை வாங்கிய விலை வீதங்கள்— $6+7+8$ = ரூ. 21. மூன்று முறை வாங்கியுள்ளதால் $\frac{21}{3}$ = ரூ. 7 சராசரி விலை எனப்படும்.

பின் முறைப்படி, வாங்கிய கச்சாப் பொருள்களின் அளவு விலை வீதத்தில் பெருக்கப்படுகிறது. இவ்வாறு கிடைக்கும் தொகைகளைக் கூட்டி, அதனை மொத்தம் வாங்கிய அளவால் வகுக்க வேண்டும். இதுவே சராசரி விலையாகக் கருதப்படும். முன்

சொன்ன எடுத்துக்காட்டைப் பயன்படுத்திச் சராசரி விலையைக் கணக்கிடுவோம்.

| | ரூ. |
|---|---|
| 40 × 6 = | 240 |
| 30 × 7 = | 210 |
| 30 × 8 = | 240 |
| 100 | 690 |

$$\text{சராசரி} = \frac{690}{100} = \text{ரூ. } 6.90$$

சரக்கிருப்பை இச் சராசரி விலையான ரூ. 6. 90 வீதத்தில் கணக்கிட வேண்டும்.

(iv) அடியிருப்பு முறை (Base stock Method): எந்த ஆலையிலும் ஒவ்வொரு வகைப் பொருளிலும் இருக்க வேண்டிய குறைந்தளவு சரக்கிருப்பு (Minimum level of stock) முடிவு செய்யப்படும் உற்பத்தித் தொழிலுக்கேற்றவாறும், அது கிடைக்கும் நிலைக்குத் தக்கவாறும் தொழிலுக்குத் தொழில் மாறுபடலாம். அந்த அளவாவது சரக்கு எப்பொழுதும் இருப்பில் இருக்க வேண்டும். அது பயன்படுத்தப்படினும் உடனடியாக சரக்கு வாங்கி அந்தளவு தேக்கி வைக்கப்பட வேண்டும். இது ஒரு நிலைச் சொத்து போன்று கருதப் படுகிறது. எனவே, அது வாங்கும் போழ்து முதலில் கொடுத்த விலையிலேயே எப்பொழுதும் இந்த அளவு சரக்கு மதிப்பிடப்படும். எஞ்சியுள்ள சரக்கிருப்பு முன் விளக்கப்பட்ட எம்முறைகளிலேனும் கணக்கிடப்படும். எடுத்துக்காட்டாக எப்பொழுதும் வைத்திருக்க வேண்டிய குறைந்தளவு சரக்கு 100 கிலோ என்றும் அதை வாங்கிய விலை கிலோ ரூ. 3 என்றும் கொள்வோம். இப்பொழுது சரக்கு மதிப்பிட வேண்டிய விலை ரூ. 5 என்றும் இருக்கின்ற சரக்கின் அளவு 450 கிலோ என்றும் கொண்டால் கீழ்க்கண்ட முறையில் சரக்கு மதிப்பிடப்படும்.

அடியிருப்புச் சரக்கு (Minimum stock)

| | ரூ |
|---|---|
| 100 × 3 | 300 |
| மீதமுள்ள சரக்கு 350 × 5 | 1,750 |
| மொத்த சரக்கின் மதிப்பு | 2.050 |

நீண்டகாலத்தில் சரக்கிருப்பு எடுப்பின். சரக்கிருப்பு எடுப்பது என்பது மிகவும் முக்கியமான செயலாகும் என்று கூறியிருக்கிறோம். விற்பனை முதலியவற்றை இரண்டு, மூன்று நாள்களுக்கு நிறுத்தி விட வேண்டியிருக்கும். ஆனால், சில நிறுவனங்கள் இவ்வாறு நடவடிக்கைகளை நிறுத்திவைக்காமல், சிறுகச் சிறுக பல நாள்களில் சரக்கிருப்பு எடுக்கும். சரக்கிருப்பு எடுக்குங்காலை வாங்கிய சரக்கையும் விற்பனையையும் அந்நிலையில் சரிக்கட்ட வேண்டியிருக்கும். சரக்கிருப்பு எடுக்கும் போழ்து வாங்கிய சரக்கைச் சரக்கிருப்பிலிருந்து கழிக்க வேண்டும். பின்னர் விற்பனையான சரக்கின் அடக்கவிலையைக் கூட்டிக் கொள்ள வேண்டும். விற்பனையிலிருந்து மொத்த இலாப சத விகிதம் கணக்கிட்டுக் கழித்துவிடின் விற்பனையான சரக்கின் அடக்க விலை கிடைக்கும்.

எடுத்துக் காட்டு 34

'காவேரி பல்பொருளங்காடி' 31-12-1970-ல் ஆண்டுக் கணக்கை முடிக்கின்றனர். இரு வாரங்களில் சரக்கிருப்பு எடுக்கின்றனர். அவ்வாறு எடுக்கப்பட்ட சரக்கின் மதிப்பு ரூ. 13,850. கீழ்க்கண்ட நடவடிக்கைகள் இரு வாரங்களில் நிகழ்ந்தவை இதில் சரிக்கட்டப்படவில்லை.

1 31-12-1970-க்குப் பின்னர் இரு வாரங்களில் செய்த ரொக்கக் கொள்முதல் ரூ. 850.

2 இவ்விரு வார காலத்தில் செய்த மொத்த விற்பனை ரூ. 2000.

3 டிசம்பர் திங்களில் 'விற்பனை அல்லது திருப்பம்' அடிப்படையில் அனுப்பப்பட்ட சரக்கின் விற்பனை விலை ரூ. 500. 31-12-1970 அன்றும் அது திருப்பியனுப்பக் கூடியவை.

4 இவ்விரு வாரத்தில், கொள்முதலேட்டின்படி வாங்கிய சரக்கு ரூ. 670. ஆனால் ரூ. 170-க்கான சரக்கு, சரக்கிருப்பு எடுத்து முடியும்வரை வந்து சேரவில்லை.

5 விற்பனையில் 25% மொத்த இலாபம் பெறுவதாகக் கொண்டு 31-12-1971-க்கான சரக்கிருப்பைக் காண்க.

விடை : ரூ

எடுத்த சரக்கிருப்பு 13,850

கழி :

| | | | |
|---|---|---|---|
| 1971ம் ஆண்டுக்கான ரொக்க கொள்முதல் | ரூ. 850 | | |
| " " கடன் கொள்முதல் | 500 | 1,350 | |
| | | 12,500 | |

(வாங்கிய சரக்கில் வந்து சேராதது போக

(ரூ. 670—ரூ. 170)

கூட்டு :

விற்பனையான சரக்கின் அடக்கவிலை :

| | | | |
|---|---|---|---|
| விற்பனை | ரூ. 2,000 | | |
| கழி இலாபம் 25% | 500 | 1500 | |
| 'விற்பனை அல்லது திருப்பம்' அடிப்படையில் வாடிக்கையாளர்களிடமிருக்கும் சரக்கு ரூ. 500—125 | | 375 | 1,875 |
| 31-12-1970ல் இறுதிச் சரக்கிருப்பு | | | 14,375 |

வாணிகக் கணக்கின் பற்றுப் பகுதியையும் வரவுப் பகுதியையும் கூட்ட வேண்டும். வரவுப் பகுதி அதிகமிருப்பின், மொத்த இலாபம் ஏற்பட்டிருக்கிறது என்று பொருள். சரக்கு வாங்கி விற்றதில் ஏற்பட்ட இலாபம் இது. இதை இலாப-நட்டக் கணக்கிற் கெடுத்துச் செல்ல வேண்டும். எனவே, வியாபாரக் கணக்கின் பற்றுப் பகுதியில் இவ்விருப்புக்கட்டும் தொகையை (மொத்த இலாபத்தை) இலாப-நட்டக் கணக்கென்று எழுதிக் காட்ட வேண்டும்.

அவ்வாறின்றிப் பற்றுப் பகுதி, வரவுப்பகுதியினும் மிகுந்திருப்பின், மொத்த நட்டம் ஏற்பட்டுள்ளதென்று பொருள். இதனை வியாபாரக் கணக்கின் வரவுப் பகுதியில் இலாப-நட்டக் கணக்கென்று எழுதிக் குறிப்பிட வேண்டும்.

வாணிகக் கணக்கின் இருப்புப் பட்டியலிலிருக்கும் உரிய கணக்குகளைக் கொண்டுவரத் தேவையான குறிப்பேட்டுப் பதிவு:

வாணிகக் க/கு ... ப

தொடக்கச் சரக்கிருப்பு க/கு

கொள்முதல் ... க/கு

உள் சுமை கூலிக் க/கு

கூலிக் க/கு

(வாணிகக் கணக்கில் பற்றுக்குரிய கணக்குகளைக்கொண்டுவர)

விற்பனைக் க/கு ... ப

இறுதிச் சரக்கிருப்புக் க/கு ... ப

வாணிகக் க/கு

(வாணிகக் கணக்கில் வரவுக்குரிய

கணக்குகளைக் கொண்டுவர.)

மொத்த இலாபம் ஏற்பட்டிருக்குமாயின் :

வியாபாரக் க/கு ...... ப

இலாப நட்டக் க/கு

(மொத்த இலாபத்தை இலாப-நட்டக்

கணக்கிற் கொண்டு செல்ல.)

மொத்த நட்டமாயிருப்பின்,

இலாப-நட்டக் க/கு ... ப

வாணிகக் க/கு

மொத்த நட்டத்தை இலாப-

நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்ல.)

எடுத்துக் காட்டு 35 :

கீழ்க்கண்ட இருப்புகள் இராவணன் ஏட்டிலிருந்து 30-6-1971-ல் எடுக்கப்பட்டன. அவற்றிலிருந்து இருப்புப் பட்டியல் தயாரித்து 30-6-1971-ல் முடியும் ஆண்டுக்கான

வாணிகக் கணக்கைத் தயாரிக்க. தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளையும் தருக.

| | | ரூ. |
|---|---|---|
| கொள்முதல் | ... | 40,200 |
| கட்டடம் | ... | 50,000 |
| தட்டெழுத்துப் பொறி | ... | 2,500 |
| கழிவு பெற்றது | ... | 1,370 |
| இலாப ஈவு | ... | 430 |
| வாடகை பெற்றது | ... | 1,800 |
| விற்பனை | ... | 90,070 |
| வெளித்திருப்பம் | ... | 2,200 |
| வெளிச்சுமை கூலி | ... | 180 |
| தள்ளுபடி அளித்தது | ... | 200 |
| ஊதியம் | ... | 7,500 |
| விளம்பரம் | ... | 790 |
| தொடக்கச் சரக்கிருப்பு | ... | 5,875 |
| உள் சுமை கூலி | ... | 110 |
| உள் திருப்பம் | ... | 1,940 |
| வங்கி மேல்வரைப் பற்று | ... | 6,275 |
| ரொக்கம் கையிருப்பு | ... | 375 |
| விற்பனை வரி | ... | 1,280 |
| கூலி | ... | 5,345 |
| சரக்கு மீது இறக்குமதி வரி | ... | 1,370 |
| துறைமுகக் கட்டணங்கள் | ... | 450 |
| முதலீடு | ... | 5,900 |
| அலுவலகச் செலவு | ... | 500 |
| மனைத்துணைப் பொருள் | ... | 3,200 |
| கடனாளிகள் | ... | 10,700 |
| கடனீந்தோர் | ... | 8,800 |
| சைக்கிள் | ... | 1,200 |
| பொறிவகை | ... | 10,400 |

| | | |
|---|---|---|
| பழுது பார்க்குஞ் செலவு | ... | 650 |
| பயணச் செலவு | ... | 150 |
| எடுப்புக் கணக்கு | ... | 2000 |
| செலுத்த வேண்டிய உண்டியல் | ... | 1870 |

இறுதிச் சரக்கிருப்பு ரூ. 10,500 என மதிப்பிடப்பட்டது.

விடை:

இராவணனின்
30-6-1971-ற்கான இருப்புப் பட்டியல்

| வ. எண். | கணக்கு | பே. ப.எ. | பற்று ரூ | வரவு ரூ |
|---|---|---|---|---|
| 1 | கொள்முதல் | | 40,200 | |
| | கட்டடம் | | 50,000 | |
| | தட்டெழுத்துப் பொறி | | 2,500 | |
| | கழிவு பெற்றது ... | | | 1,370 |
| | இலாப ஈவு ... | | | 430 |
| | வாடகை பெற்றது ... | | | 1,800 |
| | விற்பனை ... | | | 90,070 |
| | வெளித் திருப்பம் ... | | | 2,200 |
| | வெளிச் சுமை கூலி ... | | 180 | |
| | தள்ளுபடி அளித்தது ... | | 200 | |
| | ஊதியம் ... | | 7,500 | |
| | விளம்பரம் ... | | 790 | |
| | தொடக்கச் சரக்கிருப்பு ... | | 5,875 | |
| | உள்சுமை கூலி ... | | 110 | |
| | உள் திருப்பம் ... | | 1,940 | |
| | வங்கி மேல்வரைப் பற்று ... | | | 6,275 |
| | ரொக்கம் கையிருப்பு ... | | 375 | |
| | விற்பனை வரி ... | | 1,280 | |
| | கூலி ... | | 5,345 | |
| | சரக்கு மீது இறக்குமதி வரி ... | | 1,370 | |
| | துறைமுகக் கட்டணம் ... | | 450 | |
| | முதலீடு ... | | 5,900 | |
| | அலுவலகச் செலவு ... | | 500 | |
| | மனைத்துணைப் பொருள் ... | | 3,200 | |
| | கடனாளிகள் ... | | 10,700 | |
| | கடனீந்தோர் ... | | | 8,800 |
| | சைக்கிள் ... | | 1,200 | |
| | பொறிவகை ... | | 10,400 | |
| | பழுது பார்க்குஞ் செலவு ... | | 650 | |
| | பயணச் செலவு ... | | 150 | |
| | எடுப்புக் கணக்கு ... | | 2,000 | |
| | செலுத்த வேண்டிய உண்டியல் ... | | | 1,870 |
| | முதல் கணக்கு | | | 40,000 |
| | | | 1,52,815 | 1,52,815 |

எடுத்துக்காட்டு 35 இல் கொடுத்திருக்கும் இருப்புகளில் முதல் கணக்குக் கொடுக்கப்படவில்லை. இருப்புப் பட்டியல் தயாரித்ததில், பற்றிருப்புகளினும் வரவிருப்புகள் ரூ. 40,000 குறைந்து காணப்படுவதால், இதை முதல் தொகையாகக் கொள்ளலாம். தேவையான குறிப்பேட்டுப் பதிவுகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

| | | பற்று ரூ | வரவு ரூ |
|---|---|---|---|
| வெளித் திருப்பக் க/கு ... | ப | 2,200 — | |
| கொள்முதல் க/கு ... | | | 2,200 — |
| (கொள்முதல் திருப்பத்தைக் கொள்முதல் கணக்கிற்கு மாற்ற.) | | | |
| விற்பனைக் க/கு ... | ப | 1,940 — | |
| உள் திருப்பக் க/கு ... | | | 1,940 — |
| (விற்பனைத் திருப்பத்தை விற்பனை கணக்கிற்கு மாற்ற.) | | | |
| வாணிகக் க/கு ... | ப | 51,150 — | |
| தொடக்கச் சரக்கிருப்பு ... | | | 5,875 — |
| கொள்முதல் ... | | | 38,000 — |
| உள்சுமை கூலி ... | | | 110 — |
| சரக்கு மீது இறக்குமதி வரி | | | 1,370 — |
| துறைமுகக் கட்டணம் ... | | | 450 — |
| கூலி ... | | | 5,345 — |
| (மேற்கண்ட கணக்குகளை வாணிகக் கணக்கிற்கு மாற்றி முடிக்க) | | | |
| விற்பனைக் க/கு | ப | 88,130 — | |
| வாணிகக் க/கு | | | 88,130 — |
| (விற்பனைக் கணக்கை வாணிகக் கணக்கிற்கு மாற்றி முடிக்க.) | | | |
| இறுதிச் சரக்கிருப்பு | ப | 10,500 — | |
| வாணிகக் க/கு | | | 10,500 — |
| (இறுதிச் சரக்கிருப்பைக் கணக்கில் கொண்டுவர.) | | | |
| வாணிகக் க/கு | ப | 47,480 — | |
| இலாப-நட்டக் க/கு | | | 47,480 — |
| (மொத்த இலாபத்தை இலாப-நட்டக் கணக்கிற்கு மாற்ற.) | | | |

30-6-1971-இல் முடியும் ஆண்டுக்கான

**ப இராவணனின் வாணிகக் கணக்கு வ**

| | | ரூ | | | | | ரூ | |
|---|---|---|---|---|---|---|---|---|
| தொடக்கச் சரக்கிருப்பு | | 5,875 | — | விற்பனை | 90,700 | | | |
| கொள் முதல் | 40,200 | | | கழி உள் திருப்பம் | 1,940 | | 88,130 | — |
| கழி வெளித் திருப்பம் | 2,200 | 38,000 | — | இறுதிச் சரக்கிருப்பு | | | 10,500 | — |
| உள் சுமை கூலி | | 110 | — | | | | | |
| சரக்கு மீது இறக்குமதி வரி | | 1,370 | — | | | | | |
| துறைமுகக் கட்டணம் | | 450 | — | | | | | |
| கூலி | | 5,345 | — | | | | | |
| இலாப-நட்டக் க/கு —மொத்த இலாபம் மாற்றப்படுகிறது. | | 47,480 | — | | | | | |
| | | 98,630 | — | | | | 98,630 | — |

## உற்பத்திக் கணக்கு அல்லது தயாரிப்புக் கணக்கு

## (Manufacturing Account)

ஏதேனும் ஒரு பொருள் உற்பத்தியில் ஈடுபட்டிருக்கும் தொழில் நிறுவனம் உற்பத்திச் செலவைக் கணிக்க, உற்பத்திக் கணக்கு என்று ஒன்று தயாரிப்பது வழக்கம். உற்பத்தித் துறை பற்றிய விளக்கத்தை—விளைவை இக் கணக்கும், விற்பனைபற்றிய வியாபார நிலையை வாணிகக் கணக்கும் விளக்கும்.

(தயாரிப்புக் கணக்கில் என்னென்ன கணக்குகள் இடம்பெற வேண்டுமென்பது அதன் நோக்கத்தைப் பொறுத்துள்ளது. ஒரு பொருளின் உற்பத்திச் செலவை அறியும்பொருட்டு அது தயாரிக்கப்படுகிறதா, அல்லது உற்பத்தித் துறையின் இலாப நட்டத்தை அறிய வேண்டித் தயாரிக்கப்படுகிறதா என்பதைப் பொறுத்துத் தயாரிப்புக் கணக்கு அமையும்.)

சிறு உற்பத்தியாளர்கள் தயாரிப்புக் கணக்கையும் வாணிகக் கணக்கையும் ஒன்றிணைத்துத் தயாரிப்பார். இது முதலில் விளக்கிய வாணிகக் கணக்குப் போன்றே அமைந்திருக்கும். இதில் உற்பத்திச் செலவுகளனைத்தும் இடம் பெறும். இதில் இடம் பெறும் சில கணக்குகள் கீழே விளக்கப்பட்டுள்ளன.

தொடக்கச் சரக்கிருப்பு : உற்பத்தித் தொழிலில் ஈடுபட்டுள்ளதால், கச்சாப் பொருள்களின் (Raw materials) சரக்கிருப்பும் முடிவுறுப் பொருள்களின் (Partly manufactured goods) சரக்கிருப்பும், தயாரிக்கப்பட்ட முடிவுப் பொருள்களின் (Finished goods) சரக்கிருப்பும் இடம்பெறும்.

எரி செலவு (Fuel) : உற்பத்திக்கு இன்றியமையா எரிபொருள் செலவு (நிலக்கரி, எரியெண்ணெய் போன்றவை). எந்திரங்களை இயக்கத் தேவையான மின்விசை (Electric power) போன்றவையும் இடம் பெறும். ஆலைக்கு ஆகும் மின் செலவு, ஆலைவாடகை, வெப்பப்படுத்தும் (Heating) செலவு, பொறிவகைகளுக்கும் ஆலைக் கட்டடத்துக்கும் ஆகும் பழுது பார்க்கும் செலவு போன்ற ஆலைக்குரிய செலவுகளனைத்தும் இக் கணக்கில் பற்று வைக்கவேண்டும். இக் கணக்கு காட்டும் மொத்த இலாபம் வியாபாரத்தில் ஏற்பட்டது மட்டு மன்று; உற்பத்தித் துறைக்கான மொத்த இலாபமும் உள்ளடங்கிய தாகும். கீழ்க்கண்ட வகையில் அது அமைந்திருக்கும்.

ப உற்பத்திக் கணக்கு வ

| | ரூ | | ரூ |
|---|---|---|---|
| | | விற்பனை | ... |
| தொடக்கச் சரக்கிருப்பு | | கழி விற்பனைத் திருப்பம் | —— |
| கச்சாப் பொருள் | | | |
| முடிவுறுப் பொருள் | | இறுதிச் சரக்கிருப்பு : | ... |
| முடிவுப் பொருள் | —— | | |
| கச்சாப் பொருள்களின் | | கச்சாப் பொருள்கள் | ... |
| கொள்முதல் | ... | முடிவுறுப் பொருள்கள் | ... |
| கழி கொள்முதல் திருப்பம் | —— | முடிவுப் பொருள் | —— |
| உள் சுமை கூலி | ... | | |
| தயாரிப்புக் கூலி | ... | இலாப - நட்டக் க/கு. | |
| மின்விசை | ... | (மொத்த நட்டம் | |
| ஆலைக்கான மின் செலவு | ... | எடுத்துச் செல்லப் | |
| ஆலை வாடகை, ஈட்டுறுதி | ... | படுகிறது.) | |
| நீர், எண்ணெய், எரிவளி | ... | | |
| (Water, oil, gas) | ... | | |
| நிலக்கரி | ... | | |
| பிற உற்பத்திச் செலவுகள் | ... | | |
| பழுது பார்க்குஞ் செலவு | ... | | |
| கட்டடம் | — | | |
| எந்திரம் | —— | | |
| தேய்மானம் | ... | | |
| கட்டடம் | ... | | |
| எந்திரம் | —— | | |
| இலாப-நட்டக் க/கு (தயாரிப்பில் ஏற்பட்ட இலாபத்தையும் உள்ளடக்கிய மொத்த இலாபம் இலாப-நட்டக் கணக்கிற் கெடுத்துச் செல்லப்பட்டது.) | | | |

எடுத்துக்காட்டு 36 :

| | | | ரூ |
|---|---|---|---|
| ரொக்கம் | ... | | 540 |
| வங்கி | ... | | 8,260 |
| வராக் கடன் | ... | | 370 |
| ஆலைக் கட்டடம் | ... | | 70,250 |
| பொறி முதலியவை | ... | | 50,000 |
| தொடக்கச் சரக்கிருப்பு : | | | |
| கச்சாப் பொருள் | ... | 5,450 | |
| (வேலை முற்றுப் பொருள் Work in Progress) | | 12,720 | |
| முடிவுப் பொருள் | | 10,450 | |
| கடன் மீது வட்டி | ... | | 1,000 |
| விளம்பரம் | ... | | 2,780 |
| ஊதியம் | ... | | 12,875 |
| அலுவலகச் செலவு | ... | | 1,320 |
| முதலீடுகள் மீது வட்டி | ... | | 120 |
| வெளிச் சுமை கூலி | ... | | 565 |
| தொழிற்சாலை மேலாளர் (Salary of Works Manager) | | | 9,600 |
| முதல் கணக்கு | ... | | 90,000 |
| எடுப்புக் க/கு | ... | | 6,000 |
| கடனாளிகள் | ... | | 20,800 |
| கடனீந்தோர் | ... | | 28,750 |
| உரிமைத் தொகை (Royalty) | ... | | 3,000 |
| விற்பனை | ... | | 1,35,420 |
| உள் திருருப்பம் | ... | | 1,750 |
| கொள்முதல் (கச்சாப் பொருள்) | ... | | 40,870 |
| வெளித்திருப்பம் | ... | | 1870 |
| கூலி | ... | | 12,000 |

| | | ரூ |
|---|---|---|
| தள்ளுபடி பெற்றது | ... | 1,270 |
| எரிவளி, நீர் முதலியவை | ... | 5,475 |
| மின் செலவு (ஆலைக்கு...ரூ. 4,000) | ... | 6,750 |
| கடன் | ... | 30,000 |
| பொறி பழுது பார்க்குஞ் செலவு | ... | 1,200 |
| சில்லரை உற்பத்திச் செலவு | | 2,300 |
| முதலீடுகள் | | 2,000 |
| பல்வகை வரவு | ... | 895 |

**31-12-1970-ல் இறுதிச் சரக்கிருப்பு :**

| | | |
|---|---|---|
| முடிவுப் பொருள் | ... | 15,292 |
| வேலை முற்றுப் பொருள் | ... | 10,200 |
| கச்சாப் பொருள் | ... | 7,570 |

மேற் கொடுக்கப்பட்ட விவரங்களிலிருந்து **31-12-1970-ல்** முடியும் ஆண்டுக்கான தயாரிப்புக் கணக்கைத் தயாரிக்கவும்.

**30-12-1970-இல் முடியும் ஆண்டுக்கான தயாரிப்புக் கணக்கு**

ப வ

| | | ரூ | | | ரூ. |
|---|---|---|---|---|---|
| தொடக்கச் சரக்கிருப்பு : | | | விற்பனை | 1,35,420 | |
| கச்சாப் பொருள் : | 5,450 | | கழி உள் திருப்பம் | 1,750 | 1,33,670 |
| வேலை முற்றுப் பொருள் | 12,720 | | | | |
| முடிவுப் பொருள் | 10,450 | 28,620 | இறுதிச் சரக்கிருப்பு | | |
| கொள்முதல் (கச்சாப் பொருள்) | 40,870 | | கச்சாப் பொருள் | 7.570 | |
| | | | வேலை முற்றுப் பொருள் | 10,200 | |
| கழி வெளித் திருப்பம் | 1,870 | 39,000 | முடிவுப் பொருள் | 15,292 | 33,062 |
| கூலி | | 12,000 | | | |
| மின் செலவு | | 4,000 | | | |
| எரிவளி, நீர் முதலியவை | | 5,475 | | | |
| சில்லரை உற்பத்திச் செலவு | | 2,300 | | | |
| உரிமைத் தொகை | | 3,000 | | | |
| தொழிற்சாலை மேலாளர் ஊதியம் | | 9,600 | | | |
| பொறி பழுது பார்க்குஞ் செலவு | | 1 200 | | | |
| இலாப-நட்டக் க/கு (மொத்த இலாபம் மாற்றப் படுகிறது.) | | 61,537 | | | |
| | | 1,66,732 | | | 1,66,732 |

கச்சாப் பொருளும் பண்டங்களும் (Raw materials and stores) : உற்பத்திக்குப்பயன் படுத்தும் கச்சாப் பொருளை இது குறிக்கும். பண்டங்கள் (Stores) என்பது உற்பத்தி செய்யத் தேவையான எண்ணெய், பஞ்சு போன்றவற்றைக் குறிக்கும். இவற்றை வாங்கும் போழ்து ஏற்படும் கட்டணங்கள், சத்தம் (Freight), துறை முகக் கட்டணங்கள் முதலியவற்றையும் உற்பத்திக் கணக்கில் கொள்ள வேண்டும்.

பயன் படுத்தப்பட்ட கச்சாப் பொருள் (Materials consumed) : தயாரிப்புக் கணக்கில் பற்றுப் பகுதியில் காணப்படும் இக் கணக்கு குறிப்பிட்ட ஆண்டில் உற்பத்தியில் பயன்படுத்திய கச்சாப் பொருளை இது உணர்த்துகிறது. சென்ற ஆண்டுக் கச்சாப் பொருள் சரக்கிருப்புடன் இவ்வாண்டில் வாங்கிய கச்சாப் பொருளைக் கூட்டிக் கொள்ள வேண்டும். அக் கூட்டுத் தொகையி லிருந்து இறுதியுள்ள கச்சாப் பொருள் சரக்கிருப்பைக் கழித்து விடின், இத் தொகை கிடைக்கும்.

முற்றுப் பெறுப் பொருள் (work-in-progress) : பல நிலைகளைக் கடந்தே கச்சாப் பொருள் முடிவுப் பொருளாகிறது. குறிப்பிட்ட இறுதிநாளில் பாதி உற்பத்தியில்- சில நிலைகளைக் கடந்து-முற்றிலும் முழுமை பெறுதிருக்கும் கச்சாப் பொருள்களின் சரக்கிருப்பை இது உணர்த்தும். இம் முற்றுப் பெறுப் பொருள்களை மதிப்பிடுவதில் முழுக்கவனம் செலுத்த வேண்டும். — காரணம் அவை கச்சாப் பொருளுமல்ல; அதேநேரத்தில் உற்பத்தியாகி விட்ட முடிவுப் பொருளுமல்ல. முற்றுப் பெறுப் பொருளின் தொடக்கச் சரக் கிருப்புத் தயாரிப்புக் கணக்கின் பற்றுப் பகுதியிலும் அதன் இறுதிச் சரக்கிருப்பு தயாரிப்புக் கணக்கின் வரவுப் பகுதியிலும் காட்டப் பெறும்.

முடிவுப் பொருள்கள் (Finished Goods) : இவை விற்பனைக்குத் தயாராக உள்ள பொருள்களைக் குறிக்கும். இவற்றை உற்பத்திச் செலவின் அடிப்படையில் மதிப்பிடலாம். உற்பத்திச் செலவு, சந்தை நிலை—இவற்றில் எது குறைவாக வுள்ளதோ—அவ் விலை வீதத்தில் இறுதிச் சரக்கு மதிப்பிடப்படவேண்டும். தயாரிப்புக் கணக்கும் வாணிகக் கணக்கும் தனித்தனியாகத் தயாரிக்கப்படு மாயின் முடிவுப் பொருள்களின் தொடக்கச் சரக்கிருப்பு வாணிகக் கணக்கில் பற்றுப் பக்கத்திலும் அவற்றின் இறுதிச் சரக்கிருப்பு வரவுப் பக்கத்திலும் காட்டப் பெறும்.

பயன்படுபண்டம் (Consumable Stores) : உற்பத்திக்குத் தேவை யான எந்திர எண்ணெய் (Engine oil), பஞ்சு போன்ற பண்டங்

கள் வாங்கும் போழ்து, பயன்படு பண்டக் கணக்கு பற்று வைக்கப் படும். (வங்கி அல்லது ரொக்கம் அல்லது கடனீந்தோர் கணக்கில் வரவு வைக்கப்படும் என்பதைச் சொல்லத் தேவையில்லை.) வாங்கப்பட்ட அப் பண்டங்களை உற்பத்தியில் பயன்படுத்தும் போழ்தெல்லாம் பயன்படு பண்டக் கணக்கில் (Consumable Stores a/c) பற்றும், பயன்படு பண்டக் கணக்கில் (Consumable Stores a/c வரவும் வைக்கப்படும். ஆண்டிறுதியில் பயன்படு பண்டக் கணக்கில் உள்ள பற்றிருப்பு, கையில் உள்ள பண்டங்களின் இருப் பைக் காட்டுகிறது. எனவே, இது இருப்பு நிலைக் குறிப்பில் சொத்துகள் பகுதியில் காட்டப் பெறும். பயன்பட்ட பண்டக் கணக்கு உற்பத்திக் கணக்கில் பற்றுப் பக்கத்திற்கு எடுத்துச் செல்லப்படும்.— அது ஒரு உற்பத்திச் செலவு அன்றோ?

தயாரிப்புச் செலவு (Production Expenses) : இது ஒரு நேர்முகச் செலவு (Direct Expense). கூலி என்று மட்டில் கொடுக்கப்பட்டிருப் பின் அதை உற்பத்திக்கான கூலியாகக் கொள்ளலாம். தொழிற் சாலை துப்புரவு செய்வோர், ஏவலர், காவல் காப்போர், பண்டங் காப்போர் (Store-keeper) போன்றவர்க்குக் கொடுக்கும் கூலி 'ஆலைச் செலவுகள்' என்ற தலைப்பில் அடங்கும். இதுவும் உற்பத்திக் கணக்கில் பற்று வைக்கப்படும்.

எந்திரங்களை இயக்கும் மின்விசை (Motive Power), ஆலை வாடகை, ஈட்டுறுதி, மின் செலவு (Factory Lighting), வெப்பச் செலவு (Heating), எந்திரம், ஆலைக் கட்டடம் போன்றவற்றைப் பழுது பார்க்குஞ் செலவு முதலியவை அனைத்தும் உற்பத்திச் செலவுகளேயாகும். எனவே, இவை தயாரிப்புக் கணக்கில் பற்று வைக்கப்படும்.

### உற்பத்திச் செலவை (Cost of Manufacturing) உணர்த்தும் தயாரிப்புக் கணக்கு

(இவ்வகைக் கணக்கு உற்பத்தித் துறையில் ஏற்பட்ட இலாப-நட்டத்தை உணர்த்துவதில்லை. தயாரிப்புச் செலவைக் கண்டு பிடிக்க இது தயாரிக்கப்படுகிறது.) பற்றுப் பக்கத்தில் பயன் படுத்திய கச்சாப் பொருள், முற்றுப் பெறுப் பொருள், தயாரிப்புக் கூலி, பிற தயாரிப்புச் செலவுகளனைத்தும் எழுதப்படுகின்றன. வரவுப் பகுதியில் முற்றுப் பெறுப் பொருளின் இறுதியிருப்பு எழுதப்படுகின்றது. இத்தயாரிப்புக் கணக்குக் காட்டும் பற்றிருப்பு உற்பத்திச் செலவாகக் கொள்ளப்படும். இது வியாபாரக் கணக்கில் பற்று வைக்கப்படுகிறது.

வாணிகக் கணக்கில் முடிவுப் பொருள்களின் தொடக்க இருப்பு, தயாரிப்புக் கணக்கிலிருந்து கொண்டு வரப்பட்ட உற்பத்திச் செலவு, வாணிகக் கணக்கில் காணப்பெறும் பிற கணக்குகளும் இருக்கும். வரவுப் பகுதி வழக்கம் போன்றே இருக்கும். இது காட்டும் மொத்த இலாபம் அல்லது நட்டம் இலாப-நட்டக் கணக்குக்கு எடுத்துச் செல்லப்படும்.

உற்பத்திச் செலவை உணர்த்தும் தயாரிப்புக் கணக்கின் மாதிரியும் வாணிகக் கணக்கின் மாதிரியும் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன.

தயாரிப்புக் கணக்கு
உற்பத்திச் செலவை உணர்த்துவது

ப. வ

| | | ரூ. | | ரூ. |
|---|---|---|---|---|
| தொடக்கச் சரக்கிருப்பு : —வேலை முற்றுப் பொருள் | | ... | இறுதிச் சரக்கிருப்பு —வேலை முற்றுப் பொருள் | ... |
| பயன்படுத்திய கச்சாப் பொருள் : | | | உற்பத்திச் செலவு —வாணிகக் கணக்கிற்கு மாற்றப்படுகிறது. | ... |
| தொடக்கச் சரக்கிருப்பு | ... | | | |
| கூட்டு : கொள்முதல் | | | | |
| கழி : கொள் முதல் திருப்பம் ...... | ... ... | | | |
| | ...... | | | |
| கழி : இறுதிச் சரக்கிருப்பு | ...... | ... | | |
| கச்சாப் பொருள் மீது சுமை கூலி | ...... | ... | | |
| தயாரிப்புக் கூலி | | | | |
| ஆலைச் செலவுகள் : | | | | |
| வரியும் வாடகையும் | ...... | | | |
| மின் செலவு | ...... | | | |
| இயக்கு விசை | ...... | | | |
| எரிவளி, எரி பொருள் | ...... | | | |
| ஆலை சட்டுறுதி | ...... | | | |
| கட்டடம், பொறி வகைகளைப் பழுது பார்க்குஞ் செலவு | ...... | | | |
| தேய்மானம் : | | ... | | |
| பொறிவகை ...... | | | | |
| கட்டடம் ...... | ...... | | | |

ப வாணிகக் கணக்கு வ

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| தொடக்கச் சரக்கிருப்பு — முடிவுப் பொருள் | ... | விற்பனை ... கழி விற்பனைத் திருப்பம் ... | ... |
| உற்பத்திச் செலவு — தயாரிப்புக் கணக்கிலிருந்து மாற்றப் படுகிறது | ... | இறுதிச் சரக்கிருப்பு —முடிவுப் பொருள் | ... |
| இலாப-நட்டக் கணக்கு — மொத்த இலாபம் மாற்றப்படுகிறது | ... | | |

எடுத்துக்காட்டு 37 :

எடுத்துக்காட்டு 36-ல் கொடுத்திருக்கும் இருப்புகளிலிருந்து உற்பத்திச் செலவை உணர்த்தும் தயாரிப்புக் கணக்கையும் வாணிகக் கணக்கையும் தயாரிக்கவும்.

விடை :

(உற்பத்திச் செலவைக் காட்டும் தயாரிப்புக் கணக்கு)
31-12-1970-இல் முடியும் ஆண்டுக்கான

தயாரிப்புக் கணக்கு

| | | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|
| தொடக்கச் சரக்கிருப்பு —வேலை முற்றுப் பொருள் | | 12,720 | — | இறுதிச் சரக்கிருப்பு —வேலை முற்றுப் பொருள் | 10,200 | — |
| பயன்படுத்திய கச்சாப் பொருள் : தொடக்கச் சரக்கிருப்பு | 5,450 | | | முடிவுப் பொருளின் உற்பத்திச் செலவு வாணிகக் கணக்குக்கு மாற்றப்படுகிறது. | 76,975 | — |
| கூட்டு : கொள்முதல் 40,870 கழி கொள்முதல் திருப்பம் 1,870 | 39,000 | | | | | |
| | 44,450 | | | | | |
| கழி : இறுதிச் சரக்கிருப்பு | 7,570 | 36,880 | — | | | |
| கூலி | | 12,000 | — | | | |
| தொழிற்சாலை மேலாளரின் ஊதியம் | | 9,600 | — | | | |
| மின் செலவு | | 4,000 | — | | | |
| எரிவளி, நீர் முதலியவை | | 5,475 | — | | | |
| சில்லரை உற்பத்திச்செலவு | | 2,300 | — | | | |
| பொறி பழுது பார்க்குஞ் செலவு | | 1,200 | — | | | |
| உரிமைத் தொகை | | 3,000 | — | | | |
| | | 87,175 | — | | 87,175 | — |

31-12-1970-இல் முடியும் ஆண்டுக்கான வாணிகக் கணக்கு

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| தொடக்கச் சரக்கிருப்பு —முடிவுப் பொருள் | 10,450 | — | விற்பனை | 1,35,420 | | | |
| | | | கழி உள் திருப்பம் | 1,750 | | 1,33,670 | — |
| தயாரிப்புக் கணக்கு— முடிவுப் பொருள்களின் உற்பத்திச் செலவு | 76,975 | — | இறுதிச் சரக்கிருப்பு —முடிவுப் பொருள் | | | 15,292 | — |
| இலாப-நட்டக் க/கு —மொத்த லாபம் மாற்றப்படுகிறது. | 61,537 | — | | | | | |
| | 1,48,962 | — | | | | 1,48,962 | — |

**வாணிகக் கணக்கின் பயன்கள் :-**

சரக்கு வாங்கி விற்பதில் மட்டும் ஏற்படும் விளைவை விவரிப்பது வாணிகக் கணக்கு. பிற விற்பனைச் செலவுகளையும் அலுவலகச் செலவுகளையும் உள்ளடக்காது. சரக்கு கொள்முதல் செலவையும் அத்துடன் தொடர்புற்ற நேர்முகச் செலவுகளை மட்டுமே இது கணக்கில் எடுத்துக் கொள்கிறது. எனவே, இது காட்டும் விளைவு மொத்த இலாபமாகவோ (Gross Profit) மொத்த நட்டமாகவோ (Gross Loss) இருக்கலாம்.

கொள்முதல், விற்பனை, இறுதிச் சரக்கிருப்பு போன்ற கணக்குகள் வாணிகக் கணக்கில் இடம் பெற்றுள்ளன. இவற்றைக் கடந்த காலத் தொகைகளுடன் ஒப்பிட்டு, வியாபாரப் போக்கினை உணரும் வாய்ப்பு கிடைக்கின்றது. விற்பனைக் குறைந்துவிட்டதா, இறுதிச் சரக்கிருப்பு அதிக முள்ளதா என்பனவற்றைக் கண்டு, அதற்கான சூழ்நிலைகளை ஆயலாம்; பின்னர் அவற்றை நீக்கும் வழி முறைகளை மேற்கொள்ளலாம்.

ஒவ்வொரு செலவினமும் மொத்த விற்பனையில் எத்துணை சதவிகிதத்தில் உள்ளது என்பதைக் கண்டு, செலவினங்களைக் கட்டுப் படுத்த முயற்சி செய்யலாம்.

விற்பனையில் எத்துணை சதவிகிதத்தில் மொத்த இலாபம் இருக்கிறது என்பதைக் காணலாம். திட்டமிட்டவாறு இலாப விகிதம் கிட்டியுள்ளதா, எதிர் பார்த்த வண்ணம் தொழில் நடை பெறுகிறதா என்பதை அறிந்து கொள்ளலாம்.

இறுதிச் சரக்கினை மதிப்பிடும் முறையில் மாற்றம் ஏற்பட்டி ருப்பின் விற்பனையில் மொத்த இலாப விகிதம் மாறுபடும். அதிக இலாப விகிதம் இருப்பின், விற்பனையான சரக்கின் அளவு பெருகிய

தால் அது ஏற்பட்டதா அல்லது விலையை உயர்த்தி விற்றதின் காரணமாக இலாபம் கூடியுள்ளதா என்பதை அறியலாம். கொள் முதல் சென்ற ஆண்டு விலையுடன் இவ்வாண்டு நிலையை ஒப்பிட்டும் இலாப விகிதத்தில் ஏற்படும் மாற்றத்தின் காரணத்தை அறியலாம்.

இவ்வாறு செய்யுந் தொழில் சீரிய முறையில் பெருக, நடப்பு நிலையை உணரவும் பிற ஆண்டுகளுடன் ஒப்பு நோக்கவும் வேண்டும். அதற்கு உறுதுணையாய் இருப்பது வாணிகக் கணக்கெனில் மிகையாகாது.

### வினாக்கள்

1. வியாபாரக் கணக்கு தயாரிக்கப்படுவதின் நோக்கங்கள் யாவை ?
2. இறுதிச் சரக்கிருப்பு மதிப்பிடும் முறைகளை ஆய்க.
3. தயாரிப்புக் கணக்கு எனில் என்ன ? அதன் பயன்கள் யாவை ?
4. தயாரிப்புக் கணக்கு வியாபாரக் கணக்கினின்றும் எவ் வகைகளில் மாறுபடுகின்றது ?

### பயிற்சி

1. கீழ்க்கொடுக்கப்பட்ட விவரங்களிலிருந்து 30-12-1970-ல் முடியும் ஆண்டுக்கான வியாபாரக் கணக்கைத் தயாரித்து முடிவுப் பதிவுகளைத் தருக.

| | | ரூ. |
|---|---|---|
| தொடக்கச் சரக்கிருப்பு | ... | 9,500 |
| கூலி | ... | 2,000 |
| இறக்குமதி வரி | ... | 900 |
| உள்சுமை கூலி | ... | 210 |
| கொள்முதல் | ... | 25,070 |
| விற்பனை | ... | 40,380 |
| விற்பனைத் திருப்பம் | ... | 380 |

| | | ரூ. |
|---|---|---|
| கொள்முதல் திருப்பம் | ... | 970 |
| சரக்கு அகற்றுஞ் செலவு | | |
| (Clearing Charges) | ... | 200 |
| இறுதிச் சரக்கிருப்பு | ... | 7,850 |

(2) கீழே கொடுக்கப்பட்ட இருப்புகளிலிருந்து 30-6-71-ஆ முடியும் ஆண்டுக்கான தயாரிப்புக் கணக்கைத் தயாரிக்கத் தேவை யான குறிப்பேட்டுப் பதிவுகளையும் தருக.

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| உள்சுமை கூலி | | ... | 500 |
| தயாரிப்புக் கூலி | | ... | 4,370 |
| தொடக்கச் சரக்கிருப்பு : | | | |
| கச்சாப் பொருள் | ... | 5,800 | |
| முடிவுறுப் பொருள் | ... | 4,750 | |
| முடிவுப் பொருள் | ... | 5,500 | |
| கொள்முதல் | | ... | 18,650 |
| விற்பனை | | ... | 35,400 |
| உள் திருப்பம் | | ... | 750 |
| வெளித் திருப்பம் | | ... | 1,300 |
| ஆலை வாடகையும் வரியும் | | ... | 3,400 |
| எரிவளி, நீர், கரி | | ... | 1,250 |
| ஆலைக்கான மின் செலவு | | ... | 750 |
| இறுதிச் சரக்கிருப்பு : | | | |
| கச்சாப் பொருள் | ... | 4,275 | |
| முடிவுறுப் பொருள் | ... | 6,500 | |
| முடிவுப் பொருள் | ... | 7,200 | |

(3) கீழ்க் கொடுக்கப்பட்ட விவரங்களிலிருந்து 31-12-1970-ல் முடியும் ஆண்டுக்கான உற்பத்திச் செலவை உணர்த்தும் தயாரிப்புக் கணக்கையும் வாணிகக் கணக்கையும் தயாரிக்க.

| | | |
|---|---|---|
| சரக்கிருப்பு (1-1-1970) : | | |
| கச்சாப் பொருள் | ... | 25,800 |
| முடிவுறுப் பொருள் | ... | 18,700 |
| முடிவுப் பொருள் | ... | 20,300 |
| கூலி | ... | 10,200 |
| விற்பனை | ... | 1,25,250 |
| மின் விசை | ... | 2,400 |
| ஆலை வாடகையும் ஈட்டுறுதியும் | ... | 3,800 |
| கொள்முதல் | ... | 60,280 |
| கொள்முதல் மீது தீர்வை (Duty on Purchase) | ... | 4,800 |
| கச்சாப் பொருள் உள் சுமை கூலி | ... | 1,200 |
| வெப்பச் செலவு | ... | 2,300 |
| உள் திருப்பம் | ... | 2,280 |
| வெளித் திருப்பம் | ... | 3,250 |
| பொறி பழுது பார்க்குஞ் செலவு | ... | 1,075 |
| இறுதிச் சரக்கிருப்பு : | | |
| கச்சாப் பொருள் ... 23,760 | | |
| முடிவுறுப் பொருள் ... 20,450 | | |
| முடிவுப் பொருள் ... 18,755 | | |

(4) 30-6-1971-ல் ஆண்டுக் கணக்கு முடிவடைகிறது. சரக்கு இருப்பு எடுத்தல் மேலும் 14-7-1971 வரை நடைபெறுகிறது. அப்பொழுதிருந்த இறுதிச் சரக்கிருப்பு ரூ. 17,850 என

மதிப்பிடப்பட்டது. கீழ்க் கொடுக்கப்பட்ட விவரங்களிலிருந்து 30-6-1971-ல் இருந்த சரக்கின் மதிப்பைக் கண்டு பிடி.

(i) ஆண்டு முடிந்த பின்னர் நிகழ்ந்த ரொக்க விற்பனை ரூ. 1,700.

(ii) ரொக்கக் கொள்முதல் ... ரூ. 1,285

(iii) கொள்முதலேட்டில் காணப்படும் கொள்முதல் (1-7-71 முதல் 14-7-71 வரை) ரூ. 2,875. ஆனால், இவற்றில் ரூ. 875-க்கான சரக்கு 20-7-1971 அன்றுதான் வந்து சேர்ந்தது.

(iv) கடன் விற்பனை ரூ. 1,200

(v) விற்பனை அல்லது திருப்ப அடிப்படையில் 30-6-71-க்கு முன் அனுப்பப்பட்ட சரக்கின் மதிப்பு ரூ. 1,000. இவை 15-7-1971 வரை திருப்பப்படலாம்.

(vi) விற்பனையில் மொத்த இலாபம் 25 சதவீதம் எனக் கொள்க.

5 ஈஸ்டர்ன் இண்டஸ்ரீஸ் லிமிடெட் தங்களது ஆலையை வேறிடத்திற்கு மாற்றினர்.

(i) பொறிகளையும் தளவாடங்களையும் பெயர்த்தெடுத்து புதுவிடத்தில் நிறுவுவதற்கு ரூ. 9,500 செலவழிக்கப் பட்டது.

(ii) பழைய ஆலையிலிருந்து புதுவிடத்திற்குச் சரக்கைக் கொண்டுவர ஆன செலவு ரூ. 1000.

(iii) ஏட்டில் ரூ. 1,50,000 அளவில் இருந்த பொறிவகையில் ஏட்டு மதிப்பு ரூ. 3,400-க்கான ஒரு பொறியும் அடங்கி யுள்ளது. வழக்கழிந்து போகவே, ரூ. 900-க்கு விற்கப் பட்டது. அதற்கு மாறாக ரூ. 4,800 அடக்க மதிப்புள்ள பொறிவாங்கப் பட்டது.

(iv) புதுப் பொறியைக் கொண்டுவரக் கட்டணமும் சுமை கூலி யும் ரூ. 300 ஆனது. அதை நிறுவக் கொடுத்த கூலி ரூ. 550.

(v) மனைத்துணைப் பொருளின் ஏட்டு மதிப்பு ரூ. 15,000 ஆக இருந்தது. இவற்றில் ரூ. 3,000 ஏட்டு மதிப்பு

உள்ளவை ரூ, 1,200-க்கு விற்கப்பட்டன. ரூ, 2,400-க்குப் புதிய பொறியொன்று வாங்கப் பட்டது.

(vi) புதிய ஆலைக்கு வண்ணம் பூச (Painting) ரூ. 2,200 செலவாகியது.

இவற்றில் எச்செலவுகளை முதலீட்டுச் செலவுக்கும், நடைமுறைச் செலவுக்கும், எடுத்துச் செல்ல வேண்டும் என்பதைக் கூறுக.

(CAIIB Feb. 1962)

6. ஒரு கலை அரங்கின் ஏடுகளில் கீழ்க்கண்டவற்றை எவ்வாறு பதிவதென்பதைக் கூறுக.

(i) அமர்வதற்கு வசதிகள், அலங்காரம், கம்பள விரிப்பு, எரிவளி, மின் பொறிகள் முதலியவைகட்கு ரூ. 15,750 செலவழிக்கப் பட்டது.

(ii) இசைக் கருவிகள் ரூ. 3,350-க்கு வாங்கப் பட்டன.

(iii) ஊழியர்கட்குச் சீருடைக்கென செலவழித்தது ரூ. 650.

(iv) தொடக்கத்தில் ரூ. 1,500 மதிப்புள்ள இசைக்கருவி ஆண்டொன்றுக்கு 10% வீதம் தேய்மானங் கழிக்கப் பட்டு மூன்று ஆண்டுகட்கு பிறகு ரூ. 750-க்கு விற்கப் பட்டது. அதற்குமாறாகப் புதியதொன்று ரூ. 1,800-க்கு வாங்கி வைக்கப்பட்டது.

(v) நகராட்சி ஆணையின்படி வெளிச்செல் வழிகளில் மாற்றஞ் செய்யச் செலவானது ரூ. 250.

(S. A. S. 1957)

# 11. இலாப - நட்டக் கணக்கு

## (Profit and Loss Account)

வாணிகக் கணக்குக் காட்டும் மொத்த இலாபம் அல்லது மொத்த நட்டமென்பது செலவுகளனைத்தையும் கணக்கிலெடுத்துக் கொண்ட பின் கிடைப்பதன்று என்பதை உணர்த்தியிருக்கிறோம். கொள்முதல் தொடர்பான செலவுகள் போக உள்ள இலாப-நட்டத்தைதான் அது விளக்குகிறது. ஆனால், அலுவலகச் செலவுகள், விளம்பரம், வாடகை, தணிக்கைச் செலவு, ஊதியம், கழிவு, பயணச் செலவு, ஈட்டுறுதி போன்ற செலவுக் கணக்குகளும், வராக் கடன், தள்ளுபடி போன்ற நட்டக் கணக்குகளும் உள்ளன. அவ்வாறே ஈட்டிய தள்ளுபடி, பெறும் கழிவு, வாடகை, வட்டி, இலாப ஈவு போன்ற வரவினங்களும் இருக்கும். இவற்றை யெல்லாம் எடுத்துக் கொண்டு எஞ்சியிருப்பது இலாபமா, இழப்பா என்பதை உணர்த்துவது இலாப-நட்டக் கணக்கு. இவ்வாறு இலாப-நட்டக் கணக்கு, தொழிலில் ஏற்படும் எல்லா வகைச் செலவுகளும் வரவினங்களும் போக, இறுதி விளைவினைப் படம் பிடித்துக் காட்டுவதாகும். வாணிகக் கணக்குக் காட்டும் மொத்த இலாபத்தை அல்லது மொத்த நட்டத்தை இலாப-நட்டக் கணக்கிற்குக் கொண்டு வந்து, இக் கணக்கினைத் தொடங்குகிறோம். செலவினங்கள், நட்டங்கள் அனைத்தையும் இக் கணக்கில் பற்றுப் பகுதியிலும், ஆதாயங்கள், வருவாய் முதலியவற்றை வரவுப் பகுதி யிலும் எழுதுகிறோம். வரவுப் பகுதி, பற்றுப் பகுதியினும் மிகுந்திருக் குமாயின், தொழில் நடவடிக்கைகள் இலாபத்தில் முடிந்துள்ளன என்றும், பற்றுப் பகுதி வரவுப் பகுதியினும் அதிக மிருக்குமாயின், நட்டத்தில் முடிந்துள்ளன என்றும் கொள்ளலாம். இலாபமாயின் இது நிகர இலாபம் (Net Profit) என்றும், நட்டமாயின், நிகர நட்டம் (Net Loss) எனவும் அழைக்கப் பெறும். நிகர இலாபம்

உரிமையாளரின் முதலைக் கூட்டுகிறது. நிகர நட்டம் அதனைக் குறைக்கின்றது. எனவே இது, முதல் கணக்கிற்கு எடுத்துச் செல்லப்படுகிறது.

இதுகாறும் விளக்கியதிலிருந்து வாணிகக் கணக்கிற்கும் இலாப-நட்டக் கணக்கிற்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை உணரலாம்.

ஒற்றுமை

1 இவ்விரு கணக்குகளும் இறுதிக் கணக்குகள் எனப்படும். 2 ஒரு குறிப்பிட்ட காலத்தில் தொழில் நடத்தியதின் விளைவை உணர்த்து கின்றன. 3 நடைமுறைச் செலவினங்களையும் நடைமுறை வரவினங் களையு மட்டுமே உள்ளடக்குகின்றன.

வேற்றுமை

1 சரக்கு வாங்கி விற்பதில் ஏற்படும் இலாப-நட்டத்தை உணர்த் துவது வாணிகக் கணக்கு. 2 ஆனால், தொழிலில் ஏற்படும் பிறவகைச் செலவுகள், வரவினங்கள் அனைத்தையும் உள்ளடக்கி, இறுதியில் ஏற்பட்ட விளைவை விளக்குவது இலாப-நட்டக் கணக்கு. அதாவது 4 கொள்முதலும், தயாரிப்புச் செலவு மட்டிலும் வாணிகக் கணக்கில் இடம் பெறும். ஆனால், 2 விற்பனைச் செலவு, அலுவலகச் செலவு, பிற தொழில் நட்டங்கள் முதலியவை இலாப-நட்டக் கணக்கில் இடம் பெறும்.

4 வாணிகக் கணக்கு காட்டும் மொத்த இலாபம் அல்லது நட்டம் இலாப-நட்டக் கணக்குக் கெடுத்துச் செல்லப்படுகிறது. ஆனால், 5 இலாப-நட்டக் கணக்கு உணர்த்தும் நிகர இலாபம் அல்லது நிகர நட்டம் முதல் கணக்குக்கு எடுத்துச் செல்லப்படுகிறது.

இலாப-நட்டக் கணக்கில் கீழ்க்கண்டவை பொதுவாக இடம் பெறும்.

........முடியும் ஆண்டுக்கான இலாப-நட்டக் கணக்கு

| ப | ரூ. | வ | ரூ. |
|---|---|---|---|
| வாணிகக் கணக்கு ... (மொத்த நட்டம் மாற்றப்படுகிறது) | | வாணிகக் கணக்கு ... (மொத்த இலாபம் மாற்றப்படுகிறது) | |
| ஊதியம் ... | | ஈட்டிய தள்ளுபடி ... | |
| வாடகை ... | | கழிவு பெற்றது ... | |

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| வரி ... | | வட்டி பெற்றது ... | |
| ஈட்டுறுதி ... | | இலாப ஈவு ... | |
| அச்சுக் கூலியும் எழுது பொருளும் ... | | முதலீட்டின்மீது வட்டி ... | |
| பயணச் செலவு ... | | வாடகை பெற்றது ... | |
| விளம்பரம் ... | | பல்வகை வரவு ... | |
| அஞ்சல் ... | | முதல் கணக்கு ... (நிகர நட்டம் எடுத்துச் செல்லப் படுகிறது.) | |
| அலுவலகச் செலவு ... | | | |
| வட்டி ... | | | |
| வெளிச்சுமை கூலி ... | | | |
| பழுதுபார்க்குஞ் செலவு | | | |
| கழிவு ... | | | |
| தள்ளுபடி அளித்தது ... | | | |
| தணிக்கைச் செலவு ... | | | |
| ஏற்றுமதி வரி ... | | | |
| பெற்றனுப்புஞ் செலவு (for warding charges)... | | | |
| வராக் கடன் ... | | | |
| சில்லரைச் செலவு ... | | | |
| வங்கிக் கட்டணம் ... | | | |
| முதல் கணக்கு ... (நிகர இலாபம் எடுத்துச் செல்லப் படுகிறது.) | | | |

தேவையான இறுதிப் பதிவுகள் :

1. மொத்த இலாபத்தை இலாப-நட்டக் கணக்குக்குக் கொண்டுவர,

வாணிகக் க/கு .. ப

இலாப-நட்டக் க/கு

2. மொத்த நட்டமாயின், அதை இலாப-நட்டக் கணக்கிற் கொண்டுவர,

இலாப-நட்டக் க/கு ... ப

வாணிகக் க/கு

3. பல்வகைச் செலவுக் கணக்குகளையும் நட்டக் கணக்குகளையும் இலாப-நட்டக் கணக்கில் கொண்டுவர,

இலாப நட்டக் க/கு ... ப

பெயரளவுக் கணக்குகள்

(செலவுக் கணக்குகளும்

நட்டக் கணக்குகளும்.)

4. பல்வகை வரவினக் கணக்குகளை இலாப-நட்டக் கணக்கிற் கொண்டுவர,

பெயரளவுக் கணக்குகள் ... ப

(வரவினக் கணக்குகள்.)

இலாப-நட்டக் க/கு.

5. இலாப-நட்டக் கணக்கின் வரவுப்பகுதி பற்றுப்பகுதியினும் மிகுந்திருக்குமாயின், நிகர இலாபம் காட்டுகின்றதென்று பொருள். அதனை முதல் கணக்கிற்கெடுத்துச் செல்ல,

இலாப-நட்டக் க/கு ... ப

முதல் க/கு

6. இலாப-நட்டக் கணக்கின் பற்றுப் பகுதி வரவுப் பகுதியினும் அதிக மிருக்குமாயின், நிகர நட்டம் ஏற்பட்டுள்ளது என்று பொருள். இதனை முதல் கணக்கிற்கெடுத்துச் செல்ல,

முதல் க/கு ... ப

இலாப-நட்டக் க/கு

35-வது எடுத்துக்காட்டில் குறிப்பிட்ட இருப்புப் பட்டியலி லிருந்து, இலாப-நட்டக் கணக்கையும் வேண்டிய குறிப்பேட்டுப் பதிவுகளையும் தருக.

விடை :

| குறிப்பேடு | | பற்று | | வரவு | |
|---|---|---|---|---|---|
| | | ரூ. | | ரூ. | |
| இலாப-நட்டக் கணக்கு | ப | 11,250 | — | | |
| வெளிச்சுமை கூலி | | | | 180 | — |
| தள்ளுபடி | | | | 200 | — |
| ஊதியம் | | | | 7,500 | — |
| விளம்பரம் | | | | 790 | — |
| விற்பனை வரி | | | | 1,280 | — |
| அலுவலகச் செலவு | | | | 500 | — |
| பழுது பார்க்குஞ் செலவு | | | | 650 | — |
| பயணச் செலவு | | | | 150 | — |
| (மேற்கண்ட செலவுகளை இலாப-நட்டக் கணக்கிற்கு மாற்றி முடிக்க) | | | | | |
| கழிவு | ப | 1,370 | — | | |
| இலாப ஈவு | ப | 430 | — | | |
| வாடகை | ப | 1,800 | — | | |
| இலாப-நட்டக் க/கு | | | | 3,600 | — |
| (மேற்கண்ட வருமானக் கணக்கு களை, இலாப-நட்டக் கணக்கிற்கு மாற்றி, முடிக்க) | | | | | |
| இலாப-நட்டக் க/கு | ப | 39,830 | — | | |
| முதல் க/கு | | | | 39,830 | — |
| (நிகர இலாபத்தை முதல் கணக் கிற்கு மாற்ற) | | | | | |

**30-6-1971-இல் முடியும் ஆண்டுக்கான்**

**இராவணனின் இலாப-நட்டக் கணக்கு**

| ப (டர்) | ரூ | | வ (செ) | ரூ. | |
|---|---|---|---|---|---|
| வெளிச்சுமை கூலி | 180 | — | வாணிகக் க/கு — மொத்த இலாபம் மாற்றப்படுகிறது | 47,480 | — |
| தள்ளுபடி | 200 | — | கழிவு | 1,370 | — |
| ஊதியம் | 7,500 | — | இலாப ஈவு | 430 | — |
| விளம்பரம் | 790 | — | வாடகை | 1,800 | — |
| விற்பனை வரி | 1,280 | — | | | |
| அலுவலகச் செலவு | 500 | — | | | |
| பழுது பார்க்குஞ் செலவு | 650 | — | | | |
| பயணச் செலவு | 150 | — | | | |
| முதல் கணக்கு — நிகர இலாபம் மாற்றப்படுகிறது. | 39,830 | — | | | |
| | 51,080 | — | | 51,080 | — |

**சில குறிப்புகள்:**

நடைமுறைச் செலவினங்களும் (Revenue Expenses) நடைமுறை வரவினங்களும் (Revenue Income) வாணிகக் கணக்கிலும் இலாப-நட்டக் கணக்கிலும் இடம் பெறவேண்டும்.

இறுதிக் கணக்குகள் தயாரிக்கப்படும் காலத்திற்குரிய எல்லாச் செலவினங்களும் வரவினங்களும் இடம் பெற வேண்டும். அதாவது, சில செலவினங்கள் கொடுபடாது இருக்கலாம்; சில அடுத்த ஆண்டுக்கும் சேர்த்துக் கொடுக்கப்பட்டிருக்கலாம். நமக்கு வர வேண்டிய வரவினம் நம் கைக்குக் கிட்டாமலிருக்கலாம். அல்லது அடுத்த ஆண்டுகட்கும் சேர்த்து இவ்வாண்டே பெற்றிருக்கலாம். இவற்றையெல்லாம் சரிக்கட்டி, இவ்வாண்டிற்குரிய செலவுகள் முழுவதும் வரவினங்கள் முழுவதும் இறுதிக் கணக்குகளில் காண்பிக்கப் பெற வேண்டும். இவற்றைச் 'சரிக்கட்டுதல்' எனுந் தலைப்பில் விரிவாகக் காண்போம்.

செய்துவரும் தொழிலுக்குரிய செலவினங்களையும் வரவினங்களையும் மட்டிலுமே இறுதிக் கணக்குகளில் கொண்டு வரவேண்டும். உரிமையாளர் தொழிலுக்கன்றிப் பிறவற்றிற்குச் செய்யும் செலவினங்களைத்—தொழிலுக்குரிய ரொக்கத்தைத் தன் சொந்தப் பயன்களுக்குப் பயன்படுத்தின், அவற்றையெல்லாம் எடுப்புக் கணக்கிற்கு எடுத்துச் செல்லவேண்டும்.

வாணிக, இலாப-நட்டக் கணக்குகளில் இடம்பெறும் சில கணக்குகளை ஆய்வோம்.

(சுமைகூலி அல்லது தூக்குக் கூலி (Carriage) : இது உள்சுமை கூலி (Carriage Inward), வெளிச்சுமைகூலி (Carriage Outward) என இருவகைப்படும். சரக்கு வாங்கும் போழ்து அதனைக் கொண்டு வருஞ்செலவை உள்சுமை கூலி உணர்த்தும். இது ஒரு கொள்முதல் செலவாததால், இதை வாணிகக் கணக்கில் கொண்டு செல்ல வேண்டும். சரக்கு விற்கும் போழ்து மேற்கொள்ளப் படும் செலவு வெளிச்சுமை கூலி எனப்படும். இது விற்பனைச் செலவாகையால் இதை இலாப-நட்டக் கணக்கில் பற்றுவைக்க வேண்டும்.

இது வண்டிச் சத்தமாகவோ (Cartage) இரயில், லாரி, கப்பல் கட்டணமாகவோ (Freight) இருக்கலாம். சுங்கவரி, போன்றவையும் இக் கணக்கில் சேர்க்கப்படும். வெளிச்சுமை கூலி என்றோ, உள்சுமை கூலி என்றோ குறிப்பிடாது, சுமைகூலி என்று மட்டில் குறிப்பிடப்பட்டிருப்பின், அதை உள்சுமை கூலியாகக் கொண்டு, வாணிகக் கணக்கில் பற்று வைக்க வேண்டும்.)

சொத்து ஒன்று வாங்கும் போழ்து அதைக் கொண்டு வருஞ் செலவைச் சொத்துக் கணக்கில்தான் சேர்க்க வேண்டு மென்பதை முன்னரே விளக்கியுள்ளோம்.

கட்டும் பொருள்கள் (Packing Materials) : பொருள்கள் கட்டுகளில் கட்டப்பட்டுத்தான் விற்கவேண்டியிருப்பின், அவற்றை வாணிகக் கணக்கிற்கு எடுத்துச் செல்லலாம். அதாவது விற்பனைக்குக் கட்டும் பொருள்கள் இன்றியமையாதனவாய் இருப்பின் இவ்வாறு செய்ய வேண்டும். இல்லையெனில் சாதாரண விற்பனைச் செலவாகக் கருதி இலாப-நட்டக் கணக்கில் பற்று வைக்கலாம்.

சுங்கத் தீர்வை மாநகராட்சி வரி முதலியவை (Customs Duty Octroi Duty etc.) : இறக்குமதி வரியும், ஏற்றுமதி வரியும் இதன் பாற்படும். (இறக்குமதி வரி, சரக்கு வாங்கும் போழ்து விதிக்கப் படுவதால், வாணிகக் கணக்கிலும், ஏற்றுமதிவரி, வெளிநாட்டில்

விற்பனைக் கனுப்புவது மீது விதிக்கப்படுவதால் இலாப-நட்டக் கணக்கிலும் எழுத வேண்டும்.)

(உற்பத்தி வரி (Excise Duty) : உள்நாட்டில் உற்பத்தி செய்யப் பட்டு உள்நாட்டிலேயே பயன்படுத்தப்படும் பொருள்கள்மீது விதிக்கப்படும் வரி இது. உற்பத்தியின் அடிப்படையிலோ அல்லது விற்பனையின் அடிப்படையிலோ இது விதிக்கப்படும். உற்பத்தியின் அடிப்படையிலாயின் வாணிகக் கணக்கிலும், விற்பனையின் அடிப் படையிலாயின், இலாப-நட்டக் கணக்கிலும் பற்று வைக்கப்பட வேண்டும்.)

சரக்ககற்றுஞ் செலவு (Clearing Charges) : இது இறக்குமதி செய்யப்பட்ட சரக்கைத் துறை முகத்திலிருந்து எடுக்கும் செலவு. எனவே, இதை வாணிகக் கணக்கிற்கு எடுத்துச் செல்ல வேண்டும்.

பெற்றனுப்புஞ் செலவு (Forwarding Charges) : இது சரக்கு ஏற்றுமதியாகும் போழ்து செய்யும் செலவு. விற்பனைச் செலவா தலால், இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்ல வேண்டும்.

நெடுநாள் பயன்தரு செலவு (Deferred Revenue Expenditure) : சிலவகையில் மிகவும் பெருந்தொகையைச் செலவழித் திருக்கலாம். ஆனால், இதன் பயன் உடனே கிட்டாவிடினும் பல ஆண்டுகளில் கிடைக்கும். இவ்வகைச் செலவை நெடுநாள் பயன்தரு செலவு என்கிறோம். இது பற்றி முன்னரே விளக்கியிருக்கிறோம். (எடுத்துக் காட்டாகப் பெருந்தொகையைச் செலவழித்துச் செய்யப்படும் விளம்பரத்தைக் கூறலாம். விளம்பரம் செய்த ஆண்டிலேயே விற்பனை பெருகும் என்று யாரும் கூறமுடியாது. இதன் பயனாய்ப் பின் வரும் ஆண்டுகளில் விற்பனை உயரக்கூடும். அதாவது பயன் பல்லாண்டுகட்குக் கிட்டுவதால் இதனை நெடுநாள் பயன்தரு செல வென்கிறோம். எடுத்துக் காட்டாக விளம்பரத்துக்கு ஒரு இலட்ச ரூபாய் செலவழித்ததாயும் இதன் பயன் 10 ஆண்டுகட்கு இருக்கு மென்றும் கருதின், ஒவ்வொரு ஆண்டு இலாப-நட்டக் கணக்குக் கும் ரூ. 10,000 விளம்பரச் செலவாய்க் கொள்ளலாம். மீதியுள்ள தொகையைச் சொத்துகள் பகுதியில் காட்ட வேண்டும்.)

வட்டி (Interest) : முதல்மீது தரவேண்டிய வட்டி, தனியாகக் காட்டப்படவேண்டும்.

(ஊதியமும் கூலியும் (Salaries and Wages) : 'கூலி' என்று மட்டும் கொடுக்கப் பட்டிருப்பின் அதைத் தயாரிப்புக் கூலி

யாகவோ சரக்குடன் தொடர்புற்ற கூலியாகவோ கொண்டு வாணிகக் கணக்கில் பற்று வைக்கலாம். ஆனால், ஊதியத்துடன் இவ்வாறு இணைத்துக் கொடுக்கப் பட்டிருப்பின் அது சரக்குடன் நேர்முகமாகத் தொடர்புற்றிருக்க வில்லையென ஊகிக்கலாம். எனவே, இதனை இலாப-நட்டக் கணக்குக்கு எடுத்துச் செல்லுதலே சாலப்பொருந்தும்.)

(வாடகையும் நகராட்சிக் கட்டணமும் (Rent and Rates): கட்டணம் (Rate) என்பது மாநகராட்சி, நகராட்சி மன்றங்கள் விதிக்கும் வரியைக் குறிக்கும். ஆலைக் கட்டடத்திற்கான வாடகையையும் தீர்வையையும் வாணிகக் கணக்கிற்கும் அலுவலகக் கட்டடத்திற்கானதை இலாப-நட்டக் கணக்கிற்கும் எடுத்துச் செல்ல வேண்டும். இரண்டும் ஒரே இடத்திலிருக்குமாயின், அவைகளின் பரப்பளவிற்குத் தகுந்தவாறு கணக்கிட்டு ஒதுக்க வேண்டும்) (ஆலைக்குரியதா, அலுவலகத்துக்குரியதா என்று தெளிவாகக் கொடுக்கப்படவில்லையாயின், அலுவலகத்துக்கே உரியது என்று கொண்டு இலாப-நட்டக் கணக்கில் எழுதவேண்டும்.)

உரிமைத் தொகை (Royalty): ஒருவரிடம் உள்ள உரிமையைப் பயன்படுத்திக் கொள்வதற்காக அவர்க்கு வழங்கப்படும் தொகை உரிமைத் தொகை எனப்படும். உற்பத்தியில் புது முறையை ஒருவர் கண்டு பிடிப்பின், அதைப் பதிவு செய்து புனை பொருள் உரிமை (Patent) எடுத்துக்கொள்ளலாம். அதைத் தொழிற்சாலைக்கு ஒரு தொகைக்கு விற்றுவிடலாம். அம்முறையைப் பயன்படுத்தித் தொழிற் சாலைகள் பொருளாக்கத்தில் ஈடுபடும். இவ்வாறு வாங்கிய உரிமை (புனைபொருள் உரிமை) மதிப்புடையது—சொத்துப் போன்றதாகும். காரணம் இவ்வுரிமையைப் பயன் படுத்திப் பொருள் உற்பத்திச் செய்ய முடிகிறது. இவ்வாறு ஒரு குறிப்பிட்ட தொகைக்கு இவ்வுரிமையைப் பிறரிடமிருந்து பெறுவதற்கு மாறாகப் பொருள் உற்பத்தியின் அடிப்படையில் தொகை செலுத்தி, உரிமையைப் பெறலாம். அதாவது, உற்பத்தியான பொருள் ஒவ்வொன்றிற்கும் இவ்வளவு தொகை என்று கணக்கிட்டுத் தரவேண்டியிருக்கும். இதுதான் உரிமைத் தொகை எனப்படுகிறது. (பொருள் உற்பத்தியின் அடிப்படையில் இத் தொகை வழங்கப்படுமாயின், இது ஒரு தயாரிப்புச் செலவாகிறது. எனவே, தயாரிப்புக் கணக்கில் பற்று வைக்க வேண்டும். தயாரிப்புக் கணக்குத் தயாரிக்கவில்லையெனில், வாணிகக் கணக்கில் பற்று வைக்க வேண்டும். அவ்வாறின்றி விற்பனை அடிப்படையில் இத்தொகை கொடுக்க வேண்டியிருப்பின், இது விற்பனைச் செலவாகிறது. எனவே, இலாப-நட்டக் கணக்கில் பற்று வைக்க வேண்டும்.)

வருமான வரி (Income Tax) : உரிமையாளர் தன் வருமானத்தின் மீது செலுத்தும் வருமானவரி ஒரு வியாபாரச் செலவன்று. பல வகைகளிலும் பெறும் வருமானத்தின் மொத்தத் தொகை மீது செலுத்தப்படுவது வருமானவரி. எனவே, இதனை இலாப-நட்டக் கணக்கில் பற்று வைத்தல் தவறாகும். இதைச் சொந்தச் செலவாகக் கருதி, எடுப்புக் கணக்குப் போன்றே முதல் கணக்கில் கழித்துக் காட்ட வேண்டும்.

கழிவு, தள்ளுபடி முதலியவை (Commission Discount etc.) : இவற்றை நாம் பிறர்க்களித்திருப்பின், இலாப-நட்டக் கணக்கில் பற்று வைக்க வேண்டும். பிறர் நமக்களித்திருப்பின், ஆதாயமாகையால், இலாப-நட்டக் கணக்கில் வரவு வைக்க வேண்டும்.

வராக்கடன் (Bad Debts) : நாம் சரக்கு விற்றதின் காரணமாக நமக்குக் கடனாளியானோர் செலுத்தாத தொகை இது. குறிப்பிட்டக் கடனாளியிடமிருந்து வசூலிக்க முடியாது என்று உறுதியாக முடிவுகட்டிய பின்னரே, அக் கடன் வராக்கடனாகக் கருதப்படுகிறது. 'வந்தாலும் வரலாம்' என்ற ஐயமிருப்பினும், இதை வராக் கடனாகக் கொள்ளல் வழுவாகும். இவ் வராக் கடன் நமக்கு நட்டமாதலால், இலாப-நட்டக்கணக்கில் பற்று வைக்க வேண்டும். 'சரிக்கட்டுதல்' எனுந் தலைப்பில் இது விரிவாக விளக்கப் பட்டுள்ளது.

விற்பனை வரி (Sales Tax) : இது விற்பனையின் அடிப்படையில் விதிக்கப்படுவதால், இதுவும் ஒரு விற்பனைச் செலவே. எனவே, இலாப-நட்டக் கணக்கிற்கே எடுத்துச் செல்லவேண்டும்.

வியாபாரச் செலவு (Trading Expenses) : இவ்வாறு ஒரு கணக்கு இருப்புப் பட்டியலில் கொடுக்கப்பட்டிருப்பின், அலுவலகச் செலவு (Office Expenses) என்ற கணக்கும் இருக்கிறதா என்று நோக்க வேண்டும். இவ்விரு கணக்குகளும் இருப்புப் பட்டியலில் கொடுக்கப்பட்டிருப்பின், வியாபாரச் செலவு என்பதைத் தயாரிப்புடன் தொடர்புற்ற அல்லது கொள்முதல் பற்றிய செலவு என்று கொண்டு வாணிகக் கணக்கில் பற்று வைக்க வேண்டும். அலுவலகச் செலவு, இலாப-நட்டக் கணக்கில் பற்று வைக்கவேண்டும்.

அவ்வாறின்றி, வியாபாரச் செலவுக் கணக்கு மட்டும் கொடுக்கப்பட்டிருப்பின், அதனை அலுவலகத்தில் ஏற்பட்ட செலவாகக் கொண்டு இலாப-நட்டக் கணக்கில் பற்று வைக்க வேண்டும்.)

வட்டி, வாடகை, தள்ளுபடி, கழிவு போன்றவை நாம் செலுத்தியவையாகவும் இருக்கலாம்; அல்லது நாம் பிறரிடமிருந்து பெற்றவையாகவும் இருக்கலாம். நாம் அளித்தவையா அல்லது நமக்கு அளிக்கப்பட்டவையா என்பதை அவை காட்டும் இருப்புகளிலிருந்து தெரிந்து கொள்ளலாம். (பற்றிருப்புக் காட்டுமாயின் அளித்தவை;- எனவே இலாப-நட்டக் கணக்கில் பற்று வைக்க வேண்டும். வரவிருப்புக் காட்டுமாயின், நாம் பெற்றவை;- எனவே இலாப நட்டக் கணக்கில் வரவு வைக்க வேண்டும்.) அவ்வாறு என்ன இருப்பு என்ற விளக்கமும் இல்லை யெனில், அவை பற்றிருப்புக் காட்டுவனவாகவே கொண்டு இலாப-நட்டக் கணக்கில் பற்று வைக்க வேண்டும்.

பல்வகை (Miscellaneous) எனக் கொடுக்கப்பட்டிருப்பின், பல்வகைச் செலவாகக் கருதி இலாப-நட்டக் கணக்கில் பற்று வைக்க வேண்டும்.

'சொத்து விற்றதில் நட்டம்' (Loss on sale of an Asset) எனக் கொடுக்கப் பட்டிருப்பின், அதை இலாப-நட்டக் கணக்கில் பற்று வைக்க வேண்டும். 'சொத்து விற்றதில் இலாபம்' என இருப்பின் இக் கணக்கில் வரவு வைக்க வேண்டும்.

## வினாக்கள்

1. இலாப-நட்டக் கணக்கு ஏன் தயாரிக்கப் படுகிறது ?

2. இலாப-நட்டக் கணக்கு எவ்வகைகளில் வாணிகக் கணக்கினின்றும் மாறுபடுகிறது ?

3. இலாப-நட்டக் கணக்குத் தயாரிக்கத் தேவையான முடிவுப் பதிவுகள் யாவை ?

## பயிற்சி

1. கீழ்க் கொடுக்கப் பட்ட இருப்புகளிலிருந்து 31-3-70-ல் முடியும் ஆண்டுக்கான இலாப-நட்டக் கணக்கைத் தயார் செய்க.

| | | ரூ. |
|---|---|---|
| வாணிகக் கணக்கு | ... | 2,515 |
| (மொத்த நட்டம்) | | |
| ஊதியம் | ... | 1,200 |

| | | ரூ. |
|---|---|---|
| வாடகை பெற்றது | ... | 480 |
| தள்ளுபடி (ப) | ... | 120 |
| கழிவு (வ) | ... | 350 |
| வெளிச்சுமை கூலி | ... | 75 |
| எழுதுபொருள் செலவு | ... | 150 |
| வராக் கடன் | ... | 200 |
| வியாபாரச் செலவு | ... | 178 |
| இலாப ஈவு | ... | 112 |
| பயணச் செலவு | ... | 75 |
| விற்பனை வரி | ... | 120 |
| ஈட்டுறுதி | ... | 150 |

z. கீழே கொடுக்கப்பட்டுள்ள இருப்புகள் 30-6-1971-ல் சிவமணியின் ஏடுகளிலிருந்து எடுக்கப்பட்டவை. அந் நாளில் முடியும் ஆண்டுக்கான வாணிக, இலாப-நட்டக் கணக்குகளைத் தயாரித்து முடிவுப் பதிவுகளைத் தருக.

| | | ரூ. |
|---|---|---|
| கொள்முதல் | ... | 30,000 |
| தொடக்கச் சரக்கிருப்பு | ... | 13,750 |
| விற்பனைச் செலவுகள் | ... | 250 |
| வாடகை | ... | 1,400 |
| உள் சுமை கூலி | ... | 150 |
| வெளிச்சுமை கூலி | ... | 200 |
| விற்பனை | ... | 90,350 |
| விற்பனைத் திருப்பம் | ... | 1,200 |

| | | ரூ. |
|---|---|---|
| கூலி | ... | 6,000 |
| ஊதியம் | ... | 6,000 |
| ஈட்டுறுதி | ... | 1,200 |
| கழிவு | ... | 700 |
| தள்ளுபடி பெற்லது | ... | 125 |
| இலாப-ஈவு | ... | 320 |
| முதலீட்டின் மீது பெற்ற வட்டி | ... | 65 |
| ஏற்றுமதி வரி | ... | 1,150 |
| அலுவலகச் செலவு | ... | 700 |
| பழுது பார்க்குஞ் செலவு | ... | 540 |
| வராக் கடன் | ... | 125 |
| வியாபாரச் செலவு | ... | 150 |
| பெற்றனுப்புஞ் செலவு | ... | 300 |

(Forwarding Expense)

30-6-1971-ல் இறுதிச் சரக்கிருப்பு ரூ. 12,575 என மதிப்பிடப்பட்டது.

# 12. இருப்புநிலைக் குறிப்பு

## (Balance Sheet)

தொழில் நடத்தி வருவதில் ஏற்படும் இலாப-நட்டத்தை உணர வாணிகக் கணக்கும், இலாப-நட்டக் கணக்கும் பெருந் துணையா யிருக்கின்றன. ஆயினும், தொழில் நிலையை இவை உணர்த்துவதில்லை. ஒருவனிடம் உள்ள சொத்துகளின் மதிப்பும் பொறுப்புகளின் மதிப்பும் நாள்தோறும் மாறுகின்றன. ஆண்டிறுதியில் அவன் தொழில் நிலையை உணர—சொத்துகளின், பொறுப்புகளின் நிலையையும் தன்மையையும் உணர—இருப்பு நிலைக் குறிப்புப் பயன்படுகிறது. இருப்புப் பட்டியலில் உள்ள பல்வகைச் செலவினக் கணக்குகளும், வரவினக் கணக்குகளும், சரக்கு பற்றிய கணக்குகளும், வாணிக, இலாப-நட்டக் கணக்குகட்கு எடுத்துச் சென்ற பின்னர் இருப்பது சொத்துகள் பற்றிய கணக்குகளும் பொறுப்புகள் பற்றிய கணக்குகளுமாகும். இவை இருப்பு நிலைக் குறிப்பிற்கு எடுத்துச் செல்லப்படுகின்றன. அதாவது, சொத்துகளையும் பொறுப்புகளையும் உள்ளடக்கிக் குறிப்பிட்ட நாளில் தொழிலின் நிதி நிலையை உணர்த்தும் அறிக்கையே இருப்புநிலைக் குறிப்பு (Balance Sheet) எனலாம். வலது புறத்தில் சொத்துகளும் இடது புறத்தில் பொறுப்புகளும் காட்டப்படுகின்றன. இருப்பு நிலைக் குறிப்பு ஒரு கணக்கு அன்று; அது ஒரு அறிக்கையே, எனவே, பற்றுப் பகுதி, வரவுப் பகுதி என்று கூறுதல் முற்றிலும் தவறாகும்.

இலாப-நட்டக் கணக்கு காட்டும் நிகர இலாபம் அல்லது நிகர நட்டம் முதல் கணக்கிற்கு எடுத்துச் செல்லப்படுகிறது என்று கண்டோம். இம் முதல் கணக்கு ஒரு பொறுப் பாகையால், இருப்புநிலைக் குறிப்பில் இருக்கும். ஆகவே இருப்பு நிலைக் குறிப்பு,

சொத்துகள், பொறுப்புகள் பற்றிய நிலையை உணர்த்துவதுடன் நில்லாது, அவ் வாண்டில் ஏற்பட்ட இலாபம் அல்லது இழப்பையும் காட்டுகிறது.

தொழிலின் நிதி நிலையை உள்ளவாறே இருப்புநிலைக் குறிப்பு படம் பிடித்துக் காட்டவேண்டும். எனவே, ஆழ்ந்த கவனஞ் செலுத்தி இதனைத் தயாரிக்க வேண்டும். சொத்துகள் சரியான மதிப்பை உணர்த்தவேண்டும். தேய்மானம், வராக் கடன் போன்றவற்றிற்குச் சரிக்கட்ட வேண்டும். இலாப-நட்டமும் முதல் கணக்கில் சேர்க்கப்படுவதால், இலாப-நட்டக் கணக்கும் சரிவரத் தயாரிக்கப் பட்டிருக்க வேண்டும் என்பது இதனுற் பெறப்படும். கொடுக்கப்பட வேண்டிய செலவினங்கள் பொறுப்புகளாகும். முன் கூட்டிச் செலுத்திய செலவினங்கள், சொத்துகள் போன்றவை—பயன் இன்னும் பெற வேண்டியுள்ளது. இவற்றையெல்லாம் ஆய்ந்து இருப்புநிலைக் குறிப்பைத் தயாரிக்க வேண்டும். இவை 'சரிக் கட்டுதல்' எனுந் தலைப்பில் விரிவாக விளக்கப் பட்டுள்ளன.

### இருப்பு நிலைக் குறிப்பின் நோக்கங்கள்

1 குறிப்பிட்ட காலத்தில் ஏற்பட்ட தொழில் நடவடிக்கைகளின் சுருக்கமாய் இது அமைகிறது.

2 குறிப்பிட்ட நாளில் தொழிலின் நிதி நிலை எவ்வாறுள்ளது என்பதைப் படம்பிடித்துக் காட்டுகிறது.

3 தொழிலில் வைத்த முதல் எவ்வாறு பல்வகைச் சொத்துகளில் பரவியுள்ளது என்பதையும், பொறுப்புகளின் தன்மையையும். சொத்துகளின் தன்மையையும் அறிந்துகொள்ள முடிகிறது.

4 ரொக்கமாகக் கூடிய சொத்துகள் (எளிவரல் சொத்துகள்—Liquid Assets) எவ்வளவு உள்ளன என்பதையும், போதுமான நடைமுறை முதல் (Working Capital) உள்ளதா என்பதையும் விளக்குகிறது.

5 இலாப-நட்டம் முதல் கணக்கில் சரிக்கட்டப் படுவதால், சென்ற ஆண்டினும் முதல் கூடியுள்ளதா அல்லது குறைந்துள்ளதா என்பதை அறிந்து கொள்ளலாம்.

6 கடனுளிகள், கடனீந்தோர் நிலையை ஒப்பிட்டுப் பார்க்க இயலும். பொறுப்புகளைத் தீர்க்கப் போதுமான சொத்துகள் உள்ளனவா என்பதை உணர முடியும்.

## இருப்புநிலைக் குறிப்புக்கும் இருப்புப் பட்டியலுக்கும் உள்ள வேறுபாடுகள்

குறிப்பிட்ட நாளில் பற்று வரவு இருப்புகளைக் காட்டும் கணக்குகளின் பட்டியல் இருப்புப் பட்டியல்.

குறிப்பிட்ட நாளில் தொழிலில் உள்ள சொத்துகள், பொறுப்புகள்—இவற்றின் நிலையை விளக்கும் வண்ணம் தயாரிக்கப்படும் அறிக்கையே இருப்புநிலைக் குறிப்பாகும்.

கணக்குகள் சரியாக எழுதப் பெற்று, எடுத்தெழுதப் பட்டுள்ளனவா என்பதை உணரும் நோக்குடனும் இறுதிக் கணக்குகள் தயாரிக்கும் நோக்குடனும் இருப்புப் பட்டியல் தயாரிக்கப் படுகிறது.

குறிப்பிட்ட நாளில் தொழிலின் நிதி நிலையை உணர்த்துவது இருப்பு நிலைக் குறிப்பு.

தொடக்கச் சரக்கு இருப்புப் பட்டியலில் இடம் பெறுகிறது.

இறுதிச் சரக்கிருப்பு இருப்பு நிலைக் குறிப்பில் இடம் பெறுகிறது.

இருப்புக் காட்டும் எல்லாக் கணக்குகளையும் இருப்புப் பட்டியல் உள்ளடக்குகிறது.

சொத்துகள் பொறுப்புகள் போன்றவை மட்டிலுமே இருப்பு நிலைக்குறிப்பில் காணப்பெறும்.

வாணிகக் கணக்கு, இலாப நட்டக் கணக்குகள் தயாரிப்பதற்கு முன் இருப்புப் பட்டியல் தயாரிக்கப்படுகிறது.

இறுதிக் கணக்குகள் தயாரிக்கப்பட்டபின் இருப்பு நிலைக் குறிப்பு தயாரிக்கப்படுகிறது.

தொழிலில் ஏற்பட்டது இலாபமா, இழப்பா என்பதை இருப்புப் பட்டியல் உணர்த்துவதில்லை. இருப்பு நிலைக் குறிப்பு இதைக் காட்டுகிறது.

இருப்புப் பட்டியலில் கணக்குகளை ஒரு வரிசையில் எழுத வேண்டிய தேவையில்லை. ஆனால், இருப்பு நிலைக் குறிப்பில் குறிப்பிட்ட முறை பின்பற்றப்படுகிறது. சொத்துகளின் நிலை

தன்மை யடிப்படையில் அல்லது அதற்கு மாறான நிலையில் சொத்துகள் எழுதப்பட வேண்டும்.

## சொத்துகளின் வகைகள்
## (Kinds of Assets)

சொத்துகளைத் தன்மைக் கேற்ப வகைப்படுத்தலாம்.

நிலையான சொத்துகள் (Fixed Assets) : இவற்றை வாங்கும் நோக்கம் விற்று இலாபம் ஈட்டுவதன்று. தொழிலில் நிலையாகப் பயன்படுத்தும்பொருட்டே இவை வாங்கப் படுவதால் இவை நிலையான சொத்துகள் எனப்படுகின்றன. எடுத்துக்காட்டுகள் : கட்டடம், எந்திரம், தட்டெழுத்துப் பொறி போன்றவை.

உருமாறும் சொத்துகள் அல்லது கைமாறும் சொத்துகள் : (Floating Assets or Circulating Assets) : இவ் வகைச் சொத்துகள் விற்கும் நோக்குடன் வாங்கப் படலாம். வணிகஞ் செய்யும் சரக்கை இதற்கு எடுத்துக் காட்டாகக் கூறலாம். அல்லது விரைவில் பணமாகக் கூடிய சொத்துகளையும் இவ் வகையில் அடக்கலாம். எடுத்துக்காட்டு : சரக்கிருப்பு, கடனாளிகள், வரவுடைய உண்டியல்கள், வங்கியில் உள்ள ரொக்கம், ரொக்கம் போன்றவை.

குறிப்பிட்ட சொத்து ஒன்றை நிலையான சொத்தா அல்லது உருமாறும் சொத்தா என்று சொல்ல முடியாது. நடத்தும் தொழிலின் தன்மையைப் பொறுத்தே அது அமையும். தட்டெழுத்துப் பொறி அலுவலகத்தில் பயன்படுத்த வாங்குகிறோம் எனில் அது நிலையான சொத்து. அத் தட்டெழுத்துப் பொறியை விற்றவர்க்கு அது உருமாறும் சொத்து. அவ்வாறே வணிகத்தில் பயன்படுத்த வாங்கும் மேசை, நாற்காலிகள் (மனைத்துணைப் பொருள்) துணிக்கடை வைத்திருப்பவருக்கு ஒரு நிலையான சொத்து. ஆனால், அவை மனைத்துணைப் பொருளில் வியாபாரம் செய்பவர்க்கு உருமாறும் சொத்தாக இருக்கின்றன. (அதாவது அவரரின் சரக்காக அமைகிறது.) எனவே, ஒரு சொத்து எந் நோக்குடன் வாங்கப்படுகிறது என்பதைப் பொறுத்தே அது நிலையான சொத்தா அல்லது உருமாறும் சொத்தா என்பது புலப்படும்) உருமாறும் சொத்துகளின் மதிப்பு நாளுக்கு நாள் மாறும். ஆனால், நிலையான சொத்துகளின் மதிப்பு அவ்வாறு மாறுவதில்லை.

ரொக்கமாகக்கூடிய சொத்து (Liquid Assets) : ரொக்கம், வங்கியிருப்புப் போன்றவற்றையும் எளிதில் பணமாக மாறக்கூடிய வரவுடைய உண்டியல், அரசினர் கடன் பத்திரங்கள் போன்றவற்றையும் இது குறிக்கும். எல்லாச் சொத்துக்களையும் விற்றுப் பணமாக்க முடியும் எனினும், விரைவிலும் நட்டம் அதிகமின்றியும் பணத்துக்கு மாற்றக்கூடிய சொத்துகளை இது குறிக்கும்.

புலனாகும் சொத்துகள் (Tangible Assets) : கட்டடம், மனைத் துணைப் பொருள், சரக்கு, ரொக்கம் போன்ற கண்ணால் காணக் கூடிய சொத்துகளை இது உணர்த்தும்.

புலனாகாச் சொத்துகள் (Intangible Assets) : கண்ணுக்குப் புலனாகாத சொத்துகளை இது குறிக்கும். தொழிலில் ஏற்படும் பொது நன்மதிப்பு (Good Will), பதிப்புரிமை (Copy Right), புனை பொருள் உரிமை (Patent) போன்றவற்றை எடுத்துக் காட்டுகளாகக் கூறலாம்.

பெயரளவு சொத்துகள் (Fictitious Assets) : முன்கூட்டிச் செலுத்திய செலவினங்கள், கம்பனி தொடக்கச் செலவுகள் (Preliminary Expenses) போன்றவை இவ்வாறு அழைக்கப்படும்.

தேயும் சொத்துகள் (Wasting Assets): இவ்வகைச் சொத்துகளைப் பயன் படுத்தும் பொழுது மதிப்பை இழந்துவிடுகின்றன. எனவே, இவை இவ்வாறு அழைக்கப்படுகின்றன. நிலக்கரிச் சுரங்கம், இரும்புச் சுரங்கம் போன்றவை எடுத்துக்காட்டுகள். இரும்புக் கனியை எடுக்க எடுக்கச் சுரங்கத்தின் மதிப்புக் குறைந்து விடுகின்றதன்றோ? முழுவதும் எடுக்கப்பட்டபின்னர், வளம் முழுவதும் தேய்ந்து விட்டதாகத் தானே பொருள்?

தொழிலில் உள்ள நிலையான சொத்துகளின் மதிப்புக் குறைந்து விடுகின்றதன்றோ? முழுவதும் எடுக்கப்பட்ட பின்னர், வளம் முழுவதும் தேய்ந்து விட்டதாகத்தானே பொருள்?

தொழிலில் உள்ள நிலையான சொத்துகளின் மதிப்பு நிலைமுதல் (Fixed Capital) எனப்படும்.

உருமாறும் சொத்துகளில் பயன்படுத்தப் பட்டிருக்கும் தொகை உருமாறும் முதல் (Floating Capital) எனப்படும்.

தொழில் நடத்தத் தேவையாய் உள்ள தொகை நடை முறை முதல் (Working Capital) எனப்படும்.

இருப்பு நிலைக் குறிப்பில் சொத்துகளின் மதிப்பு சரிவரக் காட்டப்பட வேண்டும். சொத்துகள் தொழிலில் பயன் படுத்தும் காரணத்தாலும் விலை மாற்றத்தாலும் வழக்கொழிந்து போவதாலும் (Obsolete) மதிப்புக் குறைகிறது. இதனை மதிப்பிழப்பு அல்லது தேய்மானம் என்கிறோம். தேய்மானத்துக்கு வகை செய்த பின் உள்ள மதிப்பையே இருப்புநிலைக் குறிப்பில் காட்ட வேண்டும்.

கடனாளிகளில் சிலரிடமிருந்து கடன் வராமல் போகலாம். இது வராக்கடன் எனப்படும் என்று முன்னரே கூறியிருக்கிறோம். கடனாளிகள் தொகையில் வராக்கடனைக் கழித்து உறுதியாகக் கைக்கு வரக்கூடிய தொகையையே இருப்பு நிலைக் குறிப்பில் எழுத வேண்டும். இவை சரிக்கட்டுதல் எனுந் தலைப்பில் விவரமாக விளக்கப் பட்டுள்ளன. இறுதிச் சரக்கிருப்பை மதிப்பிடும் முறையை முன் அதிகாரத்திலேயே விளக்கிவிட்டோம்.

### இருப்பு நிலைக் குறிப்பை எழுதும் முறை

சொத்துகள் பகுதியில் ரொக்கத்தை முதலிலும், பின்னர்ப் படிப்படியாக ரொக்க மாகும் சொத்துகளை எழுதலாம். பொறுப் புகள் பகுதியில் அவை தீர்க்கப்படவேண்டிய வரிசையில் எழுதப் படும். மற்றொரு முறை இதற்கு நேர்மாறானது. அதாவது சொத்துகளின் நிலைதன்மை அடிப்படையில் எழுதப்படும். பணமாக மாற்ற முடியாச் சொத்து முதலிலும் கையிருப்பு ரொக்கம் இறுதியிலும் எழுதப்படும். பொறுப்புகள் பகுதியில் முதல் கணக்கு முதலிலும் விரைவில் தீர்க்கப்பட வேண்டியவை, செலுத்த வேண்டிய உண்டியல்கள், கடனீந்தோர் போன்றவை இறுதியிலும் எழுதப்படும்.

இருப்புநிலைக் குறிப்பின் மாதிரி கீழே கொடுக்கப்பட்டு உள்ளது.

முதல்முறை—நிலைதன்மை அடிப்படை

30-6-1971-க்கான இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| முதல் ... | | தொழில்நன் மதிப்பு ... | |
| கழி எடுப்பு ... | | கட்டடம் ... | |
| கூட்டு நிகர இலாபம் ... | | பொறிவகை | |
| (அல்லது) | | மனைத்துணைப்பொருள் | |
| கழி நிகர நட்டம் ... | | விடு கருவிகள் | |
| கடனீந்தோர் ... | | முன் கூட்டிச் செய்த செலவினம் | |
| கடன் ... | | இறுதிச் சரக்கிருப்பு | |
| கொடுபட வேண்டிய செலவினம் ... | | வரவுடைய உண்டியல் | |
| செலுத்த வேண்டிய உண்டியல் | | கடனாளிகள் ... | |
| | | அரசினர் கடன் பத்திரங்கள் ... | |
| | | வங்கியில் ரொக்கம். ... | |
| | | ரொக்கம் ... | |

இரண்டாம் முறை— ரொக்கநிலை அடிப்படை

30-6-1971-க்கான இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| செலுத்த வேண்டிய உண்டியல் | | ரொக்கம் | |
| கடன் | | வங்கியின் ரொக்கம் | |
| கடனீந்தோர் | | அரசினர் கடன் பத்திரங்கள் | |
| கொடுபட வேண்டிய செலவினம் | | கடனாளிகள் | |
| முதல் கணக்கு | | வரவுடைய உண்டியல் | |
| | | இறுதிச்சரக் கிருப்பு | |
| | | முன் கூட்டிச் செய்த செலவினம் | |
| | | விடு கருவிகள் | |
| | | மனைத்துணைப் பொருள் | |
| | | எந்திரம் | |
| | | கட்டடம் | |
| | | தொழில் நன் மதிப்பு | |

35-ஆவது எடுத்துக்காட்டில் கொடுக்கப்பட்ட இருப்புகளிலிருந்து இருப்புநிலைக் குறிப்பைத் தயார் செய்க.

**இராவணனின்**

**30-6-1971-ற்கான இருப்புநிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|---|
| இராவணனின் | | | கட்டடம் | 50,000 |
| முதல் கணக்கு. | 40,000 | | பொறிவகை | 10,400 |
| கூட்டு | | | மனைத்துணைப் பொருள் | 3,200 |
| நிகரலாபம் | 39,830 | | சைக்கிள் | 1,200 |
| | 79,830 | | தட்டெழுத்துப் பொறி | 2,500 |
| கழி எடுப்பு | 2,000 | 77,830 | இறுதிச் சரக்கிருப்பு | 10,500 |
| வங்கி மேல்வரைப்பற்று | | 6,275 | கடனாளிகள் | 10,700 |
| செலுத்த வேண்டிய | | | முதலீடு | 5,900 |
| உண்டியல் | | 1,870 | ரொக்கம் | 375 |
| கடனீந்தோர் | | 8,800 | | |
| | | 94,775 | | 94,775 |

எடுத்துக் காட்டு 38 :

*31-12-1971*-ல் பாரதியின் ஏடுகளிலிருந்து எடுக்கப்பட்ட இருப்புகள் கீழே தரப்பட்டுள்ளன. அவற்றிலிருந்து அந் நாளில் முடியும் ஆண்டுக்கான வாணிக, இலாப-நட்டக் கணக்குகளையும் அந் நாளிற்கான இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

| | | ரூ. |
|---|---|---|
| பாரதியின் முதல் கணக்கு | ... | 24,000 |
| எடுப்புக் கணக்கு | ... | 2,000 |
| பொறிவகை | ... | 15,000 |
| கொள்முதல் | ... | 20,300 |
| விற்பனை | ... | 35,750 |
| கொள்முதல் திருப்பம் | ... | 360 |
| ஊதியம் | ... | 7,200 |
| விற்பனை வரி | ... | 250 |

| | | ரூ. |
|---|---|---|
| ஈட்டுறுதி | ... | 300 |
| தள்ளுபடி பெற்றது | ... | 200 |
| விற்பனைத் திருப்பம் | ... | 250 |
| வெளிச்சுமை கூலி | ... | 100 |
| உள்சுமை கூலி | ... | 200 |
| கழிவு (வ) | ... | 560 |
| கடனாளி | ... | 10,260 |
| கடனீந்தோர் | ... | 11,750 |
| தொடக்கச் சரக்கிருப்பு | ... | 8,500 |
| வங்கி மேல் வரைப் பற்று | ... | 3,500 |
| வராக் கடன் | ... | 200 |
| இலாப-ஈவு | ... | 100 |
| முதலீடுகள் | ... | 4,000 |
| மனைத்துணைப் பொருள் | ... | 1,500 |
| செலுத்த வேண்டிய உண்டியல் | ... | 2,300 |
| வரவுடைய உண்டியல் | ... | 1,750 |
| ரொக்கம் | ... | 250 |
| தட்டெழுத்துப் பொறி | ... | 1,100 |
| சைக்கிள் | ... | 560 |
| கூலி | ... | 4,800 |

31-12-1971-ல் இறுதிச் சரக்கிருப்பு ரூ. 5,030 ஆக மதிப்பிடப்பட்டது.

விடை

பாரதியின்

31-12-1971-ல் முடியும் ஆண்டுக்கான வாணிகக் கணக்கு

| ப | | ரூ. | | வ | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|
| தொடக்கச் சரக்கிருப்பு ... | | 8,500 | — | விற்பனை | 35,750 | | |
| கொள்முதல் | 20,300 | | | கழி விற்பனைத் திருப்பம் | 250 | 35,500 | — |
| கழி கொள்முதல் திருப்பம் | 360 | 19,940 | — | இறுதி சரக்கிருப்பு | | 5,030 | — |
| உள்சுமை கூலி ... | | 200 | — | | | | |
| கூலி | | 4,800 | — | | | | |
| இலாப-நட்டக் க/கு —மொத்த லாபம் மாற்றப்படுகிறது. | | 7,090 | — | | | | |
| ... | | 40,530 | — | | | 40,530 | — |

பாரதியின்

31-12-1971-ல் முடியும் ஆண்டுக்கான இலாப-நட்டக் கணக்கு

| | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| ஊதியம் | 7,200 | — | வாணிகக் க/கு—மொத்த இலாபம் மாற்றப்படுகிறது | 7,090 | — |
| ஈட்டுறுதி | 300 | — | தள்ளுபடி | 200 | — |
| வெளிச்சுமைகூலி | 100 | — | கழிவு | 560 | — |
| விற்பனை வரி | 250 | — | இலாப ஈவு | 100 | — |
| வராக்கடன் | 200 | — | முதல் கணக்கு — நிகர நட்டம் மாற்றப்படுகிறது. | 100 | — |
| | 8,050 | — | | 8,050 | — |

பாரதியின்

31-12-1971-ற்கான இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | | ரூ. | | சொத்துகள் | ரூ. | |
|---|---|---|---|---|---|---|
| பாரதியின் முதல் கணக்கு | 24,000 | | | பொறிவகை | 15,000 | — |
| கழி நிகரநட்டம் | 100 | | | மனைத்துணைப் பொருள் | 1,500 | — |
| | 23,900 | | — | தட்டெழுத்துப் பொறி | 11,00 | — |
| ,, எடுப்பு | 2,000 | 21,900 | | சைக்கிள் | 560 | — |
| செலுத்த வேண்டிய உண்டியல் | | 2,300 | — | இறுதிச் சரக்கிருப்பு | 5,030 | — |
| வங்கி மேல் வரைப் பற்று | | 3,500 | — | முதலீடுகள் | 4,000 | — |
| கடனீந்தோர் | | 11,750 | — | கடனாளிகள் | 10,260 | — |
| | | | | வரவுடைய உண்டியல் | 1,750 | — |
| | | | | ரொக்கம் | 250 | — |
| | | 39,450 | — | | 39,450 | — |

வினாக்கள்

1. இருப்புநிலைக் குறிப்பு என்றால் என்ன ? அதன் நோக்கங்கள் யாவை ?

2. சொத்துகளை எவ்வாறு வகைப்படுத்தலாம் ? எடுத்துக் காட்டுகளுடன் விளக்குக ?

3. இருப்புநிலைக் குறிப்பு எவ்வாறு இருப்புப் பட்டியலினின்றும் வேறுபடுகிறது?

பயிற்சி

1. கீழ்க்கொடுக்கப்பட்ட இருப்புகள் மதிவாணன் ஏடுகளிலிருந்து 31-3-1970-ல் எடுக்கப்பட்டுள்ளன. அவற்றிலிருந்து அவ்வாண்டிற்கான வாணிக, இலாப-நட்டக் கணக்குகளையும் 31-3-1970-க்கான இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

| | | ரூ. |
|---|---|---|
| பல்வகை வரவு | ... | 200 |
| பழுது பார்க்குஞ் செலவு | ... | 310 |

| | | ரூ. |
|---|---|---|
| பொறிவகை | ... | 12,670 |
| மனைத்துணைப் பொருள் | ... | 1,330 |
| அலுவலகச் செலவு | ... | 750 |
| வியாபாரச் செலவு | ... | 310 |
| கட்டடம் | ... | 15,400 |
| வங்கிக் கட்டணம் | ... | 50 |
| தொடக்கச் சரக்கிருப்பு | ... | 9,300 |
| கொள்முதல் | ... | 15,450 |
| கொள்முதல் திருப்பம் | ... | 440 |
| விற்பனைத் திருப்பம் | ... | 120 |
| கடனீந்தோர் | ... | 12,370 |
| விளம்பரம் | ... | 500 |
| ரொக்கம் | ... | 160 |
| வங்கி | ... | 5,870 |
| விற்பனை | ... | 20,560 |
| சில்லரைச் செலவு | ... | 150 |
| ஈட்டுறுதியும் வரியும் | ... | 500 |
| பயணச் செலவு | ... | 200 |
| முதல் | ... | 24,500 |
| கடன் | ... | 5,000 |

31-3-1970-ல் இறுதிச் சரக்கிருப்பு ரூ. 7,585 எனத் தீர்மானிக்கப் பட்டது.

2. கலைவாணனின் 30-6-1970-க்கான இருப்புநிலைக் குறிப்பு கீழ்க் கண்டவாறு தவறாகத் தயாரிக்கப்பட்டது. அதனைச் சரியான முறையில் மாற்றி எழுதுக.

30-6-1970-ல் முடியும் ஆண்டுக்கான இறுதிநிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| முதல் ... | 6,900 | எடுப்பு ... | 500 |
| மனைத்துணைப் பொருள் | 750 | இறுதிச் சரக்கிருப்பு ... | 6,010 |
| முன் கூட்டிச் செலுத்திய ஈட்டுறுதி ... | 30 | வங்கி மேல் வரைப் பற்று ... | 1,100 |
| வரவுடைய உண்டியல் ... | 200 | கடன் பெற்றது ... | 2,300 |
| கடனாளி ... | 4,750 | செலுத்த வேண்டிய உண்டியல் ... | 675 |
| முதலீடுகள் ... | 1,840 | தட்டெழுத்துப் பொறி ... | 950 |
| இலாப-நட்டக் கணக்கு ... | 820 | ரொக்கம் ... | 260 |
| | | கடனீந்தோர் ... | 3,490 |
| | 15,290 | | 15,290 |

# 13. சரிக்கட்டுதல்

## (Adjustments)

குறிப்பிட்ட காலத்தில் செய்துவரும் தொழிலில் ஏற்பட்ட இலாப-இழப்பை உணர்த்துவது இலாப-நட்டக் கணக்கென்றும், தொழிலின் நிதிநிலையைப் படம்பிடித்துக் காட்டுவது இருப்பு நிலைக்குறிப்பென்றும் கண்டோம். இலாப-நட்டக் கணக்கு, மேற்கொண்ட செலவுகளையும், கைக்கு வந்து சேர்ந்த வரவினங்களை மட்டும் கணக்கில் எடுத்துக் கொண்டால் உண்மையான இலாப-நட்டத்தைக் காட்டாமற் போகும். எனவே, ஆண்டு முடிந்தும், அவ்வாண்டுக்குரிய, ஆனால், செலுத்தப்படாச் செலவினங்கள் ஏதுமிருப்பின் அவற்றையும் கணக்கில் கொண்டுவர வேண்டும். அவ்வாறே இன்னும் பெற வேண்டிய வரவினங்கள் இருப்பின், அவற்றையும் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டும். அப்பொழுதுதான் உண்மையான இலாப-நட்டம் தெரிய வரும். இவற்றை இவண் காண்போம்.

1. இறுதிச் சரக்கிருப்பு
2. தேய்மானம்
3. கொடுபட வேண்டிய செலவு
4. முன்கூட்டிச் செய்த செலவு
5. பெற வேண்டிய வரவு
6. முன் கூட்டிப் பெற்ற வரவு
7. முதல் மீது வட்டி
8. எடுப்பு மீது வட்டி

9. வராக்கடன்
10. ஐயக்கடன் காப்பு
11. கடனாளிகள் மீது தள்ளுபடிக்காப்பு
12. கடனீந்தோர்மீது தள்ளுபடிக் காப்பு
13. எழுது பொருள் இருப்பு
14. தீயில் சரக்கழிதல்.
15. சொத்தினை விற்பதில் ஏற்படும் இலாப-நட்டம்
16. உரிமையாளர் சரக்கினைப் பயன்படுத்திக் கொள்ளல்
17. பிறவகைச் சரிக்கட்டுதல்கள்.

### இறுதிச் சரக்கிருப்பு

இறுதிச் சரக்கினை மதிப்பிடும் முறை முன்னரே விளக்கப்பட்டு விட்டது. இவ்வாறு மதிப்பிடப்பட்ட இறுதிச் சரக்கை வாணிகக் கணக்கில் கொண்டுவர தேவையான பதிவு :

இறுதிச் சரக்கிருப்புக் க/கு ... ப
வாணிகக் க/கு
(இறுதிச் சரக்கிருப்பை வாணிகக்
கணக்கில் கொண்டு வர.)

இறுதிச் சரக்கிருப்புக் கணக்கு பற்றிருப்பைக் காட்டுகிறது, இது ஆண்டு இறுதி நாளில் விற்கப்படாத சரக்காகும். ஆனால். அடுத்த ஆண்டில் விற்கப்படும். எனவே, இது சொத்து வகையைச் சார்ந்தது. இருப்பு நிலைக் குறிப்பில் சொத்துகள் பகுதியில் காட்டப் பெறும். இவ்வாண்டின் இறுதிச் சரக்கிருப்பானது அடுத்த ஆண்டின் தொடக்கச் சரக்கிருப்பாகும்.

எடுத்துக்காட்டு : 30--6-1971-ல் இறுதிச் சரக்கிருப்பு ரூ. 7,500 என மதிப்பிடப்பட்டது. இதற்குத் தேவையான சரிக்கட்டுப் பதிவு.

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| இறுதிச் சரக்கிருப்பு ... | ப | 7,500 | |
| வாணிகக் க/கு | | | 7,500 |
| (இறுதிச் சரக்கிருப்பைக் கணக்கிற் கொண்டுவர.) | | | |

30-6-1971-ல் முடியும் ஆண்டுக்கான

ப வாணிகக் கணக்கு வ

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| | | இறுதிச் சரக்கிருப்பு | 7,500 |

30-6-1971-ற்கான இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| | | இறுதிச் சரக்கிருப்பு | 7,500 |

தேய்மானம் (Depreciation)

சொத்துகளின் மதிப்பு ஆண்டு செல்லச் செல்லத் தேயு மென்பது வெளிப்படை. இம் மதிப்பிழப்பு தேய்மானம் எனப் படும். தொழிலில் பயன் படுத்தலால் இவ்வாறு மதிப்புக் குன்ற லாம்; பயன் படுத்தாது வைத்திருப்பினும் நாள்கள் செல்வதால் மதிப்புக் குறையலாம். பல ஆண்டுகள் செல்வதால் அல்லது புதுக்கருவிகள் பயன்படுத்தப்படவே வழக்கொழிந்து போகலாம். எக்காரணம் பற்றியோ சொத்துகள் மதிப்பிழக்கின்றன என்பது கண்கூடு. சொத்துகளின் உண்மை மதிப்பை இருப்பு நிலைக் குறிப்பு காட்ட வேண்டு மாகையால் தேய்மானத்துக்கு வகை செய்வது இன்றியமையாதது.

தேய்மானம் ஒரு நட்டமாகும். எனவே, தேய்மானக் கணக்கில் பற்று வைக்க வேண்டும். சொத்து மதிப்பிழந்து விடுவதால் அது காட்டும் பற்றிருப்பு குறைந்து விடும். எனவே, குறிப்பிட்ட அச் சொத்துக் கணக்கில் வரவு வைக்க வேண்டும். சரிக்கட்டுப் பதிவு :

தேய்மானக் க/கு ... ப

(குறிப்பிட்ட) சொத்துக் க/கு

இத் தேய்மானத்தை இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்ல வேண்டும். இதற்குத் தேவையான மாற்றுப் பதிவு.

இலாப-நட்டக் க/கு ப

தேய்மானக் க/கு

இவ்வாறு தேய்மானக் கணக்கு முடிக்கப் பெறுகிறது.

தேய்மானம் காலத்தின் அடிப்படையில் கணக்கிடப்படுகிறது, எனவே, கணக்கு தயாரிக்கப்படும் காலம் ஓராண்டா அல்லது அரையாண்டா என்பதை நோக்க வேண்டும். வருடத்திற்கு 10% வீதம் தேய்மானம் கணக்கிடப்படவேண்டும் என்றும், அரை யாண்டுக்குக் கணக்குத் தயாரிக்கப்படுகிறதென்று கொண்டால், குறிப்பிட்ட சொத்தின் மீது 10%ல் அரையாண்டுக்குண்டான தேய்மானத்தையே கண்டுபிடித்துச் சரிக்கட்ட வேண்டும் என்பதையும் மறத்தலாகாது.

நடப்பாண்டில் புதிதாகச் சொத்து ஒன்று வாங்கப் பட்டிருப்பின், அது வாங்கப்பட்ட நாளிலிருந்து ஆண்டு முடியும் நாள் வரையுள்ள கால அடிப்படையில்தான் தேய்மானம் கண்டு பிடிக்க வேண்டும். எந்நாளில் சொத்து வாங்கப்பட்டது என்ற விவரம் கணக்கில் கொடுக்கப்படவில்லையெனில், ஆண்டிறுதியில் உள்ள இருப்பின்மீது தேய்மானத்தைக் கணக்கிட்டுக் கொள்ளலாம். அடிக்குறிப்பு (Foot Note) ஒன்று இது குறித்துச் சேர்த்தல் நலம் என்கிறார் வில்லியம் பிக்கில்ஸ்.

எடுத்துக்காட்டு 39 :

31-12-1969-ல் இருந்த இருப்புகள் :

| | | |
|---|---|---|
| மனைத்துணைப் பொருள் | ... | ரூ. 2,800 |
| கட்டடம் | ... | ரூ. 30,000 |
| விடு கருவிகள் (Loose Tools) | ... | ரூ. 3,000 |

மனைத்துணைப் பொருள் புதிதாக 1-10-69-ல் ரூ. 800-க்கு வாங்கிய மேசை நாற்காலிகளை உள்ளடக்கியுள்ளது. ஆண்டிறுதியில் (31-12-1969-ல்) விடுகருவிகள் ரூ. 2500 என மதிப்பிடப்பட்டன. தேய்மானம் மனைத்துணைப் பொருள் மீது 10%ம் கட்டடத்துக்கு 5% ம் ஒதுக்குக.

விடை :

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| தேய்மானக் க/கு | ... ப | 2,220 | |
| மனைத்துணைப் பொருள் க/கு | | | 220 |
| கட்டடக் க/கு | ... | | 1500 |
| விடுகருவிகள் க/கு | ... | | 500 |

(தேய்மானம் ஒதுக்க)

பின்னர்த் தேய்மானத்தை இலாப-நட்டக் கணக்குக்கு எடுத்துச் செல்ல :

| | | | |
|---|---|---|---|
| இலாபநட்டக் க/கு | ... ப | 2,220 | |
| தேய்மானம் க/கு | | | 2,220 |

குறிப்பு : மனைத்துணைப் பொருள்மீது கீழ்க்கண்டவாறு தேய்மானம் கணக்கிடப்பட்டது,

ரூ. 800 மதிப்புள்ள மனைத்துணைப் பொருள் 1-10-1969-ல் தான் வாங்கப்பட்டது, எனவே, ரூ.2,000 மீது ஓராண்டுக்குத்

| | | |
|---|---|---|
| தேய்மானம் | ... $2{,}000 \times \frac{10}{100} =$ | 200 |
| ரூ.800 மீது 3 திங்கட்கு... | $800 \times \frac{10}{100} \times \frac{3}{12} =$ | 20 |
| | | 220 |
| கட்டடம் | ... $30{,}000 \times \frac{5}{100} =$ | 1,500 |

விடுகருவிகளின் மதிப்பு ரூ. 2,500-க்குக் குறைந்து விட்டதால்,

ரூ. 500, மதிப்பிழந்து விட்டது எனக் கொள்ளலாம். கீழ்க் கண்டவாறு பேரேட்டுக் கணக்குகளும் இலாப-நட்டக் கணக்கும் இருப்புநிலைக் குறிப்பும் இருக்கும்.

## பேரேட்டுக் கணக்குகள்

### மனைத்துணைப் பொருள் கணக்கு

ப | | | | | | | வ

| | | ரூ. | | | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|
| 1969 சன. 1 | இருப்பு கீ/கொ | 2,000 | — | 1969 டிச. 31 | தேய்மானம் | 220 | — |
| அக். 1 | வங்கி | 800 | — | ,, | இருப்பு கீ/இ | 2,580 | — |
| | | 2,800 | — | | | 2,800 | — |
| 1970 சன. 1 | இருப்பு கீ/கொ | 2,580 | — | | | | |

### கட்டடக் கணக்கு

| | | ரூ. | | | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|
| 1969 சன. 1 | இருப்பு கீ/கொ | 30,000 | — | 1969 டிச. 31 | தேய்மானம் | 1,500 | — |
| | | | | ,, | இருப்பு கீ/இ | 28,500 | — |
| | | 30,000 | — | | | 30,000 | — |
| 1970 சன. 1 | இருப்பு கீ/கொ | 28,500 | — | | | | |

### விடு கருவிகள் கணக்கு

| | | ரூ. | | | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|
| 1969 சன. 1 | இருப்பு கீ/கொ | 3,000 | — | 1969 டிச. 31 | தேய்மானம் | 500 | — |
| 1970 சன. 1 | | | | | இருப்பு கீ/இ | 2,500 | — |
| | | 3,000 | — | | | 3,000 | — |
| | இருப்பு கீ/கொ | 2,500 | — | | | | |

தேய்மானக் கணக்கு

| 1969 | | ரூ. | | 1969 | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|
| டிச. 31 | மனைத் துணைப் பொருள் | 220 | — | டிச. 31 | இலாப-நட்டக் கணக்கு | 2,220 | — |
| | கட்டடம் | 1,500 | — | | | | |
| | விடு கருவிகள் | 500 | — | | | | |
| | | 2,220 | — | | | 2,220 | — |

31-12-1969-ல் முடியும் ஆண்டுக்கான இலாப-நட்டக் க/கு

| | | ரூ. | | | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|
| தேய்மானம் | | | | | | | |
| மனை துணைப் பொருள் 220 | | | | | | | |
| கட்டடம் 1,500 | | | | | | | |
| விடு கருவிகள் 500 | — | 2,220 | — | | | | |

31-12-1969ற்கான இருப்பு நிலைக் குறிப்பு

| | ரூ. | | | ரூ. | ரூ. | |
|---|---|---|---|---|---|---|
| | | | மனைத்துணைப் பொருள் | 2,800 | | |
| | | | கழி தேய்மானம் | 220 | 2,580 | — |
| | | | கட்டடம் | 30,000 | | |
| | | | கழி தேய்மானம் | 1,500 | 28,500 | — |
| | | | விடுகருவிகள் | 3,000 | | |
| | | | கழி தேய்மானம் | 500 | 2,500 | — |

கொடுபட வேண்டிய செலவு (Outstanding Expense)

கூலி, ஊதியம், வாடகை போன்ற செலவினங்கள் ஒரு திங்கள் முடிந்ததும் அடுத்த திங்களில் கொடுக்கப்படுவது வழக்கம்.

ஆகவே ஒவ்வோர் ஆண்டு முடிவிலும் இறுதித் திங்களுக்குச் செலுத்த வேண்டியவை கொடுக்கப்படாமல் இருக்கும். இவை கொடுக்கப்படாச் செலவினங்கள் எனப்படும். இவற்றைக் கணக்கில் கொண்டு வரவில்லையெனில், செலவு குறைத்து எழுதப்பட்டதாகும். இலாபம் அதிகமாகக் காட்டப்படும். எனவே, செலுத்தாமல் விட்ட செலவினங்களையும் கணக்கிற் கொண்டுவரத் தேவையான பதிவு :

(குறிப்பிட்ட) செலவுக் கணக்கு ... ப
கொடுபட வேண்டிய செலவு க/கு

இப்பொழுது செலவுக் கணக்கில் இத் தொகை பற்று வைக்கப்படுவதால் செலவுக் கணக்கு கூடிய பற்றிருப்பைக் காட்டும். கொடுபட வேண்டிய செலவு ஒரு பொறுப்பாகும். எனவே, இது இருப்புநிலைக் குறிப்பில் பொறுப்புகள் பகுதியில் 'கொடுபட வேண்டிய செலவு' எனக் காட்டப்படும்.

எடுத்துக்காட்டு : *30-6-1971*-ற்கான இருப்புப் பட்டியலில் கூலி ரூ. *11,000*-ஆகவும், ஊதியம் ரூ. *8,000*-ஆகவும் இருந்தன. அந் நாளில் செலுத்த வேண்டிய செலவினங்கள் கீழ்வருமாறிருந்தன.

கூலி ... ரூ. *1,000*
ஊதியம் ... ரூ. *2,000*

விடை : சரிக்கட்டுப் பதிவுகள்.

| | | |
|---|---|---|
| கூலி க/கு ப | *1,000* | |
| ஊதியம் க/கு ப | *2,000* | |
| கொடுபட வேண்டிய செலவுக் க/கு | | *3,000* |
| (கொடுபட வேண்டியவற்றை கணக்கில் கொண்டுவர) | | |

கொடுபட வேண்டிய செலவுக் கணக்கு, இருப்புநிலைக் குறிப்பில் பொறுப்புகள் பகுதியில் காட்டப்பெறும்.

30-1-1971-ல் முடியும் ஆண்டுக்கான வாணிகக் க/கு

| ப | | ரூ. | வ |
|---|---|---|---|
| கூலி | 11,000 | | |
| கூட்டு கொடுபட வேண்டியது | 1,000 | 12,000 | |

30-6-1971-ல் முடியும் ஆண்டுக்கான இலாப-நட்டக் க/கு

| ப | | ரூ. | வ |
|---|---|---|---|
| ஊதியம் | 8,000 | | |
| கூட்டு கொடுபட வேண்டியது | 2,000 | 10,000 | |

30-6-1971-றக்கான இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | | ரூ. | சொத்துகள் |
|---|---|---|---|
| கொடுபட வேண்டிய செலவினம் | | | |
| கூலி | 1,000 | | |
| ஊதியம் | 2,000 | 3,000 | |

முன் கூட்டிச் செய்த செலவு (Prepaid Expense)

பின்வரும் ஆண்டுகட்காக இவ்வாண்டே செலவுகளை மேற்கொண்டிருப்பின், அவை இவ்வாறு அழைக்கப்படும். இவ்வாண்டுக்குரிய செலவுகளை மட்டுமே கருத்தில் கொள்ள வேண்டுமாகையால்,

முன்கூட்டிச் செய்த செலவுகளை நீக்க வேண்டும். ஆனால், இப்பொழுது செலவு செய்து விட்டோம். இதன் பயனைப் பின் வரும் ஆண்டுகளில் நுகர வேண்டியிருப்பதால், இது சொத்தாகக் கருதப்படுகிறது. இருப்புநிலைக் குறிப்பில் சொத்துகளில் காட்டப்படும்.

எடுத்துக்காட்டு : *30-9-1971*-ல் ஓராண்டுக்குக் கட்டிய ஈட்டுறுதித் தொகை ரூ. *720*. ஆண்டு *31-12-1971*-ல் முடிவடைகிறது.

விடை :

*30-9-1971*-ல் ஓராண்டுக்குச் செலுத்தியதில் மூன்று திங்களுக்கான தொகையே இவ்வாண்டுக்குரியது. மீதியுள்ள 9 திங்கள் அடுத்த ஆண்டில் வருகின்றன. எனவே, அதற்கான ஈட்டுறுதித் தொகை இவ்வாண்டு முன்கூட்டிச் செய்த செலவாகும். அதாவது ஓராண்டுக்குச் செலுத்திய ரூ. *720*-ல் மூன்று திங்களுக்கான ரூ. *180* ஐக் கழித்துவிடின் மீதியிருப்பது முன்கூட்டிச் செய்த செலவாகும். தேவையான சரிக்கட்டுப் பதிவு.

முன்கூட்டிச் செலுத்திய செலவுக் க/கு ப ரூ.540

ஈட்டுறுதிக் க/கு ரூ. 540

(ஈட்டுறுதி 9 திங்கட்கு முன்கூட்டிச்

செலுத்தப்பட்டதைக் கணக்கில் சரிக்கட்ட)

இருப்புநிலைக் குறிப்பில் சொத்துகள் பகுதியில் முன்கூட்டிச் செலுத்திய செலவுக் கணக்குக் காட்டப்பெறும்.

## பெறவேண்டிய வருமானம் அல்லது கூடிய வருமானம் (Outstanding Income or Accrued Income)

செலவுகளில் சில செலுத்தப்படாமலிருப்பது போன்றே நமக்கு வரவேண்டியவை சில கைக்கு வராமலிருக்கலாம். அவற்றையும் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டுமல்லவா. வாடகை பெறாமலிருக்கலாம். பங்குகள் வைத்திருப்பின், இலாப ஈவு பெற வேண்டியிருக்கலாம். வருவாய்க் கணக்கு வைத்திருப்பின், வர விருப்பைக் காட்டும். மேலும், தொகை வரவேண்டியிருப்பதால் அக் கணக்கில் அத் தொகைக்கு வரவு வைத்துவிடின், தொகை கூடிவிடுமன்றோ? இத்தொகை இன்னும் நம் கைக்கு வந்து சேர வில்லை; வரவேண்டியுள்ளது. எனவே, சொத்தினத்தின் பாற்பட்டதாகும். இருப்புநிலைக் குறிப்பில் 'பெறவேண்டிய வருமானக் கணக்கு' என்று காட்டப்படும்.

சரிக்கட்டுப் பதிவு:

கூடிய வருமானக் கணக்கு ... ப

(குறிப்பிட்ட) வரவுக் க/கு

எடுத்துக்காட்டு : (1) 31-12-71-ல் வாடகை பெறவேண்டியது ரூ. 200. (2) கடன் மீது 6% வட்டி பெற வேண்டியது. (கடன் ரூ. 5,000. 1-10-1971-ல் வழங்கப்பட்டது).

விடை :

| | ரூ. | ரூ. |
|---|---|---|
| பெறவேண்டிய வருமானக் க/கு ப | 275 | |
| வாடகைக் க/கு | | 200 |
| கடன் மீது வட்டிக் க/கு | | 75 |

(வாடகை ரூ. 200-உம், கடன்மீது வட்டி ரூ. 75-உம் பெறவேண்டியதைக் கணக்கிற் கொண்டுவர.)

பெறவேண்டிய வருமானக் கணக்கு ரூ. 275 இருப்புநிலைக் குறிப்பில் சொத்துகள் பகுதியில் காட்டப்பெறும்.

முன் கூட்டிப் பெற்ற வருமானம் (Income Received in Advance)

அடுத்து வருமாண்டிற்குரிய வருமானத்தை இவ்வாண்டிலேயே பெற்றிருப்பின், அதைக் கழித்துக் காட்டினால்தான், உண்மையான இலாபத்தை இலாப-நட்டக் கணக்கு உணர்த்தும். எனவே, குறிப்பிட்ட அவ் வருவாய்க் கணக்கில் பற்று வைக்க வேண்டும். நாம் இத் தொகையை முன்கூட்டிப் பெற்று விட்டதாலும் அதற்கான பயனை அடுத்த ஆண்டில் தரவேண்டியிருத்தலாலும் இதைப் பொறுப்பாகக் கருதி இருப்புநிலைக் குறிப்பில் பொறுப்புகள் பகுதியில் 'முன்கூட்டிப் பெற்ற வருமானம்' என்று காட்ட வேண்டும்.

சரிக்கட்டுப் பதிவு :

(குறிப்பிட்ட) வருமானக் க/கு ... ப

முன்கூட்டிப் பெற்ற வருமானம்.

எடுத்துக்காட்டு: 31-12-1971-ல் வாடகைக் கணக்கு ரூ. 1,400 வரவிருப்பு காட்டியது. இதில் 1972 ஆண்டுக்கான வாடகை ரூ 200 முன் கூட்டிப் பெற்றது அடங்கியுள்ளது.

விடை :

| | ரூ. | ரூ. |
|---|---|---|
| முன்கூட்டிப் பெற்ற வருமானக் க/கு ப | 200 | |
| வாடகைக் க/கு | | 200 |

(1972-ஆம் ஆண்டுக்காக இவ்வாண்டில் பெற்ற வாடகை யைக் கணக்கிற் சரி செய்ய.)

இம் 'முன்கூட்டிப் பெற்ற வருமானக் கணக்கு' ரூ. 200, இருப்புநிலைக் குறிப்பில், பொறுப்புகள் பகுதியில் காட்டப் பெறும்.

முதல் மீது வட்டி (Interest on Capital)

தொழிலில் வைத்த முதலை வேறு பங்குகளிலோ, கடன் பத்தி ரங்களிலோ முதலீடு செய்திருப்பின் அல்லது வட்டிக்கு விட்டிருப் பின், குறிப்பிட்ட வருவாய் வந்து கொண்டிருக்கும். அந்தளவிற்கும் அதிக விகிதத்தில் தொழிலில் இலாபம் வருகிறதா என்பதை அறிய விரும்புவது இயற்கையே. எனவே, முதல் மீது வட்டி கணக்கிடப்பட வேண்டும். அவ் வட்டி, நிறுவனத்தைப் பொறுத்த வரை ஒரு செலவாகும். உரிமையாளர்க்குக் கொடுப்பினும், பிறர்க்குக் கொடுப்பினும், அது செலவுதானே? எனவே, 'முதல் மீது வட்டி' எனுங் கணக்கில் அத் தொகையைப் பற்று வைத்து, அதை இலாப-நட்டக் கணக்கில் பற்றுப் பகுதிக்குக் கொண்டு வர வேண்டும். அவ் வட்டி உரிமையாளரைச் சாரும்; அதாவது அவர் போட்ட முதலுடன் இதையும் சேர்த்துப் பெற வேண்டியவர். இதனால் முதல் கூடுகிறது. (இவ்வட்டியை ரொக்கமாக எடுத்துக் கொள்ளவில்லை.) எனவே, முதல் மீதான வட்டித் தொகையை முதல் கணக்கில் சேர்த்துவிட வேண்டு மென்பது தெளிவாகிற தன்றோ? தேவையான சரிக்கட்டுப் பதிவு :

முதல் மீது வட்டிக் க/கு ... ப

முதல் க/கு

முதல் மீது வட்டிக் கணக்கை இலாப-நட்டக் கணக்குக்கு எடுத்துச்செல்ல வேண்டுமல்லவா? இதற்கான இறுதிப் பதிவு :

இலாப-நட்டக் க/கு ... ப

முதல்மீது வட்டிக் க/கு

இவ்வாறு முதல் மீதான வட்டிக் கணக்கு முடிக்கப் பெறுகிறது.

இருக்கின்ற முதல் தொகை மீது வட்டி கணக்கிடப்பட வேண்டும். (தேர்வுத்தாள்களில் எடுப்புக் கணக்கும் கொடுக்கப் பட்டிருப்பின், எடுப்பு கழிக்கப்படுமுன் உள்ள தொகை மீதே வட்டி கணக்கிடப்பட வேண்டும்.)

எடுத்துக்காட்டு : 31-12-1971 - ல் முதல் கணக்கு ரூ. 15,000 ஆக விருந்தது. எடுப்புக் கணக்கு ரூ. 1,000 பற்றிருப்பைக் காட்டியது. முதல் மீது 6% வட்டிக் கணக்கிட வேண்டும். சரிக்கட்டுப் பதிவுகளைத் தருக

விடை:

சரிக்கட்டுப் பதிவுகள்.

| | | | ரூ. | ரூ. |
|---|---|---|---|---|
| 1 | முதல்மீது வட்டிக் க/கு ப | | 900 | |
| | முதல் க/கு | | | 900 — |
| | (முதல் தொகை மீது 6% வட்டி கணக்கிட | | | |
| 2 | இலாப-நட்டக் க/கு ப | | 900 | |
| | முதல் மீதுவட்டிக் க/கு | | | 900 — |
| | (முதல்மீதான வட்டியை இலாப-நட்டக் கணக்கிற் கொண்டுவர) | | | |

எடுப்பு மீதுவட்டி (Interest on Drawings)

தான் வைத்த முதல் மீது வட்டிபெற விரும்புவது போலவே நிறுவனத்தினின்றும், சொந்தப் பயன் கருதி எடுத்துக்கொண்ட 'எடுப்புத் தொகை' மீது உரிமையாளர் வட்டி செலுத்த வேண்டியது இயல்புதானே? இப்பொழுது உரிமையாளர் தொழிலில் உள்ள பணத்தைப் பயன்படுத்திக் கொண்டமைக்கு வட்டி தருகிறார். நிறுவனத்தைப் பொறுத்தவரை இது ஓர் ஆதாயமாகும். எனவே, எடுப்பு மீது வட்டிக் கணக்கு என்று ஒன்று தொடங்கி, அதில் வரவு வைத்திடலாம். தான் போட்ட முதல் எடுப்புத் தொகை

யாலும், எடுப்புமீது செலுத்த வேண்டிய வட்டியாலும் குறைந்து விடுவதால் முதல் கணக்கில் பற்று வைக்க வேண்டும். (அதாவது, தான் செலுத்த வேண்டிய எடுப்புந்தான் வட்டியை ரொக்கமாகச் செலுத்தாமல் முதல் கணக்கில் சரிக்கட்டப் படுகிறது.) சரிக்கட்டுப் பதிவு :

முதல் கணக்கு ... ப

எடுப்பு மீது வட்டிக் க/கு.

தான் எடுத்துக் கொண்ட நாளிலிருந்து ஆண்டு இறுதிவரையுள்ள காலத்துக்கு எடுப்புமீது வட்டி கணக்கிட வேண்டும்.

எடுத்துக் காட்டு :

மார்ச் 1-ல் உரிமையாளர் சொந்தச் செலவுக்கு எடுத்துக் கொண்டது ரூ. 500; ஜூலை 1-ல் ரூ. 300 எடுத்துக்கொண்டார். நவம்பர் 1-ல் ரூ. 500 எடுத்துக்கொண்டார், ஆண்டு முடிவில் எடுப்பு மீது 6% வட்டி கணக்கிடுக.

எடுப்புமீது வட்டி — $500 \times \frac{6}{100} \times \frac{10}{12}$ ரூ. 25

$300 \times \frac{6}{100} \times \frac{6}{12} =$ ரூ. 9

$500 \times \frac{6}{100} \times \frac{2}{12} =$ ரூ. 5

மொத்தம் ... ரூ. 39

சரிக்கட்டுப் பதிவுகள் :

1. முதல் க/கு ... ப 39

எடுப்புமீது வட்டிக் க/கு 39

(எடுப்பு மீது வட்டி செலுத்த வேண்டியதற்கு)

2. எடுப்புமீது வட்டிக் க/கு ப 39

இலாப-நட்டக் க/கு 39

(எடுப்புமீதான வட்டிக் கணக்கை முடிக்க.)

வராக் கடன் (Bad Debts)

இது முன்னரே விளக்கப்பட்டிருக்கிறது. (கடன் பேரில் சரக்கு விற்ற தொகை திரும்பி வராததையே இது குறிக்கும். உறுதியாக வராது என்று தீர்மானிக்கப்பட்டால்தான் — வழக்காடினும் பெற முடியாது என்ற நிலை ஏற்பட்டால்தான்— ஒரு கடனை வராக் கடன் என்று கருத வேண்டும். 'வந்தாலும் வரலாம்' என்ற ஐய மிருப்பின் அதனை வராக் கடன் எனல் வழுவாகும். அதனை ஐயக் கடன் என்பதே சாலப் பொருந்தும்.) வராக் கடன் என்று கருதப் பட்டுவிடின் அதனைக் கடனாளிகள் பட்டியலினின்றும் நீக்கிவிட வேண்டும். இல்லையெனில் கடனாளிகளினின்றும் பெற வேண் டியது அதிகமாக இருப்பு நிலைக்குறிப்பில் காட்டப்படும். வராக் கடன் ஒரு நட்ட மாகும். எனவே, அக் கணக்கில் பற்று வைத்திட லாம். யாரிடமிருந்து வரவில்லையோ அவர் கணக்கை முடித்திட வேண்டுமல்லவா? பற்றிருப்புக் காட்டும் அக் கணக்கை முடிக்க வரவு வைக்க வேண்டும். பின்னர் வராக் கடன் கணக்கை இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்லத் தேவையான பதிவு :

இலாப-நட்டக் க/கு ... ப
வராக் கடன் க/கு

எடுத்துக் காட்டு :

*31-12-1969-ல்* கடனாளிகள் கணக்கு ரூ. 15,200 ஆக இருந்தது. ரூ. 200 வராக்கடனாக நீக்கப்பட வேண்டும்.

| | | |
|---|---|---|
| வராக் கடன் க/கு ... ப | ரூ. 200 | |
| கடனாளிகள் க/கு | | ரூ. 200 |
| (வராக் கடனை நீக்க) | | |
| இலாப-நட்டக் க/கு ... ப | ரூ. 200 | |
| வராக்கடன் க/கு | | ரூ. 200 |
| (வராக் கடனை இலாப நட்டக் கணக்குக்கு மாற்ற) | | |

குறிப்பு : (இருப்புப் பட்டியலில் 'வராக் கடன்' கொடுக்கப் பட்டிருப்பின், அதனை இலாப-நட்டக் கணக்கில் பற்றுப் பகுதியில் எழுத வேண்டும். கடனாளியில் கழிக்கக் கூடாது. காரணம், இவ் வராக் கடன் நீக்கப்பட்ட பின்னர் உள்ள கடனாளிகள் தொகையே இது. எனவே, சரிக்கட்டத் தேவையில்லை. இருப்புப்

பட்டியல் தயாரித்தபின் வராக் கடன் நீக்கப்பட வேண்டியது என்று கொடுக்கப்பட்டிருப்பின்தான் கடனாளிகளில் வரவு வைத்துப் பின்னர் இலாப-நட்டக் கணக்குக்கு எடுத்துச் செல்ல வேண்டும்.)

ஐயக் கடன் காப்பு அல்லது வராக் கடன் காப்பு
(Reserve for Doubtful Debts or Reserve for Bad Debts)

வராக் கடன் என்பது ஏற்பட்டு விட்ட நட்டம்; ஆனால் ஐயக் கடனோ எதிர்பார்க்கும் நட்டம். எனவே எதிர்பார்க்கும் நட்டத்தை, ஏற்பட்டுவிட்ட நட்டமாகக் கருதி, ஏடுகளினின்றும் நீக்கிவிடக் கூடாது. ஆனால், பின்னர் வரவிருக்கும் நட்டத்துக்கு வகை செய்து வைத்துக் கொள்ளல் அறிவுடைய தன்றோ? எனவே, குறிப்பிட்ட ஆள்சார் கணக்கில் வரவு வைப்பதற்கு மாறாக, வராக் கடனுக்கென ஒரு காப்பு ஏற்படுத்துவது வழக்கம். இது ஐயக் கடன் காப்பு என்றோ வராக் கடன் காப்பு என்றோ அழைக்கப் பெறும். கீழ்க்கண்ட பதிவு தேவைப்படுகிறது.

இலாப-நட்டக் க/கு ... ப

ஐயக் கடன் காப்பு

(ஐயக் கடன் காப்பு ஏற்படுத்த)

எந்தக் குறிப்பிட்ட ஆள்சார் கணக்கிலும் வரவு வைக்கப்படவில்லை. ஆகவே, கடனாளிகளின் தொகை, ஏடுகளில் உள்ளவாறு மாறாமல் இருக்கும். ஆனால், இருப்பு நிலைக் குறிப்பில் கடனாளிகள் தொகைகளில் ஐயக் கடனை கழித்துக் காட்டப் பெறும்.

ஐயக் கடன் காப்புக் கணக்கு ஒரு தொடர் கணக்கு. கடனாளிகளில் இத்துணை சதவீதம் ஐயக் கடனாக விருக்கலாம் என்று மதிப்பிடப்பட்டு அந்தளவில் ஐயக்கடன் கணக்கு வைக்கப்படுகிறது. வராக் கடன் பின்னர் ஏற்படின் அதை இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்ல வேண்டியதில்லை. ஐயக் கடன் காப்புக் கணக்கு இருக்கும் போழ்து வராக் கடன் காப்புக் கணக்கை அதில் கொண்டு சென்று முடித்திடலாம். ஆண்டிறுதியில் வராக் கடனை இக் கணக்கிற்கு எடுத்து வர,

ஐயக் கடன் காப்புக் க/கு ... ப

வராக் கடன் க/கு

ஐயக்கடன் காப்புக் கணக்கு ரூ. 500 வர விருப்புக் காட்டுவதாகக் கொள்வோம். இவ்வாண்டில் நீக்கிய வராக் கடன் ரூ. 300 எனக் கொள்வோம். இப்பொழுது வராக் கடனை, ஐயக் கடன் காப்புக் கணக்கில் பற்று வைத்தால் ஐயக் கடன் காப்பு ரூ. 200 வரவிருப்பையே காட்டுகிறது. இதனை இவ்வாண்டில் ரூ. 600-க்கு உயர்த்த வேண்டுமெனில் ரூ. 400 வரவு வைத்தால் போதுமென்பது தெளிவாகிறதல்லவா? இதற்கான பதிவு

இலாப-நட்டக் க கு ப 400

ஐயக் கடன் காப்புக் க/கு 400

(ஐயக் கடனை ரூ. 600-க்கு உயர்த்த)

[இருப்பு நிலைக் குறிப்பில் கடனாளிகளிலிருந்து ரூ. 600 ஐயக் கடன் காப்பைக் கழித்துக் காட்டப் பெறும்.]

இக் கணக்கை எழுது முறை

இருப்புப் பட்டியலில் உள்ள ஐயக்கடன் காப்பைப் பழைய ஐயக் கடன் காப்பு எனலாம். இவ்விருப்பினை ஐயக் கடன் காப்புக் கணக்கில் வரவுப் பகுதியில் கொண்டு வர வேண்டும். வராக் கடன் கொடுத்திருப்பின் அதனை, ஐயக் கடன் காப்புக் கணக்கில் பற்று வைக்க வேண்டும்.

கடனாளிகள் தொகையில் இப்பொழுது கொடுக்கப்பட்டிருக்கும் சத விகிதத்தைக் கணக்கிடுக. இத் தொகையைத்தான் ஐயக் கடன் காப்புக் கணக்கு இருப்பாகக் காட்ட வேண்டும். எனவே, ஐயக் கடன் காப்புக் கணக்கில் பற்றுப்பகுதியில் இறுதி வரியில் 'இருப்பு கீ/இ' என்றெழுதி, இத் தொகையை (கடனாளிகளில் கணக்கிட்ட தொகையை) எழுதுக. இப்பொழுது வரவுப் பகுதியினும் பற்றுப் பகுதி அதிகமாயிருக்குமாயின், இலாப-நட்டக் கணக்கில் பற்றும் ஐயக் கடன் காப்புக் கணக்கில் அவ் வேற்றுமைத் தொகைக்கு வரவும் வைக்கப்படும். வரவுப் பகுதி அதிகமிருப்பின் சென்ற ஆண்டில் அதிக தொகையை ஐயக் கடனுகக் கருதி இலாப-நட்டக் கணக்கில் பற்று வைத்ததாகப் பொருள். எனவே, இவ் வாண்டில் இலாப-நட்டக் கணக்கில் அவ் வேற்றுமைத் தொகைக்கு வரவும், ஐயக் கடன் காப்புக் கணக்கில் பற்றும் வைக்கப்படும்.

அதாவது, இப்பொழுது கடனாளிகள் தொகையில் கணக்கிடப்பட்ட ஐயக் கடன் காப்புத் தொகையுடன் நீக்கப்பட்ட வராக் கடன் தொகையைக் கூட்டவேண்டும். இக் கூட்டுத் தொகை,

பழைய ஐயக் கடன் காப்புத் தொகையினும் அதிக மிருப்பின் கீழ்க் கண்ட பதிவு செய்ய வேண்டும்.

இலாப-நட்டக் க/கு ... ப

ஐயக் கடன் காப்புக் க/கு

(ஐயக் கடனை கடனாளிகளில்
...%க்கு உயர்த்த.)

(கூட்டல் தொகைக்கும் பழைய ஐயக்கடன் காப்புத் தொகைக்கும் உள்ள வேற்றுமைத் தொகையைக் குறிக்க வேண்டும்.)

அவ் வாறின்றி இக் கூட்டுத் தொகையினும் பழைய ஐயக் கடன் காப்புத் தொகை அதிக மிருப்பின், செய்ய வேண்டிய பதிவு :

ஐயக் கடன் காப்புக் க/கு ... ப

இலாப-நட்டக் க/கு

(ஐயக் கடன் காப்பைக் கடனாளிகளில்

...%-ல் வைத்திருக்க.)

கீழ்க் கொடுக்கப்பட்ட எடுத்துக்காட்டு இதனை நன்கு விளக்கும்.

எடுத்துக்காட்டு 40:

*1-1-1969*-ல் ஐயக் கடன் காப்பு ரூ. 500-ஐ வரவிருப்பாகக் காட்டியது. இவ் வாண்டில் நீக்கப்பட்ட வராக் கடன் ரூ. 200. *31-12-1969*-ல் கடனாளிகள் தொகை ரூ. *15,000*. ஐயக் கடன் காப்பை இதில்5%-ல் வைத்திடுக.

பதிவுகள் :

(1) ஐயக் கடன் காப்புக் க/கு ... ப 200
வராக் கடன் க/கு 200
(வராக் கடனை ஐயக் கடன்
காப்பிற்கு மாற்ற.)

(2) இலாப-நட்டக் க/கு ... ப 450
ஐயக் கடன் காப்புக் க/கு 450
(ஐயக் கடன் காப்பைக் கடனாளி
களில் 5%-ல் வைத்திருக்க.)

எடுத்துக்காட்டு 41 :

31 - 12 - 1969-ல் செங்கோடனின் கடனாளிகள் ரூ. 15,000 ஆக இருந்தது. அதில் 5% ஐயக் கடன் காப்பு ஏற்படுத்த வேண்டும். 1970-ல் வராக் கடன் நீக்கப்பட்டது ரூ. 300. 31-12-1970-ல் கடனாளிகள் தொகை ரூ. 20,000, 1971-ல் நீக்கப் பட்ட வராக் கடன் ரூ. 200. கடனாளிகள் தொகை ரூ. 10,000. ஒவ்வோராண்டும் ஐயக் கடன் காப்பு, கடனாளிகள் 5% இருக்க வேண்டும் எனக் கொண்டு வேண்டிய குறிப்பேட்டுப் பதிவுகளை யும், ஐயக் கடன் காப்புக் கணக்கையும், இலாப-நட்டக் கணக்கு இருப்பு நிலைக் குறிப்பு முதலியவற்றையும் தயார் செய்க,

விடை :

| | குறிப்பேடு | | பற்று | வரவு |
|---|---|---|---|---|
| | | | ரூ. | ரூ. |
| 1969<br>டிச. 31 | இலாப-நட்டக் க/கு<br>ஐயக் கடன் காப்புக் க/கு<br>(ஐயக் கடன் காப்பு, கடனாளிகள் தொகையில் 5% அளவில் ஏற்படுத்த) | ப | 750 — | 750 — |
| 1970<br>டிச.31 | ஐயக் கடன் காப்புக் க/கு<br>வராக் கடன் க/கு<br>(வராக் கடன் கணக்கை ஐயக் கடன் காப்புக் கணக்குக்கு மாற்ற.) | ப | 300 — | 300 — |
| ,, | இலாப-நட்டக் க/கு<br>(ஐயக் கடன் காப்புக் க/கு<br>(ஐயக் கடன் காப்பைக் கடனாளிகள் தொகையில் 5%-ல் வைத்திருக்க.) | ப | 550 — | 550 — |
| 1971<br>டிச. 31 | ஐயக் கடன் காப்புக் க/கு<br>வராக் கடன் க/கு<br>(வராக் கடனை ஐயக் கடன் காப்புக் கணக்குக்கு மாற்ற.) | ப | 200 — | 200 — |
| | ஐயக் கடன் காப்புக் க/கு<br>இலாப-நட்டக் க/கு<br>(ஐயக் கடனைக் கடனாளிகள் தொகையில் 5% அளவில் வைத்து, எஞ்சிய தொகையை இலாப-நட்டக் கணக்குக்கு எடுத்துச் செல்ல.) | ப | 300 — | 300 — |

## பேரேட்டுக் கணக்குகள்

### ஐயக் கடன் காப்புக் கணக்கு.

| ப | | ரூ. | | | | ரூ. | வ |
|---|---|---|---|---|---|---|---|
| 1969 டிச. 31 | இருப்பு கீ/இ | 750 | — | 1969 டிச. 31 | இலாப-நட்டக் க/கு | 750 | — |
| | | 750 | — | | | 750 | — |
| 1970 டிச. 31 | வராக்கடன் | 300 | — | 1970 சன. 1 | இருப்பு கீ/கொ | 750 | — |
| ,, | இருப்பு கீ/இ | 1,000 | — | டிச. 31 | இலாப-நட்டக்க/கு | 550 | — |
| | | 1,300 | — | | | 1,300 | — |
| 1971 டிச. 31 | வராக்கடன் | 200 | — | 1971 டிச. 1 | இருப்பு கீ/கொ | 1,000 | — |
| ,, | இலாப-நட்டக் க/கு | 300 | — | | | | |
| ,, | இருப்பு கீ/இ | 500 | — | | | | |
| | | 1,000 | — | | | 1,000 | — |
| | | | | 1972 சன. 1 | இருப்பு கீ/கொ | 500 | — |

### *31-12-1969*-இல் முடியும் ஆண்டுக்கான இலாப-நட்டக் க/கு.

| | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| ஐயக் கடன் காப்பு | 750 | — | | | |

**31-12-1970-இல் முடியும் ஆண்டுக்கான**
**இலாப-நட்டக் க/கு**

| | | ரூ. | | | | ரூ. |
|---|---|---|---|---|---|---|
| ஐயக்கடன் காப்பு, | 1,000 | | | | | |
| கூட்டு : வராக் கடன் | 300 | | | | | |
| | 1,300 | | | | | |
| கழி பழைய ஐயக் கடன் காப்பு | 750 | 550 | — | | | |

**31-12-1971-இல் முடியும் ஆண்டுக்கான**
**இலாப-நட்டக் கணக்கு**

| | ரூ. | | | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|
| | | | பழைய ஐயக் கடன் காப்பு | 1,000 | | |
| | | | கழி புதிய ஐயக் கடன் காப்பு | 500 | | |
| | | | வராக் கடன் 200 | 700 | 300 | — |

**31-12-1969-ற்கான இருப்புநிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | ரூ. | | சொத்துகள் | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|
| | | | கடனாளிகள் | 15,000 | | |
| | | | கழி ஐயக் கடன் காப்பு | 750 | 14,250 | — |

31-12-1971-ற்கான இருப்புநிலைக் குறிப்பு

| | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| | | | கடனாளிகள் 20,000<br>கழி ஐயக் கடன்<br>காப்பு 1,000 | 19,000 | — |

31-12-1971-ற்கான இருப்புநிலைக் குறிப்பு

| | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| | | | கடனாளிகள் 10,000<br>கழி ஐயக் கடன்<br>காப்பு 500 | 9,500 | — |

### இறுதிக் கணக்குகள் தயாரிக்கும் போழ்து பின்பற்ற வேண்டிய முறை

1. சரிக்கட்டுதலில் கொடுக்கப் பட்ட சதவிகிதத்தை, இருப்பு நிலைக் குறிப்பில் சொத்துகள் பகுதியில் உள்ள கடனாளிகளில் கணக்கிட்டு, ஐயக் கடன் காப்பு என்றெழுதிக் கழித்துக் காட்டுக. [இதனைப் புதிய ஐயக் கடன் காப்பு என்போம்.]

2. இருப்புப் பட்டியலில் வராக் கடன் கொடுக்கப் பட்டிருப் பின், அத்துடன் புதிய ஐயக் கடன் காப்பைக் கூட்டுக. இக் கூட்டுத் தொகை, பழைய ஐயக் கடன் காப்புத் தொகையினும் (இருப்புப் பட்டியலில் கொடுக்கப்பட்டிருக்கும் காப்புத்தொகை இவ்வாறு அழைக்கப் படுகிறது.) அதிக மிருப்பின், இலாப-நட்டக் கணக்கில் பற்றுப் பகுதியில், இக் கூட்டுத் தொகையினின்றும் பழைய ஐயக் கடன் காப்புத் தொகையைக் கழித்துக் கூட்டுக இலாப-நட்டக் கணக்குக் கீழ்க்கண்டவாறு இருக்கும்.

| ப | இலாப-நட்டக் கணக்கு | வ |
|---|---|---|
| ஐயக் கடன் காப்பு ........... <br> கூட்டு : வராக் கடன்... ...... <br> கழி : பழைய ஐயக் கடன் ... <br> காப்பு ... ... | | |

3. அவ்வாறின்றி, இக்கூட்டுத்தொகை பழைய ஐயக் கடன் காப்பினும் குறைந்திருப்பின், இலாப-நட்டக் கணக்கின் வரவுப் பகுதியில் பின்னதிலிருந்து முன்னதைக் கழித்துக் கூட்டுக. இலாப-நட்டக் கணக்கு கீழ்க்கண்டவாறு இருக்கும்.

| ப | இலாப-நட்டக் கணக்கு. | வ |
|---|---|---|
| | (பழைய) ஐயக் கடன் காப்பு ... <br> கழி ஐயக் கடன் காப்பு <br> புதியது ... <br> வராக் கடன் ... <br> ... <br> ... | |

4. இருப்பு நிலைக் குறிப்பைப் பொறுத்தவரை மாறுதலே இல்லை. சரிக்கட்டுதலில் வராக்கடனை நீக்கச் சொல்லியிருப்பின், முதலில் கடனாளிகளிலிருந்து வராக்கடனைக் கழிக்க வேண்டும். அவ்வாறு கழிக்கப்பட்ட தொகையில் தான் ஐயக் கடன் காப்பு கணக்கிடப்பட வேண்டும்.)

கடனாளிகள் மீது தள்ளுபடிக் காப்பு
(Reserve for Discount on Debtors)

கடனாளிகள் தொகையில் வராக் கடனும், ஐயக் கடனும் போக எஞ்சியுள்ளது மிகவும் நல்ல கடனே. அதாவது உறுதியாகத் திரும்பிவரக்கூடிய கடனாகும். ஆனால் முழுக்கடனும் நம் கைக்கு வராது. காரணம், குறிப்பிட்ட காலத்திற்குள், கடனை அடைக்கும் போழ்து தள்ளுபடி தருவதாக நாம் வாக்களித்திருப்போம். இக்கடனாளிகள் தொகையில் தள்ளுபடி போக உள்ளதே கைக்குக் கிட்டும் என்பது புலப்படும். எனவே, தள்ளுபடிக்கும் ஒதுக்க

வேண்டும். கடனுளிகளில் குறிப்பிட்ட சதவிகிதத்தில் இது ஒதுக்கப்படுகிறது. இது கடனுளிகளில் தள்ளுபடிக் காப்பு எனப்படுகிறது.

(நல்ல கடன் தொகையில் இது கணக்கிடப்படுவதால், வராக் கடன், ஐயக் கடன் காப்பு ஏதேனுமிருப்பின் அவையெல்லாம் கழித்த பின் உள்ள கடனுளிகள் தொகையில்தான் இது கணக்கிடப் படவேண்டும் என்பதை மறக்கலாகாது.)

இதை எழுது முறை, கணக்கு தயாரிக்கு முறையெல்லாம் தள்ளுபடிக் காப்பு ஏற்படுத்துவது போன்றே. அதாவது கடனுளிகள் மீது தள்ளுபடிக் காப்பு ஏற்படுத்தத் தேவையான பதிவு :

இலாப-நட்டக் க/கு ... ப
கடனுளிகள்மீது தள்ளுபடிக் காப்பு.

பின்னர்த் தள்ளுபடி அளிக்கப்படும் போழ்து, தள்ளுபடிக் கணக்கு பற்று வைக்கப்படுவது நாம் அறிந்ததே, ஆண்டிறுதியில் அளித்த தள்ளுபடிக் கணக்கை இலாப-நட்டக் கணக்குக்கு மாற்று வதற்கு மாறாகக் கடனுளிகள்மீது தள்ளுபடிக் காப்புக் கணக்குக்கு மாற்ற வேண்டும். தேவையான பதிவு :

கடனுளிகள் மீது தள்ளுபடிக் காப்புக் க/கு ப
தள்ளுபடிக் க/கு

கடனுளிகள் மீது குறிப்பிட்ட சதவிகிதம் தள்ளுபடிக் காப்புக் கணக்கிட வேண்டும். இத் தொகையையே கடனுளிகள் மீது தள்ளுபடிக் காப்புக் கணக்கு காட்ட வேண்டும். அதற்கேற்றவாறு இலாப-நட்டக் கணக்கில் பற்றோ, வரவோ வைத்தும் இக் கணக்கில் வரவோ, பற்றோ வைத்தும் எழுதவேண்டும். ஐயக்கடன் காப்பில் விளக்கியவாறே அளித்த தள்ளுபடித் தொகையும் இப்பொழு திருக்க வேண்டிய இருப்பையும் (புதிய தள்ளுபடிக் காப்பு-இருப்பு நிலைக் குறிப்பில் கடனுளிகளில் கண்டுபிடித்துக் கழிக்கப்பட்டது) கூட்டவேண்டும். இக் கூட்டல் தொகை, பழைய தள்ளுபடிக் காப்பை விட (இருப்புப் பட்டியலில் கொடுக்கப்பட்டிருப்பது) அதிகமிருப்பின் இலாப-நட்டக் கணக்கில் பற்றும் கடனுளிகள் மீது தள்ளுபடிக் காப்புக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும். அவ்வாறின்றி இக்கூட்டல் தொகை குறைவாக இருப்பின், கடனுளி

கள் மீது தள்ளுபடிக் காப்புக் கணக்கில் பற்றும் இலாப-நட்டக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும்.

எடுத்துக் காட்டு 42 :

1-7-1970-ல் தள்ளுபடிக் காப்பு ரூ. 300 வரவிருப்பைக் காட்டியது. 1970-71-ல் அளித்த தள்ளுபடி ரூ. 200; 30-6-1971-ல் கடனாளிகள் தொகை ரூ. 12,000. இதில் 3 % அளவில் தள்ளுபடிக் காப்பை வைத்திருக்க வேண்டும்; குறிப்பேட்டுப் பதிவுகளைத் தருக.

விடை :

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| 1. கடனாளிகள் மீது தள்ளுபடிக் காப்பு | ப | 200 | |
| தள்ளுபடிக் க/கு | | | 200 |
| (தள்ளுபடிக் கணக்கைக் கடனாளிகள்மீது தள்ளுபடிக் கணக்குக்கு மாற்ற) | | | |
| 2. இலாப-நட்டக் க/கு | ப | 260 | |
| கடனாளிகள் மீது தள்ளுபடிக் காப்புக் க/கு | | | 260 |
| (கடனாளிகள் தொகையில் 3% அளவிற்குத் தள்ளுபடிக் காப்பை உயர்த்த) | | | |

எடுத்துக் காட்டு 43 :

கீழ்க் கொடுக்கப்பட்ட விவரங்களிலிருந்து ஐயக்கடன் காப்புக் கணக்கு, தள்ளுபடிக் காப்புக் கணக்கு, இலாப-நட்டக் கணக்கு, இருப்புநிலைக் குறிப்பு—ஆகியவற்றை எல்லா ஆண்டு கட்கும் தயாரிக்க.

| | | | ரூ. |
|---|---|---|---|
| 1-4-1968 | ஐயக் கடன் காப்பு | ... | 600 |
| | கடனாளிகள்மீது தள்ளுபடிக் காப்பு | ... | 300 |
| 1968-69 ல் | நீக்கப் பட்ட வராக் கடன் | ... | 400 |
| ,, | அளித்த தள்ளுபடி | ... | 250 |
| 31-3-1969 ல் | கடனாளிகள் | ... | 14,000 |
| 1969- 70 ல் | நீக்கப் பட்ட வராக் கடன் | ... | 500 |

| | | | ரூ. |
|---|---|---|---|
| 1969-70 ல் | அளித்த தள்ளுபடி | ... | 300 |
| 31-3-1970 ல் | கடனாளிகள் | ... | 20,000 |
| 1970- 71 ல் | நீக்கப்பட்ட வராக் கடன் | ... | 200 |
| ,, | அளித்த தள்ளுபடி | ... | 50 |
| 31-3-1971 ல் | கடனாளிகள் | ... | 7,000 |

கடனாளிகளில் 5%-க்கு ஐயக் கடன் காப்பும் 3%-க்குத் தள்ளுபடிக் காப்பும் வைத்திருப்பது வழக்கம்.

விடை :

ப ஐயக்கடன் காப்புக் கணக்கு வ

| | | ரூ. | | | ரூ. |
|---|---|---|---|---|---|
| 1969 மார்31 | வராக் கடன் —மாற்றம் | 400 | 1968 ஏப். 1 | இருப்பு கீ/கொ | 600 |
| ,, | இருப்பு கீ/இ | 700 | 1969 மார்31 | இலாப நட்டக் க/கு | 500 |
| | | 1,100 | | | 1,100 |
| 1970 மார்31 | வராக் கடன் மாற்றம் | 500 | 1969 ஏப். 1 | இருப்பு கீ/கொ | 700 |
| ,, | இருப்பு கீ/இ | 1,000 | 1970 மார்31 | இலாப-நட்டக் க/கு | 800 |
| | | 1,500 | | | 1,500 |
| 1971 மார்31 | வராக் கடன் —மாற்றம் | 200 | 1970 ஏப். 1 | இருப்பு கீ/கொ | 1,000 |
| ,, | இலாப-நட்டக் க/கு | 450 | | | |
| ,, | இருப்பு கீ/இ | 350 | | | |
| | | 1,000 | | | 1,000 |
| | | | 1971 ஏப். 1 | இருப்பு கீ/கொ | 350 |

கடனாளிகள் மீது தள்ளுபடிக் காப்புக் க/கு

| | | ரூ. | | | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|
| 1971 மார்31 | தள்ளுபடி மாற்றம்— | 250 | — | 1968 ஏப். 1 | இருப்பு கீ/கொ | 300 | — |
| ,, | இருப்பு கீ/இ | 399 | — | 1969 மார்31 | இலாப-நட்டக் க/கு | 349 | — |
| | | 649 | — | | | 649 | — |
| 1970 மார்31 | தள்ளுபடி —மாற்றம் | 300 | — | 1969 ஏப். 1 | இருப்பு கீ/கொ | 399 | — |
| ,, | இருப்பு கீ/இ | 570 | — | 1970 மார்31 | இலாப-நட்டக் க/கு | 471 | — |
| | | 870 | — | | | 870 | — |
| 1971 மார்31 | தள்ளுபடி மாற்றம்— | 50 | — | 1970 ஏப். 1 | இருப்பு கீ/கொ | 570 | — |
| ,, | இலாப-நட்டக் க/கு | 320 | 50 | | | | |
| ,, | இருப்பு கீ/இ | 199 | 50 | | | 570 | — |
| | | 570 | — | 1971 ஏப். 1 | இருப்பு கீ/கொ | 199 | 50 |

## இலாப-நட்டக் கணக்கு

**1968-69**

| | | ரூ. | | | ரூ. |
|---|---|---|---|---|---|
| ஐயக்கடன் காப்பு | 700 | | | | |
| கூட்டு வராக் கடன் | 400 | | | | |
| | 1,100 | | | | |
| கழி பழைய ஐயக் கடன் காப்பு | 600 | 500 | — | | |
| கடனாளிகள் மீது தள்ளுபடிக் காப்பு | 399 | | | | |
| கூட்டு தள்ளுபடி | 250 | | | | |
| | 649 | | | | |
| கழி பழைய தள்ளுபடிக் காப்பு | 300 | 349 | — | | |

**1969-70**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஐயக் கடன் காப்பு | 1,000 | | | | |
| கூட்டு வராக் கடன் | 500 | | | | |
| | 1,500 | | | | |
| கழி பழைய ஐயக் கடன் காப்பு | 700 | 800 | — | | |
| [illegible]ளிகள் மீது தள்ளுபடிக் காப்பு | 570 | | | | |
| கூட்டு தள்ளுபடி | 300 | | | | |
| | 870 | | | | |
| கழி பழைய தள்ளுபடிக் காப்பு | 399 | 471 | — | | |

1970-71

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | | | பழைய ஐயக் கடன் காப்பு 1,000<br>கழி புதிய ஐயக் கடன் காப்பு 350<br>வராக் கடன் 200 550 | 450 | |
| | | | பழைய தள்ளுபடிக் காப்பு 570.00<br>கழி புதிய தள்ளுபடிக் காப்பு 199,50<br>,, தள்ளுபடி 50.00 249.50 | 320 | 50 |

இருப்புநிலைக் குறிப்பு

1969

| | | | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| | | | கடனாளிகள் 14,000<br>கழி<br>ஐயக் கடன் காப்பு 700<br>13,300<br>கழி தள்ளுபடிக் காப்பு 399 | 12,901 | |

**1970**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | | கடனாளிகள் | 20,000 | | |
| | | கழி ஐயக் கடன் காப்பு | 1,000 | | |
| | | | 19,000 | | |
| | | கழி தள்ளுபடிக் காப்பு | 570 | 18,430 | — |

**1971**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | | கடனாளிகள் | 7,000 | | |
| | | கழி ஐயக் கடன் காப்பு | 350 | | |
| | | | 6,650 | | |
| | | கழி தள்ளுபடிக் காப்பு | 199.50 | 6,450 | 50 |

எடுத்துக் காட்டு 44 :

தமிழ் மணியின் 30-6-1970-க்கான இருப்புநிலைக் குறிப்பு கீழ்க்கண்டவாறிருந்தது.

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | | ரூ. |
|---|---|---|---|---|
| | | கடனாளிகள் ... | 20,000 | |
| | | கழி ஐயக் கடன் காப்பு | 1,000 | |
| | | | 19,000 | |
| | | கழி தள்ளுபடிக்காப்பு | 570 | 18,430 |

30-6-1971-ல் கடனாளிகள் தொகை ரூ. 15,000. 70-71-ல் நீக்கிய வராக் கடன் ரூ. 680; தள்ளுபடி அளித்தது ரூ. 270. கடனாளிகளில் 5%-ல் ஐயக் கடன் காப்பும், 3%-ல் தள்ளுபடிக் காப்பும் வைத்திருப்பது வழக்கம். வேண்டிய குறிப்பேட்டுப் பதிவுகளையும், பேரேட்டுக் கணக்குகளையும், 30-6-71-ல் முடியும் ஆண்டுக்கான இலாப-நட்டக் கணக்கு, அந்நாளிற்கான இருப்புநிலைக் குறிப்பு முதலியவற்றைத் தயாரிக்க.

விடை :

| | | | ரூ. | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|
| 1970 | | | | | | |
| ஜுன் 30 | ஐயக் கடன் காப்புக் க/கு | ப | 680 | — | | |
| | வராக் கடன் க/கு | | | | 680 | — |
| | (வராக் கடன் கணக்கை ஐயக் கடன் கணக்கிற்கு மாற்ற-) | | | | | |
| ஜுன் 30 | கடனாளிகள் மீது தள்ளுபடிக் காப்புக் க/கு | ப | 270 | — | | |
| | தள்ளுபடிக் க/கு | | | | 270 | — |
| | (தள்ளுபடிக் கணக்கைத் தள்ளுபடிக் காப்புக் கணக்கிற்கு மாற்ற.) | | | | | |
| ,, | இலாப-நட்டக் க/கு | ப | 430 | — | | |
| | ஐயக்கடன் காப்புக் க/கு | | | | 430 | — |
| | (ஐயக்கடன் காப்பைக் கடனாளிகள் தொகையில் 5%-க்கு உயர்த்த) | | | | | |
| ,, | இலாப-நட்டக் க/கு | ப | 127 | 50 | | |
| | கடனாளிகள் மீது தள்ளுபடிக் காப்புக் க/கு | | | | 127 | 50 |
| | (தள்ளுபடிக் காப்பைக் கடனாளிகளில் 3% அளவிற்கு உயர்த்த.) | | | | | |

ஐயக் கடன் காப்புக் கணக்கு

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 1971 ஜுன் 30 | வராக் கடன் —மாற்றம் | 680 | — | 1970 ஜுலை 1 | இருப்பு கீ/கொ | 1,000 | — |
| ,, | இருப்பு கீ/இ | 750 | — | 1971 ஜுன் 30 | இலாப-நட்டக் க/கு | 430 | — |
| | | 1,430 | | | | 1,430 | — |
| | | | | 1971 ஜுலை 1 | இருப்பு கீ/கொ | 750 | — |

### வராக் கடன் கணக்கு

| | | ரூ. | | | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|
| | பல்வகை | 680 | — | 1971 சூன் 30 | ஐயக் கடன் காப்புக் க/கு — மாற்றம் | 680 | — |

### கடனாளிகள் மீது தள்ளுபடிக் காப்புக் க/கு

| | | ரூ. | | | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|
| 1971 சூன் 30 | தள்ளுபடி | 270 | — | 1970 சூலை 1 | இருப்பு கீ/கொ | 570 | — |
| ,, | இருப்பு கீ/இ | 427 | 50 | 1971 சூன் 30 | இலாப -நட்டக் க/கு | 127 | 50 |
| | | 697 | 50 | | | 697 | 50 |
| | | | | 1971 சூலை 1 | இருப்பு கீ/கொ | 427 | 50 |

### தள்ளுபடிக் கணக்கு

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | பல்வகை | 270 | — | 1971 சூன் 30 | கடனாளி கள் மீது தள்ளு படிக் காப்புக் க/கு —மாற்றம் | 270 | — |

30-6-1971-இல் முடியும் ஆண்டுக்கான
இலாப-நட்டக் கணக்கு

| | | ரூ. | | | ரூ. |
|---|---|---|---|---|---|
| ஐயக் கடன் காப்பு | 750 | | | | |
| கூட்டு வராக் கடன் | 680 | | | | |
| | 1,430 | | | | |
| கழி பழைய ஐயக் கடன் காப்பு | 1,000 | 430 | — | | |
| கடனாளிகள் மீது தள்ளுபடிக் காப்பு | 427. 50 | | | | |
| கூட்டு தள்ளுபடி | 270.00 | | | | |
| | 697. 50 | | | | |
| கழி பழைய காப்பு | 570. 00 | 127 | 50 | | |

30-6-1971-க்கான இருப்பு நிலைக் குறிப்பு

| | | | ரூ. | | |
|---|---|---|---|---|---|
| | | கடனாளிகள் | 15,000 | | |
| | | கழி ஐயக் கடன் காப்பு | 750 | | |
| | | | 14,250 | | |
| | | கழி தள்ளுபடிக் காப்பு | 427,50 | 13 ,822 | 50 |

## கடனீந்தோர் மீது தள்ளுபடிக் காப்பு
## (Reserve for Discount on Creditors)

கடனாளிகள் குறிப்பிட்ட காலத்தில் பணந்தரின் நாம் தள்ளுபடி அளிப்பது போன்றே, நாம் குறிப்பிட்டவாறு பணஞ் செலுத்தின், நமக்குக் கடனீந்தோர் தள்ளுபடி அளிப்பர் அன்றோ? இதற்கும் வகை செய்தல் நன்று. இருப்புப் பட்டியலில் காணப்படுங் கடனீந்தோர் தொகை முழுவதையும் நாம் செலுத்த வேண்டியிருக்காது; அதில் நாம் பெற்றிருக்கும் தள்ளுபடி போக மீதியுள்ளதையே நாம் கொடுக்க வேண்டும். ஆகவே, கடனீந்தோர் மீது தள்ளுபடிக் காப்பு ஏற்படுத்தப்படுகிறது. இது நமக்கு ஆதாயம். இதற்கான பதிவு :

கடனீந்தோர் மீது தள்ளுபடிக் காப்புக் க/கு ... ப

இலாப-நட்டக் க/கு

இருப்பு நிலைக் குறிப்பில் இக் கடனீந்தோர்மீது தள்ளுபடிக் காப்புக் கணக்கு கடனீந்தோர் தொகையில் கழித்துக் காட்டப் பெறும். பின்னர் நாம் தள்ளுபடி பெறுவோமாயின் பெற்ற தள்ளுபடிக் கணக்கில் வரவு வைப்பது நாம் அறிந்ததே. ஆண்டிறுதியில், அக் கணக்கை இலாப-நட்டக் கணக்கில் வரவு வைப்பதற்கு மாறாக, இத் தள்ளுபடிக் காப்புக் கணக்கில் வரவு வைத்திடலாம், இதற்கான மாற்றுப் பதிவு :

(பெற்ற) தள்ளுபடிக் க/கு ... ப
கடனீந்தோர் மீது தள்ளுபடிக் காப்புக் க/கு

கடனீந்தோர் தொகையில் குறிப்பிட்ட சதவிகிதம் தள்ளுபடிக் காப்புக் கணக்கிட வேண்டும். அந்த அளவிற்கு ஏற்றவாறு இலாப-நட்டக் கணக்கில் வரவோ, பற்றோ வைக்க வேண்டும்; கடனீந்தோர் தள்ளுபடிக் காப்புக் கணக்கில் பற்றோ, வரவோ வைக்க வேண்டும்.

எடுத்துக்காட்டு 45 :

*31-12-1969*-ல் கடனீந்தோர் தொகை ரூ. *12,000* ஆக இருந்தது. 3% தள்ளுபடிக் காப்பு ஏற்படுத்துக. குறிப்பேட்டுப் பதிவுகளையும்; கடனீந்தோர்மீது தள்ளுபடிக் கணக்கையும் காட்டுக.

விடை : பதிவு

| | | |
|---|---|---|
| கடனீந்தோர்மீது தள்ளுபடிக் காப்புக் க/கு ப | 360 | |
| இலாப-நட்டக் க/கு | | 360 |
| (கடனீந்தோர் தொகையில் 3% அளவிற்குத் தள்ளுபடிக் காப்பு ஏற்படுத்த) | | |

கடனீந்தோர்மீது தள்ளுபடிக் காப்புக் க/கு

| | | | ரூ. | | | | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1969 டிச 31 | இலாப-நட்டக் க/கு | | 360 | — | 1969 டிச 31 | இருப்பு கீ/இ | | 360 | — |
| 1970 சன 1 | இருப்பு கீ/கொ | | 360 | — | | | | | |

குறிப்பு : இருப்புநிலைக் குறிப்பில், பொறுப்புகள் பகுதியில் கடனீந்தோரினின்றும் இத் தள்ளுபடிக் காப்புக் கணக்கு கழித்துக் காட்டப்பெறும்.

தீயில் சரக்கு அழிதல் (Destruction of Stock by Fire)

விபத்தின் காரணமாக எழும் நட்டமிது (Accidental Loss) எதிர்பாராது ஏற்பட்ட தீயின் காரணமாகவோ, நிலநடுக்கம் போன்ற எதிர்பாரா நிகழ்ச்சியின் காரணமாகவோ சரக்கழிவுற லாம். இவ் விபத்து ஏற்படாதிருந்திருப்பின், இறுதிச் சரக்கிருப்பு அதிகரித்திருக்கும். எனவே, தீ போன்ற சூழ்நிலைகளால் சரக்கு அழியினும் அதை வாணிகக் கணக்கில் கொண்டு வந்தால்தான் இயற்கையாக நிகழக்கூடிய மொத்த இலாபம் கிட்டும். இவ்வாண்டில் ஏற்பட்ட இந் நட்டம் வியாபாரப் போக்கின் காரணமாக—விற்பனையில் ஏற்பட்ட மாற்றத்தின் காரணமாக—எழுந்ததன்று. எனவே, அச் சரக்கு இருந்திருக்குமாயின் என்ன மொத்த இலாபம் கிட்டியிருக்கும் என்று காண, வாணிகக் கணக்கில் இத் தொகை வரவுவைக்கப்பட வேண்டியதாகிறது. தீயினால் ஏற்பட்ட இழப்புக் கணக்கில் (Loss by Fire) பற்று வைக்கலாம். அதாவது கீழ்க்கண்ட பதிவு தேவைப்படுகிறது.

தீயினால் இழப்புக் க/கு ... ப

வாணிகக் க/கு

தீயில் அழிபட்ட சரக்கை ஈட்டுறுதி செய்துள்ளோமா என்று காண வேண்டும். அவ்வாறாயின் உடனடியாக நட்டத்தை ஈடு செய்ய, ஈட்டுறுதிக் கம்பனியிடம் கோருவோம். ஈட்டுறுதிக் கம்பனி நாம் கேட்ட தொகை முழுவதையுமோ, குறிப்பிட்ட பகுதியையோ கொடுக்கலாம். அல்லது சில காரணங்களால் ஈடுகட்ட முடியாதென்றும் மறுத்துவிடலாம். ஈட்டுறுதிக் கம்பனி முழு நட்டத்தையும் ஈடுகட்ட ஏற்றுக்கொண்டால், நட்டம் ஒன்றும் ஏற்படவில்லை. எனவே, கீழ்க்கண்ட அடுத்த பதிவைச் செய்ய வேண்டும்.

ஈட்டுறுதிக் கம்பெனிக் க/கு ... ப

தீயினால் இழப்புக் க/கு

எடுத்துக்காட்டு : தீயில் அழிந்த சரக்கு ரூ. 4,000; ஈட்டுறுதிக் கம்பனி ஏற்றுக்கொண்டது ரூ. 3,200. பதிவுகளைத் தருக.

விடை :

முதலில் தீயிலழிந்த சரக்குக்கான பதிவைச் செய்ய வேண்டும்.

தீயில் சரக்கிழப்புக் க/கு ...ப 4,000

வாணிகக் க/கு 4,000

(தீயில் அழிந்த சரக்கை வாணிகக் கணக்கில் கொண்டு வர.)

இதில் ஈட்டுறுதிக் கம்பனி ரூ. 3,200 ஏற்றுக் கொண்டது. எனவே, இத் தீயினுல் ஏற்பட்ட சரக்கு நட்டம் ரூ. 800. இதை மட்டிலுமே இலாப நட்டக் கணக்கிற்கு எடுத்துச்செல்ல வேண்டும். பதிவு.

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| ஈட்டுறுதிக் கம்பனிக் க/கு ... | ப | 3200 | |
| இலாப-நட்டக் க/கு ... | ப | 800 | |
| தீயில் சரக்கிழப்புக் க/கு ... | | | 4,000 |

(ஈட்டுறுதிக் கம்பெனியிடம் பெற வேண்டியது ரூ. 3200; மீதியை இலாப-நட்டக் கணக்கிற் கெடுத்துச் செல்ல.)

ஈட்டுறுதிக் கம்பனியிடம் நாம் இத் தொகையைப் பெற வேண்டும், எனவே, இருப்பு நிலைக்குறிப்பில் இக் கணக்கு சொத்துகள் பகுதியில் காட்டப்படும். அவ்வாறின்றிச் சரக்கு ஈட்டுறுதி செய்யப்படவில்லை யெனினும், அல்லது ஈட்டுறுதிக் கம்பனி பொறுப்பை ஏற்றுக் கொள்ளாவிடினும், தீயில் அழிந்த சரக்கு முழுவதும் நட்டமே. இதனை இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்ல வேண்டும். தேவையான பதிவு :

இலாப-நட்டக் க/கு ... ப

தீயில் சரக்கிழப்புக் க/கு

சொத்து ஒன்று தீயில் அழிந்திருப்பின்.

தீயிலிழப்புக் க/கு ... ப

(குறிப்பிட்ட) சொத்துக் க/கு

என்று குறிப்பேட்டுப் பதிவு செய்யவேண்டும். ஈட்டுறுதி செய்யப்படவில்லையெனில், முழுத்தொகையையும் இலாப-நட்டக் கணக்கில் பற்று வைத்துத் தீயிலிழப்புக் கணக்கில் வரவு வைத்து முடிக்க வேண்டும்.

சொத்தினை விற்பதில் ஏற்படும் இலாப-நட்டம்
(Profit or Loss on Sale of an Asset)

சொத்து ஒன்றை விற்கும் போழ்து அதை விற்பனைக் கணக்கில் பதியக் கூடாது என்று முன்னரே விளக்கியிருக்கிறோம். குறிப்பேட்டுப் பதிவு மூலம் இந் நடவடிக்கை சொத்துக் கணக்கிற்கு எடுத்துச் செல்லப்படும். சொத்து விற்பதில் ஏற்படும் ஆதாயம் அல்லது நட்டத்தை இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்ல வேண்டும்.

எடுத்துக்காட்டு : ரூ. 850 மதிப்புள்ள தட்டெழுத்துப் பொறி ரூ. 500-க்கு விற்கப் பட்டது.

விடை :

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| ரொக்கக் க/கு ... | ப | 500 | |
| இலாப-நட்டக் க/கு ... | ப | 350 | |
| தட்டெழுத்துப் பொறி க/கு | | | 850 |
| (ரூ. 350 நட்டத்துக்குத் தட்டெழுத்துப் பொறியை விற்றது.) | | | |

இவ்வாறு, சொத்து ஒன்று நட்டத்துக்கு விற்கும் போழ்து அந் நட்டத் தொகையை இலாப-நட்டக் கணக்கில் பற்று வைக்க வேண்டும். விற்பதில் ஆதாயம் கிடைப்பின், அவ்வாதாயத் தொகையை இலாப-நட்டக் கணக்கில் வரவு வைக்க வேண்டும். அந் நிலையில் கீழ்க்கண்ட பதிவு தேவைப்படும்.

ரொக்கக் க/கு ... ப
(குறிப்பிட்ட) சொத்துக் க/கு
இலாப நட்டக் க/கு
(சொத்து விற்று, ஏற்பட்ட இலாபம் இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்லப்படுகிறது.)

இருக்கின்ற சொத்து ஒன்றை விற்றுவிட்டு, வேறு சொத்தை வாங்கியதாகக் கொண்டால், முதலில் பழைய சொத்தைக் கணக்கில் முடித்திட வேண்டும். விற்கப்பட்ட சொத்துக் கணக்கில் கீழ்க்கண்ட தொகைகளை வரவு வைக்க வேண்டும்.

(i) சொத்து விற்றதில் ஏற்பட்ட நட்டம்.

(ii) விற்கும் நாள் வரை சொத்து மீதான தேய்மானம்.

(iii) விற்பனைத் தொகை.

எந்திர, தளவாடங்கள் முதலியவற்றைப் பெயர்க்கும் போழ்து ஏற்படும் செலவினை, அச் சொத்துக் கணக்கில் பற்று வைக்க வேண்டும்.

எடுத்துக்காட்டு 46 :

எந்திர தளவாடங்கள் 1-1-1970-ல் ரூ. 9,600 பற்றிருப்புக் காட்டியது, 1-10-1970-ல் அதைப் பெயர்த்தெடுக்க (Dismantling Expenses) ஆன செலவு ரூ. 500. அது ரூ. 8,720-க்கு விற்கப் பட்டதாகக் கொண்டு எந்திர தளவாடக் கணக்கைத் தயாரிக்க. (10% தேய்மானம் கணக்கிடப்படுவது வழக்கம்.)

விடை :

ப எந்திர, தளவாடங்கள் கணக்கு வ

| 1970 | | ரூ. | | 1970 | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|
| சன 1 | இருப்பு | 9,600 | — | அக் 1 | வங்கி — | 8,720 | — |
| அக் 1 | வங்கி பெயர்த் தெடுக்கும் செலவு | 500 | — | ,, | தேய் மானம் | 720 | — |
| | | | | டிச .31 | இலாப— நட்டக் க/கு | 660 | — |
| | | 10,100 | — | | | 10,100 | — |

செலவினத்தில் சரக்கிருப்பு (Expenses Stock)

எழுதுபொருளுக்குச் செலவழித்ததை இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்கிறோம். ஆண்டு இறுதியில் பயன்படுத்தப் பெறாத எழுதுபொருள் இருப்பில் இருக்கும். ஆகவே, எழுது பொருளுக்காக செலவழித்த மொத்தத் தொகையையும் அவ் வாண்டிலேயே செலவழிந்து விட்டதாகக் கொள்வது தவறு.

செலவழித்த தொகையிலிருந்து, எழுது பொருள் இருப்பின், அதன் மதிப்பைக் கழித்துவிடின், அவ் வாண்டில் பயன்படுத்தப் பட்ட எழுதுபொருளின் மதிப்புக் கிடைக்கிறது. அதுவே அவ் வாண்டுக் குரிய செலவாகும். இதற்குத் தேவையான பதிவு :

எழுதுபொருள் சரக்கிருப்புக் க/கு ப

எழுதுபொருள் க/கு

எழுது பொருள் சரக்கிருப்புக் கணக்கு பற்றிருப்பைக் காட்டு கிறது. இது மதிப்புடையது; அடுத்த ஆண்டில் பயன்படுத்த விருப்பது. சொத்து வகையைச் சார்ந்தது. எனவே, இது இருப்பு நிலைக் குறிப்பில் சொத்துகள் பகுதியில் காட்டப் பெறும்.

எடுத்துக்காட்டு 47 :

1970 ஆம் ஆண்டில் எழுது பொருள் வாங்கியது ரூ. 250, எழுது பொருள் சரக்கிருப்பின் மதிப்பு 1-1-1970-ல் ரூ. 75 ஆகவும். 31-12-1970-ல் ரூ. 60 ஆகவும் இருந்தது. சரிக்கட்டுப் பதிவு, எழுதுபொருள் கணக்கு, இலாப-நட்டக் கணக்கு, இருப்புநிலைக் குறிப்பு முதலியவற்றைத் தயாரிக்க.

விடை :

| சரிக்கட்டுப் பதிவுகள் : | ரூ. | ரூ. |
|---|---|---|
| எழுது பொருள் க/கு | 250 | |
| ரொக்கம் (அ) வங்கி | | 250 |
| (எழுது பொருள் வாங்கியது.) | | |
| இலாப-நட்டக் க/கு | 265 | |
| எழுதுபொருள் க/கு | | 265 |
| (பயன்படுத்திய எழுதுபொருளை இலாப-நட்டக் கணக்குக்கு எடுத்துச் செல்ல.) | | |

## பேரேட்டுக் கணக்குகள்.

### எழுது பொருள் கணக்கு

ப | | | | | | | வ
---|---|---|---|---|---|---|---
1970 | | | ரூ. | 1970 | | | ரூ.
சன. 1 | இருப்பு கீ/கொ | | 75 — | டிச. 31 | இலாப நட்டக் க/கு | | 265 —
| ரொக்கம் | | 250 — | ,, | இருப்பு கீ/இ | | 60 —
| | | 325 — | | | | 325 —
1971 சன. 1 | இருப்பு கீ/கொ | | 60 — | | | |

### 31-12-1970-ல் முடியும் ஆண்டுக்கான இலாப-நட்டக் க/கு

| | ரூ. | | ரூ.
---|---|---|---
எழுது பொருள் தொடக்க இருப்பு 75<br>கூட்டு : வாங்கியது 250<br>325<br>கழி : இறுதியிருப்பு 60 | 265 — | |

### 31-12-1970-ற்கான இருப்புநிலைக் குறிப்பு

| | | ரூ.
---|---|---|---
| | எழுது பொருள் இருப்பு | 60 —

பல வகையில் சரிக்கட்டுதல்களில் சிலவற்றைக் கீழ்க் காண்போம்.

**(1) வராக் கடனைத் திருப்பிப் பெறல் (Recovery of Bad Debts)**

வராக் கடன் என நீக்கப்பட்ட தொகை மீண்டும் திரும்பக் கிடைக்குமாயின் அதனைக் கொடுத்தவர் கணக்கில் வரவு வைக்கக் கூடாது. காரணம் வராக்கடன் என எழுதி, முன்னரே அவர் கணக்கில் வரவு வைத்துக் கணக்கை முடித்துவிட்டோம். இப்பொழுது அவர் இத் தொகையைச் செலுத்தும் போழ்து அவர் கணக்கில் வரவு வைப்பின் அவர் கணக்கு வரவிருப்பைக் காட்டும். அதாவது, நாம் இத் தொகையை அவர்க்குத் திருப்பித்தர வேண்டும் என்ற பொருள் கொடுக்கும். எனவே, ஆள்சார் கணக்கில் வரவு வைத்தல் வழுவுடையது என்பது தெளிவாகிறது அல்லவா? வராக் கடன் கணக்கில் பற்றுவைத்து ஆண்டு முடிவில் அதை இலாப-நட்டக் கணக்கில் நட்டமாகக் கொண்டு பற்று வைத்தோம். அதனை மாற்றி, இவ்வாண்டில் அதை ஆதாயமாகக் கருதுவதே சிறந்தது. திரும்பிப் பெற்ற வராக் கடன் (Bad Debts Recovery a/c) எனும் கணக்கில் வரவு வைக்கவேண்டும். இப்பொழுது செய்ய வேண்டிய பதிவு :

வங்கி (அ) ரொக்கக் க/கு ... ப
திரும்பிப் பெற்ற வராக் கடன் க/கு

வரவிருப்புக் காட்டும் இக் கணக்கை ஆண்டு முடிவில் இலாப-நட்டக் கணக்கில் வரவு வைக்க வேண்டும். தேவையான இறுதிப் பதிவு :

திரும்பிப் பெற்ற வராக் கடன் க/கு ... ப
இலாப-நட்டக் க/கு

**(2) தொழிலில் உள்ள சரக்கை உரிமையாளர் பயன்படுத்திக் கொள்ளுதல் (Stock taken by Proprietor)**

தொழிலில் உள்ள சரக்கை உரிமையாளர் தம் சொந்த பயன் கருதி எடுத்துக் கொள்ளும் போழ்து, அதனை விற்பனையாகக் கொள்ளக்கூடாது. கொள்முதல் செய்த விலையில்தான் அவர் அதனை எடுத்துக் கொள்வார். கொள்முதல் குறைந்து விடுகிறது. எனவே, கொள்முதல் கணக்கிலிருந்து இத் தொகை கழிக்கப்பட்டு விடின் சரியாகிவிடும். உரிமையாளர் எடுத்துக் கொள்வதால்

இதை எடுப்புப் போன்றே முதல் கணக்கில் கழித்துக் காட்ட வேண்டும். தேவையான சரிக்கட்டுப் பதிவு :

முதல் க/கு ... ப

கொள்முதல் க/கு

(3) பயிற்சி பெறுநரின் முனைமம்

(Apprenticeship Premium)

சில நிறுவனங்களில் பயிற்சி பெறுநர் தொகை செலுத்துவதுண்டு. இதனை முனைமம் (Premium) என்கிறோம். இரண்டு அல்லது மூன்று ஆண்டுகட்கு (பயிற்சி பெறுநர் காலம்) உரியது. இதில் இவ் வாண்டுக் குரிய தொகையை மட்டுமே இலாப-நட்டக் கணக்கில் வரவு வைக்கவேண்டும் மீதி உள்ள முனைமம் வரும் ஆண்டுகட்கு உரியதாதலால், அதனைப் பொறுப்பாகக் கொண்டு, இருப்புநிலைக் குறிப்பில் பொறுப்புகள் பகுதியில் முன்கூட்டிப் பெற்ற பயிற்சி பெறுநரின் முனைமம் என்று காட்ட வேண்டும். முதலில் முனைமம் பெறும் போழ்து,

ரொக்கக் க/கு ப

பயிற்சி பெறுநரின் முனைமம் க/கு

முழுத் தொகைக்கும் இக் கணக்கில் வரவு வைக்க வேண்டும். பின்னர் பிற ஆண்டுகட்கு உரிய முனைமத்தைச் சரிக்கட்ட.

பயிற்சி பெறுநரின் முனைமக் க/கு ... ப

முன் கூட்டிப் பெற்ற பயிற்சி

பெறுநரின் முனைமக் க/கு

இல்வாண்டுக் குரிய தொகையை இப்பொழுது பயிற்சி பெறுநரின் முனைமக கணக்கு வரவிருப்பாகக் காட்டும். இதனை இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்ல வேண்டும்.

எடுத்துக்காட்டு 48 :

1-1-1969-ல் பயிற்சி பெறுநரிடம் பெற்ற முனைமம் ரூ. 1,800. இது மூன்றாண்டுகட்கு உரியது என்று கொண்டு குறிப்பேட்டுப் பதிவுகளையும் அவ் வாண்டுக்கான இலாப-நட்டக் கணக்கு, 31-12-1969-க்கான இருப்புநிலைக் குறிப்பு முதலியவற்றையும்

தயாரிக்க. பயிற்சி பெறுநரின் முனைமக் கணக்கு மூன்றாண்டுகட்கும் எவ்வாறிருக்கும் என்பதையும் காட்டுக.

விடை :

| | | ரூ. | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| | வங்கிக் க/கு ... ப | 1,800 | — | | |
| | பயிற்சி பெறுநரின் முனைமக் க/கு | | | 1,800 | — |
| | (பயிற்சி பெறுநரிடமிருந்து மூன்றாண்டுகட்கான முனைமம் பெற்றது.) | | | | |
| | பயிற்சி பெறுநரின் முனைமக் க/கு ... ப | 1,800 | — | | |
| | இலாப-நட்டக் க/கு | | | 600 | — |
| | முன்கூட்டிப் பெற்ற பயிற்சி பெறுநரின் முனைமக் க/கு | | | 1,200 | — |
| | (இவ்வாண்டுக்கான பயிற்சி பெறுநரின் முனைமம் இலாப-நட்டக் கணக்குக்கும் மீதி முன் கூட்டிப் பெற்ற கணக்கிற்கும் எடுத்துச் செல்லப்படுகிறது.) | | | | |

31-12-1969-ல் முடியும் ஆண்டுச்கான இலாப-நட்டக் க/கு

ப வ

| | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| | | பயிற்சி பெறுநரின் முனைமம் | 1,800 | | |
| | | கழி முன் கூட்டிப் பெற்றது ... | 1,200 | 600 | — |

31-12-1969-ற்கான இருப்புநிலைக் குறிப்பு

| | ரூ. | | | ரூ. |
|---|---|---|---|---|
| முன் கூட்டிப் பெற்ற பயிற்சி பெறுநரின் முனைமம் | 1,200 | — | | |

பயிற்சி பெறுநரின் முனைமக் கணக்கு

| பற் | | ரூ. | | வர | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|
| 1969 டிச. 31 | இலாப-நட்டக் க/கு | 600 | — | 1969 சன. 1 | வங்கி | 1,800 | — |
| ,, | முன் கூட்டி பெற்ற பயிற்சி பெறுநரின் முனைமக் கணக்கு—மாற்றம் | 1,200 | — | | | | |
| | | 1,800 | — | | | 1,800 | — |

முன் கூட்டிப் பெற்ற பயிற்சி பெறுநரின் முனைமக் க/கு

| பற் | | ரூ. | | வர | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|
| 1969 டிச. 31 | இருப்பு கீ/இ | 1,200 | — | 1969 டிச. 31 | பயிற்சி பெறுநரின் முனைமம்—மாற்றம் | 1,200 | — |
| 1970 டிச. 31 | இலாப-நட்டக் க/கு | 600 | — | 1970 சன. 1 | இருப்பு கீ/கொ | 1,200 | — |
| ,, | இருப்பு கீ/இ | 600 | — | | | | |
| | | 1,200 | — | | | 1,200 | — |
| 1971 டிச. 31 | இலாப-நட்டக் க/கு | 600 | — | 1971 சன. 1 | இருப்பு கீ/கொ | 600 | — |

இலாபத்தில் கழிவு தருதல் (Commission on Profit)

மேலாளர் (Manager) தனி ஆர்வங்காட்டி உழைப்பதற்கு ஊக்கங் கொடுக்கும் வகையில் அவர்க்கு அளிக்கப்படும் ஊதியத்துடன் இலாபத்தில் ஒரு குறிப்பிட்ட சதவிகிதமும் தரப்படலாம். அந் நிலையில் செலவுகள், நட்டமனைத்தும் போக எஞ்சியுள்ள நிகர இலாபத்தில் கொடுக்கப்பட்ட சதவிகிதத்தைக் கணக்கிட

வேண்டும். இதுவும் கொடுக்கப்பட்ட பின் உள்ளதே இப்பொழுது நிகர இலாபமாகும்.

ஆனால், சில வேளைகளில் கழிவு கொடுத்த பின்னுள்ள இலாபத்தில் ஒரு பகுதியாக கழிவு கொடுக்கப்பட வேண்டும் என்றிருக்கலாம்.

எடுத்துக்காட்டு :

கழிவு கழித்த பின்னுள்ள நிகர இலாபத்தில் 5% அளவில் மேலாளருக்குக் கழிவு தரவேண்டும். கழிவு கழிக்குமுன் நிகர இலாபம் ரூ. 8,400 எனில் மேலாளருக்குத் தரவேண்டிய கழிவு எவ்வளவு. சரிக்கட்டுப் பதிவையும் தருக.

ரூ. 5 கழிவுபெற்ற பின் உள்ள நிகர இலாபம் = ரூ. 100

கழிவு கழிக்குமுன் நிகர இலாபம் = ரூ. 105

கழிவு கழிக்குமுன் உள்ள நிகர இலாபம் ரூ. 105 ஆனால்

கிடைக்கும் கழிவு ரூ. 5

,, ,, 8400 ... $\frac{8400 \times 5}{105}$ = ரூ. 400.

மேலாளருக்குத் தரவேண்டிய கழிவு ரூ. 400. இது கழிவு போக உள்ள நிகர இலாபம் ரூ. 8,000 (ரூ. 8,400 — ரூ. 400) கழிவு ரூ. 400, நிகர இலாபமாகிய ரூ. 8,000-ல் 5 சதவிகிதமாகும்.

சரிக்கட்டுப் பதிவு :

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| இலாப-நட்டக் க/கு | ... ப | 400 | |
| மேலாளருக்குத் தரவேண்டியுள்ளது | | | |
| கழிவுக் க/கு | | | 400 |
| (கழிவு கழித்த பின் உள்ள நிகர இலாபத்தில் 5% அளவில் கழிவு மேலாளருக்குத்தர வேண்டியுள்ளது) | | | |

மேலாளருக்குத் தரவேண்டிய கழிவுக் கணக்கு இருப்புநிலைக் குறிப்பில் பொறுப்புகள் பகுதியில் காட்டப்பெறும். இவ்வாறு கழிவு கணக்கிட, கீழ்க்கண்ட விதியைப் பின் பற்றலாம் :

$$\frac{\text{கழிவு சதவிகிதம்}}{100+\text{கழிவு சதவிகிதம்}} \times \text{நிகர இலாபம் (கழிவு கழிக்கு முன் உள்ள நிகர இலாபம்.)}$$

ஒரு எழுது பொருள் நிறுவனம் ரூ. 300-க்கான சரக்கை விளம்பரத்துக்கென விநியோகித்ததாகக் கொண்டால், விளம்பரக் கணக்கில் பற்று வைக்க வேண்டும். சரக்கு விளம்பரத்துக்குப் பயன்படுத்தப் பட்டுள்ளதால், முன்னர் விளக்கியவாறு, இதை விற்பனையாகக் கொள்ளாமல், கொள்முதலில் கழித்துக் காட்ட வேண்டும். தேவையான சரிக்கட்டுப் பதிவு :

விளம்பரக் க/கு ... ப

கொள் முதல் க/கு

பின்னர் விளம்பரக் கணக்கை இலாப-நட்டக் கணக்கில் பற்று வைத்து இதனை முடிக்க வேண்டியது அறிந்ததே.

விற்பனை

விற்பனை அல்லது திருப்பம் அடிப்படையில் அனுப்பிய சரக்கு ரூ. 3,000 விற்பனைக் கணக்கில் சேர்க்கப்பட்டிருப்பதாகவும் ஆண்டிறுதி நாள் 31-12-1970 அன்று கெடு முடியவில்லை யென்றும் கொள்வோம். அதனுடைய அடக்க விலை ரூ. 2,000 எனின், சரிக் கட்டும் முறை.

இதை விற்பனையாகக் கொள்ளக் கூடாது. எனவே, விற்பனைக் கணக்கில் பதிவாகியிருப்பதை மாற்றச் சரிக்கட்டுப் பதிவு :

விற்பனைக் க/கு ... ப 3,000

(குறிப்பிட்ட) கடனாளி க/கு 3,000

(விற்பனையாகப் பதிந்ததை நீக்க)

இது இறுதிச் சரக்கிருப்பில் சேர்க்கப்பட வேண்டும் எனவே, இதன் அடக்க விலையான ரூ. 2,000-த்தை இறுதிச் சரக் கிருப்பில் கூட்டிக் கொள்ள வேண்டும்.

தேர்வுகளில் மேல் விளக்கப்பட்ட சரிக்கட்டுதல்களை இறுதிக் கணக்குகள், இருப்புநிலைக் குறிப்பு, முதலியன தயார் செய்யும்

போழ்து கையாள வேண்டிய செயல் முறைகளை மீண்டும் சுருக்க மாகக் கூறுவோம் :

1. இறுதிச் சரக்கிருப்பை

முதலில் வாணிகக் கணக்கில் வரவுப் பகுதியிலும், பின்னர் இருப்புநிலைக் குறிப்பின் சொத்துகள் பகுதியிலும் எழுத வேண்டும்.

2. கொடுபட வேண்டிய செலவினம்

குறிப்பிட்ட செலவுக் கணக்கு வாணிகக் கணக்கில் பற்றுப் பக்கத்திலோ, இலாப-நட்டக் கணக்கில் பற்றுப் பக்கத்திலோ இருக்கும். அதனுடன் இன்னும் செலுத்த வேண்டிய செலவுத் தொகையைக் கூட்டுக. அவ்வாறு செலுத்த வேண்டிய தொகையை இருப்பு நிலைக் குறிப்பில் பொறுப்புகள் பகுதியில் கொடுபட வேண்டிய செலவினம் எனக் காட்டவும்.

3. முன் கூட்டிச் செலுத்திய செலவினம்

குறிப்பிட்ட செலவுக் கணக்கிலிருந்து முன் கூட்டிச் செலுத்திய செலவுத் தொகையைக் கழித்திடுக. இருப்புநிலைக் குறிப்பில் சொத்துகள் பகுதியில் அவ்வாறு கழித்த தொகையை முன் கூட்டிச் செலுத்திய செலவு எனக் காட்டுக.

4. பெறவேண்டிய வருவாய் (அ) கூடிய வருவாய்

குறிப்பிட்ட வருமானக் கணக்கில் பெற வேண்டிய வருமானத் தொகையைக் கூட்டுக. பின்னர் இருப்புநிலைக் குறிப்பில் சொத்துகள் பகுதியில் பெற வேண்டிய வருவாய் எனக் காட்டுக.

5. முன்கூட்டிப் பெற்ற வருவாய்

குறிப்பிட்ட வருமானக் கணக்கிலிருந்து முன் கூட்டிப் பெற்ற தொகையைக் கழித்திடுக. இருப்புநிலைக் குறிப்பில் பொறுப்புகள் பகுதியில் இவ்வாறு கழித்தத் தொகையை முன்கூட்டிப் பெற்ற வருமானம் என்று காட்டுக.

6. முதல் மீது வட்டி

முதல் தொகை மீது குறிப்பிட்ட சதவிகிதத்தைக் கணக் கிட்டுக் கூட்டுக. முதல் மீது ஆன வட்டியை இலாப நட்டக் கணக்கில் பற்றுப் பகுதியில் காட்டுக. (எடுப்பு கழிக்கு முன் உள்ள முதல் தொகை மீது வட்டி கணக்கிடப்பட வேண்டும்.)

7. எடுப்பு மீது வட்டி

எடுப்புத் தொகை மீது வட்டி கணக்கிட்டு முதல் தொகையில் கழித்திடுக. இலாப-நட்டக் கணக்கில் வரவு பகுதியில் எடுப்பு மீது வட்டி எனக் காட்டுக.

8. தேய்மானம்

குறிப்பிட்ட சொத்துமீது (இருப்பு நிலைக் குறிப்பில் சொத்துகள் பகுதியில் இருக்கும்.) குறிப்பிட்ட சதவிகிதம் கணக்கிட்டு அதைக் கழித்துக் காட்டுக. அவ்வாறு கழிக்கப்பட்ட தொகையை இலாப-நட்டக் கணக்கில் பற்றுப்பகுதியில் 'தேய்மானம்' எனக் காட்டுக. (சொத்து வாங்கிய நாள் கொடுக்கப்பட்டிருப்பின், அது வாங்கப்பட்ட நாளிலிருந்து ஆண்டு இறுதி நாள் வரை உள்ள கால அடிப்படையில்தான் தேய்மானம் கணக்கிட வேண்டும். வாங்கிய நாள் குறிப்பிட வில்லையெனில் இறுதிநாளில் உள்ள தொகைமீது கணக்கிடலாம். இதற்கான குறிப்பு ஒன்றைக் கொடுத்தல் நலம்.)

9 வராக் கடன்

வராக் கடன் நீக்குக எனச் சரிக்கட்டுதலில் கொடுக்கப்பட்டிருப்பின், அத் தொகையை இருப்புநிலைக் குறிப்பில் சொத்துகள் பகுதியில் உள்ள 'கடனாளிகள்' தொகையில் கழிக்க வேண்டும். இவ்வாறு கழித்த தொகையை இலாப-நட்டக் கணக்கில் பற்றுப் பகுதியில் காட்டுக.

முன்னரே 'வராக் கடன்' எனும் கணக்கு கொடுக்கப் பட்டிருப்பின் அதுவும் இலாப நட்டக் கணக்கில் பற்றுப் பகுதியில் எடுத்துச் செல்லப்பட்டிருக்கும். அத்துடன், கடனாளிகளில் கழித்த தொகையைக் கூட்டிக் காட்டுக.

10. ஐயக் கடன் காப்பு

புதிதாக ஐயக் கடன் காப்பு ஏற்படுத்த வேண்டியிருப்பின் இருப்புப் பட்டியலில் இத்தகைய கணக்கு ஏதுமிருக்காது. சரிக்கட்டுதலில் 'ஐயக் கடன் ஏற்படுத்துக' என்று கொடுத்திருப்பர். அந் நிலையில் கடனாளிகள் தொகையில் இதைக் கணக்கிட்டுக் கழித்திடுக. இவ்வாறு கழித்த தொகையை இலாப-நட்டக் கணக்கின் பற்றுப் பகுதியில் 'ஐயக் கடன் காப்பு' எனக் காட்டுக.
வராக் கடனும் கொடுக்கப்பட்டிருப்பின், அதனையும் ஐயக் கடன் காப்புடன் கூட்டி இலாப-நட்டக் கணக்கில் காட்ட

வேண்டும். (இருப்பு நிலைக் குறிப்பைப் பொறுத்தவரை மாற்றமில்லை.)

முன்னரே ஐயக் கடன் காப்பு கொடுக்கப்பட்டிருப்பின் அதனைப் பழைய காப்பு என்க. சரிக்கட்டுதலில் கொடுக்கப் பட்டிருக்கும் சதவிகிதத்தைக் கடனாளிகள் தொகையில் கணக் கிட்டு முதலில் இருப்பு நிலைக் குறிப்பில் கழித்துக் காட்டுக. இவ்வாறு கழிக்கப்படும் தொகையைப் புதிய ஐயக் கடன் காப்பு என்க. புதிய ஐயக் கடன் காப்புத் தொகை பழைய ஐயக் கடனை விட அதிக மிருப்பின் இலாப நட்டக் கணக்கில் இரண்டிற்குமுள்ள வேற்றுமைத் தொகையைப் பற்றுப் பகுதியில் வரைக. அதாவது கழித்துக் காட்டுக. அவ்வாறின்றிப் பழைய காப்பு புதிய காப்புத் தொகையிலும் அதிகமிருப்பின் இலாப-நட்டக் கணக்கில் வரவுப் பகுதியில் இரண்டிற்கு முள்ள வேற்றுமைத் தொகையை எழுத வேண்டும்.

வராக் கடன் கொடுக்கப்பட்டிருப்பின், வராக்கடனையும், புதிய காப்புத் தொகையையும் கூட்டுக. இக் கூட்டுத் தொகை பழைய ஐயக் கடன் காப்புத் தொகையினும் அதிக மிருப்பின், முன் குறிப்பிட்டவாறே இலாப-நட்டக் கணக்கின் பற்றுப் பகுதியில் இரண்டிற்குமுள்ள வேற்றுமைத் தொகையை எழுதுக. அவ்வாறின்றிப் பழைய காப்புத் தொகை அதிகமிருப்பின், இலாப-நட்டக் கணக்கின் வரவுப் பகுதியில் இரண்டிற்கு முள்ள வேற்று றுமைத் தொகையை எழுதுக.

வராக் கடன் நீக்கச் சொல்லியிருப்பின், கடனாளிகள் தொகை யில் முதலில் இதைக் கழிக்க வேண்டும். இது போக மீதியுள்ள தொகையில்தான் ஐயக் கடன் காப்பு கணக்கிடப்பட வேண்டும்.

11. கடனாளிகளில் தள்ளுபடிக் காப்பு

ஐயக் கடன் காப்புப் போன்றே இதைச் செய்ய வேண்டும். இருப்பு நிலைக் குறிப்பில் ஐயக் கடன் காப்பு கழிக்கப்பட்டபின் உள்ள கடனாளிகள் தொகையில் இதைக் கணக்கிட்டுக் கழித்துக் காட்டுக. இதனை இலாப நட்டக் கணக்கில் பற்றுப் பகுதியில் 'கடனாளிகளில் தள்ளுபடிக் காப்பு' என்று காட்டுக. அளித்த தள்ளுபடி இருப்பின், அதனையும் இதனுடன் கூட்டி இலாப நட்டக் கணக்கில் காட்டலாம். இருப்புப் பட்டியலில் கடனாளிகளில் தள்ளுபடிக் காப்பு கொடுக்கப் பட்டிருப்பின் அதனைப் பழைய காப்பு என்று கொள்க. இருப்பு நிலைக் குறிப்பில் கழித்துக் காட்டியதைப் புதிய காப்பு என்று கொண்டு ஐயக் கடன் காப்புப் போன்றே புதிய காப்புத் தொகையும் அளித்த தள்ளுபடியும்

கூட்டிய தொகையிலிருந்து பழைய தள்ளுபடிக் காப்பைக் கழித்து இலாப-நட்டக் கணக்கின் பற்றுப் பகுதியில் காட்டுக. பழைய காப்பு அதிகமிருப்பின், இலாப நட்டக் கணக்கின் வரவுப் பகுதியில் பழைய காப்பிலிருந்து இக் கூட்டுத் தொகையைக் கழித்துக் காட்டுக.

## 12. கடனீந்தோர் மீது தள்ளுபடிக் காப்பு

இருப்புநிலைக் குறிப்பில் பொறுப்புகள் பகுதியிலுள்ள கடனீந்தோர் தொகையில் இதனைக் கணக்கிட்டுக் கழித்துக் காட்டுக. இவ்வாறு கழித்த தொகையை இலாப-நட்டக் கணக்கின் வரவுப் பகுதியில் 'கடனீந்தோர் மீது தள்ளுபடிக் காப்பு' என்று காட்டுக. பெற்ற தள்ளுபடி கொடுக்கப்பட்டிருப்பின், அதனையும் இத்துடன் கூட்டிக் காட்டலாம். பழைய காப்பு கொடுக்கப்பட்டிருப்பின், புதிய காப்புத் தொகையுடன் தள்ளுபடி கூட்டிய தொகையிலிருந்து கழித்துக் காட்டவேண்டும். பழைய காப்பு அதிகமிருப்பின், இலாப நட்டக் கணக்கின் பற்றுப் பகுதியில் பழைய காப்பிலிருந்து கூட்டுத் தொகையைக் கழித்துக் காட்டுக.

## 13. தீயில் சரக்கு அழிதல்

அழிந்த சரக்கினை வாணிகக் கணக்கின் வரவுப் பகுதியில் எழுதுக. ஈட்டுறுதிக் கம்பனி முழு நட்டத்தையும் ஈடுகட்ட ஒப்பி இருப்பின், நட்டம் ஏதும் நிகழவில்லையென்றாகிறது. எனவே, ஈட்டுறுதிக் கம்பனியிடமிருந்து வரவேண்டிய தொகையை இருப்புநிலைக் குறிப்பில் சொத்துகள் பகுதியில் காட்டவேண்டும். ஒரு பகுதி நட்டத்தை மட்டும் ஈட்டுறுதிக் கம்பனி ஏற்பதாயிருப்பின், இலாப-நட்டக் கணக்கில் பற்று பகுதியில் ஏற்பட்ட தீ நட்டத்திலிருந்து, ஈட்டுறுதிக் கம்பனி ஏற்றுக் கொண்ட தொகையைக் கழித்துக் காட்டவேண்டும். இருப்புநிலைக் குறிப்பில் சொத்துகள் பகுதியில் ஈட்டுறுதிக் கம்பனியிடமிருந்து பெற வேண்டிய தொகையைக் காட்டவேண்டும். (வாணிகக் கணக்கில் சரக்கு அழிவுற்ற தொகையை வரவு வைக்கவேண்டும் என்பதைச் சொல்லத் தேவையில்லை.)

ஈட்டுறுதி செய்யப்படவில்லையெனினும் அல்லது ஈட்டுறுதிக் கம்பனி எக் காரணம் பற்றியோ நட்டத்தை ஏற்காவிடினும் தீயில் அழிவுற்ற சரக்கனைத்தும் நட்டமாகி விடுகிறது. வாணிகக் கணக்கில் முதலில் இத் தொகையை வரவு வைக்கவும். இதே தொகையை இலாப-நட்டக் கணக்கில் பற்றுப் பகுதியில் எழுதுக.

14. உரிமையாளர் தம் சொந்தப் பயனுக்காக

வாணிகஞ் செய்யும் பண்டங்களை எடுத்திருப்பின் வாணிகக் கணக்கிலுள்ள கொள்முதலில் இதைக் கழித்துக்காட்டுக. இதே தொகையை எடுப்புக்கணக்குப் போன்றே இருப்புநிலைக் குறிப்பில் முதல் தொகையில் கழித்துக் காட்டுக.

எடுத்துக்காட்டு 49 :

கீழ்க் கொடுக்கப்பட்ட இருப்புகளிலிருந்து கரிகாலனின் வாணிகக் கணக்கு, இலாப-நட்டக் கணக்கு 31-12-1971-க்கான இருப்புநிலைக் குறிப்பு முதலியவற்றைத் தயாரிக்க, சரிக்கட்டுப் பதிவுகளையும் தருக :

| | | ரூ. |
|---|---|---|
| முதல் கணக்கு | ... | 22,000 |
| எடுப்புக் கணக்கு | ... | 2,300 |
| வங்கி மேல் வரைப் பற்று | ... | 6,700 |
| ஈட்டுறுதி | ... | 300 |
| ஊதியமும் கூலியும் | ... | 12,560 |
| உள் சுமை கூலி | ... | 120 |
| முதலீடு | ... | 2,500 |
| விளம்பரம் | ... | 275 |
| வாணிகச் செலவு | ... | 350 |
| உள் திருப்பம் | ... | 300 |
| வெளித் திருப்பம் | ... | 435 |
| அலுவலகச் செலவு | ... | 1,455 |
| வராக் கடன் | ... | 320 |
| தள்ளுபடி (வ) | ... | 574 |
| கழிவு பெற்றது | ... | 636 |
| ஐயக் கடன் காப்பு | ... | 375 |
| தள்ளுபடிக் காப்பு | ... | 150 |
| கட்டடம் | ... | 20,000 |
| தட்டெழுத்துப் பொறி | ... | 1,500 |
| மிதி வண்டி | ... | 525 |
| பல்வகை வரவு | ... | 620 |
| கொள்முதல் | ... | 40,875 |
| விற்பனை | ... | 61,353 |
| சரக்கிருப்பு (1-1-1971) | ... | 5,830 |
| முதலீட்டின்மீது பெற்ற வட்டி | ... | 50 |
| கொள்முதல் மீது தீர்வை | ... | 540 |
| கடனாளிகள் | ... | 10,250 |
| கடனீந்தோர் | ... | 7,700 |
| ரொக்கம் | ... | 315 |
| எழுது பொருளும் அச்சுக் கூலியும் | ... | 278 |

சரிக்கட்ட வேண்டியவை:

(i) இறுதிச் சரக்கிருப்பு ரூ. 9,304 என மதிப்பிடப்பட்டது.

(ii) தேய்மானம் கணக்கிடுக :

கட்டடம் 3% தட்டெழுத்துப் பொறி 10%

(iii) வராக் கடன் ரூ 250 நீக்கிவிடுக.

(iv) கொடுக்க வேண்டியவை :

அச்சுக் கூலி ரூ. 120; கூலி ரூ. 200.

(v) முதலீட்டின் மீது ரூ. 75 வட்டி பெற வேண்டியுள்ளது.

(vi) தள்ளுபடிக் காப்பையும் ஐயக் கடன் காப்பையும் கடனாளிகளில் முறையே 3%இலும் 5%இலும் வைத்திரு.

(vii) கடனீந்தோரில் 3% தள்ளுபடிக் காப்பு ஏற்படுத்துக.

(viii) எழுதுபொருள் இறுதியிருப்பு ரூ. 63 என மதிப்பிடப் பட்டது.

(ix) உரிமையாளர் தன் இல்லத்துக்கு எடுத்துக் கொண்ட சரக்கின் மதிப்பு ரூ. 330.

விடை :

சரிக்கட்டுப் பதிவுகள்

| | | பற்று | வரவு |
|---|---|---|---|
| | | ரூ. | ரூ. |
| இறுதிச் சரக்கிருப்புக் க/கு ... ப | | 9,304 | |
| வாணிகக் கணக்கு ... | | | 9,304 |
| (இறுதிச் சரக்கிருப்பைக் கணக்கில் கொண்டுவர) | | | |
| தேய்மானம் க/கு ... ப | | 750 — | |
| கட்டடம் க/கு ... | | | 600 — |
| தட்டெழுத்துப் பொறி க/கு ... | | | 150 — |
| (சொத்துகளில் தேய்மானம் நீக்க) | | | |
| வராக் கடன் க/கு ... ப | | 250 — | |
| கடனாளிகள் க/கு ... | | | 250 — |
| (வராக் கடன் நீக்க) ... | | | |

| | ரூ. | ரூ. |
|---|---|---|
| எழுது பொருள், அச்சுக் கூலி க/கு ... ப | 120— | |
| கூலி க/கு ... ப | 200— | |
| கொடுக்கப்பட வேண்டிய செலவு க/கு | | 320— |
| (கொடுக்க வேண்டிய செலவுகளைக் கணக்கிற் கொண்டுவர.) | | |
| பெற வேண்டிய வட்டி க/கு ப | 75— | |
| முதலீட்டின் மீது பெற்ற வட்டிக் க/கு | | 75— |
| (பெற வேண்டிய வட்டியைக் கணக்கில் கொண்டுவர) | | |
| ஐயக் கடன் காப்பு க/கு ... ப | 570— | |
| வராக் கடன் க/கு ... | | 570— |
| (வராக் கடன் கணக்கை ஐயக் கடன் காப்பிற்கு மாற்ற) | | |
| இலாப-நட்டக் கணக்கு ... ப | 695— | |
| ஐயக் கடன் காப்பு க/கு ... | | 695— |
| (ஐயக் கடன் காப்புக் கணக்கைக் கடனாளிகள் தொகையில் 5% அளவில் வைத்திருக்க) | | |
| இலாப-நட்டக் கணக்கு ... ப | 135— | |
| கடனாளிகளில் தள்ளுபடிக் காப்புக் க/கு | | 135— |
| (கடனாளிகளில் தள்ளுபடிக் காப்பைக் கடனாளிகள் தொகையில் 5% அளவில் வைத்திருக்க.) | | |
| பெற்ற தள்ளுபடிக் க/கு ... ப | 574— | |
| கடனீந்தோர் மீது தள்ளுபடிக் காப்பு க/கு ... ப | | 574— |
| (தள்ளுபடி பெற்றதைப் கடனீந்தோர்மீது தள்ளுபடிக் கணக்கிற்கு மாற்ற) | | |
| கடனீந்தோர் மீது தள்ளுபடிக் காப்புக் க/கு ... ப | 805— | |
| இலாப-நட்டக் க/கு ... | | 805— |
| (கடனீந்தோர் மீது தள்ளுபடிக் காப்பைக் கடனீந்தோர் தொகையில் 3% அளவில் வைத்திருக்க) | | |

| | | | |
|---|---|---|---|
| எழுதுபொருள் இருப்புக் க/கு ... ப | 63 — | | |
| எழுதுபொருள், அச்சுக் கூலி க/கு | | 63 — | |
| (எழுது பொருள் கையிருப்பைக் கணக்கிற் கொண்டுவர) | | | |
| எடுப்பு கணக்கு ... ப | 330 — | | |
| கொள்முதல் க/கு ... | | 330 — | |
| (உரிமையாளர் தன் இல்லத்திற்கு எடுத்துக் கொண்ட சரக்கைக் கணக்கிற் கொண்டுவர) | | | |

31-12-1971-ல் முடியும் ஆண்டுக்கான

கரிகாலனின் வாணிகக் கணக்கு

ப வ

| | | ரூ. | | | ரூ. |
|---|---|---|---|---|---|
| தொடக்கச் சரக்கிருப்பு | | 5,830 | விற்பனை ... | 61,353 | |
| கொள்முதல் ... | 40,875 | | கழி உட்திருப்பம் | 300 | 61,053 |
| கழி வெளித் திருப்பம் ... | 435 | | இறுதிச் சரக்கிருப்பு | | 9,304 |
| | 40,440 | | | | |
| கழி எடுப்பு ... | 330 | 40,110 | | | |
| உள்சுமை கூலி ... | | 120 | | | |
| கொள்முதல் மீது தீர்வை ... | | 540 | | | |
| வாணிகச் செலவு ... | | 350 | | | |
| இலாப-நட்டக் கணக்கு மொத்த இலாபம் எடுத்துச் செல்லப் படுகிறது. | | 23,407 | | | |
| | | 70,357 | | | 70,357 |

### கரிகாலனின்

### 31-12-1971-ல் முடியும் ஆண்டுக்கான இலாப-நட்டக் க/கு

| ப | | ரூ. | வ | | ரூ. |
|---|---|---|---|---|---|
| ஊதியமும் கூலியும் | 12,560 | | வாணிகக் கணக்கு, மொத்த இலாபம் கொண்டு வரப் படுகிறது. | | 23,407 |
| கூட்டு கொடுபட வேண்டியது | 200 | 12,760 | கழிவு | | 636 |
| அலுவலகச் செலவு | | 1,455 | முதலீட்டின் மீது வட்டி | 50 | |
| எழுது பொருளும் அச்சுக் கூலியும் | 278 | | கூட்டு பெற வேண்டிய வட்டி | 75 | 125 |
| கூட்டு அச்சுக்கூலி கொடுபட வேண்டியது | 120 | | பல்வகை வரவு | | 620 |
| | 398 | | கடனீந்தோர் மீது தள்ளுபடிக் காப்பு | 231 | |
| கழி எழுது பொருள் இருப்பு | 63 | 335 | கூட்டு தள்ளுபடி பெற்றது | 574 | 805 |
| ஈட்டுறுதி | | 300 | | | |
| விளம்பரம் | | 275 | | | |
| ஐயக் கடன் காப்பு | 500 | | | | |
| கூட்டு வராக் கடன் 320<br>நீக்க வேண்டியது 250 | 570 | | | | |
| | 1,070 | | | | |
| கழி பழைய ஐயக் கடன் காப்பு | 375 | 695 | | | |
| கடனாளிகளில் தள்ளுபடிக் காப்பு | 285 | | | | |
| கழி பழைய காப்பு | 150 | 135 | | | |
| தேய்மானம் : கட்டடம் | 600 | | | | |
| தட்டெழுத்துப் பொறி | 150 | 750 | | | |
| முதல் கணக்கு நிகர இலாபம் எடுத்துச் செல்லப்படுகிறது | | 8,888 | | | |
| | | 25,593 | | | 25,593 |

### கரிகாலனின் 31-12-1971-ற்கான இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | | ரூ. | சொத்துகள் | | ரூ. |
|---|---|---|---|---|---|
| முதல் கணக்கு | 22,000 | | கட்டடம் | 20,000 | |
| கழி எடுப்புக் கணக்கு 2,300 | | | கழி தேய்மானம் | 600 | 19,400 |
| கொள்முதல் 330 | 2,630 | | தட்டெழுத்துப் பொறி | 1,500 | |
| | 19,370 | | கழி தேய்மானம் | 150 | 1,350 |
| கூட்டு நிகர இலாபம் | 8,888 | 28,258 | மிதி வண்டி | | 525 |
| வங்கி மேல் வரைப் பற்று | | 6,700 | முதலீடு | | 2,500 |
| கடனீந்தோர் | 7,700 | | பெற வேண்டிய முதல் மீது வட்டி | | 75 |
| கழி தள்ளுபடிக் காப்பு | 231 | 7,469 | இறுதிச் சரக்கிருப்பு | | 9,304 |
| கொடுபட வேண்டியவை : | | | எழுது பொருள் இருப்பு | | 63 |
| அச்சுக் கூலி | 120 | | கடனாளிகள் | 10,250 | |
| கூலி | 200 | 320 | கழி வராக் கடன் | 250 | |
| | | | | 10,000 | |
| | | | கழி ஐயக் கடன் காப்பு | 500 | |
| | | | | 9,500 | |
| | | | கழி தள்ளுபடிக் காப்பு | 285 | 9,215 |
| | | | ரொக்கம் | | 315 |
| | | 42,747 | | | 42,747 |

எடுத்துக்காட்டு 50 :

செங்குட்டுவன் ஏடுகளிலிருந்து 30-6-71-ல் எடுக்கப்பட்ட இருப்புகள் கீழே தரப்பட்டுள்ளன. அவற்றிலிருந்து அந்நாளில் முடியும் ஆண்டுக்கான வாணிகக் கணக்கு, இலாப-நட்டக் கணக்கு, அந்நாளிற்கான இருப்பு நிலைக்குறிப்பு-இவற்றைத் தயாரிக்க :

| | | ரூ. |
|---|---|---|
| இலாப ஈவு | ... | 75 |
| ஏற்றுமதி வரி | ... | 1,230 |
| கடனீந்தோர் | ... | 12,370 |
| கட்டடம் | ... | 40,200 |
| கழிவு (வ) | ... | 470 |
| தள்ளுபடி அளித்தது | ... | 220 |
| ரொக்கம் | ... | 350 |
| வங்கி | ... | 10,548 |

| | | ரூ. |
|---|---|---|
| பயிற்சி பெறுநரிடம் பெற்ற முனைமம் | ... | 1,200 |
| ஒற்றிக் கடன் | ... | 7,500 |
| விடுகருவிகள் (Loose Tools) | ... | 1,700 |
| கூலி | ... | 7,200 |
| மனைத்துணைப் பொருள் | ... | 1,500 |
| சுமை கூலி | ... | 370 |
| எரிபொருள், நீர் முதலியவை | ... | 1,500 |
| கொள்முதல் | ... | 80,700 |
| விற்பனைத் திருப்பம் | ... | 1,100 |
| விற்பனை | ... | 1,20,273 |
| வராக்கடன் | ... | 500 |
| ஐயக்கடன் காப்பு | ... | 575 |
| விற்பனை வரி | ... | 1,300 |
| வரவுடைய உண்டியல் | ... | 5,375 |
| பல்வகை வரவு | ... | 450 |
| தொடக்க சரக்கிருப்பு | ... | 12,460 |
| பொறிவகை | .. | 17,800 |
| பயண விற்பனையாளர்க்குக் கொடுத்த கழிவு | ... | 1,200 |
| வாடகை | ... | 2,400 |
| ஊதியம் | ... | 7,500 |
| விளம்பரம் | ... | 560 |
| பங்குகள் (Shares) | ... | 1,000 |
| கடனாளிகள் | ... | 15,000 |
| ஈட்டுறுதி | ... | 1,200 |
| முதல் | ... | 70,000 |

கீழ்க் கொடுக்கப்பட்டவற்றைச் சரிக்கட்டுக :

1. ஐயக்கடன் காப்பினை ரூ. 750-க்கு உயர்த்துக.

2. ஈட்டுறுதி 30-8-1971-ல் முடியும் அரையாண்டுக்குச் செலுத்தப்பட்டிருந்தது.

3. பயிற்சி பெறுநரிடம் இவ்வாண்டில் பெற்றது மூன்று ஆண்டுகட்குரியது.

4. விடுகருவிகள் ரூ. 1,300 என மதிப்பிடப்பட்டது.

5. இறுதிச் சரக்கிருப்பு ரூ. 10,768.

6. 1-1-1971-ல் ரூ. 300-க்கு மனைத்துப் பொருள்கள் விற்கப்பட்டன. இது விற்பனைக் கணக்கில் பதிவாகியிருந்தது. இவற்றின் ஏட்டு மதிப்பு ரூ. 400.

7. தேய்மானம் கணக்கிடுக :

(1) பொறிவகை 5%, (2) மனைத்துணைப் பொருள் 10%

8. பொறியொன்றை நிறுவுவதற்குக் கொடுத்த கூலி ரூ. 200 கூலிக்கணக்கில் சேர்க்கப்பட்டிருந்தது.

9. 30-6-71-ல் வாங்கிய சரக்கு ரூ. 500 இறுதிச் சரக்கிருப்பில் சேர்க்கப்பட்டிருந்தும் கொள்முதல் ஏட்டில் பதிவாகி யிருக்கவில்லை.

விடை :

செங்குட்டுவனின்
30-6-71-ல் முடியும் ஆண்டுக்கான
வாணிகக் கணக்கு

| ப | | ரூ. | | | வ ரூ. |
|---|---|---|---|---|---|
| தொடக்கச் சரக்கிருப்பு | | 12,460 | விற்பனை | 1,20,273 | |
| கொள்முதல் | 80,700 | | கழி விற்பனைத் திருப்பம் | 1,100 | |
| கூட்டு கடனீந்தோர்— வாங்கியது, பதிவாகாதது | 500 | 81,200 | | 1,19,173 | |
| சுமை கூலி | | 370 | கழி மனைத்துணைப் பொருள் | 300 | 1,18,873 |
| கூலி | 7,200 | | இறுதிச் சரக்கிருப்பு | | 10,768 |
| கழி பொறி வகை | 200 | 7,000 | | | |
| எரி பொருள், நீர் | | 1,500 | | | |
| இலாப-நட்டக் க/கு—மொத்த இலாபம் எடுத்துச் செல்லப்படுகிறது | | 27,111 | | | |
| | | 1,29,641 | | | 1,29,641 |

செங்குட்டுவனின்

30-6-71-ல் முடியும் ஆண்டுக்கான

இலாப-நட்டக் கணக்கு

| ப | | ரூ. | வ | | ரூ. |
|---|---|---|---|---|---|
| ஊதியம் | | 7,500 | வாணிகக் கணக்கு—<br>மொத்த இலாபம்<br>கொண்டுவரப்<br>படுகிறது | | 27,111 |
| ஈட்டுறுதி | 1,200 | | இலாப ஈவு | | 75 |
| கழி முன் கூட்டிச் செலுத்தியது | 400 | 800 | கழிவு | | 470 |
| விளம்பரம் | | 560 | பயிற்சி பெறுநரின்<br>முனைமம் | 1,200 | |
| ஏற்றுமதி வரி | | 1,230 | கழி முன் கூட்டிப்<br>பெற்றது. | 800 | 400 |
| விற்பனை வரி | | 1,300 | பல்வகை வரவு | | 450 |
| பயண விற்பனையர்க் கழிவு | | 1,200 | | | |
| வாடகை | | 2,400 | | | |
| தள்ளுபடி | | 220 | | | |
| ஐயக் கடன் காப்பு | 750 | | | | |
| கூட்டு வராக் கடன் | 500 | | | | |
| | 1,250 | | | | |
| கழி பழைய ஐயக் கடன்<br>காப்பு | 575 | 675 | | | |
| தேய்மானம் | | | | | |
| வீடு கருவிகள் | 400 | | | | |
| மனைத்துணைப் பொருள் | 130 | | | | |
| பொறி வகை | 900 | 1,430 | | | |
| மனைத்துணைப் பொருள்<br>விற்றதில் நட்டம் | | 80 | | | |
| முதல் கணக்கு—<br>நிகர இலாபம் | | 11,111 | | | |
| | | 28,506 | | | 28,506 |

## செங்குட்டுவனின்
## 30-6-1971-க்கான இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | | ரூ. | சொத்துகள் | | ரூ. |
|---|---|---|---|---|---|
| முதல் | 70,000 | | கட்டடம் | | 40,200 |
| கூட்டு நிகர இலாபம் | 11,111 | 81,111 | பொறிவகை | 17,800 | |
| முன் கூட்டிப் பெற்ற பயிற்சி | | | கூட்டு பொறி | | |
| பெறுநரின் முனைமம் | | 800 | திருவியது | 200 | |
| ஏற்றிக் கடன் | | 7,500 | | 18,000 | |
| கடனீந்தோர் | 12,370 | | கழி தேய்மானம் | 900 | 17,100 |
| கூட்டு கொள்முதல் | | | மனைத்துணைப் | | |
| பதிவாகாதது | 500 | 12,870 | பொருள் | 1,500 | |
| | | | கழி தேய்மானம் | 130 | |
| | | | | 1,370 | |
| | | | கழி விற்றது (அடக்க | | |
| | | | விலை) | 380 | 990 |
| | | | விடு கருவிகள் | 1,700 | |
| | | | கழி தேய்மானம் | 400 | 1,300 |
| | | | பங்குகள் | | 1,000 |
| | | | முன் கூட்டிச் செலுத்திய | | |
| | | | ஈட்டுறுதி | | 400 |
| | | | இறுதிச் சரக்கிருப்பு | | 10,768 |
| | | | கடனாளிகள் | 15,000 | |
| | | | கழி ஐயக் கடன் | | |
| | | | காப்பு | 750 | 14,250 |
| | | | வரவுடைய உண்டியல் | | 5,375 |
| | | | வங்கி | | 10,548 |
| | | | ரொக்கம் | | 350 |
| | | 1,02,281 | | | 10,2,281 |

விளக்கம் :

1. மனைத்துணைப் பொருள் மீது தேய்மானம் :

| | | ரூ. | |
|---|---|---|---|
| ரூ. 1,500-க்கு 6 திங்கள் தேய்மானம் | ... | 75 | |
| ரூ. 1,100-க்கு 6 திங்கள் தேய்மானம் | ... | 55 | 130 |

2. மனைத்துணைப் பொருள் விற்றதில் நட்டம்

| | | ரூ. |
|---|---|---|
| ஏட்டு மதிப்பு | ... | 400 |
| கழி ஆறு திங்கள் தேய்மானம் | ... | 20 |
| | | 380 |
| கழி விற்றது | ... | 300 |
| விற்பனையில் ஏற்பட்ட நட்டம் | ... | 80 |

3. கொள்முதல் ஏட்டிலேயே பதிவாகாத காரணத்தால் கொள்முதலில் கூட்டிப் பின்னர்க் கடனீந்தோர் கணக்கிலும் கூட்ட வேண்டும்.

எடுத்துக் காட்டு 51:

செழியனின் பேரேடுகளிலிருந்து எடுக்கப்பட்ட இருப்புகள் கீழே தரப்பட்டுள்ளன.

| | | ரூ. |
|---|---|---|
| பொறிவகை | ... | 20,000 |
| மனைத்துணைப் பொருள் | ... | 5,500 |
| முதல் | ... | 57,300 |
| தயாரிப்புக் கூலி | ... | 17,000 |
| வாடகையும் சீட்டுறுதியும் | ... | 6,500 |
| ஊதியம் | ... | 12,000 |
| கடனாளிகள் | ... | 30,650 |
| கடனீந்தோர் | ... | 25,700 |
| வரவுடைய உண்டியல் | ... | 3,800 |
| தள்ளுபடி பெற்றது | ... | 300 |
| கழிவு அளித்தது | ... | 470 |
| தள்ளுபடி கொடுத்தது | ... | 250 |
| பயணச் செலவு | ... | 2,300 |
| கொள்முதல் | ... | 75,630 |
| விற்பனை | ... | 1,40,840 |
| விற்பனை வரி | ... | 4,500 |
| சரக்கிருப்பு (1-1-1971) | ... | 18,460 |
| லாரி | ... | 30,000 |
| வங்கி (வ) | ... | 15,250 |

| | | ரூ. |
|---|---|---|
| ரொக்கம் | ... | 740 |
| வைப்புத்தொகை (ப) | ... | 3,400 |
| செலுத்தவேண்டிய உண்டியல் | ... | 10,580 |
| அரசினர் கடன் பத்திரங்கள் | ... | 7,800 |
| எரி பொருள் | ... | 3,400 |
| எரிவளியும் நீரும் | ... | 2,500 |
| விளம்பரம் | ... | 4,200 |
| எழுதுபொருள் | ... | 870 |

கீழ்க் கண்டவற்றைச் சரிக்கட்டி, வாணிக, இலாப-நட்டக் கணக்குகளையும் 31-12-1971 - ற்கான இருப்பு நிலைக் குறிப்பையும் தயார் செய்க.

1. முத்து எழுதித் தந்த ரூ. 350-க்கான கடனுறுதிச் சீட்டுக்குப் பண மறுக்கப்பட்டு விட்டது. ஆனால், இதற்கான பதிவேதும் செய்யப் படவில்லை.

2. அரசினர் கடன் பத்திரங்கள்மீது பெற வேண்டிய வட்டி ரூ. 244.

3. முன் கூட்டிச் செலுத்திய ஈட்டுறுதி ரூ. 100.

4. தரவேண்டிய வாடகை ரூ. 250.

5. 1-7-1971-ல் ரூ. 500-க்கு மேசை நாற்காலிகள் வாங்கப்பட்டன. இதில் ரூ. 200-க்கானவற்றை உரிமையாளர் தன் இல்லத்துக்கு எடுத்துக் கொண்டார்.

6. கடனாளிகள் மீது 5% வராக் கடன் காப்பு ஏற்படுத்துக.

7. தேய்மானம் கணக்கிடுக:

பொறிவகை 5% ; மனைத்துணைப் பொருள் 6%.

8. தனது கழிவு கழிக்கப்பட்ட பின்னுள்ள நிகர் இலாபத்தில் 10% அலுவலக மேலாளருக்குத் தரவேண்டும்.

9. இறுதிச் சரக்கிருப்பு ரூ. 30,000.

விடை :

செழியனின்
31-12-1971-ல் முடியும் ஆண்டுக்கான
வாணிகக் கணக்கு

| ப | ரூ. | | வ ரூ. |
|---|---|---|---|
| தொடக்க சரக்கிருப்பு | 18,460 | விற்பனை | 1,40,840 |
| கொள்முதல் | 75,630 | இறுதிச் சரக்கிருப்பு | 30,000 |
| தயாரிப்புக் கூலி | 17,000 | | |
| எரிபொருள் | 3,400 | | |
| எரிவளியும் நீரும் | 2,500 | | |
| இலாப-நட்டக் க/கு மொத்த இலாபம் மாற்றப்படுகிறது. | 53,850 | | |
| | 1,70,840 | | 1,70,840 |

செழியனின்
31-12-1971-ல் முடியும் ஆண்டுக்கான
இலாப-நட்டக் கணக்கு

| ப | | ரூ. | | வ ரூ. |
|---|---|---|---|---|
| வாடகையும் ஈட்டுறுதியும் | 6,500 | | வாணிகக் கணக்கு- மொத்த இலாபம் மாற்றப்படுகிறது | 53,850 |
| கழி முன்கூட்டிச்செலுத்திய ஈட்டுறுதி | 100 | | தள்ளுபடி | 300 |
| | 6,400 | | அரசினர் கடன் பத்திரங்கள் மீது பெறவேண்டிய வட்டி | 244 |
| கூட்டு தர வேண்டிய வாடகை | 250 | 6,650 | | |
| ஊதியம் | | 12,000 | | |
| எழுது பொருள் | | 870 | | |
| பயணச் செலவு | | 2,300 | | |
| விளம்பரம் | | 4,200 | | |
| கழிவு | | 470 | | |
| விற்பனை வரி | | 4,500 | | |
| தள்ளுபடி | | 250 | | |
| ஐயக்கடன் காப்பு | | 1,550 | | |
| தேய்மானம் : | | | | |
| பொறிவகை | 1,000 | | | |
| மனைத்துணைப் பொருள் | 309 | | | |
| | | 1,309 | | |
| கொடுபட வேண்டிய அலுவலக மேலாளரின் கழிவு | | 1,845 | | |
| முதல் கணக்கு-நிகர இலாபம் மாற்றப் படுகிறது | | 18,450 | | |
| | | 54,394 | | 54,394 |

### 31-12-1971-ற்கான செழியனின்
### இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | | ரூ. | சொத்துகள் | | ரூ. |
|---|---|---|---|---|---|
| முதல் ... | 57,300 | | பொறிவகை... | 20,000 | |
| கூட்டு நிகர இலாபம் ... | 18,450 | | கழி : தேய்மானம் ... | 1,000 | 19,000 |
| | 75,750 | | மனைத்துணைப் பொருள் ... | 5,500 | |
| கழி : மனைத் துணைப் பொருள். ... | 200 | 75,550 | கழி : எடுப்பு... | 200 | |
| | | | | 5,300 | |
| வங்கி ... | | 15,250 | கழி : தேய்மானம் | 309 | 4,991 |
| செலுத்த வேண்டிய உண்டியல் | | 10,580 | லாரி ... | | 30,000 |
| கடனீந்தோர் ... | | 25,700 | அரசினர் கடன் பத்திரங்கள் | | 7,800 |
| தரவேண்டிய வாடகை ... | | 250 | அரசினர் கடன் பத்திரங்கள் மீது பெற வேண்டிய வட்டி | | 244 |
| கொடுபட வேண்டிய அலுவலக மேலாளரின் கழிவு ... | | 1,845 | முன் கூட்டிச் செலுத்திய ஈட்டுறுதி ... | | 100 |
| | | | இறுதிச் சரக்கிருப்பு ... | | 30,000 |
| | | | வைப்புத் தொகை ... | | 3,400 |
| | | | வரவுடைய உண்டியல் ... | 3,800 | |
| | | | கழி : பணமறுக்கப்பட்ட உண்டியல் ... | 350 | 3,450 |
| | | | கடனாளிகள் ... | 30,650 | |
| | | | கூட்டு : பணமறுக்கப்பட்ட உண்டியல் ... | 350 | |
| | | | | 31,000 | |
| | | | கழி : ஐயக் கடன் காப்பு ... | 1,550 | 29,450 |
| | | | ரொக்கம் ... | | 740 |
| | | 1,29,175 | | | 1,29,175 |

விளக்கக் குறிப்பு :

1. உண்டியலுக்குப் பண மறுக்கப்படவே, செய்ய வேண்டிய பதிவு :

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| (முத்து) கடனாளி க/கு | ... | ப 350 | |
| வரவுடையா உண்டியல் க/கு | ... | | 350 |

எனவே, வரவுடைய உண்டியலில் இத் தொகை கழிக்கப் பட்டுக், கடனாளிகளில் கூட்டப் பெறுகிறது.

2. மனைத்துணைப் பொருள் மீது தேய்மானம் கீழ்க்கண்ட வாறு கணக்கிடப் படுகிறது.

| | ரூ. |
|---|---|
| மனைத்துணைப் பொருள் (இருப்புப் பட்டியலின்படி) | 5,500 |
| கழி : எடுப்பு— உரிமையாளர் எடுத்துக் கொண்டது | 200 |
| | 5,300 |
| ரூ. 5000-க்கு ஓராண்டுத் தேய்மானம் 6% வீதம் ... | 300 |
| ரூ. 300-க்கான மனைத்துணைப் பொருள் 1-7-71-ல் வாங்கப்பட்டது. இதற்கு அரையாண்டுத் தேய்மானம் 6% வீதம் ... | 9 |
| | 309 |

3. அலுவலக மேலாளருக்குத் தர வேண்டிய கழிவு கீழ்க் கண்டவாறு கணக்கிடப்படுகிறது.

மேலாளர்க்குத் தரவேண்டிய கழிவுக்கு முன்னுள்ள இலாபம் ... ரூ. 20,295

(வரவுப் பகுதியிலிருந்து பற்றுப் பகுதி கழிக்கப்படின் கிடைக்கும் தொகை)

முன்னர் விளக்கியவாறு அலுவலக மேலாளரின் கழிவு இதில் $\frac{10}{110}$ ஆகும்.

அதாவது $= 20{,}295 \times \frac{10}{110} =$ ரூ. 1,845

எடுத்துக்காட்டு 52 :

கீழே தரப்பட்டுள்ள இருப்புகளிலிருந்து மாமல்லனின் 31-3-1971-ல் முடியும் ஆண்டுக்கான வாணிகக் கணக்கையும், இலாப-நட்டக் கணக்கையும் அந்நாளிற்கான இருப்பு நிலைக் குறிப்பையும் தயாரிக்க.

| | ரூ. |
|---|---|
| முதல் கணக்கு | ... 88,300 |
| எடுப்புக் கணக்கு | ... 4,500 |
| கட்டடம் | ... 33,800 |
| பொறிவகை | ... 20,600 |
| லாரி | ... 32,500 |
| தொன்முதல் | ... 90,200 |
| விற்பனை | ...1,35,670 |
| வெளிச்சுமை கூலி | ... 1,320 |
| ஊதியம் | ... 12,600 |
| விளம்பரம் | ... 3,700 |
| வராக் கடன் | ... 1,250 |
| விடுகருவிகள் | ... 5,475 |
| உட்திருப்பம் | ... 670 |
| வெளித்திருப்பம் | ... 200 |
| எரிவளி, நீர், எரிபொருள் முதலியவை | ... 2,575 |
| வங்கி (வ) | ... 10,040 |
| ரொக்கம் | ... 670 |
| கடனாளிகள் | ... 18,700 |
| கடனீந்தோர் | ... 15,640 |
| தொடக்கச் சரக்கிருப்பு | ... 10,580 |
| எழுது பொருள் | ... 758 |
| அலுவலகச் செலவு | ... 2,352 |

| | | ரூ. |
|---|---|---|
| பொதுச் செலவு | ... | 2,570 |
| அஞ்சல், தந்தி முதலியவை | ... | 850 |
| வட்டி பெற்றது | ... | 300 |
| ஈட்டுறுதி | ... | 1,200 |
| தயாரிப்புக் கூலி | ... | 10,000 |
| செலுத்த வேண்டிய உண்டியல் | ... | 5,470 |
| ஈட்டிய தள்ளுபடி | ... | 1,250 |

கீழ்க்கண்டவற்றைச் சரிக்கட்ட வேண்டும்.

1. இறுதிச் சரக்கிருப்பு ரூ. 7,645.
2. நிலவாடகை (Ground Rent) ரூ. 3,800. 1970-71-க்கும் 1971-72-க்கும் கட்டியது கட்டடக் கணக்கில் சேர்க்கப் பட்டுள்ளது.
3. தணிக்கையர் கட்டணம் தர வேண்டியது. ரூ. 750.
4. கனகனிடம் (கடனாளிகளில் அடங்கியுகிள்ளது) வரவேண் டியது ரூ. 600. இதில் ரூபாய்க்கு 30 காசுகளே கிடைக்கும் என்று தெரியவருகிறது.
5. கடனாளிகளில் 5% ஐயக் கடன் காப்பு ஏற்படுத்துக.
6. வங்கியில் தள்ளுபடி செய்யப்பட்ட ரூ. 480-க்கான உண்டி யலுக்குப் பண மறுக்கப்பட்டு விட்டதாக வங்கி அறிவித் திருக்கிறது. இதற்கான பதிவொன்றும் செய்யப்படவில்லை.
7. தீயில் அழிவுற்ற சாக்கின் மதிப்பு ரூ. 3800. இதில் ரூ. 2,565-ஐ ஈட்டுறுதிக்கம்பனி ஏற்றுக்கொண்டது. இன்னும் இதற்கான தொகையும் பெறவில்லை.
8. ரூ. 1200-க்கு 1-1-1971-ல் வாங்கிய மேசை நாற்காலிகள் பொதுச் செலவில் சேர்க்கப்பட்டுள்ளன.
9. தேய்மானங் கண்டுபிடி :

   (i) கட்டடம் 5% (ii) மனைத்துணைப் பொருள் 10% (iii) விடுகருவிகள் ரூ. 5000 என மதிப்பிடப் பட்டது.
10. முதல் மீது 5% வட்டி கணக்கிடுக.

விடை :

31-3-1971-ல் முடியும் ஆண்டுக்கான மாமல்லனின்
வாணிகக் கணக்கு

| ப | | ரூ. | | | வ ரூ. |
|---|---|---|---|---|---|
| தொடக்க சரக் | | | விற்பனை ... | 1,35,670 | |
| கிருப்பு ... | | 10,580 | கழி : உட் | | |
| கொள்முதல் ... | 90,200 | | திருப்பம்... | 670 | 1,35,000 |
| கழி : வெளித் | | | இறுதிச் சரக் | | |
| திருப்பம் ... | 200 | 90,000 | கிருப்பு ... | | 7,646 |
| தயாரிப்புக் கூலி | | 10,000 | தீயில் சரக் | | |
| எரிவளி, நீர்,எரி | | | கிழப்பு ... | | 3,800 |
| பொருள் | | 2,575 | | | |
| இலாப-நட்டக் கணக்கு | | | | | |
| மொத்த இலாபம் | | | | | |
| மாற்றப் | | | | | |
| படுகிறது ... | | 33,291 | | | |
| | | 1,46,446 | | | 1,46,446 |

31-3-1971ல் முடியும் ஆண்டுக்கான மாமல்லனின்

| ப | | இலாப-நட்டக் கணக்கு | | வ |
|---|---|---|---|---|
| | | ரூ: | | ரூ, |
| ஊதியம் | | 12,600 | வாணிகக் கணக்கு — மொத்த இலாபம் கொண்டுவரப் படுகிறது | 33,291 |
| அலுவலகச் செலவு | | 2,352 | வட்டி | 300 |
| எழுதுபொருள் | | 758 | ஈட்டிய தள்ளுபடி | 1,250 |
| அஞ்சல், தந்தி | | 850 | முதல் கணக்கு— நிகர நட்டம் மாற்றப் படுகிறது | 2,222 |
| ஈட்டுறுதி | | 1,200 | | |
| நில வாடகை | 3,800 | | | |
| கழி முன் கூட்டிச் செலுத்தியது | 1,900 | 1,900 | | |
| பொதுச் செலவு | 2,570 | | | |
| கழி மனைத்துணைப் பொருள் | 1,200 | 1,370 | | |
| விளம்பரம் | | 3,700 | | |
| வெளிச்சுமைக் கூலி | | 1,320 | | |
| செலுத்த வேண்டிய தணிக்கையர் கட்டணம் | | 750 | | |
| ஐயக்கடன் காப்பு | 938 | | | |
| கூட்டு : வராக் கடன் | 1250 | | | |
| ,, வராக்கடன் நீக்கியது | 420 | | | |
| | 1,670 | 2,608 | | |
| தீயில் சரக் கிழப்பு | 3,800 | | | |
| கழி : ஈட்டுறுதி கம்பனி ஏற்றது | 2,565 | 1,235 | | |
| முதல்மீது வட்டி | | 4,415 | | |
| தேய்மானம் : | | | | |
| கட்டடம் | 1,500 | | | |
| மனைத்துணைப் பொருள் | 30 | | | |
| கருவிக்கலன்கள் | 475 | 2,005 | | |
| | | 37,063 | | 37,063 |

### 31-3-1971-க்கான மாமல்லனின் இருப்புநிலைக் குறிப்பு.

| பொறுப்புகள் | | ரூ. | சொத்துகள் | | ரூ. |
|---|---|---|---|---|---|
| முதல் | 88,300 | | கட்டடம் | 33,800 | |
| கூட்டு முதல் மீது வட்டி | 4,415 | | கழி நில வாடகை | 3,800 | |
| | 92,715 | | | 30,000 | |
| கழி : நிகர நட்டம் | 2,222 | | கழி தேய்மானம் | 1,500 | 28,500 |
| | 90,493 | | பொறிவகை | | 20,600 |
| கழி : எடுப்பு | 4 500 | 85,993 | மனைத்துணைப் பொருள் | 1,200 | |
| | | | கழி : தேய்மானம் | 30 | 1,170 |
| கடனீந்தோர் | | 15,640 | லாரி | | 32,500 |
| வங்கி | 10,040 | | விடுகருவிகள் | 5,475 | |
| கூட்டு : பணமறுக்கப் பட்ட உண்டியல் | 480 | 10,520 | கழி : தேய்மானம் | 475 | 5,000 |
| செலுத்த வேண்டிய உண்டியல் | | 5,470 | முன் கூட்டிச் செலுத்திய நில வாடகை | | 1,900 |
| | | | ஈட்டுறுதிக் கம்பனி | | 2,565 |
| | | | இறுதி சரக்கிருப்பு | | 7,646 |
| செலுத்த வேண்டிய தனிக்கையர் கட்டணம் | | 750 | கடனாளிகள் | 18,700 | |
| | | | கூட்டு : பண மறுக்கப் பட்ட உண்டியல் | 480 | |
| | | | | 19,180 | |
| | | | கழி : வராக் கடன் | 420 | |
| | | | | 18,760 | |
| | | | கழி : ஐயக் கடன் காப்பு | 938 | 17,822 |
| | | | ரொக்கம் | | 670 |
| | | 1,18,373 | | | 1,18,373 |

விளக்கம் :

1. வராக் கடன் நீக்க வேண்டியது

கனகனிடம் பெற வேண்டியது ... ரூ. 600

இதில் ரூபாய்க்கு 30 காசுகளே கிடைக்கும்.

வராக் கடன் ரூபாய்க்கு ... 70 காசுகள்

ஆகவே வராக் கடன் ரூ. 600-க்கு...$600 \times \frac{70}{100} =$ ரூ. 420

2. வங்கியில் தள்ளுபடி செய்யப்பட்ட உண்டியல் ரூ. 480.

இதற்குப் பணம் மறுக்கப்பட்டு விட்டதால் தேவையான பதிவு:

கடனாளி க/கு ... ப 480

வங்கி ... 480

அதாவது, உண்டியல் ஏற்குநரை இப்பொழுது மீண்டும் கடனாளியாக்குகிறோம். எனவே, கடனாளிகள் கணக்கில் இத் தொகை கூட்டப்படுகிறது. அடுத்து வங்கிக் கணக்கில் வரவு வைக்க வேண்டும். முன்னரே வங்கி மேல்வரைப் பற்றாக உள்ளதால், அத்துடன் இத் தொகையைக் கூட்டிக் கொள்ள வேண்டும்.

3. தீயில் அழிவுற்ற சரக்கு

இறுதி நாளில் சரக்கு இருப்புக் கணக்கு எடுக்கு முன்னரே தீயில் சரக்கு அழிந்துவிட்டதால், இறுதிச் சரக்கிருப்பில் இது அடங்கியிராது.

தீயில் அழிந்த சரக்கை முன்னரே விளக்கியவாறு வாணிகக் கணக்கில் முழுத் தொகை ரூ. 3,800-ம் வரவு வைக்கப்படுகிறது. இதில் ஈட்டுறுதிக் கம்பனி ஏற்றுக்கொண்ட தொகை ரூ. 2,565 போக மீதியுள்ள ரூ. 1,235 நட்டம். எனவே, இத் தொகை இலாப-நட்டக் கணக்கில் பற்று வைக்கப்படுகிறது.

ஈட்டுறுதிக் கம்பனியிடம் பெற வேண்டிய தொகை இருப்பு நிலைக் குறிப்பில் சொத்துகள் பகுதியில் காட்டப்படுகிறது.

4. மனைத்துணைப் பொருள் 'தேய்மானம்'.

இது 1-1-1971-ல் வாங்கப்பட்டதால் தேய்மானம் 3 திங்கட்குக் கணக்கிடப்படுகிறது.

எடுத்துக்காட்டு 53 :

தமிழரசனின் ஏடுகளிலிருந்து 31-3-1971-ல் எடுக்கப்பட்ட இருப்புகள் கீழே தரப்பட்டுள்ளன. அவற்றிலிருந்து அவ் வாண்டுக் கான உற்பத்திக் கணக்கு, வாணிக, இலாப-நட்டக் கணக்கு, இருப்புநிலைக் குறிப்பு முதலியவற்றைத் தயார் செய்க.

| | | | ரூ. |
|---|---|---|---|
| ரொக்கம் | ... | | 540 |
| வங்கி | ... | | 8,260 |
| வராக் கடன் | ... | | 370 |
| ஆலைக் கட்டடம் | ... | | 70,250 |
| பொறி வகை | ... | | 50,000 |
| சரக்கிருப்பு (1-4-1970) | ... | | |
| கச்சாப் பொருள் | ... | 5,450 | |
| வேலை முற்றாப் பொருள் | ... | 12,720 | |
| முடிவுப் பொருள் | ... | 10,450 | |
| கடன் மீது வட்டி | ... | | 1,000 |
| விளம்பரம் | ... | | 2,780 |
| ஊதியம் | ... | | 12,875 |
| அலுவலகச் செலவு | ... | | 1,320 |
| முதலீட்டின் மீது வட்டி | ... | | 120 |
| வெளிச்சுமைக் கூலி | ... | | 565 |
| ஆலை மேளாளர் ஊதியம் | ... | | 9,600 |
| முதல் | ... | | 90,000 |
| எடுப்பு | ... | | 6,000 |
| கடனாளிகள் | ... | | 20,800 |
| கடனீந்தோர் | ... | | 28,750 |
| உரிமைத் தொகை (Royalty) | ... | | 3,000 |

| | | ரூ. |
|---|---|---|
| விற்பனை | ... | 1,35,420 |
| உட் திருப்பம் | ... | 1,750 |
| கொள்முதல் (கச்சாப் பொருள்) | ... | 40,870 |
| வெளித் திருப்பம் | ... | 1,870 |
| கூலி | ... | 12,000 |
| தள்ளுபடி பெற்றது | ... | 1,270 |
| எரிவளி, நீர் முதலியவை | ... | 5,475 |
| மின் செலவு (ஆலைக்கு ரூ. 4,000) | ... | 6,750 |
| கடன் 5% | ... | 30,000 |
| பொறி பழுது பார்க்குஞ் செலவு | ... | 1,200 |
| சில்லரை உற்பத்திச் செலவு | ... | 2,300 |
| முதலீடு | ... | 2,000 |
| பல்வகை வரவு | ... | 895 |

சரிக்கட்ட வேண்டியவை :

1. 31-3-1971-ல் இறுதிச் சரக்கிருப்பு கீழ்க் கண்டவாறு மதிப்பிடப்பட்டது.

   முடிவுப் பொருள் ... ரூ. 15,292

   வேலை முற்றுப் பொருள் ... ரூ. 10,200

   கச்சாப் பொருள் ... ரூ. 7,570

2. அலுவலக மேலாளருக்குக் கழிவு கழித்த பின்னுள்ள இலாபத்தில் 5% கழிவு தரவேண்டியுள்ளது.
3. முதல் மீது 5% வட்டியும், எடுப்பு மீது வட்டி ரூ. 100-ம் கணக்கிடப்பட வேண்டும்.
4. தேய்மானங் கண்டு பிடிக்க :

   கட்டடம் 2%; பொறி வகை 5%

5. முதலீட்டின் மீது கூடியுள்ள வட்டி ரூ. 100.
6. பொறி நிறுவக் கொடுத்த கூலி ரூ. 1,200 கூலிக் கணக்கில் அடங்கியுள்ளது.
7. சரக்கு திரும்ப வரப் பெற்றது ரூ. 200. இறுதிச் சரக்கிருப்பில் சேர்க்கப்பட்டும் விற்பனைத் திருப்ப ஏட்டில் பதிவாகவில்லை.

8. கடனாளிகள் 5% ஐயக் கடன் காப்பு ஏற்படுத்துக.

9. 1969-70-ல் கடன் வாங்கப்பட்டது. இதில் 1-10-70-ல் ரூ. 10,000 திருப்பி அடைக்கப்பட்டது.

விடை :

31-3-1971-ல் முடியும் ஆண்டுக்கான தமிழரசனின் (தயாரிப்பு) உற்பத்திக் கணக்கு

| ப | | | | வ |
|---|---|---|---|---|
| | | ரூ. | | ரூ. |
| தொடக்க சரக்கிருப்பு : | | | இறுதிச் சரக்கிருப்பு :— | |
| வேலை முற்றுப் பொருள் | | 12,720 | வேலை முற்றுப் பொருள் | 10,200 |
| பயன்படுத்திய கச்சாப் பொருள்— | | | முடிவுப் பொருள் உற்பத்திச் செலவு— வாணிகக் கணக்கிற்கு மாற்றப் படுகிறது ... | 79,740 |
| தொடக்க சரக்கிருப்பு | 5,450 | | | |
| கூட்டு கொள்முதல் | 40,870 | | | |
| கழி கொள்முதல் திருப்பம் | 1,870 | | | |
| | 39,000 | | | |
| | 44,450 | | | |
| கழி இறுதிச் சரக்கிருப்பு | 7,570 | 36,880 | | |
| கூலி | 12,000 | | | |
| கழி பொறி | 1,200 | 10,800 | | |
| ஆலை மேலாளரின் ஊதியம் | | 9,600 | | |
| மின் செலவு | | 4,000 | | |
| [illegible]ரிவளி, நீர் | | 5,475 | | |
| சில்லரை உற்பத்திச் செலவு | | 2,300 | | |
| பொறி பழுது பார்க்குஞ் செலவு | | 1,200 | | |
| உரிமைத் தொகை | | 3,000 | | |
| தேய்மானம் | | | | |
| கட்டடம் | 1,405 | | | |
| பொறி வகை | 2,560 | 3,965 | | |
| | | 89,940 | | 89,940 |

31-3-1971-ல் முடியும் ஆண்டுக்கான
தமிழரசனின் வாணிகக் கணக்கு

| ப | ரூ. | | வ | ரூ. |
|---|---|---|---|---|
| தொடக்க சரக்கிருப்பு— முடிவுப் பொருள் | 10,450 | விற்பனை 1,35,420 | | |
| | | கழி: உட் திருப்பம்- 1,750 | | |
| தயாரிப்புக் கணக்கு— முடிவுப் பொருள் உற்பத்திச் செலவு | 79,740 | கூட்டு: பதிவாகாதது 200 | 1,950 | 1,33,470 |
| இலாப-நட்டக் கணக்கு—மொத்த இலாபம் மாற்றப் படுகிறது | 58,572 | இறுதிச் சரக்கிருப்பு— முடிவுப் பொருள் | | 15,292 |
| | 1,48,762 | | | 1,48,762 |

31-3-1971-ல் முடியும் ஆண்டுக்கான தமிழரசனின்
இலாப-நட்டக் கணக்கு

| ப | | ரூ. | வ | | ரூ. |
|---|---|---|---|---|---|
| ஊதியம் | | 12,875 | வாணிகக் கணக்கு— மொத்த இலாபம் மாற்றப்படுறது | | 58,572 |
| அலுவலகச் செலவு | | 1,320 | முதலீட்டின் மீது வட்டி | 120 | |
| மின் செலவு | | 2,750 | கூட்டு: கூடியுள்ளது | 100 | 220 |
| விளம்பரம் | | 2,780 | தள்ளுபடி | | 1,270 |
| வெளிச்சுமை கூலி | | 565 | பல்வகை வரவு | | 895 |
| ஐயக்கடன் காப்பு | 1,030 | | எடுப்பு மீது வட்டி | | 100 |
| கூட்டு: வராக் கடன் | 370 | 1,400 | | | |
| கடன் மீது வட்டி | 1,000 | | | | |
| கூட்டு: கொடுபட வேண்டியது | 750 | 1,750 | | | |
| மூதல் மீது வட்டி | | 4,500 | | | |
| அலுவலக மேலாளருக்குத் தர வேண்டிய கழிவு | | 1,577 | | | |
| முதல் கணக்கு—நிகர இலாபம் மாற்றப் படுகிறது | | 31,540 | | | |
| | | 61,057 | | | 61,057 |

**31-3-1971-க்கான தமிழரசனின்**

**இருப்புநிலைக் குறிப்பு**

| பொறுப்புகள் | ரூ. | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| முதல் 90,000<br>கூட்டு: முதல் மீது வட்டி 4,500<br>,, நிகர இலாபம் 31,540 — 1,26,040<br>கழி: எடுப்பு 6,000<br>கூட்டு: எடுப்பு மீது வட்டி 100 — 6,100 | 1,19,940 | ஆலைக் கட்டடம் 70,250<br>கழி: தேய்மானம் 1,405 | 68,845 |
| | | பொறிவகை 50,000<br>கூட்டு: கூலி-பொறி நிறுவக் கொடுத்தது 1,200<br>51,200<br>கழி: தேய்மானம் 2,560 | 48,640 |
| | | முதலீடு | 2,000 |
| | | முதலீட்டின் மீது கூடியுள்ள வட்டி | 100 |
| கொடுபட வேண்டியவை:-<br>கடன் மீது வட்டி 750<br>அலுவலக மேலாளரின் கழிவு 1,577 | 2,327 | இறுதிச் சரக்கிருப்பு:-<br>கச்சாப் பொருள் 7,570<br>வேலைமுற்றுப் பொருள் 10,200<br>முடிவுப் பொருள் 15,292 | 33,062 |
| கடன் | 30,000 | கடனாளிகள் 20,800 | |
| கடனீந்தோர் | 28,750 | கழி: விற்பனைத் திருப்பம் 200<br>20,600<br>கழி: ஐயக் கடன் காப்பு 1,030 | 19,570 |
| | | வங்கி | 8,260 |
| | | ரொக்கம் | 540 |
| | 1,81,017 | | 1,81,017 |

விளக்கக் குறிப்பு:-

7. திரும்பிவந்த சரக்கு உட்திருப்பத்தில் சேர்க்கப்படாத தால் இதனையும் விற்பனையிலிருந்து கழிக்க வேண்டும். சரக்கு திருப்பப்பட்டு விட்டதால் கடனாளிகள் தொகை இதனால் குறையும். தேவையான பதிவு :

உட்திருப்பக் கணக்கு... ப

· கடனாளிகள் கணக்கு.

9. கடன் மீது செலுத்த வேண்டிய வட்டி கீழ்க்கண்டவாறு கணக்கிடப்படுகிறது.

1-10-70ல் ரூ. 10,000 திருப்பி யடைக்கப்பட்டு விட்ட தால், 1-10-70 வரை ரூ. 40,000 மீது 5%ல் 6 திங்களிற் கான வட்டி.........$40,000 \times \frac{5}{100} \times \frac{6}{12} =$ ரூ. 1,000

1-10-70 முதல் 31-3-71 வரை ரூ. 30,000 மீது 5%ல்

6 திங்களிற்கான வட்டி...$30,000 \times \frac{5}{100} \times \frac{6}{12} =$ ரூ. 750

| | |
|---|---|
| மொத்த வட்டி | ரூ. 1,750 |
| வட்டி கொடுத்தது | ரூ. 1,000 |
| ∴ வட்டி கொடுபட வேண்டியது | ரூ. 750 |

வினாக்கள்

1. இறுதிக் கணக்குகள் தயாரிக்கப்படும் போழ்து, சரிக்கட்ட வேண்டியதின் தேவையை விளக்குக.
2. தேய்மானம் ஏன் ஒதுக்கப்பட வேண்டும்?
3. ஐயக் கடன் காப்பு ஏன் ஏற்படுத்த வேண்டும்? அதன் முறையை விளக்கிக் கூறுக.
4. சிறு குறிப்பு வரைக :
   (i) கொடுபட வேண்டிய செலவினம்.
   (ii) முன் கூட்டிச் செய்த செலவு.
   (iii) கூடிய வருமானம் (Accrued Income)
   (iv) பயிற்சி பெறுநரின் முனைமம்.

1. 1965 டிசம்பர் 31 ல் x y z -இன் கடனாளிகள் தொகை ரூ. 50,000 ஆக இருந்தது. ஐயக் கடன் காப்பு 5% அளவில் வைக்கப்பட்டது. 1966-ல் வராக்கடன் நீக்கப்பட்டது ரூ. 1400 ஆகும். 1966 டிசம்பர் 31-ல் கடனாளிகள் தொகை ரூ 40,000 மாக இருந்தது. 1967-ல் வராக் கடன் ரூ. 600. 1967 டிசம்பர் 31-ல் இருந்த கடனாளிகள் தொகை ரூ. 25,000. ஐயக் கடன் காப்பு 5% அளவில் வைக்கப்பட்டிருந்தது.

1966-1967 ஆம் ஆண்டுகட்கான வராக்கடன் கணக்கு, ஐயக்கடன் காப்புக் கணக்கு இவற்றைக் காட்டவும்.

(C A II B Nov. 1968)

2. 1966 சனவரி1-ல் ஐயக் கடன் காப்புக் கணக்கு ரூ. 5,000 வரவிருப்பைக் காட்டியது. 1966-ஆம் ஆண்டில் வராக் கடன் நீக்கப்பட்டது ரூ. 4,000. 1966 டிசம்பர் 31-ல் கடனாளிகள் தொகை ரூ. 50,000 மாக இருந்தது. ஐயக் கடன் காப்பை 4%ல் வைத்திருக்க வேண்டும். 1967 லும் 1968லும் வராக் கடன் முறையே ரூ. 1,500 ஆகவும் ரூ 1,000 மாகவும் இருந்தது. முன்னரே நீக்கப்பட்டிருந்த வராக் கடன் ரூ. 500, 1967-ல் திரும்பப் பெறப்பட்டது. 31-12-1967 லும் 31-12-1968 லும் கடனாளிகள் தொகை முறையே ரூ. 90,000 ஆகவும் ரூ. 60,000 ஆகவும் இருந்தது. இவ்வாண்டுகளில் ஐயக் கடன் காப்பை 5% அளவில் வைத்திருக்க வேண்டும்.

1966,1967,1968 ஆம் ஆண்டுகட்கான ஐயக் கடன் காப்புக் கணக்கைத் தயாரிக்கவும்.

(Company Secretary Exam. Prely. Oct. 1969)

3. கணேசனின் 31-3-1963-க்கான இருப்புநிலைக் குறிப்பில் பற்பல கடனாளிகள் தொகை கீழ்க்கண்டவாறு இருந்தது.

| | | |
|---|---|---|
| பற்பல கடனாளிகள் தொகை | ரூ. | 10,400 |
| கழி: ஐயக்கடன் காப்பு | ரூ. | 520 |
| | | 9,880 |
| கழி: தள்ளுபடிக் காப்பு | ரூ. | 494 |
| | ரூ. | 9,386 |

1963-64-ல் வராக் கடன் ரூ. 1,100; தள்ளுபடி அளித்தது ரூ. 300. 31-3-1964-ல் கடனாளிகளின் மொத்தத் தொகை ரூ.11,200.

ஐயக் கடன் காப்பை 5%லும் தள்ளுபடிக் காப்பை 2%லும் வைத்திருக்க வேண்டும். முதற் குறிப்பேடு, பேரேட்டுக் கணக்குகள், இலாப-நட்டக் கணக்கு, இருப்புநிலைக் குறிப்பு ஆகியவற்றில் செய்யப்படும் பதிவுகளைத் தருக.

(M. U. April, 1964)

4. 31-12-1971-ல் முடியும் ஆண்டுக்கான வாலறிவனின் வாணிக, இலாப-நட்டக் கணக்குகளையும் அந்நாளுக்குரிய இருப்பு நிலைக் குறிப்பையும் கீழ்க் கண்ட விவரங்களிலிருந்து தயார் செய்க.

| | | ரூ |
|---|---|---|
| கட்டடம் | ... | 25,000 |
| மனைத்துணைப் பொருள் | ... | 3,200 |
| கடனீந்தோர் | ... | 12,600 |
| கொள் முதல் | ... | 50, 250 |
| விற்பனை | ... | 85,369 |
| ஊதியம் | ... | 6,400 |
| ஈட்டுறுதி | ... | 600 |
| கூலி | ... | 6,000 |
| தள்ளுபடி பெற்றது | ... | 2 40 |
| கழிவு கொடுத்தது | ... | 500 |
| பயணச் செலவு | ... | 456 |
| உட் திருப்பம் | ... | 1,378 |
| வெளித் திருப்பம் | ... | 250 |
| கடனாளிகள் | ... | 15,000 |
| ரொக்கம் | ... | 372 |
| வங்கி மேல்வரைப் பற்று | ... | 4,644 |
| செலுத்த வேண்டிய உண்டியல் | ... | 2,500 |
| தட்டெழுத்துப் பொறி | ... | 1,300 |
| தொடக்கச் சரக்கிருப்பு | ... | 7,890 |

| | | ரூ. |
|---|---|---|
| சுமை கூலி | ... | 210 |
| வாணிகச் செலவு | ... | 1,300 |
| வராக் கடன் | ... | 150 |
| வருமான வரி | ... | 647 |
| விற்பனை வரி | ... | 1,200 |
| முதலீடு | ... | 4,000 |
| இலாப ஈவு | ... | 150 |
| முதல் | ... | 20,100 |

கீழ்க் கண்டவற்றைச் சரிக்கட்டுக.

1. இறுதிச் சரக்கிருப்பு ரூ. 10, 570 என மதிப்பிடப்பட்டது.
2. கொடுக்கப் படவேண்டியவை:
   - (i) கூலி ரூ. 300
   - (ii) விற்பனை வரி ரூ. 150
   - (iii) விளம்பர வரி ரூ. 250
3. தேய்மானம் கண்டு பிடிக்க.
   - (i) கட்டடம் 2%
   - (ii) தட்டெழுத்துப் பொறி 10%
   - (iii) மனைத்துணைப் பொருள் 5%
4. விற்பனை வரி ரூ. 170 முன்கூட்டிச் செலுத்தப் பட்டிருந்தது.
5. முதல் மீது 5% வட்டி கணக்கிடுக.
6. இலாப ஈவு பெற வேண்டியது ரூ. 50.
7. கடனாளிகள் தொகையில் 5% ஐயக்கடன் காப்பு ஏற்படுத்துக.

5. வள்ளுவனின் ஏடுகளிலிருந்து எடுக்கப்பட்ட இருப்புகள் கீழ்த் தரப்பட்டுள்ளன. அவற்றிலிருந்து 30-6-71-ல் முடியும் ஆண்டுக்கான வாணிக, இலாப-நட்டக் கணக்குகளையும் அந் நாளுக்கான இருப்பு நிலைக் குறிப்பையும் தயாரிக்க.

| | | ரூ. |
|---|---|---|
| கொள்முதல் | ... | 70,875 |
| உட்திருப்பம் | ... | 1,230 |
| விற்பனை | ... | 1,01,760 |
| வெளித் திருப்பம் | ... | 375 |
| கூலி | ... | 12,500 |
| முதல் | ... | 45, 607 |
| ஊதியம் | ... | 16, 450 |
| மனைத்துணைப் பொருள் | ... | 5,400 |
| முதலீடு | ... | 5,000 |
| கடனீந்தோர் | ... | 10,670 |
| வங்கி மேல் வரைப் பற்று | ... | 8,878 |
| வரவுடைய உண்டியல் | ... | 3,200 |
| செலுத்த வேண்டிய உண்டியல் | ... | 4,562 |
| வருமான வரி | ... | 1,875 |
| வெளிச்சுமை கூலி | ... | 570 |
| வாடகையும் வரியும் | ... | 4,750 |
| தள்ளுபடி (வ) | ... | 1,200 |
| கழிவு | ... | 1,504 |
| பயணச் செலவு | ... | 756 |
| கடனாளிகள் | ... | 15,200 |
| ரொக்கம் | ... | 378 |
| விளம்பரச் செலவு | ... | 671 |
| கட்டுக் கூலி (Packing Charges) | ... | 475 |

| | | ரூ. |
|---|---|---|
| அலுவலகச் செலவு | ... | 3,270 |
| கடன் மீது பெற்ற வட்டி | ... | 500 |
| சரக்கிருப்பு (1-7-70) | ... | 12,475 |
| வராக் கடன் காப்பு | ... | 627 |
| கடன் வழங்கியது | ... | 10,000 |
| வைப்புத் தொகை பெற்றது | ... | 2,500 |
| முதலீட்டின் மீது வட்டி | ... | 150 |
| காரி | ... | 10,250 |

சரிக்கட்டுக:

(1) 30-6-1971-ல் இறுதிச் சரக்கிருப்பு ரூ. 13, 857 என மதிப்பிடப் பெற்றது.

(2) வராக் கடன் காப்பினை ரூ. 760-க்கு உயர்த்துக.

(3) அலுவலகச் செலவில் 1-1-1971-ல் ரூ. 1,700க்கு வாங்கிய தட்டெழுத்துப் பொறி அடங்கியுள்ளது.

(4) முன் கூட்டிச் செலுத்திய வாடகை ரூ. 150.

(5) முதலீட்டின் மீது பெறவேண்டிய வட்டி ரூ. 125.

(6) 1-10-1970ல் 10% வட்டிக்குக் கடன் ரூ. 10,000 வழங்கப் பட்டது.

(7) தட்டெழுத்துப் பொறி மீது 10% தேய்மானங் கணக்கிடுக.

6. கீழ்க் கொடுக்கப்பட்டிருக்கும் இளங்கோவின் இருப்புப் பட்டியலிலிருந்து 31-12-1971-ல் முடியும் ஆண்டுக்கான வாணிக, இலாப-நட்டக் கணக்குகளையும், அந் நாளிற்கான இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| நிலமும் கட்டடமும் | ... | 55,000 | |
| ரொக்கம் | ... | 378 | |
| வங்கி (வ) | ... | | 10,875 |
| கூலி | ... | 11,560 | |

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| ஊதியம் | ... | 12,370 | |
| சரக்கிருப்பு (1-1-1971) | ... | 15,644 | |
| உள் சுமை கூலி | ... | 345 | |
| கழிவு பெற்றது | ... | | 370 |
| சில்லரைச் செலவுகள் | ... | 1,270 | |
| வாடகையும் வரியும் | ... | 3,780 | |
| பொறி வகை | ... | 35,000 | |
| மனைத்துணைப் பொருள் | ... | 4,760 | |
| விளம்பரம் | ... | 2,500 | |
| எழுது பொருள் | ... | 970 | |
| கொள்முதல் | ... | 90,870 | |
| விற்பனை | ... | | 1,50,892 |
| உட்திருப்பம் | ... | 1,350 | |
| பல்வகை வரவு | ... | | 757 |
| இலாப ஈவு | ... | | 200 |
| கடனாளிகள் | ... | 28,100 | |
| கடனீந்தோர் | ... | | 32,000 |
| பெற்றக் கடன் | ... | | 12,500 |
| வாணிகச் செலவு | ... | 765 | |
| முதல் | ... | | 61,000 |
| எடுப்பு | ... | 4,800 | |
| ஐயக்கடன் காப்பு | ... | | 1,300 |
| தள்ளுபடிக் காப்பு | ... | | 858 |
| பயணச் செலவு | ... | 570 | |
| ஈட்டுறுதி | ... | 720 | |
| | | 2,70,752 | 2,70,752 |

கீழ்க் கண்டவற்றைச் சரிக்கட்டுக:

(i) ரூ. 250 வாடகை முன்கூட்டிச் செலுத்தியது.

(ii) முதல் மீது 5% வட்டி கணக்கிடுக.

(iii) எடுப்பு மீதான வட்டி ரூ. 90.

(iv) வராக் கடன் ரூ. 100 நீக்குக.

(v) ஐயக் கடன் காப்பினையும், தள்ளுபடிக் காப்பினையும் கடனாளிகள் தொகையில் 5% லும் 3% லும் வைத்திடு.

(vi) கடனீந்தோரில் 2% தள்ளுபடிக் காப்பு ஏற்படுத்துக.

(vii) ரூ. 500 மதிப்புள்ள பொருள்கள் சரக்கிலிருந்து எடுத்து இனமாக விளம்பரத்திற்கென கொடுக்கப் பட்டன. இதற்கான பதிவேதும் காணப்படவில்லை.

(viii) இறுதிச் சரக்கிருப்பு ரூ. 19,565 என மதிப்பிடப் பட்டது.

(ix) தேய்மானம் கண்டுபிடி.

(1) கட்டடம் 3% (2) பொறிவகை 5%

(x) செலுத்த வேண்டிய விற்பனை வரி ரூ. 475 ஆகும்.

7. 30-6-1971-ல் திரு. சாத்தனாரின் ஏடுகளிலிருந்து எடுக்கப் பட்ட இருப்புகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

| | | ரூ |
|---|---|---|
| கடனாளிகள் | ... | 12,500 |
| கடனீந்தோர் | ... | 8,500 |
| தட்டெழுத்துப் பொறி | ... | 1,500 |
| ரொக்கம் | ... | 360 |
| வங்கி | ... | 5,600 |
| தொடக்கச் சரக்கிருப்பு | ... | 14,870 |
| கொள்முதல் | ... | 30,650 |
| வெளித் திருப்பம் | ... | 150 |
| விற்பனை | ... | 56,055 |

| | | ரூ. |
|---|---|---|
| ஊதியமும் கூலியும் | ... | 11,760 |
| தள்ளுபடி பெற்றது | ... | 150 |
| கழிவு கொடுத்தது | ... | 475 |
| கழிவு பெற்றது | ... | 300 |
| செலுத்த வேண்டிய உண்டியல் | ... | 5,650 |
| சரக்கற்றுஞ் செலவு | ... | 540 |
| பழுது பார்க்குஞ் செலவு | ... | 360 |
| ஐயக் கடன் காப்பு | ... | 720 |
| வராக் கடன் | ... | 200 |
| 6% கடன் (ப) | ... | 4,000 |
| முதல் | ... | 17,000 |
| வாடகை | ... | 2,400 |
| வருமான வரி | ... | 960 |
| விற்பனை வரி | ... | 750 |
| வங்கி மேல் வரைப்பற்று மீதான வட்டி | ... | 120 |
| கொள்முதல் மீது இரயில் கட்டணம் | ... | 270 |
| மனைத்துணைப் பொருள் | ... | 1,200 |
| கடன் மீது பெற்ற வட்டி | ... | 160 |
| எழுது பொருள் | ... | 170 |

கீழ்க்கண்டவற்றைச் சரிக்கட்டி 30-6-71-ல் முடியும் ஆண்டுக்கான வாணிக, இலாப-நட்டக் கணக்குகளையும் அந் நாளுக்குரிய இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

(i) இறுதிச் சரக்கிருப்பு ... ரூ. 18,760.

(ii) கடன் மீது இரு திங்கள் வட்டி வரவேண்டியுள்ளது.

(iii) கூலி ரூ. 300-ம் வாடகை ரூ. 100-ம் தரவேண்டியுள்ளது.

(iv) மேலாளருக்கு நிகர இலாபத்தில் 7% கழிவு சேர வேண்டியுள்ளது.

(v) சரக்கு அனுப்பப்பட்டும் விற்பனை ஏட்டில் எழுதப் பெறாச் சரக்கின் மதிப்பு ரூ. 500.

(vi) எழுது பொருள் கையிருப்பு ரூ. 60.

(vii) வராக் கடன் காப்பைக் கடனாளிகளில் 5%-ல் வைத்திரு.

(viii) ரூ. 500 மதிப்புள்ள மேசை நாற்காலிகள் 1-1-71-ல் வாங்கப்பட்டன.

(ix) மனைத்துணைப் பொருள் மீது 5%-ம் தட்டெழுத்துப் பொறி மீது 10%-ம் தேய்மானம் கண்டு பிடிக்க.

8. 31-3-1971-ற்கான பூங்குன்றனின் இருப்புப் பட்டியல் கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| முதல் | ... | | 40,815 |
| எடுப்பு | ... | 5,000 | |
| சரக்கிருப்பு (1-4-1970) | ... | 14,800 | |
| விற்பனை | ... | | 1,20,820 |
| கொள்முதல் | ... | 70,675 | |
| கூலி | ... | 10,000 | |
| வெளிச் சுமை கூலி | ... | 720 | |
| லாரி கட்டணம் | ... | 1,250 | |
| அஞ்சலும் தந்தியும் | ... | 670 | |
| அலுவலகச் செலவு | ... | 1,330 | |
| கட்டுச் செலவுகள் | ... | 560 | |
| தள்ளுபடி | ... | 320 | 180 |
| கட்டடம் | ... | 23,800 | |
| கார் | ... | 15,400 | |
| வங்கி | ... | 6,400 | |
| ரொக்கம் | ... | 175 | |
| வாடகையும் ஈட்டுறுதியும் | ... | 2,475 | |
| வட்டியும் வங்கிக் கட்டணமும் | ... | 120 | |
| கழிவு | ... | | 460 |
| புனைப் பொருள் உரிமை | ... | 5,000 | |

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| முதலீடு | ... | 7,000 | |
| சுகவனத்திடம் பெற்ற கடன் | ... | | 10,200 |
| தொழில் நற் பெயர் (Goodwill) | ... | 7,500 | |
| வரவுடைய உண்டியல் | ... | 3,800 | |
| கடனாளிகள் | ... | 12,600 | |
| செலுத்த வேண்டிய உண்டியல் | ... | | 4,620 |
| கடனீந்தோர் | ... | | 14,000 |
| உரிமங்களும் வரியும் | ... | 1,500 | |
| | | 1,91,095 | 1,91,095 |

கீழ்க் கொடுக்கப்பட்டவற்றைச் சரிக்கட்டி 31-3-1971-ல் முடியும் ஆண்டுக்கான வாணிக, இலாப-நட்டக் கணக்குகளையும் இந் நாளிற்கான இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

(i) தன் இல்லத்துக்கு எடுத்துக் கொண்ட சரக்கின் மதிப்பு ரூ. 175.

(ii) வாடிக்கையாளரிடம் பெற்ற ரூ. 400-க்கான காசோலைக் குப் பண மறுக்கப்பட்டும் ரொக்க ஏட்டில் 31-3-1971 அன்று பதிவாகி யிருக்கவில்லை.

(iii) தேய்மானம் கண்டு பிடிக்க.

(1) கட்டடம் ... 5% (2) கார் ... 10%

(iv) வாடகை செலுத்த வேண்டியது ரூ. 170.

(v) ஈட்டுறுதி ரூ. 75 முன்கூட்டிச் செலுத்தப்பட்டிருந்தது.

(vi) முதலீட்டின்மீது ரூ. 250 வட்டி பெற வேண்டியுள்ளது.

(vii) ரூ. 300 ஏட்டு மதிப்புள்ள மனைத்துணைப் பொருள்கள் ரூ. 170-க்கு விற்கப் பட்டிருந்தன.

(viii) இறுதிச் சரக்கிருப்பின் மதிப்பு ரூ. 12,535.

9. கீழ்க் கொடுக்கப் பட்டவைகளைச் சரிக்கட்டிக் கீழே ... பட்டுள்ள இருப்புகளிலிருந்து, புகழேந்தியின் 31-10-1971-ல் முடியும் ஆண்டுக்கான வாணிக, இலாப-நட்டக் கணக்குகளையும் 31-10-1971-ற்கான இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

(i) இறுதிச் சரக்கிருப்பு ரூ. 12,756 என மதிப்பிடப்பட்டது.

(ii) ஐயக்கடன் காப்பினை ரூ. 175 ஆல் உயர்த்துக.

(iii) கடனாளிகள் மீதும், கடனீந்தோர் மீதும் 2% தள்ளுபடிக் காப்பு ஏற்படுத்துக.

(iv) 25-10-1971-ல் கிடங்கில் தீப்பிடிக்க ரூ. 2,785 மதிப்புள்ள சரக்குகள் அழிந்துவிட்டன.

(v) விற்பனைவரி ரூ. 200 முன் கூட்டிச் செலுத்தப் பட்டிருந்தது.

(vi) கடன் மீது வட்டி தரப்படவில்லை. கடன் 1-7-1971-ல் வாங்கப்பட்டது.

(vii) விடுகருவிகளின் மதிப்பு ரூ. 3000 எனத் தீர்மானிக்கப் பட்டது.

(viii) கழிவு கொடுக்கப்பட்டபின் உள்ள நிகர இலாபத்தில் 5% வீதம் மேலாளருக்குக் கழிவு தர வேண்டியுள்ளது.

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| கொள் முதல் | ... | 54,820 | |
| முதல் | ... | | 45,159 |
| எடுப்பு | ... | 5,400 | |
| மனைத்துணைப் பொருள் | ... | 3,800 | |
| கடன் 9% வட்டியில் | ... | | 8,000 |
| ஊதியம் | ... | 10,800 | |
| சுமை கூலி | ... | 345 | |
| பொதுச் செலவு | ... | 1,234 | |
| பொறிவகை | ... | 27,400 | |
| நகராட்சி வரியும் வாடகையும் | ... | 3,945 | |
| தள்ளுபடி | ... | 210 | |
| கழிவு | ... | | 740 |
| ஐயக் கடன் காப்பு | ... | | 625 |
| கடனீந்தோர் | ... | | 16,850 |
| கடனாளி | ... | 15,350 | |
| தொடக்கச் சரக்கிருப்பு | ... | 9,654 | |
| விடுகருவிகள் | ... | 3,270 | |
| ரொக்கம் | ... | 349 | |

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| வங்கி | ... | 8,370 | |
| சரக்குத் திருப்பம் | ... | 4,850 | 3,640 |
| விற்பனை வரி | ... | 2,375 | |
| விளம்பரம் | ... | 1,800 | |
| கார் | ... | 15,420 | |
| விற்பனை | ... | | 94,378 |
| | | 1,69,392 | 1,69,392 |

10. கீழ்க் கொடுக்கப்பட்ட இருப்புகளிலிருந்து ஒட்டக் கூத்தரின் வாணிக, இலாப-நட்டக் கணக்குகளையும், *31-12-1970*-க்கான இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

| | | ரூ. |
|---|---|---|
| முதல் | ... | 45,400 |
| தொடக்கச் சரக்கிருப்பு | ... | 20,540 |
| வரவுடைய உண்டியல் | ... | 10,600 |
| உள்சுமை கூலி | ... | 1,150 |
| கூலியும் ஊதியமும் | ... | 25,160 |
| கழிவு பெற்றது | ... | 2,375 |
| கட்டடம் | ... | 40,870 |
| பொதுச் செலவு | ... | 2,300 |
| பழுது பார்க்குஞ் செலவு | ... | 2,450 |
| விற்பனை | ... | 1,90,745 |
| வெளித்திருப்பம் | ... | 3,870 |
| தொலைபேசியும் அஞ்சலும் | ... | 1,270 |
| வங்கிக் கட்டணம் | ... | 175 |
| வைப்புத் தொகை (ப) | ... | 5,500 |
| தள்ளுபடி அளித்தது | ... | 450 |
| தள்ளுபடி பெற்றது | ... | 375 |
| மனைத்துணைப் பொருள் | ... | 3,500 |
| ஒற்றிக் கடன் | ... | 10,470 |

| | | ரூ. |
|---|---|---|
| வங்கி | ... | 7,856 |
| ரொக்கம் | ... | 344 |
| கொள் முதல் | ... | 1,10,200 |
| வராக் கடன் | ... | 1,270 |
| கடனாளிகள் | ... | 40,300 |
| கடனீந்தோர் | ... | 37,850 |
| ஈட்டுறுதி | ... | 1,800 |
| கழிவு கொடுத்தது | ... | 350 |
| கார் | ... | 15,000 |

கீழ்க் கண்டவற்றிற்குச் சரிக்கட்ட வேண்டும்.

(i) *31-3-1971*-ல் முடியும் ஆண்டுக்கு *1-4-1970*-ல் ஈட்டுறுதி கட்டப்பட்டிருந்தது.

(ii) *1-10-1970*-ல் ரூ. *500* ஏட்டு மதிப்புள்ள மனைத்துணைப் பொருள்கள் ரூ. *300*-க்கு விற்கப்பட்டன.

(iii) பொதுச் செலவில் எழுதுபொருள் ரூ. *150*-க்கு வாங்கியது அடங்கியுள்ளது.

(iv) கழிவு அதிகங் கொடுத்து விட்டது ரூ. *50*.

(v) கொடுக்கப்பட வேண்டியவை :

கூலி ரூ. *200*; விளம்பரச் செலவு ரூ. *150*.

(vi) இறுதிச் சரக்கிருப்பு ரூ. *23,750* என மதிப்பிடப் பட்டது.

(vii) *31-12-1970*-ல் எழுதுபொருள் கையிருப்பு ரூ. *30*.

*11.* வேண்டிய சரிக்கட்டுப் பதிவுகளைச் செய்து, *31-3-1971*-ல் முடியும் ஆண்டுக்கான அப்பரின் வாணிக, இலாப-நட்டக் கணக்குகளையும், அந்நாளிற்கான இருப்பு நிலைக் குறிப்பையும் தயார் செய்க.

| | | ரூ |
|---|---|---|
| முதல் கணக்கு | ... | 30,000 |
| எடுப்புக் கணக்கு | ... | 5,800 |
| கட்டடம் | ... | 20,600 |

| | | ரூ. |
|---|---|---|
| வெளிச்சுமை கூலி | ... | 750 |
| உள் சுமை கூலி | ... | 640 |
| ஊதியம் | ... | 7,500 |
| செலுத்த வேண்டிய உண்டியல் | ... | 4,500 |
| வியாபாரச் செலவு | ... | 2,600 |
| கொள் முதல் | ... | 40,765 |
| விற்பனைச் செலவுகள் | ... | 1,757 |
| தொடக்கச் சரக்கிருப்பு | ... | 10,250 |
| ரொக்கம் | ... | 257 |
| வங்கி | ... | 8,463 |
| கடன் (9%) | ... | 10,000 |
| பெற்றனுப்புஞ் செலவு (Forwarding charges) | | 2,050 |
| ஏற்றுமதி வரி | ... | 2,700 |
| அலுவலகச் செலவு | ... | 3,750 |
| நகராட்சி வரி | ... | 1,200 |
| கடனாளிகள் (பணம் மறுக்கப்பட்ட ரூ. 500-க்கான செல்வத்தின் உண்டியல் இதிலடங்கியுள்ளது.) | ... | 15,500 |
| கடனீந்தோர் | ... | 17,500 |
| விற்பனை | ... | 75,600 |
| தட்டெழுத்துப் பொறி | ... | 2,500 |
| ஐயக் கடன் காப்பு | ... | 462 |
| வருமான வரி | ... | 1,560 |
| கூலி | ... | 5,450 |
| கழிவு பெற்றது | ... | 1,630 |
| வாணிக நற்பெயர் (Good will) | ... | 5,600 |

சரிக்கட்ட வேண்டியவை :

(i) இறுதிச் சரக்கிருப்பு ரூ. 7,500.

(ii) உரிமையாளர் ரூ. 300 மதிப்புள்ள சரக்கு தன் இல்லத்துக்கு வாங்கியது கொள்முதல் ஏட்டில் பதிவாகியிருந்தது.

(iii) சேர்ந்துள்ள, ஆனால் கைக்கு வரப் பெறுக் கழிவு ரூ. 370.

(iv) செல்வத்தின் பண மறுக்கப்பட்ட உண்டியல் தொகையில் பாதியை எடுத்துவிடு.

(v) ஐயக் கடன் காப்பைக் கடனாளியில் 5%-ல் வைத்திரு

(vi) கடன்மீது வட்டி மூன்று திங்கட்குத் தரப்பட வேண்டும்.

(vii) முதல் மீது 5% வட்டி கணக்கிடுக.

**12.** கீழ்க் கொடுக்கப்பட்ட இருப்புப் பட்டியிலிருந்து மணிவாசகரின் வாணிக இலாப-நட்டக் கணக்குகளையும் 30-6-1971-ற்கான இருப்பு நிலைக் குறிப்பையும் தயார் செய்க.

| | | பற்றுத் தொகை ரூ. | வரவுத் தொகை ரூ. |
|---|---|---|---|
| கட்டடம் | ... | 30,600 | |
| பொறி வகை | ... | 25,000 | |
| மனைத் துணைப் பொருள் | ... | 5,400 | |
| தொடக்கச் சரக்கிருப்பு | ... | 12,300 | |
| விற்பனை | ... | | 90,000 |
| ஊதியமும் கூலியும் | ... | 7,200 | |
| வங்கிக் கட்டணமும் வட்டியும் | ... | 250 | |
| தள்ளுபடி | ... | 400 | 430 |
| கொள்முதல் | .. | 50,000 | |
| சரக்குத் திருப்பம் | ... | 1,200 | 750 |
| பங்குகள் | ... | 4,000 | |
| விளம்பரம் | ... | 200 | |
| கழிவு | ... | 235 | 570 |
| கடனாளிகளும் கடனீந்தோரும் | ... | 15,200 | 13,780 |
| வங்கி மேல் வரைப்பற்று | | | 7,850 |
| ரொக்கம் | ... | 275 | |
| புனை பொருள் உரிமை (Patent) | ... | 3,000 | |
| வராக் கடன் | ... | 330 | |

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| மின் செலவு | ... | 700 | |
| கடன் 6% | ... | 5,400 | |
| எழுது பொருட் செலவு | ... | 750 | |
| கொள்முதல் மீது தீர்வை | ... | 1,200 | |
| வாணிகச் செலவு | ... | 1,300 | |
| பல்வகை வரவு | ... | | 470 |
| இலாப ஈவு | ... | | 200 |
| செலுத்த வேண்டிய உண்டியல் | ... | | 19,890 |
| முதல் | ... | | 31,000 |
| | ரூ. | 1,64,940 | 1,64,940 |

கீழ்க்கண்டவற்றிற்குச் சரிக்கட்ட வேண்டும்.

(i) பெற வேண்டிய இலாப ஈவு ரூ. 100.

(ii) கடன் மீது மூன்று திங்கள் வர வேண்டியுள்ளது.

(iii) (1) இறுதிச் சரக்கிருப்பு ரூ. 17,550 என மதிப்பிடப்பட்டது.
(2) 5-6-1971-ல் தீயில் அழிந்த சரக்கின் மதிப்பு ரூ. 5,768.

(iv) நிகர இலாபத்தில் 3% அலுவலக மேலாளருக்குக் கழிவு தர வேண்டியுள்ளது.

(v) கடனாளிகள் மீது 5% வராக் கடன் காப்பு ஏற்படுத்துக.

(vi) பொறியொன்றை நிறுவக் கொடுத்த கூலி ரூ. 200 கூலிக் கணக்கில் சேர்க்கப்பட்டுள்ளது

(vii) வங்கி மேல்வரைப் பற்று மீது தரவேண்டிய வட்டி ரூ. 150.

(viii) விமலனிடம் விற்ற சரக்கு ரூ. 800 அனுப்பப்பட்டும் விற்பனை ஏட்டில் எழுதப் பெறவில்லை.

(ix) தேய்மானங் கணக்கிடுக.

பொறிவகை 5%; கட்டடம் 3%

**13.** கீழ்க் கொடுக்கப்பட்ட நாவுக்கரசரின் இருப்புப் பட்டியலிலிருந்து 1970 ஆம் ஆண்டிற்கான வாணிக, இலாப-நட்டக் கணக்குகளேயும் 31-12-1970-ற்கான இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க.

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| முதல் கணக்கு | ... | | 90,450 |
| எடுப்புக் கணக்கு | ... | 10,450 | |
| பொறி வகை | ... | 80,000 | |
| கொள்முதல் | ... | 1,50,400 | |
| வாடகையும் நகராட்சிக் கட்டணமும் | ... | 11,500 | |
| ஆலைக் கூலி | ... | 30,875 | |
| வெப்பச் செலவும் மின் செலவும் | ... | 2,500 | |
| ஈட்டுறுதி | ... | 1,200 | |
| ஊதியம் | ... | 25,600 | |
| வாணிகக் குறி (Trade Mark) | ... | 4,500 | |
| அலுவலகச் செலவு | ... | 3,750 | |
| வங்கி மேல்வரைப் பற்று | ... | | 10,460 |
| ஒற்றிக் கடன் 9% | ... | | 15,600 |
| விற்பனை | ... | | 2,82,000 |
| விற்பனை மீது கொடுத்த கழிவு | ... | 9,750 | |
| உட்திருப்பம் | ... | 5,400 | |
| வெளித் திருப்பம் | ... | | 6,400 |
| ரொக்கம் | ... | 750 | |
| வழக்குச் செலவு | ... | 3,460 | |
| தொடக்கச் சரக்கிருப்பு | ... | 25,470 | |
| முதலீட்டின் மீது இலாப-ஈவு | ... | 300 | |
| தள்ளுபடி | ... | | 600 |
| சுமை கூலி | ... | 975 | |
| கடனாளிகள் | ... | 25,600 | |
| கடனீந்தோர் | ... | | 10,000 |
| மோட்டார் வண்டி | ... | 15,000 | |
| வராக் கடன் மீட்டது | ... | | 1,200 |
| வங்கிக் கட்டணமும் வட்டியும் | ... | 475 | |
| வரவுடைய உண்டியல் | ... | 10,555 | |
| ஐயக் கடன் காப்பு | ... | | 800 |
| பயிற்சி பெறுநரிடம் பெற்ற முனைமம் (Apprenticeship Premium) | | | 1,000 |
| | | 4,18,510 | 4,18,51 |

சரிக்கட்ட வேண்டியவை :

(i) ஒற்றிக் கடன் மீது ஓராண்டு வட்டி தரவேண்டியுள்ளது.

(ii) பயிற்சி பெறுநரிடம் முனைமம் ரூ. 2,500 ஐந்து ஆண்டுகட்குப் பெற்றது. 31-12-71-ல் ஐந்து ஆண்டுகள் முடிவடைகின்றன.

(iii) ஐயக் கடன் காப்பினை ரூ. 1,700 ஆய் உயர்த்துக.

(iv) வாடகையையும் ஈட்டுறுதியையும் ஆலைக்கு நான்கு பங்கும் அலுவலகத்துக்கு இரு பங்கும் பிரித்திடுக.

(v) கடனாளிகளில் ஒருவரான உலகப்பன் நொடிப்பு நிலையடைந்து விட்டார். அவரிடமிருந்து பெற வேண்டிய ரூ. 800-ல் ரூபாய்க்கு 25 காசுகள் வீதத்திலேயே கிடைக்கும் என்று தெரிய வருகிறது.

(vi) தரவேண்டிய செலவினங்கள் : வாடகை ரூ. 200; தணிக்கைக் கட்டணம் ரூ. 500.

(vii) தேய்மானம் கணக்கிடுக :

(1) மோட்டார் வண்டி 20%

(2) பொறிவகை 5%

(viii) இறுதிச் சரக்கிருப்பு ரூ. 28,760 என மதிப்பிடப்பட்டது.

14. எழுதுபொருளில் வாணிகஞ் செய்யும் அலக்சாந்தரின் இருப்புகள் 30-6-1971-ல் கீழ்க்கண்டவாறிருந்தன. அவற்றிலிருந்து அந்நாளில் முடியும் ஆண்டுக்கான வாணிகக் கணக்கு, இலாப-நட்டக் கணக்குகளையும் 30-6-1971-ற்கான இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

| | | ரூ. |
|---|---|---|
| கொள் முதல் | ... | 40,000 |
| சரக்கிருப்பு (1-7-1970) | ... | 12,500 |
| ஊதியமும் கூலியும் | ... | 8,400 |
| ஈட்டுறுதி | ... | 300 |
| விளம்பரம் | ... | 400 |
| வராக் கடன் நீக்கிவிட்டது | ... | 200 |
| தள்ளுபடி பெற்றது | ... | 150 |
| லாரி கட்டணம் | ... | 200 |
| மின் செலவு | ... | 175 |
| பொறிவகைகள் | ... | 10,000 |

| | | ரூ. |
|---|---|---|
| வருமான வரி | ... | 500 |
| கட்டடம் | ... | 25,000 |
| மனைத்துணைப் பொருள் | ... | 2,500 |
| அஞ்சல், தந்தி, தொலைபேசி | ... | 200 |
| பழுது பார்க்குஞ் செலவு | ... | 400 |
| பயணச் செலவு | ... | 275 |
| செலுத்த வேண்டிய உண்டியல் | ... | 2,100 |
| தவணை வைப்பு | ... | 4,000 |
| சில்லரைச் செலவுகள் | ... | 500 |
| ஐயக் கடன் காப்பு | ... | 400 |
| கடனாளிகள் | ... | 15,250 |
| விற்பனை | ... | 75,800 |
| கடனீந்தோர் | ... | 20,200 |
| வாடகை (வ) | ... | 800 |
| ரொக்கம் | ... | 230 |
| வங்கி | ... | 5,750 |
| முதல் | ... | 27,330 |

கீழ்க்கண்டவற்றிற்குச் சரிக்கட்ட வேண்டும்.

(i) *30-6-1971-ல் இறுதிச் சரக்கின் மதிப்பு ரூ. 15,800.*

(ii) *1-6-1971-ல் ஈட்டுறுதி 6 திங்கட்குச் செலுத்தப்பட்டது.*

(iii) *1-7-1970-ல் ரூ. 5,000 மதிப்பிருந்த ஒரு பொறியை 1-1-71-ல் ரூ 3,780-க்குக் கொடுத்துவிட்டு ரூ. 8,000-க்கான புதிய பொறியொன்று வாங்கப்பட்டது.*

(iv) *ரூ. 750-க்கான காசோலை யொன்றிற்கு 29-6-71-ல் பணம் மறுக்கப்பட்டுவிட்டது. இதற்கான பதிவு ரொக்க ஏட்டில் செய்யப்படவில்லை,*

(v) சரக்கிலிருந்து எடுத்து அலுவலகத்தில் பயன்படுத்திக் கொண்ட எழுது பொருளின் மதிப்பு ரூ. 250.

(vi) கடனாளிகளில் 5% ஐயக் கடன் காப்பை வைத்திடுக; 3% தள்ளுபடிக் காப்பு ஏற்படுத்துக.

(vii) தேய்மானங் கண்டுபிடிக்க:

பொறிவகை 5%; மனைத்துணைப் பொருள் 7%

(viii) வாடகை முன்கூட்டிப் பெற்றது ரூ 100

15. 31-3-1971-ல் அசோகனின் ஏடுகளிலிருந்து எடுக்கப் பட்ட இருப்புகள் கீழ்த்தரப் பட்டுள்ளன. 31-7-1971-ல் முடியும் ஆண்டுக்கான வாணிக, இலாப-நட்டக் கணக்குகளையும் அந் நாளிற் கான இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

| | | ரூ |
|---|---|---|
| முதல் | ... | 31,620 |
| எடுப்பு | ... | 6,000 |
| சரக்கிருப்பு (1-4-1970) | ... | 18,760 |
| எழுதுபொருளும் அச்சுக்கூலியும் | ... | 1,400 |
| சரக்க கற்றுஞ் செலவு | ... | 530 |
| கொள்முதல் | ... | 60,750 |
| ஊதியம் | ... | 11,000 |
| தள்ளுபடி அளித்தது | ... | 370 |
| விற்பனை | ... | 1,10,260 |
| கொள்முதல் திருப்பம் | ... | 250 |
| கூலி | ... | 5,400 |
| வாடகை | ... | 2,200 |
| பல்வகை வரவு | ... | 380 |
| விற்பனைச் செலவுகள் | ... | 1,200 |
| முதலீடு | ... | 5,700 |
| இலாப சவு | ... | 200 |

| | | ரூ. |
|---|---|---|
| கடன் 10% | ... | 11,000 |
| ஈட்டுறுதி | ... | 600 |
| துறைமுகக் கட்டணம் | ... | 1,000 |
| வாணிகச் செலவு | ... | 730 |
| மனைத் துணைப் பொருள் | ... | 4,250 |
| டிரக் வண்டிகள் | ... | 30,000 |
| கடனீந்தோர் | ... | 20,700 |
| கடனாளிகள் | ... | 25,200 |
| ரொக்கம் | ... | 437 |
| விடுகருவிகள் | ... | 4,300 |
| பல்வகைச் செலவு | ... | 433 |
| மிதிவண்டிகள் | ... | 750 |
| அலுவலகச் செலவு | ... | 200 |
| வங்கி (வ) | ... | 8,750 |
| விளம்பரம் | ... | 750 |
| கடன் மீது வட்டி | ... | 1,200 |

கீழ்க் கண்டவற்றிற்குச் சரிக்கட்ட வேண்டும்.

(i) முன்கூட்டிச் செலுத்திய விளம்பரம் ரூ. 250.

(ii) ரூ. 500 மதிப்புள்ள சரக்கினை வங்க அகதிகட்கு நன்கொடையாக வழங்கப்பட்டது. இது எவ்வேட்டிலும் பதிவாகியிருக்கவில்லை.

(iii) கடனீந்தோர் மீது 3% தள்ளுபடிக்காப்பு ஏற்படுத்துக.

(iv) விடுகருவிகள் ரூ. 3500 என மதிப்பிடப்பட்டது.

(v) ரூ. 5000 கடன் தொகை 1-1-1971-ல் திருப்பியடைக்கப் பட்டிருந்தது. 1969-70-ல் இக் கடன் வாங்கப்பட்டது.

(vi) எழுதுபொருள் கையிருப்பு ரூ. 55.

(vii) கடனாளிகளில் ரூ. 200 வராக்கடன் நீக்கி விடுக. 5% ஐயக் கடன் காப்பு ஏற்படுத்துக.

(viii) கூடியுள்ள ஆனால் கைக்கு வரப் பெறாத இலாப ஈவு ரூ. 125.

(ix) இறுதிச் சரக்கு ரூ. 25,380 என மதிப்பிட்டது.

*16.* அக்பரின் ஏடுகளிலிருந்து 31-12-1970-ல் எடுக்கப்பட்ட இருப்புகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

| | | ரூ. |
|---|---|---|
| முதல் கணக்கு | ... | 56,100 |
| எடுப்புக் கணக்கு | ... | 5,400 |
| ஈட்டுறுதி | ... | 480 |
| விளம்பரம் | ... | 700 |
| கொள்முதல் | ... | 90,420 |
| கொள்முதல் திருப்பம் | ... | 1,415 |
| தள்ளுபடி | ... | 430 |
| கடனாளிகள் | ... | 30,000 |
| மனைத்துணைப் பொருள் | ... | 5,600 |
| கடனீந்தோர் | ... | 27,300 |
| வங்கி | ... | 10,200 |
| ரொக்கம் | ... | 375 |
| செலுத்த வேண்டிய உண்டியல் | ... | 7,960 |
| வட்டி பெற்றது | ... | 500 |
| ஐயக் கடன் காப்பு | ... | 1,000 |
| கூலி | ... | 10,870 |
| வாடகை (வ) | ... | 1,200 |
| வராக் கடன் | ... | 150 |
| எழுது பொருள் | ... | 760 |

| | | |
|---|---|---|
| பயணச் செலவு | ... | 1,870 |
| பயண முகவர்க்குக் கொடுத்த கழிவு | ... | 3,840 |
| வகைகள் (Patterns) | ... | 7,500 |
| ஊதியம் | ... | 16,400 |
| கட்டுச் செலவுகள் | ... | 750 |
| ஏற்றுமதி வரி | ... | 1,200 |
| கட்டடம் | ... | 40,000 |
| பழுது பார்க்கும் செலவு | ... | 1,500 |
| சரக்கு வாங்கக் கொடுத்த இரயில் கட்டணம் | ... | 630 |
| விற்பனை | ... | 1,60,800 |
| கடன் கொடுத்தது | ... | 10,000 |
| தொடக்கச் சரக்கிருப்பு | ... | 20,500 |
| கழிவு பெற்றது. | ... | 3,300 |

கீழ்க்கண்டவற்றிற்குச் சரிக்கட்டி, வாணிக, இலாப-நட்டக் கணக்குகளையும் 31-12-1970-ற்கான இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

(i) 31-12-1970-ல் சரக்கு ரூ. 30,880 என மதிப்பிடப்பட்டது

(ii) முன்கூட்டிச் செலுத்திய ஈட்டுறுதி ரூ. 120.

(iii) முதல் மீது 5% வட்டி கணக்கிடுக.

(iv) தட்டெழுத்துப் பொறியொன்று 1-8-1967-ல் ரூ.1,800-க்கு வாங்கப்பட்டது. இதற்குப் பணமும் தரவில்லை. ஏடுகளில் பதியப் பெறவுமில்லை.

(v) ஐயக் கடன் காப்பினை ரூ. 500 ஆல் உயர்த்துக. கடனாளியில் 3% தள்ளுபடிக் காப்பு ஏற்படுத்துக.

(iv) அச்சுக் கூலி தரவேண்டியது ரூ. 100.

(vii) எழுதுபொருள் கையிருப்பு ரூ. 50 என மதிப்பிடப்பட்டது.

(viii) தேய்மானம் கணக்கிடுக :

தட்டெழுத்துப் பொறி 10%; மனைத்துணைப் பொருள் 5%

17. கீழே கொடுக்கப்பட்டுள்ள இருப்புப் பட்டியலிலிருந்து, அட்லியின் 31-12-1971-ல் முடியும் ஆண்டுக்கான வாணிக, இலாப-நட்டக் கணக்குகளையும் அந் நாளிற்கான இருப்பு நிலைக் குறிப்பையும் தயார் செய்க.

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| தொடக்கச் சரக்கிருப்பு | ... | 18,438 | |
| கூலி | ... | 12,600 | |
| ஈட்டுறுதி | ... | 600 | |
| தள்ளுபடி | ... | 438 | 579 |
| கொள்முதலும் விற்பனையும் | ... | 45,763 | 70,474 |
| சரக்குத் திருப்பம் | ... | 474 | 763 |
| பொதுச் செலவு | ... | 2,342 | |
| முதல் கணக்கு | ... | | 62,212 |
| பொறி வகை | ... | 27,500 | |
| ரொக்கம் | ... | 378 | |
| கடனாளிகளும் கடனீந்தோரும் | ... | 30,120 | 35,463 |
| வங்கிக் கடன் | ... | | 15,762 |
| விளம்பரம் | ... | 640 | |
| விற்பனை வரி | ... | 2,178 | |
| ஊதியம் | ... | 6,000 | |
| கட்டடம் | ... | 30,000 | |
| வங்கி | ... | 3,767 | |
| வராக்கடன் காப்பு | ... | | 1,370 |
| வெளிச் சுமை கூலி | ... | 233 | |
| மின் செலவு | ... | 550 | |
| வைப்புத் தொகை (Deposit) | ... | | 2,500 |
| மனைத்துணைப் பொருள் | ... | 1,930 | |
| வங்கிக் கட்டணமும் வட்டியும் | ... | 172 | |
| வாணிக நற்பெயர் (Good will) | ... | 5,000 | |
| | | 1,89,123 | 1,89,123 |

கீழ்க்கண்டவற்றைச் சரிக்கட்டுக :

(i) தேய்மானம் கணக்கிடுக :

பொறிவகை 5%; கட்டடம் 3%

(ii) வராக் கடன் ரூ. 120 நீக்குக. ஐயக்கடன் காப்பினை ரூ. 1,500-க்கு உயர்த்துக.

(iii) கொடுக்க வேண்டிய செலவினங்கள் :

மின்செலவு ரூ. 50; கூலி ரூ. 300.

(iv) வைப்புத் தொகைமீது வட்டி ரூ. 100 பெற வேண்டியுள்ளது.

(v) பொறியை நிறுவக் கொடுத்த கூலி ரூ. 200. கூலிக் கணக்கில் சேர்க்கப்பட்டுள்ளது.

(vi) இறுதிச் சரக்கிருப்பு ரூ. 31,879 என மதிப்பிடப்பட்டது.

(vii) தீயில் அழிவுற்ற சரக்கு ரூ. 2,100. இதற்கு ரூ. 600 நட்டஈடு கொடுக்க ஈட்டுறுதிக் கம்பனி ஏற்றுக் கொண்டுள்ளது.

18. 30-6-1970-ல் துரையண்ணன் ஏடுகளிலிருந்து எடுக்கப்பட்ட இருப்புகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

| | | ரூ. |
|---|---|---|
| கட்டடம் | ... | 32,000 |
| வங்கி | ... | 4,390 |
| கூலி | ... | 15,860 |
| எடுப்பு | ... | 9,470 |
| தள்ளுபடி அளித்தது | ... | 900 |
| தள்ளுபடி பெற்றது | ... | 860 |
| சுமை கூலி | ... | 740 |
| பொறிவகை | ... | 30,000 |
| பழுதுபார்த்தலும் புதுப்பித்தலும் | ... | 2,178 |
| செலுத்த வேண்டிய உண்டியல் | ... | 4,600 |
| குமரனுக்குக் கொடுத்த கடன் 10% | ... | 3,000 |
| கொள்முதல் | ... | 87,500 |
| விற்பனை | ... | 1,42,800 |
| ரொக்கம் | ... | 155 |
| சரக்கிருப்பு (1-7-1969) | ... | 17,965 |
| பொதுச் செலவு | ... | 1,372 |
| வராக் கடன் | ... | 1,370 |
| உட்திருப்பம் | ... | 2,300 |
| கடனாளிகள் | ... | 30,000 |
| கடனீந்தோர் | ... | 28,645 |
| வருமானவரி | ... | |
| வட்டி பெற்றது | ... | 200 |

| | | ரூ. |
|---|---|---|
| மனைத்துணைப் பொருள் | ... | 4,300 |
| ஈட்டுறுதியும் வரியும் | ... | 1,370 |
| முதல் | ... | 67,765 |

கீழ்க்கண்டவற்றைச் சரிக்கட்டி 30-6-70-ல் முடியும் ஆண்டுக்கான வாணிக, இலாப-நட்டக் கணக்குகளையும், அந் நாளிற்கான இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

(i) பொதுச் செலவில் எழுதுபொருள் ரூ. 150-க்கு வாங்கியது அடங்கியுள்ளது.

(ii) தன் இல்லத்துக்கு வாங்கிய மனைத்துணைப் பொருள் ரூ. 200 மனைத்துணைப் பொருள் கணக்கில் சேர்க்கப் பட்டுள்ளது.

(iii) குமரனுக்குக் கொடுத்த கடன்மீது நான்கு திங்கள் வட்டி வர வேண்டியுள்ளது.

(iv) தொடக்கச் சரக்கிருப்பில் எழுதுபொருள் இருப்பு ரூ. 50 அடங்கியுள்ளது.

(v) இறுதிச் சரக்கிருப்பின் மதிப்பு ரூ. 22,373.

(vi) பழுது பார்க்குஞ் செலவு ரூ. 400, கட்டடக் கணக்கில் சேர்க்கப் பட்டுள்ளது.

(vii) தேய்மானங் கண்டு பிடிக்க :

கட்டடம் 5%; பொறிவகை 7%, மனைத்துணைப் பொருள் 10%

(viii) வாடிக்கையாளர் திருப்பியனுப்பிய சரக்கு ரூ. 100 இறுதிச் சரக்கிருப்பில் சேர்க்கப்பட்டும், விற்பனைத் திருப்ப ஏட்டில் பதிவாகி யிருக்கவில்லை.

(ix) கடனாளிகள் தொகை மீது 5% ஐயக் கடன் காப்பு ஏற்படுத்துக.

**19.** கீழே கொடுக்கப்பட்டுள்ள இருப்புகள் கருணாகரன் ஏடுகளிலிருந்து எடுக்கப் பட்டுள்ளன.

| | | ரூ. |
|---|---|---|
| எடுப்பு | ... | 10,400 |
| வருமானவரி | ... | 3,700 |
| கடனாளிகள் | ... | 40,500 |
| வங்கி மேல்வரைப் பற்று | ... | 25,600 |
| விற்பனை | ... | 1,98.000 |
| பயண விற்பனையர் கழிவு | ... | 5,800 |
| உட்சுமை கூலி | ... | 1,300 |
| வெளிச்சுமை கூலி | ... | 800 |
| ஏற்றுமதி வரி | ... | 4,500 |
| விளம்பரம் | ... | 5,700 |
| பயிற்சி பெறுநரிடம் பெற்ற முனைமம் | ... | 3,000 |
| முதலீடு | ... | 7,500 |
| ரொக்கம் | ... | 300 |
| தொடக்கச் சரக்கிருப்பு | ... | 25,200 |
| கூலி | ... | 18,700 |
| எண்ணெய், எரிவளி முதலியன | ... | 2,500 |
| கொள் முதல் | ... | 99,300 |
| நிலக்கரி | ... | 3,500 |
| முகப்புச் சீட்டுகளும் கட்டுப் பொருள்களும் (Labels and Packing Materials.) | ... | 700 |
| பற்பல கடனீந்தோர் | ... | 40,200 |
| பற்பல கடனாளிகள் | ... | 35,800 |
| கொள் முதல் திருப்பம் | ... | 1,200 |
| பழுது பார்த்தலும் புதுப்பித்தலும் | ... | 3,400 |
| பொறிவகை | ... | 40,300 |
| மின் செலவு | ... | 1,200 |

| | | ரூ. |
|---|---|---|
| குத்தகை நிலமும் கட்டடமும் | ... | 30,700 |
| ஒற்றிக் கடன் | ... | 20,000 |
| வட்டி (வ) | ... | 100 |
| முதல் | ... | 75,000 |
| ஊதியம் | ... | 18,600 |
| அலுவலகச் செலவுகள் | ... | 2,700 |

கீழே கொடுக்கப்பட்டவற்றிற்குச் சரிக்கட்டி, 30-6-1970-ல் முடியும் ஆண்டுக்கான தயாரிப்புக் கணக்கு, இலாப-நட்டக் கணக்கு, அந்நாளிற்கான இருப்புநிலைக் குறிப்பு-இவற்றைத் தயாரிக்க.

(i) பயிற்சி பெறுநரிடம் பெற்ற தொகை 31-10-1972 வரை உரியது.

(ii) சேகரிடம் பெற வேண்டிய ரூ. 1000-க்கு (கடனாளிகளில் இது அடங்கியுள்ளது) ரூபாய்க்கு 20 காசுகள்தான் கிடைக்கும் என்று உரியதாகிறது.

(iii) கட்டடத்துக்குப் பயன்படுத்திய சரக்கு ரூ. 2,300. இது பற்றிய பதிவு ஒன்றுஞ் செய்யப்படவில்லை.

(iv) கட்டடம் கட்டக் கொடுத்த கூலி ரூ. 700, கூலிக் கணக்கில் சேர்க்கப்பட்டுள்ளது.

(v) 31-12-1970-ல் திரும்பி வரப் பெற்ற சரக்கு ரூ. 200, இறுதிச் சரக்கிருப்பில் சேர்க்கப்பட்டும் விற்பனைத் திருப்பக் கணக்கில் சேர்க்கப்படவில்லை.

(vi) தேய்மானம் கணக்கிடுக :

கட்டடம் 5%; பொறிவகை 7%

(vii) ஒற்றிக் கடன்மீது செலுத்த வேண்டிய வட்டி ரூ. 300.

(viii) இறுதிச் சரக்கிருப்பு ரூ. 32,900 என மதிப்பிடப்பட்டது.

20. கீழே கொடுக்கப் பட்டுள்ள இருப்புப் பட்டியலிலிருந்து செழியனின் 31-12-1971-ல் முடியும் ஆண்டுக்கான உற்பத்திக் கணக்கையும், வாணிக, இலாப-நட்டக் கணக்குகளையும், அந்நாவிற்கான இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| கடனீந்தோர் | ... | | 38,612 |
| ரொக்கம் | ... | 578 | |
| வங்கி | ... | | 12,415 |
| [illegible]னை பொருள் உரிமை (Patents) | ... | 3,200 | |
| வெளிச்சுமை கூலி | ... | 418 | |
| கூலி | ... | 19,715 | |
| ஊதியம் | ... | 24,610 | |
| விளம்பரம் | ... | 2,600 | |
| ஆலை மேலாளரின் ஊதியம் | ... | 9,600 | |
| ஆலை வாடகையும் வரியும் | ... | 10,700 | |
| அலுவலகச் செலவு | ... | 2,138 | |
| தள்ளுபடி | ... | 422 | 315 |
| வராக்கடன் | ... | 111 | |
| எழுதுபொருளும் அச்சுக் கூலியும் | ... | 648 | |
| கச்சாப் பொருள் கொள்முதல் | ... | 40,612 | |
| தொடக்கச் சரக்கிருப்பு : | | | |
| கச்சாப் பொருள் | ... | 7,615 | |
| வேலை முற்றுப் பொருள் | ... | 10,818 | |
| முடிவுப் பொருள் | ... | 18,614 | |
| பொறிவகை | ... | 33,000 | |
| நிலமும் கட்டடமும் | ... | 44,600 | |
| செலுத்த வேண்டிய உண்டியல் | ... | | 7,000 |
| கருவிக் கலன்கள் | ... | 3,700 | |
| கடனாளிகள் | ... | 22,000 | |
| எரிபொருள், நிலக்கரி முதலியவை | ... | 3,500 | |
| மின் விசை | ... | 2,100 | |
| கொள்முதல் திருப்பம் | ... | | 1,700 |
| விற்பனை | ... | | 1,29,492 |
| முதல் கணக்கு | ... | | 90,000 |
| எடுப்பு | ... | 6,000 | |
| உரிமைத் தொகை (விற்பனை அடிப்படையில்) | ... | 5,415 | |
| ஈட்டுறுதி | ... | 720 | |
| கழிவு | ... | 1,700 | 600 |
| | | 2,80,134 | 2,80,134 |

கீழ்க் கண்டவற்றைச் சரிக்கட்ட வேண்டும்.

(i) கடனாளிகளில் 5% ஐயக் கடன் காப்பு ஏற்படுத்துக.

(ii) கொடுக்கப்பட வேண்டியவை :

ஆலை வாடகை ரூ. 300 ; ஊதியம் ரூ. 400.

(iii) ஈட்டுறுதி 1-7-1971-ல் அன்று ஓராண்டுக்குச் செலுத்தப் பட்டது.

(iv) ரூ. 5,000 ஊதியம் வழங்க வேண்டியுள்ளது. இதனை ஆலைக்கும் அலுவலகத்துக்கும் 3 : 2 விகிதத்தில் பிரித்திடுக.

(v) தேய்மானம் கணக்கிடுக :

கட்டடம் 5% பொறிவகை 7% புனைபொருள் உரிமை 10%

(vi) இறுதிச் சரக்கிருப்பு :

| | |
|---|---|
| கச்சாப் பொருள் | ரூ. 9,814 |
| முடிவுறாப் பொருள் | ரூ. 14,612 |
| முடிவுப் பொருள் | ரூ. 22,645 |

21. 1960 ஜூன் 30-ல் திரு. போத்தார் அவர்களின் ஏடுகளி லிருந்து எடுக்கப்பட்ட இருப்புகளும் சரிக்கட்ட வேண்டிய விவரங் களும் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன. அவற்றிலிருந்து 1960 ஜூன் 30-ல் முடிவுறும் ஆண்டுக்கான வாணிக இலாப-நட்டக் கணக் குகளையும் அந்நாளுக்குரிய இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க.

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| 1959 ஜூலை 1-ல் சரக்கிருப்பு | ... | 96,000 | |
| ஊதியம் | ... | 4,000 | |
| கூலி | ... | 28,000 | |
| கொள்முதல் மீது இரயில் கட்டணம் | ... | 5,000 | |
| கொள்முதல் | ... | 1,20,000 | |
| மேல் வரைப் பற்று மீது வட்டி | ... | 200 | |
| வரவுடைய உண்டியல் | ... | 6,000 | |
| வாடகை | ... | 2,000 | |
| விற்பனை | ... | | 2,50,000 |

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| வராக் கடன் காப்பு | ... | | 5,000 |
| கொள்முதல் மீது தள்ளுபடி | ... | | 4,000 |
| பற்பல கடனீந்தோர் | ... | | 23,300 |
| வெளித் திருப்பம் | ... | | 1,500 |
| பொறி வகை | ... | 20,000 | |
| பயணச் செலவு | ... | 5,000 | |
| பொறி வகைக்கான பழுது பார்க்குஞ் செலவு | ... | 1.600 | |
| ரொக்கம் | ... | 200 | |
| வங்கி | ... | 1,800 | |
| கட்டடம் | ... | 5,000 | |
| உட்திருப்பம் | ... | 1,000 | |
| பற்பல கடனாளிகள் | ... | 35,000 | |
| அலுவலகச் செலவு | ... | 5,000 | |
| வருமான வரி | ... | 500 | |
| எடுப்பு | ... | 6,500 | |
| போத்தாரின் முதல் | ... | | 50,000 |
| செலுத்த வேண்டிய உண்டியல் | ... | | 5,000 |
| பஞ்சாப் தேசிய வங்கிக் கடன் | ... | | 4,000 |
| | | 3,42,800 | 3,42,800 |

சரிக்கட்ட வேண்டியவை:

(i) 1960 ஜூன் 30-ல் சரக்கிருப்பு ரூ. 35,000.

(ii) பொறி வகை மீது 10% தேய்மானம் கணக்கிடுக.

(iii) முதல் மீது 5% வட்டி கணக்கிடுக.

(iv) கூலியும் ஊதியமும் ரூ. 1,500-ம், ரூ. 450-ம் கொடுபட வேண்டியுள்ளன.

(v) திங்களொன்றுக்கு ரூ. 200 வீதம் இரு திங்கட்கு வாடகை தரவேண்டியுள்ளது.

(Sagar B. Com. 1967)

22. 1944 டிசம்பர் 31-ற்கான இருப்புப் பட்டியல் கீழே தரப் பட்டுள்ளது. அதிலிருந்து தயாரிப்புக் கணக்கு இலாப-நட்டக் கணக்கு, இருப்புநிலைக் குறிப்பு—இவற்றைத் தயாரிக்க.

| பற்று | ரூ. | வரவு | ரூ. |
|---|---|---|---|
| கொள்முதல் | 16,000 | விற்பனை | 30,000 |
| தள்ளுபடி | 1,300 | ஒற்றிக் கடன் | 3,000 |
| கூலி (தயாரிப்பு) | 6,500 | வராக் கடன் மீது செலுத்த வேண்டிய வட்டி | 50 |
| ஊதியம் | 2,000 | பற்பல கடனீந்தோர் | 2,100 |
| பயணச் செலவு | 500 | முதல் | 10,650 |
| உட்சுமை கூலி | 275 | | |
| ஈட்டுறுதி | 150 | | |
| கழிவு | 325 | | |
| வாடகையும் வரியும் | 500 | | |
| ரொக்கம் | 25 | | |
| வங்கி | 2,720 | | |
| குதிரை லாயச் செலவு | 195 | | |
| பழுது பார்க்குஞ் செலவு | 160 | | |
| கடன் மீது வட்டி | 150 | | |
| கட்டடம் | 4,000 | | |
| பொறிவகை | 1,500 | | |
| குதிரைகளும் வண்டிகளும் | 600 | | |
| சரக்கிருப்பு | 5,650 | | |
| பற்பல கடனாளிகள் | 3,250 | | |
| | 45,800 | | 45,800 |

1944 டிசம்பர் 31-ல் இறுதிச் சரக்கு ரூ. 6,500 என மதிப்பிடப் பட்டது.

கீழ்க் கண்டவை சரிக்கட்டப்பட வேண்டும்.

(i) தேய்மானங் கணக்கிடுக.

கட்டடம்—$2\frac{1}{2}\%$, பொறிவகை—$5\%$; குதிரைகளும் வண்டிகளும் $7\frac{1}{2}\%$.

(ii) வராக் கடன் ரூ. 150 நீக்கப்பட வேண்டும்.

(iii) ஈட்டுறுதி தர வேண்டியது ரூ. 20.

(iv) முன்கூட்டிச் செலுத்திய வரி ரூ. 50.

(v) கடனாளிகள் மீதும், கடனீந்தோர் மீதும் $2\frac{1}{2}\%$ தள்ளுபடிக் காப்பு ஏற்படுத்துக.

(M. U. B. Com. Sep. 1945)

23. திரு. இராம்சந்தரின் ஏடுகளிலிருந்து எடுக்கப்பட்ட இருப்புகள் கீழ்க்கொடுக்கப் பட்டுள்ளன.

| | | ரூ. |
|---|---|---|
| ரொக்கம் | ... | 960 |
| வங்கி | ... | 26,320 |
| நிலமும் கட்டடமும் (1-4-1968) | ... | 49,000 |
| பொறிவகை | ... | 30,000 |
| மனைத்துணைப் பொருள் | ... | 3,500 |
| கருவிக் கலன்கள் | ... | 3,000 |
| வரவுடைய உண்டியல் | ... | 2,600 |
| கொள்முதல் (சரிக்கட்டப்பட்டது—Adjusted) | ... | 76,500 |
| வராக் கடன் | ... | 750 |
| ஞானஷியாமிக்குக் கொடுத்தக் கடன் @ 10% | ... | 10,000 |
| விற்பனை | ... | 1,96,000 |
| ஞானஷியாமிடம் பெற்ற வட்டி | ... | 500 |
| உட்சுமை கூலி | ... | 2,100 |
| இராம்சந்தரின் முதல் | ... | 1,95,000 |
| இராம்சந்தரின் எடுப்பு | ... | 15,000 |

| | | ரூ. |
|---|---|---|
| கோரிக்கை பெற்றது (Claims received) | | 3,200 |
| கூலி | ... | 45,600 |
| ஊதியம் | ... | 9,000 |
| வராக்கடன் காப்பு | ... | 4,200 |
| விற்பனைத் திருப்பம் | ... | 3,750 |
| வங்கிக் கட்டணம் | ... | 430 |
| எரிபொருளும் நீரும் | ... | 1,550 |
| வரிகள் | ... | 1,490 |
| தள்ளுபடி | ... | 300 |
| பல்வகைச் செலவு | ... | 3,250 |
| பற்பல கடனாளிகள் | ... | 77,800 |
| பற்பல கடனீந்தோர் | ... | 27,200 |
| 31-3-1969-ல் சரக்கிருப்பு | ... | 61,200 |
| தீ ஈட்டுறுதி | ... | 1,200 |
| வெளிச்சுமை கூலி | ... | 1,400 |

கீழ்க்கண்டவற்றைச் சரிக்கட்டி, 1961 மார்ச் 31-ல் முடியும் ஆண்டுக்கான வாணிக, இலாப-நட்டக் கணக்குகளையும், அந் நாளுக்கான இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

(i) நிலம் கட்டடங்கள்மீது $2\frac{1}{2}\%$-ம், பொறிவகை மீது 10%-ம், மனைத்துணைப் பொருள் மீது 10%-ம் தேய்மானம் கண்டுபிடிக்க வேண்டும்.

(ii) ஐயக் கடன் காப்பு 5%லும், தள்ளுபடிக் காப்பு $2\frac{1}{2}\%$லும் இருக்க வேண்டும்.

(iii) முன்கூட்டிச் செலுத்திய செலவினங்கள் :
தீ ஈட்டுறுதி ரூ. 200; வரிகள் ரூ. 500.

(iv) 1969 மார்ச் 31-ல் கருவிக் கலன்கள் ரூ. 1,200 என மதிப்பிடப்பட்டது.

(v) கடனாளிகளில் ரூ. 800 வராக்கடன் உள்ளது. இது நீக்கப்பட வேண்டும்.

(vi) வாணிகச் செலவு ரூ. 300 இன்னும் கொடுபடவில்லை; புதிய பொறி நிறுவக் கொடுத்தது. ரூ. 500, கூலிக் கணக்கில் சேர்க்கப்பட்டுள்ளது.

(Company's Secretary Exam. April 1969- Intermediate)

24. 'A' என்பவர் A அன் கோ எனும் பெயரில் வணிகஞ் செய்தார். கீழ்க் கொடுக்கப்பட்ட விவரங்களிலிருந்து 1967 டிசம்பர் 31-ல் முடியும் ஆண்டுக்கான இறுதிக் கணக்குகளைத் தயாரிக்கவும்.

இருப்புப் பட்டியல்

| | | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|
| A வின் முதல் கணக்கு | ... | | 1,19,400 |
| A வின் எடுப்புக் கணக்கு | ... | 10,550 | |
| வரவுடைய உண்டியல் | ... | 9,500 | |
| பொறி வகை | ... | 28,800 | |
| பற்பல கடனாளிகள் பண மறுக்கப்பட்ட உண்டியல் வரைந்த B உட்பட) | ... | 62,000 | |
| கடன் ரூ. 6% (வட்டி 1967 அக்டோபர் வரை செலுத்தப்பட்டது.) | | | 20,000 |
| கூலி | ... | 40,970 | |
| உட் திருப்பம் | ... | 2,780 | |
| கொள்முதல் | ... | 2,56,590 | |
| விற்பனை | ... | | 3,56,530 |
| கழிவு பெற்றது | ... | | 5,640 |
| வாடகையும் வரியும் | ... | 5,620 | |
| சரக்கிருப்பு | ... | 89,680 | |
| ஊதியம் | ... | 11,000 | |
| பயணச் செலவு | ... | 1,880 | |
| ஈட்டுறுதி (1968 சூன் 30 வரைக்கான ஆண்டு முனைமம் ரூ. 300 வீதம் செலுத்தியதை உள்ளடக்கியது.) | ... | 400 | |
| ரொக்கம் | ... | 530 | |
| வங்கி | ... | 18,970 | |
| பழுதுபார்த்தலும் புதுப்பித்தலும் | ... | 3,370 | |
| வட்டியும் தள்ளுபடியும் | ... | 5,870 | |
| வராக் கடன் | — | 3,620 | |
| பற்பல கடனீந்தோர் | ... | | 59,530 |
| மனைத்துணைப் பொருள் | ... | 8,970 | |
| | | 5,61,100 | 5,61,100 |

1967 டிசம்பர் 31-ல் சரக்கிருப்பு ரூ. 1,28,960. Bயின் உண்டியல் தொகையில் பாதியை நீக்கிடுக. ஐயக்கடன் காப்பு 5% அளவில் ஏற்படுத்து. முதல் மீது 5% வட்டி கணக்கிடு. சென்ற ஆண்டில் பொறியை நிறுவக் கொடுத்த கூலி ரூ. 1,200 கூலியில் அடங்கியுள்ளது.

பொறி வகையில் 10% தேய்மானம் கணக்கிடுக. ஆண்டிறுதியில் மனைத்துணைப் பொருள் ரூ. 8,073 என மதிப்பிடப்பட்டது. வரப் பெறாத கழிவு ரூ. 600-க்கு வகை செய்க.

(C.A.I.I.B. Nov. 68)

25. கீழ்க் கொடுக்கப்பட்டிருக்கும் இருப்புப் பட்டியலிலிருந்து 1954 டிசம்பர் 31-ல் முடியும் ஆண்டுக்கான வாணிக இலாப-நட்டக் கணக்குகளையும், அந்நாளிற்கான இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

இருப்புப் பட்டியல்

| பற்று | ரூ. | வரவு | ரூ. |
|---|---|---|---|
| பொறி வகை | 1,97,200 | | |
| தயாரிப்புக் கூலி | 3,49,650 | முதல் கணக்கு | 8,00,000 |
| ஊதியம் | 1,59,650 | | |
| மனைத்துணைப் பொருள் | 94,800 | பற்பல கடனீந்தோர் | 5,41,600 |
| உட்சுமை கூலி | 19,800 | வங்கிக் கடன் | 1,00,000 |
| வெளிச்சுமை கூலி | 21,500 | | |
| கட்டடம் | 2,50,000 | கொள்முதல் திருப்பம் | 11,400 |
| தயாரிப்புச் செலவு | 94,550 | | |
| ஈட்டுறுதியும் வரியும் | 41,750 | விற்பனை | 24,68,500 |
| வாணிக நற்பெயர் | 3,00,000 | | |
| பொதுச் செலவு | 81,420 | வராக் கடன் காப்பு | 20,000 |
| ஆலை எரி பொருளும் விசையும் | 12,760 | | |
| பற்பல கடனாளிகள் | 7,81,400 | | |
| மின் செலவு (ஆலை) | 9,860 | | |
| குதிரைச் செலவு (சரக்கு விநியோகத்திற்கு) | 24,730 | | |
| 1954 சனவரி 1-ல் சரக்கிருப்பு | 3,41,700 | | |
| குதிரைகளும் வண்டிகளும் | 51,650 | | |
| கொள்முதல் | 9,71,650 | | |
| விற்பனைத் திருப்பம் | 31,700 | | |
| தள்ளுபடி | 9,280 | | |
| வராக் கடன் | 14,850 | | |
| வட்டியும் வங்கிக் கட்டணமும் | 4,750 | | |
| வங்கி | 75,400 | | |
| ரொக்கம் | 1,450 | | |
| | 39,41,500 | | 39,41,500 |

சரிக்கட்ட வேண்டியவை:

(i) 1954 டிசம்பர் 31-ல் சரக்கிருப்பு ரூ 2,96,300.

(ii) தேய்மானங் கணக்கிடுக:

பொறி வகை 10%;

மனைத் துணைப் பொருள் 5%

குதிரைகளும் வண்டிகளும் ரூ. 10,000.

(iii) ஐயக் கடன் காப்பை 5% அளவில் வைத்திரு.

(iv) காலாவதியாகா ஈட்டுறுதி ரூ. 3,000, வரி 1,900.

(v) ஆலை மேலாளர்க்கு மொத்த இலாபத்தில் 1% கழிவு கொடுக்கப்பட வேண்டும்.

(vi) (ஆலை மேலாளர்க்குக் கொடுக்கவேண்டிய கழிவு போக மீதியுள்ள) நிகர இலாபத்தில் 5% கழிவு பொது மேலாளர்க்குக் கொடுக்கப்பட வேண்டும்.

(CAIIB.1955)

26. திரு. கோஷியின் ஏடுகளிலிருந்து எடுக்கப்பட்ட இருப்புகள் கீழ்க் கொடுக்கப்பட்டுள்ளன. அவற்றிலிருந்து 1968 டிசம்பர் 31-ல் முடியும் ஆண்டுக்கான வாணிக, இலாப-நட்டக் கணக்குகளையும், அந்நாளிற்கான இருப்பு நிலைக் குறிப்பையும் தயார் செய்க.

| | | ரூ. |
|---|---|---|
| தொழில் கட்டடம் | ... | 25,000 |
| வங்கி யிருப்பு (வ) | ... | 4,100 |
| வராக் கடன் | ... | 200 |
| ரொக்கம் | ... | 300 |
| முதல் | ... | 25,400 |
| கடனீந்தோர் | ... | 8,500 |
| ஈட்டிய தள்ளுபடி | ... | 600 |
| கடனாளிகள் | ... | 10,700 |
| வைப்புத் தொகை (ப) | ... | 4,800 |
| மனைத்துணைப் பொருள் | ... | 1,900 |
| பொதுச் செலவு | ... | 1,000 |

| | | ரூ. |
|---|---|---|
| முதலீடு | ... | 5,000 |
| முதலீட்டின்மீது வட்டி | ... | 100 |
| ஈட்டுறுதி | ... | 200 |
| வருமான வரி | ... | 300 |
| கொள் முதலுக்கான லாரி வாடகை | ... | 400 |
| 12% வட்டியில் வாங்கிய கடன் | ... | 7,400 |
| பல்வகை வரவு | ... | 500 |
| கொள்முதல் | ... | 45,600 |
| எழுதுபொருளும் அச்சுக் கூலியும் | ... | 700 |
| வரிகள் | ... | 800 |
| குடியிருப்போரிடம் பெற்ற வாடகை | ... | 900 |
| உட்திருப்பம் | ... | 1,000 |
| வராக் கடன் காப்பு | ... | 400 |
| விற்பனை | ... | 70,000 |
| சரக்கிருப்பு (1-1-1968) | ... | 5,000 |
| ஊதியம் | ... | 5,000 |
| தட்டெழுத்துப் பொறி | ... | 2,000 |
| கூலி | ... | 8,000 |

கீழ்க் கண்டவற்றைச் சரிக்கட்ட வேண்டும்:

(i) தேய்மானங் கண்டுபிடி:
  கட்டடம் $2\frac{1}{2}$ %
  மனைத் துணைப் பொருள்—5%

(ii) குடியிருப்போரிடமிருந்து பெற வேண்டிய வாடகை ரூ. 100.

(iii) முன் கட்டிச் செலுத்திய ஈட்டுறுதி ரூ. 50.

(iv) கடன் மீது வட்டி தரப்பட வேண்டும்.
  (கடன் 1-10-68 அன்று வாங்கப்பட்டது.)

(v) எழுது பொருள் கையிருப்பு ரூ. 200.

(vi) வராக் கடன் காப்பை ரூ. 135 ஆல் உயர்த்த வேண்டும்.

(vii) *31-12-1968-ல் சரக்கிருப்பு ரூ. 6,760.*

(Calicut University- Pre Degree. Oct. 1970)

27. 1955 மார்ச் 31-க்கான இராம்சொரூபத்தின் இருப்புப் பட்டியல் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. அவற்றிலிருந்து அந் நாளில் முடியும் ஆண்டுக்கான வாணிக, இலாப-நட்டக் கணக்கு களையும், அந்நாளிற்கான இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

| | ரூ. | ரூ. |
|---|---|---|
| இராம் சொரூபத்தின் முதல் கணக்கு ... | | 80,000 |
| இராம் சொரூபத்தின் எடுப்புக் கணக்கு ... | 12,000 | |
| மனைத் துணைப் பொருள் ... | 4,000 | |
| பொறி வகை ... | 30,000 | |
| புனைபொருள் உரிமை (1-4-1954-லிருந்து 10 ஆண்டுகட்கு) ... | 20,000 | |
| 1-4-1954-ல் சரக்கிருப்பு ... | 20,000 | |
| கொள் முதல் ... | 85,000 | |
| ஊதியமும் கூலியும் ... | 22,400 | |
| பற்பல கடனாளிகள் ... | 20,400 | |
| விற்பனை ... | | 1,32,000 |
| 1954-ல் காந்தியிடம் ஆண்டு வட்டி 6% க்கு வாங்கிய கடன் ... | | 10,000 |
| அஞ்சலும் தந்தியும் ... | 1,500 | |
| வாடகையும் வரியும் ... | 3,600 | |
| வராக் கடன் நீக்கப் பட்டது ... | 400 | |
| பற்பல கடனீந்தோர் ... | | 12,000 |
| தள்ளுபடி ... | | 600 |
| வாணிகச் செலவு ... | 200 | |
| காந்தியின் கடனுக்கு வட்டி ... | 150 | |
| ஈட்டுறுதி ... | 800 | |
| பயணச் செலவு ... | 500 | |
| பல்வகைச் செலவு ... | 300 | |
| ரொக்கம் ... | 3,050 | |
| வங்கி ... | 10,300 | |
| | 2,34,600 | 2,34,600 |

சரிக்கட்ட வேண்டியவை:

(i) *1955 மார்ச் 31-ல் சரக்கிருப்பு ரூ. 27,200.*

(ii) *1965 சனவரி 1-ல் ஒரு புதிய பொறியொன்று ரூ. 3,000-க்கு நிறுவப்பட்டது. இது பற்றிய பதிவொன்றும் செய்யப் படவில்லை. இதை நிறுவக் கொடுத்த கூலி ரூ 1,000- கூலிக் கணக்கில் சேர்க்கப்பட்டது.*

(iii) கடனாளிகளில் ரூ. 400 வராக் கடன் நீக்கப் பட வேண்டியுள்ளது.

(iv) கடனாளிகளில் 5% தள்ளுபடிக் காப்பு வைத்திருக்க வேண்டும்.

(v) ரூ. 1,000 மதிப்புள்ள சரக்கு விளம்பரப் பொருளாக இனமாக வழங்கப் பட்டது.

(iv) பொறி வகையில் 20%ம், மனைத் துணைப் பொருளில் 10%ம் தேய்மானம் கண்டுபிடிக்க வேண்டும்.

(Inter, Com. B.U. March 1955.)

28. 1948 டிசம்பர் 31-ம் நாளுக்குரிய இருப்புப் பட்டியல்.

| | | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|---|
| இராசாராம் முதல் | ... | | 4,205 |
| இராசாராம் எடுப்பு | ... | 710 | |
| பொறிவகை | ... | 950 | |
| 1948 சனவரி 1-ல் சரக்கிருப்பு | ... | 1,460 | |
| கொள்முதல் | ... | 10,362 | |
| கொள்முதல் திருப்பம் | ... | | 291 |
| விற்பனை | ... | | 11,906 |
| விற்பனைத் திருப்பம் | ... | 210 | |
| பொதுச் செலவு | ... | 440 | |
| வாடகை | ... | 120 | |
| வரிகள் | ... | 200 | |
| பயிற்சிப் பெறுநரின் முனைமம் | ... | | 80 |
| வங்கி மேல்வரைப்பற்று | ... | | 240 |
| வராக் கடன் | ... | 172 | |
| பற்பல கடனாளிகள் | ... | 3,200 | |
| பற்பல கடனீந்தோர் | ... | | 1,000 |
| ரொக்கம் | ... | 48 | ... |
| வராக் கடன் | ... | | 105 |
| | | 17,872 | 17,872 |

1948 டிசம்பர் 31-ல் முடியும் ஆண்டுக்கான வாணிக, இலாப-நட்டக் கணக்குகளையும், அந்நாளுக்கான இருப்பு-நிலைக் குறிப்பையும் தயார் செய்க. கீழ்க் கண்டவற்றிற்குச் சரிக்கட்டுப் பதிவுகளையும் தருக:

(i) பொறி வகை மீது 10% தேய்மானம் ஒதுக்குக.

(ii) கடனாளிகளில் 5% அளவுக்கு வராக் கடன் காப்பினை உயர்த்துக. கடனாளிகளில் $2\frac{1}{2}\%$ தள்ளுபடிக் காப்பு ஏற்படுத்துக.

(iii) சரக்கிலிருந்து தனக்காக ரூ 40 மதிப்புள்ள பொருள்களை இராசாராம் எடுத்துக்கொண்டார். இதற்கான பதிவு ஏதும் காணப்பட வில்லை.

(iv) பொறிகள் ரூ. 100 வாங்கியது தவறுதலாகக் கொள்முதலில் சேர்க்கப்பட்டிருந்தது.

(v) கூடியுள்ள வாடகை ரூ. 40.

(vi) வரிகள் ரூ. 80 முன் கூட்டிச் செலுத்தப் பட்டிருந்தது.

(vii) 31-12-1948 அன்று சரக்கு ரூ. 1,730 என மதிப்பிடப் பட்டது. இதில் எழுதுபொருள் இருப்பு ரூ. 20-ம் அடங்கியுள்ளது.

(viii) ஐந்தாண்டுகட்கென பயிற்சி பெறுநரிடமிருந்து முனைமம் 1-1-1947 அன்று பெறப்பட்டது. 1947-ல் ரூ. 20 நீக்கப் பட்டது. அதே தொகை 1948-ற்கும் நீக்கப்பட வேண்டும்.

(ix) பொதுச் செலவில் அடங்கியுள்ளது:

(1) எழுதுபொருள் வாங்கியது ரூ. 50.

(2) 31-12-1948-ல் வாங்கிய பொறி வகையைக் கொண்டுவரக் கொடுத்த சத்தம் ரூ 20 ஐ உள்ள டக்கிய சுமைகூலி ரூ. 80.

(3) பொறிவகையை நிறுவுவதற்குக் கொடுத்த கூலி ரூ. 30 உட்படக் கொடுத்த கூலி ரூ. 180. 1948 டிசம்பர் 31-ல் கொடுக்க வேண்டிய கூலி ரூ. 10.

(x) இலாப மின்றி விற்ற ரூ. 100 விற்பனையில் அடங்கி யுள்ளது. 1948 டிசம்பர் 31-ல் ஆன விற்பனை ரூ. 200 ஏடுகளில் பதிவாகி யிருக்கவில்லை.

(M.U.B. Com. March, 1953)

# 14. வரவு செலவுக் கணக்கு

## (Income and Expenditure Account)

பள்ளிகள், மருத்துவ மனைகள், கலை வளர்க்கும் மன்றங்கள் போன்ற நிறுவனங்கள் வாணிக நோக்குடன் செயல்படுவன அல்ல. அதாவது, இலாபம் ஈட்ட வேண்டும் என்ற எண்ணம் எள்ளளவும் இருப்பதில்லை. ஆகவே, வாணிகக் கணக்கு, இலாப-நட்டக் கணக்குப் போன்றவற்றை அவை தயாரிப்பதில்லை. எனினும், நடைமுறைச் செலவுகளை மேற்கொள்ளத் தேவையான வருவாய் உள்ளதா என்பதை அறிய விரும்பும்.

தொழில் வணிக நிறுவனங்கள் வைத்திருக்கும் எல்லா வகைக் கணக்கேடுகளையும் அவை வைத்திருப்பதில்லை. சாதாரண மாக ரொக்க ஏடு மட்டுமே எழுதி வருவர். ஆண்டு முடிவில் ரொக்க ஏட்டில் காணப்பெறும் பதிவுகளைக் கொண்டு அவ் வாண் டின் வரவு செலவுகளை அறிவர். இவற்றைக் கணக்கு வடிவத்தில் தயாரிக்கும் போழ்து, அது பெறுதல்—செலுத்தல் கணக்கு (Receipts and Payments Account) என்றழைக்கப்படுகிறது.

நடைமுறை வரவினம் அல்லது செலவினம், மூலதன வரவினம் அல்லது செலவினம் என்ற பாகுபாடு இல்லை. வரும் வரவனைத்தும் இதில் அடங்கும். செலுத்தும் ரொக்க மனைத்தும் இதில் பதிவுறும். ஓராண்டில் ஏற்பட்ட ரொக்க நடவடிக்கைகளின் சுருக்கமாக இது அமைகிறது. வரவுகள் பற்றுப் பகுதியிலும் செலுத்துவதெல்லாம் வரவுப் பகுதியிலும் எழுதப்படுகின்றன.

பெறுதல்—செலுத்தல் கணக்கின் சிறப்புத் தன்மைகள் :

1. கையில் உள்ள தொடக்க ரொக்கத்துடனும், வங்கியிலுள்ள தொடக்க இருப்புடனும் இக் கணக்குத் தொடங்குகிறது.

2. வரவுகளனைத்தையும் செலவுகளனைத்தையும் உள்ளடக்கியிருப்பதால் அவை வருமாண்டுக் குரியனவாகவும், சென்ற ஆண்டுக் குரியனவாகவும் இருக்கலாம். இவ்வாண்டுக்குரிய ரொக்க நடவடிக்கைகள் மட்டுமன்றி இவ்வாறு பிற ஆண்டுகட்குரிய வரவினமும் செலவினமும் இதில் காணப்பெறும்.

வரவு-செலவுத் தன்மையிலும் வேறுபாடு காட்டப்படுவதில்லை. முன்னர்க் கூறியவாறு, நடைமுறை வருவாயாயினும் மூலதன வருவாயாயினும்—வரவு என்றால்—இக் கணக்கில் பற்றுப் பகுதியில் காணப் பெறும் (பற்றுப் பகுதியே வரவுப் பகுதியாகும்). அவ்வாறே நடைமுறைச் செலவாயினும் மூலதனச் செலவாயினும் இதன் வரவுப் பகுதியில் எழுதப் பெறும் (வரவுப் பகுதி செலுத்துப் பகுதியாகும்). அதாவது தட்டெழுத்துப் பொறி வாங்கியதாயினும், ஊதியம் தந்ததாயினும் இக் கணக்கின் செலுத்துப் பகுதியில் எழுதப்பெறும்.

பெற்ற ரொக்கம் அல்லது காசோலை, செலுத்திய ரொக்கம் அல்லது காசோலை மட்டிலுமே இதில் பதிவாகின்றன. அதாவது ரொக்க ஏடு போன்றே இது அமைகிறது. இதனால் இவ் வாண்டில் இன்னும் கொடுபட வேண்டிய செலவினமோ பெற வேண்டிய வரவினமோ கணக்கில் எடுத்துக் கொள்ளப் படுவதில்லை. முன் கூட்டிச் செய்த செலவுக்கும் முன் கூட்டிப் பெற்ற வருமானத்துக்கும் இதில் வகை செய்வதில்லை.

இக் கணக்கின் இருப்பு, ஏற்பட்ட இலாபம் அல்லது இழப்பை உணர்த்துவதில்லை. ரொக்க இருப்பையும் வங்கியிருப்பையுமே இது காட்டுகிறது.

எடுத்துக்காட்டு 54 :

ஒரு மன்றத்தில் 1970-71-ற்குரிய கணக்குகள் கீழ்க் கொடுக்கப் பட்டுள்ளன. அவற்றிலிருந்து 30-6-1971-ல் முடிவுறும் ஆண்டுக்கான பெறுதல்—செலுத்தல் கணக்கைத் தயாரிக்க.

பெற்றவை :

| | | ரூ. |
|---|---|---|
| தொடக்க இருப்பு : | | |
| ரொக்கம் | ... 325 | |
| வங்கி | ... 1,000 | 1,325 |
| உறுப்பினர் தொகை | | |
| 1969-70 | ... 100 | |
| 1970-71 | ... 1,200 | |
| 1971-72 | ... 150 | 1,450 |

| | | |
|---|---|---|
| நுழைவுக் கட்டணம் | ... | 200 |
| நன்கொடை | ... | 4,500 |
| பழைய செய்தித் தாள்களை விற்றது | ... | 100 |

செலுத்தியவை :

| | | | |
|---|---|---|---|
| வாடகை | | ... | 650 |
| செய்தித் தாள்கள், வார இதழ்கள், முதலியன வாங்கியது | | ... | 1,200 |
| எழுதுபொருளும் அச்சுக் கூலியும் | | ... | 200 |
| ஊதியம் | | ... | 1,100 |
| அரசினர் கடன் பத்திரங்கள் வாங்கியது. | | ... | 2,000 |
| சில்லரைச் செலவுகள் | | ... | 150 |
| இறுதி யிருப்பு : | | | |
| ரொக்கம் | ... 200 | | |
| வங்கி | ... 2,075 | | 2,275 |

விடை :

30-6-1971-ல் முடியும் ஆண்டுக்கான

ப பெறுதல்—செலுத்தல் கணக்கு. வ

| | | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|
| தொடக்க இருப்பு : | | | | வாடகை | 650 | — |
| ரொக்கம் | | 325 | — | செய்தித்தாள், வார இதழ் முதலியவை வாங்கியது | 1,200 | — |
| வங்கி | | 1,000 | — | | | |
| உறுப்பினர் தொகை : | | | | எழுது பொருளும், அச்சுக் கூலியும் | 200 | — |
| 1969-70 | 100 | | | ஊதியம் | 1,100 | — |
| 1970-71 | 1,200 | | | அரசினர் கடன் பத்திரங்கள் | 2,000 | — |
| 1971-72 | 150 | 1,450 | — | சில்லரைச் செலவுகள் | 150 | — |
| நுழைவுக் கட்டணம் | | 200 | — | | | |
| நன்கொடை | | 4,500 | — | இறுதியிருப்பு : | | |
| பழைய செய்தித்தாள் விற்பனை | | 100 | — | ரொக்கம் 200 வங்கி 2,075 | 2,275 | — |
| | | 7,575 | | | 7,575 | — |

மேலே தயாரிக்கப்பட்ட பெறுதல்—செலுத்தல் கணக்கில் காட்டப்பட்ட இறுதியிருப்பு—ரொக்க, வங்கி யிருப்பேயாகும். அதை ஆதாயமாகக் கொள்ளக் கூடாது. அரசினர் கடன் பத்திரங்கள் வாங்கியது ஒரு மூலதனச் செலவாகும். ஆனால், அதுவும் இக் கணக்கில் இடம் பெற்றுள்ளது. சென்ற ஆண்டுக் குரிய உறுப்பினர் தொகை இவ் வாண்டில் பெற்றதும் அடுத்த ஆண்டுக் குரிய உறுப்பினர் தொகை இவ் வாண்டே பெற்றதும் இதில் இடம் பெற்றிருக்கின்றன. இன்னும் செலுத்த வேண்டியது பெற வேண்டியது பற்றியும் விவரம் இல்லை. இதிலிருந்து இவ் வாண்டில் ஏற்பட்ட ஆதாயத்தை இக் கணக்கு உணர்த்த முடியாது என்பது தெரிகின்றதன்றோ ? நடைமுறைச் செலவுகளை நடைமுறை வருவாயுடன் ஒப்பிட்டால்தான் இலாபம் அல்லது இழப்புத் தெரிய வரும். இதனை அறிய வேண்டின் வரவு-செலவு கணக்கையும் (Income and Expenditure Account) இருப்புநிலைக் குறிப்பையும் (Balance Sheet) தயாரிக்க வேண்டும்.

## வரவு செலவுக் கணக்கு. (Income and Expenditure Account)

இது ஒரு இலாப-நட்டக் கணக்குப் போன்றே இருக்கும். ஓர் ஆண்டுக் குரிய செலவினங்களையும் வரவினங்களையும் மட்டும் உள்ளடக்கி, அவ் வாண்டின் இறுதி விளைவை உணர்த்துவதாகும். தொடக்க இருப்போ, இறுதியிருப்போ இதில் இடம் பெறுவதில்லை. நடைமுறைச் செலவினங்கள், நடைமுறை வரவினங்கள் மட்டிலுமே இதில் காணப் பெறும்.

### பெறுதல்—செலுத்தல் கணக்குக்கும் வரவு செலவுக் கணக்குக்கும் உள்ள வேறுபாடுகள்

| பெறுதல் — செலுத்தல் கணக்கு | வரவு செலவுக் கணக்கு |
|---|---|
| குறிப்பிட்ட காலத்தில் நிகழ்ந்த ரொக்க நடவடிக்கைகளின் சுருக்கமாக இது அமைகிறது. | வாணிக நோக்கற்ற மன்றங்களின் இலாப-நட்டக் கணக்காய் இது திகழ்கிறது. |
| ரொக்க இருப்புடன் இது தொடங்குகிறது. | ரொக்கக் கணக்கே இதில் இடம் பெறுவதில்லை. எந்த இருப்புடனும் இது தொடங்குவதில்லை. |

| | |
|---|---|
| குறிப்பிட்ட காலத்தில் ரொக்கம் பெற்றதும் செலுத்தியதும் இதில் இடம் பெறும். (அது சென்ற ஆண்டுக் குரியதாயினும் வருமாண்டுக் குரியதாயினும் வேறுபாடில்லை நடப்பாண்டில் நிகழ்ந்த அனைத்து ரொக்க நடவடிக்கைகளும் இதில் இடம் பெறுகின்றன. | குறிப்பிட்ட காலத்துக் குரிய வரவினமும் செலவினமும் மட்டுமே இடம் பெறும். |
| செலுத்த வேண்டிய செலவு, பெற வேண்டிய வருமானம், முன் கூட்டிச் செலுத்தியது, பெற்றது போன்றவை கணக்கில் எடுத்துக் கொள்ளப் படுவதில்லை. | இவை கணக்கிலெடுத்துக் கொள்ளப்படுகின்றன. அப்பொழுது தான் உண்மையான இலாப-நட்டத்தை உணர முடியும். |
| நடைமுறைச் செலவு, வரவு, மூல தனச் செலவு வரவு போன்ற வேறுபாடில்லை. ரொக்கம் பெற்றது, செலுத்தியது எத் தன்மைத் தாயினும் இதில் இடம் பெறும். | நடைமுறைச் செலவுகளும் வரவினங்களும் மட்டிலுமே இதில் இடம் பெறும். மூலதனச் செலவுகளும் வரவினங்களும் இருப்புநிலைக் குறிப்பிற் கெடுத்துச் செல்லப்படுகின்றன. |
| வரவுகளனைத்தும் பற்றுப் பகுதியிலும், செலுத்தியவை வரவுப் பகுதியிலும் காட்டப்படுகின்றன. | செலவுகள் பற்றுப் பகுதியிலும் வரவுகள் வரவுப் பகுதியிலும் காட்டப்படுகின்றன. |
| இரு பகுதிகட்கும் உள்ள வேறுபாட்டுத் தொகை இறுதியிலுள்ள ரொக்க, வங்கியிருப்பைக் காட்டும். | வரவுப் பகுதி அதிகரிப்பின் செலவினும் வரவின் மிகுதியைக் காட்டும்; பற்றுப் பகுதி அதிகமிருப்பின் வரவினும் செலவின் மிகுதியைக் காட்டும். இது முதல் நிதி (Capital Fund) கணக்கிற்கு எடுத்துச் செல்லப் படுகிறது. |
| இருப்புநிலைக் குறிப்பு இத்துடன் தயாரிக்க வேண்டும் என்ற தேவையில்லை. | இத்துடன் இருப்புநிலைக் குறிப்பு தயாரித்தே ஆக வேண்டும். |

### பெறுதல்—செலுத்தல் கணக்கினின்றும் வரவு செலவுக் கணக்கைத் தயாரிக்கும் முறை

வரவு செலவுக் கணக்குத் தயாரிக்க வேண்டிய விவரங்கள் பெரும்பாலும் பெறுதல்—செலுத்தல் கணக்கில் கிடைக்கும்.

பெறுதல்—செலுத்தல் கணக்கில் காணப்படும் பதிவுகளில் நடைமுறை வரவு செலவினங்களை மட்டும் எடுத்துக் கொள்ள வேண்டும். மூலதன வரவையோ, மூலதனச் செலவையோ இருப்பு நிலைக் குறிப்பிற்கே எடுத்துச் செல்ல வேண்டும். சென்ற ஆண்டுக்குரிய வரவினங்களையும் செலவினங்களையும் நீக்க வேண்டும். வருமாண்டுகட்காக நடப் பாண்டிலேயே ஏற்ற செலவினங்களையும் வரவினங்களையும் நீக்க வேண்டும். இன்னும் பெற வேண்டிய வருமானத்தையும் செலுத்த வேண்டிய செலவினையும் ஆய்ந்து கணக்கில் சேர்த்துக் கொள்ள வேண்டும். தொடக்க இருப்புகளையும் இறுதி இருப்புகளையும் விட்டுவிட வேண்டும். சொத்துகள் மீது தேய்மானம், வராக் கடன் போன்றவற்றிற்கும் வகை செய்ய வேண்டும். இவ்வாறு வரவு செலவுக் கணக்கைத் தயாரிக்கலாம்.

எடுத்துக் காட்டு 55:

*1970-ல் பெற்ற உறுப்பினர் தொகை ரூ. 1,200-ல் ரூ. 200 1969-க்கும் ரூ. 100, 1971-க்கும் உரியது. 31-12-1970-ல் இன்னும் வரவேண்டிய உறுப்பினர் தொகை ரூ. 150 எனக் கொண்டால் தேவையான சரிக்கட்டுப் பதிவுகள்:*

1969-ஆம் ஆண்டில் பெற வேண்டிய உறுப்பினர் தொகைக்காக பெற வேண்டிய உறுப்பினர் தொகை கணக்கில் பற்றும் உறுப்பினர் தொகைக் கணக்கில் வரவும் வைத்துச் சரிக்கட்டியிருப்பர். இவ்வாண்டில் அத் தொகையைப் பெற்றதும் சென்ற ஆண்டு செய்த சரிக்கட்டுப் பதிவை மாற்ற வேண்டும் அல்லவா? கீழ்க் கண்டவாறு அதை மாற்ற வேண்டும்.

| | ரூ | ரூ |
|---|---|---|
| *உறுப்பினர் தொகை க/கு* | 200 | |
| பெற வேண்டிய உறுப்பினர் தொகை க/கு | | 200 |
| *(சென்ற ஆண்டுக்குரிய உறுப்பினர் தொகை இவ்வாண்டில் பெற்றது.)* | | |

அடுத்த ஆண்டுக்காக (1971) இப்பொழுதே பெற்ற உறுப்பினர் தொகையையும் சரிக் கட்ட வேண்டும். உறுப்பினர் தொகையில் வருமாண்டுக் குரியதைக் கழிக்க வேண்டும். இதற்குத் தேவையான சரிக்கட்டுப் பதிவு:

| | ரூ. | ரூ. |
|---|---|---|
| *உறுப்பினர் தொகை க/கு* ... ப | 100 | |
| முன் கூட்டிப் பெற்ற உறுப்பினர் தொகை க/கு ... | | 100 |
| *(1971-ஆம் ஆண்டுக்காக முன் கூட்டிப் பெற்ற உறுப்பினர் தொகை)* | | |

பின்னர், நடப்பாண்டுக் குரிய (1970) இன்னும் செலுத்தப் பெறுமலிருக்கும் உறுப்பினர் தொகை ரூ. 150. இது இன்னும் பெற வேண்டிய வருமானம். எனவே, இதை உறுப்பினர் தொகை யுடன் கூட்டிக் கொள்ள வேண்டுமல்லவா? இதற்கு வேண்டிய சரிக் கட்டுப் பதிவு :

| | ரூ. | ரூ. |
|---|---|---|
| பெற வேண்டிய உறுப்பினர் தொகை க/கு ப | 150 | |
| உறுப்பினர் தொகை க/கு | | 150 |

இனி பேரேட்டுக் கணக்குகளைக் காண்போம்.

ப — பெற வேண்டிய உறுப்பினர் தொகை க/கு — வ

| நாள் | விவரம் | | தொகை ரூ. | நாள் | விவரம் | | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 1970 சன 1 | இருப்பு கீ/கொ | | 200 | 1970 டிசம் 31 | உறுப்பினர் தொகை (மாற்றம்) | | 200 |
| டிசம் 31 | உறுப்பினர் தொகை | | 150 | ,, | இருப்பு கீ/இ | | 150 |
| | | | 350 | | | | 350 |
| 1971 சன 1 | இருப்பு கீ/கொ | | 150 | | | | |

ப — உறுப்பினர் தொகைக் கணக்கு — வ

| | | | ரூ. | | | | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1970 டிச 31 | பெற வேண்டிய உறுப்பினர் தொகை—மாற்றம் | | 200 | — | 1970 டிச 31 | ரொக்கம் (பல்வகை) | | 1,200 | — |
| ,, | முன் கூட்டிப் பெற்ற உறுப்பினர் தொகை | | 100 | — | ,, | பெற வேண்டிய உறுப்பினர் தொகை | | 150 | — |
| ,, | வரவு-செலவுக் க/கு —மாற்றம் | | 1,050 | — | | | | | |
| | | | 1,350 | — | | | | 1,350 | — |

## முன் கூட்டிப் பெற்ற உறுப்பினர் தொகைக் கணக்கு

| 1970 | | ரூ. | | 1970 | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|
| டிச 31 | இருப்பு கீ/இ | 100 | — | டிச 31 | உறுப்பினர் தொகை | 100 | — |
| | | | | | இருப்பு கீ/கொ | 100 | — |

## 31-12-1970-இல் முடியும் ஆண்டுக்கான வரவு—செலவுக் கணக்கு

| | ரூ | | | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|
| | | | உறுப்பினர் தொகை | 1,200 | | |
| | | | கூட்டு: பெற வேண்டியது | 150 | | |
| | | | | 1,350 | | |
| | | | கழி: 1969-க்காக பெற்றது | 200 | | |
| | | | | 1,150 | | |
| | | | ,, 1971-க்காக முன்கூட்டிப் பெற்றது... | 100 | 1,050 | — |

## 31-12-1970-ற்கான இருப்பு நிலைக் குறிப்பு

| | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| முன் கூட்டிப் பெற்ற உறுப்பினர் தொகை | 100 | — | பெற வேண்டிய உறுப்பினர் தொகை | 150 | — |

இவ்வாறே செலவினங்கட்கும் சரிக்கட்ட வேண்டும்,

கீழ்க் கண்ட குறிப்புகளையும் நினைவிற் கொள்க.

1. மீண்டும் மீண்டும் பெறுந் தன்மையற்ற வரவினத்தை (Non-recurring receipts) வரவு செலவுக் கணக்கிற்கு எடுத்துச் செல்லத் தேவையில்லை. எடுத்துக்காட்டாக ஆயுள் உறுப்பினர் தொகை ஒரு முறை கட்டிவிடின் பின் கட்டத் தேவையில்லை. எனவே, இதனை நேரடியாக முதல் நிதிக் கணக்கில் (Capital Fund) காட்டி விடலாம்.

2. நுழைவுக் கட்டணத்தைச் சாதாரணமாக வரவு செலவுக் கணக்கிலேயே வரவு வைத்திடலாம். இதனையும் முதல் நிதிக் கணக்கில் சேர்த்திடலாம் என்ற கருத்தும் உண்டு.

3. குறிப்பிட்ட நோக்கத்துக்குப் பெறும் நன்கொடை நிதி போன்றவற்றை (எடுத்துக் காட்டு: பரிசுநிதி, கட்டட நிதி, விளையாட்டுப் போட்டி நிதி) நேரடியாக இருப்பு நிலைக் குறிப்பில் பொறுப்புகள் பக்கத்திற்கு எடுத்துச் செல்ல வேண்டும். அவற்றின் பொருட்டுச் செலவான தொகைகளை அவற்றிலிருந்து கழித்துக் காட்ட வேண்டும். அவ்வகைச் செலவுகளை வரவுசெலவுக்கணக்கில் எழுதக்கூடாது.

தொழில் நிறுவனங்களில் உள்ள முதல் கணக்கு போன்றது வணிக நோக்கற்ற நிறுவனங்களில் உள்ள முதல் நிதிக் கணக்கு. ஆயுள் உறுப்பினர் தொகை, நன்கொடைகள், மரபுரிமைச் சொத்துகள் (Legacies) போன்றவை சேர்க்கப்பட்ட நிதி, முதல் நிதி எனப்படுகிறது. இத்துடன் ஒவ்வோராண்டும் நடக்கும் செலவினும் வரவு மிகுதித் தொகை கூட்டப்படுகிறது; வரவினும் செலவு மிகுதி கழிக்கப்படுகிறது.

சென்ற ஆண்டுக் கொடுக்கப்பட்ட சொத்துகளுடன் இவ்வாண்டில் வாங்கியவை கூட்டப்பட வேண்டும். விற்றவை சரிக்கட்டப்பட வேண்டும். இவ் விவரங்கள் வரவு செலுத்துக் கணக்கில் கிடைக்கும்.

புதுப் பொறுப்புகளை இருப்பு நிலைக் குறிப்பில் எழுத வேண்டும். கடன் தீர்க்கப்பட்ட விவரம் வரவு செலுத்துக் கணக்கில் செலுத்துப் பகுதியிலிருக்கும். இதனையும் கூர்ந்து சரிக்கட்ட வேண்டும்.

பெறுதல்—செலுத்தல் கணக்குக் காட்டும் இறுதி யிருப்பு ரொக்க, வங்கி யிருப்புகளாகும். எனவே, இவை இருப்பு நிலைக் குறிப்பில் சொத்துகள் பகுதியில் காட்டப்பட வேண்டும்.

எடுத்துக் காட்டு 55 A:

நாமக்கல் இலக்கிய மன்றத்தின் 31-12-71-ல் முடியும் ஆண்டுக்கான பெறுதல்—செலுத்தல் கணக்கு கீழ்க் கொடுக்கப் பட்டிருக்கிறது. அதிலிருந்தும், பின்னர்க் கொடுக்கப் பட்டிருக்கும் விவரங்களிலிருந்தும், அவ்வாண்டுக் குரிய வரவு—செலவுக் கணக்கினைத் தயாரிக்கவும்.

| | பெறுதல் | ரூ. | | செலுத்துதல் | ரூ. |
|---|---|---|---|---|---|
| 1971 சன 1 | இருப்பு : ரொக்கம் 260, வங்கி 3,200 | 3,460 | 1971 திச 31 | வாடகை | 550 |
| | | | | எழுது பொருளும் அச்சுக் கூலியும் | 120 |
| டிச 31 | 'உ.' தொகை | 870 | | மனைத்துணைப் பொருள் | 200 |
| | நுழைவுக் கட்டணம் | 130 | | அஞ்சல் | 30 |
| | மிதி வண்டி விற்றது | 200 | | ஊதியம் | 600 |
| | முதலீட்டின் மீது வட்டி | 200 | | செய்தித் தாள்கள் முதலியன வாங்கியது. | 650 |
| | சொற்பொழிவுக் கூட்ட வரவு | 930 | | அரசினர் கடன் பத்திரங்கள் | 2,000 |
| | நன்கொடை | 2,500 | | நூல்கள் வாங்கியது | 500 |
| | பழைய செய்தித் தாள்கள் முதலியன விற்றது | 50 | | சொற்பொழிவுக் கூட்டச் செலவு | 780 |
| | | | | இருப்பு : ரொக்கம் 150, வங்கி 2,760 | 2,910 |
| | | 8,340 | | | 8,340 |

நன்கொடையில் பாதித் தொகையை நடைமுறை வரவாகக் கொள்க. உறுப்பினர் தொகையில் ரூ. 70, 1971-ஆம் ஆண்டுக்கும், ரூ. 50, 1972-ஆம் ஆண்டுக்கும் உரியன. வாடகை தர வேண்டியது ரூ. 50. முதலீட்டின் மீது பெற வேண்டிய வட்டி ரூ. 100.

விடை

**1971, டிசம்பர் 31-ல் முடியும் ஆண்டுக்கான நாமக்கல் இலக்கிய மன்றத்தின் வரவு—செலவு க/கு**

ப                      வ

| | | ரூ. | | | ரூ. |
|---|---|---|---|---|---|
| வாடகை | 550 | | உறுப்பினர் தொகை | 870 | |
| கூட்டு தர வேண்டியது | 50 | 600 | கழி 1970 ஆம் ஆண்டு உ. தொகை | 70 | |
| | | | | 800 | |
| எழுது பொருளும் அச்சுக் கூலியும் | | 120 | ,, முன் கூட்டிப் பெற்ற உ. தொகை | 50 | 750 |
| அஞ்சல் | | 30 | நுழைவுக் கட்டணம் | | 130 |
| ஊதியம் | | 600 | முதலீட்டு வட்டி | 200 | |
| செய்தித்தாள் முதலியவை | | 650 | கூட்டு பெற வேண்டியது | 100 | 300 |
| சொற்பொழிவுக் கூட்டச் செலவு | | 780 | சொற்பொழிவுக் கூட்ட வரவு | | 930 |
| செலவினும் மிகுதியான வரவு — முதல் நிதிக்கு எடுத்துச் செல்லப் படுகிறது. | | 630 | நன்கொடை | | 1,250 |
| | | | பழைய செய்தித்தாள்கள் முதலியன விற்றது | | 50 |
| | | 3,410 | | | 3,410 |

(சில கணக்குகளில் முதல் நிதி கொடுக்கப் படாமலிருக்கலாம். இவற்றைக் கண்டுபிடிக்கச் சென்ற ஆண்டின் இருப்புநிலைக் குறிப்பைத் தயாரிக்க வேண்டும். பெறுதல்—செலுத்தல் கணக்குகளில் உள்ள சில விவரங்களிலிருந்தும் கொடுக்கப்பட்ட சில குறிப்புகளிலிருந்தும் இதைத் தயாரிக்கலாம். சொத்துகளினின்றும் கொடுக்கப்பட்ட பொறுப்புகளைக் கழித்தால் முதல் நிதித் தொகை கிடைக்கிறது.)

எடுத்துக்காட்டு 56 :

தென்னக விளையாட்டுக் கழகத்தின் 30-6-1971-ல் முடியும் ஆண்டுக்கான பெறுதல்—செலுத்தல் கணக்கு கீழ்க் கொடுக்கப் பட்டுள்ளது.

| வரவு | | தொகை | செலுத்தல் | | தொகை |
|---|---|---|---|---|---|
| | | ரூ. | | | ரூ. |
| இருப்பு : | | | அரங்க ஏவலர் கூலி (Ground men's fees) | | 1,000 |
| ரொக்கம் | 265 | | நில வாடகை | | 500 |
| வங்கியில் ரொக்கம் | 4,700 | 4,965 | விளையாட்டரங்கக் கண்காணிப்புச் செலவு | | 2,000 |
| நன்கொடை | | 2,900 | | | |
| உறுப்பினர் தொகை : | | | விளையாட்டுக் கருவிகள் வாங்கியது | | 2,500 |
| 1969-70 | 350 | | | | |
| 1970-71 | 10,000 | | | | |
| 1971-72 | 200 | 10,550 | பயிற்றுவிப்பாளர் (Coaches) கட்டணம் | | 3,600 |
| நுழைவுக் கட்டணம் | | 200 | முதலீடு செய்தது | | 2,500 |
| ஆயுள் உறுப்பினர் தொகை | | 1,205 | ஊதியம் | | 1,650 |
| விளையாட்டுப் போட்டி நிதி | | 4,850 | விளையாட்டுப் போட்டிச் செலவுகள் | | 2,975 |
| பல்வகை வரவு | | 375 | புல் வெட்டும் பொறி (Mowing Machine) | | 5,000 |
| புல் விற்றது | | 200 | எழுதுபொருளும் அச்சுக் கூலியும் | | 300 |
| வாடகை பெற்றது | | 2,400 | இருப்பு கீ/இ | | |
| | | | ரொக்கம் | 250 | |
| | | | வங்கி | 5,370 | 5,620 |
| | | 27,645 | | | 27,645 |

1-7-70-ல் இருந்த சில பேரேட்டுக் கணக்குகள்: கழக நிலமும் கட்டடமும் ரூ. 50,000 ; விளையாட்டுக் கருவிகள் ரூ. 1,500 ; மனைத் துணைப் பொருள்கள் ரூ. 2,000 ; இவ்வாண்டில் பெற்ற உறுப்பினர் தொகையில் 1971-72-ஆம் ஆண்டுக்காகப் பெற்றது ரூ. 200 அடங்கியுள்ளது.

30-6-1971-ல் விளையாட்டுக் கருவிகள் ரூ. 2,900 என மதிப்பிடப்பட்டன. புல்வெட்டும் பொறி 1-4-1971-ல் வாங்கப்பட்டது. அதன் மீது 20%ம், மனைத் துணைப் பொருள் மீது 5%ம் தேய்மானம் கணக்கிடுக. நுழைவுக் கட்டணத்தை மூலதன வரவாக்குக.

| | | 30-6-70 | 30-6-71 |
|---|---|---|---|
| | | ரூ. | ரூ. |
| வாடகை பெற வேண்டியது | | 100 | 200 |
| முதலீட்டின் மீது பெறவேண்டிய வட்டி | | | 125 |
| அச்சுக் கூலி தர வேண்டியது | ... | 50 | |
| ஊதியம் | ... | 200 | 150 |
| உறுப்பினர் தொகை பெறவேண்டியது | ... | 350 | 300 |

30-6-1971-ல் முடியும் ஆண்டுக்கான வரவு செலவுக் கணக்கையும், அந்நாளிற்கான இருப்பு நிலைக் குறிப்பைத் தயார் செய்க.

30-6-1970-ல் உள்ள முதல் நிதியைக் கண்டுபிடிக்க, அந்நாளிற்கான இருப்பு நிலைக் குறிப்பையும் தயாரிக்க வேண்டும்.
அது கீழ்க் காட்டிய வகையில் இருக்கும்.

தென்னக விளையாட்டுக் கழகத்தின்
30-6-1970-க்கான இருப்பு நிலைக் குறிப்பு.

| பொறுப்புகள் | | தொகை | சொத்துகள் | தொகை |
|---|---|---|---|---|
| | | ரூ. | | ரூ. |
| கொடுபட வேண்டிய அச்சுக்கூலி | 50 | | ரொக்கம் | 265 |
| | | | வங்கி | 4,700 |
| ஊதியம் | 200 | 250 | மனைத்துணைப் பொருள்கள் | 2,000 |
| முதல் நிதி (சமப்படுத்தும் தொகை) | | 58,665 | விளையாட்டுக் கருவிகள் | 1,500 |
| | | | நிலமும் கட்டடமும் | 50,000 |
| | | | பெறவேண்டிய உறுப்பினர் தொகை | 350 |
| | | | பெறவேண்டிய வாடகை | 100 |
| | | 58,915 | | 58,915 |

(30-6-1970-ல் கொடுபட வேண்டிய செலவினங்கள் அவ்விருப்பு நிலைக் குறிப்பில் பொறுப்புகள் பகுதியிலும் வரவேண்டியவை சொத்துகள் பகுதியிலும் காட்டப் பெறுமன்றோ? 30-6-70-ல் உள்ள சொத்துக் கணக்குகள் மட்டிலுமே அந்நாளிற்

கான இருப்பு நிலைக் குறிப்பில் இடம்பெற வேண்டும். இவ்வாண்டுக் குரிய பெறுதல்—செலுத்தல் கணக்கில் பற்றுப் பகுதியிலுள்ள தொடக்க ரொக்க, வங்கி யிருப்பும் 30-6-1970-க் கானவை தானே? எனவே, இவ் விருப்பு நிலைக் குறிப்பில் இடம் பெறுகின்றன.)

இப்பொழுது வரவு செலவுக் கணக்கையும் இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்கலாம்.

**30-6-1971-ல் முடியும் ஆண்டுக்கான**
**வரவு செலவுக் கணக்கு** வ

| விவரம் | | தொகை ரூ. | விவரம் | | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|
| அரங்க ஏவலர் கூலி | | 1,000 | உறுப்பினர் தொகை | 10,550 | |
| நிலவாடகை | | 500 | கழி : 1967-70க் குரியது 350 | | |
| விளையாட்டரங்கக் கண் காணிப்புச் செலவு | | 2,000 | ,, 1971-72க்கு முன் கூட்டிப் பெற்றது 200 | 550 | |
| பயிற்றுவிப்பாளர் கட்டணம் | | 3,600 | | 10,000 | |
| ஊதியம் | 1,650 | | கூட்டு : பெற வேண்டியது | 300 | 10,300 |
| கழி : 1969-70க் குரியது | 200 | | | | |
| | 1,450 | | பல்வகை வரவு | | 375 |
| கூட்டு : செலுத்த வேண்டியது | 150 | 1,600 | புல் விற்றது | | 200 |
| எழுது பொருளும் அச்சுக் கூலியும் | 300 | | வாடகை | 2,400 | |
| கழி . 1969–70-க் குரியது | 50 | 250 | கழி : 1969-70க் காகப் பெற்றது | 100 | |
| | | | | 2,300 | |
| | | | கூட்டு : பெற வேண்டியது | 200 | 2,500 |
| தேய்மானம் : விளையாட்டுக் கருவிகள் | 1,100 | | முதலீட்டின் மீது பெற வேண்டிய வட்டி | | 125 |
| புல்வெட்டும் எந்திரம் | 250 | | | | |
| மனைத்துணைப் பொருள் | 100 | 1,450 | | | |
| முதல் நிதி :- செலவினும் மிகுதியான வரவு | | 3,100 | | | |
| | | 13,500 | | | 13,500 |

### 30-6-1971-க்கான இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | | தொகை ரூ. | சொத்துகள் | | தொகை |
|---|---|---|---|---|---|
| முன் கூட்டிப் பெற்ற உறுப்பினர் தொகை | | 200 | ரொக்கம் | | 250 |
| | | | வங்கி | | 5,370 |
| | | | முதலீடு | | 2,500 |
| செலுத்த வேண்டிய ஊதியம் | | 150 | மனைத்துணைப் பொருள் | 2,000 | |
| | | | கழி : தேய்மானம் | 100 | 1,900 |
| விளையாட்டுப் போட்டி நிதி : பெற்றது | 4,850 | | விளையாட்டுக் கருவிகள் | 1,500 | |
| | | | கூட்டு : வாங்கியது | 2,500 | |
| | | | | 4,000 | |
| கழி : செல வழிந்தது | 2,975 | 1,875 | கழி : தேய்மானம் | 1,100 | 2,900 |
| முதல் நிதி : 1-7-1970-ல் | 58,665 | | புல் வெட்டும் பொறி | 5,000 | |
| | | | கழி : தேய்மானம் | 250 | 4,750 |
| கூட்டு : நன்கொடை | 2,900 | | நிலமும் கட்டடமும் | | 50,000 |
| நுழைவுக் கட்டணம் | 200 | | பெற வேண்டியவை : | | |
| ஆயுள் உறுப்பினர் தொகை | 1,205 | | உறுப்பினர் தொகை | 300 | |
| செலவினும் மிகுதியான வரவு | 3,100 | 66,070 | வாடகை | 200 | |
| | | | முதலீட்டின் மீது வட்டி | 125 | 625 |
| | | 68,295 | | | 68,295 |

எடுத்துக்காட்டு 57 :

முத்தமிழ் இலக்கிய மன்றத்தின் 31-12-1970-க்கான இருப்பு நிலைக் குறிப்பு கீழ்க் கொடுக்கப்பட்டுள்ளது.

| பொறுப்புகள் | | தொகை | சொத்துகள் | | தொகை |
|---|---|---|---|---|---|
| | | ரூ. | | | ரூ. |
| கடனீந்தோர் | | 2,500 | ரொக்கம் | | 150 |
| கொடுபட வேண்டிய ஊதியம் | | 200 | வங்கி | | 3,275 |
| முன் கூட்டிப் பெற்ற உறுப்பினர் தொகை | | 100 | வங்கியில் தவணை வைப்பு | | 5,000 |
| முதல்நிதி | 50,400 | | அரசினர் கடன் பத்திரங்கள் | | 3,000 |
| கூட்டு : செலவினும் மிகுதியான வரவு | 1,850 | 52,250 | பற்பல கடனாளிகள் : உறுப்பினர் தொகை நிலுவை | 300 | |
| | | | சொற்பொழிவு மன்ற வாடகை | 200 | 500 |
| | | | நூல்கள் (நூலகம்) | | 15,000 |
| | | | மனைத்துணைப் பொருள் | | 2,950 |
| | | | கட்டடம் | | 25,000 |
| | | | முன் கூட்டிச் செலுத்திய ஈட்டுறுதி | | 125 |
| | | | எழுது பொருள் இறுதியிருப்பு | | 50 |
| | | 55,050 | | | 55,050 |

31-12-1971-ல் முடியும் ஆண்டுக்கான ரொக்க நடவடிக்கைகள்

| பெறுதல் | தொகை | செலுத்தல் | தொகை |
|---|---|---|---|
| | ரூ. | | ரூ. |
| தொடக்க இருப்பு | | ஊதியம் | 2,655 |
| ரொக்கம் 150 | | நகர் மன்ற வரி | 250 |
| வங்கி 3,275 | | ஈட்டுறுதி | 475 |
| வங்கியில் தவணை வைப்பு 5,000 | 8,425 | சென்ற ஆண்டுக் கடனீந்தோர்க்குச் செலுத்தியது | 2,500 |
| நுழைவுக் கட்டணம் | 325 | புது நூல்கள் வாங்கியது | 2,000 |
| உறுப்பினர் தொகை | 9,600 | நாளிதழ், வார இதழ், திங்கள் இதழ்கட்குச் செலுத்ியது. | 900 |
| அரசினர் கடன் பத்திரங்கள் மீதான வட்டி | 105 | சொற்பொழிவுச் செலவுகள் | 2,400 |
| சொற்பொழிவு மன்ற வாடகை | 500 | தட்டெழுத்துப் பொறி | 2,200 |
| மனைத்துணைப் பொருள் விற்றது (1-1-71-ல் இதன் மதிப்பு ரூ. 400) | 300 | 4% அரசினர் கடன் பத்திரங்கள் வாங்கியது | 2,000 |
| | | எழுதுபொருள் | 250 |
| | | அஞ்சல் | 75 |
| பழைய செய்தித் தாள்கள் முதலியன விற்றது | 150 | இறுதி இருப்புகள் : | |
| | | ரொக்கம் 274 | |
| சொற்பொழிவுக் கூட்டங்களின் வசூல் | 4,300 | வங்கி 2,726 | |
| | | வங்கியில் தவணை வைப்பு 5,000 | 8,000 |
| | 23,705 | | 23,705 |

சில குறிப்புகள் :

ஊதியம் தர வேண்டியது ரூ. 345

1-4-71-ல் புதிய அலமாரிகள் ரூ. 2,800-க்கு வாங்கியது இன்னும் செலுத்தப்படவில்லை.

எழுதுபொருள் சரக்கிருப்பு (31-12-71) ரூ. 75

உறுப்பினர் தொகையில் ரூ. 200, 1972 ஆம் ஆண்டுக்காகப் பெற்றது அடங்கியுள்ளது. இன்னும் பெற வேண்டிய உறுப்பினர் தொகை ரூ. 150.

சொற்பொழிவு மன்ற வாடகை ரூ. 150.

தவணை வைப்பு மீது 6% வட்டியும் வர வேண்டியுள்ளது.

அரசினர் கடன் பத்திரங்கள் 1-7-1971-ல் வாங்கப்பட்டன. வட்டி கூடியுள்ளது.

தேய்மானம் கணக்கிடுக: கட்டடம் 3% மனைத்துணைப் பொருள் மீது 10% நூல்கள் 10% மனைத்துணைப் பொருள் 30-6-1971-ல் விற்கப்பட்டது.)

மேற் குறிப்பிட்ட விவரங்களிலிருந்து 31-12-1971-ல் முடியும் ஆண்டுக்கான வரவு செலவுக் கணக்கையும், அந்நாளுக்குரிய இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க.

விடை :

## முத்தமிழ் இலக்கிய மன்றத்தின்
## *31-12-1971*-ல் முடியும் ஆண்டுக்கான வரவு செலவுக் கணக்கு

| ப | | ரூ. | வ | | | ரூ. |
|---|---|---|---|---|---|---|
| ஊதியம் | 2,655 | | உறுப்பினர் தொகை | | 9,600 | |
| கழி: 1970-க் குரியது | 200 | | கூட்டு: சென்ற ஆண்டில் பெற்றது. | | 100 | |
| | 2,455 | | | | | |
| கூட்டு: தர வேண்டியது | 345 | 2,800 | பெற வேண்டியது | | 150 | |
| | | | | | 9,850 | |
| நகர் மன்ற வரி | | 250 | கழி : | | | |
| ஈட்டுறுதி | 475 | | 1970-க் குரியது | 300 | | |
| கூட்டு: 1970-ல் முன் கூட்டிச் செலுத்தியது | 125 | 600 | 1972-க் குரியது | 200 | 500 | 9,350 |
| நாளிதழ் முதலியவற்றிற்குச் செலுத்தியது | | 900 | நுழைவுக் கட்டணம் | | | 325 |
| சொற்பொழிவுச் செலவுகள் | | 2,400 | அரசினர் கடன் பத்திரங்கள் மீது வட்டி | | 105 | |
| எழுது பொருள் | 250 | | கூட்டு: கூடிய வட்டி | | 40 | 145 |
| கூட்டு: தொடக்க இருப்பு | 50 | | சொற்பொழிவு மன்ற வாடகை | | 500 | |
| | 300 | | கழி: 1970 க்குரியது | | 200 | |
| கழி: இறுதி யிருப்பு | 75 | 225 | | | 300 | |
| அஞ்சல் | | 75 | கூட்டு: பெற வேண்டியது | | 150 | 450 |
| மணித்துணைப் பொருள் விற்றதில் நட்டம் | | 80 | பழைய செய்தித் தாள்கள் விற்றது | | | 150 |
| தேய்மானம் : | | | | | | |
| கட்டடம் | 750 | | | | | |
| மணித்துணைப் பொருள் | 485 | | | | | |
| நூல்கள் | 1,700 | 2,935 | சொற்பொழிவுக் கூட்ட வசூல் | | | 4,300 |
| முதல் நிதி : செலவினும் மிகுதியான வரவு | | 4,755 | பெற வேண்டிய தவணை வைப்பு மீது வட்டி | | | 300 |
| | | 15,020 | | | | 15,020 |

### முத்தமிழ் இலக்கிய மன்றத்தின் 31-12-1971-க்குரிய இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | தொகை ரூ. | சொத்துகள் | தொகை ரூ. |
|---|---|---|---|
| முன்கூட்டிப் பெற்ற உறுப்பினர் தொகை | 200 | உறுப்பினர் தொகை பெற வேண்டியது | 150 |
| தரவேண்டிய ஊதியம் | 345 | கூடிய அரசன் கடன் பத்திரங்கள் மீதான வட்டி | 40 |
| கடனீந்தோர்— அலமாரி | 2,800 | பெறவேண்டிய சொற்பொழிவு மன்ற வாடகை | 150 |
| முதல் நிதி....52,250<br>கூட்டு: செலவினும் மிகுதியான வரவு 4,755 | 57,005 | பெறவேண்டிய தவணை வைப்பு வட்டி | 300 |
| | | நூல்கள் 15,000<br>கூட்டு: புதிதாக வாங்கியது 2,000<br>17,000<br>கழி: தேய்மானம் 1,700 | 15,300 |
| | | மனைத்துணைப் பொருள் 2,950<br>கூட்டு: புதிதாக வாங்கியது 2,800<br>5,750<br>கழி: விற்றது 380<br>தேய்மானம் 485 865 | 4,885 |
| | | அரசினர் கடன் பத்திரங்கள் 3,000<br>கூட்டு: 4% வாங்கியது 2,000 | 5,000 |
| | | எழுதுபொருள் இருப்பு | 75 |
| | | தட்டெழுத்துப் பொறி | 2,200 |
| | | கட்டடம் 25,000<br>கழி: தேய்மானம் 750 | 24,250 |
| | | ரொக்கம் | 274 |
| | | வங்கி | 2,726 |
| | | வங்கியில் தவணை வைப்பு | 5,000 |
| | 60,350 | | 60,350 |

மனைத்துணைப் பொருள் மீது கீழ்க்கண்டவாறு தேய்மானம் கணக்கிடப்படுகிறது.

| | ரூ. |
|---|---|
| 1-1-71ல் மனைத்துணைப் பொருள் | 2,950 |
| கழி விற்ற மனைத்துணைப் பொருளின் மதிப்பு | 400 |
| | 2,550 |
| தேய்மானம் ஓராண்டிற்கு 10% விகிதம் $2550 \times \frac{10}{100}$ : | 255 |
| 30-6-71-ல் விற்கப்பட்ட மனைத்துணைப் பொருளின் மீது 6 திங்கட்குத் தேய்மானம் $400 \times \frac{10}{100} \times \frac{6}{12}$ : | 20 |
| 1-4-71ல் வாங்கப்பட்ட மனைத்துணைப் பொருள் மீது 9 திங்கட்கான தேய்மானம் $2{,}800 \times \frac{10}{100} \times \frac{9}{12}$ : | 20 |
| மொத்தத் தேய்மானம் நீக்க வேண்டியது | 485 |

மனைத்துணைப் பொருள் விற்றதில் நட்டம் :

| | |
|---|---|
| 1-1-71ல் மனைத்துணைப் பொருளின் மதிப்பு | 400 |
| கழி : தேய்மானம் 6 திங்கட்கு | 20 |
| | 380 |
| கழி : விற்ற விலை | 300 |
| விற்பனையில் ஏற்பட்ட நட்டம் | 80 |

எடுத்துக்காட்டு 58:

இளைஞர் உடற்பயிற்சி மன்றத்தின் 31-12-1971-க்குரிய இருப்புநிலைக் குறிப்பும் அந்நாளில் முடியும் ஆண்டுக்கான வரவு செலவுக் கணக்கும் கீழே தரப்பட்டுள்ளன.

31-12-1971-க்குரிய இருப்பு நிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | | தொகை ரூ. | சொத்துகள் | தொகை ரூ. |
|---|---|---|---|---|
| முன் கூட்டிப் பெற்ற உறுப்பினர் தொகை | | 200 | பெற வேண்டிய உறுப்பினர் தொகை | 230 |
| விளையாட்டுப் போட்டி நிதி | 4,750 | | பெற வேண்டிய வாடகை | 50 |
| கழி: விளையாட்டு போட்டிச் செலவு | 3,500 | 1,250 | முன் கூட்டிச் செலுத்திய ஈட்டுறுதி | 100 |
| கொடுபட வேண்டிய செலவு | | | எழுதுபொருள் இருப்பு | 75 |
| ஊதியம் | 200 | | சிற்றுண்டிச் சரக்கிருப்பு | 175 |
| தணிக்கைக் கட்டணம் | 100 | 300 | சேமிப்பு பத்திரங்கள் | 2,000 |
| முதல் நிதி | 40,980 | | விளையாட்டுக் கருவிகள் | 4,000 |
| கூட்டு: ஆயுள் உறுப்பினர் தொகை | 700 | | மனைத்துணைப் பொருள் | 1,300 |
| செலவினும் மிகுதியான வரவு | 1,000 | 42,680 | தட்டெழுத்துப் பொறி | 2,000 |
| | | | நிலமும் விளையாடுமிடமும் | 30,000 |
| | | | ரொக்கம் | 4,500 |
| | | 44,430 | | 44,430 |

**31-12-1971-ல் முடியும் ஆண்டுக்கான வரவுசெலவுக் கணக்கு**

ப வ

| விவரம் | தொகை ரூ. | விவரம் | தொகை ரூ. |
|---|---|---|---|
| சிற்றுண்டிச் சரக்கு | 2,575 | உறுப்பினர் தொகை | 3,650 |
| ஊதியம் | 3,200 | ஆண்டு விழா விருந்து வரவு | 2,500 |
| எழுது பொருள் | 475 | சிற்றுண்டி மூலம் வரவு | 2,800 |
| ஆண்டு விழா விருந்துச் செலவு | 2,000 | வாடகை | 600 |
| வங்கிக் கட்டணம் | 50 | மனைத்துணைப் பொருள் விற்றதில் இலாபம் (ஏட்டு மதிப்பு ரூ. 700) | 50 |
| சட்டுறுதி | 200 | | |
| கொடுபட வேண்டிய தணிக்கைக் கட்டணம் | 100 | | |
| செலவினும் மிகுதி யான வரவு | 1,000 | | |
| | 9,600 | | 9,600 |

சில குறிப்புகள் :

31-12-1970-ல் உறுப்பினர் தொகை பெற வேண்டியது ரூ. 300; 1971 ஆம் ஆண்டுக்காக 1970 லேயே பெற்ற உறுப்பினர் தொகை ரூ. 120; 31-12-70-ல் சிற்றுண்டிச் சரக்கிருப்பு ரூ. 250; எழுதுபொருள் இருப்பு ரூ. 50; 1970-க்குரிய விளம்பரச் செலவு ரூ. 375; 1971-ல் தான் கொடுக்கப்பட்டது. 1971-ல் தட்டெழுத்துப் பொறி ரூ. 2,000-க்கு வாங்கப்பட்டது. வேறு சொத்துகள் ஏதும் இவ்வாண்டில் வாங்கப்படவில்லை. இவற்றிலிருந்து 31-12-1970-ற்கான இருப்புநிலைக் குறிப்பையும், 31-12-1971-ல் முடியும் ஆண்டுக்கான பெறுதல் - செலுத்தல் கணக்கையும் தயாரிக்க.

விடை :

இளைஞர் உடற்பயிற்சி மன்றத்தின்
31-12-1970-க்கான இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | தொகை ரூ. | சொத்துகள் | தொகை ரூ. |
|---|---|---|---|
| முன் கூட்டிப் பெற்ற உறுப்பினர் தொகை | 120 | ரொக்கம் | 2,875 |
| கொடுபட வேண்டிய விளம்பரச் செலவு | 375 | எழுது பொருள் இறுதியிருப்பு | 50 |
| முதல் நிதி | 40,980 | சிற்றுண்டிச் சரக்கிருப்பு | 250 |
| | | பெறவேண்டிய உறுப்பினர் தொகை | 300 |
| | | சேமிப்புப் பத்திரங்கள் | 2,000 |
| | | விளையாட்டுக் கருவிகள் | 4,000 |
| | | மனைத்துணைப் பொருள் | 2,000 |
| | | நிலமும் விளையாடுமிடமும் | 30,000 |
| | 41,475 | | 41,475 |

ரொக்கம் ரூ. 2,875 சமன் செய்யத் தேவையான தொகை (Balancing figure).

இளைஞர் உடற்பயிற்சி மன்றத்தின் 31-12-1971-ல் முடியும்
ஆண்டுக்கான பெறுதல்—செலுத்தல் கணக்கு

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| தொடக்க இருப்பு : ரொக்கம் | 2,875 | சிற்றுண்டிச் சரக்கு வாங்கியது | 2,500 |
| உறுப்பினர் தொகை | 3,800 | ஊதியம் | 3,000 |
| ஆண்டுவிழா விருந்து வரவு | 2,500 | எழுது பொருள் | 500 |
| சிற்றுண்டி மூலம் வரவு | 2,800 | ஆண்டுவிழா விருந்துச் செலவு | 2,000 |
| வாடகை | 550 | வங்கிக் கட்டணம் | 50 |
| மனைத்துணைப் பொருள் விற்றது | 750 | ஈட்டுறுதி | 300 |
| விளையாட்டுப் போட்டி நிதி | 4,750 | விளம்பரச் செலவு | 375 |
| ஆயுள் உறுப்பினர் தொகை | 700 | தட்டெழுத்துப் பொறி | 2,000 |
| | | விளையாட்டுப் போட்டிச் செலவு | 3,500 |
| | | இருப்பு கீ/இ ரொக்கம் | 4,500 |
| | 18,725 | | 18,725 |
| இருப்பு கீ/கொ | 4,500 | | |

விளக்கக் குறிப்பு :

1. உறுப்பினர் தொகை : ரூ.

| | ரூ. | ரூ. |
|---|---|---|
| வரவு செலவுக் கணக்கின்படி உள்ளது. | | 3,650 |
| கூட்டு : சென்ற ஆண்டுக்குரியது இவ்வாண்டில் பெற்றது | | 300 |
| ,, அடுத்த ஆண்டு உறுப்பினர் தொகை முன் கூட்டி இவ்வாண்டில் பெற்றது | | 200 |
| | | 4,150 |
| கழி : சென்ற ஆண்டில் முன் கூட்டிப் பெற்றது இவ் வாண்டில் சேர்க்கப்பட்டது | ... 120 | |
| ,, இவ் வாண்டில் பெற வேண்டியது | ... 230 | 350 |
| இவ் வாண்டில் பெற்ற மொத்த உறுப்பினர் தொகை | | 3,800 |

இவ் விவரங்களை இவ் வாண்டு இருப்புநிலைக் குறிப்பிலிருந்து அறிகிறோம்.

2. வாடகை : ரூ.

| | ரூ. |
|---|---|
| வரவு செலவுக் கணக்கின்படி வாடகை | ... 600 |
| கழி : பெற வேண்டிய வாடகை | ... 50 |
| ரொக்கமாகப் பெற்ற வாடகை | ... 550 |

(இருப்புநிலைக் குறிப்பில் உள்ள விவரம்.)

3. மனைத்துணைப் பொருள் : ரூ.

| | ரூ. |
|---|---|
| விற்ற மனைத்துணைப் பொருளின் ஏட்டு மதிப்பு | ... 700 |
| கூட்டு: இலாபம் | ... 50 |
| விற்ற விலை | ... 750 |

4. சிற்றுண்டிச் சரக்கு வாங்கியது :

| | ரூ. |
|---|---|
| வரவு செலவுக் கணக்கில் உள்ளபடி | ... 2,575 |
| கழி : சென்ற ஆண்டு சரக்கிருப்பு | ... 250 |
| | 2,325 |
| கூட்டு : இவ் வாண்டில் உள்ள இறுதி யிருப்பு | ... 175 |
| இவ் வாண்டில் வாங்கியது | ... 2,500 |

(இருப்புநிலைக் குறிப்பிலுள்ள விவரம்.)

5. ஊதியம் :

| | ரூ. |
|---|---|
| வரவு செலவுக் கணக்குபடி | ... 3,200 |
| கழி : கொடுபட வேண்டியது | ... 200 |
| ஊதியம் கொடுத்தது | ... 3,000 |

(இருப்புநிலைக் குறிப்பைக் காண்க.)

6. எழுது பொருள் :

| | ரூ. |
|---|---|
| வரவு செலவுக் கணக்கின்படி | ... 475 |
| கழி : தொடக்க இருப்பு | ... 50 |
| | 425 |
| கூட்டு : இவ் வாண்டின் இறுதியிருப்பு | ... 75 |
| இவ் வாண்டு வாங்கிய எழுதுபொருள் | 500 |

7. ஈட்டுறுதி :

| | ரூ. |
|---|---|
| வரவு செலவு கணக்கின்படி | ... 200 |
| கூட்டு : முன் கூட்டிச் செலுத்தியது | ... 100 |
| இவ் வாண்டு செலுத்தியது | ... 300 |

(இருப்புநிலைக் குறிப்பில் உள்ளது.)

8. விளம்பரச் செலவு :

சென்ற ஆண்டு தர வேண்டிய விளம்பரச் செலவு இவ் வாண்டில் கொடுக்கப்பட்டது என்பதைக் குறிப்பிலிருந்து அறிகிறோம். எனவே, இது பெறுதல்—செலுத்தல் கணக்கில் இடம் பெற வேண்டும். இது சென்ற ஆண்டுக் குரிய செலவாகையால் வரவு செலவுக் கணக்கில் இடம் பெற்றிருக்கவில்லை.

9. தணிக்கைக் கட்டணம் :

இது இவ்வாண்டில் கொடுபட வேண்டியது. இன்னும் இதைக் கொடுக்கவில்லை யாதலால், இச் செலவு பெறுதல்—செலுத்தல் கணக்கில் எடுத்துச் செல்லப் படவில்லை.

10. விளையாட்டுப் போட்டி நிதி :

விளையாட்டுப் போட்டிச் செலவு ஆயுள் உறுப்பினர் தொகை போன்ற விவரங்களை இருப்புநிலைக் குறிப்பி லிருந்து பெறுகிறோம்.

எடுத்துக்காட்டு 59 :

31-12-1971-ல் பாண்டி இளைஞர் மன்றத்தின் இருப்புகள் கீழ்க்கண்டவாறிருந்தன.

| | | ரூ. |
|---|---|---|
| உறுப்பினர் தொகை | ... | 3,500 |
| வங்கி யிருப்பு | ... | 3,750 |
| தவணை வைப்பு (31-12-1970) | ... | 5,000 |
| ரொக்கம் | ... | 230 |
| தட்டுகள், கோப்பைகள், சமையல் பாத்திரங்கள் (cutlery) (31-12-70) | ... | 2,500 |
| சிற்றுண்டிப் பிரிவின் வரவு | ... | 18,600 |
| சிற்றுண்டிச் சரக்கிருப்பு (31-12-1970) | ... | 1,200 |
| மனைத்துணைப் பொருள் (31-12-1970) | ... | 2,000 |
| டென்னிஸ் மேசை (31-12-1970) | ... | 800 |
| கூலி (சிற்றுண்டிப் பிரிவு ரூ. 1,900) | ... | 4,600 |
| விளையாட்டுக் கருவிகள் (31-12-1970) | ... | 2,700 |
| விளையாட்டுக் கருவிகள் வாங்கியது | ... | 300 |
| தவணை வைப்பு மீது பெற்ற வட்டி | ... | 300 |
| டென்னிஸ் வரவு | ... | 3,000 |
| மனைத்துணைப் பொருள் விற்றது (ஏட்டு மதிப்பு ரூ: 275) | ... | 300 |
| கண்ணாடி, பீங்கான் கோப்பைகள் வாங்கியது | ... | 400 |

| | | ரூ. |
|---|---|---|
| சிற்றுண்டிச் சரக்கு | ... | 11,220 |
| பல் வகைச் செலவு | ... | 160 |
| எரிபொருள் | ... | 250 |
| பரிசு நிதி | ... | 5,000 |
| பரிசுகள் வழங்கியது | ... | 200 |
| ஆயுள் உறுப்பினர் தொகை | ... | 300 |
| செய்தித் தாள்கள் முதலியவை | ... | 240 |
| ஆண்டு விழாவில் நிகர வருமானம் | ... | 780 |
| எழுது பொருள் | ... | 200 |
| முன் கூட்டிப் பெற்ற உறுப்பினர் தொகை (31-12-70) | ... | 200 |
| பெறவேண்டிய உறுப்பினர் தொகை (31-12-70) | ... | 300 |
| முதலீடு (31-12-1970) | ... | 8,500 |
| 4% அரசினர் பாதுகாப்புப் பத்திரங்கள் (Defence Bonds) | ... | 6,000 |
| விளையாடுமிடம் (31-12-1970) | ... | 18,000 |
| கட்டட நிதி (31-12-70) | ... | 15,000 |
| முதலீட்டின் மீது பெற்ற வருமானம் | ... | 570 |
| முதல் நிதி | ... | 23,000 |

31-12-1971-ல் சரிக்கட்டப்பட வேண்டியவை :

1. பெறவேண்டிய உறுப்பினர் தொகை ரூ. 220

2. சிற்றுண்டிச் சரக்கிருப்பு ரூ. 560

3. தட்டுகள், கோப்பைகள், சமையல் பாத்திரங்கள் ரூ. 2,400 என மதிப்பிடப்பட்டது.

4. பாதுகாப்புப் பத்திரங்கள் 1-7-71-ல் வாங்கப்பட்டன.

5. பரிசுநிதிப் பணம் ரூ. 5,000 6% தவணை வைப்பில் முதலீடு செய்யப்பட்டுள்ளது,

6. கொடுக்க வேண்டிய கூலி ரூ. 250 (இதில் சிற்றுண்டிப் பிரிவுக் குரியது ரூ. 100)

7. செலவினும் மிகுதியான வரவில் 50% கட்டடநிதிக்கு எடுத்துச் செல்க.

8. செயலர்க்குக் கொடுக்க வேண்டிய மதிப்பூதியம் (Honorarium) ரூ. 250.

9. விளையாட்டுக் கருவிகள் மீது 15% (31-12-70-ல் உள்ள இருப்பு மீது) தேய்மானம் கணக்கிடுக.

இவற்றிலிருந்து 31-12-1971-ல் முடியும் ஆண்டுக்கான சிற்றுண்டிப் பிரிவின் வாணிகக் கணக்கையும், வரவு செலவுக் கணக்கையும், அந்நாளுக்கான இருப்பு நிலைக் குறிப்பையும் தயாரிக்க.

விடை :

பாண்டி இளைஞர் மன்றத்தின்
31-12-1971-ல் முடியும் சிற்றுண்டிப் பிரிவின்
வாணிகக் கணக்கு

ப வ

| விவரம் | | தொகை ரூ. | விவரம் | தொகை ரூ. |
|---|---|---|---|---|
| சரக்கிருப்பு | | 1,200 | சிற்றுண்டி வரவு | 18,600 |
| சரக்கு வாங்கியது | | 11,220 | இறுதிச் சரக்கிருப்பு | 560 |
| கூலி | 1,900 | | | |
| கூட்டு : கொடுபட வேண்டியது | 100 | 2,000 | | |
| எரிபொருள் | | 250 | | |
| தட்டுகள் கோப்பைகள் மீது தேய்மானம் | | 500 | | |
| வரவு செலவுக் க/கு (இலாபம் எடுத்துச் செல்லப்படுகிறது.) | | 3,990 | | |
| | | 19,160 | | 19,160 |

### பாண்டி இளைஞர் மன்றத்தின்
### 31-12-71-ல் முடியும் ஆண்டுக்கான வரவு செலவுக் கணக்கு

| ப | | ரூ. | | | வ ரூ. |
|---|---|---|---|---|---|
| கூலி | 2,700 | | உறுப்பினர் தொகை | 3,500 | |
| கூட்டு : கொடுக்க வேண்டியது | 150 | 2,850 | கூட்டு : 1970ல் பெற்றது | 200 | |
| | | | | 3,700 | |
| தர வேண்டிய செயலரின் மதிப்பூதியம் | | 250 | கழி : 1970-க்குரியது | 300 | |
| | | | | 3,400 | |
| பல்வகைச் செலவு | | 160 | | | |
| செய்தித் தாள்கள் | | 240 | கூட்டு : பெற வேண்டியது | 220 | 3,620 |
| எழுது பொருள் | | 200 | டென்னிஸ் வரவு | | 3,000 |
| தேய்மானம் : | | | மனைத்துணைப் பொருள் விற்றதில் இலாபம் | | 25 |
| விளையாட்டுக் கருவிகள் | | 405 | ஆண்டு விழாவில் நிகர வருமானம் | | 780 |
| செலவினும் மிகுதியான வரவு : | | | முதலீட்டின் மீது பெற்ற வருமானம் | 570 | |
| கட்டட நிதி | 4,000 | | கூடியுள்ள வட்டி | 120 | 690 |
| முதல் நிதி | 4,000 | 8,000 | சிற்றுண்டிப் பிரிவின் வாணிகக் க/கு (இலாபம்) | | 3,990 |
| | | 12,105 | | | 12,105 |

## பாண்டி இளைஞர் மன்றத்தின்
## 31-12-71-க்கான இருப்பு நிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | | தொகை ரூ. | சொத்துகள் | | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|
| கொடுபட வேண்டிய கூலி | | 250 | ரொக்கம் | | 230 |
| | | | வங்கி யிருப்பு | | 3,750 |
| ,, ,, செயலர் ஊதியம் | | 250 | தவணை வைப்பு | | 5,000 |
| பரிசு நிதி | 5,000 | | தட்டுகள் கோப்பைகள் சமையல் பாத்திரங்கள் | 2,500 | |
| கூட்டு : வட்டி பெற்றது | 300 | | கூட்டு : வாங்கியது | 400 | |
| | 5,300 | | | 2,900 | |
| கழி : பரிசுகள் வழங்கியது | | 5,100 | கழி : தேய்மானம் | 500 | 2,400 |
| | | | மனைத்துணைப் பொருள்கள் | 2,000 | |
| கட்டட நிதி | 15,000 | | கழி : விற்றது | 275 | 1,725 |
| | | | டென்னிஸ் மேசை | | 800 |
| கூட்டு : செலவினும் மிகுதியான வரவு | 4,000 | 19,000 | பெற வேண்டிய உறுப்பினர் தொகை | | 220 |
| | | | விளையாட்டுக் கருவிகள் | 2,700 | |
| முதல் நிதி | 23,000 | | கூட்டு : வாங்கியது | 2,300 | |
| | | | | 5,000 | |
| கூட்டு : ஆயுள் உறுப்பினர் தொகை | 300 | | கழி : தேய்மானம் | 405 | 4,595 |
| | 23,300 | | முதலீடு | 8,500 | |
| கூட்டு : செலவினும் மிகுதியான வரவு | 4,000 | 27,300 | கூட்டு : அரசினர் பாதுகாப்புப் பத்திரங்கள் | 6,000 | 14,500 |
| | | | விளையாடுமிடம் | | 18,000 |
| | | | சிற்றுண்டிச் சரக்கிருப்பு | | 560 |
| | | | கூடியுள்ள வட்டி | | 120 |
| | | 51,900 | | | 51,900 |

தனித் தொழில் புரியும் வழக்குரைஞர், மருத்துவர், போன்றோர் தங்கள் தொழில் வருவாயைக் கணக்கிட விரும்புவர். இரட்டைப் பதிவு அடிப்படையில் பதிந்து இருப்புப் பட்டியல் தயாரித்து இறுதிக் கணக்குகளைத் தயாரிக்கலாம். ஆனால் பெரும்பான்மையோர், ரொக்க நடவடிக்கைகளை மட்டில் பதிந்து இறுதியில் பெறுதல்—செலுத்தல் கணக்கைத் தயாரிப்பர். இதனடிப்படையில் வரவு செலவுக் கணக்கை நாம் தயாரிக்கலாம். மேலே விளக்கிய வகையில் இதனையும் செய்ய வேண்டுமெனினும், ஒரு வேறுபாடு கூர்ந்து நோக்கத் தக்கது. ரொக்க நடவடிக்கை அடிப்படையில் கணக்குகளை அவர்கள் எழுதினாலும், தாங்கள் பிறர்க்குச் செலுத்த வேண்டிய பொறுப்பினைக் கணக்கில் எடுத்துக் கொள்வர். ஆனால் தமக்கு வரவேண்டிய வருவாயைச் சேர்த்துக் கொள்வதில்லை காரணம், தங்கட்கு வரவேண்டிய தொகையைக் கோரி வழக்குத் தொடுக்கப் போவதில்லை. ஆகவே, வரவேண்டிய தொகைக்கு வரவு செலவுக் கணக்கில் வரவு வைத்து, அதே தொகைக்குப் 'பெற வேண்டிய கட்டணக் காப்பு' என அக் கணக்கிலேயே பற்றும் வைத்திடுவர். இதனால் வரவேண்டிய தொகைக்கு வைத்த வரவு நீக்கப்படுகிறது. இத்தகைய கணக்கை பெறுதல்—செலவுக் கணக்கு (Receipts and Expenditure Account) என்கிறோம்.

கீழ்க்கண்ட கணக்கு இதனை உணர்த்தும்.

எடுத்துகாட்டு 60 :

டாக்டர் அருட்செல்வம் **1-1-1971** அன்று தொழில் தொடங்கினார். தனி மருத்துவ மனை யொன்று ரூ. 75,000 செலவில் அமைத்து ரூ. 1,00,000 முதல் வைத்தார். அவ் வாண்டுக்குரிய பெறுதல்—செலுத்தல் கணக்கு கீழ்க் கொடுக்கப்பட்டுள்ளது.

| பெறுதல் | தொகை ரூ. | செலுத்தல் | | தொகை ரூ. |
|---|---|---|---|---|
| முதல் | 1,00,000 | ஊதியம் | | 30,000 |
| | | கருவிகள் | | 60,000 |
| ஆய்வுக் கட்டணம் (Consulting Fees) | 70,000 | மருந்து | | 25,000 |
| | | பத்திய உணவு (Diet) | | 5,000 |
| | | மின் செலவு | | 3,000 |
| பிற மருத்துவ கட்டணங்கள் | 50,000 | மருத்துவ இதழ்கள் | | 1,000 |
| | | நூல்கள் (Books) | | 5,000 |
| பல்வகை வரவு | 300 | மனைத்துணைப் பொருள்கள் | | 7,500 |
| | | தவணை வைப்பு | | 10,000 |
| | | எடுப்பு | | 30,000 |
| | | வங்கி | 43,500 | |
| | | ரொக்கம் | 300 | 43,800 |
| | 2,20,300 | | | 2,20,300 |

ரூ. 4,500 மதிப்புள்ள மருந்தும், ரூ. 500 மதிப்புள்ள உணவுப் பொருள்களும் 31-12-1971-ல் இருப்பிலிருந்தன. ஊதியம் கொடுக்க வேண்டியது ரூ. 3,500; பெறவேண்டிய மருத்துவக் கட்டணம் ரூ. 2,500. மருத்துவக் கருவிகள் மீது 20%-ம் நூல்கள் மீது 5%-ம் தேய்மானம் கணக்கிடுக. தவணை வைப்பு 6% வட்டியில் 1-8-71-ல் தொடங்கியது. 1971-ம் ஆண்டுக் குரிய பெறுதல்—செலவுக் கணக்கையும் அந்நாளுக்கான இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க.

31-12-1971-ல் முடியும் ஆண்டுக்கான டாக்டர் அருட்செல்வத்தின் பெறுதல் செலவுக் கணக்கு

| ப | | ரூ. | வ | | ரூ. |
|---|---|---|---|---|---|
| ஊதியம் | 30,000 | | ஆய்வுக் கட்டணம் | | 70,000 |
| கூட்டு கொடுக்க வேண்டியது | 3,500 | 33,500 | பிற மருத்துவக் கட்டணம் | 50,000 | |
| மருந்து | 25,000 | | கூட்டு பெற வேண்டியது | 2,500 | 52,500 |
| கழி இறுதி யிருப்பு | 4,500 | 20,500 | பல்வகை வரவு | | 300 |
| உணவு வகை | 5,000 | | தவணை வைப்பு மீது கூடியுள்ள வட்டி | | 250 |
| கழி இறுதி யிருப்பு | 500 | 4,500 | | | |
| மின் செலவு | | 3,000 | | | |
| மருத்துவ இதழ்கள் | | 1,000 | | | |
| பெறவேண்டிய கட்டணக் காப்பு | | 2,500 | | | |
| தேய்மானம் : | | | | | |
| கருவிகள் | 12,000 | | | | |
| நூல்கள் | 250 | 12,250 | | | |
| செலவினும் மிகுதியான வரவு | | 45,800 | | | |
| | | 1,23,050 | | | 1.23,050 |

டாக்டர் அருட்செல்வத்தின் 31-12-1971-க்குரிய
இருப்புநிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | | தொகை ரூ. | சொத்துகள் | | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|
| கொடுக்க வேண்டிய ஊதியம் | | 3,500 | ரொக்கம் | | 300 |
| | | | வங்கி | | 43,500 |
| முதல் | 1,75,000 | | தவணை வைப்பு | | 10,000 |
| கழி எடுப்பு | 30,000 | | கருவிகள் | 60,000 | |
| | 1,45,000 | | கழி தேய்மானம் | 12,000 | 48,000 |
| கூட்டு செலவினும் மிகுதியான வரவு | 45,800 | 1,90,800 | மனைத்துணைப் பொருள் | | 7,500 |
| | | | நூல்கள் | 5,000 | |
| | | | கழி தேய்மானம் | 250 | 4,750 |
| | | | மருத்துவ மனை | | 75,000 |
| | | | உணவுப் பொருள்கள் இறுதியிருப்பு | | 500 |
| | | | மருந்து இறுதியிருப்பு | | 4,500 |
| | | | பெறவேண்டிய பிற மருத்துவக் கட்டணம் | 2,500 | |
| | | | கழி காப்பு (Reserve) | 2,500 | ... |
| | | | தவணை வைப்பு மீது கூடியுள்ள வட்டி | | 250 |
| | | 1,94,300 | | | 1,94,300 |

குறிப்பு: முதல் தொகை கீழ்க்கண்டவாறு பெறப்பட்டது.

ரொக்கம் ரூ. 1,00,000

மருத்துவமனை ரூ. 75,000 1,75,000

இவ்விரண்டினையும் வைத்து டாக்டர் தம் தொழிலைத் தொடங்கியதால் இவை முதல் கணக்கிற்கெடுத்துச் செல்லப்பட்டன.

## வினாக்கள்

1. பெறுதல்—செலுத்தல் கணக்கின் தன்மைகள் யாவை ?
2. வரவு செலவுக் கணக்கு என்பது என்ன ?
3. வரவு செலவுக் கணக்குக்கும் பெறுதல்—செலுத்தல் கணக்குக்கும் உள்ள வேறுபாடுகள் யாவை ?
4. பெறுதல்—செலுத்தல் கணக்கிலிருந்து வரவு செலவுக் கணக்குத் தயாரிக்கும் முறையினை விளக்குக.

## பயிற்சி

*1.* சுந்தர் நினைவுக் கல்விக் கூடத்தின் இருப்புப் பட்டியல் கீழே கொடுக்கப் பட்டிருக்கிறது. அவற்றிலிருந்து 31-12-1970-ல் முடியும் ஆண்டுக்கான வரவு செலவுக் கணக்கையும், அந் நாளுக்குரிய இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

| பற்றிருப்புகள் | | தொகை ரூ. | வரவிருப்புகள் | தொகை ரூ. |
|---|---|---|---|---|
| ரொக்கம் | | 425 | முதல் நிதி | 55,175 |
| வங்கி-நடப்புக் கணக்கு | | 5,750 | உறுப்பினர் தொகை | 3,500 |
| தவணை வைப்பு ரூ. 5% அரசினர் கடன் பத்திரங்கள் | | 6,000 | ஆயுள் உறுப்பினர் தொகை | 1,500 |
| | | | அரசினர் உதவிப் பணம் | 15,000 |
| பரிசு நிதி | 12,000 | | பரிசு நிதி | 12,000 |
| பிற | 24,000 | 36,000 | அரசினர் கடன் பத்திரங்கள் மீது வட்டி | 1,800 |
| மாணவர் உதவித் தொகை அளித்தது | | 19,200 | நுழைவுக் கட்டணம் | 130 |
| | | | நன் கொடை | 12,500 |
| மனைத்துணைப் பொருள் | | 10,000 | கொடுபட வேண்டிய ஊதியம் (1-1-70) | 500 |
| நூலக நூல்கள் (Library Books) | | 12,800 | | |
| பெறவேண்டிய உறுப்பினர் தொகை (1-1-1970) | | 250 | முன் கூட்டிப் பெற்ற உறுப்பினர் தொகை (1-1-70) | 70 |
| ஊதியம் | | 9,000 | | |
| பல்வகைச் செலவு | | 2,300 | | |
| பரிசு வழங்கியது | | 450 | | |
| | | 1,02,175 | | 1,02,175 |

1970-க்குப் பெறவேண்டிய உறுப்பினர் தொகை ரூ. 300; ஊதியந் தரவேண்டியது ரூ. 250; உதவிப் பணம் கொடுக்க வேண்டியது ரூ. 800; 1-7-70-ல் தவணை வைப்பில் பணஞ் செலுத்தப்பட்டது. மனைத்துணைப் பொருள் மீது 5%-ம் நூல்கள் மீது 10%-ம் தேய்மானம் கணக்கிடுக.

2. கடலூர் மன மகிழ் மன்றத்தின் 30-6-1971-ல் முடியும் ஆண்டுக்கான பெறுதல்—செலுத்தல் கணக்கு கொடுக்கப்பட்டிருக்கிறது. அவற்றிலிருந்து வரவு செலவுக் கணக்கையும் இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

ப பெறுதல்—செலுத்தல் கணக்கு வ

| பெறுதல் | | தொகை ரூ. | செலுத்தல் | | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|
| இருப்பு கீ/கொ : | | | செய்தித்தாள் முதலியவை | | 800 |
| ரொக்கம் | 150 | 2,150 | வாடகை | | 600 |
| வங்கி | 2,000 | | நாடக விழாச் செலவு | | 1,275 |
| உறுப்பினர் தொகை | | 3,775 | முதலீடு 5% | | 4,000 |
| நாடகத்தின் மூலம் வரவு | | 1,850 | எழுது பொருளும் அச்சுக் கூலியும் | | 370 |
| கட்டட நிதிக்கு நன்கொடை | | 2,200 | பல்வகைச் செலவு | | 215 |
| மனைத்துணைப் பொருள் விற்றது (ஏட்டு மதிப்பு ரூ. 300) | | 175 | இருப்பு கீ/இ | | |
| | | | ரொக்கம் | 490 | |
| பழைய செய்தித் தாள்கள் விற்றது | | 100 | வங்கி | 2,500 | 2,990 |
| | | 10,250 | | | 10,250 |

முதலீடு ரூ. 2,000-க்கான 5% அரசினர் கடன் பத்திரங்களும் ரூ. 2,000-க்கான யூனிட் டிரஸ்டுகளும் ஆகும். இவை 2-1-1971-ல் வாங்கப்பட்டன. யூனிட் டிரஸ்டுகள் மீது 8% இலாப ஈவு வழங்கப்பட்டுள்ளது. 1969-70-க்கான உறுப்பினர் தொகை ரூ. 100ம், 1971-72-க்கான உறுப்பினர் தொகை ரூ. 125-ம் உறுப்பினர் தொகையில் அடங்கியுள்ளன. இவ்வாண்டில் இன்னும் பெற வேண்டிய உறுப்பினர் தொகை ரூ. 75; 30-6-71-ல் இருந்த மனைத்துணைப் பொருள் ரூ. 600; 30-6-71-ல் எழுது பொருள் இருப்பு ரூ. 20; செலவினும் மிகுதியான வரவில் பாதியைக் கட்டடநிதிக்கு எடுத்துச் செல்க.

3. கோவை விளையாட்டுக் கழகத்தின் 31-3-69-க்கான இருப்பு நிலைக் குறிப்பும் 31-3-1970-ல் முடியும் பெறுதல்—செலுத்தல் கணக்கும் கீழே தரப்பட்டுள்ளன.

இருப்பு நிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | தொகை ரூ. | சொத்துகள் | தொகை ரூ. |
|---|---|---|---|
| முன் கூட்டிப் பெற்ற உறுப்பினர் தொகை | 70 | ரொக்கம் | 250 |
| கொடுபட வேண்டிய தணிக்கைக் கட்டணம் | 200 | வங்கி | 3,275 |
| முதல் நிதி | 21,280 | பெறவேண்டிய உறுப்பினர் தொகை | 125 |
| | | விளையாட்டுக் கருவிகள் | 5,400 |
| | | விளையாடு மிடம் | 12,500 |
| | 21,550 | | 21,550 |

பெறுதல்—செலுத்தல் கணக்கு

| பெறுதல் | | தொகை ரூ. | செலுத்தல் | | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|
| இருப்பு : | | | ஊதியம் | | 3,500 |
| ரொக்கம் | 250 | | தணிக்கைக் கட்டணம் | | 300 |
| வங்கி | 3,275 | 3,525 | யூனிட் டிரஸ்டில் மூதலீடு செய்தது | | 4,000 |
| உறுப்பினர் தொகை | | 6,700 | ஆண்டுவிழாப் போட்டிச் செலவு | | 1,875 |
| ஆயுள் உறுப்பினர் தொகை | | 300 | பரிசுகள் வழங்கியது | | 280 |
| விளையாட்டுக் கருவிகள் விற்றது (ஏட்டு மதிப்பு ரூ. 400) | | 250 | பற்பல செலவுகள் | | 650 |
| ஆண்டு விழாப் போட்டி வசூல் | | 2,350 | இறுதி யிருப்பு : | | |
| பரிசு நிதி | | 4,000 | ரொக்கம் | 170 | |
| இலாப ஈவு | | 275 | தவணை வைப்பு | 5,000 | |
| | | | வங்கி நடப்புக் க/கு | 1,625 | 6,795 |
| | | 17,400 | | | 17,400 |

மேலும் சில தகவல்கள் தரப்படுகின்றன. முன் கூட்டிப் பெற்ற உறுப்பினர் தொகையும் 1969-70-ல் பெறவேண்டிய உறுப்பினர் தொகையும் முறையே ரூ. 80, ரூ. 300 ஆகும். ஊதியம் தர வேண்டியது ரூ. 250. பற்பல செலவுகளில் எழுதுபொருள் ரூ. 350-க்கு வாங்கியது அடங்கியுள்ளது. 31-3-70-ல் அச்சுக் கூலி தரவேண்டியது ரூ. 50 இருந்தது. எழுதுபொருள் இறுதி யிருப்பு ரூ. 75 எனவும் மதிப்பிடப்பட்டது.

மேற் குறித்த விவரங்களிலிருந்து 31-3-70-ல் முடியும் ஆண்டுக்கான வரவு செலவுக் கணக்கையும் அந் நாளுக்கான இருப்புநிலைக் குறிப்பையும் தருக.

4. டாக்டர் சுந்தர் ரூ. 5,000 ரொக்கம் வைத்தும் ரூ. 15,000-க்கான கருவிகளுடனும் ரூ. 20,000 மதிப்புள்ள காருடனும் 1-1-1970-ல் தொழில் தொடங்கினர். அவ்வாண்டுக்கான பெறுதல்—செலுத்தல் கணக்கு கீழ்க்கண்டவாறிருந்தது.

| வரவு | தொகை ரூ. | செலுத்தல் | தொகை ரூ. |
|---|---|---|---|
| ரொக்கம் வைத்தது | 5,000 | மனைத் துணைப் பொருள் | 3,000 |
| ஆய்வுக் கட்டணம் | 24,200 | மருந்துகள் | 4,000 |
| மருந்தக வரவு | 6,500 | ஊதியம் | 6,000 |
| | | வாடகை | 1,650 |
| | | கார்-பெட்ரோல் செலவு | 1,200 |
| | | மின் செலவு | 600 |
| | | வார, திங்களிதழ்கள் | 240 |
| | | எடுப்பு | 9,600 |
| | | மருத்துவ நூல்கள் | 1,000 |
| | | இருப்பு கீ/இ | 8,410 |
| | 35,700 | | 35,700 |

31-12-1970-ல் மருந்துகள் இருப்பு ரூ. 300; மருந்துக்குத் தர வேண்டியது ரூ. 200; பெட்ரோல் செலவில் 30% வீட்டிற்குப் பயன்படுத்தியது என மதிப்பிடப் பட்டது. ஆய்வுக் கட்டணம் வரவேண்டியுள்ளது ரூ. 700. கருவிகள் மீது 10%ம் மனைத்துணைப் பொருள் மீது 5%ம் தேய்மானம் கணக்கிடுக. இவற்றிலிருந்து 1970-ஆம் ஆண்டுக்குரிய பெறுதல்—செலவுக் கணக்கையும் (Receipts and Expenditure A/C) 31-12-1970-க்கான இருப்பு நிலைக் குறிப்பையும் தயார் செய்க.

5. மதுரை உடற்பயற்சிக் கழகத்தின் 30-6-71-ல் முடியும் ஆண்டுக்கான பெறுதல்—செலுத்தல் கணக்கு கீழே கொடுக்கப் பட்டுள்ளது.

| வரவு | தொகை ரூ. | செலுத்தல் | தொகை ரூ. |
|---|---|---|---|
| இருப்பு 1-7-70-ல் | 2,300 | விளையாடுமிடம் பராமரிப்பு (இ) | 2,700 |
| உறுப்பினர் தொகை (அ) | 7,850 | கூலி | 4,400 |
| நுழைவுக் கட்டணம் | 370 | நிலவாடகை | 150 |
| முதலீட்டின் மீது வட்டி (ஆ) | 300 | எழுது பொருள், அச்சுக் கூலி (ஈ) | 575 |
| ஆண்டு விழா வரவு | 4,320 | மனைத்துணைப் பொருள் | 750 |
| முதலீடு விற்றது (ஏட்டு மதிப்பு ரூ. 950) | 800 | ஆண்டுவிழாச் செலவு | 2,575 |
| | | 6% தவணை வைப்பில் போட்டது | 3,000 |
| | | இருப்பு (30-6-71) | 1,790 |
| | 15,940 | | 15,940 |

அ. சென்ற ஆண்டில் முன்கூட்டிப் பெற்ற உறுப்பினர் தொகை ரூ. 250 இதில் அடங்கியுள்ளது.

ஆ. சென்ற ஆண்டில் வரவேண்டிய ரூ. 120 இதில் அடங்கியுள்ளது.

இ. சென்ற ஆண்டுக் குரியது ரூ. 400 இதில் அடங்கியுள்ளது.

ஈ. சென்ற ஆண்டில் தரவேண்டியது ரூ. 175 இதில் அடங்கியுள்ளது.

1-7-70 அன்று விளையாட்டுக் கழகத்தின் பிற பேரேட்டுக் கணக்குகள் : கட்டடமும் விளையாடுமிடமும் ரூ. 30,000. முதலீடு ரூ. 5,000. விளையாட்டுக் கருவிகள் ரூ. 2,750. மனைத்துணைப் பொருள்கள் ரூ. 1,250.

நுழைவுக் கட்டணத்தை மூலதன வரவாகக் கொள்க. 30-6-71-ல் சரிக்கட்ட வேண்டியவை.

6% தவணை வைப்பு 1-4-71-ல் தொடங்கியது.

கொடுபடவேண்டிய செலவினங்கள் :

கூலி ரூ. 350; அச்சுக் கூலி ரூ. 75; பெறவேண்டிய உறுப்பினர் தொகை ரூ. 250. விளையாட்டுக் கருவிகள் மீது 10%ம், கட்டடத்தின் மீது 5%ம் தேய்மானம் கண்டு பிடிக்க வேண்டும். இவற்றிலிருந்து அவ்வாண்டுக்கான வரவு செலவுக் கணக்கையும் 30-6-71-க்கான இருப்பு நிலைக் குறிப்பையும் தயாரிக்க.

6. புதுவை இலக்கிய மன்றத்தின் 31-3-1971-ல் முடியும் ஆண்டுக்கான வரவு செலவுக் கணக்கும் அந்நாளிற்கான இருப்பு நிலைக் குறிப்பும் கீழே கொடுக்கப் பட்டுள்ளன.

ப வரவு செலவுக் கணக்கு வ

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| ஊதியம் | 2,400 | உறுப்பினர் தொகை | 4,800 |
| இசை விழாச் செலவு | 1000 | சிறப்புக் கூட்டங்களின் வசூல் | 1,275 |
| சிறப்புக் கூட்டச் செலவு | 875 | இசை விழா வரவு | 960 |
| வாடகை | 1,300 | வரவினும் மிகுதியான செலவு | 1,035 |
| செய்தித்தாள்கள் முதலியவை | 500 | | |
| தேய்மானம் : நூல்கள் | 300 | | |
| அஞ்சல் | 50 | | |
| எழுது பொருள் | 320 | | |
| பரிசுகள், அன்பளிப்புகள் முதலியவை | 1,200 | | |
| மனைத்துணைப் பொருள் விற்றதில் நட்டம் | 125 | | |
| (ஏட்டு மதிப்பு ரூ. 300) | | | |
| | 8,070 | | 8,070 |

## இருப்பு நிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | | தொகை ரூ. | சொத்துகள் | | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|
| கொடுபட வேண்டிய ஊதியம் | | 200 | ரொக்கம் | | 238 |
| | | | வங்கி | | 1,532 |
| முன் கூட்டிப் பெற்ற உறுப்பினர் தொகை | | 50 | மனைத்துணைப் பொருள் | | 700 |
| முதல் நிதி-தொடக்கப் | 6,575 | | சைக்கிள் | | 500 |
| | | | நூல்கள் | 3,000 | |
| கூட்டு ஆயுள் உறுப்பினர் தொகை | 100 | | கழி தேய்மானம் | 300 | 2,700 |
| | 6,675 | | பெற வேண்டிய உறுப்பினர் தொகை | | 120 |
| கழி வரவினும் மிகுதியான செலவு | 1,035 | 5,640 | வாடகை முன் கூட்டிக் கொடுத்தது | | 100 |
| | | 5,890 | | | 5,890 |

31-3-1970-ல் பெறவேண்டிய உறுப்பினர் தொகை ரூ. 175; செலுத்த வேண்டிய ஊதியம் ரூ. 150. 1971-ல் சைக்கிள் வாங்கப் பட்டது. மேற்கொடுக்கப்பட்ட விவரங்களிலிருந்து 31-3-71-ல் முடியும் ஆண்டுக்கான பெறுதல்—செலுத்தல் கணக்கையும் 31-3-1970-க்குரிய இருப்பு நிலைக் குறிப்பையும் தயார் செய்க.

7. வள்ளலார் அறப்பணி மன்றத்தினர் கீழ்க்கண்ட கணக்குகளைத் தயாரித்துள்ளனர்,

31-3-71-ல் முடியும் ஆண்டுக்கான வரவு செலவுக் கணக்கு

| ப | ரூ. | வ | ரூ. |
|---|---|---|---|
| ஊதியம் | 2,600 | உறுப்பினர் தொகை | 15,200 |
| எழுது பொருளும் அச்சுக் கூலியும் | 540 | நுழைவுக் கட்டணம் | 200 |
| | | நன்கொடை | 10,800 |
| அறப்பணிச் செலவுகள்: | | முதலீட்டின் மீது வட்டி | 380 |
| உணவு வழங்கியது 3,785 | | தவணை வைப்பின் மீது வட்டி | 350 |
| மாணவர்க்களித்த உதவித் தொகை 5,250 | | வாடகை | 1,200 |
| அகதிகட்கு வழங்கிய துணிமணி வகை 2,100 | | | |
| பிற நன்கொடை 3,725 | 14,860 | | |
| தட்டெழுத்துப் பொறி விற்றதில் நட்டம் | 200 | | |
| வரி | 175 | | |
| காட்டுறுதி | 250 | | |
| தேய்மானம்: | | | |
| மனைத்துணைப் பொருள் | 150 | | |
| செலவினும் மிகுதியான வரவு | 9,355 | | |
| | 28,130 | | 28,130 |

31-3-1971-ஆம் ஆண்டுக்கான பெறுதல்—செலுத்தல் கணக்கு

| வரவு | | தொகை ரூ. | செலுத்தல் | | தொகை ரூ. |
|---|---|---|---|---|---|
| இருப்பு கீ/கொ. | | | ஊதியம் | | 2,300 |
| ரொக்கம் | 275 | | எழுதுபொருளும் அச்சுக் கூலியும் | | 500 |
| வங்கி | 4,580 | | விடுதி கட்டியது | | 20,000 |
| தவணை வைப்பு | 4,500 | 9,335 | அறப்பணிச் செலவுகள் | | |
| ஆயுள் உறுப்பினர் தொகை | | 2,200 | உணவு வழங்கியது | 3,785 | |
| உறுப்பினர் தொகை | | | மாணவர் உதவித் தொகை | 5,250 | |
| 1969-70 | 300 | | | | |
| 1970-71 | 15,000 | | அகதிகட்கு வழங்கிய துணி மணி வகை | 2,100 | |
| 1971-72 | 150 | 15,450 | நன்கொடை | 3,725 | 14,860 |
| நுழைவுக் கட்டணம் | | 200 | வரி | | 225 |
| நன்கொடை | | 10,800 | ஈட்டுறுதி | | 300 |
| மரபுரிமைச் சொத்து | | 5,700 | மிதி வண்டி (Cycle) | | 570 |
| வழங்கு நிதி (Endowment Fund) | | 2,500 | சேமிப்புப் பத்திரங்கள் வழங்கியது | | 2,500 |
| முதலீட்டின் மீது வட்டி | | 120 | இருப்பு கீ/இ | | |
| தவணை வைப்பு வட்டி | | 350 | ரொக்கம் | 350 | |
| வாடகை | | 1,100 | வங்கி | 2,570 | |
| தட்டெழுத்துப் பொறி | | 900 | தவணை வைப்பு | 4,500 | 7,420 |
| | | 48,675 | | | 48,675 |

**மன்றத்தின் பிற சொத்துகள் (1-4-70-ல்) :**

*கட்டடம் ரூ. 50,000; வழங்கு நிதி ரூ. 9,500; முதலீடு ரூ. 5.000; தட்டெழுத்துப் பொறி ரூ. 1,100; மனைத்துணைப் பொருள் ரூ. 1,500; கார் ரூ. 12,500; சில குறிப்புகள் : 1-4-1970-ல் தரவேண்டிய அச்சுக்கூலி ரூ. 90; வரி ரூ. 50; பெறவேண்டிய வாடகை ரூ. 200.*

மேலே கொடுக்கப்பட்ட கணக்குகளிலிருந்தும், பிற விவரக் குறிப்புகளிலிருந்தும் 1-4-1970-க்கான இருப்புநிலைக் குறிப்பையும் 31-3-1971-க்கான இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

8. 31-12-1970-ல் மதுரை மன்றத்தின் இருப்புகள் கீழ்க் கண்டவாறிருந்தன.

| | | ரூ. |
|---|---|---|
| உறுப்பினர் தொகை பெற்றது | ... | 4,000 |
| ரொக்கம் | ... | 370 |
| வங்கி யிருப்பு | ... | 3,850 |
| தவணை வைப்பு (31-12-1969) | ... | 6,000 |
| மனைத்துணைப் பொருள் (31-12-1969)) | ... | 2,200 |
| ,, ,, வாங்கியது | ... | 800 |
| விளையாடுமிடம் பராமரிப்பு | ... | 275 |
| வரிப்பந்தாட்ட மேசை (Table Tennis Board) (31-12-1969) | ... | 900 |
| பீங்கான் கோப்பைகள் முதலியவை (31-12-69) | ... | 500 |
| சிற்றுண்டிப் பிரிவின் வரவு | ... | 18,900 |
| சிற்றுண்டிச் சரக்கிருப்பு (31-12-1969) | ... | 450 |
| எழுதுபொருளும் அச்சுக்கூலியும் | ... | 280 |
| அஞ்சல் செலவு | ... | 50 |
| தவணை வைப்பு மீது பெற்ற வட்டி | ... | 300 |
| வரிப்பந்தாட்ட வரவு | ... | 3,380 |
| விளையாட்டுக் கருவிகள் (31-12-1969) | ... | 2.300 |
| கூலி (சிற்றுண்டிப் பிரிவு ரூ. 1,800) | ... | 3,400 |

| | | |
|---|---|---|
| நன்கொடை | ... | 1,200 |
| சிற்றுண்டிச் சரக்கு | ... | 16,205 |
| கண்ணாடி, பீங்கான் கோப்பைகள் | ... | 120 |
| எரி பொருள் | ... | 200 |
| மன்ற விழாவின் நிகர வருமானம் | ... | 500 |
| மின் செலவு (சிற்றுண்டிப் பிரிவு ரூ. 120) | ... | 600 |
| முதலீடு | ... | 5,000 |
| செயலரின் மதிப்பூதியம் (Honorarium) (1969-க்கானது) | ... | 250 |

சில குறிப்புகள் :

1. 31-12-1970-ல் உள்ள சிற்றுண்டிச் சரக்கிருப்பு ரூ. 1,300

2. 31-12-1969-க்குரிய உறுப்பினர் தொகை ரூ. 80-ம், 1971-க்குரிய உறுப்பினர் தொகை ரூ. 120-ம், உறுப்பினர் தொகையில் அடங்கியுள்ளன. 1970-ல் பெறவேண்டிய உறுப்பினர் தொகை ரூ. 250.

3. தேய்மானம் கணக்கிடுக :

கோப்பை, கார், விளையாட்டுக் கருவிகள் .. 20%

டென்னிஸ் மேசை ... 15%

4. சிற்றுண்டிச் சரக்கு வாங்கியதற்குச் செலவான தொகையில் ரூ. 300, சென்ற ஆண்டுக்குக் கொடுக்க வேண்டியது அடங்கியுள்ளது.

5. செயலரின் மதிப்பூதியம் ரூ. 300-க்கு உயர்த்தி இவ் வாண்டுக்குத் தரவேண்டியுள்ளது.

6. அச்சுக் கூலி தரவேண்டியது ரூ. 75.

7. 31-12-1970-ல் எழுதுபொருள் கையிருப்பு ரூ. 50.

—இவற்றிலிருந்து 31-12-1970-ல் முடியும் ஆண்டுக்கான சிற்றுண்டிப் பிரிவின் வாணிகக் கணக்கையும், வரவு—செலவுக் கணக்கையும், அந் நாளுக்கான இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

9. *1966 மார்ச் 31-ஆம் நாளில் முடியும் ஆண்டுக்கான* கீழ்க் கொடுக்கப் பட்டிருக்கும் நல்லன்பர் மன்றத்தில் பெறுதல், செலுத்தல் கணக்கு தயாரிக்கப் பட்டது.

பெறுதல்—செலுத்தல் கணக்கு

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| சென்ற ஆண்டின் ரொக்கம் இருப்பு | 1,890 | பரிசுகளும் போட்டிச் செலவுகளும் | 1,145 |
| உறுப்பினர் தொகை | 3,240 | அச்சுக் கூலியும் எழுது பொருளும் | 280 |
| போட்டிக் கட்டணங்கள் | 1,300 | வாடகை | 1,500 |
| நுழைவுக் கட்டணம் | 675 | ஊழியர்கள் கூலி | 1,900 |
| முதலீட்டின் மீது வட்டி | 35 | மனைத் துணைப் பொருள் வாங்கியது | 480 |
| பல்வகை வரவு | 82 | முதலீடு வாங்கியது | 800 |
| | | இருப்பு கீ/இ | 1,117 |
| | 7,222 | | 7,222 |

ஆண்டுத் தொடக்கத்தில் மன்றத்தின் சொத்துகள்: முதலீடு ரூ. *1,200;* மனைத்துணைப் பொருள் ரூ. *1,150;* உறுப்பினர் தொகை நிலுவை ரூ. *300* (நடப்பாண்டில் பெற்றது). கொடுபட வேண்டிய செலவுகள் ரூ. *300* (நடப்பாண்டில் செலுத்தப் பட்டது).

ஆண்டிறுதியில் உறுப்பினர் தொகை ரூ. *210* பெற வேண்டியிருந்தது. அச்சுக் கூலியும் எழுது பொருளும். தர வேண்டியது ரூ. *45.*

*1966 மார்ச் 31-ல்* முடியும் ஆண்டுக்கான வரவு செலவு கணக்கையும் அந்நாளுக்குரிய இருப்புநிலைக் குறிப்பையும் தயாரி செய்க.

(S. A. S. 1961)

**10.** 1970-ஆம் ஆண்டு மதுரை நண்பர்கள் சழகத்தின் முதல் பெறுதல், செலுத்தல் கணக்கு கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| நன்கொடை பெற்றது | 50,000 | கட்டடம் | 40,000 |
| ஒதுக்கு நிதி (Reserve Fund) (ஆயுள் உறுப்பினர் கட்டணம்) | 4,000 | நால்முனைப் போட்டிக்கான செலவு | 900 |
| நால்முனைப் போட்டி நிதி (குறிப்பிட்ட போட்டிகட்காம் செலவினங்களை பெற்ற தொகை | 10,000 | மனைத்துணைப் பொருள் | 2,100 |
| நடைமுறை வரவினங்கள் | | நடமுறைச் செலவினங்கள். | |
| உறுப்பினர் தொகை (1971-க் கான ரூ. 100 உட்பட) | 3,200 | ஊதியம் | 1,800 |
| காவல் வாடகை (Lockers Rent) | 100 | கிரிக்கட் | 600 |
| முதலீட்டின் மீதான வட்டி | 100 | வரிப்பந்தாட்டம். | 540 |
| கிரிக்கட் | 400 | ஈட்டுறுதி (1971 செப்டம்பர் வரை கொடுக்கப் பட்டுள்ளது.) | 360 |
| பல்வகை | 50 | தோட்டச் செலவு | 170 |
| வரிப்பந்தாட்டம் (Tennis) | 350 | அச்சுக் கூலி முதலியவை | 30 |
| மேசைக் கோற் பந்தாட்டம் Billiards) | 200 | தொலைபேசி | 250 |
| | | பல்வகை | 150 |
| | | முதலீடு (அடக்க மதிப்பு) | 18,000 |
| | | இருப்பு | 3,500 |
| | 68,400 | | 68,400 |

1970–க்கான உறுப்பினர் தொகை வர வேண்டியது ரூ. 300. 1970 டிசம்பர்த் திங்களுக்கு ஊதியம் ரூ. 170 கொடுக்க வேண்டியுள்ளது. மேலே கொடுக்கப்பட்ட விவரங்களிலிருந்து 1970 டிசம்பர் 31-ல் முடியும் ஆண்டுக்கான வரவு செலவுக் கணக்கையும், அந்நாளுக்குரிய இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

(Adapted For G. D. A).

**11.** கீழ்க்கண்ட விவரங்களிலிருந்து 1964 டிசம்பர் 31-ல் முடியும் ஆண்டுக்கான (i) பெறுதல் செலுத்தல் கணக்கையும் (ii) வரவு செலவுக் கணக்கையும் தயார் செய்யவும் :

| | ரூ |
|---|---|
| சென்ற ஆண்டுக்கான உறுப்பினர் தொகை பெற்றது | 2,000 |
| நடப்பாண்டிற்கான உறுப்பினர் தொகை பெற்றது | 18,000 |
| நடப்பாண்டிற்கான உறுப்பினர் தொகை நிலுவையிலுள்ளவை | 3,000 |
| கீழ்க்கண்டவற்றிற்காகப் பெற்றது : | |
| அறை வாடகை | 1,000 |
| மேசை கோற்பந்தாட்டம் (Billiards) | 6,000 |
| சிற்றுண்டிப் பிரிவு | 12,500 |
| கீழ்க்கண்டவற்றிற்குச் செலுத்தியது : | |
| ஊதியம் | 10,000 |
| பழுது பார்க்குஞ் செலவு | 1,200 |
| எழுது பொருளும் அச்சுக் கூலியும் | 3,000 |
| சிற்றுண்டிச் சரக்கு | 8,500 |
| காவலர் கூலி | 6,800 |
| எரிபொருளும் எரிவளியும் | 4,000 |
| வாடகையும் வரியும் | 5,000 |
| கொடுக்க வேண்டியவை : | |
| பழுது பார்க்குஞ் செலவு | 800 |
| சிற்றுண்டிச் சரக்கு | 2,200 |
| ரொக்கம் | |
| 1964 சனவரி 1 | 1,800 |
| 1964 டிசம்பர் 31 | 2,800 |

(CAIIB 1965)

12. அரசி மருத்துவ மனையின் 1944 டிசம்பர் 31-க்கான இருப்புநிலைக் குறிப்பு கீழே கொடுக்கப்பட்டுள்ளது :

| பொறுப்புகள் | £ | சொத்துகள் | £ |
|---|---|---|---|
| நன்கொடை கணக்கு | 10,000 | கட்டடம் | 10,650 |
| செலுத்த வேண்டியவை : | | நோயாளிகளின் நண்பர்களிடமிருந்து வர வேண்டியது | 75 |
| மருந்துகளும் கருவிகளும் | 100 | ரொக்கம் | 175 |
| பத்திய உணவு (Diet) | 260 | | |
| பண்டங்கள் (Stores) | 40 | | |
| சேர்த்து வைக்கப்பட்ட மிகுதி வருவாய் | 500 | | |
| | 10,900 | | 10,900 |

1945-க்கான பொருளரின் (Treasurer) ரொக்க ஏடு கீழ்க் காட்டியவாறிருந்தது.

| பெறுதல் | £ | செலுத்தல் | £ |
|---|---|---|---|
| இருப்பு (1-1-45) | 175 | செலவினங்கள் : | |
| உறுப்பினர் தொகை | 2,875 | மருந்து | 700 |
| | | உணவு | 2,500 |
| நோயாளிகளின் நண்பர்களிடமிருந்து பெற்றது | 1,400 | பண்டங்கள் (Stores) | 500 |
| | | கூலி | 600 |
| | | இருப்பு (31-12-45) | 150 |
| | 4,450 | | 4,450 |

1945 டிசம்பர் 31-ல் கொடுக்கப்பட வேண்டியவை : மருந்து £ 120; உணவு £ 250; பண்டகம் £ 50. நோயாளிகளின் நண்பர்

களிடமிருந்து £ 120 பெறவேண்டியிருந்தது. 1945ஆம் ஆண்டுக்கான மருத்துவ மனையின் வரவு செலவுக் கணக்கையும் 1945 டிசம்பர் 31 ற்கான இருப்பு நிலைக் குறிப்பையும் தயார் செய்க.

(U. P. Board)

13. மெட்ராஸ் கிரிக்கட் மன்றத்தின் ரொக்க ஏட்டிலிருந்து 1967 ஜூன் 30-ல் முடியும் ஆண்டுக்கான பெறுதல் செலுத்தல் கணக்கு கீழ்க் கொடுக்கப்பட்டிருக்கிறது.

| பெறுதல் | ரூ. | செலுத்தல் | ரூ. |
|---|---|---|---|
| 1966 ஜூலை 1 | | 1967 ஜூன் 30 | |
| கையிருப்பு ரொக்கம் | 2,000 | கிரிக்கட் பயிற்றுவிப்பாளர் ஊதியம் | 5,400 |
| வங்கி நகலேட்டின் படி வங்கியிருப்பு : | | நிலப் பாது காவலர் ஊதியம் | 3,600 |
| சேமிப்புக் கணக்கு | 16,000 | கருவிகளும் புல்வெட்டும் பொறியும் வாங்கியது | 18,000 |
| நடப்புக் கணக்கு | 4,000 | நில வாடகை | 3,000 |
| 1967 ஜூன் 30 | | ஆண்டுவிழாச் செலவு | 7,000 |
| வங்கி வட்டி | 250 | எழுதுபொருளும் அச்சுக் கூலியும் | 3,200 |
| நுழைவுக் கட்டணம் | 2,500 | கருவிகள் பொறி—பழுது பார்க்குஞ் செலவு | 5,500 |
| நன்கொடையும் உறுப்பினர் தொகையும் | 35,000 | செயலர் மதிப்பூதியம் | 4,200 |
| ஆண்டுவிழா வசூல் | 1,500 | வங்கி நகலேட்டின்படி வங்கி இருப்பு : | |
| கருவி விற்றது | 1,000 | சேமிப்புக் கணக்கு | 18,000 |
| ஆண்டுவிழா நிகர வருமானம் | 12,500 | நடப்புக் கணக்கு | 5,350 |
| | | கையிருப்பு ரொக்கம் | 1,500 |
| | 74,750 | | 74,750 |

கீழே சில தகவல்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன :

| | 1966 சூலை 1 ரூ. | 1967 சூன் 30 ரூ. |
|---|---|---|
| (i) உறுப்பினர் தொகை நிலுவை | 3,000 | 2,000 |
| (ii) எழுது பொருளும் அச்சுக் கூலியும் தர வேண்டியது | 1,750 | 900 |
| (iii) சேமிப்பு வங்கிக் கணக்கின் மீதான வட்டி (வங்கி நகலேட்டில் பதிவாகாதது) | | 175 |
| (iv) பொறியும் கருவிகளும் | 10,000 | 27,000 |

சூன் 30, 1967-ல் முடியும் ஆண்டுக்கான வரவு-செலவுக் கணக்கையும் அந்நாளிற்கான இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

(M. U. B. Com. Sept. 1967)

14. வால்டேர் படிப்பகத்தின் 1948 சூன் 30-க்கான இருப்பு நிலைக் குறிப்பு கீழே தரப்பட்டுள்ளது.

| பொறுப்புகள் | ரூ | சொத்துகள் | ரூ. |
|---|---|---|---|
| கொடுபட வேண்டிய செலவு | 650 | ரொக்கம் | 3,200 |
| முதல் நிதி (Capital Fund) கடந்த ஆண்டுகளில் செலவினும் மிகுதியான வரவுக் கணக்கு | 44,350 | மனைத்துணைப் பொருள் | 4,850 |
| | | கடனாளிகள் : உறுப்பினர் தொகை நிலுவை 750 | |
| | | சொற்பொழிவு மன்ற வாடகை நிலுவை 350 | 1,100 |
| | | நூல்கள் (Books) | 16,850 |
| | | முதலீடு | 5,000 |
| | | கட்டடம் | 14,000 |
| | 45,000 | | 45,000 |

இந்த ஆண்டுக்கான ரொக்க நடவடிக்கைகள் கீழே தரப்பட்டுள்ளன.

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| இருப்பு கீ/கொ | 3,200 | ஊதியம் | 2,400 |
| நுழைவுக் கட்டணம் | 2,600 | நகராட்சி வரி | 700 |
| உறுப்பினர் தொகை | 8,500 | கட்டடத்தின் மீது ஈட்டுறுதி | 500 |
| பழைய மனைத்துணைப் பொருள் விற்றது | 600 | நூல்கள் வாங்கியது | 1,250 |
| பழைய செய்தித்தாள்களை விற்றது | 60 | சென்ற ஆண்டு கடனீந்தோர்க்குச் செலுத்தியது | 650 |
| நூலக அறை வாடகை | 1,040 | பழுது பார்க்குஞ் செலவு | 250 |
| சொற்பொழிவு, பொழுது போக்கு நிகழ்ச்சிகள் மூலம் வருவாய் | 3,000 | மின் பொறிகள் நிறுவியது | 4,500 |
| | | அச்சுக் கூலியும் எழுது பொருளும் | 400 |
| | | அஞ்சல் | 50 |
| | | பல்வகைச் செலவு | 150 |
| | | இருப்பு கீ/இ | 8,150 |
| | 19,000 | | 19,000 |

உறுப்பினர் தொகை வரவேண்டியது ரூ. 1,100 என்றும் நூலக அறை வாடகை ரூ. 375 வரவேண்டியுள்ளது என்றும் தெரிய வருகிறது. கட்டடத்தின் மீதான ஈட்டுறுதி ரூ. 175 முன் கூட்டிச் செலுத்தப்பட்டுள்ளது. செலவினங்கள் கொடுபட வேண்டியது ரூ. 800.

தேய்மானங் கணக்கிடுக:

கட்டடம் — $2\frac{1}{2}\%$; முதலீடு 5%

நூலகங்கள் — 10%

1948 ஜூன் 30-க்கு முடியும் ஆண்டுக்கான வரவு செலவுக் கணக்கையும் அந்நாளுக்குரிய இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க.

(M. U. B. Com. Sept. 51)

(Company Secretary Exam. April, 63)

15. கோவா மன்றத்தின் 1966-க்கான வரவு செலவுக் கணக்கு கீழ்க் கொடுக்கப்பட்டிருக்கிறது.

1966 டிசம்பர் 31-ல் முடியும் ஆண்டுக்கான
வரவு செலவுக் கணக்கு

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| ஊதியம் | 4,750 | உறுப்பினர் தொகை | 7,500 |
| பொதுச் செலவு | 500 | நுழைவுக் கட்டணம் | 250 |
| தணிக்கைக் கட்டணம் | 250 | ஆண்டு விருந்துக்காசப் பெற்றது | 1,000 |
| செயலரின் மதிப் பூதியம் | 1,000 | ஆண்டு விளையாட்டு விழாவின் வருமானம் | 750 |
| அச்சுக் கூலியும் எழுது பொருளும | 450 | | |
| ஆண்டு விருந்துச் செலவு | 1,500 | | |
| வட்டியும் வங்கிக கட்டணமும் | 150 | | |
| | 300 | | |
| தேய்மானம் | 600 | | |
| மிகுதி (Surplus) | | | |
| | 9,500 | | 9,500 |

கீழ்க் கண்டவற்றைச் சரிக்கட்டிய பிறகு மேற்கண்ட கணக்கு தயாரிக்கப்பட்டிருந்தது.

| | | ரூ. |
|---|---|---|
| 1965 இறுதியில் உறுப்பினர் தொகை நிலுவையிலிருந்தது (Outstanding) | ... | 600 |
| 1965 டிசம்பர் 31-ல் உறுப்பினர் தொகை முன் கூட்டிப் பெற்றது | ... | 450 |
| 1966 டிசம்பர் 31-ல் உறுப்பினர் தொகை முன் கூட்டிப் பெற்றது | ... | 270 |
| 1966 டிசம்பர் 31-ல் உறுப்பினர் தொகை நிலுவையிலிருந்தது | ... | 750 |

1966-ன் தொடக்கத்திலும் 1966-ன் இறுதியிலும் ஊதியம் முறையே ரூ. 400-ம் ரூ. 450-ம் கொடுபட வேண்டியிருந்தது. முன் கூட்டிச் செலுத்தப் பெற்ற ஈட்டுறுதி ரூ. 60 பொதுச் செலவில் அடங்கியுள்ளது. 1966-க்கான தணிக்கைக் கட்டணம் கொடுபட வேண்டியுள்ளது. 1966-ஆம் ஆண்டில் 1965-க்கான தணிக்கைக் கட்டணம் ரூ. 200 கொடுக்கப்பட்டிருந்தது.

ரூ. 10,000 மதிப்புள்ள குத்தகை நிலம் மன்றத்துக் குரியது. 1966 சனவரி 1-ஆம் நாள் மன்றத்திலிருந்த விளையாட்டுக் கருவிகளின் மதிப்பு ரூ. 2,600. ஆண்டு இறுதியில் தேய்மானம் கழித்த பின் உள்ள கருவிகளின் மதிப்பு ரூ. 2,700. 1965-ல் மன்றம் ரூ. 2,000- க்கு வங்கிக் கடன் வாங்கியிருந்தது. இக் கடன் 1966-ஆம் ஆண்டு முழுவதும் இருந்தது. 1966 டிசம்பர் 31-ல் இருந்த ரொக்கம் ரூ. 1,600 ஆகும். 1966-க்கான பெறுதல் செலுத்தல் கணக்கையும் 1966 டிசம்பர் 31-க்கான இருப்பு நிலைக் குறிப்பையும் தயார் செய்க.

(Bombay Inter. March, 1969)

16. கீழே கொடுக்கப்பட்டிருக்கும் இருப்புப் பட்டியலிலிருந்தும் சரிக்கட்டப்பட வேண்டிய விவரங்களிலிருந்தும் 1962 டிசம்பர் 31-ல் முடியும் ஆண்டுக்கான பாரத விளையாட்டு மன்றத்தின் வரவு செலவுக் கணக்கையும் அந்நாளுக்கான இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

| | | பற்று | வரவு |
|---|---|---|---|
| | | ரூ. | ரூ. |
| மன்றக் கட்டடம் | ... | 37,400 | |
| நூலக நூல்கள் | ... | 2,280 | |
| மனைத்துணைப் பொருள் | ... | 3,520 | |
| 1962 சனவரி 1-ல் கண்ணாடி, பீங்கான் பொருள்கள் | ... | 2,000 | |
| கண்ணாடி பீங்கான், பொருள்கள் வாங்கியது | ... | 1,000 | |
| அச்சுக் கூலியும் எழுது பொருளும் | ... | 225 | |
| வாடகை | ... | | 10,870 |
| உறுப்பினர் தொகை | ... | | 12,150 |
| பொழுது போக்குச் செலவு | ... | 345 | |
| மேசைக் கோற் பந்தாட்டம் (Billiards) விளையாட்டுக்காகப் பெற்றது | ... | | 3,845 |
| மேசைக் கோற் பந்தாட்ட மேசை (Billiards Table) | ... | 10,400 | |

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| மேசைக் கோற்பந்தாட்டச் செலவு | ... | 2,135 | |
| சிற்றுண்டிச் சாலை இலாபம் | ... | | 1,200 |
| 1962–சனவரி 1-ல் உறுப்பினர் தொகை வரவேண்டியது | ... | 1,125 | |
| மதிப்பூதியம் (Honorarium) | ... | 1,500 | |
| ஆண்டு விருந்துக்கான சீட்டுகள் விற்பனை மூலம் பெற்றது | ... | | 1,600 |
| ஆண்டு விருந்துச் செலவு | ... | 1,875 | |
| ஊதியம் | ... | 2,700 | |
| நன் கொடை | ... | | 8,500 |
| தணிக்கைக் கட்டணம் | ... | 600 | |
| துப்புரவு, பழுது பார்த்தல் செலவு | ... | 350 | |
| செய்தித் தாள்களும் இதழ்களும் | ... | 180 | |
| வங்கி வைப்புத் தொகை மீதான வட்டி | ... | | 25 |
| வங்கிக் கட்டணம் | ... | 20 | |
| நுழைவுக் கட்டணம் | ... | | 225 |
| தேர்தல் செலவுகள் | ... | 2,995 | |
| 1962 டிசம்பர் 31-ல் சிற்றுண்டிச் சரக்கிருப்பு | ... | 300 | |
| பற்பல கடனீந்தோர் | ... | | 3,13 |
| ரொக்கம் | ... | 1,900 | |
| வங்கி | ... | 1,735 | |
| பொது நிதி (General Fund) | ... | | 33,035 |
| | | 74,585 | 74,585 |

சரிக்கட்ட வேண்டியவை :

(i) 1962 டிசம்பர் 31-ல் எழுது பொருள் கையிருப்பு ரூ. 35

(ii) உறுப்பினர் தொகை நிலுவைக்காகப் பெற்றது ... ரூ. 1125-ம் முன் கூட்டிப் பெற்றது ரூ. 760-ம் உறுப்பினர் தொகையில் அடங்கியுள்ளன.

(iii) வாடகை பெற வேண்டியது ... ரூ. 500

(iv) கொடுபடாத ஊதியம் ... ரூ. 200

(v) நுழைவுக் கட்டணம் முதலாக்கப் படவேண்டும்.

(vi) நன் கொடைத் தொகையில் ரூ. 3,600 தேர்தல்நிதிக்காகப் பெற்றது அடங்கியுள்ளது. மீதியிருப்பதில் பாதித் தொகை முதலீட்டு வரவாக்க வேண்டும்.

(vii) தேய்மானம் கீழ்க்கண்டவாறு கணக்கிடப்படவேண்டும் :

(1) நூலக நூல்கள் ... 10%

(2) மனைத்துணைப் பொருள் ... 15%

(3) மன்றக் கட்டடம் ... 5%

(4) கண்ணாடி, பீங்கான் பொருள்கள் ... ரூ. 1,700

(Inter-Bombay Nov. 1966)

17. 1968 டிசம்பர் 31-ல் முடியும் ஆண்டுக்கான கணக்குகள் S. S. மருத்துவ மனையின் ஏடுகளிலிருந்து எடுக்கப்பட்டிருக்கின்றன. அவற்றிலிருந்து தொடக்க இருப்பு நிலைக் குறிப்பையும் (1968-சனவரி 1-ஆம் நாளுக்குரியது) இறுதி இருப்புநிலைக் குறிப்பையும் (1968 டிசம்பர் 31) தயார் செய்க.

## பெறுதல் செலுத்தல் கணக்கு
## (Receipts and Payments Account)

| இருப்பு : | ரூ. | செலவினங்கள் : | ரூ. |
|---|---|---|---|
| ரொக்கம் | 600 | மனைத்துணைப் பொருள் வாங்கியது | 1,000 |
| வங்கி | 7,000 | கருவிகள் வாங்கியது | 2,000 |
| அரசினர் கடன் பத்திரங்கள் | 1,80,000 | அறுவை மருந்தகச் செலவு | 1,500 |
| வரவினங்கள் : | | உணவுச் செலவு | 2,500 |
| உறுப்பினர் தொகை | 30,000 | வாடகையும் வரியும் | 2,400 |
| நன்கொடை | 6,000 | ஈட்டுறுதி | 500 |
| வட்டி | 10,000 | அலுவலகச் செலவு | 1,200 |
| பல்வகை | 500 | ஊதியம் | 24,000 |
| | | பல்வகைச் செலவு | 200 |
| | | இறுதி இருப்பு : | |
| | | ரொக்கம் | 1,800 |
| | | வங்கி | 17,000 |
| | | அரசினர் கடன் பத்திரங்கள் | 1,80,000 |
| | 2,34,100 | | 2,34,100 |

## வரவு செலவுக் கணக்கு

| | | ரூ. | | | ரூ. |
|---|---|---|---|---|---|
| ஊதியம் | 24,000 | | உறுப்பினர் தொகை : | | |
| கழி : 1967-க் குரியது | 1,500 | | பெற்றது | 30,000 | |
| | 22,500 | | கழி : 1967-க் குரியது | 10,000 | |
| கூட்டு : | | | | 20,000 | |
| செலுத்த வேண்டியது | 1,000 | 23,500 | கூட்டு : பெற வேண்டியது | 8,000 | 28,000 |
| உணவுச் செலவு | | 2,500 | நன்கொடை | | 6,000 |
| அறுவை, மருந்தகச் செலவு | | 1,500 | வட்டி : | | |
| வாடகையும் வரியும் : | | | பெற்றது | 10,000 | |
| செலுத்தியது | 2.400 | | கழி : 1967-க் குரியது | 2,500 | |
| கழி : 1967-க்குரியது | 200 | | | 7,500 | |
| | 2,200 | | கூட்டு : பெற வேண்டியது | 2,500 | 10,000 |

| | | | |
|---|---|---|---|
| கூட்டு : செலுத்த வேண்டியது 250 | 2,450 | பல்வகை வரவு | 500 |
| ஈட்டுறுதி 500 | | | |
| கழி : முன் கூட்டிச் செலுத்தியது 100 | 400 | | |
| அலுவலகச் செலவு | 1,200 | | |
| பல்வகைச் செலவு | 200 | | |
| தேய்மானம் : | | | |
| கட்டடம்-$2\frac{1}{2}$% | 5,000 | | |
| மனைத்துணைப் பொருள் 10% | 400 | | |
| கருவிகள் 20% | 1,200 | | |
| மிகுதி (Surplus) | 6,150 | | |
| | 44,500 | | 44,500 |

எல்லா சொத்துகள் மீதும் தேய்மானம் முழு ஆண்டுக்கும் கணக்கிடப்பட்டுள்ளது. மருத்துவ மனையின் நிலத்தின் மதிப்பு ரூ.50,000. இது கட்டடத்தின் மதிப்பில் சேர்க்கப் படவில்லை. ரூ. 2,00,000 முகமதிப்புடைய அரசினர் கடன் பத்திரங்கள் (அவற்றின் அடக்க மதிப்பு ரூ. 1,80,000) மருத்துவ மனையின் நன்கொடை நிதி முதலீட்டைக் குறிப்பதாகும்.

(Company Secretary Exam. Oct. 1969, Inter)

18. 1963 டிசம்பர் 31-ற்கான பாரத கல்விக் கழகத்தின் இருப்புப்பட்டியல் கீழே தரப்பட்டுள்ளது. அதிலிருந்து வரவு செலவுக் கணக்கையும், இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க.

| | | பற்று | வரவு |
|---|---|---|---|
| | | ரூ. | ரூ. |
| மனைத்துணைப் பொருள் | ... | 12,500 | |
| இவ்வாண்டில் வாங்கிய மனைத்துணைப் பொருள் | ... | 3,200 | |
| நூலக நூல்கள் | ... | 17,500 | |
| நூல்கள் வாங்கியது | ... | 4,300 | |
| கட்டடம் | ... | 2,75,000 | |

| | | பற்று | வரவு |
|---|---|---|---|
| | | ரூ. | ரூ. |
| பொது முதலீடு | ... | 1,50,000 | |
| முதலீட்டு ஒதுக்கு நிதி (Investment Reserve Fund) | ... | | 15,000 |
| பற்பல கடனாளிகளும் கடனீந்தோரும் | ... | 5,000 | 14,500 |
| நுழைவுக் கட்டணம் | ... | | 15,200 |
| தேர்வுக் கட்டணம் | ... | | 2,400 |
| உறுப்பினர் தொகை பெற்றது | ... | | 20,000 |
| சான்றிதழ்க் கட்டணம் (Certificate Fees) | ... | | 500 |
| மன்ற அறை வாடகை | ... | | 6,500 |
| முதலீட்டின் மீது பெற்ற வட்டி | ... | | 5,500 |
| பற்பல வரவு | ... | | 600 |
| ஊழியர்களின் ஊதியம் | ... | 10,200 | |
| எழுது பொருளும், அச்சுக் கூலியும், விளம்பரமும் | ... | 1,000 | |
| வரியும், ஈட்டுறுதியும் | ... | 800 | |
| தேர்வுச் செலவுகள் | ... | 600 | |
| இதழ்கட்கான தொகை | ... | 1,200 | |
| பரிசு பொறுப்பாண்மை நிதி | ... | | 16,000 |
| பரிசு பொறுப்பாண்மை முதலீடு | ... | 15,800 | |
| பரிசுப் பொறுப்பு வருமானம் | ... | | 650 |
| பரிசுகள் வழங்கியது | ... | 450 | |
| பரிசுநிதி வங்கி யிருப்பு | ... | 275 | |
| நன்கொடை பெற்றது (முதலீட்டுச் செலவாக்கப் படவேண்டும்.) | ... | | 18,000 |

| | | பற்று | வரவு |
|---|---|---|---|
| | | ரூ. | ரூ. |
| பொதுச் செலவு | ... | 375 | |
| முதல் நிதி | ... | | 3,89,150 |
| வங்கி | ... | 5,500 | |
| ரொக்கம் | ... | 300 | |
| | | 5,04,000 | 5,04,000 |

கீழ்க்கண்ட விவரங்களைச் சரிக்கட்ட வேண்டும்:

| | ரூ. |
|---|---|
| உறுப்பினர் தொகை பெற வேண்டியது | ... 4,500 |
| உறுப்பினர் தொகை முன்கூட்டிப் பெற்றது | ... 500 |
| பொது முதலீட்டில் வட்டி கூடியுள்ளது | ... 450 |
| ஊழியர் ஊதியங் கொடுபட வேண்டியது | ... 1,800 |
| வரியும் ஈட்டுறுதியும் முன்கூட்டிச் செலுத்தியது | ... 500 |

கீழ்க்கண்ட விகிதத்தில் தேய்மானங் கண்டுபிடிக்க.

(இவ்வாண்டில் வாங்கியது உட்பட)

| | | |
|---|---|---|
| நூலக நூல்கள் | ... 15% | ஆண்டு விகிதம் |
| மனைத்துணைப் பொருள் | ... 5% | ,, |
| கட்டடம் | ... 1% | ,, |

1963 டிசம்பர் 31-ல் பொது முதலீட்டின் சந்தை மதிப்பு ரூ. 1,30,000. ஆனால், இந்த அளவிற்கு ஏட்டு மதிப்பைக் கொண்டுவர வேண்டியதில்லை. வருமான வரி தேவையில்லை.

(C. A. Final)

19. கீழ்க் கொடுக்கப்பட்டிருக்கும் ஏழைநல மன்றத்தின் பெறுதல் செலுத்தல் கணக்கினின்றும் பிற விவரங்களிலிருந்தும், 1946 டிசம்பர் 31-ல் முடிவும் ஆண்டுக்கான வரவு செலவுக் கணக்கையும் அந்நாளுக்குரிய இருப்புநிலைக் குறிப்பையும் தயாரிக்க.

பெறுதல் செலுத்தல் கணக்கு.

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| இருப்பு : | | ஓய்வு பெற்றோர்க்கு (Pensioners) வழங்கியது | 12,650 |
| ரொக்கம் | 70 | வாடகை (முக்காலாண்டு) | 7 0 |
| வங்கியில் தவணை வைப்பு | 5,000 | அலுவலகச் செலவும் ஊதியமும் | 2,750 |
| வங்கியில் நடப்புக் கணக்கு | 1,160 | வசூலித்தோரின் கழிவு | 370 |
| உறுப்பினர் தொகையும் நன் கொடையும் | 12,720 | பல்வகைப் பொருள் விற்றது | 260 |
| மரபுரிமைச் சொத்து (Legacy) | 4,000 | அஞ்சல் | 180 |
| சிறப்பு நிதி-நன் கொடை | 1,700 | சிறப்பு நிதியிலிருந்து வழங்கிய பணிக் கொடை (gratuity) | 1,430 |
| முதலீட்டின் மீது வட்டி | 1,350 | முதலீடு | 3,000 |
| வைப்புத் தொகை மீது வட்டி | 240 | இருப்பு : | |
| | | வங்கியில் தவணை வைப்பு | 4,000 |
| | | வங்கியில் நடப்புக் கணக்கு | 730 |
| | | ரொக்கம் | 120 |
| | 26,240 | | 26,240 |

மரபுரிமைச் சொத்துகளில் (Legacies) பாதியை வரவினமாகவும், மீதியை முதலாகவும் கொள்ளவும். 'பொது நிதி'யிலிருந்து 'சிறப்புநிதி'யை வேறுபடுத்திக் காட்டவும் செயற்குழு தீர்மானித்தது. 1946 டிசம்பர் 31-ல் காலாண்டுக்கான வாடகை தரப் படவில்லை. பல்வகைப் பொருள்களை விற்றதில் ரூ. 150 வர வேண்டியிருந்தது.

(M. U. B. Com. March 1948)

20. 1961 டிசம்பர் 31-ல் முடியும் ஆண்டுக்கான ஒரு கலாசார மன்றத்தின் பெறுதல் செலுத்தல் கணக்கு கீழ்த்தரப்பட்டுள்ளது.

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| ரொக்கம் (1-1-1961) | 1,500 | வங்கி மேல்வரைப் பற்று (1-1-1961) | 3,100 |
| உறுப்பினர் தொகை<br>1960 300<br>1961 16,200<br>1962 150 | 16,650 | கடன் பத்திரங்களில் முதலீடு | 3,000 |
| | | மனைத்துணைப் பொருள் | 1,450 |
| கலை நிகழ்ச்சிகளில் வருவாய் | 2,000 | ஊதியம் | 6,200 |
| நுழைவுக் கட்டணம் | 670 | எழுதுபொருளும் அச்சுக் கூலியும் | 890 |
| கடன் பத்திரங்கள் மீது வட்டி | 480 | கலை நிகழ்ச்சிச் செலவு | 1,710 |
| பழைய நாற்காலிகள் விற்பனை | 120 | பல்வகைச் செலவு | 1,420 |
| | | 31-12-1961-ல் இருப்பு:<br>ரொக்கம் 550<br>வங்கி 3,100 | 3,650 |
| | 21,420 | | 21,420 |

கீழ்க் கொடுக்கப்பட்டிருக்கும் விவரங்களிலிருந்து 1961 டிசம்பர் 31-ல் முடியும் ஆண்டுக்கான வரவு செலவுக் கணக்கையும் அந்நாளிற்கான இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

(i) ஆண்டு உறுப்பினர் தொகை ரூ. 10 செலுத்தக்கூடிய 1,800 உறுப்பினர்கள் மன்றத்தில் உள்ளார்கள். 1960-ஆம் ஆண்டிற்கான உறுப்பினர் தொகை ரூ. 90 வரவேண்டியுள்ளது.

(ii) 1960 டிசம்பர் 31-ல் இருந்த எழுதுபொருள் இருப்பு ரூ. 125. 1961 டிசம்பர் 31-ல் அதன் இருப்பு ரூ. 87.

(iii) நுழைவுக் கட்டணம் முதலீட்டு வரவாக்கப் படவேண்டும்.

(iv) 1961 டிசம்பர்க்கான ஊதியம் ரூ. 550 தரவேண்டியுள்ளது. 1960 டிசம்பர் 31-ல் தரவேண்டிய செலவுகள் ரூ. 132 ஆக இருந்தது. 1960-ஆம் ஆண்டில் தொலைபேசிக் கட்டணத்திற்கென மன்றம் ரூ. 500 செலுத்தியிருந்தது. இதில் ரூ. 125 1961-ஆம் ஆண்டுக்குரியது.

(v) 1960 டிசம்பர் 31-ல் கட்டடங்களின் மதிப்பு ரூ. 24,500 ஆகவும் முதலீட்டின் மதிப்பு ரூ. 6,500 ஆகவுமிருந்தன. கட்டடம்-முதலீடு-இவற்றின் மீது 5% தேய்மானங் கணக்கிடுக.

(C. A. Final, May, 1960)

21. 1966 . ஜூன் 30-ல் முடியும் ஆண்டுக்கான குழிப் பந்தாட்ட மன்றத்தின் (Golf) பெறுதல்-செலுத்தல் கணக்கு, வரவு செலவுக் கணக்கு ஆகியவற்றையும், அந்நாளுக்கான இருப்புநிலைக் குறிப்பையும் தயார் செய்க.

தொடக்க உறுப்பினர்களின் உறுப்பினர் தொகையில் பாதியும், பிற உறுப்பினர்களின் நுழைவுக் கட்டணமும் முதலீட்டு வரவாக்கப் படவேண்டும் என்றும், செலவினும் மிகுதியாக இருக்கும் வரவில் பாதித் தொகையை ஒதுக்கு நிதிக்கு (Reserve Fund) எடுத்துச் செல்ல வேண்டும் என்றும் மன்ற நடைமுறை விதிகள் கூறுகின்றன.

(i) நடப் பாண்டில் பெற்றவை;

ரூ. 50 வீதம் 140 தொடக்க உறுப்பினர்களின் உறுப்பினர் தொகை; ரூ. 10 வீதம் 220 புதுஉறுப்பினர்களிடம் பெற்ற நுழைவுக் கட்டணம்; ரூ 50 வீதம் அவர்களின் உறுப்பினர் தொகை; தவணை வைப்பு மீதான வட்டி ரூ. 180; மது வகைகள் விற்பனை ரூ. 6,380; ஆண்டுக்கு ரூ. 450 வீதம் 1965 டிசம்பர் 31-ல் முடியும் அரையாண்டுக்கான புல்வெளி வாடகை; 4% வட்டியில் கடன் ரூ. 9,000.

(ii) நடப்பாண்டில் செலுத்தியவை:

மன்ற மேலாளரின் ஊதியம் ரூ. 2,500; புல்வெளிக் காவலரின் கூலி ரூ. 1,500; வாடகை ரூ. 5,500; கடன் மீது வட்டி ரூ. 360; ஆண்டு விருந்துச் செலவு ரூ. 1,000 பல்வகைச் செலவு ரூ. 535; வரி ரூ. 730; பணியாட்கள் கூலி ரூ.585; எரிபொருள் ரூ. 515; மதுவகை வாங்கியது ரூ. 8,735; மனைத்துணைப் பொருள் வாங்கியது ரூ. 600: திரைச் சீலைகள் (Furnishings) வாங்கியது ரூ. 200; பழுது பார்க்குஞ் செலவு ரூ. 125; அச்சுக் கூலி ரூ. 390; A-கட்டடங்கட்டுபவர் (மன்றக் கட்டடக் கணக்கு) ரூ.2750; B-ஒட்டுபவர் (Joiner) (மன்றக் கட்டடக் கணக்கு) ரூ. 5,225: C-கட்டடக் கலைஞர் (மன்றக் கட்டடக் கணக்கு) ரூ, 1,200; D-வண்ணமடிப்பவர் (மன்றக் கட்டடக் கணக்கு) ரூ. 525.

(iii) 1965 ஜுன் 30-ல் கையிலிருந்த ரொக்கம் ரூ. 5,260; 6% தவணை வைப்பில் செலுத்தப்பட்டிருந்த ரொக்கம் ரூ. 3,000; (சென்ற ஆண்டிலிருந்து இது கொண்டு வரப்படுகிறது). மதுவகைகளின் இருப்பு . 2870.

(iv) வாடகை ரூ. 500; பணியாள்கள் கூலி ரூ. 15; புல்வெளிக் காவலர் கூலி ரூ. 300; மதுவகை வாங்கியது ரூ. 265; A. கட்டடங்கட்டுபவர் (மன்றக் கட்டடக் கணக்கு) ரூ. 1,300. இவை செலுத்தப்படவில்லை. 10 தொடக்க உறுப்பினர்களிடமிருந்து உறுப்பினர் தொகை பெறப்படவில்லை.

(v) மன்ற கட்டடத்தின் மொத்த மதிப்பின் மீது 3%ம் மனைத்துணைப் பொருள் மீது 5%ம் திரைச்சீலைகள் மீது 15%ம் தேய்மானங் கணக்கிடுக.

(S. A. S. 1963)

# 15. அனுப்பீடு

## (Consignment)

உரிமையை மாற்றித் தராமலேயே ஒருவர் வேறோர் இடத்தி லுள்ள மற்றவரிடம் விற்கக் கோரி, சரக்கு அனுப்புவதை அனுப்பீடு (Consignment) என்கிறோம். அவ்வாறு சரக்கு அனுப்புபவரை அனுப்புநர் (Consignor) என்றும், யாருக்குச் சரக்கு அனுப்பப் படுகிறதோ, அவரை அனுப்பப் பெறுநர் (Consignee) எனவும் அழைக்கலாம்.

உற்பத்தியாளரோ அல்லது மொத்த வியாபாரியோ தங்களி டம் உள்ள சரக்கை வெளிநாடுகளில் அல்லது தொலைவில் உள்ள பிற இடங்களில் விற்க இவ் வழியை மேற் கொள்ளலாம். அனுப்பப் பெறுநர் ஒரு முகவர் (Agent) போன்றே பணியாற்று கின்றார். உரிமையைத் தன்னகத்தே வைத்துள்ள அனுப்புநர் முதல்வர் (Principal) நிலையில் உள்ளார். இதனால் சரக்கு சேத முறினும், அழிந்துவிடினும் அனுப்பப் பெறுநர் பொறுப்பாக மாட்டார்.

(சரக்கு) அனுப்பீட்டு நடவடிக்கையை விற்பனையெனில் தவறாகும். காரணம், விற்பனை நடவடிக்கையில் வாங்குநர் சரக்கின் முழு உரிமையைப் பெறுகிறார். கடன் பேரில் விற்றாலும் கூட உரிமை உடனேயே மாற்றப்பட்டு விடுகிறது. விற்குநரும் வாங்கு நரும் கடனீந்தோர் கடனாளி நிலையில் இருப்பர். ஆனால், அனுப்பீட் டில் உடைமை தான் மாறுகிறதே யன்றி உரிமை மாறுவதில்லை. இதனால் ஏற்படும் நட்டமனைத்தையும் அனுப்புநரே ஏற்றாக வேண்டும். இதனால் அனுப்புநரும் அனுப்பப் பெறுநரும் முதல்வர்-முகவர் நிலையில் இருப்பதை நாம் உணரலாம். இவ் வகையில் அனுப்பீடு விற்பனையினின்றும் மாறுபடுகின்றது.

அனுப்புநரின் ஆணை வழியே அனுப்பப் பெறுநர் செயல்பட வேண்டும். பொதுவாக, விற்பனையில் குறிப்பிட்ட சதவிகிதத்தில் கழிவுத் தொகை (Commission) அவர்க்குக் கொடுக்கப்படும். விற்பனையின் காரணமாகச் செய்யும் செலவுகளைத் திரும்பப் பெற்றுக் கொள்ளும் உரிமை அவர்க்குண்டு.

கப்பல் வழியோ, பிறமுறைகளிலோ அனுப்புநர் சரக்கை அனுப்புகிறார். அத்துடன் ஒரு பெயரளவு இடாப்பினை (Proforma Invoice) தயாரித்தும் அனுப்புவார். இடாப்பில் காண வேண்டிய விவரங்கள் அனைத்தும்—சரக்கு விவரம், விலை வீதம், அளவு முதலியன—இதிலும் இருக்கும். ஆயினும் இதனை இடாப்பு எனக் கூறக் கூடாது. காரணம், இது விற்பனை யல்ல. அனுப்பப் பெறுநர் இதில் கண்டுள்ள தொகையை அனுப்பவும் தேவையில்லை. எனவேதான் இதனைப் 'பெயரளவு இடாப்பு' என்று அழைக்கின்றனர். நல்ல விலையில் சரக்கை விற்க அனுப்பப் பெறுநர் கோரப்படுவார்; அல்லது குறிப்பிட்ட விலைக்கும் கீழாக விற்கக் கூடாது என்று கேட்கப்பட்டிருப்பார்.

சரக்கு துறைமுகத்தை வந்தடைந்ததும் அனுப்பப் பெறுநர் துறைமுகக் கட்டணம் (Dock Fees), சுங்கவரி (Customs Duty), சரக்ககற்றுஞ் செலவு போன்றவற்றிற்குப் பணஞ் செலுத்த வேண்டியிருக்கலாம். சுமைகூலி, பண்டசாலை வாடகை (Godown Rent), ஈட்டுறுதிக் கட்டணம் (Insurance) போன்ற செலவினங்களையும் மேற்கொள்ள வேண்டியிருக்கும். சரக்கு வந்தடைந்ததும், அனுப்புநர் முன் பணமாக உண்டியல் ஒன்றை வரைவர். அனுப்பப் பெறுநர் அதனை ஏற்றனுப்புவார். குறிப்பிட்ட காலத்துக் கொரு முறை இந் நடவடிக்கைகளைக் குறித்து அறிக்கை தயார் செய்து அனுப்புநரிடம் அனுப்புவார். இது விற்பனைக் கணக்கறிக்கை (Account Sales) எனப்படும்.

இதில் விற்பனை பற்றிய விவரம், தான் ஏற்ற செலவுகள், தனக்குச் சேர வேண்டிய கழிவுத் தொகை, தான் முன்னர் ஏற்ற உண்டியல் தொகை அல்லது அனுப்பிய தொகை போன்றவை குறிப்பிடப்பட்டு, மீதி அனுப்பப்படும் அல்லது அனுப்ப வேண்டிய தொகையையும் சுட்டிக்காட்டியிருப்பார். இது கீழ்க் கண்ட வடிவத்தில் இருக்கும்.

சரவணன் வானொலிக் கம்பனியிடம் பெற்று அக் கம்பனிக்காக விற்ற 100 வானொலிப் பெட்டிகட்கான விற்பனைக் கணக்கு அறிக்கை.

| விவரம் | தொகை ரூ. | | தொகை ரூ. | |
|---|---|---|---|---|
| விற்பனை வகையில் வரவு : | | | | |
| 50 வானொலிப் பெட்டிகள் ரூ. 300 வீதம் | 15,000 | — | | |
| 20 வானொலிப் பெட்டிகள் ரூ. 280 வீதம் | 5,600 | — | 20,600 | — |
| கழி : | | | | |
| கட்டணங்கள் : | | | | |
| கட்டணமும் சரக்ககற்றுஞ் செலவும் | 200 | — | | |
| பண்டகசாலை வாடகை | 100 | — | | |
| ஈட்டுறுதி | 200 | — | | |
| கழிவு விற்பனையில் 10% | 2,060 | — | 2,560 | — |
| கழி : | | | 18,040 | — |
| ஏற்ற உண்டியல் | | | 15,000 | — |
| இப்பொழுது வங்கி விடை (Bank Draft) மூலம் அனுப்பும் தொகை | | | 3,040 | — |

வி. பி. செ. பி. நீ. — இன்னிசைக் கம்பனிக்காக

25-6-1971 — ... ... ... ... மேலாளர்

மேற்கண்ட கணக்கறிக்கையை அனுப்பப் பெறுநரான இன்னிசைக் கம்பனி, சரவணன் வானொலிக் கம்பனிக்கு அனுப்புகிறது. மொத்தம் 70 வானொலிப் பெட்டிகள் ரூ. 20,600-க்கு விற்பனை யாகியுள்ளதையும், ரூ. 500 ஏற்ற செலவினங்கட்கும், ரூ. 2,060 விற்பனையில் கழிவுக்கும் ஆக மொத்தம் ரூ. 2,560 எடுத்துக் கொண்டதையும் இது வெளிக் காட்டுவதுடன், முன்னர் தான் ஏற்ற உண்டியல் ரூ. 15,000 போக மீதித் தொகையான ரூ. 3,040-ஐ வங்கி விடை (Bank Draft) மூலம் அனுப்புவதையும் இது தெளிவாக உணர்த்துகிறது.

விற்பனைக் கணக்கறிக்கையிலிருந்துதான் சரக்கனுப்பியவர் வேண்டிய விவரங்களையும் இன்னும் 30 வானொலிப் பெட்டிகள் விற்கப்பட வேண்டும் என்பதையும் அறிகிறார்.

பிணைக் கழிவு (Del Credere Commission)

சாதாரணமாக இவ்வகை விற்பனையில் ஏற்படும் நட்டத்தை அனுப்புநர்தான் ஏற்க வேண்டும் என்று கூறியுள்ளோம். ரொக்கத் திற்கும் கடன் பேரிலும் சரக்கு விற்கப்படும் என்பது தெரிந்ததே. கடன் பேரில் வாங்கியவர்களில் சிலர் பணங் கொடுக்கத் தவறுவதால் ஏற்படும் வராக்கடன் நட்டத்தையும் (Bad Debts) அனுப்புநர்தான் ஏற்க வேண்டும். தொலைவில் விற்பனை செய்யும் அனுப்பப் பெறுநர் வராக்கடன் போன்ற நட்டத்தைத் தவிர்க்க அல்லது அவ்வாறு வராக்கடன் ஏற்படினும் அதற்கு அவரையே பொறுப்பாக்க விரும்பின் அதற்கெனத் தனிக் கழிவு கொடுக்க வேண்டும். இதனையே பிணைக் கழிவு (நாணயச் சான்றுக் கழிவு—Del Credere Commission) என்கிறோம். சாதாரணமாக விற்பனைக்குக் கொடுக்கும் கழிவுத் தொகையன்றி, வராக்கடன் ஏற்படின் அதனை அனுப்பப் பெறுநர் ஏற்றுக் கொள்வதற்காகக் கொடுக்கும் கழிவே ஆகும் இது. இவர்களைப் பிணைமுகவர்கள் (Del Credere Agent) எனலாம்.

அனுப்பீட்டில் ஏற்படும் இலாப-நட்டத்தை உணர்வதற்குத் தனி ஏடுகளில் பதிவு செய்ய வேண்டும். ஒவ்வொரு (சரக்கு) அனுப்பீட்டிற்கும் தனித்தனிக் கணக்குகள் வைத்திருத்தல் இன்றியமையாதது. அனுப்பீட்டுக் கணக்கு வியாபார இலாப-நட்டக் கணக்கு போன்றது.

அனுப்புநர் ஏடுகளில் செய்யவேண்டிய பதிவுகள் :

அனுப்பீட்டு முறையில் பலர்க்குச் சரக்கனுப்பி விற்பனை செய்யலாம். அவ்வாறு சரக்கனுப்பும் ஒவ்வொருவருக்கும் தனித்தனிக் கணக்கெழுதி வைத்தால்தான் ஒவ்வொரு அனுப்பீட்டிலும் ஏற்பட்டது இலாபமா இழப்பா என்ற விவரம் தெரியவரும்.

அனுப்பப் பெறுநர் வாங்குநர் அல்லர். அனுப்பப்பட்ட சரக்கின் உரிமையை அவர் பெறுவதுமில்லை. எனவே, அவர் கணக்கில் பற்று வைக்கக்கூடாது. வாணிகக் கணக்குப் போன்றுள்ள 'வெளிச்செல் அனுப்பீட்டுக் கணக்கில்' பற்று வைக்கவேண்டும்.

அனுப்பீட்டடிப்படையில் சரக்கனுப்பும் போழ்து அது விற்பனை அல்ல என்றும் அதன் மீதுள்ள உரிமை அனுப்பப் பெறுநரிடம் உள்ளதென்பதையும் விளக்கியுள்ளோம். எனவே, விற்பனைக் கணக்கில் வரவு வைக்கக் கூடாது. ஆயினும் பொதுவாக வாணிகஞ் செய்யும் சரக்கிலிருந்துதான் இது அனுப்பப் பட்டுள்ளது.

எனவே அனுப்பீட்டில் அனுப்பிய சரக்குக் கணக்கு எனும் புதிய கணக்கொன்று தொடங்கி அதில் வரவு வைக்கவேண்டும். எனவே, அதற்குத் தேவையான பதிவு:

அனுப்பீட்டுக் க/கு...ப

அனுப்பீட்டிலனுப்பிய சரக்குக் க/கு

சரக்கனுப்பும் போழ்து, கப்பல் அல்லது பிற போக்குவரத்துக் கட்டணம், ஈட்டுறுதி, சுமைகூலி, போன்ற செலவினங்களை மேற்கொள்ள வேண்டியிருக்கும். தேவையான பதிவு:

அனுப்பீட்டுக் க/கு...ப

வங்கிக் க/கு அல்லது ரொக்கக் க/கு

தனிப்பட்ட செலவுக் கணக்குகளில் பற்று வைக்கத் தேவையில்லை. அவ்வாறு பற்று வைப்பின் பின்னர் அக் கணக்குகளனைத்தையும் அனுப்பீட்டுக் கணக்குக்கே மாற்றியாக வேண்டும். எனவே, நேரடியாக அனுப்பீட்டுக் கணக்கில் பற்று வைத்திடலாம், செலவனைத்தும் காசோலை கொடுத்தே ஏற்கிறோம் என்று வங்கிக் கணக்கில் வரவு வைக்கிறோம்.

சரக்கை அனுப்பப் பெறுநரிடம் அனுப்பியவுடன் முன்பணமாக (Advance) அவர் மீது உண்டியலை அனுப்புநர் வரைவது வழக்கம். தம்மீது வரைந்த உண்டியலை அனுப்பப் பெறுநர் ஏற்றதற்கான பதிவு:

வரவுடைய உண்டியல் க/கு...ப

அனுப்பப் பெறுநர் க/கு.

இவ்வுண்டியலை அனுப்புநர் தம் வங்கியில் தள்ளுபடிக்கு மாற்றும் போழ்து செய்ய வேண்டிய பதிவு:

வங்கிக் க/கு......ப

தள்ளுபடிக் க/கு...ப

வரவுடைய உண்டியல் க/கு

சில வேளைகளில் உண்டியல் வரைந்து ஏற்பதற்கு மாறாக வங்கிப் பணவிடை (Bank Draft) வழியாக முன்பணத்தைச் செலுத்துவதுண்டு. அதற்கான பதிவு:

வங்கிக் க/கு...ப

அனுப்பப் பெறுநர் க/கு

அனுப்பப் பெறுநரிடமிருந்து விற்பனைக் கணக்கறிக்கை பெற்றதும், விற்பனை, அவர் ஏற்ற செலவு முதலிய விவரங்கள் தெரிய வருகின்றன. இவற்றைப் பதிய வேண்டும்.

விற்பனையைப் பதிய,

அனுப்பப் பெறுநர் க/கு...ப

அனுப்பீட்டுக் க/கு

அனுப்பப் பெறுநர் ஏற்ற செலவினங்களைப் பதிய

அனுப்பீட்டுக் க/கு...ப

அனுப்பப் பெறுநர் க/கு

அனுப்பப் பெறுநர்க்குச் சேரவேண்டிய கழிவுத் தொகையைப் பதிய,

அனுப்பீட்டுக் க/கு...ப

அனுப்பப் பெறுநர் க/கு

அனுப்பிய சரக்கனைத்தையும் அனுப்பப் பெறுநர் விற்றிருப்பாரானல், அனுப்பீட்டுக் கணக்கு இதன் விளைவைத் தெரிவிக்கும். இதில் ஏற்பட்டது இலாபமா அல்லவா என்பதை இக் கணக்கை இருப்புக் கட்டித் தெரிந்து கொள்ளலாம். வரவுப் பகுதி பற்றுப் பகுதியினும் மிகுந்திருக்குமாயின் இலாபம் ஏற்பட்டுள்ளது என்று பொருள். இதனை இலாப-நட்டக் கணக்கில் வரவுப் பகுதிக்கு எடுத்துச் செல்ல வேண்டும். பதிவு:

அனுப்பீட்டுக் க/கு...ப

இலாப-நட்டக் க/கு

நட்ட மேற்படின், இலாப-நட்டக் கணக்கில் பற்றுப் பகுதிக்கு எடுத்துச் செல்லவேண்டும். தேவையான பதிவு:

இலாப-நட்டக் க/கு...ப

அனுப்பீட்டுக் க/கு

அனுப்பப் பெறுநரின் கணக்கையும் தயாரிக்கலாம். அவர் கணக்கு இன்னும் அவரிட மிருந்து பெற வேண்டிய தொகை எவ்வளவு என்பதை யுணர்த்தும்.

இறுதிக் கணக்குகளைத் தயாரிக்கும் போழ்து, அனுப்பீட்டில் அனுப்பிய சரக்குக் கணக்கை முடிக்க வேண்டும். வணிக நிறுவனமாயின் இக் கணக்கைக் கொள்முதல் கணக்குக்கு எடுத்துச் செல்ல வேண்டும். தேவையான பதிவு:

அனுப்பீட்டிலனுப்பிய சரக்குக் க/கு...ப

கொள்முதல் க/கு

பொருள் உற்பத்தி செய்யும் நிறுவனமாயின் இக் கணக்கை வாணிகக் கணக்குக்கு எடுத்துச் சென்று முடிக்க வேண்டும். பதிவு:

அனுப்பீட்டிலனுப்பிய சரக்குக் க/கு...ப

வாணிகக் க/கு

எடுத்துக் காட்டு 61 :

பம்பாயிலுள்ள 'புதுமை நிலையம்' ரூ. 10,000 மதிப்புள்ள துண்டுத் துணிகளை (Piece Goods) அனுப்பீட்டடிப்படையில் விற்க, சென்னை அமுத நிலையத்துக்கு அனுப்புகிறார். கட்டுச் செலவு முதலியவற்றிற்கு ரூ. 100 செலவு செய்கிறார்.

தம்மீது ரூ. 5,000-க்கு வரைந்த மூன்று திங்கள் தவணை உண்டியலை அமுத நிலையம் ஏற்றது. இவ்வுண்டியலைப் புதுமை நிலையத்தார் 6% தள்ளுபடிக்கு வங்கியில் மாற்றினர். பின்னர், அமுத நிலையம் விற்பனைக் கணக்கறிக்கையையும் சேர வேண்டிய தொகையையும் அனுப்பியது. அதில் கீழ்க்கண்ட விவரங்கள் இருந்தன. சரக்கு விற்றது ரூ. 15,200. அவர் ஏற்ற செலவினங்கள்: இரயில் சத்தம் ரூ. 250; கிடங்கு வாடகை ரூ. 250; ஈட்டுறுதி ரூ. 200; விற்பனைச் செலவுகள் ரூ. 300. அவர்க்குச் சேரவேண்டிய கழிவு விற்பனையில் 6%. இதிலிருந்து அமுத நிலையம் தயாரிக்கும் விற்பனைக் கணக்கறிக்கையையும் புதுமை நிலையத்தின் ஏட்டில் குறிப்பேட்டுப் பதிவுகளையும் கணக்குகளையும் தயாரிக்கவும்.

விடை :

பம்பாய்ப் புதுமை நிலையத்திடம் பெற்று, அந் நிறுவனத்துக்காக விற்ற, துண்டுத் துணிகளின் (Piece Goods) விற்பனைக் கணக்கறிக்கை.

| விவரம் | | தொகை | தொகை |
|---|---|---|---|
| | | ரூ. | ரூ. |
| விற்பனை வகையில் வருவாய் | | | 15,200 — |
| கழி : | ரூ. | | |
| இரயில் சத்தம் | 250 | | |
| கிடங்கு வாடகை | 250 | | |
| ஈட்டுறுதி | 200 | | |
| விற்பனைச் செலவுகள் | 300 | 1,000 — | |
| ,, கழிவு @ 6% | | 912 — | 1,912 — |
| | | | 13,288 — |
| ,, முன்னரே ஏற்ற உண்டியல் | | | 5,000 — |
| இப்பொழுது அனுப்பும் வங்கிப் பணவிடை. | | | 8,288 — |

வி. பி. செ. ப. நீ.
சென்னை

அமுத நிலையத்துக்காக
............
உரிமையாளர்

புதுமை நிலையத்தின் ஏடுகளில்

| | | பற்று | வரவு |
|---|---|---|---|
| | | ரூ. | ரூ. |
| சென்னை அனுப்பீட்டுக் க/கு | ப | 10,000 — | |
| அனுப்பீட்டிலனுப்பிய சரக்கு க/கு | | | 10,000 — |
| (துண்டுத்துணிகளை அனுப்பீட்டடிப்படையில் விற்க, சென்னை அமுத நிலையத்துக்கனுப்பியது.) | | | |

புதுமை நிலையத்தின் ஏடுகளில்

| | | பற்று | | வரவு | |
|---|---|---|---|---|---|
| சென்னை அனுப்பீட்டுக் க/கு<br>வங்கிக் க/கு<br>(அனுப்பீட்டில் கட்டுச் செலவு செய்தது.) | ப | 100 | — | 100 | — |
| வரவுடைய உண்டியல் க/கு<br>அமுத நிலையம்<br>(சென்னை, அமுத நிலையத்திடமிருந்து வரவுடைய உண்டியல் பெற்றது.) | ப | 5,000 | — | 5,000 | — |
| வங்கிக் க/கு<br>தள்ளுபடிக் க/கு<br>வரவுடைய உண்டியல் க/கு<br>(உண்டியல் 6%-க்குத் தள்ளுபடி செய்யப்பட்டது.) | ப<br>ப | 4,925<br>75 | —<br>— | 5,000 | — |
| அமுத நிலையம்<br>சென்னை அனுப்பீட்டுக் க/கு<br>(அனுப்பப் பெறுநர் விற்றது) | ப | 15,200 | — | 15,200 | — |
| சென்னை அனுப்பீட்டுக் க/கு<br>அமுத நிலையம்<br>(அனுப்பப் பெறுநர் செய்த செலவு) | ப | 1,000 | — | 1,000 | — |
| சென்னை அனுப்பீட்டுக் க/கு<br>அமுத நிலையம்<br>(விற்பனையில் 6% கழிவு அனுப்பப் பெறுநர்க்குச் சேர வேண்டியது) | ப | 912 | — | 912 | — |
| வங்கிக் க/கு<br>அமுத நிலையம்<br>(அனுப்பப் பெறுநரிடமிருந்து கணக்கு தீர்க்கப் பெற்று, பெற்ற வங்கிப் பணவிடை) | ப | 8,288 | — | 8,288 | — |
| சென்னை அனுப்பீட்டுக் க/கு<br>இலாப-நட்டக் க/கு<br>(அனுப்பீட்டில் ஏற்பட்ட இலாபம், இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்லப்படுகிறது.) | ப | 3,188 | — | 3,188 | — |

புதுமை நிலையத்தின் ஏடுகளில்

| | | பற்று | | வரவு | |
|---|---|---|---|---|---|
| அனுப்பீட்டிலனுப்பிய சரக்கு க/கு ப<br>கொள் முதல் க/கு<br>(அனுப்பீட்டிலனுப்பிய சரக்குக் கணக்கைக் கொள்முதல் கணக்கிற்கெடுத்துச் செல்ல) | ப | 10,000 | — | 10,000 | — |
| இலாப-நட்டக் க/கு<br>தள்ளுபடிக் க/கு<br>(தள்ளுபடிக் கணக்கை இலாப-நட்டக் கணக்கிற் கெடுத்துச் சென்றது) | ப | 75 | — | 75 | — |

பேரேட்டுக் கணக்குகள்.

ப — சென்னை அனுப்பீட்டுக் கணக்கு. — வ

| | | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|
| அனுப்பீட்டிலனுப்பிய சரக்கு க/கு | | 10,000 | — | அமுதநிலையம்—விற்பனை | 15,200 | — |
| வங்கி — கட்டுச் செலவு | | 100 | — | | | |
| அமுதநிலையம்—இரயில் சத்தம் | 250 | | | | | |
| கிடங்கு வாடகை | 250 | | | | | |
| ஈட்டுறுதி | 200 | | | | | |
| விற்பனைச் செலவு | 300 | 1,000 | — | | | |
| அமுதநிலையம்—கழிவு | | 912 | — | | | |
| இலாப-நட்டக் க/கு — இலாபம் மாற்றப் படுகிறது. | | 3,188 | — | | | |
| | | 15,200 | — | | 15,200 | — |

### அமுத நிலையம்

| | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| சென்னை அனுப்பீட்டுக் க/கு — விற்பனை | 15,200 | — | வரவுடைய உண்டியல் | 5,000 | — |
| | | | சென்னை அனுப்பீட்டுக் க/கு — இரயில் சத்தம் 250 கிடங்கு வாடகை 250 ஈட்டுறுதி 200 விற்பனைச் செலவு 300 | 1,000 | — |
| | | | சென்னை அனுப்பீட்டுக் க/கு— கழிவு | 912 | — |
| | | | வங்கி | 8,288 | — |
| | 15,200 | — | | 15,200 | — |

### அனுப்பீட்டிலனுப்பிய சரக்குக் கணக்கு

| | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| கொள் முதல் க/கு மாற்றப் படுகிறது | 10,000 | — | சென்னை அனுப்பீட்டுக் க/கு | 10,000 | — |

### வரவுடைய உண்டியல் கணக்கு

| | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| அமுத நிலையம் | 5,000 | — | வங்கி | 4,925 | — |
| | | | தள்ளுபடி | 75 | — |
| | 5,000 | — | | 5,000 | — |

தள்ளுபடிக் கணக்கு

| | | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|
| வரவுடைய உண்டியல் | | 75 | — | இலாப-நட்டக் க/கு | 75 | — |

வங்கிக் கணக்கு

| | | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|
| வரவுடைய உண்டியல் | | 4,925 | — | சென்னை அனுப்பீட்டுக் க/கு | 100 | — |
| அமுத நிலையம் | | 8,288 | — | | | |

கொள்முதல் கணக்கு

| | | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|
| | | | | அனுப்பீட்டிலனுப்பிய சரக்கு | 10,000 | — |

இலாப-நட்டக் கணக்கு

| | | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|
| தள்ளுபடி | | 75 | — | சென்னை அனுப்பீட்டுக் க/கு | 3,188 | — |

இனி அனுப்பப் பெறுநர் ஏட்டில் எத்தகைய பதிவுகளைச் செய்ய வேண்டும் என்பதை ஆய்வோம்.

அனுப்பீட்டில் விற்பதற்குச் சரக்கு பெறும் போழ்து அதன் மீது உரிமை பெறுவதில்லை. எனவே, இதனைக் கொள் முதலாகக் கருதிக் கொள்முதல் ஏட்டில் பதியக் கூடாது. 'அனுப்பீட்டில் பெற்ற சரக்கேடு' எனுந் தனியொரு ஏட்டில் பெற்ற சரக்குப் பற்றிய விவரம், விலை, விற்பனை நிபந்தனைகள் முதலியவற்றைக் குறித்து வைத்தல் நலம். பதிவேதும் தேவைப்படுவதில்லை. உண்டியலை ஏற்கும் போழ்தோ, முன்பணம் அனுப்பும் பொழுதோதான் பதிவு செய்ய வேண்டும்.

தேவையான பதிவு :

அனுப்புநர் க/கு...ப

செலுத்த வேண்டிய உண்டியல் க/கு.

சரக்கு வந்ததும் இரயில் கட்டணம், கப்பல் கட்டணம் முதலியவை கட்டவேண்டியிருக்கலாம். அல்லது துறைமுகக் கட்டணம் தீர்வை போன்றவை செலுத்த வேண்டியிருக்கலாம். பின்னர் அவற்றைப் பண்டசாலை அல்லது கிடங்கில் வைத்திருக்க வாடகை கொடுக்க வேண்டியிருக்கலாம். பிறர் மூலமாக விற்கும்போழ்து பிற விற்பனைச் செலவுகளை மேற்கொள்ள வேண்டியிருக்கலாம். இவ்வாறு அனுப்பீட்டின் பொருட்டுச் செலவுகள் செய்யும்போழ்து செய்ய வேண்டிய பதிவு :

அனுப்புநர் க/கு...ப

வங்கி அல்லது ரொக்கம் க/கு.

தனித்தனிச் செலவுகளைக் கணக்கில் பற்று வைக்கக் கூடாது. காரணம் அச் செலவுகள் அனுப்புநர்பொருட்டு ஏற்கப்படுகின்றன. எனவே, அனுப்புநர் கணக்கில்தான் பற்று வைக்க வேண்டும்.

அனுப்பீட்டுக் சரக்கை விற்கும் போழ்தெல்லாம் ரொக்கம் அல்லது வங்கிக் கணக்கில் பற்று வைக்கலாம். விற்பனைக் கணக்கில் வரவு வைக்கக் கூடாது. அனுப்புநர்க்கு அது சேர வேண்டிய தொகை. எனவே, கீழ்க்கண்ட பதிவு தேவைப்படுகிறது. ரொக்க விற்பனையாயின்,

ரொக்கம் அல்லது வங்கிக் க/கு...ப

அனுப்புநர் க/கு.

கடன்பேரில் விற்கப்படின்,

வாடிக்கையாளர் க/கு...ப

அனுப்புநர் க/கு

சரக்கு விற்றதற்குத் தமக்குக் கழிவு சேரவேண்டியுள்ளது. தேவையான பதிவு :

அனுப்புநர் க/கு...ப

கழிவுக் க/கு

இக் கழிவுக் கணக்கை ஆண்டிறுதியில் இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்ல வேண்டும். தேவையான பதிவு :

கழிவுக் க/கு...ப

இலாப-நட்டக் க/கு

இப்பொழுது அனுப்புநர் கணக்கைத் தயாரிக்கலாம். அவர் கணக்குக் காட்டும் இருப்பு, தான் அனுப்புநர்க்குச் செலுத்த வேண்டிய தொகையை உணர்த்தும். அத் தொகையை அனுப்பும் போழ்து செய்ய வேண்டிய பதிவு ;

அனுப்புநர் க/கு...ப

வங்கிக் க/கு

தான் விற்பனைக்கு வைத்திருக்கும் சரக்குடன் அனுப்பீட்டின் அடிப்படையில் வந்திருக்கும் சரக்கைச் சேர்க்கக் கூடாது. ஆண்டு முடிவில் அனுப்பீட்டுச் சரக்குத் தன் கைவசமிருப்பின் இதைத் தன் இறுதிச் சரக்குடன் சேர்க்கக்கூடாது.

எடுத்துக்காட்டு 61-ல் கொடுக்கப்பட்ட கணக்கை அமுத நிலையத்தின் ஏடுகளில் பதிந்து தேவையான கணக்குகளைத் தயாரிக்க.

அமுத நிலையத்தின் (அனுப்பப் பெறுநர்) ஏடுகளில் குறிப்பேடு

| | பற்று | வரவு |
|---|---|---|
| | ரூ. | ரூ. |
| புதுமை நிலையம் ப<br>செலுத்த வேண்டிய உண்டியல் க/கு<br>(அனுப்பீட்டின் முன்பணமாக உண்டியலை ஏற்றனுப்பியது.) | 5,000— | 5,000— |
| வங்கிக் க/கு ப<br>புதுமை நிலையம்<br>(புதுமை நிலையத்துக்காக அனுப்பீட்டுச் சரக்கை விற்றது ) | 15,200— | 15,200— |
| புதுமை நிலையம் ப<br>வங்கிக் க/கு<br>(அனுப்பீட்டின் பொருட்டுச் செலவுகளை ஏற்றது.) | 1,000— | 1,000— |
| புதுமை நிலையம் ப<br>கழிவுக் க/கு<br>(விற்பனையில் 6% கழிவு புதுமை நிலையத்திடமிருந்து பெற வேண்டியது.) | 912— | 912— |
| புதுமை நிலையம் ப<br>வங்கிக் க/கு<br>(கணக்குத் தீர்த்துப் புதுமை நிலையத்துக்குச் சேர வேண்டிய தொகையை அனுப்பியது.) | 8,288— | 8,288— |
| செலுத்த வேண்டிய உண்டியல் க/கு ப<br>வங்கிக் க/கு<br>(செலுத்த வேண்டிய உண்டியலுக்கு உரிய நாளில் பணஞ் செலுத்தியது.) | 5,000— | 5,000— |
| கழிவுக் க/கு ப<br>இலாப-நட்டக் க/கு<br>(கழிவுக் கணக்கை இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்ல.) | 912— | 912— |

பேரேட்டுக் கணக்குகள்.

புதுமை நிலையம்

| ப | ரூ. | | வ | ரூ. | |
|---|---|---|---|---|---|
| செலுத்த வேண்டிய உண்டியல் | 5,000 | — | வங்கி—விற்பனை | 15,200 | — |
| வங்கி— இரயில் சத்தம் 250, கிடங்கு வாடகை 250, ஈட்டுறுதி 200, விற்பனைச் செலவு 300 | 1,000 | — | | | |
| கழிவு | 912 | — | | | |
| வங்கி | 8,288 | — | | | |
| | 15,200 | — | | 15,200 | — |

செலுத்த வேண்டிய உண்டியல் க/கு

| | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| வங்கி | 5,000 | — | புதுமை நிலையம் | 5,000 | — |

வங்கிக் க/கு

| | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| புதுமை நிலையம்—விற்பனை | 15,200 | — | புதுமை நிலையம்— இரயில் சத்தம் 250, கிடங்கு வாடகை 250, ஈட்டுறுதி 200, விற்பனைச் செலவு 300 | 1,000 | — |
| | | | புதுமை நிலையம் | 8,288 | — |
| | | | செலுத்த வேண்டிய உண்டியல் | 5,000 | — |

கழிவுக் கணக்கு

| | ரூ. | | | ரூ | |
|---|---|---|---|---|---|
| இலாப-நட்டக் க/கு —மாற்றப் படுகிறது | 912 | — | புதுமை நிலையம் | 912 | — |

இலாப-நட்டக் கணக்கு

| | ப | | | ப | |
|---|---|---|---|---|---|
| | | | கழிவு | 912 | — |

அனுப்பப் பெறுநர் ஏடுகளில் வேறொரு முறையில் பதிதல்

அனுப்பப் பெறுநர் ஏடுகளில் பதியும் போழ்து வேறு ஒரு முறையும் கையாளப்படுவதுண்டு. இது ஒரு சிறந்த முறை யன்று. எனினும் அம் முறையை அறிந்து கொள்ளுதல் நலம்.

சரக்கு வந்தவுடன், உள் வரு அனுப்பீட்டுக் கணக்கு ஒன்று தொடங்கப் பெறுகிறது. அதில் பற்றும், அனுப்புநர் கணக்கில் வரவும் வைக்கப்படும்.

செலவுகள் ஏற்கப்படும் போழ்து உள்வரு அனுப்பீட்டுக் கணக்கில் பற்றும், ரொக்கம் அல்லது வங்கிக் கணக்கில் வரவும் வைக்கப்படும்.

தனக்குச் சேர வேண்டிய கழிவுத் தொகையையும் பிணைக் கழிவுத் தொகையையும் கணக்கிட்டு உள்வரு அனுப்பீட்டுக் கணக்கில் பற்றும், கழிவுக் கணக்கு, பிணைக் கழிவுக் கணக்குகளில் முறையேவரவும் வைக்க வேண்டும்.

சரக்கு விற்கும் போழ்து, ரொக்கம் அல்லது வங்கிக் கணக்கு பற்று வைக்கப்படும். கடன் விற்பனையாயின், கடனாளிகள் கணக்கில் பற்று வைக்கப்படும். உள்வரு அனுப்பீட்டுக் கணக்கில் இதற்கான வரவு வைக்கப்படும். உள்வரு அனுப்பீட்டுக் கணக்கின் இருப்பு அனுப்புநர் கணக்கிற்கு எடுத்துச் செல்லப்படும்.

முன் பணத்திற்காக உண்டியல் ஏற்கும் போழ்து, அனுப்புநர் கணக்கில் பற்றும் செலுத்த வேண்டிய உண்டியல் கணக்கில் வரவும் வைக்கப்படும்.

அனுப்பப் பட்ட சரக்கு முழுவதும் விற்கப்படவில்லையாயின் உள்வரு அனுப்பீட்டுக் கணக்கில் வரவு வைக்கப்பட்டு, அது இறுதி யிருப்பாகப் பற்றுப் பக்கத்தில் கீழிறக்கப்படும். அனுப்பப் பெறுநர் கணக்கில் அவ்வாறே இச் சரக்கிருப்பு பற்று வைக்கப் பட்டு, வரவுப் பகுதியில் அது இறுதி யிருப்பாகக் கீழிறக்கப்படும்.

உள்வரு அனுப்பீட்டுக் கணக்கு இப்பொழுது இருப்புக் காட்டு மாயின், அதனை அனுப்புநர் கணக்கிற்கு எடுத்துச் செல்ல வேண்டும்.

அனுப்புநர்க்குப் பணம் அனுப்பப்படும் போழ்து, அவர் கணக் கில் பற்றும் வங்கிக் கணக்கில் வரவும் வைக்கப்படும்.

இம் முறை தவறான முறை; பரவலாகப் பயன்படுத்தப் படுவதில்லை.

எடுத்துக்காட்டு 62 :

எடுத்துக்காட்டு 61-ல் கொடுக்கப்பட்டிருக்கும் கணக்கிற்கான பேரேட்டுக் கணக்குகளை அமுத நிலையத்தின் ஏடுகளில் இம் முறைப் படி தயாரிக்கவும்.

விடை :

உள்வரு அனுப்பீட்டுக் கணக்கு

| ப | | ரூ. | | வ | ரூ. | |
|---|---|---|---|---|---|---|
| | புதுமை நிலையம் | 10,000 | — | வங்கி—விற்பனை | 15,200 | — |
| | வங்கி— இரயில் சத்தம் 250, கிடங்கு வாடகை 250, ஈட்டுறுதி 200, விற்பனைச் செலவு 300 | 1,000 | — | | | |
| | கழிவு | 912 | — | | | |
| | இருப்பு— புதுமை நிலையக் கணக்கிற்கு மாற்றப் படுகிறது | 3,288 | — | | | |
| | | 15,200 | — | | 15,200 | — |

புதுமை நிலையம்

| | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| செலுத்த வேண்டிய உண்டியல் | 5,000 | — | உள்வரு அனுப்பீட்டுக் க/கு | 10,000 | — |
| வங்கி | 8,288 | — | இருப்பு—புதுமை நிலையக் கணக்கிலிருந்து கொண்டு வரப் படுகிறது | 3,288 | — |
| | 13,288 | — | | 13,288 | — |

பிற பேரேட்டுக் கணக்குகளை இவ்வாறே தயார் செய்யலாம்.

பிணைக் கழிவு;

இது குறித்து முன்னரே விளக்கியுள்ளோம். அனுப்பப் பெறுநர்க்கு இத்தகைய கழிவு கொடுக்கப்படும் நிலையில் வராக் கடன் ஏற்படின், அனுப்புநர் இந் நட்டத்தை ஏற்க வேண்டிய தில்லை. காரணம் அனுப்பப் பெறுநரே அதற்குப் பொறுப்பாவார் எனவே, வராக்கடனை நட்டமெனக் கருதி, அனுப்பீட்டுக் கணக்கில் பற்று வைக்கக் கூடாது. அனுப்பப் பெறுநர் ஏட்டில் இதற்கான பதிவுகள் வரும். முதலில் வராக் கடனை நீக்க, சாதாரணமாகச் செய்யும் பதிவினைச் செய்ய வேண்டும். அதாவது:

வராக்கடன் க/கு...ப

வாடிக்கையாளர் க/கு.

இவ் வராக்கடனை இறுதியில் இலாப-நட்டக் கணக்குக்கு எடுத்துச் செல்லத் தேவையில்லை. காரணம் இது அனுப்பீட்டு அடிப்படையில் சரக்கு விற்றதில் ஏற்பட்ட நட்டமே. எனவே, தாம் அனுப்பீட்டு விற்பனையில் பெறும் கழிவுக் கணக்கில் சரிசெய்ய வேண்டும். வராக்கடன் போக மீதம் உள்ள கழிவுத் தொகையே இதில் ஏற்பட்ட நிகர இலாபமாகும். தேவையான பதிவு:

கழிவுக் க/கு...ப

வராக்கடன் க/கு

எடுத்துக்காட்டு 63:

கடலூர் பனியகாட் கம்பனியார் கல்கத்தாவில் உள்ள தமிழ்நாடு துணிக்கடைக்கு ரூ. 5,000 மதிப்புள்ள கைலிகளை 7% கழிவின் பேரிலும் 2% பிணைக் கழிவின் பேரிலும் அனுப்பீட்டடிப்

படையில் விற்பனைக் கனுப்பினர். அவர்கள் செலுத்திய இரயில் கட்டணம் ரூ. 50. தமிழ் நாடு துணிக்கடை ஏற்ற செலவுகள்:

| | ரூ. |
|---|---|
| ஈட்டுறுதி | 200 |
| விளம்பரம் | 150 |
| பிற செலவுகள் | 200 |

இக் கைலிகள் ரூ. 4,220-க்கு ரொக்கத்திற்கும் ரூ. 4,680-க்குக் கடன் பேரிலும் விற்கப்பட்டன. வாடிக்கையாளர்களிடமிருந்து ரூ. 4,400 மட்டிலுமே வசூலாகியது. மீதித் தொகையைப் பெறமுடியாது என்பது உறுதியாயிற்று.

கடலூர் பனையகாட் கம்பனிக்குச் சேரவேண்டிய தொகையினை வங்கிப் பணவிடை மூலம் அனுப்பினர் எனக் கொண்டு, தமிழ்நாடு துணிக்கடையின் ஏட்டில், தேவையான பதிவுகளையும், பேரேட்டுக் கணக்குகளையும் தயாரிக்க.

விடை:

தமிழ்நாடு துணிக்கடையின் (அனுப்பப் பெறுநர்) ஏடுகளில் குறிப்பேடு

| | பற்று ரூ. | வரவு ரூ. |
|---|---|---|
| கடலூர் பனையகாட் கம்பெனி ப | 550 — | |
| வங்கிக் க/கு | | 550 — |
| (அனுப்பீட்டின் பொருட்டுச் செலவுகளை ஏற்றது.) | | |
| வங்கிக் க/கு ப | 4,220 — | |
| கடனாளிகள் க/கு ப | 4,680 — | |
| கடலூர் பனையகாட் கம்பனி | | 8,900 — |
| (ரொக்கத்துக்கும், கடன் பேரிலும் கடலூர் பனையகாட் கம்பனிக்காக விற்றது.) | | |
| வங்கிக் க/கு ப | 4,400 — | |
| வராக் கடன் க/கு ப | 280 — | |
| கடனாளிகள் க/கு | | 4,680 — |
| (கடனாளிகளிடமிருந்து வசூலானதும், வராக் கடன் நீக்கப்பட்டதும்.) | | |

| | | | |
|---|---|---|---|
| கடலூர் பனையகாட் கம்பனி ப<br>கழிவுக் க/கு<br>(விற்பனையில் 7% சாதாரணக் கழிவும், 2% பிணைக் கழிவும் கடலூர் பனையகாட் கம்பனியிடமிருந்து பெற வேண்டியது.) | | 801 — | 801 — |
| கடலூர் பனையகாட் கம்பனி ப<br>வங்கிக் க/கு<br>(அனுப்புநர்க்கு வங்கிப் பண விடை அனுப்பிக் கணக்கை முடித்தது.) | | 7,549 — | 7,549 — |
| கழிவுக்க/கு ப<br>வராக் கடன் க/கு<br>(அனுப்பீட்டில் ஏற்பட்ட வராக் கடனைக் கழிவுக் கணக்கில் மாற்றியது.) | | 280 — | 280 — |
| கழிவுக் க/கு ப<br>இலாப-நட்டக் க/கு<br>கழிவுக் கணக்கை இலாப-நட்டக் (கணக்கிற்கு மாற்றியது.) | | 521 — | 521 — |

கடலூர் பனையகாட் கம்பனி

ப — வ

| | | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|
| வங்கி —<br>ஈட்டுறுதி<br>விளம்பரம்<br>பிற செலவுகள் | 200<br>150<br>200 | 550 | — | வங்கி — விற்பனை | 4,220 | — |
| கழிவு —<br>சாதாரணக் கழிவு<br>பிணைக் கழிவு | 623<br>178 | 801 | — | கடனாளிகள் —<br>விற்பனை | 4,680 | — |
| வங்கி | | 7,549 | — | | | |
| | | 8,900 | — | | 8,900 | — |

## வங்கிக் கணக்கு

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| கடலூர் பழைய காட் கம்பனி —விற்பனை | 4,220 — | கடலூர் பழைய காட் கம்பனி —ஈட்டுறுதி 200 | |
| கடனாளிகள் | 4,400 — | விளம்பரம் 150 | |
| | | பிற செலவுகள் 200 | 550 — |
| | | கடலூர் பழைய காட் கம்பனி | 7,549 — |

## கடனாளிகள் கணக்கு

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| கடலூர் பழைய காட் கம்பனி —விற்பனை | 4,680 — | வங்கி | 4,400 — |
| | | வராக் கடன் | 280 — |
| | 4,680 — | | 4,680 — |

## வராக் கடன் கணக்கு

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| கடனாளிகள் | 280 — | கழிவு—மாற்றப் படுகிறது | 280 — |

## கழிவுக் கணக்கு

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| வராக் கடன்—எடுத்துவரப் படுகிறது | 280 — | கடலூர் பழைய காட் கம்பனி-சாதாரண கழிவு 623 | |
| இலாப-நட்டக் க/கு—மாற்றப்படுகிறது | 521 — | பிணைக் கழிவு 178 | 801 — |
| | 801 — | | 801 — |

இலாப-நட்டக் கணக்கு

| | ரூ | | ரூ. |
|---|---|---|---|
| | | கழிவு | 521— |

அனுப்பீட்டுச் சரக்கிருப்பை மதிப்பிடல்
(Valuation of Consignment Stock)

கணக்கை முடிக்கும் நாளன்று அனுப்பப் பெறுநரிடம் சரக்கின் ஒரு பகுதி விற்கப்படாமலிருக்கலாம். அந் நிலையில் அனுப்பீட்டுக் கணக்கைத் தயாரிக்கும் போழ்து, சரக்கிருப்பை மதிப்பிட்டு உணர்ந்தால்தான் ஏற்பட்ட இலாப-நட்டத்தை அறிய முடியும். சாதாரணமாக அடக்கவிலை, சந்தைவிலை—இதில் எது குறைந்துள்ளதோ, அதனடிப்படையில்தான் சரக்கு மதிப்பிடப்படும். அதே விதி இங்கும் பொருந்தும். ஆனல், அடக்கவிலை எனும் சொல் ஏதைக் குறிக்கும் என்பதைத் தெளிவாக உணர வேண்டும். அடக்கவிலை என்பது அனுப்புநர் தான் வாங்கிய சரக்கு விலையை மட்டும் குறிக்காது. அனுப்புநரும் அனுப்பப் பெறுநரும் ஏற்கும் செலவுகள் அச் சரக்கின் மதிப்பைக் கூட்டியிருக்கும். எடுத்துக் காட்டாக, ஒரு பொருளை வெளிநாட்டிலிருந்து ரூ. 10,000-க்குப் பெற்று, அதற்காக இறக்குமதி வரி, கப்பல் கட்டணம் முதலியவற்றிற்காக ரூ. 3,000 செலவழித்திருப்பின், அப் பொருளின் மதிப்பு இங்கு ரூ. 13,000 என்றுதானே கூறுவோம்? அதேபோன்று அனுப்பிய சரக்கின் மதிப்பைக் கூட்டும் செலவினங்களையும் சரக்கை மதிப்பிடும்போது கணக்கிலெடுத்துக் கொள்ளவேண்டும். இச் செலவினை ஏற்றது யார்—அனுப்புநரா, அனுப்பப் பெறுநரா என்பதுபற்றி நோக்கத் தேவையில்லை. ஏற்ற செலவு, சரக்கின் மதிப்பை உயர்த்தியுள்ளதா என்பதையே காணவேண்டும். எடுத்துக் காட்டாகக் கப்பல் அல்லது இரயில் கட்டணம் சரக்கனுப்புகையில் செலுத்தப்படும் ஈட்டுறுதி, தீர்வை, போன்ற செலவுகளைக் கூறலாம். ஆனல், சரக்கு அனுப்பப் பெறுநரின் கிடங்கைச் சேர்ந்த பிறகு ஏற்கப்படும் செலவினங்களைக் கணக்கிலெடுத்துக் கொள்ளத் தேவையில்லை; அவை சரக்கை விற்கும் போழ்து ஏற்கப்படும் செலவினங்கள்; சரக்கின் மதிப்பை உயர்த்துபவை அல்ல அனுப்பப் பெறுநர் செலுத்தும் பண்டசாலை வாடகை, ஈட்டுறுதி, அவர் ஏற்கும் பிற விற்பனைச் செலவுகளை

அடக்க விலையில் சேர்க்க வேண்டுவதில்லை. இவ்வாறு சரக்கு வாங்கிய விலையுடன் அனுப்பப் பெறுநரிடம் வந்து சேரும் வரை ஏற்படும் செலவினங்களையும் கூட்டிக் கொள்ளவேண்டும். இதுவே அடக்க விலையாகும். சந்தை விலையினும் இது குறைத்திருப்பின், இவ்வீதத்திலேயே சரக்கிருப்பை மதிப்பிட வேண்டும். கீழ்க்கண்ட எடுத்துக்காட்டு இதனை தெளிவாக்கும்.

எடுத்துக் காட்டு 64:

ரூ. 15,000 பெறுமான 100 பொருள்களை மாதவன் அமெரிக்காவிலுள்ள பீட்டருக்கு ஏற்றுமதி செய்கிறார். அவர் ஏற்ற செலவுகள்:

| | | | ரூ. |
|---|---|---|---|
| 1. | கப்பற் கட்டணம் | ... | 1,500 |
| 2. | கடல் ஈட்டுறுதிக் கட்டணம் | ... | 300 |

பீட்டர் ஏற்ற செலவுகள்:

| | | | |
|---|---|---|---|
| 3. | இறக்குமதி வரி | ... | 2,000 |
| 4. | துறைமுகக் கட்டணம் | ... | 300 |
| 5. | வெளிச்சுமை கூலி | ... | 250 |
| 6. | பண்டசாலை வாடகை | ... | 500 |
| 7. | விற்பனைச் செலவுகள் | ... | 800 |

இவற்றில் 75 பொருள்கள் ரூ 19,500-க்கு விற்கப்பட்டு விட்டன. கழிவு 5%ம், பிணைக்கழிவு 3%.ம் பீட்டருக்குச் சேர வேண்டியது. இறுதிச் சரக்கினை எவ்வாறு மதிப்பிட வேண்டும்? மாதவன் ஏடுகளில் அனுப்பீட்டுக் கணக்கையும் பீட்டர் கணக்கையும் தயாரிக்கவும்.

விடை:

இறுதிச் சரக்கிருப்பை மதிப்பிடுமுறை:

மேலே கொடுக்கப்பட்ட செலவினங்களில், அனுப்புநர் ஏற்ற செலவுகளனைத்தையும் எடுத்துக் கொள்ளவேண்டும். அனுப்பப் பெறுநர் ஏற்றவற்றில் இறுதியாகக் கொடுக்கப்பட்ட மூன்று செலவினங்களையும் விட்டுவிட வேண்டும். வெளிச்சுமை கூலி, பண்டசாலை வாடகை, விற்பனைச் செலவுகள் முதலியவை விற்கும் போழ்து ஏற்ற செலவினங்களாகும். முழுச்சரக்குக்கும் உரியனவல்ல. சரக்கின் மதிப்பை உயர்த்துவனவுமல்ல. ஆக, முதல் நான்கு வகைச் செலவினங்களையும் கணக்கில் எடுத்துக் கொள்ள வேண்டும்.

| | | ரூ. |
|---|---|---|
| 25 பொருள்களின் விலை | ... | 3,750 |

கூட்டு :

| | | ரூ. |
|---|---|---|
| கப்பற் கட்டணம் | ... | 1500 |
| கடல் ஈட்டுறுதிக் கட்டணம் | ... | 300 |
| இறக்குமதி வரி | ... | 2000 |
| துறைமுகக் கட்டணம் | ... | 200 |
| 100 பொருள்களின் செலவு | ... | 4000 |
| 25 பொருள்களின் செலவு | ... $\frac{4000 \times 25}{100}=$ | 1,000 |
| 25 பொருள்களின் அடக்க விலை | ... | 4,750 |

அனுப்பீட்டுக் கணக்கு

| | | ரூ. | | | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|
| அனுப்பீட்டி லனுப்பிய சரக்கு க/கு | | 15,000 | — | பீட்டர்— விற்பனை | | 19,500 | — |
| | | | | அனுப்பீட்டுச் சரக்கிருப்பு | | 4,750 | — |
| வங்கி— | | | | | | | |
| கப்பற் கட்டணம் | 1,500 | | | | | | |
| கடல் ஈட்டுறுதி | 300 | 1,800 | — | | | | |
| பீட்டர்— | | | | | | | |
| இறக்குமதி வரி | 2,000 | | | | | | |
| துறைமுகக் கட்டணம் | 200 | | | | | | |
| வெளிச்சுமை கூலி | 250 | | | | | | |
| பண்டசாலை வாடகை | 500 | | | | | | |
| விற்பனைச் செலவு | 800 | 3,750 | — | | | | |

| | | ரூ. | | | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|
| பீட்டர்— இயல்பு கழிவு | 975 | | | | | | |
| பிணைக் கழிவு | 585 | 1,560 | — | | | | |
| இலாப-நட்டக் க/கு —இலாபம் மாற்றப் படுகிறது | | 2,140 | — | | | | |
| | | 24,250 | | | | 24,250 | |

பீட்டர் கணக்கு

| | | ரூ. | | | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|
| அனுப்பீட்டுக் கணக்கு —விற்பனை | | 19,500 | — | அனுப்பீட்டுக் கணக்கு : இறக்கு மதி வரி | 2,000 | | |
| | | | | துறை முகக் கட்டணம் | 200 | | |
| | | | | வெளிச் சுமை கூலி | 250 | | |
| | | | | பண்ட சாலை வாடகை | 500 | | |
| | | | | விற்பனைச் செலவு | 800 | 3,750 | — |
| | | | | அனுப்பீட்டுக் கணக்கு —இயல்பு கழிவு | 975 | | |
| | | | | பிணைக் கழிவு | 585 | 1,560 | — |
| | | | | இருப்பு கீ/இ | | 14,190 | — |
| | | 19,500 | — | | | 19,500 | — |
| இருப்பு கீ/கொ | | 14,190 | — | | | | |

சரக்கு மதிப்பீட்டில் வேறு கருத்துகளும் நிலவுகின்றன. அதாவது அனுப்புநர் ஏற்ற செலவினங்களின் பகுதியை மட்டில் சரக்கின் வாங்கிய விலையுடன் சேர்த்துக் கொள்ளவேண்டும். அனுப்பப் பெறுநர் ஏற்ற செலவு எதையும் கணக்கில் எடுத்துக் கொள்ளக் கூடாது என்ற கருத்தைப் பேட்லிபாய் (Mr. Batliboi) கூறுகிறார். அவ்வாறு எடுத்துக் கொண்டால், அடக்க விலையின் மதிப்பு மிகவும் அதிகமாகும் என்பதே அதற்கு அவர் கூறும் காரணம். ஆனால், சுக்லா (Mr. Shukla), பிக்கில்ஸ் (Mr. Pickles) போன்றவர்கள் இக் கருத்தை ஏற்றுக்கொள்ளவில்லை. மதிப்பு கூடுகிறது என்பதற்காக உண்மை மதிப்பை ஒளிக்கத் தேவையில்லை யன்றோ? அவ்வாறு கண்டுபிடிக்கப்படும் அடக்க விலை சந்தை விலையினும் குறைந்திருப்பதால் அவ் வீதத்தில் சரக்கு மதிப்பிடப் படுகிறது. எனவே, சரக்கின் மதிப்பை உயர்த்தும் செலவை அனுப்புநர் ஏற்றிருப்பினும் அனுப்பப் பெறுநர் ஏற்றிருப்பினும் கணக்கிலெடுத்துக் கொள்ளுதலே பொருத்தமாகும்.

இவ்வாறு மதிப்பிடப்பட்ட சரக்கை அனுப்பீட்டுக் கணக்கில் வரவுப் பகுதியில் பதிய வேண்டும். (வணிக நிறுவனங்களில், இறுதிச் சரக்கிருப்பை வாணிகக் கணக்கில் வரவு வைப்பது போன்றே). இதற்குத் தேவையான பதிவு:

அனுப்பீட்டுச் சரக்கிருப்புக் க/கு...ப
அனுப்பீட்டுக் க/கு

அனுப்பீட்டுச் சரக்கிருப்புக் கணக்கு சொத்தினத்தைச் சார்ந்தது. எனவே, இருப்பு நிலைக் குறிப்பில் சொத்துகள் பகுதியில் காட்டப்பட வேண்டும். அடுத்த ஆண்டுக்கான அனுப்பீட்டுக் கணக்கில் அதைப் பற்று வைத்து அக் கணக்கை முடித்திடலாம்.

சரக்கழிதலில் ஏற்படும் நட்டம்

களவு, தீ போன்றவற்றால் சரக்கிழப்பு ஏற்படலாம். இத்தகைய இழப்பு இயல்பாக ஒவ்வோராண்டும் எழக்கூடியதன்று. அனுப்பீட்டிலனுப்பிய சரக்கு இவ்வாறு இழக்கப்படின், அத்தகைய நட்டத்தை இலாப-நட்டக் கணக்கில் பற்று வைக்கவேண்டும். அனுப்பீட்டுக் கணக்கில் இதனை வரவு வைக்கவேண்டும். இவ்வாறு செய்யவில்லையெனில் அனுப்பீட்டில் சாதாரணமாக ஏற்பட்ட இலாபம் எவ்வளவு என்பதை அறியும் வாய்ப்பில்லாமற் போகும். இத்தகைய சரக்கிழப்பால் அனுப்பீட்டு இலாபம் பாதிக்கப் படக்கூடாது. அனுப்பீட்டு வியாபாரம் இலாபகரமாக உள்ளதா அல்லவா என்பதை அறிந்து கொள்ள—அதன் போக்கை உணர்ந்து கொள்ள—அனுப்பீட்டுக் கணக்கைப் பொறுத்தவரை, இவ்விழப்பு பாதிக்கா வண்ணம் வரவு வைக்கிறோம். ஆனால், இந் நட்டத்தை இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்வதின்மூலம், இறுதி

இலாபத்தை இது காட்டுவதில்லை. இழந்த சரக்கை அனுப்பீட்டுச் சரக்கை மதிப்பிடுவது போன்றே மதிப்பிட வேண்டும். ஈட்டுறுதிக் கம்பனியிடமிருந்து நட்டஈடு பெற வேண்டியிருப்பின், அதனைக் கழித்தது போக எஞ்சி உள்ளதே இறுதி நட்டமாகும். அதனை மட்டிலுமே இலாப-நட்டக் கணக்கில் பற்று வைக்கவேண்டும். கீழ்க்காணும் எடுத்துக்காட்டு இதனை விளக்கும்.

எடுத்துக்காட்டு 65:

மாடலன் கம்பனி 500 மிதிவண்டிகளை ரூ. 450 வீதம் யாழ்ப்பாணத்திலுள்ள தனது முகவர் மூர்த்திக்கு அனுப்பீட்டில் விற்க அனுப்பியது. கப்பல் கட்டணம் ரூ. 5,000மும், ஈட்டுறுதிக் கட்டணம் ரூ. 1,000மும் செலுத்தப்பட்டது. பயணத்தின் போழ்து 50 மிதிவண்டிகள் தீயில் அழிவுறவே கப்பலிலிருந்து தூக்கியெறியப்பட்டன. மீதியுள்ளவற்றை முகவர் ரூ. 9,000 சுங்கத் தீர்வை செலுத்தி எடுத்துக் கொண்டார். ரூ. 75,000-க்கு மாடலன் கம்பனி வரைந்த 3 திங்கள் உண்டியலை ஏற்றனுப்பினார். பண்டசாலை வாடகை ரூ. 2,000மும், விற்பனைச் செலவுகள் ரூ. 2,500-ம் அவர்கள் கொடுத்தனர். 350 மிதிவண்டிகளை ரூ. 550 வீதம் விற்றதில் ஏற்பட்ட வராக்கடன் ரூ. 2,500. விற்பனையில் 5% கழிவு மூர்த்திக்குத் தர வேண்டும். அழிவுற்ற மிதிவண்டிகட்காக, ஈட்டுறுதிக் கம்பனி ரூ. 15,000 தர ஒப்புக் கொண்டிருக்கிறது என்று கொண்டு, மாடலன் ஏட்டில் அனுப்பீட்டுக் கணக்கையும் பிற பேரேட்டுக் கணக்குகளையும் தயாரிக்க.

விடை :

மாடலன் ஏடுகளில்

ப (யாழ்ப்பாணம்) அனுப்பீட்டுக் கணக்கு வ

| | | ரூ. | | | ரூ. |
|---|---|---|---|---|---|
| அனுப்பீட்டிலனுப்பிய சரக்குக் க/கு | | 2,25,000 | மூர்த்தி—விற்பனை | | 1,92,500 |
| வங்கி— கப்பற் கட்டணம் | 5,000 | | ஈட்டுறுதிக் கம்பனி | | 15,000 |
| ஈட்டுறுதி | 1,000 | 6,000 | இலாப-நட்டக் கணக்கு ஈட்டுறுதிக் கம்பனி ஏற்காச் சரக்கழிவு | | 8,100 |
| மூர்த்தி— சுங்கத் தீர்வை | | 9,000 | அனுப்பீட்டுச் சரக்கிருப்பு | | 48,200 |
| மூர்த்தி— பண்டசாலை வாடகை | 2,000 | | | | |
| விற்பனைச் செலவுகள் | 2,500 | 4,500 | | | |
| மூர்த்தி—கழிவு | | 9,625 | | | |
| மூர்த்தி—வராக்கடன் | | 2,500 | | | |
| இலாப-நட்டக் க/கு —இலாபம் | | 7,175 | | | |
| | | 2,63,800 | | | 2,638,00 |

## அனுப்பீட்டிலனுப்பிய சரக்குக் கணக்கு

| | ரூ | | | ரூ | |
|---|---|---|---|---|---|
| கொள்முதல் க/கு —மாற்றப் படுகிறது | 2,25,000 | — | அனுப்பீட்டுக் க/கு | 2,25.000 | — |

## மூர்த்தி

| | ரூ. | | | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|
| அனுப்பீட்டுக் க/கு —விற்பனை | 1,92,500 | — | அனுப்பீட்டுக் க/கு —சுங்கத் தீர்வை | | 9,000 | |
| | | | வரவுடைய உண்டியல் | | 75,000 | — |
| | | | அனுப்பீட்டுக் க/கு —பண்ட சாலை வாடகை | 2,000 | | |
| | | | விற்பனைச் செலவு | 2,500 | 4,500 | |
| | | | அனுப்பீட்டுக் க/கு —கழிவு | | 9,625 | — |
| | | | அனுப்பீட்டுக் க/கு —வராக் கடன் | | 2,500 | — |
| | | | இருப்பு கீ/இ | | 91,875 | — |
| | 1,92,500 | — | | | 1,92,500 | — |
| இருப்புகீ/கொ | 91,875 | — | | | | |

## இலாப நட்டக் கணக்கு

| | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| அனுப்பீட்டுக் கணக்கு —ஈட்டுறுதிக் கம்பனி ஏற்காச் சரக் கழிவு | 8,100 | — | அனுப்பீட்டுக் கணக்கு —இலாபம் மாற்றப்படு கிறது | 7,175 | — |

அனுப்பீட்டுச் சரக்கிருப்பு

| | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| அனுப்பீட்டுக் க/கு | 48,200 | — | இருப்பு கீ/இ | 48,200 | — |
| இருப்பு கீ/கொ | 48,200 | — | | | |

ஈட்டுறுதிக் கம்பனி

| | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| அனுப்பீட்டுக் க/கு | 8,100 | — | இருப்பு கீ/இ | 8,100 | — |
| இருப்பு கீ/கொ | 8,100 | — | | | |

விளக்கம்:

தீயிலழிந்த மிதி வண்டிகளின் மதிப்பு கீழ்க்கண்டவாறு கணக்கிடப்பட்டது.

| | ரூ. |
|---|---|
| 50 மிதிவண்டிகள் ரூ. 450 வீதம் | ......22,500 |

கூட்டு

50 மிதிவண்டிக்கான செலவு:

| | | ரூ. |
|---|---|---|
| கப்பல் கட்டணம் | ... | 5,000 |
| ஈட்டுறுதி | ... | 1,000 |
| | | 6,000 |

$\frac{6,000 \times 50}{500} =$ 600

ரூ. 23,100

இதில் ஈட்டுறுதிக் கம்பெனி ஏற்றுக்கொண்டது ரூ. 15,000. இது இருப்பு நிலைக்குறிப்பில் சொத்துகள் பகுதியில் காட்டப் பெறும். எனவே, இலாப-நட்டக் கணக்கிற்கு மீதமுள்ள ரூ. 8,100 மட்டிலுமே எடுத்துச் செல்லப்படுகிறது.

இறுதிச் சரக்கிருப்பு கீழ்க் கண்டவாறு மதிப்பிடப் படுகிறது.

| | | ரூ. |
|---|---|---|
| 100 மிதிவண்டிகள் ரூ. 450 வீதம் | ...... | 45,000 |
| 100 மிதிவண்டிகட்கான கப்பல் கட்டணமும் ஈட்டுறுதியும் | $= \frac{100 \times 6000}{500} =$ | 1,200 |
| 100 மிதி வண்டிக்கான சுங்கத்தீர்வை | $= \frac{100 \times 9,000}{450}$ | 2,000 |
| | | ரூ. 48,200 |

பிணைக்கழிவு, முகவர்க்குக் கொடுக்கப்பட வில்லையாதலால் வராக்கடனை அனுப்புநர்தான் ஏற்கவேண்டும். எனவே, அனுப்பீட்டுக் கணக்கில் பற்று வைக்கப்பட்டுள்ளது. சரக்கழிதலின் ஏற்படும் நட்டத்தை வேறு முறையிலும் பதிவதுண்டு, மேற்சொன்ன எடுத்துக்காட்டில், மொத்தம் ஏற்பட்ட நட்டம் ரூ. 23,100-ஐயும் சரக்கழிவின் நட்டக் கணக்கு என்ற புதிய ஒரு கணக்கில் பற்று வைத்து, அனுப்பீட்டுக் கணக்கில் வரவு வைத்திடலாம். பதிவு:

| | | |
|---|---|---|
| சரக்கழிவின் நட்டக் க/கு ப | 23,100 | |
| அனுப்பீட்டுக் க/கு | | 23,100 |

இதில் ரூ. 15,000-ஐ ஈட்டுறுதிக் கம்பனி ஏற்றுக் கொள்வதால் கீழ்க்கண்ட பதிவைச் செய்ய வேண்டும்.

| | | |
|---|---|---|
| ஈட்டுறுதிக் கம்பனிக் க/கு ப | 15,000 | |
| சரக்கழிவின் நட்டக் க/கு | | 15,000 |

சரக்கழிவின் நட்டக் கணக்கு காட்டும் இருப்பு இலாப-நட்டக் கணக்கிற் கெடுத்துச் செல்லப்படும்.

| | | |
|---|---|---|
| இலாப—நட்டக் க/கு ப | 8,100 | |
| சரக்கழிவின் நட்டக் க/கு | | 8,100 |

அனுப்பீட்டுக் கணக்கு, சரக்கழிவின் நட்டக் கணக்கு, இலாப-நட்டக் கணக்கு முதலியவை கீழ்க்கண்டவாறிருக்கும்.

ப அனுப்பீட்டுக் க/கு வ

| | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| அனுப்பீட்டி லனுப்பியக/கு | 2,25,000 | — | மூர்த்தி— விற்பனை | 1,92,500 | — |
| வங்கி— கப்பற் கட்டணம் 5,000 ஈட்டுறுதி 1,000 | 6,000 | — | சரக்கழிவின் நட்டக் க/கு | 23,100 | — |
| மூர்த்தி— சுங்கத் தீர்வை | 9,000 | — | அனுப்பீட்டுச் சரக்கிருபு | 48,200 | — |
| மூர்த்தி— பண்டசாலை வாடகை 2,000 விற்பனைச் செலவு 2,500 | 4,500 | — | | | |
| மூர்த்தி— கழிவு | 9,625 | — | | | |
| மூர்த்தி— வராக்கடன் | 2,500 | — | | | |
| இலாப-நட்டக்க/கு— இலாபம் | 7,175 | — | | | |
| | 2,63,800 | — | | 2,63,800 | — |

சரக்கழிவின் நட்டக் க/கு

| | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| அனுப்பீட்டுக் க/கு | 23,100 | — | ஈட்டுறுதிக் கம்பனி | 15,000 | — |
| | | | இலாப-நட்டக் க/கு | 8,100 | — |
| | 23,100 | | | 23,100 | — |

இலாப—நட்டக் க/கு.

| | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| சரக்கழிவின் நட்டக் க/கு | 8,100 | — | அனுப்பீட்டுக் க/கு இலாபம் | 7,175 | — |

ஈட்டுறுதிக் கம்பனி க/கு

| | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| சரக்கழிவின் நட்டக் க/கு | 15,000 | — | இருப்பு கீ/இ | 15,000 | — |
| இருப்பு கீ/கொ | 15,000 | — | | | |

இயல்பான நட்டம்

சில பொருள்களைப் பொறுத்தவரை, சரக்கிழப்பு இயல்பாக எழக் கூடியதாக விருக்கும். நிலக்கரி அனுப்பப்படும் போழ்து, வண்டிகளில் ஏற்றி இறக்குவதில் சரக்கின் அளவு குறையலாம். சில பொருள்கள் ஆவியாவதால், அளவு குன்றலாம். இவை இயல்பாக ஏற்படும் சரக்கிழப்பாகும். இவ்வாறு தடுக்க முடியாது ஏற்படும் நட்டத்திற்குச் சரக்கிழப்பு கணக்கிடும் போழ்து வகை செய்யவேண்டும். எடுத்துக் காட்டாக, 1000 கிலோ விளக்கெண்ணெய் கிலோ ரூ. 2.97 வீதம் அனுப்பப் படுவதாகவும், ரூ. 495 கட்டணம் செலுத்தப்படுவதாகவும் கொள்வோம்.

அனுப்பப் பெறுநர் 990 கிலோ எண்ணெய்தான் பெற்றதாகவும் இறுதியில் 99 கிலோ எண்ணெய் விற்கப்படாமல் இருப்பதாகவும் கொண்டால் சரக்கிருப்பு கீழ்க்கண்ட முறையில் மதிப்பிடப் படவேண்டும்.

| | | ரூ. |
|---|---|---|
| 1000 கிலோ விளக்கெண்ணெய் விலை ரூ. 2.97 வீதம் | | 2,970 |
| கூட்டு: கட்டணம் | ... | 495 |
| 990 கிலோ எண்ணெய்யின் மதிப்பு | ... | 3,465 |
| 99 கிலோ எண்ணெய்யின் மதிப்பு | | 346.50 |

இயல்பாக எழக்கூடிய இழப்பினைக் கழித்தது போகமீதமுள்ள அளவு, சரக்கின் மதிப்பாக முழுமதிப்பையும் கொள்ளவேண்டும்.

எடுத்துக் காட்டு 66:

1-1-1971-ல் வங்க நிலக்கரிக் கம்பனி 2,000 டன் நிலக்கரியை ஒரு டன் ரூ. 100 வீதத்தில் சென்னையிலுள்ள கோவலன் கம்பனிக்கு அனுப்பீட்டில் விற்க அனுப்பியது. இரயில்வே கட்டணம் ரூ. 12,800. 15-1-71-ல் கோவலன் கம்பனி அதனைப் பெற்றனர். தம்மீது மூன்று திங்கள் தவணையில் ரூ. 1,20,000-க்கு வரைந்த

உண்டியலை ஏற்றுத் தந்தனர். 30-6-71-ல் கோவலன் கம்பனியிட மிருந்து பெற்றவிற்பனைக் கணக்கறிக்கையிலிருந்து தெரிய வந்தவை:

1400 டன் ரூ. 135 வீதத்தில் விற்கப்பட்டது. ஏற்ற செலவினங்கள்:

| | ரூ. |
|---|---|
| பண்டசாலை வாடகை | ...1,000 |
| விளம்பரம் | ... 500 |
| விற்பனையர்க்குக் கொடுத்த கழிவு | ...2,000 |
| வராக்கடன் | ... 500 |

விற்பனையில் 3% கழிவு கோவலன் கம்பனிக்குச் சேர வேண்டியது. மொத்தத்தில் 100 டன் எடை குறைந்து காணப் பட்டதாகக் குறிப்பிடப்பட்டிருந்தது. விற்பனைத் தொகையி லிருந்து செலவுகள், கழிவுத் தொகை போக மீதமுள்ள தொகைக்கான வங்கிப் பணவிடை இணைக்கப் பட்டதாகக் கொண்டு, கீழ்க்கண்ட பேரேட்டுக் கணக்குகளைத் தயாரிக்கவும்: 1. வங்க நிலக்கரி கம்பனி ஏட்டில் (அ) அனுப்பீட்டுக் க/கு (ஆ) கோவலன் கம்பனி கணக்கு. 2. கோவலன் கம்பனி ஏட்டில் வங்க நிலக்கரிக் கம்பனி க/கு.

விடை :

வங்க நிலக்கரிக் கம்பனி ஏடுகளில்

ப சென்னை அனுப்பீட்டுக் க/கு வ

| | | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|
| அனுப்பீட்டிலனுப்பிய சரக்கு க/கு | | 2,00,000 | — | கோவலன் கம்பனி —விற்பனை | 1,89,000 | — |
| வங்கி—இரயில்கட்டணம் | | 12,800 | — | அனுப்பீட்டுச் சரக்கிருப்பு | 56,000 | — |
| கோவலன் கம்பனி | | | | | | |
| — பண்டசாலை வாடகை | 1,000 | | | | | |
| விளம்பரம் | 500 | | | | | |

| | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| விற்பனையர் கழிவு 2,000 | 3,500 | — | | | |
| கோவலன் கம்பனி —வராக் கடன் | 500 | — | | | |
| கோவலன் கம்பனி —கழிவு | 5,670 | — | | | |
| இலாப-நட்டக்க/கு —இலாபம் | 22,530 | — | | | |
| | 2,45,000 | — | | 2,45,000 | — |

கோவலன் கம்பனி

| | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| சென்னை அனுப்பீட்டுக் க/கு — விற்பனை | 1,89,000 | — | வரவுடைய உண்டியல் | 1,20,000 | — |
| | | | சென்னை அனுப்பீட்டுக க/கு —பண்டசாலை வாடகை 1,000 விளம்பரம் 500 விற்பனையர் கழிவு 2,000 | 3,500 | — |
| | | | சென்னை அனுப்பீட்டுக் க/கு —வராக் கடன் | 500 | — |
| | | | சென்னை அனுப்பீட்டுக் க/கு —கழிவு | 5,670 | — |
| | | | வங்கி | 59,330 | — |
| | 1,89,000 | — | | 1,89,000 | — |

விளக்கம்:

அனுப்பீட்டுச் சரக்கிருப்பு கீழ்க்கண்டவாறு கணக்கிடப் படுகிறது.

| | |
|---|---|
| 2000 டன் நிலக்கரியின் மதிப்பு | ரூ. 2,00,000 |
| கூட்டு: இரயில்வே கட்டணம் | 12,800 |
| | 2,12,800 |

100 டன் எடை குறைந்து காணப்படுவதால், 1,900 டன் நிலக்கரியின் மதிப்பு ரூ. 2,12,800 ஆகக் கொள்ளவேண்டும்.

500 டன் நிலக்கரி இறுதிச் சரக்கிருப்பாகும்.

1,900 டன் நிலக்கரி = ரூ. 2,12,800

500 டன் நிலக்கரி = $\frac{2,12,800}{1,900} \times 500 = 56,000$

சரக்கின் மதிப்பு ரூ. 56,000

வங்க நிலக்கரிக் கம்பனி உற்பத்தியாளராதலால், ஆண்டிறுதியில் அனுப்பீட்டிலனுப்பிய சரக்குக் கணக்கினைக் கொள்முதல் கணக்குக்கு எடுத்துச் செல்லக் கூடாது; வாணிகக் கணக்குக்கே எடுத்துச் செல்ல வேண்டும். கீழே, இக் கணக்கு காட்டப்பட்டுள்ளது.

அனுப்பீட்டிலனுப்பிய சரக்கு க/கு

| | ரூ. | | |
|---|---|---|---|
| வாணிகக் க/கு (மாற்றப் படுகிறது) | 2,00,000 | சென்னை அனுப்பீட்டுக் க/கு | 2,00,000 |

2) கோவலன் கம்பனியின் ஏடுகளில்
வங்க நிலக்கரிக் கம்பனி கணக்கு

| | | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|
| செலுத்த வேண்டிய உண்டியல் | | 1,20,000 | — | வங்கி—விற்பனை | 1,89,000 | — |
| வங்கி—பண்டசாலை வாடகை | 1 000 | | | | | |
| விளம்பரம் | 500 | | | | | |
| விற்பனையர் கழிவு | 2,000 | 3,500 | — | | | |
| கடனாளிகள்—வராக் கடன் | | 500 | — | | | |
| கழிவு | | 5,670 | — | | | |
| வங்கி | | 59,330 | | | | |
| | | 1,89,000 | — | | 1,89,000 | — |

மேலே கூறிய எடுத்துக்காட்டில் ஏற்பட்ட எடைக் குறைவு இயற்கையாக நிகழக் கூடியது. அவ்வாறின்றிச் சரக்கு இருக்க வேண்டிய அளவினும் குறைந்து காணப்படின், அதற்கு அனுப்பப் பெறுநர் பொறுப்பு ஏற்க வேண்டியிருக்கும். எனவே, அனுப்பப் பெறுநர் கணக்கில் பற்றும் அனுப்பீட்டுக் கணக்கில் வரவும் வைக்க வேண்டும். அனுப்பப் பெறுநர் அதற்கும் பொறுப்பு ஏற்க வேண்டுவதில்லை எனக் கொடுக்கப்பட்டிருப்பின், இருக்கின்ற சரக்கிருப்பை அனுப்பீட்டுக் கணக்கில் வரவு வைக்க வேண்டும்.

## பெயரளவு இடாப்பு விலை (Proforma Invoice Price)

இதுகாறும் அடக்க விலையில் சரக்கு அனுப்பப் படுவதாகக் கொண்டு பதிவுகளைச் செய்தோம். சில வேளைகளில் பெயரளவு இடாப்பு விலையில் சரக்கு அனுப்பப்படும். அதாவது அடக்க விலையுடன் குறிப்பிட்ட சதவீதம் இலாபம் சேர்த்த விலையாகும் அது. அவ் விலைக்கும் குறைந்து அனுப்பப் பெறுநர் சரக்கை

விற்கக் கூடாது. சரக்கனுப்பப் பெறுநர்க்கு உண்மையான அடக்கவிலை தெரியாதலால், இதில் ஏற்பட்ட இலாபம் அவர்க்குத் தெரியாது. அனுப்பப் பெறுநரிடமிருந்து இலாபத்தை மறைக்கும் நோக்குடன் விற்கவேண்டிய விலையைக் குறித்து அனுப்புவது வழக்கம். இதுதான் பெயரளவு இடாப்பு விலை எனப்படும். இதனைப் பதிவு செய்யும் முறை:

இடாப்பு விலையில் அனுப்பீட்டுக் கணக்கில் பற்றும் அனுப்பீட்டில் அனுப்பிய சரக்குக் கணக்கில் வரவும் வைக்கவேண்டும். (பதிவு முன்னர்ச் செய்தது போலவேதான். ஆனால் தொகை, அடக்க விலையின் அடிப்படையிலல்லாமல், இடாப்பு விலையினடிப்படையில் மதிப்பிடப்பட்டு, அனுப்பீட்டுக் கணக்கில் பற்று வைக்கப் படுகிறது.) எடுத்துக்காட்டாக ரூ. 30,000 மதிப்புள்ள சரக்கு ரூ. 40,000 என்று இடாப்பில் குறிக்கப்பட்டு அனுப்பப்படுவதாகக் கொண்டால் கீழ்க்கண்ட பதிவு செய்யப்படும்.

அனுப்பீட்டுக் க/கு ...... ப 40,000

அனுப்பீட்டிலனுப்பிய

சரக்கு க/கு 40,000

பிற பதிவுகள் முன்னர் விளக்கியவாறே. ஆனால், இறுதியில் சரிக்கட்ட வேண்டும். அடக்க விலைக்கும் இடாப்பு விலைக்கும் உள்ள வேற்றுமைத் தொகையை அனுப்பீட்டுக் கணக்கில் வரவு வைக்க வேண்டும். அனுப்பீட்டிலனுப்பிய சரக்குக் கணக்கில் அதற்கான பற்று உரியது. இதனால் அனுப்பீட்டுக் கணக்கில் அதிகமாக வைக்கப்பெற்ற பற்று அகற்றப் படுகிறது. மேற்சொன்ன எடுத்துக்காட்டில் செய்ய வேண்டிய மாற்றுப் பதிவு :

அனுப்பீட்டிலனுப்பிய சரக்குக் க/கு...ப 10,000

அனுப்பீட்டுக் க/கு ... 10,000

அனுப்பப் பெறுநரிடமிருக்கும் விற்கப்படாச் சரக்கிருப்பை இப்பொழுது மதிப்பிட வேண்டும். இடாப்பு விலையில் மதிப்பீட்டுச் சரக்கின் மதிப்பைக் கூட்டும் செலவினங்களின் பகுதியைக் கூட்ட வேண்டும். (முன் விளக்கியவாறுதான்; ஆனால், இடாப்பு விலை வீதத்தில் சரக்கிருப்பு மதிப்பிடப் படுகிறது.) தேவையான பதிவு :

அனுப்பீட்டுச் சரக்கிருப்புக் க/கு ... ப

அனுப்பீட்டுக் க/கு

ஆனால், இவ்வாறு மதிப்பிடும் போழ்து, சரக்கு அடக்க விலை யினும் அதிகமான விலையில் மதிப்பிடப்பட்டு விட்டதல்லவா? அடக்கவிலை மதிப்புக்கும் இடாப்பு விலை மதிப்புக்கு முள்ள வேற்றுமைத் தொகையைக் கணக்கிட்டு, அத் தொகைக்கு அனுப்பீட்டுக் கணக்கில் பற்று வைத்து விட்டால் சரியாகிவிடும். தேவையான பதிவு :

அனுப்பீட்டுக் க/கு ... ப
அனுப்பீட்டுச் சரக்கிருப்புக் காப்புக் க/கு
(Consignment Stock Reserve A/c)

ஆண்டிறுதியில், இருப்புநிலைக் குறிப்பில் சொத்துகள் பகுதி யில் அனுப்பீட்டுச் சரக்கிருப்பிலிருந்து அனுப்பீட்டுச் சரக்கிருப்புக் காப்புக் கணக்கு கழித்துக் காண்பிக்கப்படும். அப்பொழுதுதானே சரக்கிருப்பின் உண்மை மதிப்பு கிடைக்கும் ?

கீழ்க்கண்ட வகையில் இருப்புநிலைக் குறிப்பிருக்கும்
இருப்பு நிலைக் குறிப்பு

| பொறுப்புகள் | தொகை ரூ. | சொத்துகள் | தொகை ரூ. |
|---|---|---|---|
| | | அனுப்பீட்டுச் சரக்கிருப்பு ...<br>கழி :<br>அனுப்பீட்டுச் சரக் கிருப்புக் காப்பு ..... | |

அடுத்த ஆண்டுத் தொடக்கத்தில் அனுப்பீட்டுச் சரக்கிருப்பு அனுப்பீட்டுக் கணக்கின் பற்றுப் பகுதிக்கு எடுத்துச் செல்லப்படும் என்று கூறியிருக்கிறோமல்லவா? அடுத்த ஆண்டிறுதியில், இப்பொழுதுள்ள அனுப்பீட்டுச் சரக்கிருப்புக் காப்புக் கணக்கு அனுப்பீட்டுக் கணக்கின் வரவுப் பகுதிக்குக் கொண்டு செல்லப் பட்டு முடிக்கப் பெறும். இதனால் தொடக்க அனுப்பீட்டுச் சரக்கிருப்பால் அதிகமாக வைக்கப்பட்ட பற்று இறுதியில் நீக்கப்பட்டு விடுகிறது.

எடுத்துக் காட்டு 67:

சென்னை மார்க்கோனி கம்பனி தில்லியிலுள்ள திலீப் வானொலிக் கம்பனிக்கு 100 வானொலிப் பெட்டிகளை ரூ. 400

வீதம் அனுப்பீட்டில் விற்க அனுப்பியது. அவற்றின் அடக்கவிலை ஒவ்வொன்றும் ரூ. 300 ஆகும். கட்டுச் செலவுகட்கு (Packnig) ரூ. 200-ம் ஈட்டுறுதிக்கு ரூ. 300-ம் செலவழித்தனர். திலீப் கம்பனி ரூ. 700 கட்டணம் செலுத்திச் சரக்கை எடுத்தனர். ரூ. 7500-க்கான இரு திங்கள் தவணை உண்டியலை ஏற்று மார்க்கோனி கம்பனிக்கு அனுப்பினர். பண்டசாலை வாடகை ரூ. 300-ம் விளம்பரச் செலவு ரூ. 200-ம் அவர்கள் ஏற்றனர். பிணைக் கழிவு உட்பட 10% கழிவு திலீப் கம்பனி பெற வேண்டியவர்கள்.

50 வானொலிப் பெட்டிகள் ரூ. 425 வீதமும் 25 வானொலிப் பெட்டிகள் ரூ. 420 வீதமும் விற்கப்பட்டன என திலீப் கம்பனி அனுப்பிய கணக்கறிக்கையிலிருந்து தெரிய வந்தது.

மார்க்கோனி ஏட்டில், தேவையான பதிவுகளையும் பேரேட்டுக் கணக்குகளையும் தயாரிக்க.

விடை :

மார்க்கோனி ஏடுகளில்

குறிப்பேடு

| | | பற்று | வரவு |
|---|---|---|---|
| | | ரூ. | ரூ. |
| தில்லி அனுப்பீட்டுக் க/கு ப<br>அனுப்பீட்டிலனுப்பிய சரக்கு க/கு<br>(ஒன்று ரூ. 400 வீதம் 100 வானொலிப் பெட்டிகளை அனுப்பீட்டில் விற்க அனுப்பியது.) | | 40,000 — | 40,000 — |
| தில்லி அனுப்பீட்டுக் க/கு ப<br>வங்கிக் க/கு<br>(அனுப்பீட்டிற்கெனக் கட்டுச் செலவு, ஈட்டுறுதி முதலியவை ஏற்றது.) | | 500 — | 500 — |
| தில்லி அனுப்பீட்டுக் க/கு ப<br>(திலீப் வானொலிக் கம்பனி<br>திலீப் வானொலிக் கம்பனி அனுப்பீட்டின்பொருட்டுக் கட்டணஞ் செலுத்தியது.) | | 700 — | 700 — |
| வரவுடைய உண்டியல் க/கு ப<br>திலீப் வானொலிக் கம்பனி<br>(திலீப் வானொலிக் கம்பனி உண்டியலை ஏற்றனுப்பியது.) | | 7,500 — | 7,500 — |

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| தில்லி அனுப்பீட்டுக் க/கு<br>திலிப் வானொலிக் கம்பனி<br>(அனுப்பீட்டின் பொருட்டு, வாடகை, விளம்பரம் முதலிய வற்றிற்குத் திலீப் வானொலிக் கம்பனி செலவு செய்தது.) | ப | 500 — | 500 — |
| திலீப் வானொலிக் கம்பனி<br>தில்லி அனுப்பீட்டுக் க/கு<br>(50 வானொலிப் பெட்டிகளை ரூ. 425 வீதமும் 25 வானொலிப் பெட்டிகளை ரூ. 420 வீதமும் திலீப் வானொலிக் கம்பனி விற்றது.) | ப | 31,750 — | 31,750 |
| தில்லி அனுப்பீட்டுக் க/கு<br>திலீப் வானொலிக் கம்பனி<br>(விற்பனையில் 10% கழிவு திலீப் வானொலிக் கம்பனிக்குச் சேர வேண்டியது.) | ப | 3,175 — | 3,175 — |
| அனுப்பீட்டுச் சரக்கிருப்புக் க/கு<br>தில்லி அனுபீட்டுக் க/கு<br>விற்பனையாகா வானொலிப் பெட்டிகளின் மதிப்பு.) | ப | 10,300 — | 10,300 — |
| அனுப்பீட்டிலனுப்பிய சரக்கு க/கு<br>தில்லி அனுப்பீட்டுக்)க/கு<br>(அடக்க விலைக்கும், மாதிரி இடாப்பு விலைக்கும் உள்ள வேற்றுமைத் தொகையைச் சரிக்கட்ட.) | ப | 10,000 — | 10,000 — |
| தில்லி அனுப்பீட்டுக் க/கு<br>அனுப்பீட்டுச் சரக்கிருப்புக் காப்புக் க/கு<br>(இறுதிச் சரக்கிருப்பு, இடாப்பு விலையில் மதிப்பிட்டதை அடக்க விலை மதிப்பீட்டுக்குச் சரிசெய்ய.) | ப | 2,500 — | 2,500 — |
| தில்லி அனுப்பீட்டுக் க/கு<br>இலாப-நட்டக் க/கு<br>அனுப்பீட்டில் ஏற்பட்ட இலாபத்தை இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்ல.) | ப | 4,675 — | 4,675 |

| | ரூ. | ரூ. |
|---|---|---|
| அனுப்பீட்டிலனுப்பிய சரக்கு க/கு ப<br>கொள்முதல் க/கு<br>(அனுப்பீட்டிலனுப்பிய சரக்குக் கணக்கைக் கொள்முதல் கணக்கிற்கு எடுத்துச் செல்ல.) | 30,000— | 30,000— |
| வங்கிக் க/கு ப<br>திலீப் வானொலிக் கம்பனி<br>(திலீப் வானொலிக் கம்பனியிடமிருந்து வங்கிப் பணவிடை பெற்றது.) | 19,875— | 19,875— |

குறிப்பு : அனுப்பீட்டுச் சரக்கிருப்பு கீழ்க்கண்டவாறு கணக்கிடப்படுகிறது.

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| 25 வானொலிப் பெட்டிகளின் இடாப்பு விலை | | | 10,000— |
| கூட்டு : கட்டுச் செலவு | 200 | | |
| ஈட்டுறுதி | 300 | | |
| கட்டணம் | 700 | | |
| | 1200 | | |
| இதில் $\frac{1}{4}$ பங்கு .. | | | 300— |
| | | | 10,300— |

பேரேட்டுக் கணக்குகள்

திலலி அனுப்பீட்டுக் கணக்கு

| | ரூ. | | ரூ. |
|---|---|---|---|
| அனுப்பீட்டிலனுப்பிய சரக்கு | 40,000— | திலீப் வானொலிக் கம்பனி—விற்பனை | 31,750— |
| வங்கி—கட்டுச் செலவு 200 ஈட்டுறுதி 300 | 500— | அனுப்பீட்டுச் சரக்கிருப்பு | 10,300— |
| திலீப் வானொலிக் கம்பனிக்—கட்டணம் | 700— | அனுப்பீட்டிலனுப்பிய சரக்கு | 10,000— |

| | ரூ. | | | | |
|---|---|---|---|---|---|
| திலீப் வாசெனலிக் கம்பனி —பண்ட சாலை வாடகை 300 விளம்பரச் செலவு 200 | 500 | — | | | |
| திலீப் வாசெனலிக் கம்பனி —கழிவு | 3,175 | — | | | |
| அனுப்பீட்டுச் சரக்கிருப்பு காப்பு | 2,500 | — | | | |
| இலாப-நட்டக் க/கு —இலாபம் | 4,675 | — | | | |
| | 52,050 | | | 52,050 | |

அனுப்பீட்டிலனுப்பிய சரக்கு கணக்கு

| | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| தில்லி அனுப் பீட்டுக் க/கு | 10,000 | — | தில்லி அனுப் பீட்டுக் க/கு | 40,000 | — |
| கொள் முதல் | 30,000 | — | | | |
| | 40,000 | — | | 40,000 | — |

## திலீப் வானொலிக் கம்பனி

| | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| தில்லி அனுப்பீட்டுக க/கு —விற்பனை | 31,750 | — | தில்லி அனுப்பீட்டுக் க/கு —கட்டணம் | 700 | — |
| | | | வரவுடைய உண்டியல் | 7,500 | — |
| | | | தில்லி அனுப்பீட்டுக் க/கு —பண்டசாலை வாடகை 300 விளம்பரம் 200 | 500 | — |
| | | | தில்லி அனுப்பீட்டுக் க/கு —கழிவு | 3,175 | — |
| | | | வங்கி | 19,875 | — |
| | 31,750 | | | 31,750 | — |

## அனுப்பீட்டுச் சரக்கிருப்பு

| | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| தில்லி அனுப்பீட்டுக் க/கு | 10,300 | — | இருப்பு கீ/இ | 10,300 | — |
| இருப்பு கீ/கொ | 10,300 | — | | | |

## அனுப்பீட்டுச் சரக்கிருப்புக் காப்புக் க/கு

| | ரூ | | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| இருப்பு கீ/இ | 2,500 | — | தில்லி அனுப்பீட்டுக் க/கு | 2,500 | — |
| | | | இருப்பு கீ/கொ | 2,500 | — |

குறிப்பு : முன்னர் விளக்கியவாறு, இருப்புநிலைக் குறிப்பில், சொத்துகள் பகுதியில், அனுப்பீட்டுச் சரக்கிருப்பில் அனுப்பீட்டுச் சரக்கிருப்புக் காப்புக் கணக்கு கழித்துக் காண்பிக்கப்பெறும்.

## வினுக்கள்

1. 'அனுப்பீடு' என்ருல் என்ன ? அது எவ்வகையில் விற்பனை யினின்றும் வேறுபடுகிறது ?

2. 'விற்பனைக் கணக்கறிக்கை' (Account Sales) என்ருல் என்ன ? அது யாரால், யாருக்கு, ஏன் அனுப்பப்படுகிறது ?

3. விற்பனைக் கணக்கறிக்கையின் மாதிரி ஒன்றைத் தயாரிக்கவும்.

4. அனுப்பீட்டுச் சரக்கினை இறுதியில் மதிப்பிடும் முறை யாது ?

5. 'பிணைக்கழிவு' (Del Credere Commission) பற்றிக் குறிப்பு வரைக.

6. பெயரளவு இடாப்பு (Proforma Invoice) என்ருல் என்ன ?

7. பெயரளவு இடாப்பு விலையில் சரக்கு அனுப்பும் போழ்து இறுதியில் செய்ய வேண்டிய சரிக்கட்டுப் பதிவுகள் யாவை ?

8. இயல்பான நட்டம் (Natural loss) ஏற்படின், அதை எவ்வாறு அனுப்பீட்டுக் கணக்கில் பதிய வேண்டும் ?

9. பிணைக்கழிவு பெறும் அனுப்பப் பெறுநர் வராக்கடன் ஏற்படின், எவ்வாறு பதிவார் ?

10. அனுப்பப் பெறுநர் ஏடுகளில் சாதாரணமாகக் காணப் படும் பதிவுகள் யாவை ?

## பயிற்சி

1. பூம்புகாரிலுள்ள கோவலன் அன்கோ மதுரையிலுள்ள மாடலன் நிறுவனத்துக்கு அனுப்பீட்டில் விற்க 100 கட்டுகளின் கட்டு ரூ. 350 வீதம் சரக்கனுப்பினர். கோவலன் அன் கோ ஏற்ற செலவுகள் : ஈட்டுறுதி ரூ. 350; கட்டணம் ரூ. 560; முன்பணமாக மாடலன் நிறுவனம் மீது ரூ. 10,000க்கு உண்டியல் வரைந்தார். பின்னர் மாடலனிடமிருந்து பெற்ற விற்பனைக் கணக்கறிக்கை யிலிருந்து தெரிய வந்தவை : சுமை கூலி ரூ. 50; பண்டசாலை வாடகை ரூ. 300; சரக்கு விற்றது ரூ. 42,000 விற்பனையில் 5% கழிவும் 3% நாணய சான்றுக் கழிவும் அனுப்பப் பெறுநர்க்

குரியது. மீதம் உள்ள தொகைக்குக் காசோலை அனுப்பினர் எனக் கொண்டு இருவர் ஏடுகளிலும் தேவையான பதிவுகளைத் தருக கோவலன் அன் கோ ஏட்டில் அனுப்பீட்டுக் கணக்கையும், மாடலன் கணக்கையும் தயாரிக்க.

2. கடலூர் காவேரி சர்க்கரை நிறுவனம் பம்பாயிலுள்ள தங்களுடைய முகவர் முகம்மது இப்ராஹீம் கம்பனிக்கு 1,000 சர்க்கரை மூட்டைகளை மூட்டை ரூ. 210 வீதம் அனுப்பீட்டடிப் படையில் விற்கக் கப்பல் வழி அனுப்பியது. காவேரி சர்க்கரை நிறுவனம் ஏற்ற செலவுகள்: வண்டிச் சத்தம் ரூ. 200; பிற செலவுகள் ரூ. 300. முகம்மது இப்ராஹீம் கம்பனி செலுத்திய கப்பல் கட்டணம் ரூ. 1,570; பண்டசாலை செலவுகள் ரூ. 430; ஈட்டுறுதி ரூ. 700; பிற விற்பனைச் செலவுகள் ரூ. 800. சர்க்கரை எடுத்ததும் ரூ. 90,000க்கான 3 திங்கள் தவணை உண்டியலை ஏற்று அனுப்பினர். கீழ்க்கண்டவாறு அவர்கள் சர்க்கரை மூட்டைகளை விற்றனர்.

மூட்டை ரூ. 240 வீதம் 300 மூட்டைகள்,

மூட்டை ரூ. 250 வீதம் 250 மூட்டைகள்,

மூட்டை ரூ. 260 வீதம் 350 மூட்டைகள்.

விற்பனையில் 5% கழிவு அனுப்பப் பெறுநர்க்குத் தரவேண்டும். மேற் சொன்ன விவரங்களிலிருந்து முகம்மது இப்ராஹீம் அனுப்ப வேண்டிய விற்பனைக் கணக்கறிக்கையை முறையுடன் தயாரிக்க. காவேரி சர்க்கரை நிறுவனத்தின் ஏடுகளில் அனுப்பீட்டுக் கணக்கையும் முகம்மது இப்ராஹீம் கம்பனியின் கணக்கையும் தயாரிக்க.

3. தண்டபாணி அன்கோ திருவனந்தபுரத்திலுள்ள நாயர் கம்பனியிடம் அனுப்பீட்டடிப்படையில் 200 இசைப் பெட்டிகளை (Gramaphones) இசைப் பெட்டி யொன்று ரூ. 200 வீதம் அனுப் பீட்டில் அனுப்பினர். கட்டுச் செலவுகள் (Packing Charges) ரூ. 400; வண்டிச் சத்தம் ரூ. 150; ஈட்டுறுதி ரூ. 500. நாயர் கம்பனி செலுத்திய லாரிக் கட்டணம் ரூ 450; சுமை கூலி ரூ. 75; விளம்பரச் செலவு ரூ. 250. இவற்றில் 75 இசைப் பெட்டிகளை ரூ. 225 வீதம் ரொக்கத்திற்கும் 100 இசைப் பெட்டிகளை ரூ. 235 வீதம் கடனுக்கும் விற்றூர். கடனுக்கு விற்றதில் 5 இசைப் பெட்டி கட்கான தொகை வசூலிக்கப்பட முடியவில்லை. தனக்குச் சேர வேண்டிய விற்பனையில் 5% கழிவுத் தொகை போக மீதியிருக்கும், தொகையை வங்கிப் பணவிடை மூலம் அனுப்பினர் எனக் கொண்டு தண்டபாணி அன்கோவின் ஏட்டிலும், நாயர் கம்பனியின் ஏட்டி லும், தேவையான கணக்குகளைத் தயாரிக்க.

4. ஆமதாபாத் மொரார்ஜி ஸ்டோர்ஸ் சென்னையிலுள்ள தங்கள் முகவர் சாத்தனுருக்கு ரூ. 7,500 மதிப்புள்ள துண்டுத் துணிகளை (Piece Goods) அடக்க மதிப்புடன் 20% கூட்டி அனுப் பீட்டில் விற்க அனுப்பி வைத்தார். விற்பனையில் 5% சாதாரண கழிவும் 2% நாணயச் சான்றுக் கழிவும் பெறும் உரிமை சாத்தனுர்க் குண்டு.

கட்டுச் செலவுகள் ரூ. 200-ம், பிற செலவுகள் ரூ. 100-ம் மொரார்ஜி ஸ்டோர்ஸ் ஏற்றனர். சரக்கைப் பெற்றதும் ரூ. 3000-க் கான இரு திங்கள் தவணை உண்டியலைச் சாத்தனுர் ஏற்றனுப்பினுர். ரூ. 800 இரயில் கட்டணமும் ரூ. 100 வண்டிச் சத்தமும் சாத்தனுர் செலுத்தினுர். ரூ. 570 விற்பனைச் செலவும் ஆயிற்று.

அனுப்பிய சரக்கில் 75%ஐ ரூ. 7,500க்கு விற்றுர். விற்பனை யில் $\frac{1}{4}$ பகுதி கடனுக்கு விற்கப்பட்டது. இதில் ரூ. 500 வராக் கடன் என தீர்மானிக்கப்பட்டது. சாத்தனுர் தேவையான தொகையை மொரார்ஜி ஸ்டோர்ஸுக்கு அனுப்பி வைத்தார் எனக் கொண்டு, இருவர் ஏடுகளிலும் வேண்டிய பேரேட்டுக் கணக்குகளைத் தயாரிக்க.

5. கல்கத்தா ராய் அன்கோ கான்பூரில் உள்ள மசூம்தாரிடம் ரூ. 10,000 அடக்க மதிப்புள்ள பொருள்களை அனுப்பீட்டில் விற்க அனுப்பி வைத்தார். இடாப்பு விலை அடக்க விலையுடன் 25% கூட்டப்பட்டிருந்தது. கீழ்க்கண்ட செலவினங்களை அவர் ஏற்றுர்.

| | | ரூ. |
|---|---|---|
| கட்டுச் செலவுகள் | ... | 250 |
| சுமை கூலி | ... | 75 |
| இரயில் கட்டணம் | ... | 325 |

வழியில் 10% பொருள்கள் சேதமுற்றன. மீதியுள்ள வற்றையே மசூம்தார் பெற்றுர், வண்டிச் சத்தம் ரூ. 50-ம் பண்டசாலை வாடகை ரூ. 200-ம் அவர் செலுத்தினுர். முதலில் அனுப்பிய சரக்கில் 80% பகுதியை ரூ. 13,000-க்கு மசூம்தார் விற்றுர். கடனுக்கு விற்றதில் ரூ. 200 வராக்கடனுகியது.

விற்பனையில் 5% கழிவும், இடாப்பு விலைக்கும் அதிகமாக விற்ற விலையில் 10% கழிவும் மசூம்தாருக்குச் சேரவேண்டியது.

கொடுக்க வேண்டிய தொகைக்கு வங்கிப் பணவிடை அனுப்பினுர் எனக் கொண்டு, இருவர் ஏடுகளிலும் தேவையான பேரேட்டுக் கணக்குகளைத் தயாரிக்க.

6. சனவரி 1971-ல் முருகையன் 200 தையற் பொறிகளை (Sewing machines) போர்னியோவிலுள்ள தன் முகவர் முனுசாமியிடம் அனுப்பீட்டில் விற்க அனுப்பினார். பொறியொன்றின் இடாப்பு விலை ரூ. 250; அடக்கவிலையுடன் 25% இது கூட்டப்பட்டதாகும். விற்பனையில் 10% கழிவு முனுசாமிக் குண்டு. சரக்கனுப்பியதும் ரூ. 15,000-க்கு மூன்று திங்கள் தவணையில் முருகையன் வரைந்த உண்டியலை முனுசாமி ஏற்றுத் தந்தார். அதனை உடனே வங்கியில் 6% தள்ளுபடிக்கு மாற்றினார். கீழ்க்கண்ட செலவினங்களை முனுசாமி ஏற்றார்.

| | | ரூ. |
|---|---|---|
| கப்பற் கட்டணம் | ... | 3,500 |
| சுங்கத் தீர்வை | ... | 1,000 |
| பண்டசாலை வாடகை | ... | 750 |
| ஈட்டுறுதி | ... | 500 |
| பல்வகைச் செலவு | ... | 250 |

மூன்று திங்களில் 150 தையற் பொறிகளை ரூ. 300 வீதத்தில் விற்றார். 30 பொறிகளை விற்க முடியாமற் போகவே முருகையனுக்குத் திருப்பி யனுப்பினார். இதற்கு அவர் செலுத்திய கப்பற் கட்டணம் ரூ. 700. மீதியுள்ள பொறிகளை ரூ. 235 வீதத்தில் தானே எடுத்துக்கொண்டார். தன்னிடம் கடனுக்கு வாங்கிய ஒருவர் ரூ. 300 திருப்பித் தரவில்லை.

ஏப்ரல் 30ல் கணக்குகள் வங்கிப் பணவிடை மூலம் தீர்க்கப்பட்டது என்று கொண்டு இருவர் ஏடுகளிலும் பேரேட்டுக் கணக்குகளைத் தயாரிக்க.

7. கூடலூர் குமரன் எண்ணெய் மில் 1,000 கிலோ மணிலா எண்ணெயைச் சென்னை சிங்காரத்திடம் அனுப்பீட்டில் விற்க அனுப்பினார். 1 கிலோ எண்ணெயின் அடக்க விலை ரூ. 4.00. ஆனால், இதன் இடாப்பு விலை ரூ. 5.00. இரயில் கட்டணமும் ஈட்டுறுதியும் ரூ. 800 ஆயின. சிங்காரம் தன் கைக்கு அது சேர்ந்த போழ்து 10 கிலோ ஒழுகி விட்டதால் குறைந்து காணப்பட்டதாக அறிவித்தார். அவர் அனுப்பிய விற்பனைக் கணக்கறிக்கையிலிருந்து தெரிய வந்த விவரங்கள் :

ரூ. 8% வீதம் 800 கிலோ விற்கப்பட்டு விட்டது. அவர் ஏற்ற செலவினங்கள் : பண்டசாலை வாடகை ரூ. 250; விளம்பரம் ரூ. 500.

விற்பனையர்க்குக் கொடுத்த ஊதியம் ரூ. 500. விற்பனையில் 3% கழிவும் 1% நாணயச் சான்றுக் கழிவும் சிங்காரம் பெறவேண்டியது.

வங்கிப் பணவிடை மூலம் செலுத்த வேண்டிய தொகையைச் சிங்காரம் அனுப்பி விட்டதாகக் கொண்டு, இருவர் ஏடுகளிலும் பேரேட்டுக் கணக்குகளைத் தயாரிக்க.

(8) 'பூம்புகார் நிறுவனம்' சிங்கப்பூரிலுள்ள 'சிங்கப்பூர் கார்ப் போரேஷனிடம்' 1,000 மிதிவண்டிகளை அனுப்பீட்டில் விற்க அனுப்பி வைத்தது. மிதிவண்டி ஒவ்வொன்றின் அடக்கவிலை ரூ. 350 ஆகும். ஆனால், ரூ. 400 என இடாப்பில் குறிப்பிட்டு அனுப்பியது. கப்பல் கட்டணம் ரூ. 10,000; ஈட்டுறுதி ரூ. 2,500 ஆகியவற்றைப் பூம்புகார் நிறுவனம் ஏற்றது. கப்பலில் 125 மிதி வண்டிகள் தீயில் சேதமடையவே தூக்கியெறியப்பட்டன. மீதி வந்தடைந்த மிதிவண்டிகளைச் சிங்கப்பூர் கார்ப்பொரேஷன் ரூ. 8,750 துறைமுகக் கட்டணம் செலுத்தி எடுத்துக் கொண்டது. ஈட்டுறுதிக் கம்பனியிடம் நட்ட ஈடாக ரூ. 29,000 பூம்புகார் நிறுவனம் பெற்றது.

இரு திங்கள் தவணையில் ரூ. 1,00,000-க்கான தவணை உண்டியலைச் சிங்கப்பூர் கார்பொரேஷன் ஏற்றனுப்பியது. 750 மிதிவண்டிகளை, மிதிவண்டி யொன்று ரூ. 425 வீதம் விற்றது. விளம்பரத்துக்கு ரூ. 500-ம் பண்டசாலை வாடகைக்கு ரூ. 750-ம் பிறசெலவு கட்கு ரூ. 250-ம் சிங்கப்பூர் கார்ப்பொரேஷன் செலவழித்தது விற்பனையில் 5% கழிவும் (நாணயச் சான்று கழிவும் உட்பட) இடாப்பு விலையினும் அதிகம் விற்கும் விலையில் 10% கழிவும். சிங்கப்பூர் கார்ப்பொரேஷனுக்குச் சேர வேண்டும். தன் கைவசமுள்ள மிதிவண்டிகளில் சிலவற்றைச் செப்பனிட ஆன செலவு ரூ. 350 என்றும், 4 மிதிவண்டியின் விலையை வாடிக்கையாளரிடமிருந்து பெறமுடியவில்லை என்றும் கொண்டு இருவர் ஏடுகளிலும் தேவையான கணக்குகளைத் தயாரிக்கவும்.

(9) மதுரை பாண்டியன் மின்விசிறி நிறுவனம் மங்களூர் எலக்ட்ரிக்ல்ஸுக்கு மின்விசிறிகளை அனுப்பீட்டில் கீழ்க்கண்ட நிபந்தனைகளுடன் அனுப்பியது.

(i) இடாப்பு விலைக்குக் கீழ் விற்கக் கூடாது.

(ii) இடாப்பு விலையில் 5% கழிவும் அதற்கு மேல் விற்கப்படும் விலையில் 20% கழிவும் மங்களூர் எலக்ட்ரிகல்ஸுக்கு உண்டு.

(iii) இடாப்பு விலையில் 75%-க்கு 30 நாள் தவணையில் பாண்டியன் மின்விசிறி நிறுவனம் உண்டியல் வரைவது.

1-7-1971-ல் 500 மின்விசிறிகளை மங்களூர் எலக்ட்ரிக்கல்ஸுக்கு இடாப்பு விலை ரூ. 200 வீதத்தில் அனுப்பியது. இதன் அடக்க விலை ரூ. 150 ஆகும். இரயில் கட்டணம் ரூ. 1,000-ம் ஈட்டுறுதி ரூ. 500-ம் பாண்டியன் நிறுவனம் ஏற்றது.

மங்களூர் எலக்ட்ரிகல்ஸ் 200 மின்விசிறிகளை ரூ. 220 வீதமும், 250 மின்விசிறிகளை ரூ. 230 வீதமும் விற்றது. விற்பனைச் செலவுகள் ரூ. 400; பண்டசாலை வாடகை ரூ. 600; முதலியவற்றையும் ஏற்றது. மீதித் தொகைக்கு 31-12-71-ல் வங்கிப் பணவிடை அனுப்பியது. 30 மின்விசிறிகள் பழுதுபட்டிருக்கவே அவற்றிற்கு 40% தேய்மானம் கழிக்க வேண்டுமென தீர்மானிக்கப்பட்டது. இருவர் ஏடுகளிலும் தேவையான பேரேட்டுக் கணக்குகளையும் 31-12-71-ல் தயாரிக்க.

(10) சனவரி 1970-ல் செந்தில் சிவமணிக்கு 50 கட்டுகளில் பொருள்களை அனுப்பீட்டில் விற்க அனுப்பினார். அவற்றின் அடக்க விலை ரூ. 30,000. ஆனால், இடாப்பு விலை அடக்க விலையுடன் 20% கூட்டப் பெற்றிருந்தது. கீழ்க்கண்ட செலவினங்களைச் செந்தில் ஏற்றார்.

| | | ரூ. |
|---|---|---|
| வண்டிச் சத்தம் | ... | 100 |
| கப்பல் கட்டணம் | ... | 1,250 |
| ஈட்டுறுதி | ... | 300 |

சிவமணி ஏற்ற செலவுகள் :

| | | |
|---|---|---|
| சரக்ககற்றுஞ் செலவு | ... | 450 |
| வண்டிச் சத்தம் | ... | 100 |
| பண்டசாலை வாடகை | ... | 200 |
| ஈட்டுறுதி | ... | 300 |

5 கட்டுகளில் உள்ள பொருள்கள் கடல் நீரால் சேதமடைந்தன. மீட்கப்பட்ட பொருள்களின் மதிப்பு ரூ. 600. ஈட்டுறுதிக் கம்பனியிடமிருந்து செந்தில் ரூ. 1,200 நட்ட ஈடாகப் பெற்றார். மீதியுள்ள கட்டுகளில் 35-ஐ ரூ. 36,250-க்குச் சிவமணி விற்றார். விற்பனையில் 5% கழிவு சிவமணிக்குச் சேர வேண்டும்.

ஜூன் திங்களில் கட்டு ஒன்று ரூ. 700 வீதம் 5 கட்டுகளைச் சிவமணி எடுத்துக் கொண்டார். 30-6-1970-ல் அனுப்ப வேண்டிய தொகைக்கு வங்கிப் பணவிடை அனுப்பினார்.

இருவர் ஏடுகளில் தேவையான பதிவுகளையும் பேரேட்டுக் கணக்குகளையும் தயாரிக்க.

11. 1958 மார்ச் 1-ம் நாளன்று ரூ 20,000 மதிப்புள்ள சரக்கைக் கிருஷ்ணன் ஹரிகோவிந்திடம் அனுப்பீட்டில் அனுப்பினார். கட்டணத்திற்கும் ஈட்டுறுதிக்கும் அவர் செலுத்தியது ரூ. 1,200 (கிருஷ்ணனுடைய கணக்கு ஆண்டு 31 12-1958-ல் முடிவடைகிறது.

மொத்த விற்பனையில் 5% கழிவு ஹரிகோவிந்துக்குச் சேர வேண்டியது.

30-6-1958 வரையுள்ள காலத்துக்குக் கணக்கு அறிக்கை ஒன்றை ஹரிகோவிந்து கிருஷ்ணனுக்கு அனுப்பினார். கீழ்க்கண்ட விவரங்கள் அதில் தெரிய வந்தன:

(i) சரக்கின் 60% ரூ. 16,000-க்கு விற்கப்பட்டது. அதில் ரூ. 13,000-க்கு ரொக்கம் பெறப்பட்டது.

(ii) அனுப்பிய சரக்குக்கு ரூ. 600-ம், விற்ற சரக்குக்கு ரூ. 400-ம் ஹரிகோவிந்து செலவு செய்தார்.

மேற்குறிப்பிட்ட கணக்கு அறிக்கையும் அனுப்பப் பெற்ற வங்கிப் பணவிடையை ரொக்கத்திற்கு மாற்ற 10-7-1958-ல் கிருஷ்ணன் கொடுத்த வங்கிக் கட்டணம் ரூ. 20 ஆகும்.

அடுத்த ஆறு திங்கட்கான கணக்கறிக்கையை ஹரிகோவிந்து மீண்டும் அனுப்பினார். அதில் கண்டவை.

(i) மீதியிருந்த சரக்கு ரூ. 11,000-க்கு விற்கப்பட்டது. விற்பனைச் செலவுகள் ரூ. 300 ஆயின.

(ii) வாடிக்கையாளர்களிடமிருந்து ரூ. 200 திரும்பப்பெற முடியவில்லை. மீதித்தொகை அனைத்தும் வசூலாகி விட்டது.

5-1-1959 அன்று மீதத்தொகைக்கு ஹரிகோவிந்து அனுப்பிய வங்கிப் பணவிடையை ரொக்கத்திற்கு மாற்ற ரூ. 10 வங்கிக் கட்டணம் கிருஷ்ணன் கொடுத்தார்.

கிருஷ்ணன் ஏடுகளில், அனுப்பீட்டுக் கணக்கையும், ஹரிகோவிந்து கணக்கையும் தயாரிக்க.

(M. U. B. Com. April, 1961)

*12. 1950 ஜுன் 10-ஆம் நாளன்று பம்பாயிலுள்ள சர்தார் அன் கோ, கல்கத்தாவிலுள்ள தேக்கர் அன் கோவிடம் 100 கட்டுகள் ஒயின் அனுப்பீட்டில் அனுப்பினர். அனுப்பிய சரக்கின் மதிப்பு ரூ. 7,500. ஆனால், விற்பனையில் 25% இலாபம் கூட்டி, மாதிரி இடாப்பில் (Proforma Invoice) விலையிடப்பட்டது. அதேநாளில் கட்டணத்திற்கும், ஈட்டுறுதிக்கும் ரூ. 600 அனுப்பீட்டாளர் (Consignor) செலவு செய்தார். ஜுலை 1-ல் இறக்குமதிவரி ரூ. 1000-மும், துறைமுகச் கட்டணம் ரூ. 200-ம் அனுப்பப் பெறுநர் செலவு செய்தார். அனுப்பீட்டிற்கு முன் பணமாக ரூ 4000-க்கு வங்கிப் பணவிடை (Bank Draft) எடுத்தனுப்பினர்.*

*ஜுலை 15-ல் 80 கட்டுகளை ரூ. 10,500-க்கு விற்றார். மொத்த விற்பனையில் (Gross Sales) 5% கழிவு அவர்க்குரியது. மீதி அனுப்ப வேண்டிய தொகைக்குத் தேக்கர் அன் கோ வங்கிப் பணவிடை அனுப்பி விட்டதாகக் கொண்டு, அனுப்புநர், அனுப்பப் பெறுநர்-இருவர் ஏடுகளிலும் பதிவுகளைத்தருக.*

(M. U. B. Com. Sept. 1963)

*13. செட்டியாருக்கு 10 மோட்டார்கார்களை இராசன் அனுப்பீட்டில் அனுப்பினர். ஒவ்வொருகாரின் அடக்கவிலையும் ரூ. 8,000 ஆகும். ஆனால் அடக்க விலையுடன் 25% கூட்டி இடாப்பில் விலையிடப்பட்டது. இராசன் ஏற்ற செலவுகள் :*

| | | ரூ. |
|---|---|---|
| கட்டணம் | ... | 800 |
| ஈட்டுறுதி | ... | 1,500 |

*பயணத்தின் போழ்து ஒரு கார் சேதமாகியது. ஈட்டுறுதிக் கம்பனி ரூ. 6,000 கொடுத்தது.*

*ஒன்று ரூ. 12,000 வீதம் 5 கார்களைச் செட்டியார் விற்றார். ஈட்டுறுதிக்கும் கார்களைப் பாதுகாத்து வைப்பதற்கும் ரூ. 1,700 செலவு செய்தார். ரூ. 50,000-க்கான 3 திங்கள் உண்டியல் ஒன்றை இராசன் வரைய செட்டியார் ஏற்றுத் தந்தார். உடனே தனது வங்கியில் 6% தள்ளுபடிக்கு இராசன் மாற்றினர். 5% கழிவு செட்டியாருக்குத் தரப்பட வேண்டும்.*

*இராசன் ஏடுகளில் தேவையான பேரேட்டுக் கணக்குகளைத் தயாரிக்க.*

**(M. U. B. Com. Sept. 1967.)**

14. 1966 டிசம்பர் 5-ல் பாம்பேயிலுள்ள தெலிபங்கன் லிமிடெட் 200 வானொலிப் பெட்டிகளைச் சென்னையிலுள்ள தங்கள் முகவர் J. இராமனுக்கு அனுப்பீட்டில் அனுப்பியது. ஒவ்வொன் றின் அடக்கவிலையும் ரூ. 300 ஆகும். விற்பனையில் 25% மொத்த இலாபம் காட்டுமாறு மாதிரி இடாப்பில் விலையிடப்பட்டது. டிசம்பர் 27-ல் மாதிரி இடாப்பு விலையில் 10% இலாபத்திற்கு அனுப்பீட்டுச் சரக்கில் 75%ஐ அனுப்பப் பெறுநர் விற்றார். தெலிபங்கன் கம்பனி செலுத்திய கட்டணமும் ஈட்டுறுதியும் ரூ. 600. இராமன் கீழ்க்கண்ட செலவினங்களை ஏற்றார்.

(i) சுமை கூலி, பண்டசாலை வாடகை, ஈட்டுறுதிக் கட்டணம் முதலியவை ரூ. 400.

(ii) விளம்பரமும் பிற விற்பனைச் செலவுகளும் ரூ. 500.

விற்பனையில் 5% கழிவும், 3% நாணயக் கழிவும் அனுப்பப் பெறுநர்க்குச் சேரவேண்டும்.

டிசம்பர் 31-ல் மீதம் செலுத்த வேண்டிய தொகைக்கு வங்கிப் பண விடை மூலம் அனுப்பப் பெறுநர் அனுப்பினார்.

தெலிபங்கன் லிமிடெட் கம்பனியின் ஏடுகளில் பேரேட்டுக் கணக்குகளைத் தயாரிக்க.

(M. U. B. Com. April 1968.)

15. 1956 பிப்பிரவரி 21-ல் தனது முகவர் 'டைகரு'க்கு 'லேன்' என்பவர் 90 மிதி வண்டிகளை அனுப்பீட்டில் விற்க அனுப்பினார். அதன் அடக்க விலை ஒவ்வொன்றும் ரூ. 180 ஆகும். ஈட்டுறுதியும் கட்டணமும் ரூ. 1,080 ஆகியது. மொத்த விற்பனையில் 10% கழிவு டைகருக்குச் சேர வேண்டியது.

வேறு வண்ணமுடைய 10 மிதிவண்டிகளை உடனடியாக டைகர் திருப்பியனுப்பிவிட்டார். இதற்காகக் கட்டணமும் ஈட்டுறுதியும் ரூ. 200 ஆகியது.

லேனின் நிதியாண்டு சூன் 30, 1956-ல் முடிவடைகிறது. அந் நாளுக்குரிய விற்பனைக் கணக்கறிக்கையை டைகரிடமிருந்து லேன் பெற்றார். இதிலிருந்து வெளியான விவரங்கள். ரூ. 21,600-க்கு 60 மிதிவண்டிகளை டைகர் விற்றிருந்தார். பண்டசாலை வாடகை ரூ. 360 (சரக்கு முழுவதற்கும்) செலுத்தியிருந்தார். மிதிவண்டிகளை விற்றதில் சுமை கூலி ரூ. 300 செலுத்தப்பட்டிருந்தது. செலுத்த வேண்டிய தொகைக்கு வங்கிப் பணவிடை டைகர் அனுப்பினார். இதை மாற்ற லேன் வங்கிக் கட்டணம் ரூ. 60 கொடுத்தார்.

மீதியுள்ள மிதிவண்டிகளை ரூ. 6,300-க்கு டைகர் விற்றார்; ஆன செலவு ரூ. 160. 1956 செப்டம்பர் 30-க்குரிய இரண்டாவது விற்பனைக் கணக்கறிக்கை ஒன்றை 'லேனு'க்கு அனுப்பினார் செலுத்த வேண்டிய தொகைக்கு வங்கிப் பணவிடை இணைத்தனுப்பினார். 'லேனு'க்கு இதை மாற்ற ஆன வங்கிச் செலவு ரூ. 40.

'லேனி'ன் ஏடுகளில் கொள்முதல் அனைத்தும் வாணிகக் கணக்கில் பற்று வைக்கப்படுகிறது. 'லேன்' ஏடுகளில் கீழ்க்கண்ட கணக்குகளைத் தயாரிக்க.

(i) அனுப்பீட்டுக் கணக்கு

(ii) அனுப்பீட்டிலனுப்பிய சரக்குக் கணக்கு

(iii) 'டைகரி'ன் கணக்கு

Institute of Chartered Accountants in England and Wales—தழுவியது.

16. சுரேஷிடம் அனுப்பீட்டில் விற்க ரூ. 20,000 மதிப்புள்ள பொருள்களைக் கணேஷ் அனுப்பி, ரூ. 8,000-க்கான உண்டியலை வரைகிறார். இவ் வுண்டியல் ரூ. 7,980-க்குத் தள்ளுபடி செய்யப்படுகிறது. கணேஷ் ஏற்ற செலவுகள் : சுமைகூலி ரூ. 125; கட்டுச் செலவு ரூ. 50; ஈட்டுறுதி ரூ. 75; கட்டணம் ரூ. 250.

அனுப்பீட்டுச் சரக்கில் பாதியை கடன் பேரில் ரூ. 15,000-க்குச் சுரேஷ் விற்கிறார். மீதியுள்ள பாதியை ரூ. 8,000 ரொக்க விற்பனை செய்கிறார். சரக்கற்றுஞ் செலவு ரூ. 75-ம், பண்டசாலை வாடகை ரூ. 225-ம், வேறு கட்டணங்கள் ரூ. 100-ம் சுரேஷ் ஏற்றார். மொத்த விற்பனையில் 4% கழிவும், 2% பிணைக் கழிவும் அவர்க்குச் சேர வேண்டும். விற்பனைக் கணக்கறிக்கையுடன் மீதி செலுத்த வேண்டிய தொகைக்கு வங்கிப் பணவிடையும் இணைத்துச் சுரேஷ் அனுப்புகிறார். அதே நிபந்தனைகளில் பின்னர் விற்கும் பொருட்டு, விற்கப்படாச் சரக்கைத் தம்மிடமே சுரேஷ் வைத்துக் கொள்கிறார்.

கணேஷ், சுரேஷ்-இருவர் ஏடுகளிலும் தேவையான பேரேட்டுக் கணக்குகளைத் தயாரிக்கவும்.

(M. U. B.Com. Sept. 1970)

17. கோல் கம்பனி 1966 சூன் 1-ல் சேல்ஸ் கம்பனிக்கு டன் ஒன்று ரூ. 10 வீதம் 2,000 டன் நிலக்கரியை அனுப்பீட்டில் விற்க அனுப்பியது. நிலக்கரி சுரங்க விலையும் இரயில் கட்டணமும் டன் ஒன்றுக்கு முறையே ரூ. 7-50-ம் ரூ. 2-ம் ஆகும்.

சேல்ஸ் கம்பனியிடமிருந்து ஜுன் 28-ல் பெற்ற விற்பனைக் கணக்கறிக்கையில் தெரிய வந்தவை: டன் ஒன்று ரூ. 16 வீதம் 1,000 டன் விற்கப்பட்டு விட்டன; விற்பனைச் செலவுகள் ரூ. 880; ஈட்டுறுதி ரூ. 120; தரகு $1\frac{1}{4}\%$; கழிவு $2\frac{1}{2}\%$ விற்பனைத் தொகையிலிருந்து செலவு போக எஞ்சிய தொகைக்கு உண்டியல் ஒன்றையும் இணைத்தனுப்பியிருந்தனர். மொத்த அனுப்பீட்டில் 40 டன் எடை குறைந்திருந்ததாகவும், அனுப்பப் பெறுநர் அறிவித்தனர். கோல் கம்பனியின் ஏடுகளில் தேவையான கணக்குகளைத் தயார் செய்க.

(Adapted for Chartered Accountants)

18. கிழக்கு போர்னியோவில் இருக்கும் தனது கிம்பர்லிக்கு ரூ. 16,500 மதிப்புள்ள பொருள்களை அனுப்பீட்டில் விற்க பம்பாயிலுள்ள கட்டாவ் அனுப்பினார். அனுப்புநர் ஏற்ற செலவுகள்: கப்பல் கட்டணம் ரூ. 650; ஈட்டுறுதி ரூ. 490. கிம்பர்லி மீது ரூ. 5,500க்கு ஆறு திங்கள் தவணை உண்டியல் ஒன்று வரையப்பட்டு, அது உடனடியாக ரூ. 4,520-க்குத் தள்ளுபடி செய்யப்பட்டது.

சில நாள்களில் அனுப்பப் பெறுநரிடமிருந்து விற்பனைக் கணக்கறிக்கை பெறப்பட்டது. அதில் கண்ட விவரங்கள்: பொருள்களில் ஒரு பகுதி ரூ. 10,000-க்கு விற்கப்பட்டது. ஏற்ற செலவினங்கள் ரூ. 370; கழிவு ரூ. 500; மீதித் தொகைக்கும் பண விடை (Draft) இணைக்கப்பட்டது. (ரூ. 5,500-க்கு முன்னர் வரைந்த உண்டியல் கணக்கில் செலுத்தப்பட்டதாகக் கொள்க.) விற்கப்படாச் சரக்கின் மதிப்பு ரூ. 10,500. அனுப்புநர் ஏடுகளில் தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளைத் தந்து, பேரேட்டுக் கணக்குகளைத் தயார் செய்க.

(Bombay University)

19. கல்கத்தா பிலிப்ஸ் கம்பனி ஒன்று ரூ. 60 வீதம் 1,000 வானொலிப் பெட்டிகளைப் பம்பாய் தேசாய் கம்பனிக்கு 1964 மார்ச் 25-ல் அனுப்பியது. அனுப்பீட்டில் பிலிப்ஸ் கம்பனி கீழ்க் கண்ட செலவினங்களை ஏற்றது.

கட்டணம் ரூ. 750; வண்டிச் சத்தம் ரூ. 45, ஈட்டுறுதி ரூ. 250; ரூ. 90,000-க்கு மாதிரி இடாப்பு அனுப்பப்பட்டது. மொத்த விற்பனைத் தொகையில் 5% கழிவு முகவர்க்குத் தரவேண்டியது. முன் பணமாக ரூ. 20,000-க்கு வரைந்த உண்டியலை முகவர் (Agent) ஏற்றுக் கொண்டார்,

1964 ஜூன் 30-ல் 100 வானொலிப் பெட்டிகள் முழுவதும் தீயில் அழிவுற்றன. ஈட்டுறுதிக் கம்பனியிடமிருந்து அனுப்புநர் ரூ. 900 பெற்றுக் கொண்டார். தன் முகவரிடமிருந்து 1964 டிசம்பர் 31-ல் விற்பனைக் கணக்கறிக்கையைப் பெற்றது. அதில் கண்ட விவரங்கள் :

| | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| 600 பெட்டிகள்-விற்பனை | | | 60,000 |
| கழி : | | | |
| சுங்கவரி | ... | 10,000 | |
| துறைமுகக் கட்டணமும் சரக்ககற்றுஞ் செலவு | ... | 500 | |
| பண்டசாலை வாடகையும் ஈட்டுறுதியும் | ... | 450 | |
| விற்பனைச் செலவு | ... | 600 | |
| முகவர் கழிவு | ... | 3,000 | 14,550 |
| நிகர விற்பனை | ... | | 45,450 |

முன்னரே ஏற்ற உண்டியல் தொகை கழித்தது போக செலுத்த வேண்டிய தொகைக்கு (Sight Traft) இத்துடன் அனுப்பப்பட்டது. சில வானொலிப் பெட்டிகள் சேதமுற்றுவிட்டன என்று முகவர் அறிவித்தனர். அவற்றைப் பழுது பார்க்க ரூ. 600 செலவாகும். என்றும் மதிப்பிடப்பட்டது.

பிலிப்ஸ் வானொலிக் கம்பனியின் ஏடுகளில் அனுப்பீட்டுக் கணக்கையும் அனுப்பப் பெறுநர் கணக்கையும் தயாரிக்கவும்.

(U. P. Board)

# 16. இணை நிறுவனம்

## (Joint Venture)

ஒப்பந்தத்தின் விளைவாக ஒரு குறிப்பிட்ட வணிகச் செயலில் இருவர் அல்லது மேற்பட்டோர் ஈடுபட்டு, அதிலுறும் ஆதாயம் அல்லது நட்டத்தைப் பகிர்ந்து கொள்ளும் முறையினை இணை நிறுவனம் (Joint Venture) என்கிறோம். குறிப்பிட்ட வாணிகம் முடிவுற்றதும் கலைந்திடுவர். இது கூட்டு நிறுவனம் போன்றது. சிலர் கூடி இணைந்து செயல்படுகின்றனர். ஒப்பந்தத்தில் கூறியவாறு இலாப-நட்டத்தைப் பகிர்ந்து கொள்கின்றனர். எடுத்துக் காட்டாக, அன்பரசும் ஆடலரசும் ஒரு கட்டடம் கட்டித்தரும் ஒப்பந்தத்தை ஏற்கலாம். இருவரும் தேவையான செலவுகளை ஏற்றுப் பின்னர் இதில் கிடைக்கும் இலாபத்தைக் குறிப்பிட்ட விகிதத்தில் பகிர்ந்து கொள்ளலாம். ஒருவர் பொருளை வாங்கிப் பிறர்க்கனுப்பலாம்; பிறர் அதனை விற்கலாம். இதிலுண்டாகும் இலாப-நட்டத்தை இருவரும் பகிர்ந்து கொள்ளலாம். இலாப-நட்ட விகிதம் கொடுபட வில்லையாயின், சமமாகப் பிரித்துக் கொள்ள வேண்டும். இந் நிறுவனம் கட்டடம் கட்டி முடிந்தவுடன் கலைக்கப்பட்டுவிடும்; அவ்வாறே குறிப்பிட்ட பொருள் விற்றுன பிறகு முடிவடைந்துவிடுகிறது. இவ்வாறு குறிப்பிட்ட வாணிக நிகழ்ச்சியில் பங்கேற்க ஒப்பும் நிறுவனம் இணைநிறுவனமாகும். ‘தாற்காலிகக் கூட்டு நிறுவனம்’ போன்று செயல்படுகிறது. கூட்டுப் பங்குக் கம்பெனி வெளியிடும் பங்குகளை ஒப்புறுதி செய்தல், பங்குகளை வாங்கி விற்றல்-போன்ற நடவடிக்கை களிலும் இவை ஈடுபடும்.

நடத்தும் முறைக்கேற்பக் கணக்குப் பதியும் முறைகளும் மாறுபடும். சில வேளைகளில் இணை நிறுவன நடவடிக்கைகளைப் பதிய முற்றிலும் தனியேடுகள் பயன்படுத்தப்படுகின்றன.

இணை வங்கிக் கணக்கு தொடங்கப் படுகிறது. அவற்றைப் பின்னர்க் காண்போம்

பெரும்பாலும் தனியேடுகள் இதற்காக ஒதுக்காமல் ஒவ்வொருவரும் தம்தம் ஏடுகளில் அவ்வப்பொழுது நடவடிக்கை களைப் பதிந்து வருவர்.

வங்கியில் தனியாக இணை வங்கிக் கணக்கும் தொடங்குவ தில்லை. செயல் அல்லது நேர்கொண்ட நடவடிக்கை முடிந்ததும், ஒவ்வொருவரும் அடுத்தவர்க்குத்தான் செய்த செலவுகளையும் பெற்ற வரவுகளையும்-(இணை நிறுவன நடவடிக்கைகளைத்) தெரிவிக்கின்றார். ஒவ்வொருவரும் தம்தம் ஏடுகளில் இணை நிறுவனக் கணக்கைத் தயாரித்து இலாப-நட்டத்தை உணர முடியும். அடுத்தவர் கணக்கைத் தயாரித்து அவர்க்குத் தாம் பணஞ் செலுத்த வேண்டியுள்ளதா அல்லது அவரிடம் பெறவேண்டி யுள்ளதா என்பதை அறிய முடியும்.

இணை நிறுவனத்துக்காகப் பொருளை வேறொருவர்க்கு அனுப்பும் போழ்து இணை நிறுவனக் கணக்கில் (Joint Venture a/c) பற்று வைக்க வேண்டும். நம்மிடம் இருக்கும் சரக்கை இதற்குப் பயன்படுத்தலால் கொள்முதல் கணக்கில் வரவு வைத்தலே நன்று. இதனை விற்பனையாகக் கொண்டு விற்பனைக் கணக்கிலும் சிலர் வரவு வைக்கின்றனர். ஆனால், நாம் நம்மிடம் உள்ள சரக்கைத்தான் இதற்குப் பயன்படுத்துகிறோம். நம்மிடமில்லையெனில், அதனை வாங்கித் தானே அனுப்பியிருப்போம்? அந் நிலையில் வாங்கிய விலைக்குத்தானே இணை நிறுவன விற்பனைக்கு அனுப்பி யிருப்போம் நம்மிடமுள்ள சரக்கை, நாம் வாங்கிய விலையில்தான் இணை நிறுவனக் கூட்டாளிக்கு அனுப்புகிறோம். எனவே, விற்பனைக் கணக்கில் வரவு வைப்பதைவிட, கொள்முதல் கணக்கில் வரவு வைப்பதே பொருத்தமாகப் படுகிறது.(உரிமையாளர் தன் சொந்தப் பயன் கருதி வணிக நிறுவனத்திலுள்ள பொருளை எடுத்துக் கொள் ளின், எடுப்புக் கணக்கில் பற்றும், கொள்முதல் கணக்கில் வரவும் வைப்பதை இவண் நினைவு கூர்தல் நன்று.) எனவே, தம்மிடமுள்ள சரக்கை இணை நிறுவனத்தில் விற்பான்வேண்டி, இணை நிறுவனக் கூட்டாளியிடம் அனுப்பும் போழ்து செய்ய வேண்டிய பதிவு:

இணைநிறுவனக் கணக்கு ..ப

கொள்முதல் க/கு

சரக்கை வாங்கி அனுப்பின் செய்ய வேண்டிய பதிவு:

இணை நிறுவனக் க/கு...ப

ரொக்கம் அல்லது வங்கிக் க/கு

இணை நிறுவனத்தின் பொருட்டுச் செலவு மேற்கொள்ளப்படும் போழ்து செய்ய வேண்டிய பதிவு :

இணை நிறுவனக் க/கு ... ப
வங்கிக் க/கு

தாமே பொருள்களை விற்றிருப்பின்,

வங்கிக்கணக்கு அல்லது ரொக்கக் க/கு ... ப
இணை நிறுவனக் க/கு

கடனுக்கு விற்றிருப்பின்,

கடனாளிகள் க/கு ... ப
இணை நிறுவனக் க/கு

தாம் இணை நிறுவனக் கூட்டாளிமீது உண்டியல் வரைந்திருப்பின்,

வரவுடைய உண்டியல் க/கு ... ப
இணை நிறுவனக் கூட்டாளிக் க/கு

அவ்வுண்டியலைத் தள்ளுபடிக்கு மாற்றின், சாதாரணமாக இதற்குச் செய்யவேண்டிய பதிவு :

வங்கிக் க/கு ... ப
தள்ளுபடிக் க/கு ... ப
வரவுடைய உண்டியல் க/கு

ஆனால், இத் தள்ளுபடி நமக்கு ஒரு செலவன்று. இணை நிறுவனத்தின் பொருட்டு நிகழ்வதால், இத் தள்ளுபடிக் கணக்கை இணைநிறுவனக் கணக்கிற்கு எடுத்துச் சென்று பற்று வைப்பதே பொருந்தும். எனவே, வங்கியில் உண்டியலைத் தள்ளுபடி செய்யும் போழ்து ஏற்படும் தள்ளுபடிக் கணக்கும் அல்லது காசோலையை வங்கியில் வசூலிக்க ஆகும் தண்டல் செலவும் (Collection Charge) ஒரு இணைநிறுவனச் செலவாகக் கொண்டு பின்னர்க் கீழ்க்கண்ட பதிவைச் செய்யவேண்டும்.

இணைநிறுவனக் க/கு ... ப
தள்ளுபடிக் க/கு

இணைநிறுவனம் தனக்குக் கழிவு கொடுக்க வேண்டியிருப்பின்

இணைநிறுவனக் க/கு ... ப.
கழிவுக் க/கு

இணை நிறுவனக் கூட்டாளி விற்றதற்கு அல்லது சரக்கு வாங்கியதற்குக் கழிவு கொடுக்க வேண்டியிருப்பின்,

இணை நிறுவனக் க/கு ... ப
இணை நிறுவனக் கூட்டாளிக் க/கு

சில வேளைகளில் விற்காதிருக்கும் சரக்கைத் தாமே எடுத்துக் கொள்ள விழையலாம். அது சரக்கு வாங்கியதற்கு ஒப்பாகிறது. இதற்கான பதிவு :

கொள்முதல் க/கு ... ப
இணை நிறுவனக் க/கு.

இணை நிறுவனக் கூட்டாளி விற்காதிருக்கும் சரக்கைத் தான் எடுத்துக் கொள்ளின், செய்யவேண்டிய பதிவு :

இணை நிறுவனக் கூட்டாளிக் க/கு ...ப
இணை நிறுவனக் க/கு

இணை நிறுவனத்தின் பொருட்டுக் கூட்டாளி செலவுகளை மேற்கொள்ளின்,

இணை நிறுவனக் க/கு ... ப
இணை நிறுவனக் கூட்டாளிக் க/கு.

இணை நிறுவனத்துக்காகக் கூட்டாளி சரக்கு வாங்கியிருப்பின் செய்யவேண்டிய பதிவு :

இணை நிறுவனக் க/கு ... ப
இணை நிறுவனக் கூட்டாளிக் க/கு.

இணை நிறுவனக் கூட்டாளி முன்பணமாக நம்மீது உண்டியல் வரைய அதை நாம் ஏற்கும் போழ்து,

இணை நிறுவனக் கூட்டாளிக் க/கு ... ப
செலுத்த வேண்டிய உண்டியல் க/கு.

அவ்வுண்டியலைக் கூட்டாளி வங்கியில் தள்ளுபடிக்கு மாற்றின், அத் தள்ளுபடியைக் கணக்கில் கொண்டுவர வேண்டுமல்லவா? தேவையான பதிவு :

இணைநிறுவனக் க/கு ... ப
　　　இணைநிறுவனக் கூட்டாளிக் க/கு.

இணைநிறுவனக் கூட்டாளி விற்றிருப்பின்,

இணைநிறுவனக் க/கு ... ப
　　　இணைநிறுவனக் கூட்டாளிக் க/கு.

இவற்றையெல்லாம் இணைநிறுவனக் கணக்கில் எழுதியவுடன் இதில் ஏற்பட்ட இலாப-நட்டம் தெரியும். இதனை ஒப்புக் கொண்ட விகிதத்தில் பிரித்துக்கொள்ள வேண்டும். இலாபமாயின், தேவையான பதிவு :

இணைநிறுவனக் க/கு ... ப
　　　இணைநிறுவனக் கூட்டாளிக் க/கு
　　　இலாப-நட்டக் க/கு.

இதில் ஏற்பட்டது நட்டமாயின்,

இணைநிறுவனக் கூட்டாளிக் க/கு ... ப
இலாப-நட்டக் க/கு ... ப
　　　இணைநிறுவனக் க/கு

கீழ்க் கொடுக்கப்பட்டுள்ள எடுத்துக்காட்டு இப் பதிவுகளைத் தெளிவாக்கும்.

எடுத்துக்காட்டு 68 :

நலங்கிள்ளியும் நெடுங்கிள்ளியும் இணைநிறுவன அடிப்படையில் பொருள் விற்று 3:2 எனும் விகிதத்தில் அதிலேற்படும் இலாப-நட்டத்தைப் பகிர்ந்துகொள்ள முடிவெடுத்தனர். ரூ. 10,000-க்குச் சரக்கு வாங்கி நலங்கிள்ளி நெடுங்கிள்ளியிடம் அனுப்பினார். இதிலேற்பட்ட செலவு ரூ. 300. இரு திங்கள் தவணை உண்டியல் ஒன்று ரூ. 5,000-க்கு வரைய நெடுங்கிள்ளி அதனை ஏற்றனுப்பினார். இதனை 6% வீதம் தன் வங்கியில் தள்ளுபடி செய்தார். நலங்கிள்ளி அனுப்பிய சரக்குடன், நெடுங்கிள்ளி தன்னிடமுள்ள ரூ. 5,000 மதிப்புள்ள சரக்கையும் இணைநிறுவனத்தில் சேர்த்து விற்கிறார்: அவர் ஏற்ற செலவுகள்: பண்டசாலை வாடகை ரூ 400; பிற செலவுகள் ரூ. 1,200; சரக்கு விற்றது ரூ 26,500; ரூ. 1,500 மதிப்புள்ள விற்பனையாகாதிருந்த சரக்கை நெடுங்கிள்ளி எடுத்துக் கொண்டார். விற்பனையில் 5% கழிவு நெடுங்கிள்ளிக்குச் சேர வேண்டும் என்றும் மீதித்தொகை காசோலை மூலம் கொடுக்கப்பட்டதாகவும் கொண்டு இருவர் ஏடுகளிலும் பதிவுகளைத் தருக பேரேட்டுக் கணக்குகளையும் தயாரிக்க.

## நலங்கிள்ளியின் ஏடுகளில்.

### குறிப்பேடு.

| விவரம் | | ரூ. | ரூ. |
|---|---|---|---|
| இணை நிறுவனக் க/கு | ப | 10,000 | |
| வங்கிக் க/கு | | | 10,000 |
| (சரக்கு வாங்கி இணை நிறுவனத்தில் விற்க அனுப்பியது.) | | | |
| இணை நிறுவனக் க/கு | ப | 300 | |
| வங்கிக் க/கு | | | 300 |
| (இணை நிறுவனச் செலவை நலங்கிள்ளி ஏற்றது.) | | | |
| வரவுடைய உண்டியல் க/கு | ப | 5,000 | |
| நெடுங்கிள்ளி | | | 5,000 |
| (வரவுடைய உண்டியலை நெடுங்கிள்ளி ஏற்றுத் தந்தது.) | | | |
| வங்கிக் க/கு | ப | 4,950 | |
| தள்ளுபடிக க/கு | ப | 50 | |
| வரவுடைய உண்டியல் க/கு | | | 5,000 |
| (நெடுங்கிள்ளியின் உண்டியல் 6% தள்ளுபடி செய்யப்பட்டது.) | | | |
| இணை நிறுவனக் க/கு | ப | 50 | |
| தள்ளுபடிக் க/கு | | | 50 |
| (தள்ளுபடிக் கணக்கை இணை நிறுவனக் கணக்கிற்கு மாற்றியது.) | | | |
| இணை நிறுவனக் க/கு | ப | 5,000 | |
| நெடுங்கிள்ளி | | | 5,000 |
| (நெடுங்கிள்ளி, தன்னிடமுள்ள சரக்கை இணை நிறுவனத்துக்குக் கொண்டுவந்தது.) | | | |
| இணை நிறுவனக் க/கு | ப | 1,600 | |
| நெடுங்கிள்ளி | | | 1,600 |
| (பண்டசாலை வாடகை முதலிய செலவுகளை நெடுங்கிள்ளி ஏற்றது.) | | | |
| நெடுங்கிள்ளி | ப | 26,500 | |
| இணை நிறுவனக் க/கு | | | 26,500 |
| (நெடுங்கிள்ளி இணை நிறுவனத்துக்காக விற்றது.) | | | |

| | | | |
|---|---|---|---|
| நெடுங்கிள்ளி ப<br>இணை நிறுவனக் க/கு<br>(இணை நிறுவனச் சரக்கை நெடுங்கிள்ளி எடுத்துக் கொண்டது.) | | 1,500 | 1,500 |
| இணை நிறுவனக் க/கு ப<br>நெடுங்கிள்ளி<br>(நெடுங்கிள்ளிக்குச் சேர வேண்டிய விற்பனை மீதான கழிவு.) | | 1,325 | 1,325 |
| இணை நிறுவனக் க/கு ப<br>இலாப-நட்டக் க/கு<br>நெடுங்கிள்ளி<br>(இணை நிறுவன இலாபம் 3:2 விகிதத்தில் பிரிக்கப்பட்டது.) | | 9,725 | 5,835<br>3,890 |
| வங்கிக் க/கு ப<br>நெடுங்கிள்ளி<br>(சேர வேண்டிய தொகைக்கு நெடுங்கிள்ளியிடப் காசோலை பெற்றது.) | | 11,185 | 11,185 |

பேரேட்டுக் கணக்குகள்

இணை நிறுவனக் க/கு

ப வ

| | | ரூ. | கா | | ரூ. | கா |
|---|---|---|---|---|---|---|
| வங்கி—சரக்கு | | 10,000 | — | நெடுங்கிள்ளி — விற்பனை | 26,500 | — |
| வங்கி—செலவு | | 300 | — | நெடுங்கிள்ளி — சரக்கு எடுத்துக் கொண்டது | 1,500 | — |
| தள்ளுபடி | | 50 | — | | | |
| நெடுங்கிள்ளி— சரக்கு | | 5,000 | — | | | |
| நெடுங்கிள்ளி— பண்டசாலை வாடகை | 400 | | | | | |
| பிற செலவுகள் | 1,200 | 1,600 | — | | | |
| நெடுங்கிள்ளி — கழிவு | | 1,325 | — | | | |
| இலாபம் :- இலாப-நட்டக் க/கு — $\frac{3}{5}$ பாகம் | 5835 | | | | | |
| நெடுங்கிள்ளி — இலாபம் $\frac{2}{5}$ பாகம் | 3,890 | 9,725 | — | | | |
| | | 28,000 | | | 28,000 | |

நெடுங்கிள்ளி

| | ரூ. | | | | ரூ. |
|---|---|---|---|---|---|
| இணை நிறுவனம்-விற்பனை | 26,500 | — | வரவுடைய உண்டியல் | | 5,000 — |
| இணை நிறுவனம் சரக்கு எடுத்துக் கொண்டது. | 1,500 | — | இணை நிறுவனம் — கொள்முதல்- | | 5,000 — |
| | | | இணை நிறுவனம்: பண்டசாலை வாடகை | 400 | |
| | | | பிற செலவுகள் | 1,200 | 1,600 — |
| | | | இணை நிறுவனம் — கழிவு | | 1,325 — |
| | | | இணை நிறுவனம் — $\frac{3}{5}$ பங்கு இலாபம் | | 3,890 — |
| | | | வங்கி | | 11,185 — |
| | 28,000 | — | | | 28,000 — |

வரவுடைய உண்டியல் க/கு

| | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| நெடுங்கிள்ளி | 5,000 | — | வங்கி | 4,950 | — |
| | | | தள்ளுபடி | 50 | — |
| | 5,000 | — | | 5,000 | — |

தள்ளுபடிக் கணக்கு

| | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| வரவுடைய உண்டியல் | 50 | — | இணை நிறுவனம் மாற்றப்படுகிறது | 50 | — |

## வங்கிக் கணக்கு

| | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| வரவுடைய உண்டியல் | 4,950 | — | இணை நிறுவனம் — சரக்கு | 10,000 | — |
| நெடுங்கிள்ளி | 11,185 | — | இணை நிறுவனம்-செலவு | 300 | — |

## இலாப-நட்டக் க/கு

| | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| | | | இணை நிறுவனம் | 5,835 | — |

## நெடுங்கிள்ளியின் ஏடுகளில்
## குறிப்பேடு

| | பற்று ரூ. | | வரவு ரூ. | |
|---|---|---|---|---|
| இணை நிறுவனக் க/கு ப<br>நலங்கிள்ளி<br>(இணை நிறுவனத்துக்காக நலங்கிள்ளி சரக்கு வாங்கியது.) | 10,000 | — | 10,000 | — |
| இணை நிறுவனக் க/கு ப<br>நலங்கிள்ளி<br>(இணை நிறுவனத்துக்காக நலங்கிள்ளி ஏற்ற செலவு,) | 300 | — | 300 | — |
| நலங்கிள்ளி ப<br>செலுத்த வேண்டிய உண்டியல்<br>(நலங்கிள்ளி வரைந்த உண்டியலை ஏற்றனுப்பியது.) | 5,000 | — | 5,000 | — |
| இணை நிறுவனக் க/கு ப<br>நலங்கிள்ளி<br>(நலங்கிள்ளி செலுத்திய தள்ளுபடி.) | 50 | — | 50 | — |

| | ரூ. | ரூ. |
|---|---|---|
| இணை நிறுவனக் க/கு ப<br>கொள்முதல்<br>(நம்மிடமுள்ள சரக்கை இணைநிறுவனத்தில் ஈடுபடுத்தியது.) | 5,000 — | 5,000 — |
| இணை நிறுவனக் க/கு ப<br>வங்கிக் க/கு<br>(பண்டசாலை வாடகை முதலிய செலவுகட்குக் கொடுத்தது.) | 1,600 — | 1,600 — |
| வங்கிக் க/கு ப<br>இணை நிறுவனக் க/கு<br>(இணை நிறுவனத்துக்காக விற்றது) | 26,500 — | 26,500 — |
| கொள் முதல் க/கு ப<br>இணை நிறுவனக் க/கு<br>(இணை நிறுவனச் சரக்கை எடுத்துக் கொண்டது.) | 1,500 — | 1,500 — |
| இணை நிறுவனக் க/கு ப<br>கழிவுக் க/கு<br>(ரு 26,500 மீது 5% கழிவு சேர வேண்டியது.) | 1,325 — | 1,325 — |
| இணை நிறுவனக் க/கு ப<br>இலாப-நட்டக் க/கு<br>நலங்கிள்ளி<br>(இணை நிறுவன இலாபம் 2:3 எனும் விகிதத்தில் பிரிக்கப்பட்டது.) | 9,725 — | <br>3,890 —<br>5,835 — |
| நலங்கிள்ளி ப<br>வங்கிக் க/கு<br>(நலங்கிள்ளிக்குச் சேர வேண்டிய தொகைக்குக் காசோலை விடுத்தது.) | 11,185 — | 11,185 — |

நெடுங்கிள்ளியின் ஏடுகளில் பேரேட்டுக் கணக்குகள்.

இணை நிறுவனக் க/கு.

| ப | | ரூ. | | வ | ரூ. | |
|---|---|---|---|---|---|---|
| நலங்கிள்ளி—சரக்கு | | 10,000 | — | வங்கி—விற்பனை | 26,500 | — |
| நலங்கிள்ளி—செலவு | | 300 | — | கொள்முதல்—சரக்கு எடுத்துக் கொண்டது | 1,500 | — |
| நலங்கிள்ளி—தள்ளுபடி | | 50 | — | | | |
| கொள்முதல் | | 5,000 | — | | | |
| வங்கி—பண்டசாலை வாடகை | 400 | | | | | |
| பிற செலவுகள் | 1,200 | 1,600 | — | | | |
| சழிவு | | 1,325 | — | | | |
| இலாபம்: இலாப-நட்டக் க/கு | 3,890 | | | | | |
| நலங்கிள்ளி | 5,835 | 9,725 | — | | | |
| | | 28,000 | — | | 28,000 | — |

நலங்கிள்ளி

| | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| செலுத்த வேண்டிய உண்டியல் | 5,000 | — | இணை நிறுவனம்—சரக்கு | 10,000 | — |
| வங்கி | 11,185 | — | இணை நிறுவனம்—செலவு | 300 | — |
| | | | இணை நிறுவனம்—தள்ளுபடி | 50 | — |
| | | | இணை நிறுவனம்—இலாபம் $\frac{3}{5}$ பங்கு | 5,835 | — |
| | 16,185 | — | | 16,185 | — |

பிற பேரேட்டுக் கணக்குகளையும் இவ்வாறே தயார் செய்ய வேண்டும்.

வேறு முறை :

இணை நிறுவனக் கணக்கைக் குறிப்பினடிப்படையிலும் தயாரிக்கலாம். இணை நிறுவனத்தில் ஏற்படும் இலாப-நட்டத்தை உணர இணை நிறுவனக் குறிப்புக் கணக்கு (Memorandum of Joint Venture a/c) என்று ஒன்று தொடங்கப் படுகிறது. இது ஒரு பெயரளவுக் கணக்குப் போன்றே தயாரிக்கப் படுகிறது. இது ஒரு குறிப்புக் கணக்காதலால், இது கணக்கேடு களில் ஒரு பகுதியாகக் கருதப்படுவதில்லை. இந் நிலையில் ஒவ்வொருவர் ஏடுகளிலும் இணைநிறுவனக் கணக்குத் தயாரிக்கப் படும். இது ஆள்சார் கணக்குப் போன்று அமைகிறது. இவ்வாறு தயாரிக்கப்படும் இணை நிறுவனக் கணக்கில் தான் ஈடுபட்டுள்ள நடவடிக்கைகளை மட்டிலுமே பதிய வேண்டும். தான் இணை நிறுவனத்தின்பொருட்டு ஏற்ற செலவுகளையும் செலுத்திய தொகையையும் இணை நிறுவனக் கணக்கில் பற்று வைக்கவேண்டும். இணை நிறுவனத்தின்பொருட்டுப் பெற்ற தொகையையும் வரவு களையும் அக் கணக்கில் வரவு வைக்கவேண்டும்.

இணை நிறுவனக் குறிப்புக் கணக்கைத் தயாரிக்கத் தேவையான பதிவுகள்:

ஒரே வகையான கணக்கைத்தான் இணைநிறுவனக் கூட்டாளிகள் அனைவரும் தயாரிப்பர். இணை நிறுவனக் குறிப்புக் கணக்கில் செலவுகளனைத்தும், அச் செலவுகளை ஏற்ற கூட்டாளி களின் பெயரால் பற்று வைக்கப்படும். ஒரு கூட்டாளி, சரக்கு அனுப்பி யிருப்பின், இணைநிறுவனக் குறிப்புக் கணக்கில் பற்றும் அச் சரக்கை அனுப்பிய கூட்டாளியின் பெயரால் பற்றும் வைக்கப் படுகிறது.

எக் கூட்டாளிக்காவது கழிவு கொடுக்க வேண்டியிருப்பின், இக் குறிப்பு இணை நிறுவனக் கணக்கில் கழிவு பெறும் கூட்டாளியின் பெயரால், பற்று வைக்கவேண்டும்.

எக் கூட்டாளி சரக்கை விற்றிருக்கிறாரோ அவர் பெயரால் இணை நிறுவனக் குறிப்புக் கணக்கில் வரவு வைக்கவேண்டும்.

எக் கூட்டாளியாவது சரக்கை எடுத்துக் கொண்டால், அவர் பெயரால் இணை நிறுவனக் குறிப்புக் கணக்கில் வரவு வைக்க வேண்டும்.

இலாபம் ஏற்படின், குறிப்பு இணை நிறுவனக் கணக்கில் பற்றும், இணை நிறுவனக் கூட்டாளிகள் ஒவ்வொருவர் கணக்கிலும் ஒப்புக் கொள்ளப்பட்ட விகிதத்தில் வரவும் வைக்கவேண்டும்.

பின்னர் ஒவ்வொருவர் ஏட்டிலும் பிற கூட்டாளியுடன் இணை நிறுவனக் கணக்கு என்று ஒன்று தயாரிக்க வேண்டும். அதாவது சென்ற எடுத்துக் காட்டில் நலங்கிள்ளி தனது ஏட்டில் 'நெடுங்கிள்ளியுடன் இணை நிறுவனக் கணக்கு' என்றும், நெடுங்கிள்ளி தனது ஏட்டில் 'நலங்கிள்ளியுடன் இணை நிறுவனக் கணக்கு' என்றும் தயாரிப்பர். அதைக் கீழ்க்கண்ட வகையில் தயாரிக்க வேண்டும்.

தான் ஏற்ற செலவுகள், வாங்கிய அல்லது தன்னிடமுள்ளதை இணை நிறுவனத்துக்குப் பயன்படுத்திய சரக்கின் மதிப்பு, தான் கூட்டாளிக்கு அனுப்பிய தொகை அல்லது ஏற்ற உண்டியல், தனக்குச் சேரவேண்டிய கழிவுத் தொகை முதலியவற்றை இணை நிறுவனக் கணக்கில் பற்று வைக்கவேண்டும். தான் விற்றது, பிற கூட்டாளியிடமிருந்து பெற்றது—போன்றவற்றை இக் கணக்கில் வரவுவைக்கவேண்டும். குறிப்பு இணை நிறுவனக் கணக்கு இலாபத்தை உணர்த்தியிருப்பின், தனக்குரிய இலாபத்தை மட்டில் இப்பொழுது தயாரிக்கப்படும் இணைநிறுவனக் கணக்கில் பற்று வைக்கவேண்டும்; நட்டமாயின் தன் பங்கிற்கான நட்டத்தை மட்டில் இக் கணக்கில் வரவு வைக்கவேண்டும். இப்பொழுது இக் கணக்கு வரவிருப்புக் காட்டுமாயின், தான் அத் தொகையைக் கூட்டாளியிடமிருந்து பெற வேண்டுமென்றும், பற்றிருப்புக் காட்டுமாயின் தான் அத் தொகையைக் கூட்டாளிக்கு அனுப்ப வேண்டும் என்றும் பொருள்.

மேற்கூறிய விளக்கங்களிலிருந்து எடுத்துக்காட்டு 68-ல் குறிப்பிட்ட கணக்கை இம் முறையில் தயாரிக்கலாம்.

இணை நிறுவனக் குறிப்புக் கணக்கு

ப | ரூ. | | வ | ரூ. |
---|---|---|---|---|---
நலங்கிள்ளி—சரக்கு வாங்கியது | 10,000 | — | நெடுங்கிள்ளி — விற்பனை | 26,500 | —
நலங்கிள்ளி—செலவு | 300 | — | நெடுங்கிள்ளி—சரக்கு எடுத்துக் கொண்டது | 1,500 | —
நெடுங்கிள்ளி — தள்ளுபடி | 50 | | | |
நெடுங்கிள்ளி—சரக்கு கொடுத்தது | 5,000 | — | | |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| நெடுங்கிள்ளி — பண்டசாலை வாடகை 400 பிற செலவுகள் 1,200 | 1,600 | — | | | |
| நெடுங்கிள்ளி — கழிவு | 1,325 | — | | | |
| இலாபம் : நலங்கிள்ளி 5,835 நெடுங்கிள்ளி 3,890 | 9,725 | — | | | |
| | 28,00 | — | | 28,000 | — |

நலங்கிள்ளியின் ஏட்டில், நெடுங்கிள்ளியின் கணக்கு இம்முறையில் கீழ்க்கண்டவாறிருக்கும்.

நெடுங்கிள்ளியுடன் இணை நிறுவனக் க/கு

| | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| வங்கி—சரக்கு வாங்கியது | 10,000 | — | வரவுடைய உண்டியல் | 5,000 | — |
| வங்கி — செலவுகள் | 300 | — | வங்கி | 11,185 | — |
| தள்ளுபடி | 50 | — | | | |
| இலாப - நட்டக் — $\frac{3}{5}$ பங்கு நிறுவன இணை இலாபம் | 5,835 | — | | | |
| | 16,185 | — | | 16,185 | — |

நெடுங்கிள்ளியின் ஏட்டில், நலங்கிள்ளியின் கணக்கு கீழ்க் கண்டவாறு இருக்கும்.

நலங்கிள்ளியுடன் இணைநிறுவனக் க/கு

| | | ரூ. | | | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|---|
| செலுத்த வேண்டிய உண்டியல் | | 5,000 | — | வங்கி—விற்பனை | | 25,500 | — |
| கொள்முதல்— சரக்கு ஈடு படுத்தியது | | 5,000 | — | கொள்முதல் சரக்கு எடுத்துக் கொண்டது | | 1,500 | — |
| வங்கி— பண்டசாலை வாடகை | 400 | | | | | | |
| பிற செலவுகள் | 1,200 | 1,600 | — | | | | |
| கழிவு | | 1,325 | — | | | | |
| இலாப-நட்டக் க/கு $\frac{2}{5}$ பங்கு இணை நிறுவன இலாபம் | | 3,890 | — | | | | |
| வங்கி | | 11,185 | — | | | | |
| | | 28,000 | — | | | 28,000 | — |

எடுத்துக் காட்டு 69:

ஒரு கூட்டுப் பங்குக் கம்பனி வெளியிடும் பங்குகளை ஒப்புறுதி செய்யும்பொருட்டு இளங்கோவும் செங்குட்டுவனும் இணை நிறுவனத்தில் ஈடுபட்டனர். ஏற்படும் இலாப-நட்டத்தை 3:2 எனும் விகிதத்தில் பிரித்துக்கொள்ள ஒப்பினர். பூம்புகார் லிமிடெட் எனும் கம்பனி பங்கொன்று ரூ. 100 மதிப்புள்ள 10,000 சாதாரணப் பங்குகளையும் ரூ. 100 மதிப்புள்ள 7% சலுகைப் பங்கு 5,000-மும் வெளியிட்டது. எல்லாப் பங்குகளையும் இளங்கோ செங்குட்டுவன் இணை நிறுவனம் கீழ்க்கண்ட நிபந்தனைகளுடன் ஒப்புறுதி செய்தது.

1. கம்பனியின் பதிவுச் செலவுகள் அனைத்தையும் இணை நிறுவனம் ஏற்றுக் கொள்வது.
2. பங்கு வெளியிடும் செலவுகளையும் ஏற்றுக் கொள்வது.
3. எல்லாப் பங்குகளையும் ஒப்புறுதி செய்வது.

இதன் மறுபயனாக (Consideration) ரூ. 100 மதிப்புள்ள 500 சாதாரணப் பங்குகளை ஒதுக்குவதாகவும் சலுகைப் பங்குகட்கு $2\frac{1}{2}$% ஒப்புறுதிக் கழிவு வழங்குவதாகவும் பூம்புகார்க் கம்பனி ஒப்புக் கொண்டது.

கீழ்க்கண்ட செலவினங்களை இளங்கோ ஏற்றார்.

| | ரூ. |
|---|---|
| தகவலறிக்கை அச்சிடுதலும் வெளியிடுதலும் | 2,000 |
| வல்லுநர்கள் (Experts), மதிப்பீட்டாளர்கள் இவர்கட்கான கட்டணம் | 1,000 |
| ஒதுக்குக் கடிதங்கள், பங்குச் சான்றிதழ் முதலியன அச்சடித்தல் | 2,500 |
| சலுகைப் பங்குகளை விற்க $1\frac{1}{4}$% வீதம் பங்குத்தரகர் கட்குக் (Brokers) கொடுத்த கழிவு. | • |

செங்குட்டுவன் ஏற்ற செலவினங்கள் :

| | | |
|---|---|---|
| வழக்குரைஞர் கட்டணம் | ... | 1.200 |
| அலுவலக வாடகை | ... | 1,800 |
| அமைப்பு ஆவணம், நடைமுறை விதிகள் முதலியவை அச்சடித்தல் | ... | 3,500 |
| அலுவலக ஊதியம் | ... | 2,000 |
| பிற செலவினங்கள் | ... | 1,000 |

சலுகைப் பங்குகளில் 600-க்கும் சாதாரண பங்குகளில் 400-க்கும் விண்ணப்பங்கள் வராமற் போகவே இணைநிறுவனம் இவற்றை ஏற்க வேண்டியதாயிற்று. செங்குட்டுவன் சலுகைப் பங்குகட்கான தொகையையும், இளங்கோ சாதாரண பங்கு கட்கான தொகையையும் கொண்டு வந்தனர். இதனைக் கொண்டு விண்ணப்பிக்கப் பெறாப் பங்குகளை வாங்கினர்.

ஒப்புறுதி ஒப்பந்தத்தின்படி, பூம்புகார்க் கம்பனி ஒப்புறுதிக் கழிவையும் 500 பங்குகளையும் வழங்கினர். செங்குட்டுவன் இவற்றைப் பெற்றுக் கொண்டார். இணை நிறுவனம் தம் கையிலுள்ள பங்குகள் அனைத்தையும் விற்றது. இளங்கோ தான் விற்ற ரூ. 900 சாதாரண பங்குகட்கு ரூ. 80,000 பெற்றார். செங்குட்டுவன் ரூ. 600 சலுகைப் பங்குகளை விற்றதில் ரூ 48,000 பெற்றார்.

1. இணை நிறுவனக் குறிப்புக் கணக்கையும், இருவர் ஏடுகளிலும் பேரேட்டுக் கணக்குகளையும் தயாரிக்க,

## இணைநிறுவனக் குறிப்புக் கணக்கு

| ப | | ரூ. | | வ | ரூ. | |
|---|---|---|---|---|---|---|
| இளங்கோ—<br>தகவலறிக்கை 2,000<br>வல்லுநர் கட்டணம் 1,000<br>ஒதுக்குக் கடிதம், பங்குச் சான்றிதழ் 2,500<br>தரகு 5,500 | | 11,000 | — | செங்குட்டுவன்—<br>ஒப்புறுதிக் கழிவு | 12,500 | — |
| செங்குட்டுவன் —<br>வழக்குரைஞர் 1,200<br>வாடகை 1,800<br>அமைப் பாவணம் 3,500<br>ஊதியம் 2,000<br>பிற செலவு 1,000 | | 9,500 | — | இளங்கோ—<br>900 சாதாரணப் பங்குகள் விற்பனை | 80,000 | — |
| செங்குட்டுவன்—<br>விண்ணப்பிக்கப் பெறுச் சலுகைப் பங்குகள் | | 60,000 | — | செங்குட்டுவன்—<br>600 சலுகைப் பங்குகள் விற்பனை | 48,000 | — |
| இளங்கோ—<br>விண்ணப்பிக்கப் பெறுச் சாதாரணப் பங்குகள் | | 40,000 | — | | | |
| இலாபம் :<br>இளங்கோ $\frac{3}{5}$ 12,000<br>செங்குட்டுவன் $\frac{2}{5}$ 8,000 | | 20,000 | — | | | |
| | | 1,40,500 | — | | 1,40,500 | — |

குறிப்பு 1 : 4,400 சலுகைப் பங்குகட்கே விண்ணப்பங்கள் வந்துள்ளதால், அதற்கான தொகை மீது இளங்கோ கொடுத்த தரகுத் தொகை கணக்கிடப்படுகிறது.

2 ஒப்புறுதி அளித்ததற்கு மறுபயனாகக் கம்பனி பங்குகளை வழங்கிய போழ்து, பதிவொன்றும் செய்யக்கூடாது.

## இளங்கோ ஏடுகளில்

ப செங்குட்டுவனுடன் இணை நிறுவனக் கணக்கு வ

| | | ரூ | | ரூ. |
|---|---|---|---|---|
| வங்கி— தகவலறிக்கை | 2,000 | | வங்கி—900 சாதாரண பங்குகள் விற்பனை | 80,000 |
| வல்லுநர் கட்டணம் | 1,000 | | | |
| ஒதுக்குக் கடிதம், பங்குச் சான்றிதழ் | 2,500 | | | |
| தரகு | 5,500 | 11,000 | | |
| வங்கி— விண்ணப்பிக்கப் பெறுச் சாதாரணப் பங்குகள் | | 40,000 | | |
| இலாப நட்டக் கணக்கு — $\frac{3}{5}$ பங்கு | | 12,000 | | |
| வங்கி | | 17,000 | | |
| | | 80,000 | | 80,000 |

## செங்குட்டுவன் ஏடுகளில்

இளங்கோவுடன் இணை நிறுவனக் கணக்கு

| | | ரூ. | | ரூ. |
|---|---|---|---|---|
| வங்கி— வழக்குரைஞர் | 1,200 | | வங்கி—ஒப்புறுதிக் கழிவு | 12 500 |
| வாடகை | 1,800 | | வங்கி—600 சலுகைப் பங்குகள் விற்பனை | 48,000 |
| அமைப் பாவணம் | 3 500 | | வங்கி | 17,000 |
| ஊதியம் | 2,000 | | | |
| பிறசெலவு | 1,000 | 9,500 | | |
| வங்கி— விண்ணப்பிக்கப் பெறுச் சலுகைப் பங்குகள் | | 60,000 | | |
| இலாப நட்டக் கணக்கு $\frac{2}{5}$ பங்கு | | 8,000 | | |
| | | 77,500 | | 77,500 |

## தனியேடுகளில் பதியும் முறை
## (Maintaining Separate Books)

இணை நிறுவன நடவடிக்கைகளைத் தனியேடுகளில் பதியு முறையுமுண்டு. அந் நிலையில், ஒவ்வொரு கூட்டாளி போடும் தொகைகளை இணைவங்கிக் கணக்கு (Joint Bank Account) ஒன்று தொடங்கி அதில் செலுத்துவர். இணை நிறுவனத்துக்கென சரக்கு வாங்கவும் பிற செலவுகளை மேற் கொள்ளவும் இக் கணக்கு பயன்படுத்திக் கொள்ளப்படும். இணை நிறுவனக் கணக்கு முன் விளக்கியவாறே தயாரிக்கப்படும். இம் முறையில் தேவையான பதிவுகளைக் கீழே காண்போம்.

(1) இணை நிறுவனக் கூட்டாளிகள் பணஞ் செலுத்தும் போழ்து;

இணைவங்கிக் க/கு...ப
கூட்டாளிக் க/கு

(2) இணை நிறுவனத்துக்கெனச் சரக்கு வாங்கும் போழ்து;

இணை நிறுவனக் க/கு...ப
இணை வங்கிக் க/கு

(3) செலவுகளை மேற் கொள்ளும் போழ்து:

இணை நிறுவனக் க/கு...ப
இணை வங்கிக் க/கு

(4) இணை நிறுவனச் செலவுகளை எக் கூட்டாளியாவது ஏற்கும் போழ்து:

இணை நிறுவனக் க/கு...ப
(குறிப்பிட்ட) கூட்டாளிக் க/கு

(5) சரக்கு விற்பனையைப் பதிய அல்லது இணை நிறுவனப் பணி முடிவுற்றதும் ஒப்பந்தப் பணம் பெறும் போழ்து:

இணை வங்கிக் க/கு...ப
இணை நிறுவனக் க/கு

இப்பொழுது இணை நிறுவனக் கணக்கு, ஏற்பட்ட இலாபம் அல்லது இழப்பை உணர்த்தும். இதனை ஒப்புக் கொண்ட விகிதத்தில் கூட்டாளிகள் கணக்கிற்கு எடுத்துச் சென்று கூட்டு நிறுவனக் கணக்கை முடித்திடலாம்.

ஒவ்வொரு கூட்டாளியின் கணக்கு தனக்குச் சேரவேண்டிய தொகையை அல்லது தான் கொடுக்க வேண்டிய தொகையை உணர்த்தும். பெற வேண்டியவரிடமிருந்து தொகைகளைப் பெற்றுக் கொடுக்க வேண்டியவர்கட்கு அவர்களின் கணக்கு காட்டும் தொகைகளைக் கொடுத்துவிடின், வங்கிக் கணக்கு முடிவுறும். இப்பொழுது ஒவ்வொருவர் ஏடுகளிலும் இணை நிறுவன முதலீட்டுக் கணக்கு (Joint venture Investment Account) என்று ஒன்றைப் புதிதாகத் தயாரிக்க வேண்டும் இதில் இணை நிறுவனத்தின் பொருட்டுத் தான் செலுத்திய தொகைகளைப் பற்று வைக்க வேண்டும். இணை நிறுவனத்திடமிருந்து தாம் பெறுந் தொகையை இக் கணக்கில் வரவு வைக்க வேண்டும். இணை நிறுவனச் சரக்கு அல்லது சொத்தைத் தாம் எடுத்துக் கொண்டாலும் இக் கணக்கில் வரவு வைக்கவேண்டும். இக் கணக்கு வரவிருப்பைக் காட்டு மாயின் அது தன் பங்கு இலாபம் என்பதையும், பற்றிருப்பைக் காட்டுமாயின் தன் பங்கு நட்டமென்பதையும், உணரலாம். இவ்விலாப அல்லது நட்டம் இலாப-நட்டக் கணக்கிற்கு எடுத்துச் செல்லப்படும். தேவையான பதிவு:

இலாபமாயின்:

இணை நிறுவன முதலீட்டுக் க/கு . ப

இலாப-நட்டக் க/கு

நட்டமாயின்,

இலாப-நட்டக் க/கு...ப

இணை நிறுவன முதலீட்டுக் க/கு

இக் கணக்கு உணர்த்தும் இலாபம் அல்லது நட்டமும் இணை நிறுவன ஏடுகளில் தயாரிக்கப்படும் இணை நிறுவனக் கணக்கு காட்டும் இலாபம் அல்லது நட்டமும் ஒரே தொகையாகத்தான் இருக்கும்.

கீழ்க்கண்ட எடுத்துக் காட்டு இதனை விளக்கும்.

எடுத்துக் காட்டு 70 :

இலக்குவனும் இளவழகனும் மர வியாபாரத்தில் ஈடுபட இணை நிறுவனம் அமைத்தனர். இலக்குவன் ரூ. 20 000-மும் இளவழகன் ரூ. 10,000-மும் இவ் வியாபாரத்திற்குச் செலுத்தினர். இதனை வைத்து வங்கியில் இணைக் (கணக்கு Joint a/c) தொடங்கினர். முதல் விகிதத்திலேயே இலாப-நட்டத்தைப்

பிரித்துக் கொள்ள இசைந்தனர். ரூ. 20,200 மதிப்புள்ள மரத்தினை வாங்கினர். பொறி வகைகள் முதலியவற்றை ரூ.1000-க்கு வாடகைக்கு எடுத்தனர். கீழ்க் குறிப்பிட்ட செலவுகளை மேற் கொண்டனர்: கூலி ரூ. 3,500; இட வாடகை ரூ. 2,220; லாரிச் சத்தம் 3,700; இலக்குவன் பழுது பார்ப்பதற்காக ரூ. 280 கொடுத்தார். மரங்கள் ரூ. 43,700-க்கு விற்கப்பட்டன. ரூ. 1,300 மதிப்புள்ள மரச் சட்டங்களை இளவழகன் எடுத்துக்கொண்டார்.

இணை நிறுவனக் கணக்கு, இணை வங்கிக் கணக்கு, இளவழகன் இலக்குவன் கணக்குகளைத் தயாரிக்க. இருவர் ஏடுகளிலும் இணை நிறுவன முதலீட்டுக் கணக்குகளையும் தயாரிக்க.

விடை :

ப இணை நிறுவனக் கணக்கு வ

| | | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|---|
| வங்கி—மரம் வாங்கியது | | 20,200 | — | வங்கி—விற்பனை | 43,700 | — |
| வங்கி— | | | | இளவழகன்—மரம் எடுத்துக் கொண்டது. | 1,300 | — |
| பொறி (வாடகை) | 1,000 | | | | | |
| கூலி | 3,500 | | | | | |
| இட வாடகை | 2,220 | | | | | |
| லாரிச் சத்தம் | 3,700 | 10,420 | — | | | |
| இலக்குவன் — பழுதுபார்க்கும் செலவு | | 280 | — | | | |
| இலாபம் : | | | | | | |
| இலக்குவன் $\frac{2}{3}$ | 9,400 | | | | | |
| இளவழகன் $\frac{1}{3}$ | 4,700 | 14,100 | — | | | |
| | | 45,000 | — | | 45,000 | — |

### இணைவங்கிக் கணக்கு

| | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| இலக்குவன் | 20,000 | — | இணை நிறுவனம் —மரம் வாங்கியது | 20,200 | — |
| இளவழகன் | 10,000 | — | இணை நிறுவனம்-பொறி வாடகை 1,000 கூலி 3,500 இட வாடகை 2,220 லாரிச் சத்தம் 3,700 | 10,420 | — |
| இணை நிறுவனம் — விற்பனை | 43,700 | — | இலக்குவன் | 29,680 | — |
| | | | இளவழகன் | 13,400 | — |
| | 73,700 | — | | 73,700 | — |

### இலக்குவன் கணக்கு

| | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| வங்கி | 29,680 | — | வங்கி | 29,000 | — |
| | | | இணை நிறுவனம்-பழுதுபார்க்குஞ் செலவு | 280 | — |
| | | | இணை நிறுவனம் — $\frac{2}{3}$ பங்கு இலாபம் | 9,400 | — |
| | 29,680 | — | | 29,680 | — |

இளவழகன் கணக்கு

| | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| இணைநிறுவனம் ... மரம் எடுத்துக் கொண்டது. | 1,300 | -- | வங்கி | 10,000 | — |
| வங்கி | 13 400 | -- | இணைநிறுவனம் — $\frac{1}{3}$ பங்கு இலாபம் | 4,700 | — |
| | 14,700 | — | | 14,700 | — |

இலக்குவன் ஏடுகளில், இணைநிறுவன முதலீட்டுக் கணக்கு கீழ்க்கண்டவாறிருக்கும்

இணைநிறுவன முதலீட்டுக் க/கு

| | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| வங்கி | 20,000 | — | வங்கி | 29,680 | — |
| வங்கி — பழுது பார்க்குஞ் செலவு | 280 | — | | | |
| இலாப-நட்டக் க/கு —இலாபம் | 9,400 | — | | | |
| | 29,680 | — | | 29,680 | — |

இளவழகன் ஏடுகளில்

இணைநிறுவன முதலீட்டுக் க/கு

| | ரூ. | | | ரூ. | |
|---|---|---|---|---|---|
| வங்கி | 10,000 | — | இணைநிறுவனம்-மரம் எடுத்துக் கொண்டது | 1,300 | — |
| இலாப-நட்டக் க/கு இலாபம் | 4,700 | — | வங்கி | 13,400 | — |
| | 14,700 | — | | 14,700 | — |

## வினாக்கள்

1. இணை நிறுவனம் என்றால் என்ன?
2. இணை நிறுவனம் எவ்வாறு அனுப்பீட்டினின்றும் வேறுபடுகின்றது?
3. இணை நிறுவன நடவடிக்கைகளை எவ்வெம் முறைகளில் பதியலாம்?

## பயிற்சி

1. அப்பரும் சுந்தரரும் ரூ. 2,00,000-க்குத் திரைப்படம் (Film) எடுத்துத்தர இணைநிறுவனத்தில் ஈடுபட்டனர். அப்பர் ரூ. 90,000 -ம், சுந்தரர் ரூ. 70,000 -ம் முதல் வைக்கின்றனர். இத் தொகைகளை இணைவங்கிக் கணக்கு ஒன்று தொடங்கி அதில் செலுத்துகின்றனர். கீழ்க் கண்டவாறு செலவுகளை ஏற்றனர்.

| | | ரூ. |
|---|---|---|
| கருவிகள் | ... | 30,000 |
| புகைப்படப் பொறி (Camera) | ... | 10,000 |
| நடிகர்கள் கட்டணம் | ... | 1,00,000 |
| கூலியும் பிறசெலவுகளும் | ... | 5,000 |

வங்கிக் கணக்கிலிருந்து எடுத்து இவை செலவழிக்கப்பட்டன. அப்பர் தன்னிடமுள்ள ரூ. 7,000 மதிப்புள்ள காட்சி அமைப்புகளைக் கொடுத்தார். புகைப்படப் பொறியைச் சுந்தரர் ரூ. 5,000-க்கு எடுத்துக் கொண்டார். காட்சி அமைப்புகளை ரூ. 2,000 மதிப்பிட்டு அப்பர் தாமே எடுத்துக் கொண்டார். படம் எடுத்து முடிந்ததும் ரூ. 2,00,000 ஐயும் பெற்றனர்.

இணை நிறுவனத்தின் ஏடுகளிலும், அப்பர் சுந்தரர் இருவர் ஏடுகளிலும் தேவையான கணக்குகளைத் தயாரிக்க.

2. வச்சிரமும் வேலாயுதமும் இணைநிறுவனத்தில் ஈடுபடவும் ஏற்படும் இலாப—இழப்பை 3:2 விகிதத்தில் பிரித்துக் கொள்ளவும் ஒப்புக்கொண்டனர். ரூ 7,700-க்குச் சரக்கு வாங்கி, வச்சிரம் வேலாயுதத்துக்கு அனுப்பினார். லாரிக் கட்டணம் ரூ 350 வச்சிரம் செலுத்தினார். வேலாயுதம் தன்னிடமுள்ள சரக்கிலிருந்து ரூ. 4,300-க்கானவற்றையும் இணைநிறுவன வணிகத்தில் பயன்

படுத்தினர். அலுவலக வாடகை ரூ 200; ஊதியங் கொடுத்தது ரூ 400; பிற செலவுகள் ரூ. 450-ம் ஏற்ருர். ரூ. 22,300-க்கு எல்லாப் பொருள்களேயும் அவர் விற்ருர். விற்பனேயில் 5% கழிவு வேலாயுதத்துக்குச் சேரவேண்டியது. வங்கிப் பணவிடை மூலம் கணக்கை வேலாயுதம் தீர்க்கிருர்.

இருவர் ஏடுகளிலும் தேவையான பதிவுகளேயும் பேரேட்டுக் கணக்குகளேயும் தயாரிக்கவும்.

3. கடலூர் மாணிக்கசாமியும் மதுரை இரத்தினமும் கோலாலம்பூரில் உள்ள தங்கள் முகவர் கஸ்தூரி—ரெங்கனுக்குக் கைலிகளே அனுப்பி வணிகஞ் செய்ய இணேநிறுவனத்தில் ஈடுபட்டனர். 3:1 எனும் விகிதத்தில், ஏற்படும் இலாப—நட்டத்தைப் பகிர்ந்து கொள்ளவும் ஒப்பினர். கைலி ஒன்று ரூ. 10 அடக்க விலேயில் 1,000 கைலிகளே மாணிக்கசாமி அனுப்பினர். கப்பல் கட்டணமும் பிற செலவுகளும் ரூ. 2,500 ஆயின. இரத்தினம் 200 கைலிகளே ஒன்று ரூ. 12 வீதம் அனுப்பினர். கப்பல் கட்டணமும் பிற செலவுகளும் ரூ. 500 ஆயின.

எல்லாவற்றையும் ரூ. 24,000-க்குக் கஸ்தூரி ரெங்கன் விற்ருர். கடை வாடகை ரூ. 300; விளம்பரச் செலவு ரூ 200; பிற செலவுகள் ரூ. 150; அவர்க்கு 8% கழிவு விற்பனேயில் உண்டு. விற்பனேக் கணக்கறிக்கையுடன் தொகையையும் மாணிக்க சாமிடம் அனுப்புகிருர்.

மாணிக்கசாமி, இரத்தினம் இருவர் ஏடுகளிலும் தேவையான கணக்குகளேத் தயாரிக்கவும்.

4. பாலுவும் வேலுவும் இணேநிறுவனம் அமைத்துக் கட்டடம் கட்டித்தர தீர்மானித்தனர். ஏற்படும் இலாப—இழப்பில் 2:1 விகிதத்தில் பிரித்துக் கொள்ளவும் உடன்பட்டனர்.

| | | ரூ. |
|---|---|---|
| செங்கல், இரும்பு முதலியவை (பாலு கொடுத்தது) | ... | 50,000 |
| கட்டடக்கலே வல்லுநர் கட்டணம் (பாலு கொடுத்தது) | ... | 5,000 |
| கூலி, வண்ணப் பூச்சு முதலியவை (வேலு கொடுத்தது) | ... | 25,000 |

கட்டடம் முடிவுற்றதும் அதற்கான ஒப்புக்கொள்ளப்பட்ட தொகையான ரூ. 1,00,000 பாலு பெற்றார். இரும்பு, மரப் பொருள்கள் ரூ. 2,500-க்கானவற்றை வேலு எடுத்துக்கொண்டார்.

இவற்றைக் குறிப்பு இணைநிறுவனக் கணக்கில் (Memorandum of Joint Venture) பதிவு செய்து, பின்னர் இருவர் ஏடுகளிலும் இணைநிறுவனக் கணக்கையும் பிற பேரேட்டுக் கணக்குகளையும் தயாரிக்க.

5. இரங்கூன் யூநூாவும் சென்னை உருத்திரனும் இணை நிறுவனத்தில் கீழ்க் கண்ட நிபந்தனைகளுடன் ஈடுபடுகின்றனர்.

(i) யூநூா இரங்கூனிலிருந்து மரம் சென்னைக்கு அனுப்புவது. சென்னையிலிருந்து உருத்திரன் கைலி (லுங்கி)களை இரங்கூனுக்கு அனுப்புவது.

(ii) ஒவ்வொருவரும் விற்பனைத் தொகையில் 5% கழிவு (பிணைக் கழிவு உட்பட) பெற வேண்டியது.

(iii) ஏற்படும் இலாப-நட்டத்தில் சமமாகப் பகிர்ந்து கொள்வது.

1-3-1971-ல் உருத்திரன் 1000 கைலிகளைக் கைலியொன்று ரூ. 12 வீதத்தில் வாங்கி அனுப்பினர். கப்பல் கட்டணம் ரூ. 1,200; கட்டுச் செலவுகளும் பிற செலவுகளும் ரூ. 300; ஈட்டுறுதி ரூ. 200-ம் செலவாயின. இவற்றிற்கு இரங்கூனில் துறைமுகச் செலவு ரூ. 200 ஆயிற்று.

அதே நாளில் யூநூா தேக்குமரம் டன் ஒன்று ரூ 1,000 வீதம் 100 டன் மரம் ஏற்றனுப்பினர். கப்பல் கட்டணம் ரூ. 8,000; துறைமுகக் கட்டணம் ரூ. 2,000-மும் வண்டிச் செலவு ரூ. 1,000-மும் பண்டசாலை வாடகை ரூ. 2,000-மும் ஈட்டுறுதி ரூ. 1,000-மும் உருத்திரன் செலு[illegible]னர். 30-8-71-ல் 90 டன் தேக்கு மரத்தை டன் ஒன்று ரூ. [illegible]500 வீதம் விற்றார். மீதியுள்ளவற்றை மரம் பண்டசாலைக்கு வந்து சேர்ந்த விலையின் அடிப்படையில் உருத்திரன் எடுத்துக் கொண்டார்.

வந்த கைலிகளில் 950 கைலிகளை ரூ. 20 வீதத்தில் யூநூா விற்றார். விளம்பரச் செலவு ரூ. 300 ஆயிற்று. கடைக்கு வந்து சேர்ந்த விலையினடிப் படையில் 50 கைலிகளைத் தான் எடுத்துக் கொண்டார்.

இருவர் ஏடுகளிலும் இணைநிறுவனக் கணக்கு, இணைநிறுவனக் கூட்டாளிகளின் கணக்கு, முதலியவற்றைத் தயாரிக்கவும். கணக்கு 30-8-71-ல் தீர்க்கப்படுவதாகக் கொள்ளவும்.

6. ஏலத்தில் பொருள்களை வாங்கி விற்கும் வாணிகத்தில் இணைநிறுவனம் அமைத்து, ஏற்படும் இலாப—இழப்பில் 3:2 எனும் விகிதத்தில் பகிர்ந்துகொள்ள எழிலனும் பொழிலனும் இசைந்தனர். ஏலத்தில் பொருள்களை வாங்க எழிலன் நிதி வழங்குவது என்றும், அவற்றை விற்கும் பொறுப்பைப் பொழிலன் ஏற்றுக் கொள்வது என்றும் தீர்மானிக்கப்பட்டது. வட்டி ரூ. 400 எழிலனுக்குச் சேர வேண்டியது.

ரூ. 40,000-க்குப் பொருள்களை ஏலத்தில் எடுத்துப் பொழிலனிடம் அனுப்பினார். மூன்று திங்கள் தவணையில் ரூ. 20,000-க்கு வரைந்த உண்டியலைப் பொழிலன் ஏற்றனுப்பினார். இவ்வுண்டியலை உடனே வங்கியில் 6% ல் தள்ளுபடிக்கு மாற்றினார். கீழ்க்கண்ட செலவுகளைப் பொழிலன் ஏற்றார்.

இரயில் கட்டணம் ரூ. 400; வண்டிச் சத்தம் ரூ. 300; கழிவு ரூ. 500; பல்வகைச் செலவுகள் ரூ. 250. பொருள்கள் ரூ. 60,000-க்கு விற்கப்பட்டன. ரூ. 500 மதிப்புள்ள பொருள்களைப் பொழிலன் எடுத்துக்கொண்டார். மீதி அனுப்ப வேண்டிய தொகையைக் காசோலை மூலம் பொழிலன் அனுப்பிவிட்டார்.

குறிப்பு இணை நிறுவனக் கணக்கைத் தயாரித்து எழிலன், பொழிலன் இருவர் ஏடுகளிலும் தேவையான பேரேட்டுக் கணக்குகளையும் தயாரிக்கவும்.

7. கலைப் பொருள்களை வாங்கி விற்கும் நோக்குடன் அன்புமணியும் அந்தோணியும் இணைநிறுவனத்தில் ஈடுபட்டனர். விற்பவர்க்கு 5% கழிவுண்டு.

1-7-71 ல் ரூ. 7,500 மதிப்புள்ள பொருள்களை அன்புமணி வாங்கினார். ரூ. 5,000 மதிப்புள்ள பொருள்களை அந்தோணி வாங்கினார். இதற்கென ரூ. 200 அன்புமணியும் ரூ. 150 அந்தோணியும் தரகு தொகை (Brokerage) கொடுத்தனர்.

ரூ. 5,000-க்கான கலைப் பொருள்களை ரூ. 9,000-க்கு விற்றார் அன்புமணி. ஏற்ற விற்பனைச் செலவு ரூ. 300. ரூ. 2,500-க்கான வற்றை அந்தோணியிடம் அனுப்பிவிட்டார். கட்டணமும் ஈட்டுறுதியும் அவர் செலுத்தியது ரூ. 200.

தான் வாங்கியவற்றில் ரூ. 4,000 மதிப்புள்ளவற்றை ரூ. 6,000-க்கும், அன்புமணி அனுப்பிய கலப் பொருள்களை ரூ. 3,200-க்கும் அந்தோணி விற்றார். அவர் செய்த விற்பனைச் செலவு ரூ. 300.

31-12-1971-ல் அந்தோணியிடம் விற்கப்படாமலிருந்த ரூ. 1,000 மதிப்புள்ள கலப் பொருள்களை அதே மதிப்பில் தான் எடுத்துக் கொள்வதாக அன்புமணி கூற, அன்றே கணக்கும் தீர்க்கப்பட்டது.

இருவர் ஏடுகளிலும் இணைநிறுவனக் கணக்கையும் இணை நிறுவனக் கூட்டாளிகள் கணக்குகளையும் தயாரிக்க.

8. மரம் வாங்கிப் பலகைகளாக இழைத்து வணிகஞ் செய்ய மாதவனும் ஆதவனும் இணைநிறுவனம் அமைத்தனர். மாதவன் ரூ. 2,00,000 முதல் வைக்கவும் அத் தொகைமீது கணக்குத் தீர்க்கப் படும் நாள் வரை 6% ஆண்டு வட்டி தரவும் ஒப்புக் கொள்ளப் பட்டது. ஆதவன் இப் பணி முழுவதையும் செய்ய வேண்டியது. திங்கள் ரூ. 500 வீதம் ஊதியம் இதற்கெனப் பெற்றுக் கொள்ள வேண்டியது. விற்பவர்க்குக் கழிவு 3% உரியது.

ரூ. 1,50,000 மதிப்பு மரங்களை மாதவன் வாங்கியனுப்பினார். மீதி ரூ. 50,000-ஐ ஆதவனிடம் அனுப்பினார். ரூ. 25,000 மதிப்புள்ள பொறிகளை ஆதவன் இணைநிறுவனத்திற்கு வாங்கினார். ஆதவன் ஏற்ற பிற செலவினங்கள் :

| | | ரூ. |
|---|---|---|
| அறுப்பு, இழைப்புக் கூலி | ... | 60,000 |
| லாரி லாடகை, சுமைகூலி முதலியவை | ... | 12,000 |
| பொறி பராமரிப்புச் செலவு | ... | 2,000 |
| மரவாடி வாடகை | ... | 2,500 |
| ஈட்டுறுதி | ... | 1,000 |

மரப் பலகைகளை மாதவன் ரூ. 3,20,000-க்கு விற்றார். அதில் பாதித் தொகையை ஆதவனிடம் அனுப்பினார். 31-12-71-ல் வாங்கிய பொறியை ரூ. 16,000 மதிப்பில் ஆதவன் எடுத்துக் கொள்வதென்றும், விற்கப்படாமலிருந்த ரூ. 10,000 மதிப்புள்ள மரப் பலகைகள், சட்டங்கள் முதலியவற்றை மாதவன் எடுத்துக் கொள்வதென்றும் ஒப்புக் கொள்ளப்பட்டது.

இருவர் ஏடுகளிலும் தனித்தனியே இணைநிறுவனக் கணக்கு களையும், இணைநிறுவனக் கூட்டாளிகள் கணக்குகளையும் தயாரிக்க

9. துரையரசும் அருட்செல்வமும் முறையே ரூ. 30,000 ரூ. 20,000 முதல் வைத்து, நிலம் வாங்கி மனைகளாகப் பகுத்து விற்கவும், ஏற்படும் இலாப-நட்டத்தில் முதல் விகிதத்திலேயே பிரித்துக் கொள்ளவும் ஒப்புக்கொண்டனர். முதல் தொகைகளை இணைவங்கிக் கணக்கொன்று தொடங்கி அதில் செலுத்தினர்.

ரூ. 20,000 கொடுத்து நிலம் வாங்கினர். ஆன செலவுகள் கீழ்க் கொடுக்கப்பட்டுள்ளன.

| | | ரூ. |
|---|---|---|
| தரகு தொகை | ... | 2,000 |
| நிலத்தைச் சமன்படுத்தக் கூலி | ... | 4,700 |
| விளம்பரம் | ... | 1,300 |

நிலம் வாங்க வழக்குரைஞர்க்குக் கட்டணம் ரூ. 300 துரையரசு கொடுத்தார். பகுக்கப்பட்ட வீட்டு மனைகள் ரூ 57,500-க்கு விற்கப்பட்டன. மீதியுள்ள இருமனைகளைத் துரையரசு ரூ. 5,300-க்கும் அருட்செல்வம் ரூ. 4,700-க்கும் எடுத்துக் கொண்டனர். மனைகளை விற்றதற்கு அருட்செல்வத்துக்கு 5% கழிவு தரப்படவேண்டும்.

இணைவங்கிக் கணக்கு, இணைநிறுவனக் கணக்கு, இணை நிறுவனக் கூட்டாளிகள் கணக்குகள் முதலியவற்றையும் இருவர் ஏடுகளிலும் கூட்டு நிறுவன முதலீட்டுக் கணக்குகளையும் தயாரிக்க.

10. வில்லவனும் வில்லியமும் இணை நிறுவனத்தில் ஈடுபட்டு ஏற்படும் இலாப-நட்டத்தினைச் சமமாகப் பிரித்துக் கொள்ள ஒப்பினர். ரூ. 20,500 மதிப்புள்ள பொருள்களை வில்லவன் வாங்கி ரூ. 200 கட்டுச் செலவுடன் (Packing Charges) வில்லியத்திடம் அனுப்பினர். ரூ. 300 லாரி கட்டணஞ் செலுத்தி வில்லியம் அதனைப் பெற்றுக் கொண்டார். ரூ. 10,000-க்கான இரு திங்கள் தவணை உண்டியலை வரைய, அதனை வில்லியம் ஏற்றனுப்பினர். இதை வங்கியில் ரூ. 9,900-க்குத் தள்ளுபடிக்கு மாற்றினர்

வில்லியம் ஏற்ற செலவுகள்:

| | | ரூ. |
|---|---|---|
| அலுவலக வாடகை | ... | 300 |
| பிற செலவுகள் | ... | 700 |
| விளம்பரம் | ... | 200 |
| ஈட்டுறுதி | ... | 250 |

விற்பனையில் 3% கழிவு வில்லியத்திற்குச் சேரவேண்டியது.

ரூ. 1,200 மதிப்புள்ள பொருள்கள் தீயிலழிந்து விட்டன. ஈட்டுறுதிக் கம்பனியிடமிருந்து வில்லியம் பெற்றது ரூ. 800.

விற்கப்படாத ரூ. 300-க்கான பொருள்களை வில்லவன் எடுத்துக் கொண்டார்.

குறிப்பு இணைநிறுவனக் கணக்கையும் இருவர் ஏடுகளிலும் பேரேட்டுக் கணக்குகளையும் தயாரிக்க.

11. 'இணைநிறுவனம்' (Joint Venture) எனில் என்ன?

கல்கத்தாவிலுள்ள சீநிவாசன், சென்னையில் உள்ள இராமசாமி யுடன் சிங்கப்பூரிலுள்ள சாமுவேலுக்கு சணல் கட்டுகளைக் கப்பலில் அனுப்பிவிற்கும் இணை நிறுவனத்தில் ஈடுபட்டார். ரூ. 50,000 மதிப்புள்ள சணலைச் சீநிவாசன் அனுப்பினார். கட்டணத்துக்கும் ஈட்டுறுதிக்கும் ரூ. 2,500-ம், சுங்க வரிக்கு ரூ. 1,200-ம் செலுத்தினார். ரூ. 40,000 மதிப்புள்ள சரக்கினை இராமசாமி அனுப்பினார். அவர் மேற்கொண்ட செலவுகள் வருமாறு: கப்பல் கட்டணம் ரூ. 1,800; துறைமுகக் கட்டணம் ரூ. 300; சுங்கத் தீர்வை ரூ. 900; பிற செலவினங்கள் ரூ. 400.

இணை நிறுவனத்தின்பொருட்டுச் சீநிவாசன் இராமசாமி யிடம் ரூ. 10,000 அனுப்பினார். நிகர விற்பனைத் தொகையாக ரூ. 1,20,000-ஐ, இராமசாமி, சாமுவேலிடமிருந்து பெறுகிறார். சீநிவாசன், இராமசாமி-இருவர் ஏடுகளிலும் இந் நடவடிக்கைகள் எவ்வாறு பதியப்படும்?

(Sept. 64.)

12. ஜப்பானியிலுள்ள 'C' யிடம் பருத்திப் பஞ்சு அனுப்பி விற்க, சென்னையிலுள்ள 'A' யும் கல்கத்தாவிலுள்ள 'B' யும் இணை நிறுவனத்தில் ஈடுபடுகின்றனர். ரூ. 60,000 மதிப்புள்ள பஞ்சை 'A' அனுப்புகிறார். கப்பல் கட்டணம் ரூ. 3000, பிறசெலவுகள் ரூ. 3,150-அவர் ஏற்றார். ரூ. 41,500 மதிப்புள்ள பஞ்சை 'B' அனுப்பினார். அவர் ஏற்ற செலவுகள்: கப்பல் கட்டணமும், ஈட்டுறுதியும் ரூ. 2,600; துறைமுகக் கட்டணம் ரூ. 400; சுங்கக் கட்டணம் ரூ. 800; பிற செலவுகள் ரூ. 1,000. இணை நிறுவனத்தின் பொருட்டு 'A' B யிடம் அனுப்பியது ரூ. 12,000. நிகர விற்பனைத் தொகையாக ரூ. 1,59,450-ஐ விற்பனைக் குறிப்புக் கணக்குடன் C யிடமிருந்து B பெறுகிறார்.

A யின் ஏடுகளில் குறிப்புப் பதிவுகளையும், இணை நிறுவனக் கணக்கையும், B யின் ஏடுகளில் A யின் கணக்கையும் தயார் செய்க.

(M. U. April 1969)

13. ரூ. 20,000 மதிப்புள்ள பின்னல் பொருள்களை வாங்கி விற்கும் இணை நிறுவனத்தில் 'A' யும் 'B' யும் ஈடுபட்டனர். ஏற்படும் இலாப-நட்டத்தில் இருவரும் சமமாகப் பங்கிட்டுக் கொள்ள இசைந்தனர். தேவையான நிதியை 'A' கொடுத்தார். விற்பனையில் $7\frac{1}{2}\%$ கழிவு பெற்றுக்கொண்டு விற்க 'B' முன் வந்தார். $3\frac{3}{4}\%$ ரொக்கத் தள்ளுபடி போக மீதித் தொகையை 'A' செலுத்தினார். செலவிற்கென 'B' யிடம் ரூ. 400 கொடுத்தார். B யிடமிருந்து ரூ. 5,000-க்கு, ரூ. 10,000-க்கு, ரூ. 3000-க்குக் காசோலைகள் பெற்றார். கீழ்க்கண்ட செலவினங்களை 'B' ஏற்றார்:

| | | ரூ. |
|---|---|---|
| பயணச் செலவு | ... | 1,450 |
| கட்டுச் செலவும் சுமை கூலியும் | ... | 516 |
| பண்டசாலை வாடகை | ... | 300 |
| விளம்பரம் | ... | 1,140 |
| பலவகை | ... | 128 |

எல்லாப் பொருள்களையும் ரூ. 16,000-க்கு B விற்று, அத் தொகையைத் தனது வங்கிக் கணக்கில் போட்டார். பயணத்தின் போழ்து ஏற்பட்ட பொருட் சேதத்துக்கு நட்ட ஈடாக ரூ. 100-ஐச் சரக்கு கொண்டு வந்தோரிடம் பெற்று, அதனையும் வங்கிக் கணக்கில் கட்டினார். ரொக்கத் தள்ளுபடிக்கென பெற்ற தொகையை, வட்டிக்குப் பதிலாக 'A' தனிப்பட்ட முறையில் எடுத்துக் கொள்ள இருவரும் ஒப்பினர். இருவர் ஏடுகளிலும் இந் நடவடிக்கைகளை எவ்வாறு பேரேட்டுக் கணக்குகளில் பதிவதென்பதைக் காட்டுக. குறிப்பேட்டுப் பதிவுகள் வேண்டியதில்லை.

(A. 1960 M. U. B. Com. Special Accounts).

14. A, B, C மூவரும் இணை நிறுவனத்தில் ஈடுபட்டு, ஏற்படும் இலாப-நட்டத்தைச் சமமாகப் பங்கிட்டுக் கொள்ள இசைந்தனர். 'D'யிடமிருந்து ரூ. 1,25,000-க்கும் 'A' யிடமிருந்து ரூ. 25,000-க்கும், சரக்கு வாங்கினர். A ரூ. 30,000 மும் B ரூ. 40,000 மும் C ரூ. 90,000 மும் வழங்கினர். இத் தொகைகள் இணை வங்கிக் கணக்கில் (Joint Bank a/c) செலுத்தப்பட்டன. D-க்குக் காசோலை விடுத்துக் கணக்கைத் தீர்த்துக் கொண்டனர். சுமை கூலியும் பிறசெலவுகளும் ரூ. 7,500 ஆகியது. ரொக்க விற்பனையில்

ரூ. 65,000 கிடைத்தது. E யிடம் கடன் பேரில் ரூ. 1,40,000-க்குச் சரக்கு விற்றனர். இத் தொகைக்கு C வரைந்த உண்டியலை E ஏற்றார். இவ்வுண்டியலை ரொக்க மாக்கியதில் ரூ. 1,37,000 கிடைத்தது. விற்பனையில் 5% கழிவு A-க்குச் சேரவேண்டியது.

இறுதியில் கணக்குகள் காசோலை மூலம் தீர்க்கப்பட்டன. என்று கொண்டு, தேவையான குறிப்பேட்டுப் பதிவுகளைத் தந்து கணக்குகளைத் தயாரிக்கவும்.

(CAIIB Feb. 1966)

15. AB அன்கோ ரூ. 10,000 மதிப்புள்ள சரக்கு வாங்கி XY அன்கோவிடம் இணை நிறுவனத்தில் விற்க அனுப்பினர். இலாபத்தை $\frac{2}{3}$, $\frac{1}{3}$ விகிதத்தில் பிரித்துக்கொள்ள இசைந்தனர். கட்டணம், ஈட்டுறுதி, சுமைகூலி முதலியவற்றிற்கு AB அன்கோ ரூ. 500 செலவழித்தனர். ரூ. 3,000-க்கு XY அன்கோ மீது உண்டியல் வரைந்தனர். இவ்வுண்டியல் ரூ. 2,920 - க்குத் தள்ளுபடி செய்யப்பட்டது.

XY அன்கோ, துறைமுகக் கட்டணம், பண்டசாலை வாடகை முதலியவற்றிற்கு ரூ. 500 செலுத்தினர். விற்பனையில் ரூ. 15,000 கிடைத்தது விற்பனைச் செலவு ரூ. 250 ஆனது.

மொத்த விற்பனையில் 5% கழிவு போக, மீதி செலுத்த வேண்டிய தொகைக்கு வங்கிப் பணவிடை XY அன்கோ AB அன்கோவிடம் அனுப்பினர். இருவர் ஏடுகளிலும் பேரேட்டுக் கணக்குகளைத் தயாரிக்க. (C A I I B-Nov. 69)

16. கட்டட ஒப்பந்தக்காரர்களான A யும் B யும் ஒரு கூட்டுப் பங்குக் கம்பனிக்காக ரூ. 1,00,000-க்குக் கட்டடம் கட்டும் ஒப்பந்தத்தில் ஒன்றிணைய விரும்புகின்றனர். இந்தத் தொகை ரூ. 80,000 தவணைகளாகவும், ரூ. 20,000-க்குக் கம்பனியின் முழுதுஞ் செலுத்தப்பட்ட பங்குகளாகவும் கொடுக்கப்படும். வங்கியில் அவர்கள் பெயர்களில் இணை கணக்கு என்று ஒன்று தொடங்கப்பட்டது. A ரூ. 25,000-மும் B ரூ. 15,000-மும் செலுத்தினர். இலாப-நட்டத்தில் $\frac{2}{3}$, $\frac{1}{3}$ விகிதத்தில் பங்கிட ஒப்பினர். நடவடிக்கைகள் கீழ்க் கொடுக்கப்பட்டிருக்கின்றன:

| | ரூ |
|---|---|
| கூலி கொடுத்தது | ... 30,000 |
| பொருள்கள் வாங்கியது | ... 70,000 |
| A- தன்னிடமிருந்த பொருள்களை வழங்கியது | ... 5,000 |

B-தன்னிடமுள்ள பொருள்களை வழங்கியது ... 4,000

கட்டடக்கலை வல்லுநர் கட்டணம்

A கொடுத்தது ... 2,000

ஒப்பந்தம் நிறைவேறியபின் தொகை கிடைத்தது.

கம்பனியின் பங்குகளை ரூ. 16,000 மதிப்பில் A எடுத்துக் கொண்டார். மீதியுள்ள ரூ. 3,000 மதிப்புள்ள பொருள்களை B எடுத்துக்கொண்டார். இணை நிறுவனக் கணக்கையும், A, B இருவர் கணக்குகளையும் தயார் செய்யவும்.

(B. Com.)

17. கடலில் மூழ்கிவிட்ட கப்பலை வாங்க இணை நிறுவனத்தில் A, B, C மூவரும் ஈடுபடுகின்றனர். கப்பலின் விலை ரூ. 3,00,000 ஆகும். இதில் ஏற்படும் இலாப-நட்டத்தைச் சமமாகப் பங்கிட்டுக் கொள்ள இணை நிறுவனக் கூட்டாளிகள் உடன்படுகின்றனர்.

ஒவ்வொரு கூட்டாளியும் தேவைப்படும் பொழுது பணந் தருகின்றனர். மொத்தம் அவர்கள் இதில் போட்ட முதல் வருமாறு :

| | | ரூ. |
|---|---|---|
| A | ... | 2,00,000 |
| B | ... | 1,85,000 |
| C | ... | 1,80,000 |

இத் தொகைகள் மீது ஆண்டு வட்டி 6% தரப்பட வேண்டும்.

கப்பலை மீட்கும் பணி எட்டுத் திங்களில் முடிவுற்றது. மீட்புச் செலவு மொத்தம் ரூ. 1,65,000 ஆனது. பிற பல்வகைச் செலவுகள் ரூ. 30,000 ஆனது. கடலில் மீட்கப்பட்ட கப்பலை விற்றதில் ரூ. 6,75,100 கிடைத்தது.

இணை நிறுவன நடவடிக்கைகள் A-யின் ஏட்டில் எழுதப்பட்டு வந்தன. இணை நிறுவனக் கணக்கையும் B, C, இவர்களின் கணக்கையும் தயாரிக்கவும்.

(C. U. B. Com. 1955)

18. பழைய கார்களை வாங்கி விற்க, Aயும் Bயும் இணை நிறுவனத்தில் ஈடுபட்டனர். இதில் ஏற்படும் இலாப-நட்டத்தை 2:1 எனும் விகிதத்தில் பிரித்துக்கொள்ள உடன்பட்டனர்,

1958 ஆகஸ்டு 16-ல் இரண்டு கார்களை முறையே ரூ. 4,800-க்கும் ரூ: 7,200-க்கும் A வாங்கினர். ரூ. 1,800 செலவழித்துப் பழுதுபார்த்தார். 1958 செப்டம்பர் 1-ஆம் நாள் ஒரு காரை ரூ. 6,000-க்கும், செப்டம்பர் 10-ல் மற்ற காரை ரூ. 9,300-க்கும் விற்ருர்.

1958 செப்டம்பர் 12-ல் மீண்டும் ஒரு காரை ரூ. 9,000-க்கு வாங்கினர். அதனை செப்டம்பர் 20-ல் B, ரூ. 12,000-க்கு விற்றுத் தன் வங்கிக் கணக்கில் தொகையைச் செலுத்தினர்.

1958 ஆகஸ்டு 12-ல் B,ரூ. 6,000-க்கு ஒரு கார் வாங்கி, அதனை ஆகஸ்டு 15-ல் ரூ. 7,500-க்கு விற்ருர் இதற்கு ஆன செலவு ரூ. 600. 1958 ஆகஸ்டு 20-ல் இக்காரை வாடிக்கையாளர் திருப்பியனுப்பி விட்டார். அவருக்கு ரூ. 7,200 கொடுக்கப் பட்டது. செப்டம்பர் 30 அன்று இக் கார் விற்கப் படாதிருந்தமையால், ரூ. 6,750-க்கு, A. இக் காரை எடுத்துக்கொள்ள ஒத்துக் கொண்டார்.

1958 செப்டம்பர் 30-ல் கொடுக்க வேண்டியவர்க்குத் தொகை செலுத்தப்பட்டு A B இருவர் கணக்கும் தீர்க்கப் பட்டது. A யின் ஏடுகளில் இணை நிறுவனக் கணக்கைத் தயார் செய்க.

(M. U. B. Com. Sept. 62)

19. A-யும் B-யும் இணைநிறுவனத்தில் ஈடுபட்டு, ஏற்படும் இலாப-நட்டத்தைச் சமமாகப் பங்கிட்டுக் கொள்ள உடன்பட்டனர். 1945 மார்ச் 25-ல் ரூ. 12,500 மதிப்புள்ள பொருள்களை A வாங்கி, B யிடம் அனுப்பினர். அதே நாளன்று கப்பல் கட்டணம் ரூ. 360; ஈட்டுறுதி ரூ. 125; பல்வகைச் செலவுகள் ரூ. 100-முதலிய செலவுகளையும் A ஏற்ருர். இருதிங்கள் தவணையில் ரூ. 6,000-க்கு B. மீது உண்டியலொன்றையும் வரைந்தார். மார்ச் 29-ல் B பொருள்களைப் பெற்ருர். துறைமுகக் கட்டணத்துக்காக ரூ. 250, B. செலுத்தினர். ஏப்ரல் 30-ல் Bயிடமிருந்து விற்பனைக் கணக்குக் குறிப்பு A வரப் பெற்ருர். அதிலிருந்து தெரிய வந்தவை : சரக்கு முழுவதும் ரூ. 17,000-க்கு விற்கப் பட்டிருந்தது. பண்டங்களைப் பாதுகாப்பதற்கும் விற்பதற்கும் B ரூ. 1,000 செலவழித்திருந்தார்.

A யின் ஏடுகளில் தேவையானப் பதிவுகளைத் தந்து, இணை நிறுவனக் கணக்கை முடிக்கவும்.

(M. U. B. Com. Sept. 65)

**20.** பழைய கார்களை வாங்கி விற்க இணை நிறுவனத்தில் ஈடுபடவும், ஏற்படும் இலாப-நட்டத்தை 3 : 2 எனும் விகிதத்தில் பிரித்துக் கொள்ளவும் 'லீட்' (Lead) என்பவரும் 'ஃபாலோ' (Follow)என்பவரும் உடன்பட்டனர்.

1966 டிசம்பர் 1-ல் ரூ. 73,600-க்கு எட்டு கார்கள் 'லீட்' வாங்கினர். டிசம்பர் 5-ல் வரிக்கும், ஈட்டுறுதிக்கும் ரூ. 2,560 கட்டினர். டிசம்பர் 31-ல் ரூ. 99,200-க்கு இவற்றை விற்று அதில் ரூ. 16,500-ஐ 'ஃபாலோ' விடம் அனுப்பிவிட்டு மீதித் தொகையைத் தன் வங்கிக் கணக்கில் கட்டினர்.

1966 டிசம்பர் 20-ல் ரூ. 62,000-க்கு 'ஃபாலோ' ஐந்து கார்கள் வாங்கினர். டிசம்பர் 25-ல் ரூ. 2,600 வரிக்காகவும் ஈட்டுறுதிக் காகவும் செலுத்தினர். ரூ. 3,900 செலுத்திப் பழுதுபார்த்தார். 1967 சனவரி 2-ல் இவற்றில் மூன்று கார்களை ரூ. 51,000-க்கு விற்று, அத் தொகையைத் தன் வங்கிக் கணக்கில் செலுத்தினர். மீதியுள்ள இருகார்களையும் ரூ. 28,000-க்கு 'லீட்' எடுத்துக் கொள்ள உடன்பாடாயிற்று. 1967 சனவரி 10-ம்நாள் இணை நிறுவனம் முடிக்கப் பெற்றது.

(i) குறுப்பு இணை நிறுவனக் கணக்கு (Memorandum of Joint Venture A/c (ii) 'லீட்' ஏட்டில் 'ஃபாலோ'வுடன் இணை நிறுவனக் கணக்கு ஆகியவற்றைத் தயாரிக்கவும்.

(M. U. B. Com. April 1967)

**21.** சேலம் விளக்குக் கம்பனி (வரையறுக்கப்பட்டது) (Salem Lamps Ltd) வெளியிடும் ரூ. 1 மதிப்புள்ள 10,00,000 பங்குகளை ஒப்புறுதி செய்ய Aயும் Bயும் இணைநிறுவனத்தில் ஈடுபட்டனர். இலாப-நட்டத்தைச் சமமாகப் பங்கிட்டுக் கொள்ள ஒப்பினர். கம்பனியுடன் அவர்கள் செய்து கொண்ட ஒப்பந்தத்தின்படி பங்கு ஒதுக்கும் வரை ஆகும் செலவினங்களை A-யும் Bயும் ஏற்க வேண்டும். இதற்கு மறு பயனாக, சேலம் கம்பனி, முழுமையும் செலுத்தப் பட்ட பங்கு ஒவ்வொன்றும் ரூ. 1 மதிப்புள்ள 1,50,000 பங்குகளை அவர்கட்கு வழங்க வேண்டும். கீழ்க்கண்ட செலவினங் களை மேற்கொள்ள A இணை நிறுவனத்துக்குப் பணம் தந்தார்.

| | ரூ. |
|---|---|
| வாடகை | 3,000 |
| வழக்குரைஞர் கட்டணம் | 5,000 |

கீழ்க்கண்ட செலவுகளை B ஏற்ருர்:

| | |
|---|---|
| முத்திரைக் கட்டணங்களும் | ரூ. |
| பதிவுக் கட்டணங்களும் | 3,000 |
| விளம்பரச் செலவுகள் | 2,500 |
| தொழில் அமைப்பு ஆவணம், கம்பனி நடைமுறை விதிகள் போன்றவற்றிற் கான அச்சுக் கூலி | 3,500 |

கம்பனி வெளியிட்ட 10,00,000 பங்குகளில் 30,000 பங்கு கட்கு விண்ணப்பங்கள் (Applications) வரவில்லை. இதற்கு வேண்டிய பணத்தை A கொண்டு வந்தார். இப் பங்குகளை வாங்க கம்பனியில் இத் தொகை செலுத்தப்பட்டது.

ஒப்புறுதி நிறைவேற்றப்பட்டதுடன், சேலம் விளக்குக் கம்பனி 1,50,000 பங்குகளை இணைநிறுவனத்துக்குக் கொடுத்தனர்.

இணைநிறுவனம் இப் பங்குகள் அனைத்தையும் விற்றது. 1,20,000 பங்குகளை விற்றதில் A 1,10,000 பெற்ருர். மீதியுள்ள 60,000 பங்குகளை விற்றதில் A ரூ. 55,000 பெற்ருர்.

இணைநிறுவனக் கணக்கைகையும், A, B. இருவரின் தனிக் கணக்குகளையும் தயாரித்து, இருவர் கணக்குகளும் இறுதியாகத் தீர்க்கப் பட்ட முறையைக் காட்டுக.

(M. U. B. Com. Sept. 1968)

22. மலிவான விலையில் கிடைக்கும் பொறியை வாங்கி விற்கும் நோக்குடன் தில்லியிலுள்ள தேசாயும் கான்பூரில் உள்ள கபூரும் இணைநிறுவனத்தில் ஈடுபட்டனர். தேசாய் வாங்க வேண்டியது, கபூர் விற்க வேண்டியது. ஏற்படும் இலாப-நட்டத்தை 2:3 விகிதத்தில் பிரித்துக் கொள்ள வேண்டியது. இணைநிறுவனத்தின் பொருட்டு ரூ. 25,000 தேசாயிக்குக் கபூர் அனுப்பினுர்.

ரூ. 20,000 மதிப்புள்ள பொறியைத் தேசாய் வாங்கி, அதைப் பழுதுபார்க்க ரூ. 9,500 செலவு செய்தார். $2\frac{1}{2}\%$ வாங்கும் பொழுது கழிவு கொடுத்தார். பிற செலவுகட்கு ரூ. 900 ஆனது. பிறகு அப் பொறியைக் கான்பூருக்கு அனுப்பினுர். இரயில் கட்டணத்துக்கு ரூ. 1,500-ம், வரி ரூ. 700-ம் செலுத்திக் கபூர் பொறியைப் பெற்றுக் கொண்டார். பொறியின் ஒரு பகுதியை ரூ. 35,000-க்கு விற்ருர். மீதியுள்ள பகுதியை ரூ. 7,500-க்குத் தானே எடுத்துக்கொண்டார். அவர் ஏற்ற பிற செலவுகள் :

பண்ட சாலை வாடகை ரூ. 450: ஈட்டுறுதி ரூ. 500; தரகு ரூ. 830; பிற செலவுகள் ரூ. 640.

ஒவ்வொருவர் ஏட்டிலும் கணக்குகளைத் தயாரிக்க.
(Company Secretaries Exam. Intermediate, April 1969)

*23.* பழங் கலைப்பொருள்களை இங்கிலாந்தில் வாங்கி, அமெரிக்காவில் விற்க இணைநிறுவனத்தில் பென்னட்டும் பார்லோவும் ஈடுபடுகின்றனர். கீழ்க்கண்ட நடவடிக்கைகள் ஏற்பட்டன.

ஜூன். 1. பென்னட் £ 2,000 மதிப்புள்ள பொருள்களை வாங்கினார்.

ஜூன். 6. £ 3,500 மதிப்புள்ள பொருள்களை பார்லோ கொண்டு வந்தார்.

ஜூன். 8 £ 4,200 மதிப்புள்ள பொருள்களை பென்னட் வாங்கினார்.

ஜூன். 16. சில பொருள்கள் இலண்டனில் விற்கப்பட்டன. £ 4,000 இதில் பெறப்பட்டது. இதனை இருவரும் சமமாகப் பங்கிட்டு எடுத்துக் கொண்டனர்.

ஜூன். 20. மீதிமிருந்த பொருள்கள் கப்பல் வழியாக அமரிக்காவுக்கு அனுப்பட்டன. கப்பல் கட்டணமும் பிற செலவுகளும் £ 600 ஆயின. இதை பார்லோ கொடுத்தார்.

ஜூன். 30. தன் சொந்த வாணிகத்தின் பொருட்டும், கலைப் பொருள்கள் விற்பனையை மேற்பார்வையிடும் நோக்கோடும் பென்னட் அமரிக்கா சென்றார். இதற்கான மொத்த செலவு £ 800-ல் பாதித் தொகையை இணை நிறுவனத்துக்கு எடுத்துச்செல்ல ஒப்புக் கொள்ளப் பட்டது.

ஜூலை. 8. அமரிக்காவில் பென்னட் விற்ற பொருள்களின் மதிப்பு £ 9,000.

ஜூலை. 31. மீதியுள்ள கலைப் பொருள்கள் விற்க முடியாதென £ 1,200 மதிப்பில் பார்லோ எடுத்துக் கொண்டார். இப் பொருள்களை மீண்டும் இங்கிலாந்துக்கு இறக்குமதி செய்ய, பார்லோ ஏற்ற செலவு £ 100-ஐயும் இணை நிறுவனக் கணக்கிற்கு எடுத்துச்செல்ல ஒப்புக் கொள்ளப்பட்டது.

இணை நிறுவனக் குறிப்புக் கணக்கையும் பென்னட் ஏடுகளில் இணை நிறுவனக் கணக்கையும் தயார் செய்க. இலாபம் சமமாகப் பங்கிடப்பட வேண்டும்.

(C. C. S)

24. வளர்ந்து வரும் நகரொன்றில் வீட்டு மனை வாங்கி வீடு கட்டி விற்கும் நோக்குடன் E, F என்பவர்கள் இணை நிறுவனத்தில் ஈடுபடுகின்றனர். 5 ஏக்கர் நிலமொன்றை ரூ. 8,000-க்கு வாங்குகின்றனர். இதற்கான சட்ட முறைச் செலவுகள் ரூ. 960 ஆனது. இவை அனைத்துக்கும் E 1964 சனவரி 1-ம் நாள் பணஞ் செலுத்துகிறார்.

வீடொன்று ரூ. 57,600 வீதம் நான்கு வீடுகளைக் கட்டிக் கொடுக்க ஒரு ஒப்பந்தக்காரர் உடன்படுகிறார். கட்டடக்கலை நிபுணரின் சான்றிதழ் பேரில் கீழ்க்கண்டவாறு ஒப்பந்தக்காரருக்குப் பணம் செலுத்தப்பட்டது.

| | | | E கொடுத்தது ரூ. | F கொடுத்தது ரூ. |
|---|---|---|---|---|
| 1954 சூன் | 30 | ... | 64,000 | |
| செப்டம்பர் | 30 | ... | ,, | 48,000 |
| நவம்பர் | 30 | ... | 64 000 | |
| 1955 சனவரி | 81 | ... | ,, | 54,400 |

கட்டடக்கலை வல்லுநர் கட்டணமும் பிற செலவுகளும் சேர்ந்து ரூ. 17,600-ஐ, E 1955 மார்ச் 31-ல் செலுத்தினார்.

ஒவ்வொன்றின் விலையும் ரூ. 80,000 என்று நான்கு வீடுகளும் விற்பனைக்கு விடப்பட்டன. அவற்றில் இரு வீடுகள் ரூ. 76,800 வீதம் விற்கப்பட்டன. இதற்கான செலவு ரூ. 4,000 போக மீதிப் பணத்தை E பெற்றுக் கொண்டனர், சில நாள்களுக்குப் பிறகு மூன்றாவது வீடு ரூ. 70,400-க்கு விற்கப்பட்டது. செலவு போக நிகர விற்பனைத் தொகையான ரூ. 68,480-ஐ F பெற்றார்.

நான்காவது வீட்டை அடக்க விலையில் E எடுத்துக் கொள்ள ஒப்புக் கொள்ளப்பட்டது. Eயிடம் இவ்வீட்டைமாற்றிக் கொடுக்க ஆன செலவு ரூ. 800.

இணை நிறுவனத்தில் ஏற்படும் இலாபநட்டத்தைச் சமமாகப் பிரித்துக் கொள்கின்றனர் என்று கொண்டு E, F இருவர் ஏடுகளிலும் இணை நிறுவனக் கணக்குகளையும் குறிப்பு இணை நிறுவனக் கணக்கையும் (Memorandum Joint Venture a/c) தயார் செய்க

(S. I. A. Inter. Nov. 55)

# 17. விழுக்காட்டுத் தவணை நாள் அல்லது சராசரித் தவணை நாள்

## (Average Due Date)

ஒருவர் பிறரிடமிருந்து வெவ்வேறு நாள்களில் கடன் வாங்கியிருக்கலாம். வெவ்வேறு நாள்களில் வெவ்வேறு தவணைக் காலங்களில் பிறர் வரைந்த உண்டியலை ஏற்றிருக்கலாம். அவ்வாறாயின் கடன் வாங்கியவர் வெவ்வேறு நாள்களில் அவற்றைத் திருப்பியடைக்க வேண்டியிருக்கும். இது தொல்லையாக இருக்கும். இதைத் தவிர்க்கும்பொருட்டு எல்லாக் கடன்களையும் ஒரே நாளில் கொடுக்க விரும்பலாம். இது கடனீந்தோர்க்கு நன்மை பயக்கும். ஆனால், இதனால் வட்டி நட்டம் ஏற்படாதிருந்தால்தான் கடனீந்தோர் இதற்கு ஒப்புவார். தமக்கு எவ்வித நட்டமுமேற்படாத வகையிலும் கடனீந்தோர்க்கும் நட்டமேற்படா வண்ணமும் உள்ள ஒரு நாளில் முழுக்கடனும் அடைக்கப்பட்டாக வேண்டும். அத்தகைய நாள் விழுக்காட்டுத் தவணை நாள் (Average Due Date) எனப்படும். பல நாள்களில் பல்வேறு தொகைகளைச் செலுத்துவதற்கு மாறாக, முழுத் தொகையையும் ஒரே போழ்தில் செலுத்தத் தக்க நாளே விழுக்காட்டுத் தவணை நாள் என்பது புலப்படும்.

### விழுக்காட்டு நாளைக் கணக்கிடு முறை

*1.* ஏதேனும் ஒரு தவணை நாளை அடிப்படை அல்லது தொடக்க நாளாகக் கொள்க. விரைவில் வரவிருக்கும் தவணை நாளை அல்லது இறுதியாக வரவிருக்கும் தவணை நாளை அல்லது இடையில் உள்ள எத்தவணை நாளையும் இவ்வடிப்படை நாளாகக் கொள்ளலாம். முதலில் வரும் தவணை நாளை அடிப்படைத் தவணை நாளாக்கிக் கொண்டதாகக் கருதுவோம்.

2. இவ்வாறு எடுத்துக்கொள்ளும் அடிப்படைத் தவணை நாளிலிருந்து பிற தவணை நாள்கள் வரை உள்ள நாள்களைக் கணக்கிடுக. அடிப்படைத் தவணை நாளை விட்டுவிட வேண்டும்.

3. ஒவ்வொரு தொகையையும் 2-ல் கணக்கிட்ட அதற்குரிய நாள்களால் பெருக்குக. இவ்வாறு பெருக்கப்பட்டுக் கிடைக்கும் தொகை 'விளை தொகை' அல்லது 'பெருக்குத் தொகை' (Product) எனலாம்.

4. பெருக்குத் தொகைகளையும் செலுத்த வேண்டிய கடன் தொகைகளையும் தனித்தனியே கூட்டுக.

5. பெருக்குத் தொகைகளின் கூட்டுத் தொகையைச் செலுத்த வேண்டிய மொத்தத் தொகையால் வகுக்கவும்.

அடிப்படைத் தவணை நாளிலிருந்து இவ் விவைக் கூட்டின் விழுக்காட்டுத் தவணை நாள் கிடைக்கும். இந் நாளில் மொத்தத் தொகையைச் செலுத்த வேண்டும் என்பது புலப்படும்.

எடுத்துக்காட்டு 71 :

மணிவாசகம் எழுதிய உண்டியல்களை மாணிக்கம் ஏற்றார். அவற்றின் விவரங்கள் கீழ்க்கொடுக்கப்பட்டுள்ளன. விழுக் காட்டுத் தவணை நாளில் ஒரே தொகையாகச் செலுத்த மாணிக்கம் விரும்புகிறார். அதனைக் கண்டு பிடி.

| உண்டியல் தவணை நாள் | தொகை |
|---|---|
| | ரூ. |
| மார்ச் 4 | ... 1,700 |
| மே 15 | ... 500 |
| சூன் 20 | ... 900 |
| சூலை 10 | ... 1,200 |
| சூலை 29 | ... 800 |

விடை 1:

முதலில் முடியும் தவணை நாளான மார்ச் 4 ஐ அடிப்படை நாளாகக் கொள்வோம்.

| தவணை நாள் | அடிப்படை நாளிலிருந்து உள்ள நாள்கள் | தொகை ரூ. | பெருக்குத் தொகை ரூ. |
|---|---|---|---|
| மார்ச் 4 ... | 0 ... | 1,700 ... | 0 |
| மே 15 ... | 72 ... | 500 ... | 36,000 |
| ஜூன் 20 ... | 108 ... | 900 ... | 97,200 |
| ஜூலை 10 ... | 128 ... | 1,200 ... | 1,53,600 |
| ஜூலை 29 ... | 147 ... | 800 ... | 1,17,600 |
| | மொத்தம் | 5,100 | 4,04,400 |

பெருக்குத் தொகையை மொத்தஞ் செலுத்த வேண்டிய தொகையால் வகுக்க வேண்டும்.

$$\frac{4{,}04{,}400}{5{,}100} = 79.3 \text{ (அல்லது) } 79$$

அடிப்படை நாளுடன் இதனைக் கூட்டின், விழுக் காட்டுத் தவணை நாள் கிடைக்கும்.

மார்ச், 4லிருந்து 79 நாள்கள் ... மே, 22

விடை 2.

ஜூன் 20-ஐ அடிப்படை நாளாகக் கொண்டு, இக் கணக்கைச் செய்யலாம்.

| தவணை நாள் | அடிப்படை நாளிலிருந்து உள்ள நாள்கள் | தொகை ரூ. | | பெருக்குத் தொகை ரூ. |
|---|---|---|---|---|
| மார்ச் 4 | — 108 | 1,700 | — | 1,83,600 |
| மே 15 | — 36 | 500 | — | 18,000 |
| ஜூன் 20 | 0 | 900 | | 0 |
| ஜூலை 10 | 20 | 1,200 | + | 24,000 |
| ஜூலை 29 | 39 | 800 | + | 31,200 |
| | மொத்தம் | 5,100 | — | 1,46,400 |

$24{,}000 + 31{,}200 - (1{,}83{,}600 + 18{,}000) = -1{,}46{,}400.$

'—' குறியிட்ட தொகைகளைக் கழித்து விடுகிறோம். பெருக்குத் தொகையை மொத்தஞ் செலுத்த வேண்டிய தொகையால் வகுக்க,

$$\frac{-1,46,400}{5,100} = -28.7 \text{ (அ)} -29.$$

நாம் எடுத்துக் கொண்ட அடிப்படை நாளான சூன் 20லிருந்து 29 நாளைக் கழித்தால் இம் முறையிலும் மே 22-ம் நாளே விழுக் காட்டுத் தவணை நாளாக ஆகிறது.

விடை 3.

இறுதியில் முடியும் தவணை நாளான சூலை 29-ஐ அடிப் படை நாளாகக் கொண்டும் கணக்கைத் தயாரிக்கலாம்.

| தவணை நாள் | அடிப்படை நாளி லிருந்து மொத்த நாள்கள் | தொகை ரூ. | பெருக்குத் தொகை ரூ. |
|---|---|---|---|
| மார்ச் 4 | — 147 | 1,700 | — 2,49,900 |
| மே 15 | — 75 | 500 | — 37,500 |
| சூன் 20 | — 39 | 900 | — 35,100 |
| சூலை 10 | — 19 | 1,200 | — 22,800 |
| சூலை 29 | 0 | 800 | 0 |
| | மொத்தம் | 5,100 | — 3,45,300 |

$$\therefore -\frac{3,45,300}{5,100} = -67.7 \text{ (அ)} -68$$

சூலை 29லிருந்து 68 நாள்கள் முன்னால் எனில் மே 22-ம் நாளே விழுக்காட்டுத் தவணை நாள் என்றாகிறது.

விடை 4.

முதல் தவணை நாளுக்கு முன்னுள்ள எந் நாளையும் அடிப் படை நாளாகக் கொண்டும், விழுக்காட்டுத் தவணை நாளை உணர லாம். எடுத்துக்காட்டாக மார்ச் 1-ம் நாளை அடிப்படையாகக் கொண்டு இப்பொழுது கண்டு பிடிக்கலாம்.

| தவணை நாள் | அடிப்படை நாளிலிருந்து மொத்த நாள்கள் | தொகை ரூ. | பெருக்குத் தொகை ரூ. |
|---|---|---|---|
| மார்ச் 4 | 3 | 1,700 | 5,100 |
| மே 15 | 75 | 500 | 37,500 |
| சூன் 20 | 111 | 900 | 99,900 |
| சூலை 10 | 131 | 1,200 | 1,57,200 |
| சூலை 29 | 150 | 800 | 1,20,000 |
| | மொத்தம் | 5,100 | 4,19,700 |

$$\frac{4,19,700}{5,100} = 82.3 \text{ (அ) } 82$$

அடிப்படை நாளான மார்ச் 1-ம் நாளுடன் 82 நாள்களைக் கூட்டின் மே 22 கிடைக்கிறது. இம் முறையிலும் விழுக்காட்டுத் தவணை நாள் மே 22 என்று அறிகிறோம்.

விடை 5.

இவ்வாறே இறுதியில் முடியும் தவணை நாளுக்குப் பின்னுள்ள எந்நாளையும் அடிப்படை நாளாகக் கொண்டு, இக் கணக்கைத் தயாரிக்கலாம். எடுத்துக்காட்டாக, சூலை 31 ஐ அடிப்படை நாளாகக் கொண்டு விழுக்காட்டுத் தவணை நாளைக் கணக்கிடுவோம்.

| தவணை நாள் | அடிப்படை நாளிலிருந்து மொத்த நாள்கள் | தொகை ரூ. | பெருக்குத் தொகை ரூ. |
|---|---|---|---|
| மார்ச்-4 | —149 | 1,700 | —2,53,300 |
| மே-15 | — 77 | 500 | — 38,500 |
| சூன்-20 | — 41 | 900 | — 36,900 |
| சூலை-10 | — 21 | 1,200 | — 25,200 |
| சூலை-29 | — 2 | 800 | — 1,600 |
| மொத்தம் | | 5,100 | — 3,55,500 |

$$\frac{-3,55,500}{5,100} = -69.7 \text{ (அ) } -70$$

அடிப்படை நாளான ஜூலை 31-க்கு 70 நாள்கள் முன்னால் என்றாகிறது. அதாவது மே 22-ம் நாளே விழுக்காட்டுத் தவணை நாள் என்பது பெறப்படும்.

இவற்றிலிருந்து நாம் உணர வேண்டியது ஒன்றுண்டு. அதாவது, எந்நாளையும் அடிப்படை நாளாக்கிக் கொண்டு கணக்கிடலாம். பெருக்குத் தொகை —(கழித்தல் குறியுள்ளது) ஆக இருப்பின், அடிப்படை நாளுக்கு முன் அத்துணை நாள்களில் விழுக்காட்டுத்தவணை நாள் வருகிற தென்றும், பெருக்குத் தொகை+ (கூட்டல் குறியுள்ளது) ஆக இருப்பின், அடிப்படை நாளுக்குப் பின் அத்துணை நாள்களில் விழுக்காட்டுத்தவணை நாள் கிடைக்கிற தென்றும் அறிகிறோம்.

விழுக்காட்டுத்தவணை நாளில் பணஞ் செலுத்தப்படின் கடனீந்தோர் எவ்விதத்திலும் வட்டி நட்டமடைவதில்லை யென்பதையும், கடனாளியும் எம்முறையிலும் பாதிக்கப் படுவதில்லை யென்றும் முன்னரே கூறினோம். கடனாளி இவ்வாறு கணக்கிடப் படும் விழுக்காட்டுத் தவணைநாள் கடந்தபின் பணஞ் செலுத்துவதாயின், விழுக்காட்டுத்தவணை நாளுக்குப்பின் பணம் செலுத்தும் வரையுள்ள நாள்களுக்கு வட்டி கணக்கிடப்படும்.

மேற்குறித்த எடுத்துக்காட்டில் மொத்தத் தொகையான ரூ. 5,100 ஐயும் மே 22-ல் செலுத்த வேண்டும் என்று ஆகிறதல்லவா? மாணிக்கம் ஆகஸ்டு 3-ல் தொகையைச் செலுத்துவதாகக் கொள்வோம். 5% வட்டியுடன் செலுத்த வேண்டியிருப்பின், மொத்தம் அவர் செலுத்த வேண்டிய தொகை எவ்வளவு?

விடை :

விழுக்காட்டுத் தவணை நாள் மே, 22. இதிலிருந்து அவர் செலுத்தும் நாளான ஆகஸ்டு 3 வரை உள்ள காலத்தினடிப் படையில் வட்டி கணக்கிட வேண்டும்.

$$\text{வட்டி} : \; 5{,}100 \times \frac{73}{365} \times \frac{5}{100} = \text{ரூ. } 51$$

மொத்தம் செலுத்த வேண்டிய தொகை ; ரூ. 5100 + 51 = ரூ. 5,151.

எடுத்துக் காட்டு 72:

அந்தோணி, ஷைலக் இருவரிடை நிகழ்ந்த நடவடிக்கைகள் கீழ்க் கொடுக்கப்பட்டுள்ளன.

| 1971 | | | | ரூ. |
|---|---|---|---|---|
| ஜூலை. | 1. | ஷைலக்கிடம் வாங்கியது | .. | 500 |
| ,, | 15. | ஷைலக்கிடம் சரக்கு வாங்கியது | ... | 1,000 |
| ஆகஸ்டு. | 7. | ஷைலக்கிடம் சரக்கு விற்றது | ... | 800 |
| ,, | 18. | ஷைலக் செலுத்திய ரொக்கம் | ... | 800 |
| செப்டம்பர். | 15. | ஷைலக்கிடம் சரக்கு வாங்கியது | ... | 2,000 |
| ,, | 27. | ஷைலக்கிடம் ரொக்கம் செலுத்தியது | ... | 1,500 |

இருவர்க்கும் உள்ள கணக்கை அக்டோபர் 3-ம் நாள் 5% வட்டி சேர்த்த ஒரே தொகை செலுத்தி முடித்துக்கொள்ள முடிவு செய்யப்பட்டது. விழுக்காட்டுத்தவணை நாளையும் செலுத்த வேண்டிய தொகையையும் கண்டுபிடி.

விடை:

குறிப்பு: தவணை உண்டியலைப் பொறுத்தவரை உண்டியல் காலத்துடன் 3 சலுகை நாள்களைச் சேர்த்துக் கொள்ள வேண்டும். அவ்வாறு பெறுவதே தவணைநாள் என்பதை இவண் நினைவு கூர்தல் நலம்.

1-7-71 என்பதை அடிப்படை நாளாகக் கொள்வோம்.

ஷைலக்கின் கணக்கு

| நாள் | விவரம் | தவணை நாள் | மொத்த நாள்கள் | தொகை ரூ. | பெருக்குத் தொகை ரூ. | நாள் | விவரம் | தவணை நாள் | மொத்த நாள்கள் | தொகை ரூ. | பெருக்குத் தொகை ரூ. |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1971 | | | | | | 1971 | | | | | |
| ஆகஸ். 7 | விற்பனை | ஆகஸ். 7 | 37 | 800 | 29,600 | ஜூலை. 1 | கொள்முதல் | ஜூலை 1 | 0 | 500 | |
| செப். 28 | ரொக்கம் | செப். 28 | 89 | 1,500 | 1,33,500 | ,, 15 | கொள்முதல் | ஜூலை 15 | 14 | 1,000 | 14,000 |
| ,, | இருப்பு | | | 2,000 | 41,300 | ஆகஸ்டு 18 | ரொக்கம் | ஆகஸ் 18 | 48 | 800 | 38,400 |
| | | | | | | செப்டம் 15 | கொள்முதல் | செப். 15 | 76 | 2,000 | 1,52,000 |
| | | | | 4,300 | 2,04,400 | | | | | 4,300 | 2,04,400 |
| | | | | | 41,300 | = 20·7 (அ) 21 | | | | | |
| | | | | | 2,000 | | | | | | |

அடிப்படையாக எடுத்துக் கொண்ட நாளான ஜூலை 1-லிருந்து 21- நாளைக் கூட்டின், விழுக்காட்டுத் தவணை நாள் கிடைக்கிறது. அதாவது ஜூலை 22 ஆகும்.

மொத்தம் தர வேண்டிய தொகையான ரூ. 2,000-ஐ அக்டோபர் 3-ம் நாள் செலுத்தப் போவதால் விழுக்காட்டுத் தவணை நாளான ஜூலை 22-லிருந்து அக்டோபர் 3-ம் நாள் வரை உள்ள நாள்களுக்கு 5% வீதத்தில் வட்டி கணக்கிடவேண்டும்.

$$\text{வட்டி} : 2,000 \times \frac{73}{365} \times \frac{5}{100} = \text{ரூ. } 20$$

அக்டோபர் 3-ம் நாள் அந்தோணி செலுத்த வேண்டிய தொகை ரூ. 2,020

சில வேளைகளில் தான் செலுத்த வேண்டியிருக்கும் போழ்து பெருக்குத் தொகை தன் சார்பில் இருக்கலாம். பெருக்குத் தொகை தன் சார்பில் வரின், கண்டு பிடிக்கும் நாள்களை அடிப் படை நாளிலிருந்து கழிக்க வேண்டும். அதாவது விழுக்காட்டுத் தவணை நாள் அடிப்படை நாளுக்கு முன்னுள்ளது என்று பொருள்.

கூட்டு நிறுவனத்தில் (Partnership) கூட்டாளிகள் வேண்டும் போழ்து (கூட்டு நிறுவன ஒப்பந்தத்தை மீறுவகையில்) தங்கள் சொந்தப் பயனுக்குப் பணமெடுப்பர். அது ‘எடுப்பு’ (Drawings) எனப்படும். எடுப்புத் தொகை மீது கூட்டாளி வட்டி கொடுக்க வேண்டியிருக்கலாம். அவ்வாறாயின் ஒவ்வொரு முறை எடுப்புத் தொகை எடுக்கும் போழ்தும், அந்நாளிலிருந்து ஆண்டு இறுதிநாள் வரை வட்டி கணக்கிட வேண்டும். இதற்கு விழுக்காட்டுத் தவணை நாள் கண்டுபிடித்து வட்டி கணக்கிடுவதை எளிதாக்க லாம். கீழ்க்கண்ட எடுத்துக்காட்டு இதனை நன்கு விளக்கும்.

எடுத்துக் காட்டு 73 :

31-12-1971-ல் முடியும் அரையாண்டில் ஒரு கூட்டாளி கீழ்க்கண்ட நாள்களில் தன் சொந்தச் செலவுகட்குக் கூட்டு நிறுவனத்திலிருந்து பணமெடுத்தார்.

| நாள் 1971 | | எடுப்புத் தொகை ரூ. |
|---|---|---|
| ஜூலை 20 | ... | 300 |
| ஆகஸ்டு 17 | ... | 350 |
| செப்டம்பர் 22 | ... | 450 |
| அக்டோபர் 28 | ... | 410 |
| நவம்பர் 15 | ... | 400 |
| டிசம்பர் 31 | ... | 280 |

மேற்குறித்த எடுப்புகளின் விழுக்காட்டுத் தவணை நாளைக் கண்டு பிடித்து, 6% ஆண்டு வட்டி வீதம் 31-12-1971-ல் முடியும் அரையாண்டுக்கு எடுப்புகளின்மீது வட்டி கணக்கிடு.

.விடை:

கண்டுபிடிக்கப்படும் விழுக்காட்டுத் தவணை நாளிலிருந்து அரையாண்டு முடியும் நாள்வரை உள்ள நாள்களின்மீதுதான் வட்டி கணக்கிடப்படவேண்டும். இறுதி நாளை அடிப்படை நாளாகக் கொள்வோம்.

| எடுப்பு நாள் | அடிப்படை நாள் வரை உள்ள மொத்த நாள் | எடுப்புத் தொகை ரூ. | பெருக்குத் தொகை. ரூ. |
|---|---|---|---|
| 1971 | | | |
| ஜூலை, 20 | — 164 | 300 | — 49,200 |
| ஆகஸ்டு 17 | — 136 | 350 | — 47,600 |
| செப்டம்பர், 22 | — 100 | 450 | — 45,000 |
| அக்டோபர், 28 | — 64 | 410 | — 26,240 |
| நவம்பர், 15 | — 46 | 400 | — 18,400 |
| டிசம்பர், 31 | 0 | 280 | 0 |
| | | 2,190 | — 1,86,440 |

$$-\frac{1,86,440}{2,190} = -85.1 \text{ (அ) } -85$$

டிசம்பர் 31லிருந்து 85 நாள்களுக்கு முன் என்றாகிறது. அதாவது, அக்டோபர் 7-ம் நாள்தான் விழுக்காட்டுத் தவணை நாளாகும்.

வட்டி அக்டோபர் 7-ம் நாளிலிருந்து டிசம்பர் 31 வரை ரூ. 2,190 -க்குக் கணக்கிடப்படவேண்டும்.

$$\text{வட்டி: } 2,190 \times \frac{6}{100} \times \frac{85}{305} = \text{ரூ. } 30.60$$

கூட்டாளி எடுப்பு மீது தர வேண்டிய வட்டி ரூ. 30.60 ஆகும்.

## நடைமுறைக் கணக்கு

## (Account Current)

வணிகத் தொடர்புற்றிருக்கும் இருவர் தங்கட்கிடையே நிகழும் பல நடவடிக்கைகளைக் குறித்துவைப்பது மட்டுமின்றித் தான் குறித்து வைத்திருக்கும் கணக்கை அவ்வப்பொழுது மற்றவர்க்கு அனுப்பிச் சரிபார்த்துக் கொள்வது வழக்கம். குறிப்பிட்ட காலத்தில் தன் ஏட்டில் காணப்படும் அடுத்தவர் கணக்கின் நகலாகவே (Copy) அஃதிருக்கும். சரக்கு வாங்குதல்—விற்றல், வெவ்வேறு நாள்களில் ரொக்கம் செலுத்துதல்—பெறுதல், உண்டியல் வரைதல்—ஏற்றல், போன்ற நடவடிக்கைகள் பெருகியிருக்கும் நிலையில் அவ்வப்பொழுது கணக்கைச் சரிபார்த்துக் கொள்ளுதல் சிறந்தது தானே? நடவடிக்கைகட்கு ஒப்புக் கொள்ளப்பட்ட விகிதத்தில் வட்டியும் கணக்கிடப்படும். ஆக இவ்வாறு அனுப்பப்படும் கணக்கில் தங்கட்கிடையே நிகழ்வுற்ற நடவடிக்கைகள் மட்டுமின்றி வட்டியும் கணக்கிடப்பட்டுக் காட்டப் பெற்றிருக்கும். இதனை நடைமுறைக் கணக்கு (Account Current) எனலாம். உற்பத்தியாளர் தன்னிடம் கடனுக்குச் சரக்கு வாங்கிப் பல தவணைகளில் ரொக்கம் செலுத்தும் வணிகருக்கு இக் கணக்கைத் தயாரித்தனுப்புவர். ஒரு வாணிகர் தம்மிடம் தொடர்புற்ற மற்றொரு வாணிகருக்கு அனுப்புவர்; அனுப்பீட்டு வாணிகத்தில் அனுப்பப் பெறுநர் அனுப்புநர்க்கு அனுப்புவர்; வங்கி தன் வாடிக்கையாளர்க்கு இதனை அனுப்பும்; இணை நிறுவன வாணிகத்திலும் இது பயன்படுத்தப்படுகிறது.

### கணக்கின் தலைப்பு (Heading of the Account)

இக் கணக்கைத் தயாரித்து அனுப்புநர், அனுப்பப் பெறுநர் என இருவர் உள்ளதை இக் கணக்கின் தலைப்பே உணர்த்தும். "சிதம்பரனாருடன் சித்தரஞ்சனின் நடைமுறைக் கணக்கு" (Chitaranjan in Account Current with Chidambaranar) என்ற தலைப்பில், இக் கணக்கைத் தயாரித்தனுப்புவது சிதம்பரனார்; சித்தரஞ்சனுக்கு இது அனுப்பப்படுகிறது என்பது புலனாகும். இதனைத் தயாரிக்கும் முறைகள் பல.

### 1. வட்டி வாய்பாட்டு முறை (Interest Tables)

ஒவ்வொரு நடவடிக்கையின் தவணை நாளிலிருந்து (Due date) கால இறுதிவரை உள்ள நாள்களுக்கு, அந் நடவடிக்கைக்கான தொகை மீது குறிப்பிட்ட வட்டி கணக்கிடப்படுகிறது. ஒவ்வொரு நடவடிக்கைக்கும் இவ்வாறு வட்டி கணக்கிடப்படும். குறிப்பிட்ட

காலத்தில் தயாரிக்கப்படும் நடப்புக் கணக்கில் தொடர்புற்ற அடுத்தவர் அளித்த பயன் மதிப்பு மீதும், பெற்றபயன் மதிப்பு மீதும் வட்டி கணக்கிடப் படுவதால், இறுதியில் அவர்க்கு வட்டி செலுத்த வேண்டியுள்ளதா அல்லது அவரிடமிருந்து வட்டி வரவேண்டியுள்ளதா என்பதும் அறிய முடிகிறது. அவர் கொடுக்க வேண்டிய தொகையுடன் வட்டியும் சேர்த்துக் கொள்ளப்படுகிறது; அல்லது கழிக்கப்படுகிறது. இதற்கு வட்டி வாய்பாடுகள் (Interest Tables) உள்ளன. அதன் துணைகொண்டு வட்டியை எளிதாக உணரலாம். எனவே, இம் முறை வட்டி வாய்பாட்டு முறை எனப்படுகிறது.

கணக்குத் தொடக்க நாளில் இருப்பு கொண்டு வரப் பட்டிருப்பின், அந்நாளையும் கணக்கிலெடுத்துக் கொள்ளவேண்டும். உண்டியல் ஏற்றிருப்பின் அல்லது பெற்றிருப்பின், அத் தவணைக் காலத்துடன் சலுகை நாள்களையும் சேர்த்துக் கொள்ளவேண்டு மென்பதை மறத்தலாகாது. சில நடவடிக்கைகட்குத் தவணைக் காலம் கொடுக்கப்படாமலிருக்கலாம். அந் நிலையில் நடவடிக்கை நிகழ்ந்த நாளே தவணை நாளாகக் கொள்ளப்படும். எடுத்துக் காட்டாக, ஏப்ரல் 18-ம் நாள் ரூ 500-க்குச் சரக்கு விற்றது எனவும் தவணை நாள் மே-2 எனவும் கொடுக்கப்பட்டிருப்பின், மே 2 லிருந்து கால இறுதிவரை உள்ள நாள்களுக்குத்தான் வட்டி கணக்கிட வேண்டும். அவ்வாறின்றி, சரக்கு விற்றது ஏப்ரல் 18-ம் நாள் என மட்டும் கொடுக்கப்பட்டிருப்பின், ஏப்ரல் 18-ஆம் நாளையே தவணை நாளாகக் கொள்ள வேண்டும். நாள்களை எண்ணும் போழ்து நடவடிக்கை நிகழ்ந்த நாளை எடுத்துக் கொள்ளக் கூடாது. ஏப்ரல் 18 ஆம் நாள் சரக்கு விற்றது எனில், ஏப்ரல் 19 ஆம் நாளிலிருந்து வட்டி கணக்கிட வேண்டும். எடுத்துக்காட்டாக, கணக்கு சூன் 30-ல் முடிவதாகவும் 5% வட்டி எனவும் கொண்டால், இந் நடவடிக்கைக்கு வட்டி கணக்கிட வேண்டிய காலம் கீழ்க்கண்டவாறு தீர்மானிக்கப்படும்.

| | | நாள்கள் | |
|---|---|---|---|
| ஏப்ரல் | ... | 12 | (30—18) |
| மே | ... | 31 | |
| சூன் | ... | 30 | |
| | | 73 | |

வட்டி : $500 \times \frac{73}{365} \times \frac{5}{100} =$ ரூ. 5

## சிவப்பு மை வட்டி (Red Ink Interest)

ஒரு முக்கியமான கருத்தையும் இவண் உணர்தல் நன்று. ஒரு நடவடிக்கையின் தவணை நாள், நடப்புக் கணக்கிற்குரிய காலத்திற்குப்பின் வருமாயின், வட்டி கணக்கிடு முறையை இவண் காண்போம். எடுத்துக்காட்டாக, ஏப்ரல் 8-ம் நாள் ஏகாம்பரம் இரு திங்கள் தவணை உண்டியலை ஏற்றுத் தந்ததாகவும் ஏப்ரல் 30-ம் நாளுடன் கணக்கு முடிக்கப் பெறுவதாகவும் கொள்வோம். இப்பொழுது இவ்வுண்டியலின் தவணைநாள் சூன். 11 ஆகிறது. இது கணக்கு முடிந்த 42-ம் நாளாகும். ஏகாம்பரத்தின் கணக்கோ ஏப்ரல் 8-ம் நாளே வரவு வைக்கப்படுகிறது. ஆனால், இதற்கான ரொக்கம் சூன் 11-ல் தான் கைக்குக் கிடைக்கிறது. எனவே, ஏப்ரல் 8-ம் நாளில் அவர் கணக்கு வரவு வைக்கப்படினும், அதற்கு வட்டி உரியதன்று என்பதை நாம் உணரலாம் அல்லவா? அதுமட்டுமன்று. ஏகாம்பரம் இக்கால முடிவிலிருந்து 42 நாள்கள் சென்ற பின்னரே தொகை செலுத்துவார். ஆகவே, இக் காலத்திற்கு—42 நாள்களுக்கு வட்டி பெற வேண்டியுள்ளது. அதனைக் கணக்கிட்டு இப்பொழுதே கணக்கில் பற்று வைத்துவிடின், பின் தயாரிக்கப்படும் அடுத்த காலத்திற்கான கணக்கில் வட்டி கணக்கிடுதல் எளிதாகும். நேரடியாகத் தொடக்க இருப்பின்மீது வட்டி கணக்கிட்டுக் கொள்ளலாம். இல்லையெனில் 42 நாள்கள் கழிந்த பின், முன் காலத்திற்குரிய (Reatling to previous period) ஒரு தொகை வரவேண்டியுள்ளது என்பதை நினைவு கூர்ந்து, வட்டி சேர்க்க வேண்டியிருக்கும். எனவே, நாம் பின்பற்ற வேண்டிய முறை:

நடப்புக் கணக்கு இறுதி நாளிலிருந்து அதன் தவணை நாள் வரை வட்டி கணக்கிட்டு, அதனைச் சிவப்பு மையில் வரவுப் பகுதியில் எழுத வேண்டும். [பிற வட்டித் தொகையினின்றும் இது மாறுபடுகிறது. இவ் வட்டியைக் குறிப்புக்காக வரவுப் பகுதியில் எழுதுகிறோமே யன்றி—எதிர்ப் பகுதியில்தான் இவ் வட்டி இடம் பெறவேண்டும். ஆனால், அதற்குரிய நடவடிக்கையை இங்கு இணைக்கவே இப் பகுதியில் எழுதுகிறோமேயன்றி—கணக்கில் சேர்க்கக் கூடாது. காரணம் — இப்பொழுது அவரிடமிருந்து ரொக்கம் பெறவில்லை. இவ்வாறு இதனை வேறுபடுத்திக் காட்ட இவ் வட்டித் தொகையைச் சிவப்பு மையில் எழுதுகிறோம்.] இது சிவப்பு மை வட்டி (Red ink interest) எனப்படும்.

வரவுப் பகுதியில் எழுதிய இச் சிவப்பு மை வட்டியைப் பற்றுப் பகுதியில் "எதிர்ப் பகுதியின் படி சிவப்பு மை வட்டி" என்று சாதாரண மையில் எழுதிப் பற்று வைக்கவேண்டும்.

அவ்வாறே கணக்குக் காலத்துக் கப்பால் இருக்கும் தவணை நாளுக்காகக் கணக்கு இப்பொழுது பற்றுவைக்கப் படுமாயின், கணக்கு முடிவு நாளிலிருந்து தவணைநாள் வரை வட்டி கணக்கிட்டு முதலில் பற்றுப் பகுதியில் சிவப்பு மையில் எழுதவேண்டும். அதே வட்டித் தொகையைப் பின்னர் வரவுப் பகுதியில் "எதிர்ப் பகுதியின்படி சிவப்பு மை வட்டி" என்று சாதாரண மையில் எழுதி வரவு வைக்கவேண்டும். எனவே, சிவப்பு மையில் எழுதப்படும் வட்டியைக் கணக்கில் சேர்த்துக் கொள்ளக்கூடாது என்பதையும் எதிர்ப் பகுதியில்தான் அது கணக்கில் எடுத்துக்கொள்ளப்படும் என்பதையும் மீண்டும் நினைவு கூர்தல் நல்லது.

இறுதியில் இரு பகுதிகளிலுமுள்ள வட்டித் தொகைகளைத் தனித்தனியே கூட்டி இருப்புக் கட்டவேண்டும். வட்டி பற்றிருப்புக் காட்டுமாயின், பற்றுப் பகுதியில் 'வட்டி' எனக் குறிப்பிட்டுத் தொகைப் பத்தியில் சேர்த்துக் கொள்ளவேண்டும். வட்டி வரவிருப்புக் காட்டுமாயின், வரவுப் பகுதியில் 'வட்டி' எனக் குறிப்பிட்டுத் தொகைப் பத்தியில் சேர்த்துக் கொள்ளவேண்டும். பிறகு தொகைப் பத்தி இருப்புக்கட்டப்படும்.

(சிவப்பு மை வட்டியால் எழும் குழப்பத்தைத் தவிர்க்க, இதனை எழுதாமலேயே விட்டுவிட்டு, எப் பகுதியில் வட்டியைச் சேர்க்க வேண்டுமோ அப் பகுதியில் மட்டும் பதிந்து விடலாம் என வில்லியம் பிக்கிள்ஸ் (William Pickles) கருதுகிறார். ("In order to prevent confusion, it is submitted that it is preferable to avoid red ink interest and always to insert the interest upon its correct side)".)

இந் நடப்புக் கணக்கு சாதாரணமாகப் பேரேட்டும் கணக்குப் போன்றே தயாரிக்கப்படும். ஆனால், ஒவ்வொரு பகுதியிலும் மூன்று கூடுதலான பத்திகள் இருக்கும். ஒரு பத்தியில் தவணை நாளும் அடுத்த பத்தியில் வட்டி கணக்கிடப் படவேண்டிய நாள்களும் குறிக்கப்படும். இன்னொரு பத்தியில் வட்டி குறிக்கப் பெறும். கீழ்க்கண்ட எடுத்துக்காட்டு இதனை நன்கு விளக்கும்.

எடுத்துக் காட்டு 74:

கீழ்க்கண்ட நடவடிக்கைகளிலிருந்து நாவலனுக்குக் கோவலன் 30-6-71-ல் அனுப்ப வேண்டிய நடப்புக் கணக்கைத் தயாரிக்கவும். 5% வட்டி கணக்கிடுக.

1971

சனவரி 1. இருப்பு ... ரூ. 585

(கோவலனுக்கு நாவலன் தரவேண்டியது).

,, 18. ரொக்கம் பெற்றது ... ரூ. 185

பிப் 10. கோவலன் நாவலனிடம் விற்ற சரக்கின் மதிப்பு ரூ. 780.

மார்ச் 3. கோவலனிடம் நாவலன் விற்ற சரக்கு ரூ. 750

ஏப் 11. கோவலனிடம் நாவலன் வாங்கிய சரக்கு ரூ. 1,328 (தவணை நாள் ஏப்ரல் 25.)

ஏப் 14. நாவலன் சரக்கு திருப்பியனுப்பியது ரூ. 128 (ஏப்ரல் 11 ல் வாங்கிய சரக்கிலிருந்து)

மே 8. நாவலனிடம் கொடுத்த ரொக்கம் ரூ 250

,, 20. நாவலனிடம் சரக்கு வாங்கியது ரூ. 300 (தவணை நாள் சூன் 10)

சூன் 2. மூன்று திங்கள் தவணையில் ரூ. 730-க்கு எழுதிய உண்டியலை நாவலன் ஏற்றுத் தந்தது.

,, 16. கோவலன் நாவலனிடம் விற்ற சரக்கு ரூ. 375

,, 27. நாவலனிடம் பெற்ற ரொக்கம் ரூ. 255.

1. வட்டி வாய்ப்பாட்டு முறை (எதிர்ப்பக்கம்-637 பார்க்க)

விளக்கம் :

இக் கணக்கைத் தயாரித்தனுப்புபவர் கோவலன். எனவே, அவர் பெயரை முதலில் வைத்து இக் கணக்கு தலைப்பிடப் படுகிறது.

கோவலன் ஏட்டில் நாவலனின் கணக்கைத் தயார் செய்கிறோம். எனவே, நாவலனிடமிருந்து ரொக்கம் பெறுவதும், விற்ற சரக்கைத் திரும்பப் பெறுவதும், சரக்கு வாங்குவது போன்றவை இக் கணக்கில் வரவு வைக்கப்படுகின்றன. நாவலனிடம் சரக்கு விற்பது, ரொக்கம் கொடுப்பது போன்றவை இக் கணக்கில் பற்று வைக்கப் படுகின்றன. இனி ஒவ்வொரு நடவடிக்கையையும் ஆய்வோம்.

இருப்பு :

நாவலன் தரவேண்டியுள்ளதால் இது நாவலன் கணக்கில் பற்றிருப்பாகும். சென்ற ஆண்டிலிருந்து இருப்பு இவ் வாண்டுக்

# 1. வட்டி வாய்பாட்டு முறை (Interest Tables Method)

ப. கோவலனுடன் நாவலனின் நடைமுறைக் கணக்கு வ

| நாள் | விவரம் | பே. ப. எ. | தவணை நாள் | ஜூன் 30 வரை உள்ள நாட்கள் | வட்டி ரூ. | | தொகை ரூ. | கா. | நாள் | விவரம் | பே. ப. எ. | தவணை நாள் | ஜூன் 30 வரை உள்ள நாட்கள் | வட்டி ரூ. | | தொகை ரூ. | கா. |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1971 | | | | | | | | | 1971 | | | | | | | | |
| ஜ. 1 | இருப்பு கீ/கொ.. | | ஜன. 1 | 181 | 14 | 50 | 855 | — | ஜ. 18 | ரொக்கம் ... | | ஜ. 18 | 163 | 4 | 13 | 185 | — |
| பி. 10 | விற்பனை ... | | பிப். 10 | 140 | 14 | 96 | 780 | — | மா. 3 | கொள் முதல் ... | | மா. 3 | 119 | 12 | 23 | 750 | — |
| ஏ. 11 | விற்பனை .. | | ஏ. 25 | 66 | 12 | — | 1328 | — | ஏ. 24 | விற்பனைத் திருப்பம் | | ஏ. 25 | 66 | 1 | 16 | 128 | — |
| மே 8 | ரொக்கம் ... | | மே. 8 | 53 | 1 | 82 | 250 | — | மே 20 | கொள் முதல் ... | | ஜூன். 10 | 20 | 0 | 82 | 300 | — |
| ஜூன். 16 | விற்பனை ... | | ஜூன். 26 | 14 | 0 | 72 | 375 | — | ஜூன். 2 | வரவு கொடுபட உண்டியல் ... | | செ. 5 | 67 | 6 | 70 | 730 | — |
| | | | | | | | | | ஜூன். 27 | ரொக்கம் .. | | ஜூன். 27 | 3 | 0 | 10 | 255 | — |
| ஜூன். 30 | ரூ. 730மீது சிவப்பு மை வட்டி எதிர்ப் பகுதியின் படி | | | | 6 | 70 | | | ஜூன். 30 | வட்டி இருப்பு ... | | | | 32 | 26 | | |
| ,, | வட்டிக் கணக்கு | | | | | | 32 | 26 | ,, | இருப்பு கீ/இ ... | | | | | | 1002 | 26 |
| | | | | | 50 | 70 | 3350 | 26 | | | | | | 50 | 70 | 3350 | 26 |
| ஜூலை 1 | இருப்பு கீ/கொ... | | | | | | 1002 | 26 | | | | | | | | | |

கணக்கிற்குக் கொண்டு வரப்படும். தொடக்க இருப்பாதலால் 1970 டிசம்பர் 31-ம் நாளே இத்தொகையை நாவலன் தரவேண்டியுள்ளதால்—சனவரி 1-ம் நாளையும் கணக்கிலெடுத்துக் கொள்ள வேண்டும். கீழ்க்கண்டவாறு சூன் 30 வரையுள்ள—வட்டி கணக்கிடப்பட வேண்டிய—நாள்களைக் கண்டு பிடிக்கலாம்.

| | | நாள்கள் |
|---|---|---|
| ஜனவரி | ... | 31 |
| பிப்ரவரி | ... | 28 |
| மார்ச் | ... | 31 |
| ஏப்ரல் | ... | 30 |
| மே | ... | 31 |
| சூன் | ... | 30 |
| | | 181 |

வட்டி : $585 \times \frac{181}{365} \times \frac{5}{100} =$ ரூ. 14.50

நடவடிக்கைகளைப் பொறுத்தவரை, நடவடிக்கை நிகழ்ந்த நாளை விட்டுவிட வேண்டும்.

பிப்ரவரி 10 :

நாவலனிடம் சரக்கு விற்றுள்ளதால், நாவலன் கணக்கில் பற்று வைக்கப்பட்டுள்ளது. கீழ்க்கண்டவாறு வட்டி கணக்கிடப்படுகிறது.

| | | |
|---|---|---|
| பிப்ரவரி | ... | 18 நாள்கள் |
| மார்ச் | ... | 31 ,, |
| ஏப்ரல் | ... | 30 ,, |
| மே | ... | 31 ,, |
| சூன் | ... | 30 ,, |
| | | 140 ,, |

வட்டி $= 780 \times \frac{140}{365} \times \frac{5}{100} =$ ரூ. 14.96

மார்ச் 3:

கோவலனிடம் நாவலன் விற்ற சரக்கு என்பதால் கோவலனைப் பொறுத்தவரை, சரக்கு வாங்கியதாகிறது. எனவே,

நாவலன் கணக்கில் வரவு வைக்கப்படுகிறது,

ஏப்ரல் 11 :

கோவலனிடம் நாவலன் வாங்கிய சரக்கு என்பதால் நாவலனிடம் விற்றது என்பது பொருளாகிறது. ஏப்ரல் 11-ம் நாள் விற்றிருப்பினும், தவணை நாள் ஏப்ரல் 25 எனக் கொடுக்கப் பட்டிருக்கிறது. தவணை நாளிலிருந்து சூலை 30 வரையுள்ள காலத் திற்குத்தான் வட்டி கணக்கிட வேண்டும். இது கீழே காட்டப் பட்டுள்ளது.

| | | நாள்கள் |
|---|---|---|
| ஏப்ரல் | ... | 5 (30-25) |
| மே | ... | 31 |
| சூன் | ... | 30 |
| | | 66 |

$$\text{வட்டி ரூ } 1328 \times \frac{66}{365} \times \frac{5}{100} = \text{ரூ. } 12$$

ஏப்ரல் 14 :

நாவலன் சரக்கைத் திருப்பியனுப்பியது. கோவலனைப் பொறுத்தவரை விற்பனைத் திருப்பமாகும். எனவே, நாவலன் கணக்கில் வரவு வைக்கப்படுகிறது. ஏப்ரல் 14-ம் நாளே இதனைத் திரும்பப் பெறினும், இந் நாளிலிருந்து மொத்த நாள்களைக் கணக்கிடக் கூடாது. காரணம், நாவலன் திருப்பியனுப்பிய சரக்கு ஏப்ரல் 11-ம் நாள் வாங்கியது. அதனுடைய தவணை நாள் ஏப்ரல் 25 எனக் கொடுக்கப் பட்டிருக்கிறது. எனவே, அதிலிருந்து திருப்பியனுப்பப் பெற்ற இதன் தவணை நாளும் ஏப்ரல் 25 என்பது புலனாகும். முன் விளக்கியவாறு ஏப்ரல் 25-லிருந்து சூன் 30 முடிய 66 நாள்கள் உள்ளன. அதற்கு வட்டி கணக்கிடப் படுகிறது.

மே 20:

முன் நடவடிக்கையை விளக்கியவாறே மே 20-ல் சரக்கு வாங்கி யிருப்பினும், தவணை நாள் சூன் 10 எனக் கொடுக்கப் பட்டிருப்பதால் சூன் 10-லிருந்து 30 வரை உள்ள காலத்துக்கு— அதாவது 20 நாள்களுக்கு வட்டி கணக்கிடப்படுகிறது.

சூன் 2 :

இது ஒரு வரவுடைய உண்டியல். ஏற்குநர் நாவலன். எனவே, அவர் கணக்கில் வரவு வைக்கப்படுகிறது. மூன்று

திங்கள் தவணை உண்டியலாததால், மூன்று சலுகை நாள்களைச் சேர்க்க, இதன் தவணை நாள் செப்டம்பர் 5 என்றாகிறது. கணக்கு சூன் 30-ம் நாளுடன் முடிவடைவதால் இதற்குப் பின் 67 நாள்களில் தவணை நாள் வருகிறது. 'சிவப்பு மை வட்டி' பற்றி முன்பே விரிவாக விளக்கியுள்ளோம். அதன்படி, இக்கால முடிவுக்குப் பின்னுள்ள 67 நாள்களுக்கான வட்டி ரூ. 6.70 வரவுப் பகுதியில் சிவப்பு மையால் எழுதப்படுகிறது. ஆனால் இது கணக்கில் எடுத்துக் கொள்ளப்படுவதில்லை.

சூன் 30-லிருந்து உண்டியல் தவணை நாளான செப்டம்பர் 5 வரை இதற்கான வட்டி ரூ. 6.70. இதனை இப்பொழுது அவர் கணக்கில் பற்று வைக்கிறோம். அவரிடமிருந்து இதையும் நாம் பெற வேண்டும் என்றாகிறது.

## 2. பெருக்குத் தொகை முறை (Product Method)

இம் முறையில் புது விதிகள் ஏதுமில்லை. ஆனால், ஒவ்வொரு நடவடிக்கைக்கும் வட்டி கணக்கிடுவதைத் தவிர்க்க இம் முறை பயன்படுகிறது. நடவடிக்கைகள் அதிகமிருக்கும் போழ்து இம் முறையே சிறந்தது என்பதையும், பரவலாக இம் முறையே பயன்படுத்தப்பட்டு வருகிறது என்பதையும் சொல்ல வேண்டுவதில்லை.

வட்டிப் பத்திக்கு மாறாக 'பெருக்குத் தொகைப்பத்தி' இம் முறையில் இருக்கும். தொகையையும் நாளையும் பெருக்கின் கிடைப்பது பெருக்குத் தொகை என்பதை உணரவும். விழுக் காட்டுத் தவணை நாள் தலைப்பில் விளக்கப்பட்ட விதியின் அடிப் படையில் இது அமைகிறது. (குறிப்பிட்ட நாள்களுக்குக் குறிப்பிட்ட தொகைக்குக் கணக்கிடப்படும் வட்டியும், ஒரேநாளில் அதன் பெருக்குத் தொகை மீது கணக்கிடப்படும் வட்டியும் ஒன்றுதானே? எடுத்துக் காட்டாக, ரூ. 730-க்கு 50 நாள்களுக்கு 5% ஆண்டு வட்டி கணக்கிடுவதும் அதன் பெருக்குத் தொகையான (தொகை × நாள் = 730 × 50 = 36,500) 36,500 மீது ஒரு நாள் வட்டி கணக்கிடுவதும் ஒன்று தானே?) இக் கொள்கைதான் இங்குப் பயன்படுத்தப்படுகிறது.

ஒவ்வொரு நடவடிக்கையின் தவணை நாள்களையும் ஒரு நாளாக மாற்ற, ஒவ்வொரு நடவடிக்கைத் தொகையும் அதன் தவணை நாள்களால் பெருக்கப்படுகிறது. இப் பெருக்குத் தொகை அந்தந்த நடவடிக்கையின் எதிரில் 'பெருக்குத்தொகைப் பத்தி'யில் எழுதப்படும்.

இரு பகுதிகளிலும் (பற்றுப் பகுதி, வரவுப் பகுதி) உள்ள பெருக்குத் தொகைகளை இருப்புக் கட்ட வேண்டும். பின்னர்ப் பெருக்குத் தொகை இருப்பின் மீது குறிப்பிட்ட வட்டி ஒரு நாளுக்குக் கண்டுபிடிக்க வேண்டும். பெருக்குத் தொகை பற்றிருப்புக் காட்டுமாயின் (பற்றுப் பகுதியின் கூட்டல் தொகை வரவுப் பகுதியினும் மிகுந்திருக்குமாயின்), பற்றுப் பகுதியில் அவ்வாறு கண்டு பிடித்த வட்டியைப் "பெருக்குத் தொகை இருப்பு மீதான வட்டி" என்று குறிப்பிட்டுத் தொகைப் பத்தியில் எழுத வேண்டும். பின்னர், தொகைப் பத்தி இருப்புக் கட்டப்படும். பெருக்குத் தொகைப் பத்தி வரவிருப்பைக் காட்டுமாயின், அதற்கான வட்டியை வரவுப் பகுதியில் தொகைப் பத்தியின் கீழ் "பெருக்குத் தொகை மீதான வட்டி" என்று குறிப்பிட்டு எழுத வேண்டும்.

ஒரு நடவடிக்கையின் தவணை நாள், கணக்குக் காலத்திற்குப் பின் வருமாயின், முன்னர்ச் 'சிவப்புமை வட்டி'யில் விளக்கியவாறு, கால இறுதி நாளிலிருந்து தவணை நாள் வரை உள்ள நாள்களால் தொகையைப் பெருக்கிச் சிவப்புமையினால் இப்பெருக்குத் தொகையையும் மொத்த நாளையும் எழுத வேண்டும். சிவப்புமை பெருக்குத் தொகையைக் கணக்கில் எடுத்துக் கொள்ளக்கூடாது என்பதை உணர வேண்டும். பின்னர் எதிர்ப் பகுதியில் சாதாரண மையில் "எதிர்ப் பகுதியின் படி சிவப்புமை பெருக்குத் தொகை" என்று குறிப்பிட்டுப் பெருக்குத் தொகைப் பத்தியில் எழுத வேண்டும். பின்னரே பெருக்குத் தொகையை இருப்புக் கட்ட வேண்டும். இம் முறையில் 74-வது எடுத்துக்காட்டுச் செய்யப் பட்டுள்ளது.

### 3. வட்டி எண்கள் முறை (Interest Numbers)

முன் விளக்கப்பட்ட பெருக்குத் தொகை முறை போன்றதே இஃதும். சிறிது வேறுபாடுண்டு. இது ஆங்கில முறை (English Method) எனவும் அழைக்கப்பெறும். பெருக்குத் தொகைப் பத்திக்கு மாறாக "வட்டி எண்கள்" பத்தி இரு பகுதிகளிலும் இருக்கும். பெருக்குத் தொகை ஒவ்வொன்றையும் (நாள்கள் × நடவடிக்கைத் தொகை), 100ஆல் வகுத்து, வரும் ஈவை இப் பத்தியின் கீழ் எழுத வேண்டும். எனவே,

$$\text{வட்டி எண்} = \frac{\text{பெருக்குத் தொகை}}{100}$$

இறுதியில் வட்டி யெண்களை இருப்புக் கட்டி இதன் மீது வட்டி கணக்கிட வேண்டும். முதலிலேயே 100ஆல் ஒவ்வொரு

## 2. பெருக்குத் தொகை முறை (Products Method)
### கோவலனுடன் நாவலனின் நடைமுறைக் கணக்கு

| பு. | | | | | | | | வ | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| நாள் | விவரம் | பே. ப. எ. | தவணை நாள் | ஜூன் 30 வரை உள்ள நாள்கள் | பெருக்குத் தொகை | தொகை ரூ. | கா. | நாள் | விவரம் | பே. ப. எ. | தவணை நாள் | ஜூன் 30 வரை உள்ள நாள்கள் | பெருக்குத் தொகை | தொகை ரூ. | கா. |
| 1971 | | | | | | | | 1971 | | | | | | | |
| ஜ. 1 | இருப்பு கீ/கொ | | ஜன. 1 | 181 | 1,05,885 | 585 | — | ஜ. 18 | ரொக்கம் | | ஜ. 18 | 163 | 30,155 | 185 | — |
| பி. 10 | விற்பனை | | பி. 10 | 140 | 1,09,200 | 780 | — | மா. 3 | கொள்முதல் | | மா. 3 | 119 | 89,250 | 750 | — |
| ஏ. 11 | விற்பனை | | ஏ 25 | | 87,648 | 1,328 | — | ஏ. 14 | விற்பனை திருப்பம் | | ஏ. 25 | 66 | 8,448 | 128 | — |
| மே 8 | ரொக்கம் | | மே 8 | 53 | 13,250 | 250 | — | மே 20 | கொள் முதல் | | ஜூன் 10 | 20 | 6,000 | 300 | — |
| ஜூன் 16 | விற்பனை | | ஜூன் 16 | 14 | 5,250 | 375 | — | ஜூன் 2 | வரவுடைய உண்டியல் | | செ. 5 | 67 | 48,910 | 730 | — |
| ,, 30 | சிவப்பு மை, பெருக்குத் தொகை | | | | 48,910 | | | ,, 27 | ரொக்கம் | | ஜூன் 27 | 3 | 765 | 255 | — |
| ,, 30 | பெருக்குத் தொகை இருப்பு மீது வட்டி | | | | | | | ,, 30 | பெருக்குத் தொகை இருப்பு | | | | 2,35,525 | | |
| | $\frac{2,35,525}{365} \times \frac{5}{100}$ | | | | | 32 | 26 | ,, 30 | இருப்பு கீ/இ | | | | | 1,002 | 26 |
| | | | | | 3,70,143 | 3.350 | 26 | | | | | | 3,70,143 | 3,350 | 26 |
| ஜூலை 1 | இருப்பு கீ/கொ | | | | | 1,002 | 26 | | | | | | | | |

# கோவலனுடன் நாவலனின் நடைமுறைக் கணக்கு

| ப | | | | | | | | வ | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| நாள் | விவரம் | பே. ப. எ. | தவணை நாள் | ஜூன் 30 வரை உள்ள நாள்கள் | வட்டி எண்கள் | தொகை ரூ. | கா | நாள் | விவரம் | பே. பா எ. | தவணை நாள் | ஜூன் 30 வரை உள்ள நாள்கள் | வட்டி எண்கள் | தொகை ரூ. | கா. |
| 1971 | | | | | | | | 1971 | | | | | | | |
| ஜ. 1 | இருப்பு கீ/கொ | | ஜ. 1 | 181 | 1,059 | 585 | — | ஜ. 18 | ரொக்கம் | | ஜ. 18 | 163 | 302 | 185 | — |
| பி. 10 | விற்பனை | | பி. 10 | 140 | 1,092 | 780 | — | மா. 3 | கொள் முதல் | | மார் 3 | 119 | 893 | 750 | — |
| ஏ. 11 | விற்பனை | | ஏ. 25 | 66 | 876 | 1,328 | — | ஏ. 14 | விற்பனைத் திருப்பம் | | ஏ 25 | 66 | 84 | 128 | — |
| மே 8 | ரொக்கம் | | மே 8 | 53 | 133 | 250 | — | மே 20 | கொள் முதல் | | ஜூன் 10 | 20 | 60 | 300 | — |
| ஜூன் 16 | விற்பனை | | ஜூன் 16 | 14 | 53 | 375 | — | ஜூன் 2 | ரவுடைய உண்டியல் | | செ. 5 | 67 | 489 | 730 | — |
| ,, 30 | சிவப்பு மை வட்டி எண் | | | | 489 | | | ,, 27 | ரொக்கம் | | ஜூன் 27 | 3 | 8 | 255 | — |
| ,, 30 | வட்டி எண்கள் இருப்பு மீது வட்டி $\frac{2,355 \times 5}{365}$ | | | | | 32 | 26 | ,, 30 | வட்டி எண்கள் இருப்பு | | | | 2,355 | | |
| | | | | | | | | ,, 30 | இருப்பு கீ இ | | | | | 1,002 | 26 |
| | | | | | 3,702 | 3,350 | 26 | | | | | | 3,702 | 3,350 | 26 |
| ஜூலை 1 | இருப்பு கீ/கொ | | | | | 1,002 | 26 | | | | | | | | |

தொகையும் வகுக்கப்பட்டுள்ளதால் கீழ்க்கண்டவாறு வட்டி கணக்கிடப்படும்.

$$\text{வட்டி} = \frac{\text{வட்டி எண்களின் இருப்பு}}{365} \times \text{வட்டி வீதம்}$$

வட்டி எண்களின் இருப்பு பற்றிருப்புக் காட்டுமாயின், பற்றுப் பகுதியில் தொகைப் பத்தியில் சேர்த்துக் கொள்ளப்படும். வரவிருப்புக் காட்டுமாயின் வரவுப் பகுதியில் தொகைப் பத்தியில் சேர்த்துக் கொள்ளப்படும்.

எடுத்துக் காட்டு 74:

முன் பக்கத்தில் (643) இம் முறையில் செய்யப்பட்டுள்ளது.

4. இருப்புப் பெருக்குத் தொகை முறை (Products of Balance method).

இம் முறை பெரும்பாலும் வங்கிகள் கையாளும் முறையாகும். ஒவ்வொரு நடவடிக்கைக்குப் பின் கணக்கு இருப்புக் கட்டப் படுகிறதல்லவா? அவ்விருப்புத் தொகையின் அடிப்படையில் இது தயாரிக்கப்படுகிறது. எடுத்துக் காட்டாக, இந்தியன் வங்கியில் 1-7-71-ல் இப்ராஹீம் ரூ. 4,000 செலுத்துகிறார் என்று கொள்வோம். 15-7-71-ல் அவர் ரூ. 500 எடுத்து விட்டால் அவர் கணக்கு ரூ. 3,500 இருப்பு இருப்பதாகத் தானே காட்டுகிறது? பின்னர் 28-7-71-ல் ரூ. 300 வங்கியில் கட்டின், அவர் கணக்கு ரூ. 3800 இருப்பதாகக் காட்டும். இவ்வாறு ஒவ்வொரு நடவடிக்கைக்குப் பின் அவர் கணக்கு இருப்புக் கட்டப்படுகிறது.

இம் முறையில் ஒவ்வொரு நடவடிக்கையின் நாள்களும் அதன் நாள் அல்லது தவணை நாளிலிருந்து அடுத்த நடவடிக்கையின் நாள் வரை கணக்கிடப்படுகின்றன. இறுதியிருப்பின் நாள்கள் அல்லது இறுதியில் நிகழ்ந்த நடவடிக்கையின் நாள்கள் அவ்விறுதி நாளிலிருந்து கணக்கு முடியும் நாள்வரை கணக்கிடப்படும்.

ஒவ்வொரு இருப்பும் இவ்வாறு கண்டு பிடிக்கப்படும் நாள்களால் பெருக்கப்படும். இருப்பு பற்றிருப்பாயின் பெருக்குத் தொகை பற்றுப் பெருக்குத் தொகைப் பத்தியில் (Dr. Product Column) எழுதப்படும்; அது வரவிருப்பாயின் அதன் பெருக்குத் தொகைப் பத்தியில் (Cr. Product Column) எழுதப் பெறும்.

மேலே கூறப்பட்ட எடுத்துக்காட்டில் இப்ராஹீம் கணக்கு ரூ. 4,000 வரவிருப்பைச் சூலை 14 வரை காட்டுகிறது. சூலை 15-ல்

நிகழும் நடவடிக்கையால் இருப்பு மாறுகிறது. எனவே, அடுத்த நடவடிக்கை நாள்வரை உள்ள நாள்கள் 14. இவ்விருப்பின் பெருக்குத் தொகை $= 4000 \times 14 = 56,000$. ஜூலை 15-ல் இருப்பு ரூ. 3,500 ஆகிறது. இவ் விருப்பு 28-7-71 வரை உள்ளது. அதாவது 13 நாள்கள். இவ்விருப்பின் பெருக்குத் தொகை $3500 \times 13 = 45,500$. இவ்வாறு இருப்புகளின் பெருக்குத் தொகைகள் கண்டுபிடிக்கப்பட்டுத் தனிப் பத்திகளில் எழுதப் படுகின்றன.

இறுதியில் பற்றுப் பெருக்குத் தொகைப் பத்தியும் வரவுப் பெருக்குத் தொகைப் பத்தியும் தனித் தனியே கூட்டப்பட்டு வட்டி கணக்கிடப்படுகிறது. சில வேளைகளில் பற்றுப் பகுதிக்கும் வரவுப் பகுதிக்கும் வெவ்வேறு வீதங்களில் வட்டி கணக்கிட வேண்டி யிருக்கலாம். இவ்விரு வட்டிகளின் வேறுபாட்டுத் தொகை கணக்கிற் கெடுத்துச் செல்லப்படுகிறது. அதாவது, நிகரவட்டி வாடிக்கையாளர்க்குக் கொடுக்க வேண்டியிருப்பின் அவர் இருப்புத் தொகையுடன் கூட்டிக் கொள்ளப்படும். நிகர வட்டி வாடிக்கை யாளர் தர வேண்டியிருப்பின், அவர் இருப்பிலிருந்து கழித்துக் கொள்ளப்படும். இது பற்றிருப்பாயின்—மேல்வரைப் பற்றுயின் (Over Draft) அத்துடன் இவ் வட்டி கூட்டிக் கொள்ளப்படும். கீழ்க்கண்ட எடுத்துக் காட்டு இதனை நன்கு விளக்கும்.

எடுத்துக்காட்டு 75 :

2-1-1971-ல் செல்வநாதன் ரூ. 5,000-த்துடன் வங்கிக் கணக்கு தொடங்கினார். கீழ்க் குறிப்பிட்டவாறு வங்கியில் பணஞ் செலுத்தினார்.

| நாள் | செலுத்திய தொகை |
|---|---|
| | ரூ. |
| ஜனவரி 20 | 2,500 |
| மார்ச் 9 | 2,200 |
| மே 27 | 5,100 |

கீழ்க்கண்டவாறு வங்கியிலிருந்து எடுத்தார்.

| | |
|---|---|
| பிப்ரவரி 22 | 5,700 |
| ஏப்ரல் 5 | 8,600 |
| ஜூன் 10 | 2,700 |

வங்கிப் பேரேட்டில் செல்வநாதனின் கணக்கைத் தயாரிக்க. பற்றிருப்புகளின் மீது 6% வட்டியும் வரவிருப்புகளின் மீது 3% வட்டியும் கணக்கிடுக. 30-6-1971-ல் கணக்கை முடித்திடு.

4. இருப்புப் பெருக்குத் தொகை முறை (Products of Balance Method).

கடலூர் வங்கியுடன் செல்வநாதனின் நடைமுறைக் கணக்கு.

| நாள் | விவரம் | பற்று ரூ. | | வரவு ரூ. | | ப அ வ | இருப்பு ரூ. | | நாள்கள் | பற்றுப் பெருக்குத் தொகை | வரவுப் பெருக்குத் தொகை |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1971 சனவரி 2 | ரொக்கம் ... | | | 5,000 | — | வ | 5,000 | — | 18 | | 90.000 |
| ,, 20 | ரொக்கம் ... | | | 2,500 | | வ | 7,500 | — | 33 | | 2,47,500 |
| பிப் 22 | தனக்கே (Self) காசோலை எண்... | 5,700 | — | | — | வ | 1,800 | — | 15 | | 27,000 |
| மார்ச். 9 | ரொக்கம் ... | | | 2,200 | | வ | 4,000 | — | 27 | | 1,08,000 |
| ஏப் 5 | தனக்கே காசோலை எண்... | 8,600 | — | | — | ப | 4,600 | — | 52 | 2,39,200 | |
| மே. 27 | ரொக்கம் ... | | | 5,100 | | வ | 500 | — | 14 | | 7,000 |
| ஜூன் 10 | தனக்கே காசோலை எண்... | 2,700 | — | | | ப | 2,200 | — | 20 | 44,000 | |
| ஜூன் 30 | வட்டி ... | 7 | 14 | | | ப | 2,209 | 77 | | | |
| ,, | இருப்பு கீ/ இ ... | | | 2,207 | 14 | | | | | | |
| | | 17,007 | 14 | 17,007 | 14 | | | | | 2,83,200 | 4,79,500 |
| ஜூலை 1 | இருப்பு கீ/கொ ... | 2,207 | 14 | | | ப | 2,209 | 77 | | | |

குறிப்பு: வட்டி கீழ்க் கண்டவாறு கணக்கிடப்படுகிறது.

ரூ. 2,83,200 மீது 6% வட்டி (ஒரு நாளுக்கு) ரூ. 46.55

ரூ. 4,79,500 மீது 3% வட்டி (ஒரு நாளுக்கு) ரூ 39.41 (7.14)

நிகர வட்டி, வாடிக்கையாளர் தரவேண்டியது ரூ. 7.14

## வினாக்கள்

1. விழுக்காட்டுத் தவணை நாள் (Average Due date) என்றால் என்ன? அதைக் கண்டுபிடிக்கும் முறையை விளக்குக.
2. நடைமுறைக் கணக்கு (Account current) என்றால் என்ன? அதில் வட்டி எவ்விதத்தில் கணக்கிடப்படுகிறது?
3. 'சிவப்பு மை வட்டி' (Red Ink Interest) என்றால் என்ன? அது ஏன் அவ்விதம் அழைக்கப்படுகிறது?
4. இருப்புப் பெருக்குத் தொகைமீது வட்டி எவ்வாறு கணக்கிடப் படுகிறது?
5. பெருக்குத் தொகைமீது வட்டி கணக்கிடப்படும் முறையை விளக்குக.
6. நடைமுறைக் கணக்கில் வட்டி கணக்கிடும் முறைகள் பல வற்றையும் சுருக்கிக் கூறுக. (உத்கல் பல்கலைக் கழகம்—1868)

## பயிற்சி

1. ஒரு வணிகர் கீழ்க்கண்ட நாள்களில் சரக்கு வாங்கினார் தவணை நாள்களும் கொடுக்கப்பட்டுள்ளன. மொத்தம் செலுத்த வேண்டிய தொகைக்கு ஒரு உண்டியலை ஏற்க விரும்புகிறார். விழுக்காட்டுத் தவணை நாளில் உண்டியல் செலுத்தத் தக்கதாக இருக்க வேண்டுமாயின் அந் நாளினைக் கண்டுபிடி.

| நாள் 1969 | தொகை | தவணை நாள் |
|---|---|---|
| பிப்ரவரி 2 | 500 | மார்ச் 1 |
| மார்ச் 5 | 750 | ஏப்ரல் 2 |
| ஏப்ரல் 12 | 1,200 | மே 5 |
| மே 20 | 300 | ஜூன் 10 |

2. குசேலர் கீழ்க்கண்ட நாள்களில் கண்ணனிடம் பணஞ் செலுத்த வேண்டியிருந்தது.

| | | | ரூ. |
|---|---|---|---|
| 1970 | ஜூலை 8 | ... | 700 |
| | ஆகஸ்டு 12 | ... | 500 |
| | செப்டம்பர் 5 | ... | 325 |
| | நவம்பர் 2 | ... | 800 |

குசேலர் இவற்றையெல்லாம் ஒரே தொகையாகச் செலுத்த எண்ணின், எந்நாளில் செலுத்த வேண்டும்?

3. ஆரோக்கியசாமி அபூர்வசாமியிடம் ரூ. 3,800 கடன் பட்டிருந்தார். கீழ்க் கண்டவாறு கடனை அடைக்க அவர் ஏற்றுக் கொண்டிருந்தார்.

| | | ரூ. |
|---|---|---|
| மார்ச் 2 | ... | 300 |
| ஏப்ரல் 10 | ... | 700 |
| சூலை 15 | ... | 1,000 |
| செப்டம்பர் 15 | ... | 1,800 |

கடன் தொகை ரூ. 3,800-ஐ அக்டோபர் 16-ம் நாள் அடைப்பதாகவும் விழுக்காட்டுத் தவணை நாளிலிருந்து 6% வட்டி கணக்கிட்டுக் கொள்ளவும் கூறினர். கண்ணன் இதற்கு ஒப்பினர். விழுக்காட்டுத் தவணைநாள் எது என்பதையும், வட்டியுடன் மொத்தம் அவர் செலுத்த வேண்டிய தொகையையும் கண்டுபிடி.

4. 30-6-71-ல் முடியும் அரையாண்டில் கீழ்க்கண்டவாறு கீரன், கூட்டு நிறுவனத்திலிருந்து தன் சொந்தப் பயன் கருதி எடுத்துக்கொண்டார்.

| நாள் | | தொகை |
|---|---|---|
| | | ரூ. |
| சனவரி 12 | ... | 700 |
| பிப்ரவரி 1 | ... | 100 |
| மார்ச் 7 | ... | 300 |
| ஏப்ரல் 10 | ... | 500 |
| மே 20 | ... | 950 |
| சூன் 17 | ... | 250 |

எடுப்புமீது 5% வட்டி செலுத்தவேண்டும். விழுக்காட்டுத் தவணைநாளைக் கண்டுபிடித்துச் செலுத்த வேண்டிய வட்டித் தொகையைக் கணக்கிடுக.

5. ஆறுமுகம் எழுதிய கீழ்க்கண்ட உண்டியல்களை ஏழுமலை ஏற்ருர். கீழ்க்கண்ட பல்வகை உண்டியல்கட்கு மாருக விழுக்காட்டுத் தவணை நாளில் ஒரே தொகையாகச் செலுத்த விரும்பின் எந்நாளில் செலுத்தவேண்டும்?

மார்ச் 7-ல் வரைந்த மூன்று திங்கள் தவணை உண்டியல் ரூ. 1000.

பார்வைக்குப்பின் 60 நாட்களில் செலுத்தவேண்டிய உண்டியல் ரூ 500 (உண்டியல் நாள் மார்ச்-25, ஏற்றநாள் 26). சூலை 12-ல்வரைந்த ஒரு திங்கள்தவணை உண்டியல் ரூ. 700. ஆகஸ்டு 20-ல் வரைந்தஇருதிங்கள் தவணை உண்டியல் ரூ. 400.

6. சனகன் எழுதிய உண்டியலைத் தசரதன் ஏற்றார். உண்டியல்களின் விவரங்கள் கீழ்த் தரப்பட்டுள்ளன.

| உண்டியல் நாள் | தவணை நாள் | தொகை ரூ. |
|---|---|---|
| 1971. | | |
| சனவரி, 10 | 1 திங்கள் | 400 |
| பிப்ரவரி, 23 | 2 திங்கள் | 570 |
| ஏப்ரல், 5 | 3 திங்கள் | 600 |
| மே, 10 | 2 திங்கள் | 530 |

உண்டியல்களின் மொத்தத் தொகையை ஒரே நாளில் செலுத்தத் தசரதன் விரும்புகிறார். என்று செலுத்த வேண்டும்? 30-6-71-ல் அவர் செலுத்த விரும்பின் 6% வட்டி வீதம் எவ்வளவு வட்டி செலுத்த வேண்டும்?

7. பாண்டியனிடமிருந்து பல்லவன் கீழ்க்கண்ட நாள்களில் சரக்கு வாங்கினார்.

| | | ரூ. |
|---|---|---|
| ஆகஸ்டு 3 | ... | 360 |
| செப்டம்பர் 10 | ... | 440 |
| அக்டோபர் 3 | ... | 500 |
| நவம்பர் 2 | ... | 200 |
| டிசம்பர் 15 | ... | 600 |

ஒவ்வொரு முறையும் வாங்கிய நாளிலிருந்து, இரு திங்கள் தவணையில் செலுத்தத்தக்க உண்டியல்களைப் பல்லவன் ஏற்றார். இவற்றிற்கு மாறாக, விழுக்காட்டுத் தவணை நாளிலிருந்து ஒரு திங்கள் தவணையில் செலுத்தவேண்டிய முழுத் தொகைக்குமான ஓர் உண்டியலை ஏற்பதாகப் பல்லவன் கூறினார். விழுக்காட்டுத் தவணை நாள் யாது?

8. 1-1-1971-ல் விஷ்ணுகுமார் சிவநேசனிடம் ரூ. 500 கடன் பட்டிருந்தார். சிவநேசனிடம் கீழ்க்கண்ட நாள்களில் மேலும் சரக்கு வாங்கினார்.

| நாள் | தொகை | தவணை நாள் |
|---|---|---|
| சூன் 10 | 750 | சூலை 10 |
| சூலை 5 | 500 | சூன் 25 |
| செப்டம்பர் 11 | 1,000 | செப்டம்பர் 26 |

முழுத் தொகையையும் 6% வட்டியுடன் நவம்பர் 2-ல் செலுத்தின், எவ்வளவு செலுத்தவேண்டும்?

## நடை முறைக் கணக்கு

1. கீழ்க் கொடுக்கப்பட்ட நடவடிக்கைகளை நடைமுறைக் கணக்கில் பதிவுசெய்து, பூங்குன்றனிடம் பாவலன் அனுப்ப வேண்டியுள்ளது. 6% வீதம் வருட வட்டி கணக்கிடுக.

| 1971 | | | ரூ. |
|---|---|---|---|
| சனவரி | 5. | பூங்குன்றன் பாவலனிடம் கடன் பேரில் சரக்கு வாங்கியது ... | 2,100 |
| | 27. | பூங்குன்றன் பாவலனிடம் செலுத்தியது ... | 750 |
| பிப்ர | 15. | பாவலனிடம் பூங்குன்றன் விற்ற சரக்கு ... | 1,050 |
| | 18. | பாவலன் பூங்குன்றனிடம் திருப்பி யனுப்பிய சரக்கு ... | 50 |
| மார்ச் | 25. | பாவலன் பூங்குன்றனிடம் விற்றது ... | 570 |
| ஏப்ரல் | 10. | பாவலன் பூங்குன்றனிடம் செலுத்தியது ... | 500 |
| மே | 5. | பூங்குன்றனிடமிருந்து பாவலன் பெற்ற ரொக்கம் ... | 700 |

2. கருணாநிதிக்கும் கலாநிதிக்குமிடையே சூலை 1 லிருந்து டிசம்பர் 31 வரை நடைபெற்ற நடவடிக்கைகள் கீழ்க் கொடுக்கப்பட்டுள்ளன.

சூலை 1. கருணாநிதியிடம் கலாநிதி வாங்கிய சரக்கு... 3,570
(ஆகஸ்டு 2-ம் நாள் தவணை நாள்)

சூலை 25. கருணாநிதியிடம் கலாநிதி விற்ற சரக்கு ... 1,200
(ஆகஸ்டு 15-ம் நாள் தவணை நாள்)

ஆகஸ்டு 20. கருணாநிதியிடம் ரொக்கம் செலுத்தியது ... 1,350

செப் 10. கருணாநிதியிடம் சரக்கு வாங்கியது ... 1.250

(தவணை நாள் அக்டோபர் 15)

அக்டோபர் 17. கருணாநிதியின் ரூ. 1,000-க்கான மூன்று திங்கள் தவணை உண்டியலை ஏற்றது.

நவம்பவர் 10. கருணாநிதியிடமிருந்து பெற்றது ... ரூ. 500

டிசம்பர் 5. கருணாநிதியிடம் விற்ற சரக்கு ... ரூ. 770

31-12-1971-ல் கருணாநிதி கலாநிதிக்கு அனுப்ப வேண்டிய நடைமுறைக் கணக்கைத் தயாரிக்கவும். 5% வட்டி கணக்கிடவும்.

3. அப்பருக்கும் அப்துலுக்கு மிடையே 1-1-1671லிருந்து 30-6-71 வரை நிகழ்வுற்ற நடவடிக்கைகள் கீழ்க் கொடுக்கப் பட்டுள்ளன. அவற்றிலிருந்து அப்துலுக்கு அப்பர் அனுப்ப வேண்டிய நடைமுறைக் கணக்கை 5% வருட வட்டி கணக்கிட்டுத் தயாரிக்க.

ஜனவரி 1. அப்பருக்கு அப்துல் செலுத்த வேண்டியது இருப்பு... ரூ. 575

,, 27. அப்பரிடம் அப்துல் சரக்கு வாங்கியது ... ரூ. 770

பிப்ரவரி 5. அப்துலிடம் அப்பர் சரக்கு விற்றது ... ரூ. 350
(மார்ச் 5-தவணை நாள்)

,, 10. அப்பரிடம் அப்துல் திருப்பியனுப்பிய சரக்கு ... ரூ. 50
(இது பிப்ரவரி 5-ல் வாங்கிய சரக்கு)

மார்ச் 15. அப்பரிடம் அப்துல் விற்ற சரக்கு ... ரூ. 375

ஏப்ரல் 7. அப்பரிடமிருந்து அப்துல் பெற்ற ரொக்கம் ரூ. 175

,, 28. அப்பரிடமிருந்து அப்துல் சரக்கு வாங்கியது ரூ. 870

மே 10. அப்பரிடம் அப்துல் செலுத்திய ரொக்கம் ரூ. 500

,, 26. இரு திங்கள் தவணை ரூ. 400-க்கு அப்பர் எழுதிய உண்டியலை அப்துல் ஏற்றுத் தந்தது.

சூன் 15. அப்பரிடம் அப்துல் சரக்கு வாங்கியது ரூ. 230.

4. 1-7-1971-ல் சுந்தரி வங்கியில் ரூ. 10,000 செலுத்தி நடப்புக் கணக்கு தொடங்கினார். கீழ்க்கண்ட நாள்களில் வங்கியில் பணஞ் செலுத்தினார்.

| | | | ரூ. |
|---|---|---|---|
| சூலை | 20 | ... | 2,500 |
| செப்டம்பர் | 15 | ... | 5,000 |
| நவம்பர் | 11 | ... | 6,800 |

கீழ்க்கண்ட நாள்களில் வங்கியிலிருந்து பணம் எடுத்தார்.

| | | | ரூ. |
|---|---|---|---|
| ஆகஸ்டு | 12 | ... | 5,700 |
| அக்டோபர் | 11 | ... | 4,200 |
| டிசம்பர் | 8 | ... | 1300 |

வங்கியின் பேரேட்டில் 31-12-71-ற்கான சுந்தரின் நடைமுறைக் கணக்கைத் தயாரிக்க. பற்றிருப்புகள் மீது 5% வட்டியும் வரவிருப்புகள் மீது 2% வட்டியும் கணக்கிடுக.

5. 30-6-1970-ல் கதிரவன் மதியழகனிடம் ரூ. 600 தர வேண்டியிருந்தது. கீழ்க்கண்ட நாள்களில் கதிரவன் மதியழகனிடம் சரக்கு வாங்கினார்.

| | | | தொகை ரூ. |
|---|---|---|---|
| சூலை 17 | (தவணை நாள் ஆகஸ்டு 2) | ... | 750 |
| செப்டம்பர் 25 | (தவணை நாள் அக்டோபர் 10) | ... | 640 |
| நவம்பர் 22 | (தவணை நாள் டிசம்பர் 7) | ... | 320 |

செப்டம்பர் 25-ல் வாங்கிய சரக்கில் ரூ. 140-க்கானவை சேதமுற்றிருக்கவே அவற்றை அக்டோபர் 1-ம் நாளில் மதியழகனிடம் திருப்பியனுப்பி விட்டார்.

சூலை 30-ல் ரூ. 500-ம், செப்டம்பர் 17-ல் ரூ. 500-ம், டிசம்பர் 31-ல் ரூ. 250-ம் கதிரவன் மதியழகனிடம் செலுத்தினார். 5% வருட வட்டி வீதம் கணக்கிட்டு, 31-12-1970-ல் முடியும் அரையாண்டுக்கான நடைமுறைக் கணக்கை மதியழகன் கதிரவனிடம் அனுப்பத் தயாரிக்கவும்.

6. நித்தியானந்தத்துக்குச் சத்தியானந்தம் 1-4-1971ல்- ரூ. 775 தரவேண்டியிருந்தது. அவர்கட்கிடையே நிகழ்வுற்ற நடவடிக்கைகள் கீழ்க் கொடுக்கப்பட்டுள்ளன.

கீழ்க்கண்ட நாள்களில் சத்தியானந்தம் நித்தியானந்தத்திடம் சரக்கு வாங்கினர்.

| | | | ரூ. |
|---|---|---|---|
| ஏப்ரல் 20 | (தவணை நாள் மே. 1) | ... | 825 |
| மே 28 | (தவணை நாள் சூன் 8) | ... | 530 |
| சூன் 10 | (தவணை நாள் சூலை 25) | ... | 760 |
| ஆகஸ்டு 20 | | | 420 |

மே 28-ல் வாங்கிய சரக்கில் ரூ. 80-க்கானவற்றை சூன் 5-லும், ஆகஸ்டு 20-ல் வாங்கியவற்றில் ரூ. 70-க்கானவற்றை ஆகஸ்டு 25-லும் சத்தியானந்தம் திருப்பி அனுப்பினர்.

கீழ்க்கண்ட நாள்களில் நித்தியானந்தம் சத்தியானந்தத்திடம் சரக்கு வாங்கினர்.

| | | ரூ. |
|---|---|---|
| சூலை 5 | ... | 350 |
| ஆகஸ்டு 5 | ... | 470 |

சூலை 5-ல் வாங்கிய சரக்கில் ரூ. 50-க்கானவற்றை நித்தியானந்தம் திருப்பி யனுப்பினர்.

கீழ்க்கண்டவாறு சத்தியானந்தம் நித்தியானந்தத்திடம் பணஞ் செலுத்தினர்.

| | | ரூ. |
|---|---|---|
| மே 5 | ... | 750 |
| ஆகஸ்டு 8 | ... | 350 |

நித்தியானந்தம் எழுதிய ரூ. 500-க்கான மூன்று திங்கள் உண்டியலை சூன் 20-ல் சத்தியானந்தம் ஏற்றுத் தந்தார்.

நித்தியானந்தம், சத்தியானந்தத்துக்கு அனுப்பவேண்டிய 30-31971-ல் முடியும் அரையாண்டுக்கான நடைமுறைக் கணக்கைத் தயாரிக்க. ஆண்டு வட்டி 6% வீதம் கணக்கிட வேண்டும்.

7. கீழ்க் கொடுக்கப்பட்ட நடவடிக்கைகளிலிருந்து 31-3-1970-ற்கான நடைமுறைக் கணக்கைக் கணேசன் குமாரனுக்கு அனுப்ப வேண்டியுள்ளது. வரவுப் பதிவுகள்-மீது 5%-ம், பற்றுப் பதிவுகள் மீது 3%-ம், வட்டி கணக்கிடப்பட வேண்டும்.

| 1970 | | | ரூ. |
|---|---|---|---|
| செப்டம்பர் | 1. | குமரன் கணேசனுக்குத் தரவேண்டியது (இருப்பு) ... | 400 |
| ,, | 15. | குமரனிடம் சரக்கு விற்றது ... | 350 |
| அக்டோபர் | 17. | குமரனிடம் பெற்ற ரொக்கம் ... | 300 |
| நவம்பர் | 10. | கணேசன் குமரனிடம் விற்றது ... | 460 |
| நவம்பர் | 16. | குமரன் கணேசனிடம் திருப்பியனுப்பிய சரக்கு ... | 60 |
| டிசம்பர் | 12. | கணேசன் வரைந்த இரு திங்கள் தவணை உண்டியலை குமரன் ஏற்றுத் தந்தது. ... | 400 |
| சனவரி | 2. | கணேசனிடம் குமரன் விற்ற சரக்கு ... (தவணை நாள் சனவரி 17) | 200 |
| பிப்ரவரி | 10. | குமரனிடம் கணேசன் விற்ற சரக்கு ... (தவணை நாள் பிப்ரவரி 25) | 575 |
| மார்ச் | 5. | இரு திங்கள் தவணை உண்டியலைக் குமரன் ஏற்றுத் தந்தது. | 400 |

8. 1-7-1971-ல் கடலூர் வங்கியில் ரூ. 10,000 செலுத்தி இளங்கோ நடப்புக் கணக்கு தொடங்கினார். ரூ. 20,000 வரை மேல்வரைப்பற்றுக்கும் ஏற்பாடு செய்தார். 31-12-1971-ல். முடியும் அரையாண்டுக்கான அவர் வங்கி நடவடிக்கைகள் கீழ்க் கொடுக்கப்பட்டுள்ளன.

| | | | | ரூ. |
|---|---|---|---|---|
| சூலை | 30 | எடுத்தது | ... | 2,500 |
| ஆகஸ்டு | 3 | செலுத்தியது | ... | 15,000 |
| ஆகஸ்டு | 28 | எடுத்தது | ... | 20,000 |
| செப்டம்பர் | 15 | எடுத்தது | ... | 15,000 |
| அக்டோபர் | 11 | செலுத்தியது | ... | 10,000 |
| நவம்பர் | 17 | செலுத்தியது | ... | 7,800 |
| டிசம்பர் | 8 | எடுத்தது | ... | 9,300 |

பற்றிருப்புகளின் மீது 5% வட்டியும், வரவிருப்புகளின் மீது 2% வட்டியும் கணக்கிட வேண்டும். 31-12-1671-ல் கணக்கை இருப்புக் கட்டி, நடைமுறைக் கணக்கைத் தயாரிக்க.

9. கீழ்க் கண்ட உண்டியல்களின் விழுக்காட்டுத் தவணை நாளைக் கண்டுபிடி.

| உண்டியல் வரையப் பட்ட நாள் | தொகை ரூ. | தவணைக்காலம். |
|---|---|---|
| 1965 சனவரி 15 | 250 | 3 திங்கள் |
| 1965 மார்ச் 4 | 400 | 5 திங்கள் |
| 1965 ஏப்ரல் 10 | 500 | 1 திங்கள் |
| 1965 ஏப்ரல் 22 | 200 | 2 திங்கள் |

(B. U. I year Com. 1966 oct.

10. ராசுவிடமிருந்து ஜேம்ஸ்மித் சரக்கு வாங்கினர். பணம் செலுத்தவேண்டிய தவணை நாள்கள் கீழ்க் கொடுக்கப் பட்டிருக் கின்றன.

| | | தவணை நாள் |
|---|---|---|
| மார்ச் 15 | £ 220 | ஏப்ரல் 18 |
| ஏப்ரல் 21 | £ 125 | மே 24 |
| ,, 27 | £ 200 | சூன் 30 |
| மே 15 | £ 350 | சூலை 18 |

விழுக்காட்டுத் தவணைநாளில் செலுத்த வேண்டிய முழுத் தொகைக்கும் ஒரு உண்டியல் வரைய ராசு ஒப்புக் கொண்டார். இவ் விழுக்காட்டுத் தவணை நாளைக் கண்டு பிடி !

(C. A. Inter.)

11. சூன் 30-ல் முடியும் அரையாண்டில் ஒரு கூட்டாளி (Partner) கீழ்க்கண்ட நாள்களில் எடுப்புக் கணக்கில் பணம் எடுத்திருந்தார் :—

சன, 17- £ 150 ; சன 28, £ 200 : பிப் 18, £ 120 ; மார்-5, £ 80 ; ஏப் 24, £ 200 ; மே 2, £ 150; சூன், 30, £ 100.

ஆண்டு வட்டி 5% கணக்கிட வேண்டும். விழுக்காட்டுத் தவணை நாளைக் கண்டுபிடித்து, வட்டியைக் கணக்கிடு.

(U. P. Board.)

12. 1964 டிசம்பர் 31-ல் முடியும் அரையாண்டில் 'A' தன் சொந்தப் பயனுக்கு எடுத்தது கீழே கொடுககப்பட்டிருக்கிறது.

ஜூலை 16 — ரூ. 100; செப்டம்பர் 20 — ரூ. 150;
அக்டோபர் 12 — ரூ. 120 ; நவம்பர் 24 — ரூ. 110.

விழுக்காட்டுத் தவணைநாளைக் கண்டுபிடித்து, எடுப்புக் கணக்கின் மீது 5% ஆண்டு வட்டி கணக்கிடு.

(Rajputana Board)

13. ஹரிகரனுக்கும் இராகவனுக்கு மிடையே ஏற்பட்ட நடவடிக்கைகள் கீழ்க்கொடுககப்பட்டுள்ளன.

| 1968 | | | | ரூ. |
|---|---|---|---|---|
| சனவரி | 1. | முன்னரே சரக்கு பெற்ற வகையில் ராகவன் ஹரிகரனுக்குச் செலுத்த வேண்டிய தொகை | ... | 1,630 |
| ,, | 18. | ராகவன் ஹரிகரனிடம் செலுத்திய ரொக்கம் | ... | 1,200 |
| பிப்ரவரி | 6. | ராகவனிடம் ஹரிகரன் விற்ற சரக்கு | ... | 640 |
| ,, | 28. | உண்டியல் நாளுக்குப் பின் ஒரு திங்கள் தவணையில் செலுத்தக் கூடிய ஹரிகரனின் உண்டியலை ராகவன் ஏற்றார். உண்டியல் தொகை | ... | 750 |
| மார்ச் | 15. | ராகவனிடம் ஹரிகரன் சரக்கு விற்றது. | ... | 980 |
| ஏப்ரல் | 22. | ஹரிகரனிடம் ராகவன் செலுத்திய ரொக்கம் | ... | 780 |
| ஜூன். | 11. | உண்டியல் நாளுக்குப் பின் இரு திங்கள் தவணை உண்டியலை ஹரிகரன் வரைய ராகவன் ஏற்றுத் தந்தது. உண்டியல் மதிப்பு | ... | 860 |
| ,, | 30. | ராகவனிடம் ஹரிகரன் விற்ற சரக்கு | ... | 530 |

1968 ஜூன் 30-ல் ராகவனுக்கு ஹரிகரன் அனுப்ப வேண்டிய நடைமுறைக் கணக்கைத் தயாரிக்க.

(M. U. B. Com. Sept. 1968)

# கலைச் சொற்கள்

## A

Acceptance — ஏற்பு
Acceptance, general — பொது ஏற்பு, பொதுப்பட்ட ஏற்பு
Acceptance for honour — நாணய ஏற்பு, நாணயத்திற்காக ஏற்பு
Acceptance Partial — பகுதி ஏற்பு
Acceptance Qualified — நிபந்தனை ஏற்பு, நிபந்தனைக்குட்பட்ட ஏற்பு
Acceptance Supra Protest — மறுப்புக்குப் பின் ஏற்பு
Acceptance Unqualified — நிபந்தனையற்ற ஏற்பு
Acceptor — ஏற்குநர்
Acceptor for honour — நாணய ஏற்குநர், நாணயத்திற்காக ஏற்குநர்
Accommodation Bill — பணவசதி உண்டியல்
Account — கணக்கு
Account, nominal — பெயரளவுக் கணக்கு
Account, fictitious — பெயரளவுக் கணக்கு
Account, real or property — சொத்துக் கணக்கு
Account, personal — ஆள்சார் கணக்கு
Account Current — நடைமுறைக் கணக்கு
Account Current—
—Balance of Products Method — பெருக்குத் தொகை இருப்பு முறையில்நடைமுறைக்கணக்கு

| | | |
|---|---|---|
| —Interest Tables Methods | — | வட்டி வாய்பாட்டு முறையில் நடைமுறைக் கணக்கு |
| —Products Method | — | பெருக்குத் தொகை முறையில் நடைமுறைக் கணக்கு |
| Account Sales | — | விற்பனைக் கணக்கறிக்கை |
| Accountancy | — | கணக்கியல் |
| Accrued interest | — | கூடிய வட்டி, சேர்ந்த வட்டி |
| Adjustment | — | சரிக்கட்டுதல் |
| Adjustment entries | — | சரிக்கட்டுப் பதிவுகள் |
| Advalorem duty | — | பெறுமானப்படி வரி |
| Advance | — | முன் பணம் |
| Advertisement | — | விளம்பரம் |
| After date | — | குறித்த நாளுக்குப் பின் |
| After sight | — | பார்வைக்குப் பின் |
| Agent | — | முகவர் |
| Agent del credere | — | பிணை முகவர் |
| Amount | — | தொகை |
| Analytical Petty Cash Book | — | பாகுபடுத்தப் பெற்ற சில்லறை ரொக்க ஏடு |
| Asset | — | சொத்து |
| Assets, circulating | — | கைமாறும் சொத்துகள் |
| Assets, fictitious | — | பெயரளவுச் சொத்துகள் |
| Assets, floating | — | உருமாறுஞ் சொத்துகள் |
| Assets fixed | — | நிலைச் சொத்துகள் |
| Assets, intangible | — | புலனாகாச் சொத்துகள் |
| Assets, liquid | — | ரொக்கச் சொத்துகள், ரொக்கமாகுஞ் சொத்துகள் |
| Assets, wasting | — | தேயுஞ் சொத்துகள் |
| At sight | — | பார்த்தவுடன் |
| Audit | — | தணிக்கை |
| Auditor | — | தணிக்கையர் |
| Average due date | — | விழுக்காட்டுத் தவணை நாள் |

## B

| | | |
|---|---|---|
| Bad and Doubtful Debts | — | வரா, ஐயக் கடன் |
| Bad debt | — | வராக் கடன் |

Bad debts Provision }
Bad debts Reserve } — வராக் கடன்காப்பு
Balance — இருப்பு
Balance, cash — ரொக்க இருப்பு
Balance, closing — இறுதி இருப்பு
Balance, opening — தொடக்க இருப்பு
Balancing — இருப்புக் கட்டல்
Balance sheet — இருப்புநிலைக் குறிப்பு
Bank — வங்கி
Bank Charges — வங்கிக் கட்டணம்
Bank Draft — வங்கிப் பணவிடை
Bank Pass Book — வங்கிக் கணக்கு நகலேடு
Bank Reconciliation Statement — வங்கிக் கணக்குச் சரிக்கட்டும் பட்டி
Bankruptcy — நொடிப்பு நிலை
Bearer — கொணர்பவர், வைத்திருப்பவர்
Bill — உண்டியல்
Bill Book — உண்டியலேடு
Bill of Exchange — உண்டியல்
Bill, acceptance of — உண்டியல் ஏற்பு
Bill, collection of — உண்டியல் தண்டல், உண்டியல் வசூல்
Bill, discount of — உண்டியலைத் தள்ளுபடிசெய்தல்
Bill, dishonour of — உண்டியலுக்குப் பண மறுக்கப்படல்
Bill, documentary — ஆவண உண்டியல், ஆவணஞ் சார்ந்த உண்டியல்
Bill, endorsement of — உண்டியலில் மேலெழுதுதல்
Bill, foreign — அயல் நாட்டுண்டியல்
Bill, inland — உள் நாட்டுண்டியல்
Bill, long — நெடுந் தவணை உண்டியல்
Bill, maturity of — உண்டியல் தவணை முதிர்வு
Bill, Short — குறுந்தவணை உண்டியல்
Bill of Lading — கப்பல் வழிச் சீட்டு, கப்பல் இரசீது
Bills Payable — செலுத்த வேண்டிய உண்டியல்

Bills Receivable — வரவுடைய உண்டியல்

Bonus — மேலூதியம்

Books of accounts — கணக் கேடுகள்

Book debts — கடனாளிகள்

Book-keeping — கணக்குப் பதிவியல்

Book of orignial entry — முதற் குறிப்பேடு

Bought Book — கொள்முதலேடு

Broker — தரகர்

Brokerage — தரகு

Brought down — கீழ்க் கொண்டுவரப்பட்ட

Brought forward — முன் பக்கப்படி

Business — தொழில், வியாபாரம்

## C

Capital — முதல், மூலதனம்

Carriage Inwards — உள்சுமை கூலி

Carriage Outward — வெளிச்சுமை கூலி

Carried down — கீழிறக்கப்பட்ட

Cartage — வண்டிச் சத்தம்

Case-in-need — உற்றுழி உதவுவோன்

Cash Book — ரொக்க ஏடு

Cash Credit — ரொக்கக் கடன்

Cash Discount — ரொக்கத் தள்ளுபடி

Cash on hand — கையிருப்பு ரொக்கம்

Cash sales — ரொக்க விற்பனை

Charitable institutions — அற மன்றங்கள்

Cheque — காசோலை

Cheque, Crossed — கீறலிடப் பெற்ற காசோலை

Cheque, dishonoured — பண மறுக்கப்பட்ட காசோலை

Cheque, post-dated — பின் நாளிட்ட காசோலை

Clearing Charges — (சரக்கு) அகற்றுங் கட்டணம்

Closing entries — இறுதிப் பதிவுகள்

Collection — தண்டல், வசூல்

Columnar Petty Cash Book — பத்திகளிடப் பெற்ற சில்லறை ரொக்க ஏடு

Commerce — வணிக வியல்

Commission, del credere — பிணைக் கழிவு

Commission, underwriting — ஒப்புறுதிக் கழிவு

Company — கம்பனி
Compensating errors — ஈடுகட்டும் பிழைகள்
Consideration — மறுபயன்
Consignee — அனுப்பப் பெறுநர்
Consignment — அனுப்பீடு
Consiginment Inward — உள்வரு அனுப்பீடு
Consignor — அனுப்பப் பெறுநர்
Contra entries — எதிர்ப் பதிவுகள்
Copy right — பதிப்புரிமை
Cost — அடக்க விலை
Counterfoil — மறுபாதி
Credit — வரவு
Credit transaction — கடன் நடவடிக்கை
Credit balance — வரவிருப்பு
Credit Note — வரவுக் குறிப்பு
Creditor — கடனீந்தோர்
Crossing — கீறலிடல்
Crossing, general — பொதுக் கீறலிடல்
Crossing, special — சிறப்புக் கீறலிடல்
Current Account — நடப்புக் கணக்கு, நடைமுறைக் கணக்கு

## D

Day Book — நாளேடு
Days of grace — சலுகை நாள்கள்
Debenture — கடன்பத்திரம்
Debit — பற்று
Debit balance — பற்றிருப்பு
Debit Note — பற்றுக் குறிப்பு
Debt — கடன்
Debtor — கடனாளி
Deposit — வைப்புத் தொகை
Deposit, fixed — தவணை வைப்பு
Depreciation — தேய்மானம், மதிப்பிழப்பு
Discount — தள்ளுபடி
Discounting a bill — உண்டியலைத் தள்ளுபடி செய்தல்
Dividend — இலாப ஈவு

Dock Dues — துறைமுகக் கட்டணம்
Documents of title — உரிமை ஆவணங்கள்
Documents, shipping — கடல் ஆவணங்கள்
Double entry system — இரட்டைப் பதிவு முறை
Doubtful debt — ஐயக்கடன்
Donation — நன்கொடை
Draft — உண்டியல், வங்கிப் பணவிடை
Drawee — எழுதப் பெறுநர்
Drawer — எழுதுநர்
Drawings — எடுப்பு
Due date — தவணை நாள், கெடுநாள், உரியநாள்
Duty — தீர்வை, வரி
Duty, customs — சுங்கத்தீர்வை
Duty, export — ஏற்றுமதி வரி
Duty, import — இறக்குமதி வரி

## E

E & O. E — பி. வி. நீ (பிழையும் விடு பிழையும் நீங்கலாக)
Endorse — மேலெழுது, புறக்குறிப்பிடு
Endorsee — மேலெழுதப் பெறுநர்
Endorsement — மேலெழுத்து
Endorsement, blank — வெற்று மேலெழுத்து
Endorsement, facultative — பொறுப்பு தவிர் மேலெழுத்து
Endorsement, general — பொது மேலெழுத்து
Endorsement, qualified — நிபந்தனை மேலெழுத்து
Endorsement, restrictive — வரையறை மேலெழுத்து
Endorser — மேலெழுதுநர்
Endowment Fund — அறக்கொடை நிதி
Entrance Fees — நுழைவுக் கட்டணம்
Entry — பதிவு
Error — பிழை
Errors, compensating — ஈடுகட்டும் பிழைகள்
Errors of commission — செய் பிழைகள்
Errors of omission — விடு பிழைகள்
Errors of Principle — விதிப் பிழைகள்
Expenditure — செலவினம்

Expenditure, capital — முதலீட்டுச் செலவினம்
Expenditure, revenue — நடைமுறைச் செலவினம்
Expenditure, Deferred revenue— நெடுநாள் பயன்தரு செலவு
Expenses — செலவுகள்
Expenses, installation — நிறுவும் செலவுகள்
Expenses, outstanding — கொடுபட வேண்டிய செலவுகள்
Expenses, prepaid — முன் கூட்டிச் செய்த செலவுகள்

## F

Freight — சத்தம்
Fuel — எரிபொருள்
Fund — நிதி
Furniture — மனைத்துணைப் பொருள்

## G

Gas — எரி வளி
Gain — இலாபம், ஆதாயம்
Godown — கிடங்கு
Goods — சரக்கு
Goods sent on consignment — அனுப்பீட்டிலனுப்பிய சரக்கு
Goodwill — பொதுநன் மதிப்பு, வாணிக நற்பெயர்
Government bonds / Government securities — அரசினர் கடன் பத்திரங்கள்
Gratuity — பணிக் கொடை
Gross-loss — மொத்த நட்டம்
Gross-profit — மொத்த இலாபம்

## H

Honorarium — மதிப்பூதியம்

## I

Imprest system — முன்பண மீட்புமுறை
Income — வருமானம்

Income and Expenditure Account — வரவு—செலவுக் கணக்கு
Income Tax — வருமானவரி
Insolvency — நொடிப்பு நிலை
Insurance — ஈட்டுறுதி
Interest — வட்டி
Investment — முதலீடு
Invoice — இடாப்பு
Invoice proforma — பெயரளவு இடாப்பு, மாதிரி இடாப்பு

## J

Joint and several liability — கூட்டாகவும், தனித் தனியாகவும் பொறுப்பு
Joint Bank Account — இணை வங்கிக் கணக்கு, கூட்டு வங்கிக் கணக்கு
Joint stock company — கூட்டுப் பங்கு கம்பனி
Joint Venture — இணை நிறுவனம்
Jonit Venture Account — இணை நிறுவனக் கணக்கு
Joint Venture, Account, Memorandum — குறிப்பு இணை நிறுவனக் கணக்கு
Joint Venture Investment Account — இணை நிறுவன முதலீட்டுக் கணக்கு
Journal — குறிப்பேடு
Journalising — குறிப்பேட்டில் பதிதல்

## K

Kite — பணவசதி உண்டியல்

## L

Lease — குத்தகை
Leasehold property — குத்தகைச் சொத்து
Ledger — பேரேடு, பெயரேடு
Ledger Account — பேரேட்டுக் கணக்கு
Legacy — மரபுரிமைச் சொத்து

Liability — பொறுப்பு
Liabilities, outstanding — கொடுபட வேண்டிய பொறுப்புகள்

Licence — உரிமம்
Life Members' Fees — ஆயுள் உறுப்பினர் கட்டணங்கள்

Literary Societies — இலக்கிய மன்றங்கள்
Loan — கடன்
Loan, mortgage — ஒற்றிக் கடன்
Loose-tools — விடு கருவிகள்
Loss — நட்டம்

## M

Manager — மேலாளர்
Manufacturing account — தயாரிப்புக் கணக்கு, உற்பத்திக் கணக்கு
Maturity — தவணை முதிர்வு
Memorandum of Association — அமைப்பு முறையேடு
Money order — பணவிடை
Motive power — இயக்குவிசை

## N

Narration — விளக்கக் குறிப்பு
Notary Public — சான்றிதழ் அலுவலர்
Nhtice of dishonour — பணமறுப்பு அறிவிப்பு
Noting — மறுப்புக் குறிப்பு
Noting charges — குறிப்புக் கட்டணம்
Not negotiable — மாற்றுத் தன்மையில்லை

## O

Obsolescence — வழக் கொழிவு
Office Expenses — அலுவலகச் செலவு
Opening entries — தொடக்கப் பதிவுகள்
Overdraft — மேல்வரைப் பற்று

## P

Packing charges — கட்டுச் செலவு

Packing materials — கட்டும் பொருள்கள்
Patent — புனைபொருள் உரிமை
Pattern — வகை
Payee — பெறுநர்
Paying-in-slip — செலுத்துச் சீட்டு
Pension — ஓய்வூதியம்
Petty cash — சில்லறை ரொக்கம்
Plant and Machinery — பொறிவகை
Postage — அஞ்சற் செலவு
Posting — எடுத்தெழுதுதல்
Premium — முனைமம்
Principal — முதல்வர், முதல் தொகை
Product — பெருக்குத் தொகை, உற்பத்திப் பொருள்
Production — உற்பத்தி
Production, cost of — உற்பத்திச் செலவு
Profit — இலாபம்
Profit and loss account — இலாப-நட்டக் கணக்கு
Promissory note — கடனுறுதிச் சீட்டு
Property — சொத்து
Prospectus — தகவலறிக்கை
Provision for discount on creditors — கடனீந்தோர் மீது தள்ளுபடிக் காப்பு
Provision for discount on debtors — கடனாளிகள் மீது தள்ளுபடிக் காப்பு
Purchase — கொள்முதல்
Purchase Book — கொள் முதலேடு, கொள்முதல் குறிப்பேடு
Purchase Returns — கொள்முதல் திருப்பம்

## Q

Quadrangular Match Fund — நான்முகப் போட்டி நிதி

## R

Railway Freight — இரயில் கட்டணம்
Rates — நகராட்சி வரி

Raw materials — கச்சாப் பொருள்
Rebate — தள்ளுபடி
Receipt — இரசீது
Receipts and Expenditure Account — பெறுதல்—செலவுக் கணக்கு
Receipts and Payment Account — பெறுதல்—செலுத்தல் கணக்கு
Rectification of errors — பிழை நீக்கம்
Red ink interest — சிவப்பு மை வட்டி
Referee in case of need — உற்றுழி உதவுவோன்
Remuneration — ஊதியம்
Renewal of a bill — உண்டியலைப் புதுப்பித்தல்
Rent — வாடகை
Repairs — பழுதுபார்க்குஞ் செலவு
Reserve Fund — காப்பு நிதி
Returns Inwards — உட் திருப்பம்
Returns Outwards — வெளித் திருப்பம்
Revenue — வருமானம்
Risk — இடர்ப்பாடு
Royalty — உரிமைத் தொகை

## S

Salary — ஊதியம்
Sales — விற்பனை
Sales Book — விற்பனை ஏடு, விற்பனைக் குறிப்பேடு
Sales Returns — விற்பனைத் திருப்பம்
'Sams recourse' — வழியின்றி, பரிகாரமின்றி
Shares — பங்குகள்
Single entry — ஒற்றைப் பதிவு
Sports club — விளையாட்டு மன்றம்
Statement — அறிக்கை, பட்டி
Stock — சரக்கிருப்பு
Stock, closing — இறுதிச் சரக்கிருப்பு
Stock, opening — தொடக்கச் சரக்கிருப்பு
Stock on consignment — அனுப்பீட்டுச் சரக்கிருப்பு
Stores — பண்டங்கள்
Straight line Method — நேர்வழி முறை
Subscription — உறுப்பினர் தொகை

